# 1-1-1-வது அதிகரணத்தின்

# அநுக்கிரமணிகை.



# அனுக்கிரமணிகை

ஸ்ரீ கணேசாயநம:

# ஸூத்திரபாஷ்யார்த்ததீபிகை.

## முதலாவது அத்தியாயம், முதலாவது பாதம், முதலாவது அதிகரணம்.

I. இதின் பெயர்:—ஜிஞ்ஞாஸாதிகரண மென்பதாம் [1]

II. இதின் கருத்து:—பிரம்மவிசாரம் [2]

III. அவதாரிகை:—

1. முதலாவது ஸூத்திரத்தைச்செய்த வியாசருடையகருத்து:—

(ग) स्वाध्यायोऽध्येतव्यः

என்பதால் ஒருவன் நித்தியம் அத்தியயனம் செய்யவேண்டும் என்கிற விதி ஏற்படுகிறது. இந்த விதிப்படி ஒருவன் அத்தியயனம் செய்யுங்காலத்தில்

(1) तद्विजिज्ञासस्व (तै-3-1)

அதாவது:—அதை அறிய இச்சி

(2) सोन्वेष्टव्यः (छा-8-7-1)

அதாவது:—அவன் தேடத்தக்கவன்

(3) सविजिज्ञासितव्यः (छा-8-7-1)

அதாவது:—அவன் விசாரிக்கத்தக்கவன்

(4) आत्मा वा अरे द्रष्टव्यः श्रोतव्यः (बृ-2-4-5)

அதாவது:—ஆத்மா பார்க்கத்தக்கவன், கேட்கத்தக்கவன்

இவைமுதலிய சுருதிகளைக் கேட்டிருக்கிறன். இந்த விதிவசனங்களால மோக்ஷத்தை இச்சிக்கிறவன் அத்வைத ஆத்ம விசாரத்தையே வேதாந்தவாக்கியங்களால் செய்யவேண்டியது என்று ஏற்படுகிறது. ஒருவன் இந்த ஜன்மத்திலாவது முந்தின ஜன்மங்களிலாவது செய்த ஸத்கர்மத்தினுல் அந்தக்கரணசுத்தியை அடைந்து தான் கேட்ட வசனங்களுக்கு

(1) விஷயமென்ன?
(2) பலன் என்ன?
(3) யார் அதிகாரி?
(4) சம்பந்தம் யாது?

என்று அறிய இச்சிக்கக்கூடும். அப்படிப்பட்டவனை மனதில் வைத்துக்கொண்டு பகவான் பாதராயணர் இனி ஆரம்பிக்கப்போகிற சாஸ்திரத்துக்கு உபயோகமான அனுபந்தசதுஷ்டயத்தை (அதாவது அதிகாரி, விஷயம், பிரயோஜனம், சம்பந்தம் இவைகளின்) நிச்சயம் செய்வதற்காக

## ॥ अथातोब्रह्मजिज्ञासा ॥ १ ॥

என்கிற ஸூத்திரத்தை ஏற்படுத்தியிருக்கிறுர். [3]

2. ஆக்ஷேபம் (2—10)

அனுபந்தசதுஷ்டயத்தை விதிக்குச் சமீபத்திலிருக்கிற வாக்கியங்களாலேயே அறியக்கூடுமாகையால் இந்த ஸூத்திரம் அனுவசியம்

எப்படியெனின்:—

(1) அதிகாரிசித்தி (2—7)

*A.* விவேகசித்தி

(*a*) तद्यथेह कर्मचितोलोकः क्षीयते एवमेवामुत्र पुण्यचितोलोकः क्षीयते

அதாவது:—இந்த லோகத்தில் வேளாண்மைமுதலிய கர்மங்களின் பயிர் முதலிய பலன் நசித்துப்போவதுபோல் புண்ணியத்தால் சித்திக்கும் ஸ்வர்க்காதி லோகமும் நசித்துப்போகிறது.

என்கிற छा (8–1–6) சுருதிப்படி கர்மத்தால் சாத்தியமானது அநித்தியம் என்றும்,

(*b*) न जायते म्रियते वा विपश्चित्

அதாவது:—நித்திய ஞானஸ்வரூபம் ஜனிக்கிறதுமில்லை மரிக்கிறதுமில்லை

என்கிற க௨(1–2–18) சுருதிப்படிக்கும்

यो वै भूमा तदमृतं

அதாவது:—எது பூமாவோ (பூர்ணமோ) அது நாசமற்றது

என்கிற (छा-7–24–1) முதலிய சுருதிகள் படிக்கும் பூமாத்மா நித்தியன் என்றும்,

ஆனதால் மற்றது அநித்தியம் என்றும் விவேகம் உண்டாகக்கூடும். [4]

*B.* வைராக்கியசித்தி:—

परीक्ष्य लोकान् कर्मचितान् ब्राह्मणोनिर्वेदमायान्नास्त्य कृतः कृतेन

அதாவது:—கர்மத்தால் கிடைக்கும் லோகம் அநித்தியம் என்று நிச்சயித்து, கர்மரூபமாகாத மோக்ஷம் கர்மத்தால் சித்திக்கமாட்டாது என்பதையும் தெரிந்துகொண்டு பிராமணன் வைராக்கியத்தை அடைகிறுன்

என்கிற முண்டக (1-2-12) சுருதிப்படி வைராக்கியம் சித்திக்கக்கூடும். [5]

C. சமாதி ஷட்கசம்பத்தி சித்தி :—

शांतोदांतउपरतिस्तितिक्षुः समाहितः श्रद्धान्वितो भूत्वाऽत्मन्येवात्मानं पश्येत्

அதாவது :— சாந்திமுதலியவைகளுடன்கூடினவன் தன்னிடத்திலேயே ஆத்மாவைப் பார்க்கிறான்.

என்கிற பிரஹ (4-4-2) சுருதிப்படி சமாதிஷட்க சம்பத்தி சித்திக்கிறது. [6]

D. முமுக்ஷுதைசித்தி

न सपुनरावर्त्तते

அதாவது:—அவன் மறுபடியும் வருகிறதில்லை.

என்கிற (சா-8-15-1) வது சுருதியில் ஸ்வயம்பிரகாசமாயும் ஆநந்தஸ்வரூபமாயுமிருக்கிற மோக்ஷம் நித்தியம் என்று கூறியிருப்பதால் மோக்ஷ இச்சை சித்திக்கிறது. [7]

(2) விஷயசித்தி

श्रोतव्यः என்னும் விதியைக் கூறும் சுருதிபதத்துக்குக் கேட்கத்தக்கது என்பது வினைச்சொல்லின் அர்த்தம். இந்தக் கேள்விக்கு விஷயம் பிரகிருதத்திலிருக்கும் விசாரம். இந்தவிசாரத்துக்குவிஷயம் வேதாந்தம். ஏனெனின் आत्मा द्रष्टव्यः என்பதினால் அத்வைத ஆத்மதர்சனத்தை உத்தேசித்து श्रोतव्यः என்பதாய் விசாரம் விதிக்கப்பட்டிருக்கிறது. இதற்கு விஷயம்

तत्वमसि ( छां-6-13-3 ) अहं ब्रह्मास्मि ( बृ-1-4-10 )

முதலியவாக்கியங்களால் ஜீவப்பிரம்ம ஏகத்துவம் என்று ஏற்படுகிறது. [8]

(3) பிரயோஜனசித்தி

(a) तरति शोकमात्मवित्

ஆத்மஞானியானவன் துக்கத்தைத் தாண்டுகிறான், என்கிற (சா-7-1-3) சுருதி என்ன

(b) ब्रह्मवेद ब्रह्मैव भवति

பிரம்மத்தை அறிந்தவன் பிரம்மமாகவே ஆகிறான்.

என்கிற (மு-3-2-9) சுருதி என்ன

இவை முதலியசுருதிகளால்விசாரத்துக்குப் பலன் ஞானமூலமாகவே முக்தி என்று ஏற்படுகிறது. [9]

(4) சம்பந்தசித்தி

(a) அதிகாரிக்கும் விசாரத்துக்கும் செய்கிறவன், செய்யத்தக்கது என்னும் சம்பந்தமும்

(b) அதிகாரிக்கும் பலத்துக்கும் அடைகிறவன் அடையக்கூடியது என்னும் சம்பந்தமும்

ஏற்படுகிறது.

இவ்விதமாக தனித்தனிசுருதிவசனங்களாலேயே அதிகாரிமுதலிய அனுபந்தசதுஷ்டயம் சித்திக்கிறபடியால் அதின்பொருட்டு வியாசர் சூத்திரத்தை ஏற்படுத்த வேண்டியதில்லை. [10]

(रा) 3. சித்தாந்தம்.

இந்த ஆக்ஷேபம் யுக்தமன்று. இந்த அதிகாரிமுதலிய சுருதிகளின் தாற்பரியத்தை நிச்சயிக்கக்கூடிய நியாயசூத்திரம் இராதவரையில்

(1) பிரம்ம விசாரத்துக்கு
 (a) விவேகாதிகளுடன் கூடினவன் தான் அதிகாரியா? அல்லது
 (b) வேறு ஒருவனா?

(2) வேதாந்தமானது
 (a) பூர்வமீமாம்சையால் கூறப்பட்ட விஷயமா? அல்லது
 (b) வேறா?

(3) பிரம்மம்
 (a) ஜீவனைவிட வேறன்றா?
 (b) வேறா?

(4) முக்தியானது
 (a) ஸ்வர்க்காதிகள்போல் லோகாந்திரமா? அல்லது
 (b) ஆத்மஸ்வரூபமா?

என்கிற சம்சயங்கள் நிவிர்த்தியாகமாட்டா. அவைகளை நிவிர்த்திக்கும்பொருட்டு வேதவாக்கியங்களால் சாமான்னியமாய்த் தெரியவருகிற அதிகாரிமுதலானவைகளை நிச்சயம் செய்வதற்காக இந்த சூத்திரம் அவசியம் வேண்டியது. [11]

IV. சூத்திரசங்கியை:— இந்த அதிகரணத்தில் அடங்கிய சூத்திரம் ஒன்றுதான், அதாவது முதலாவது [12]

**V.** சங்கதி :—

(ா) 1. சுருதி சங்கதி:—இந்த சூத்திரமானது சிரவண விதியால்அபேக்ஷிக்கப்படும் அதிகாரிமுதலான சுருதிகளின் அர்த்தத்தை நிச்சயிக்கிறபடியால் சுருதிக்கும் சூத்திரத்துக்கும் ஒரு சம்பந்தம் ஏற்படுகிறது. இதுவே சுருதிசங்கதி எனப்படும்.

(ா) 2. சாஸ்திரசங்கதி :— அநுபந்தசதுஷ்டயமிருந்தால்தான் சாஸ்திரத்தை ஆரம்பிக்கலாம். இந்த அநுபந்தசதுஷ்டயம் இந்த முதல்சூத்திரத்தில் நிச்சயிக்கப்பட்டிருப்பதால் சூத்திரத்துக்கும் சாஸ்திரத்துக்கும் சாஸ்திரசங்கதி ஏற்படுகிறது.

(ா) 3. அத்தியாய சங்கதி :—முதலாவது அத்தியாயம் சமன்வயாத்தியாயம் எனப்படும். இதில் வேதாந்தவாக்கியங்களின் தாற்பரியம் பிரம்மம் என்று நிச்சயிக்கப்பட்டிருக்கிறது. இந்த முதல் சூத்திரமும் அதிகாரி முதலியவைகளைக் கூறும் சுருதிகளின் தாற்பரியத்தை நிச்சயிக்கிறபடியால் இந்த சூத்திரம் சமன்வயாத்தியாயத்தில் சேர்க்கப்பட்டு அத்தியாயசங்கதிஏற்பட்டது

(ா) 4. பாதசங்கதி :—முதலாவது அத்தியாயத்தின் முதலாவது பாதம் பிரம்மத்தை ஸ்பஷ்டமாய் போதிக்கிற சுருதிவாக்கியங்களின் தாற்பரியத்தை சமன்வயப்படுத்துகிறது (நிச்சயிக்கிறது). இந்த சூத்திரமானது ஸ்பஷ்டமாய்ப் பிரம்ம விசாரத்தையே விதிக்கிறபடியால் முதலாவது பாதத்தில் சேர்க்கப்பட்டது.

(ா) 5. அதிகரணசங்கதி :—இதுவே முதலாவது அதிகரணமாகையால் அதிகரணசங்கதி ஏற்படவில்லை.

இப்படியே சகல சூத்திரங்கள்விஷயத்திலும் பலவித சங்கதிகளையும் பார்த்துக்கொள்ளவும். [13]

(ா) **VI.** இந்த அதிகரணத்துக்கு நான்கு வர்ணகங்கள் உண்டு :—

1. விஷயப்பிரயோசனங்கள்
   (1) இருக்கின்றனவா ?
   (2) இல்லையா ?
2. சாஸ்திரார்த்தம் பூர்வமீமாம்சையால்
   (1) கிடைத்திருக்கிறதா ?
   (2) இல்லையா?
3. சாஸ்திரத்துக்கு அதிகாரி
   (1) இருக்கிறுனு ?
   (2) இல்லையா ?
4. பிரம்மம்
   (1) அறியப்பட்டதா ?
   (2) அறியப்படாததா ? [14]

(ா) **VII.** முதலாவது வர்ணகம் :—

1. விஷயம் :—இந்த அதிகரணத்துக்கு ஜிஜ்ஞாஸ்ய என்பதாய் விதிரூபமாகச் சொல்லப்பட்ட பிரம்ம மீமாம்சா (விசார) சாஸ்திரம் விஷயம். [15]

2. (1) சந்தேகம் :—இது ஆரம்பிக்கத்தக்கதா? தகாததா ?

(2) சந்தேகபீஜம் :— ஒரு சாஸ்திரத்தை ஆரம்பிக்க விஷயப் பிரயோசனங்கள் வேண்டியவை. விஷயாதிகள்

(a) சித்திக்கவில்லை என்று சிலரும்
(b) சித்திக்கின்றனவென்று சிலரும் சொல்லுவதால் இந்த சாஸ்திரம்

(a) ஆரம்பிக்கத்தகுந்ததா
(b) தகாததா

என்னும் சந்தேகம் ஜனிக்கிறது [16]

3. பூர்வபக்ஷம்:—

(1) இந்த சாஸ்திரத்துக்கு விஷயம் ஜீவப்பிரம்ம ஐக்கியம். இது,

(a) நான் பிரம்மம் அல்ல என்று ஒருவன் பிரத்தியக்ஷமாய் அறிவதாலும்,
(b) நான் கர்த்தா போக்தா

பிரம்மம் அகர்த்தா அபோக்தா

ஆகவே இவர்களுடைய தர்மங்களும் விருத்தமாயிருக்கின்றன என்று அறிவதாலும்

சம்பவிக்கமாட்டாது.

(2) மேலும், பந்தம் சத்தியமாகையால் ஞானத்தால் நிவிர்த்தியாகமாட்டாது

ஆகையால் பிரயோசனமும் சித்திக்கவில்லை.

(3) ஆகையால் இந்த சாஸ்திரம் ஆரம்பிக்கத்தகாதது. [17]

இவைகள் அத்தியஸ்தங்களாகையால் (கற்பிதங்களாகையால்) விஷயாதிகள் சித்திக்கின்றனவென்று சொல்லும்பக்ஷத்தில் அத்தியாசமே சித்திக்கவில்லை.

எப்படியெனின், பிரபஞ்சத்தில் வாஸ்தவமான வெள்ளியைப் பார்ப்பதில் "இது வெள்ளி" என்னும் ஞானமுண்டாகும்போது

(1) "இது" என்னும் சாமான்னியஞானமும்
(2) "வெள்ளி" என்னும் விசேஷஞானமும்
(3) "இது வெள்ளி" என்னும் இவைகளின் ஐக்கியஞானமும்.

உண்டாகி, இந்த ஞானசம்ஸ்காரத்தால் சுக்தியை (கிளிஞ்சலை)ப் பார்த்த சமயத்தில் "இது வெள்ளி" என்னும் பிராந்திஞானமுண்டாகிறதைக் கண்டிருக்கிறோம்

அப்படியே ஆத்மாவில் அனாத்மாக்களான அகங்காராதிகளின் அத்தியாசம் ஏற்படும்பக்ஷத்தில் ஆத்மாவுக்கும் அனாத்மாவுக்கும் ஒருகாலத்தில் ஐக்கியமுண்டாகி அந்த ஐக்கியஞான மிருந்திருக்க வேண்டும். ஆனால் ஐக்கியமே உண்டாகிறதில்லை. எப்படியெனின் ஆத்மாவுக்கும் அனாத்மாவுக்கும் இருட்டுக்கும் பிரகாசத்துக்கும் போல் மூன்றுவித விரோதங்களிருக்கின்றன.

(1) ஆத்மா நான்என்னும் ஞானத்துக்கு விஷயம் அனாத்மா இது என்னும் ஞானத்துககு விஷயம்.

(2) ஆத்மா ஸ்வயம் பிரகாசம், ஞானஸ்வரூபம்.

அனாத்மா ஜடம், வேறு ஒன்றால் பிரகாசிக்கப் படுகிறது.

(3) ஆத்மா "நான் பிரம்மம்" என்பதாய் வியவஹரிக்கப்படுகிறது.

அனாத்மா கர்த்தா போக்தாரூபமாய் வியவஹரிக்கப்படுகிறது.

ஆகையால் ஆத்மாவுக்கும் அனாத்மாவுக்கும் ஐக்கியம் சித்திக்கமாட்டாது. ஆகவே இவைகளின் தர்மங்களான

(1) சைதன்னியம் சுகம் இவைகளுக்கும்
(2) ஜாட்டியம் துக்கம் இவைகளுக்கும்

ஐக்கியம் சுத்தமாக சித்திக்கமாட்டாது. ஆகையால் ஐக்கியஞானத்தால் உண்டாகவேண்டிய சம்ஸ்காரமில்லை. ஆகவே அத்தியாசசாமக்கிரி ஏற்படவில்லை. ஆகையால்

(1) சித்ஸ்வரூபமாயும் புத்திசாட்சியாயுமிருக்கிற நான் என்னும் ஞானத்துக்கு விஷயமான ஆத்மாவினிடத்தில்

இது என்னும் ஞானத்துக்கு விஷயமாயும் சாக்ஷிபாஸ்யமாயுமிருக்கிற அனாத்மாவையும் அதின் தர்மங்களையும் அப்படியே

(2) அனாத்மாவில் ஆத்மாவையும் அதின் தர்மங்களையும்

அத்தியாசம்செய்ய (கற்பிக்க) முடியாது.

ஆகவே பந்தம் சத்தியமாகையால் ஞானத்தால் நிவிர்த்தியென்னும் பலமும் சித்திக்கிறதில்லை.

பத்தனான ஜீவனுக்கும் முக்தமான பிரம்மத்துக்கும் ஐக்கியம் சம்பவிக்காததால் விஷயமும் சித்திக்கிறதில்லை.

ஆகையால் சாஸ்திரம் ஆரம்பிக்கத்தக்கதில்லை.[18

4. சித்தாந்தம்:—இப்படி பூர்வபக்ஷி சொல்ல அத்தியாசமிருக்கிறதென்றும் ஆகையால் சாஸ்திரம் ஆரம்பிக்கத்தக்கதென்றும் இனிசித்தாந்தம் கூறப்படுகிறது.

(1) அத்தியாச சித்தி:—

இந்த அத்தியாசம் இல்லை என்பதற்குக் காரணம்

(a) அயுக்தம் என்றா?
(b) விளங்கவில்லை என்றா?
(c) காரணமில்லை என்றா?

a. முதல் பக்ஷம் நமக்கும் சம்மதம். யாதொருபற்றுதலன்றியில் ஸ்வயம்பிரகாசமான ஆத்மாவினிடத்தில் அத்தியாசமுண்டாகக்கூடாது என்பது எங்களுக்கும் சம்மதந்தான்

b. இரண்டாவது பக்ஷத்தில் விளங்கவில்லை என்றுசொல்லக்கூடாது. ஏனெனின்

கேவலம் வெவ்வேறாயிருக்கும்
ஆத்மா அனாத்மாக்களையும்
அவைகளின் தர்மங்களையும்
பிரித்து அறியாமையும்

ஒன்றின் தர்மங்களையும் மற்றொன்றில் ஆரோபிப்பதும்

இப்படி

சத்தியத்தையும் மித்தையையும் சேர்த்து
அது நான் அது என்னுடையது
முதலிய வசனங்களை உபயோகப்படுத்துவதும் லோகத்தில் சஹஜமாயிருக்கிறது

இதற்குக் காரணம் விபரீதஞானம். நான் அஞ்ஞன், கர்த்தா, மனுஷ்யன் என்பதாய் பிரத்தியக்ஷானுபவமிருப்பதால் அத்தியாசம் விளங்கவில்லை என்று சொல்லக்கூடாது

*c.* மூன்றாவது பக்ஷத்தில் அத்தியாசத்துக்குக் காரணம் ஒன்றுமில்லை என்று சொல்லக்கூடாது. முந்தின அத்தியாசத்தாலுண்டான சம்ஸ்காரம் பிந்தின அத்தியாசத்துக்குக் காரணமாகலாம். இது மேற் சொல்லிய சஹஜசப்தத்தால் தெரியவருகிறது.

இவ்விதமாக சாமக்கிரியும் அனுபவமும் இருப்பதால் அத்தியாசமிருக்கிறதென்று சித்திக்கிறது.

ஆகையால் பிரம்மமும் ஜீவனும் ஒன்று என்பதில் விரோதமில்லை. அதினால் விஷயப் பிரயோசனங்கள் சித்திக்கின்றன. ஆகவே சாஸ்திரம் ஆரம்பிக்கத்தக்கது. [19]

ர (இந்த சூத்திரத்தால் சூசிப்பிக்கப்பட்ட விஷயப்பிரயோசனங்கள் சித்திக்கவேண்டியதற்காக யாதொரு அத்தியாசம் சொல்லப்பட்டதோ அந்த அத்தியாசத்தின்

(1) லக்ஷணத்தையும்,

(2) பிறகு அது பிரகிருதத்தில் சித்திக்கிறதென்னும் சம்பாவனையையும் பிறகு

(3) பிரமாணத்தையும் கூறுகிறார்)

## *B.* அத்தியாசலக்ஷணம்.

*a.* சித்தாந்தப்படி :—வேறு இடத்தில் முன்பார்த்த ஞானம் ஸ்மிருதி ரூபமாய் விளங்குவதே அத்தியாசம்

ர (வேறு இடத்தில் விளங்குவதே லக்ஷணம். மற்ற பதங்கள் இந்த லக்ஷணத்தை விவரிக்கின்றன. ஒரு வஸ்துவை முன் பார்த்திருந்து அதினால் ஒரு சம்ஸ்காரம் மனதில் ஜனித்து, அந்த சம்ஸ்காரமூலமாக அதைப்போல் தோன்றும் வேறு வஸ்துவினிடத்தில் அந்த வஸ்துவே தோன்றுவது அத்தியாசம்.

திருஷ்டாந்தம் :—

வெள்ளியை ஒருகாலத்தில் பார்த்திருக்கும்போது அதின் ஞானமுண்டாகி மனதில் சம்ஸ்கார ரூபமாகத் தங்குகிறது. பிறகு கிளிஞ்சலைப்பார்க்கும் சமயத்தில் சமான தேஜஸினால் முந்தின சம்ஸ்காரமூலமாக வெள்ளி என்னும் ஞானமுண்டாகிறது. இது அத்தியாசம்) [20]

*b.* அந்நியதாக்கியாதிவாதிகள் (நையாயிகர்கள்) வேறு இடத்தில் (அதாவது கிளிஞ்சல் முதலிய இடத்தில்) வேறு தர்மம் (அதாவது தேசாந்தரத்திலிருக்கிற வெள்ளி முதலியது) தோன்றுதல் அத்தியாசமென்கிறார்கள் [21]

*c.* ஆத்மக்கியாதிவாதிகள் (விஞ்ஞானவாதிகள்) புத்தி தர்மமாகிய வெள்ளி புத்திக்கு வெளியிலிருக்கிற கிளிஞ்சலில் தோன்றுவதே அத்தியாசமென்கிறார்கள் [22]

*d.* அக்யாதவாதிகள் (மீமாம்சகர்கள்) எதினிடத்தில் எது ஆரோபிக்கப்பட்டிருக்கிறதோ, அவ்விரண்டின் பேதத்தை கிரகிக்காததினால் உண்டாகும் பிரமையே அத்தியாசம் என்கிறார்கள். (அதாவது கிளிஞ்சலைப்பார்க்கும்போது இது என்னும் சாமான்னிய ஞானமும் முன்பார்த்த வெள்ளியின் ஸ்மரணையும் சித்திக்கின்றன. இவ்விரண்டையும் பிரித்தறியாமல் ஒன்றாக நினைப்பதே பிரமை [23]

*e.* அசத்க்கியாதிவாதிகள் (சூன்னியவாதிகள்) எந்த இடத்தில் எது கற்பிக்கப்படுகிறதோ அந்த அதிஷ்டானத்தில் அதற்கு விபரீதமான தர்மங்களை கற்பிப்பதே அத்தியாசம் என்கிறார்கள். (அதாவது கிளிஞ்சலில் வெள்ளி அத்தியாசமாகும்போது கிளிஞ்சலுக்கு விபரீதமான அசத்வெள்ளி தர்மத்தை கற்பிப்பதே அத்தியாசம்) [24]

*f.* தீர்மானம் :—எந்தவாதி எப்படிச்சொன்னாலும் ஒன்றினிடத்தில் வேறு ஒன்றின் தர்மம் தோன்றுவதாகச்சொல்லுவதில் விவாதமில்லை. கற்பிக்கப்பட்ட பதார்த்தம் பொய் என்று சொல்லுவதில் யுக்தி வேண்டியதில்லை. கிளிஞ்சல் வெள்ளிபோல் தோன்றுவதும் ஒரு சந்திரன் இரண்டுபோல் தோன்றுவதும் லோகானுபவம் [25]

## *C.* சம்பாவனை.

(இந்த அத்தியாசம் ஆத்மாவினிடத்தில் கூடுமென்பதை இனி விவரிக்கிறார்)

*a.* ஆக்ஷேபம் :—கிளிஞ்சல் முதலியதில் அத்தியாசம் சம்பவிக்கட்டும். ஆத்மாவினிடத்தில் அது எப்படி சம்பவிக்கும்? இந்திரியங்களால் கிரகிக்கக்கூடாத ஆத்மாவினிடத்தில் அகங்காரம் முதலிய அத்தியாசமும் அதின் தர்மங்களும் எப்படி கற்பிக்கமுடியும். எல்லாரும் இந்திரியத்துக்கு விஷயமான

முன்னிற்கும் விஷயத்தில் வேறு விஷயத்தை அத்தி யசிக்கிறார்கள். இது என்கிற ஞானத்துக்கு விஷய மாகாத ஆத்மாவை नचक्षुषा गृह्यते (மு 3-1-8)

முதலிய சுருதிஸ்மிருதிகளால் இந்திரியத்தால் கிரஹிக்கத்தகாதது என்று சொல்லுகிறது (இப்படி இருக்க ஆத்மாவினிடத்தில் அத்தியாசத்தை ஸ்தா பிப்பதற்காக ஆத்மா விஷயமென்று சொல்லும்பக்ஷ த்தில். சுருதிஸ்மிருதி அனுபவங்களுக்கு விரோதம் வரும்) [26]

*b.* சித்தாந்தம் :—இந்த ஆத்மா எப்போதும் விஷயமல்ல வென்று சொல்லக்கூடாது. ஏனெனின் ஆத்மா

(1) நான் என்னும் ஞானத்துக்கு விஷயமா யிருக்கிறது

(2) ஸ்வயம் பிரகாசமாயிருக்கிறது. ஏனெ னின் பாலாள் முதல் பண்டிதாள் வரையில் ஒருவனும் ஆத்மா இருக் கிறதா இல்லையா? என்னும் சம்ச யத்தை அடைகிறதில்லை.

இப்படி ஸ்வயம் பிரகாசத்தால் விளங்குவதால் ஆத்மா அத்தியாசத்துக்கு அதிஷ்டானமாயிருக்கலாம்

இந்திரியத்துக்கு விஷயமான முன்னிருக்கிற வஸ்துவினிடத்திலேயே வேறு வஸ்துவின் அத்தியா சமுண்டாகும் என்கிற நியமமில்லை. ஆகாசம் பிரத்தி யக்ஷமாயிராவிட்டாலும் அவிவேகிகள் அதினிடத்தில் கறுப்பு வர்ணத்தையும் வத்தச்சால் ரூபத்தையும் கற் பிக்கிறார்கள். இவ்விதமாக ஆகாசத்துக்கும் கருப்பு வர்ணம்முதலியதற்கும் சாதிருசியமிராவிடினும் அத்தி யாசம் ஏற்படுவதுபோல் இந்திரியத்துக்கு விஷயமாக ஆத்மாவுக்கும் அனாத்மாவுக்கும் ஸாதிருசியமில்லாவிட் டாலும் ஆத்மாவில் அனாத்மாத்தியாசம் செய்வதில் யாதொரு விரோதமுமில்லை.

மேற்சொன்ன லக்ஷணமுள்ளதும் அவித்தியா காரியமாயுமிருக்கிற அத்தியாசத்தை பண்டிதர்கள் அவித்தை என்று நினைக்கிறார்கள்.

கற்பிதத்தை நிவிர்த்திக்கிறதினால் அதிஷ்டானஸ் வரூபம் நிச்சயப்படுகிறது. இந்த நிச்சயத்தை வித்தை என்கிறார்கள். இது அத்தியாச நிவிர்த்திக்கு ஹேது வாயிருக்கிறது.

ஏ (இவ்விடத்தில் மூலாவித்தையை விட்டுவிட்டு காரியா வித்தையை வர்ணித்ததற்குக் காரணமென்ன வென்னின் மூலாவித்தையால் சுஷுப்தியில் யாதொரு அனர்த்தமும் காணப்படவில்லை. காரியா வித்தையால் தன் சகல அனர்த்தமு முண்டாகிறது. ஆகையால் இதுவே கூறப்பட்டது

இந்த அத்தியாச மிருக்குமளவில் எதினிடத்தில் எது கற்பிக்கப்படுகிறதோ, அப்படி கற்பிக்கப்பட்ட தின் தோஷத்துடனாவது குணத்துடனாவது அதிஷ்டா னம் கொஞ்சங்கூட சம்பந்தப்படுகிறதில்லை. (ஆகை யால் ஆத்மா அனாத்மாக்கள் பரஸ்பர அத்தியாசத்தால் பரஸ்பர குணதோஷங்களால் பாதிக்கப்படுகிறதில்லை. இவ்விதமாக அத்தியாசத்தின் லக்ஷணமும் சம்பாவனை யும் கூறப்பட்டன. இனி பிரமாணம் கூறப்படும் [27]

*D.* பிரமாணம்.

*a.* பிரத்தியக்ஷப் பிரமாணம் :—

இந்த அவித்தையென்னும் பெயருள்ள ஆத்மா அனாத்மாக்களின் பரஸ்பர அத்தியாசத்தை முன்னிட் டுக்கொண்டு அதாவது காரணமாக வைத்துக்கொண்டு

(1) லௌகிகங்களான பிரமாண பிரமேயங் கள்

(2) விதிநிஷேதபரமான ரிக்வேதாதி சாஸ்தி ரங்கள்

(3) விதிநிஷேதங்களற்ற கேவலம் பிரம்மபர மான மோக்ஷ சாஸ்திரங்கள்

ஏற்பட்டிருக்கின்றன. [28]

*b.* அனுமானப்பிரமாணம் :—

(1) அவித்வான் விஷயத்தில்

(*a*) பிரத்தியக்ஷப்பிரமாணத்தால் லோக விஷயங்க ளில் அத்தியாசம் சித்தித்தாலும் இன்னும் எந்தப் பிரமாணத்தால் அவித்வானை அத்தியாசம் ஆசிரயித் துக்கொண்டிருக்கும்

ஏ (தேவதத்தனால் செய்யப்படும் வியவஹாரங்கள் அவனுடைய தேகாதிகளில் நான் என்னுடையது என் கிற அத்தியாசத்தால் சித்திக்கின்றன. எப்படியெ னின் அத்தியாசமிருந்தால் வியவஹாரம் இருக்கிறது, இல்லாவிடின் வியவஹாரமுமில்லை. தேவதத்தனுக்கு சுஷுப்தியில் நான் என்னுடையது என்னும் அத்தி யாசமுமில்லை, வியவஹாரமுமில்லை, ஜாக்கிரத்ஸ்வப்நங் களின் அத்தியாசமிருக்கிறது. இந்த வியவஹாரத் தைக்கொண்டு அத்தியாசத்தை அனுமானிக்கலாம்)

(*b*) தேகம் இந்திரியம் முதலியவைகளில் நான் என் னுடையது என்னும் அத்தியாசமில்லாதவன் பிரமா தாவாகமாட்டான்.

(c) பிரமாதா சித்திக்காவிடின் பிரமாணம் சித்திக்கிறதில்லை.

ச (d) தேகத்தில் நான் என்னும் அபிமானத்தால் வியவஹாரம் சித்திக்கட்டும். இந்திரியங்களில் என்னுடையது என்னும் அபிமானமில்லாமலிருக்கட்டுமே யெனின்)

இந்திரியங்களை ஒப்புக்கொள்ளாமல் பிரத்தியக்ஷாதி பிரமாணங்கள் சித்திக்கமாட்டா. (பார்க்கிறேன்-கேட்கிறேன், அநுமானம் பண்ணுகிறேன் முதலிய வியவஹாரங்கள் இந்திரியங்கள் என்னுடையவை) என்னும் அத்தியாசமன்றியில் சம்பவிக்கமாட்டா.

(e) (இந்திரியாத்தியாசத்தாலேயே வியவஹாரம் சித்திக்கட்டுமே, தேகாத்தியாசம் வேண்டாமே யெனின்)

சரீரமாகிய அதிஷ்டான (ஆசிரய) மன்றியில் இந்திரியங்களின் வியவஹாரம் சித்திக்கமாட்டாது.

(f) (ஆத்மாவுடன் கூடின தேகம் ஆசிரியமாயிருக்கட்டுமே, அத்தியா . ம் என்னத்திற்காகவெனின்)

தேகத்தில் நான் என்கிற பாவமன்றியில் ஒருவனும் வியவஹரிக்கிறதில்லை.

(g) (ஆத்மாவுக்கு தேகாதிகளில் அத்தியாசம் வேண்டாம். ஸ்வயம் சேதனமாயிருப்பதால் பிரமாதாவாயிருக்கட்டுமேயெனின்).

இவைகளெல்லாம் இல்லாமற்போனால் அசங்கமான ஆத்மாவினிடத்தில் பிரமாதாவென்னும் வியவஹாரம் சித்திக்கமாட்டாது.

(அதாவது பிரமைக்கு ஆசிரயம் பிரமாதா. மனோவிருத்திக்கு ஆசிரயம் மனது. மனதுக்கும் ஆத்மாவுக்கும் தாதாத்மிய அத்தியாசமன்றியில் ஆத்மா மனோவிர்த்திக்கு அதாவது பிரமைக்கு அதாவது ஞானத்துக்கு ஆசிரியமாகமாட்டான்; அதாவது ஆத்மா பிரமாதாவாகமாட்டான்.)

(h) பிரமாதா யில்லாவிட்டால் பிரமாணம் சித்திக்கிறதில்லை.

(i) ஆகையால் (அதாவது ஆத்மாவுக்கு பிரமாத்ருத்வாதி வியவஹாரம் சித்திக்கும்பொருட்டு) அத்தியாசத்தை ஒப்புக்கொள்ள வேண்டுமென்னும் அநுமானத்தால் பிரத்தியக்ஷாதி பிரமாணங்களும் சாஸ்திரங்களும் அவித்வானை ஆசிரயித்துக் கொண்டிருக்கின்றன.

(2) வித்வான் விஷயத்தில்.

(மேற்சொன்ன யுக்திகளால் வியவஹாரம் அத்தியாசத்தாலுண்டாகிறதாகச் சொன்னது சரியன்று; ஏனெனில் வித்வான்களுக்கு அத்தியாசமில்லாவிட்டாலும் வியவஹாரம் காணப்படுகிறதே எனின்)

வித்வான்களும் பசுமுதலியவைகள்போல் வியவஹரிக்கிறபடியால் அத்தியாசமுடையவர்களே. எப்படியெனின், பசு முதலியவைகள்,

(1) பிரதிகூலமான சப்தத்தைக் கேட்டும்

(2) தடிக்கம்பை கையில் வைத்திருக்கும் புருஷனை முன்னிலையில் பார்த்தும்;

ஓடுகின்றன;

(1) அநுகூலமான சப்தத்தைக்கேட்டும்

(2) கையில் புல் முதலியவைகளை வைத்திருக்கும் புருஷனைக்கண்டும்

சமீபத்தில் வருகின்றன. இவ்விதமாகவே விவேகியான புருஷர்களும்

(1) குரூர திருஷ்டியுள்ளவர்களையும்]

(2) இரைச்சல் போட்டுக் கொண்டும் கையில் கத்திவைத்துக் கொண்டுமிருக்கிற பலிஷ்டர்களையும்

பார்த்து திரும்பி விடுகிறார்கள். இவர்களுக்கு விருத்தமான ஸ்வபாவமுள்ள சாதுக்களை அடைகிறார்கள்.

ஆகையால் விவேகி புருஷர்களுடைய பிரமாண பிரமேய வியவஹாரங்களும் பசு முதலியவைகளின் வியவஹாரத்துக்குச் சமானமா யிருக்கின்றன.

பசுமுதலிய வைகளின் பிரத்தியக்ஷ முதலிய வியவஹாரங்கள் அவிவேகத்தாலுண்டாவது பிரசித்தம். ஏனெனின் தான் வேறு மற்றது வேறு என்ற ஞானம் பசுவுக்கு இருந்தாலும் உபதேசமிராதபடியால் விவேகமில்லை. ஆகையால் அத்தியாச சாமக்கிரி யிருப்பதால் அவர்களுக்கும் அத்தியாசமிருக்கிறது என்பது பிரசித்தம்.

பசு முதலியவைகளின் வியவஹாரம்போல் விவேகிகளுடைய வியவஹாரமும் காணப்படுவதால் இவர்களுடைய வியாவஹாரமும் அத்தியாசத்தாலுண்டாகிறதுஎன்பது நிச்சயம்.

(3) சாஸ்திரீய அத்தியாசம்.

ரா (மேற்சொன்ன லௌகிக வியவஹாரம் அத்தியாசத்தாலுண்டானாலும் ஜோதிஷ்டோமாதி வைதிக வியாவஹாரங்கள் ஆத்மா (தான்) வேறு, தேகம் வேறு என்கிற ஞானத்தாலுண்டாகிறபடியால், அந்த வியவஹாரங்கள் எப்படி அத்தியாச காரியங்கள் என்று சொல்லலாமெனின்)

விவேகியானவன் ஆத்மாவுக்கும் பரலோகத்துக்குமுள்ள சம்பந்தத்தைத் தெரிந்துகொள்ளாமல் மேற்படி வியவஹாரங்களில் பிரவிர்த்திக்காவிட்டாலும், (கர்மம் பசி தாகமுதலியவைகளை உடையவன், பிராமணாதி ஜாதியான், சம்சாரி), இப்படிப்பட்ட ஞானத்தை மட்டும்அவன் அபேக்ஷிக்கிறானே தவிற,

இவைகளுக்கு விபரீதமான,

(1) வேதாந்தத்தால் அறியக்கூடிய,

(2) பசிதாக முதலியவைகளற்ற,

(3) பிராமணாதி ஜாதி பேதமற்ற,

அசம்சாரி, ஆத்மா

என்கிற தத்துவ ஞானத்தை அபேக்ஷிக்கிறதில்லை. ஏனெனின் இந்த ஞானம் கர்மபிரவிர்த்திக்குச் சாதகமல்ல, பாதகமாயுமிருக்கிறது. அப்படிப்பட்ட ஆத்மஞானமுண்டாவதற்கு முன் பிரவிர்த்திக்கும் சாஸ்திரம் அத்தியாசத்துடன் கூடினவனையே ஆசிரயித்துக்கொண்டிருக்கிறது. [30]

c. ஆகம (வேத) பிரமாணம்.

(1) ब्राह्मणो यजेत्

பிராமணன் யாகம் செய்யவேண்டும்.

(2) नहवै स्नात्वाभिक्षेत

விரதசமாப்தி செய்தபின் பிக்ஷைவாங்கக்கூடாது

(3) अष्टवर्षं ब्राह्मणमुपनयीत

எட்டாவது வயதில் பிராமணனுக்கு உபநயனம் செய்யவேண்டும்.

(4) जातपुत्र कृष्णकेशोऽग्नीनादधीत

பிள்ளை பிறந்த பிறகு தலைமயிர் கருத்திருக்கும்போதே அக்கினி ஹோத்திரத்தை ஆரம்பிக்கவேண்டியது.

மேற்சொல்லிய சுருதிகள் பிராமணாதி பதங்களால் அதிகாரிக்கு

(1) வர்ணம்,

(2) ஆசிரமம்,

(3) ஜாதி,

(4) அவஸ்தை,

இவைகளை கற்பித்து அத்தியாச மிருப்பதை நிரூபிக்கின்றன. [31]

E. உதாஹரணம்.

(இவ்விதமாக அத்தியாசம் பிரமாணத்தால் சித்தித்தாலும் எதற்கு எதனிடத்தில் அத்தியாசம் உண்டாகிறதென்பதை விசாரிக்கும் பொருட்டு, அதின் லக்ஷணத்தை ஞாபகப்படுத்துகிறார்).

அத்தியாசமென்றால் ஒன்றின் தர்மம் மற்றொன்றில்தோன்றுவதென்று முன்னமேயே சொல்லி யிருக்கிறோம்.

1. ஆத்மாவில் அனாத்ம அத்தியாசம் :—

(a) பாஹிய அத்தியாசம் :—தேகமே தான் என்று பாவிக்கும் ஒருவன் தன் சரீரத்துக்கு வேறானப் பிரத்தியக்ஷபுத்திராதிகள் சுக துக்கங்களை அனுபவிப்பதைப் பார்த்து தான் சுகி யென்றும் துக்கியென்றும் பாவித்து அவைகளை தன்னிடத்தில் அத்தியாசம் செய்கிறான்.

(b) தேகதர்ம அத்தியாசம் —அப்படியே நான் பெருத்திருக்கிறேன், இளைத்திருக்கிறேன், வெளுத்திருக்கிறேன், நிற்கிறேன், நடக்கிறேன், தாண்டுகிறேன் என்பதாய் தேகதர்மங்களை தன்னிடத்தில் அத்தியாசம் செய்து கொள்ளுகிறான்.

(c) இந்திரிய தர்ம அத்தியாசம் :—நான் ஊமை ஒரு கண் பொட்டை, நபும்ஸகன், செவுடன், குருடன், என்பதாய் இந்திரியதர்மங்களை தன்னிடத்தில் அத்தியாசம் செய்கிறான்.

(d) மனோதர்ம அத்தியாசம் :—அப்படியே இச்சிக்கிறேன், சங்கற்பிக்கிறேன், சந்தேகிக்கிறேன், நிச்சயிக்கிறேன், என்பதாய் இச்சைமுதலிய அந்தக்கரண தர்மங்களைத்தன்னிடத்தில் அத்தியாசம் செய்கிறான். [32]

(b) அனாத்மாவில் ஆத்மாத்தியாசம்.

ரா (தர்மாத்தியாசத்தைச் சொல்லி இனி தர்மி அத்தியாசத்தைக் கூறுகிறார்).

இவ்விதமாக சர்வ சாக்ஷியான ஆத்மாவில் அனாத்மாவையும் அதின் தர்மங்களையும் அத்தியாசம்

செய்து அந்தக்கரணாதி அனாத்மாவினிடத்தில் ஆத்ம தர்மத்தை அத்தியாசம் செய்கிறான்.

ரா (1) நான் அஞ்ஞன் என்பதில் கேவலம் ஆத்மசம்பந்தம் காணப்படுகின்றது.

(2) மனதில் அஞ்ஞானத்துடன் கூடின ஆத்மசம்பந்தம் காணப்படுகிறது.

(3) தேகாதிகளில் மனதுடன் கூடின ஆத்ம சம்பந்தம் காணப்படுகிறது.

இவ்விதமாக

(1) ஆத்மாவில் புத்தி முதலியவைகளின் அத்தியாசத்தால் கர்த்திருத்துவாதிகள் சித்திக்கின்றன.

(2) புத்தி முதலியவைகளில் ஆத்ம தர்மத்தை அத்தியாசம் செய்வதால் அவைகளுக்கு சைதன்னியலாபம், பிரகாசிக்கும் தன்மை சித்திக்கிறது. [33]

F. முடிவு.

இவ்விதமாக:

(1) அனாதியான அவித்தியா ஸ்வரூபமாயிருப்பதால் அனாதியாயும்,

(2) ஞான மன்றியில் நாசமடையாததாயும் ஒரு அத்தியாசத்தினின்றும் சம்ஸ்காரம், சம்ஸ்காரத்தினின்றும் அத்தியாசம், இப்படி பிரவாஹரூப்மாய் அனாதியாயுமிருக்கிற,

இந்த அத்தியாசமானது.

(1) மித்தையான பிரபஞ்சரூபமாயும்,

(2) கர்த்தா போக்தாவென்னும் வியவஹார காரணமாயும்,

(3) சர்வ லோகத்துக்கும் பிரத்தியக்ஷமாயும் இருக்கிறது. [34]

(2) விஷயப் பிரயோசனங்கள்.

ரா இவ்விதமாக அத்தியாசத்தை வர்ணித்து, அதினால் சித்திக்கக்கூடிய விஷயப் பிரயோசனங்களை இனி காட்டுகிறார்).

இந்த கர்த்திருத்துவம் முதலிய அனர்த்தங்களுக்குக்காரணமான அத்தியாசத்தை நிவிர்த்திக்கும் பொருட்டு ஜீவப் பிரம்ம ஐக்கிய சாக்ஷாத்காரஞானம் வேண்டுமானதால் அதை அடைவதற்காக சகல வேதாந்தங்களும் ஆரம்பிக்கப்பட்டிருக்கின்றன, விசாரிக்கப்படுகின்றன.

ரா (விசாரிக்கப்பட்ட வேதாந்தங்களுக்கு

(1) ஜீவப் பிரம்ம ஐக்கியம், விஷயம்,

(2) மோக்ஷம் பலன்

அந்த விசாரரூபமாயிருக்கிற இந்த சாரீரகமீமாம்சா சாஸ்திரத்துக்கும் அதாவது சரீரத்தில் வசிக்கும் ஜீவனே பிரம்மம் என்று பிரதிபாதிக்கும் சாஸ்திரத்துக்கும் இவைகளே விஷயப்பிரயோசனங்கள் என்று அறிய வேண்டியது.)

சகல வேதாந்தங்களுக்கும் ஐக்கியமே அர்த்தம் என்பதை இந்த சாஸ்திரத்தில் காட்டுகிறோம்.

(இவ்விதமாக அத்தியாசமிருக்கிறதென்று நிரூபித்ததினால் பிரம்மாத்மைக்கியத்தில் விரோதமில்லை. அதினால் சாஸ்திரத்துக்கு விஷயப்பிரயோசனங்கள் ஏற்படுகின்றன. ஆகையால் சாஸ்திரம் ஆரம்பிக்கத் தக்கது. [35]

முதலாவது வர்ணகம்

முற்றிற்று.

---

## VIII. இரண்டாவது வர்ணகம்.

1. விஷயம்:—விசாரத்துக்கு விஷயமான வேதாந்த சாஸ்திரம் [36]

2. சந்தேகம்:—இதில் சொல்லிய விஷயம்

(1) முன்னமேயே சொல்லப்பட்டதாக சிலரும்

(2) சொல்லப்படவில்லையென்று சிலரும்.

சொல்லுவதால் இதை ஆரம்பிக்கிறதா இல்லையா என்பது சந்தேகம் [37]

3. பூர்வபக்ஷம்:—சகல வேதாந்தங்களும் கர்மத்தையே விதிக்கின்றன. இந்த கர்மம் பூர்வ மீமாம்சா சாஸ்திரத்தில்

अथातोधर्मजिज्ञासा முதலிய சூத்திரங்களால் விசாரிக்கப்பட்டிருக்கிறது. ஆகையால் வேதாந்தத்தின் விஷயம் முன் சொல்லப்பட்டதே. நூதன விஷயம் ஒன்றுமில்லாதபடியால் இந்த சாஸ்திரத்தை ஆரம்பிக்கவேண்டியதில்லை [38]

4. சித்தாந்தம் :—இது சரியன்று. ஏனெனின்.

a. 1. (1) பூர்வமீமாம்சைக்கு விஷயம் கர்மம்.
(2) இது அனுஷ்டானத்தால் சாத்தியம்; அனேகம்;
(3) இதின் பலமும் அநித்தியம்.

2. (1) பிரம்மமீமாம்சையின் விஷயம் பிரம்மம்.
(2) இது நித்திய சித்தம்.
(3) அதின் ஞானத்தால் உண்டாகும் மோக்ஷமும் நித்தியம்.

ஆகவே இரண்டுக்கும் விஷயப் பிரயோசனங்கள் வெவ்வேறு யிருப்பதால் பூர்வமீமாம்சையில் பிரம்ம மீமாம்சையின் அர்த்தம் சொல்லப்படவில்லை. ஆகையால் இந்த சாஸ்திரம் ஆரம்பிக்கத்தக்கது. [39]

b. மேலும் கர்மமே வேதார்த்தமாயிருக்கும்பக்ஷத்தில் சர்வஞ்ஞரான பாதராயணர் பிரம்ம விசாரத்தைப் பற்றிபிரஸ்தாபிக்கவேண்டியதில்லை. பிரஸ்தாபித்திருப்பதால் இந்த அர்த்தம் முன் சொல்லப்படவில்லை என்று சித்திக்கிறது. ஆகையால் இந்த சாஸ்திரம் ஆரம்பிக்கத்தக்கதே. [40]

இரண்டாவது வர்ணகம்,

முற்றிற்று

## IX. மூன்றாவது வர்ணகம்.

1. அவதாரிகை :—

रा இவ்விதமாக

(1) (முதல் வர்ணகத்தால் வேதாந்த விசாரதத்தைச் செய்யவேண்டிய விஷயத்தில் விஷயப் பிரயோஜனங்க ளிருக்கின்றனவென்றும்,

(2) இரண்டாவதுவர்ணகத்தால் வேதாந்தவிசாரம் முன் செய்யப்படாததால் இப்போது செய்யத்தக்க தென்றும்,

சொல்லி, இனி அவ்விசாரத்துக்கு அதிகாரி யிருப்பதால் அது செய்யத்தக்கது என்பதை சூத்திரத்தின் பதங்களாலேயே காட்டுகிறார்) [41]

रा 2. விஷயம் :—வேதாந்த சாஸ்திரம். [42]

रा 3. சந்தேகம் :—இந்த சாஸ்திரத்தின் விசாரம்
(1) ஆரம்பிக்கத்தக்கதா?
(2) ஆரம்பிக்கத்தகாதா?

சந்தேக பீஜம் :—

(1) அதிகாரி சித்திக்கிறதினால் சாஸ்திரம் ஆரம்பிக்கத்தக்கது என்கிற சிலருடைய பக்ஷமும்,

(2) அதிகாரி சித்திக்காதபடியால் விசாரம் ஆரம்பிக்கத்தக்கதல்ல என்கிற சிலருடைய பக்ஷமும்,

சந்தேக பீஜங்களாம். [43]

4. பூர்வபக்ஷம் :—

அதிகாரி சித்திக்காதபடியால் கிரந்தம் ஆரம்பிக்கத்தக்கதல்ல. [44]

5.—சித்தாந்தம்.

(1) (அதிகாரி சித்திக்கிறபடியால் கிரந்தம் ஆரம்பிக்கத்தக்கது.) [45]

(2) பதஉரை :—

अथ—பிறகு.
अतः...ஆகையால்.
ब्रह्मजिज्ञासा—பிரம்ம விசாரம் [46]

(3) பொழிப்புரை :—

சாதன சம்பன்னனான அதிகாரி இருப்பதால் பிரம்மவிசாரம் செய்யத்தக்கது. [47]

(4) பாஷ்யம்.

A. अथ சப்தத்தின் அர்த்தம் :—

a. கிரகிக்கவேண்டிய அர்த்தம் :—இவ்விடத்தில் अथ சப்தத்துக்கு பிறகு என்கிற அர்த்தத்தை கிரகிக்க வேண்டும் [48]

b. கிரகிக்கக்கூடாத அர்த்தங்கள் :—

रा :—கோசங்களில்.

मङ्गलानन्तरारम्भप्रश्न कार्त्स्न्येष्वथो अथ என்று சொல்லியிருப்பதால் अथ சப்தத்துக்கு.

1. மங்களம்.
2. அநந்தரம் (பிறகு).
3. ஆரம்பம்.
4. பிரச்னம்.
5. கார்த்ஸ்நயம் (சமஸ்தம்)

என்கிற அர்த்தங்களில் இவ்விடத்தில் பிறகு என்கிற அர்த்தத்தைத் தான் கிரகிக்கவேண்டியது, மற்றவைகளை கிரகிக்கக்கூடாது. [49]

ஏனெனின்

1. ஆரம்பார்த்தம் பொருந்தவில்லை.

எப்படியெனின் :—

பிரம்மஜிஞ்ஞாஸை ஆரம்பிக்கத் தக்கதன்று.(ஏனெனின்) ஜிஞ்ஞாஸா பதத்தால்

(1) ஞானேச்சை என்று அர்த்தமா? அல்லது

(2) விசாரமென்று அர்த்தமா?

(1) முதல்பக்ஷத்தில்:—அத சப்தத்துக்கு ஆரம்பார்த்தமானால் பிரம்மஞானேச்சை ஆரம்பிக்கத்தக்கதென்று சூத்திரார்த்தம் சித்திக்கிறது. இது அசங்கதம். ஏனெனின் இச்சை ஸ்வயமாய் உண்டாகவேண்டியதேதவிர செய்யத்தக்கதன்று. ஒவ்வொரு அதிகரணத்திலும் விசாரம் செய்கிறோமே தவிர இச்சை செய்யவில்லை.

(2) இரண்டாவதுபக்ஷத்தில்:—கர்தவ்யா என்கிற சப்தத்தைச் சேர்த்துக்கொள்ளாமல் விசாரம் என்கிற அர்த்தம் பொருந்தாது. அப்படி சேர்த்துக்கொண்டால் அந்த பதத்தாலேயே ஆரம்பம் என்கிற அர்த்தம் சித்திக்கிறபடியால் அத சப்தம் வியர்த்தமாகும். ஆகையால் ஆரம்பார்த்தம் பொருந்தாது. [50]

2. மங்களார்த்தம் கூடாது:—ஏனெனின் பிரம்மவிசாரம் செய்யத்தக்கதென்னும் வாக்கியார்த்தத்தில் கர்த்தாமுதலான வழியாய் மங்களார்த்தம் பொருந்தவில்லை.

ர (விக்கினநிவர்த்தியின் பொருட்டும் சிஷ்டாசாரத்தைப் பரிபாலனம்பண்ணும் பொருட்டும் சாஸ்திராரம்பத்தில் மங்களத்தை அநுஷ்டிக்கவேண்டும்.

ओँकारश्चाथशब्दश्च द्वावेतौ ब्रह्मणः पुरा ।
कण्ठं भित्वा विनिर्यातौ तस्मान्माङ्गलिकाविमौ ॥

அதாவது:— ஓங்காரமும் அத சப்தமும் இரண்டும் பிரம்மாவின் கண்டத்தை பேதித்து வெளிப்பட்டன. ஆகையால் இவ்விரண்டும் மங்களகரங்கள் என்கிற ஸ்மிருதியில் அத சப்தம் மங்களத்தைக் கொடுக்கிறதென்று சொல்லியிருப்பதால் இவ்விடத்திலும் அந்த அர்த்தந்தானெனின்

அத சப்தத்துக்கு மங்களமென்று அர்த்தமன்று) அதை கேட்டதினால் மங்களமுண்டாகிறது

ர (சங்கம் வீணை முதலியவைகளின் நாதத்தை கேட்கிறதினால் மங்களமுண்டாகிறதுபோலும்) ஆகையால் அந்த பதத்தின் அர்த்தம் பிறகு என்பதே. [51]

(3. பிரச்னார்த்தம் சம்பவிக்கமாட்டாது. ஏனெனின் பிரச்னம் செய்கிறவன் ஒருவனும் பிரகிருதத்தில்லை. [52]

(4. சமஸ்தம் என்கிறஅர்த்தமும் கூடாது. ஏனெனின் பிரம்மஜிஞ்ஞாசா முழுமையும் என்பதினால் யாதொரு பிரயோஜனமும் சித்திக்கவில்லை.) [53]

5. அத சப்தத்துக்கு அர்த்தாந்தரம் (வேறு அர்த்தம்) என்று சொல்லும்பக்ஷத்தில் பிரம்மஜிஞ்ஞாஸை வேறு என்று சூத்திரார்த்தம் ஏற்படுகிறது. முந்தின இன்னதற்கு வேறு என்று குறிப்பிடாதபடியால் ஜிஞ்ஞாஸைக்குக் காரணமானதற்கு வேறு என்று அர்த்தம் செய்யவேண்டும். காரணத்தை அபேக்ஷித்து காரியம் வேறு. காரணத்துக்குப் பிறகுதான் காரியம் சம்பவிக்கிறது. ஆகையால் வேறு என்பதும் பிறகு என்பதும் முடிவில் ஒரு அர்த்தத்தையே கூறுகிறது.

ஆகையால் பிறகு என்னும் அர்த்தத்தையே கிரகிக்கவேண்டியது. [54]

c. எதற்குப் பிறகு என்னும் விசாரம்.

அத சப்தத்துக்கு பிறகு என்று அர்த்தம் செய்திருப்பதால் எப்படி தர்மத்தை அறியவேண்டும் என்னும் இச்சை முன்செய்த வேதாத்தியனத்தை நியமமாக அபேக்ஷிக்கிறதோ அப்படி பிரம்மத்தை அறியவேண்டுமென்னும் இச்சையானது முன்னிருக்கிறதை நியமமாக அபேக்ஷிக்கிறதென்பதை சொல்லவேண்டும். [55]

1. சாமான்னிய காரணம்.

வேதாத்தியனத்தை பிரம்மவிசாரம் அபேக்ஷிக்கிறதாகச் சொல்லும்பக்ஷத்தில் வேதாத்தியனம்

(1) பிரம்மவிசாரத்துக்கும்

(2) தர்மவிசாரத்துக்கும்

சாதாரணகாரணமாயிருப்பதால் பிரம்மவிசாரத்துக்கு அது போதுமான காரணம் என்று ஏற்படமாட்டாது. [56]

2. விசேஷ காரணம்.

A. காரியகாரண பாவவிசாரம்

சர்வாபேக்ஷாதிகரணத்தில் (3-4-26).

(யஞ்ஞாதிகர்மங்கள் ஞானத்தின் பொருட்டு விதிக்கப்பட்டிருப்பதால்) பிரம்மவிசாரத்தில் தர்மமீமாம்சையால் உண்டாகும் கர்மஞானமே போதுமான காரணமாயிருக்கட்டுமே எனின்

அது சரியன்று. ஏனெனின் தர்மவிசாரத்துக்கு முன்னமேயே வேதாத்தியனம் செய்தவன் பிரம்மவிசாரத்தைச் செய்யமுடியும்.

(பாஷ்யகாரருடைய கருத்து)

ரா (1. பூர்வமீமாம்சையிலுள்ள ஆயிரம் அதிகரணங்களும் (யுக்திகளும்) பிரம்மவிசாரத்துக்காவது பிரம்மஞானத்துக்காவது போதுமான காரணமாக மாட்டா. ஏனெனின் அவைகள் தர்மத்தைமட்டும் நிச்சயிக்கின்றன.)

ரா (2) தர்மநிச்சயமே (கர்மநிர்ணயமே) போதுமான-காரணமாயிருக்கட்டுமே எனின்,

அது அனுஷ்டானத்துக்குக் காரணமாயிருக்கிறதேதவிர பிரம்மவிசாரத்துக்குக் காரணமல்ல.

(3) புகையை அறிந்தமாத்திரத்தில் நெருப்பு அறியப்படுவதுபோல் தர்மஞானத்தால் பிரம்மஞானமுண்டாகட்டுமே எனின்,

அப்படி நியமம் ஏற்படவில்லை.

ரா (4) கர்மங்கள் அந்தக்கரணத்தை சுத்தம்பண்ணுகிறமூலமாக பிரம்மவிசாரத்துக்குக் காரணமாயிருந்தாலும்,

அவைகள் அதிகாரிக்கு அவசியம் வேண்டுமென்பதில்லை. ஏனெனின் இந்த ஜென்மத்தில் கர்மங்களைச் செய்யாதவர்கள்கூட முந்தின ஜன்மத்திற் செய்த கர்மத்தால் சித்தசுத்தியடைந்து பிரம்ம விசாரத்துக்கு அதிகாரிகளாகலாம்.

ரா (அதிகாரிக்கு அவசியம் வேண்டியதாக எது இருக்கிறதோ அதுவே விசாரத்துக்கு முந்தின போதுமான காரணமாகும். கர்மம் அதின்ஞானம், அதின் விசாரம் அதிகாரிக்கு அவசியம் வேண்டியதில்லை. ஆகையால் பிரம்மவிசாரத்துக்குமுன் தர்மவிசாரம் வேண்டும் என்பதில்லை). [57]

## B. கிரமவிசாரம்

ரா கர்மவிசாரத்துக்கும் பிரம்ம விசாரத்துக்கும் காரியகாரண சம்பந்தமில்லாமற் போனாலும், பிறகு என்று அர்த்தம் செய்திருப்பதால் கர்மஞானத்துக்குப் பிறகு பிரம்ம ஞானமென்பதாய் கிரம வரிசையை அத சப்தம் கூறட்டுமே எனின்

1. கர்த்தாவில் பேதம்.

எப்படியாகத்தில் பசுவின் ஹிருதயத்தை முதலில் எடுத்து, பிறகு நாக்கு பிறகு மார்பு முதலியவை எடுக்கச்சொன்ன விடத்தில் எடுக்கும் கிரமவரிசையை அத சப்தம் கூறுகிறதோ அப்படி இவ்விடத்தில் தர்ம பிரம்மவிசாரணையில் கிரமம் சொல்லப்படவில்லை.

ரா இவ்விரண்டிற்கும் கர்த்தா ஒருவனாக ஏற்படாததினால் அத சப்தத்திற்கு கிரமவரிசை என்று அர்த்தம் செய்யக் கூடாது. [58]

(1) தர்ம பிரம்ம விசார விஷயங்களில்

1. சேஷ சேஷிபாவமும்

2. அதிகிருத அதிகாரபாவமும்

இருப்பதாக பிரமாணமில்லை. எப்படியெனின்.

ரா (1. சேஷ சேஷி பாவம் என்றால் அங்க அங்கி பாவம். தர்சபூரணமாச யாகத்தில் பிரயாஜம் என்னும் ஒரு கிரியை அங்கமாக ஏற்பட்டிருக்கிறது. இதைச் செய்துதான் தர்சபூர்ணமாச யாகத்தைச் செய்ய வேண்டும். இதில் கிரமம் காணப்படுகிறது. பிரயாஜத்துக்கும் தர்சத்துக்கும் அங்க அங்கிபாவம் காணப்படுகிறது. இப்படி தர்மவிசாரத்துக்கும் பிரம்மவிசாரத்துக்கும் அங்க அங்கிபாவம் காணப்படவில்லை).

ரா (2 அப்படியே அதிகிருத அதிகாரி பாவமும் காணப்படவில்லை. எப்படி எனின் தர்சபூரணமாச யாகத்தைச் செய்து அதிகாரம் அடைந்தவன்தான் சோமயாகத்தைச் செய்ய அதிகாரத்தை அடைகிறான். அப்படி தர்மவிசாரத்தைச் செய்தவன்தான் பிரம்ம விசாரத்தைச் செய்ய அதிகாரமடைகிறான் என்பதற்குப் பிரமாணமில்லை.) [59]

ரா (ஆகையால், தர்மபிரம்ம விசாரங்களுக்கு கர்த்தா ஒருவனே என்றுசித்திக்காதபடியால் கிரமவரிசை என்னும் அர்த்தத்தைஎடுத்துக் கொள்ளக்கூடாது.) [60]

2.—பலவிஷயத்தில் பேதம்.

ரா (1. ஆக்னேயம் முதலிய ஆறுயாகங்கள் சேர்ந்து ஒன்றான ஸ்வர்க்க பலத்தைக் கொடுக்கின்றன.

2. பூர்வமீமாம்சையின் 12 அத்தியாயங்களும் தர்மம் என்கிற ஒரு விஷயத்தையே விசாரிக்கின்றன.

இந்தயாகங்களிலும் அத்தியாயங்களிலும் கிரமம் ஏற்பட்டிருப்பதுபோல் இவ்விடத்திலும் கிரமம் இருக்கட்டுமே யெனின்).

தர்மபிரம்ம விசாரங்களுக்கு

(1) பலமும் வேறு,

(2) விஷயமும் வேறு.

(இப்படி பேதமிருப்பதால் கிரமம் ஏற்படவில்லை). எப்படி எனின்

(1) தர்மஞானம், பசு புத்திரன், ஸ்வர்க்கம் முதலியவைகளைக் கொடுக்கிறது.

(2) அதுவும் அனுஷ்டானத்தால்தான் சித்திக்கிறது.

(1) பிரம்ம ஞானம் மோக்ஷத்தைக் கொடுக்கிறது.

(2) அதுவும் அனுஷ்டானத்தையே அபேக்ஷிக்கவில்லை.

(ஆகையால் இரண்டுக்கும் பலம்வெவ்வேறு)[61]

3. விஷய பேதம் :—

A. தர்ம விஷயமோ

(1) அனுஷ்டானத்தால் சாத்தியமாயிருக்கிறது.

(2) விசாரம் செய்யும் சமயத்தில் இல்லை.

(3) புருஷனுடைய பிரயத்தினத்தால் சித்திக்கத்தக்கதாயிருக்கிறது.

B. இந்த உத்தரமீமாம்சையில் பிரம்மமோ

(1) நித்திய சித்தாயிருக்கிறது.

(2) (கர்மம் புருஷனுடையபிரயத்தினத்திற்கு அதீனமாயிருப்பதுபோல) புருஷ பிரயத்தனத்தால் சித்திக்கவில்லை.[62]

4.—பிரமாண பேதம்.

1. பூர்வமீமாம்சைக்கும்

2. பிரம்மமீமாம்சைக்கும்

வாக்கியார்த்தத்தில் பேதமிருப்பதாலும் கிரமவரிசை என்னும் அர்த்தம் சித்திக்கவில்லை.

(1) கர்மகாண்டத்தின் வாக்கியம்புருஷனுக்கு தெரியாத விஷயத்தைச் சொல்லி கர்மத்தை செய்யும்படி ஏவுகிறது.

(2) ஞானகாண்டத்தின் வாக்கியம் புருஷனை போதிக்கிறதே தவிர ஏவவில்லை. ஞானம்

अयमात्माब्रह्म (ஞ.2-5-19)

முதலிய வாக்கியங்களால் உண்டாகிறது. ஞான விஷயத்தில் புருஷன் ஏவப்படுகிறதில்லை. கண்முனாக இருக்கும் விஷயத்தை அறியும் விஷயத்தில் யாதொரு ஏவுதலும் வேண்டியதில்லை என்பதுபோலும்.

(ஆகையால் பலபேதவிஷயபேத வாக்கியார்த்த பேதங்களால் கிரமவரிசை ஏற்படவில்லை) [63]

ஆகையால்

அத சப்தத்துக்கு வேறு ஒரு அர்த்தமும் பொருந்தாமல் பிறகு என்னும் அர்த்தமேசித்திக்கிறது. [64]

d. எதற்காவது பிறகு பிரம்ம விசாரம் செய்யத்தக்கது என்று இனி உபதேசிக்கவேண்டும். அது என்னவெனின்.

1. நித்தியா நித்திய வஸ்து விவேகம்

2. இஹபரலோக போகங்களில் விரக்தி

3. சமதமாதி சாதனங்கள்

1. சமம்:—லௌகிக வியாபாரத்தினின்றும் மனது ஒழிவடைதல்.

2. தமம்:—இந்திரியங்கள் விஷயங்களில் பிரவிர்த்திக்காமல் ஒழிவடைதல்.

3. உபரதி:—கர்ம சன்னியாசம்.

4. திதீக்ஷை:—சீதோஷ்ணாதிகளை சகித்தல்.

5. சமாதானம்:—நித்திரை ஆலசியம் முதலியவைகளை விட்டு விடுவதினால் உண்டாகும் மனதின் ஸ்திதி.

6. சிறத்தை:—எங்கும் ஆஸ்திக புத்தி, வேதம் குருமுதலியவைகளில் விசுவாசம்.

4. மோக்ஷ இச்சை.

5. இவைகளிருந்தால் தர்மவிசாரத்துக்கு முன்னும், அதற்குப்பின்னும் பிரம்மத்தை விசாரிக்கவும் அறியவும் முடியும்.

இவைகளில்லாவிடின் முடியாது.

ஆகையால் அத சப்தத்தால் மேற்சொல்லிய சாதனங்களை அடைந்தபிறகு என்று அறியவேண்டியது. [65]

B अतः ஆகையால் (அதாவது சாதன சதுஷ்டயம் சித்தித்திருப்பதால்).

रा (சாதன சதுஷ்டய சம்பந்தத்திற்குப் பிறகு என்று अथ சப்தத்தால் கூறப்பட்டிருந்தும்,

மறுபடியும் अतः ஆகையால் என்று ஒருபதத்தை ச்சொல்ல வேண்டிய நிமித்தமென்னவெனின்,

(1) अक्षय्यंहवै चातुर्मास्ययाजिनः सुकृतं

அதாவது,

சாதுர்மாஸ்யயாகம் செய்தவனுக்கு அக்ஷயசுகம்

என்று சொல்லும் சுருதியால் கர்மபலம் நித்தியம் என்று ஏற்படுகிறது. அதினால் வைராக்கியம் உண்டாக மாட்டாது.

(2) ஜீவனுக்கும் பிரம்மத்துக்கும் பேதமிருப்பதால் மோக்ஷம் சித்திக்கமாட்டாது.

ஆகையால் சாதனங்களே சித்திக்காமற் போய் விடுமே என்று ஒருவன் சங்கிக்கலாமாகையால் அதை நிவர்த்திக்கும்பொருட்டு சாதனங்கள் சித்திக்கும் என்று अतः சப்தத்தால் உறுதிபடுத்துகிறார்).

(இதையே இனி விவரிக்கிறார்).

(1) तद्यथेह कर्मचिंतोलोकः क्षीयते एवमेवामुत्र पुण्यचितो लोकःक्षीयते

(அர்த்தம் 1-வது பக்கம் பார்க்க.)

என்கிற छा 8—1—6 முதலிய சுருதிகளே சுவர்க்காதி சாதனங்களான அக்கினிஹோத்திராதி கர்மங்கள் அநித்திய பலத்தைக் கொடுக்கின்றனவென்று காட்டுகின்றன.

அப்படியே,

(2) ब्रह्मविदाप्नोतिपरम् (தை-2-1)

முதலியசுருதிகளே பிரம்மஞானத்தால் சிரேஷ்டமானமோக்ஷம் சித்திக்கிறதென்று காட்டுகின்றன.

रा இவ்விதமாக अथ சப்தத்தாலும் अतः சப்தத்தாலும் பிரம்மவிசாரத்துக்கு வேண்டிய சாதனங்களுடன் கூடின அதிகாரி சித்திப்பதால் சாஸ்திரம் ஆரம்பிக்கத்தக்கது. [66]

C. ब्रह्मजिज्ञासा :—

(1) மேற்சொன்ன சாதனங்களை அடைந்த பிறகு பிரம்மவிசாரம் செய்யத்தக்கது.

பிரம்மமோ

जन्माद्यस्य यतः

என்கிற அடுத்த சூத்திரத்திற் சொல்லிய லக்ஷணமுள்ளது. ஆகையால்

रा (அதாவது அந்த லக்ஷணத்தை அனுசரித்து) பிரம்ம சப்தத்துக்கு ஜாதிமுதலிய (அதாவது பிராமணத்துவாதிஜாதி, ஜீவன், வேதம், சதுர்முகபிரம்மா) அர்த்தங்கள் ஏற்படும் என்று சங்கிக்கக்கூடாது. [67]

(2) a. ब्रह्मणः + जिज्ञासा = ब्रह्मजिज्ञासा

ब्रह्मणः என்பது ब्रह्म சப்தத்தின் ஆறும் வேற்றுமை. இந்த வேற்றுமை

1. கர்மணிஷஷ்டி என்றும்
2. சேஷ ஷஷ்டி என்றும்

இருவகைத்து. கர்மம் என்றால் விஷயம். இவ்விடத்தில் விசாரத்துக்கு விஷயம் பிரம்மம்.

ஆறும் வேற்றுமைக்குக் கர்மத்தைக்குறிப்பிடும் தன்மையிருப்பதால், அறியவேண்டுமென்கிற இச்சைக்கு விஷயமான பிரம்மம் ஆறும் வேற்றுமையில் உபயோகிக்கப்பட்டிருக்கிறது. [68]

b. ब्रह्मणः என்பது சேஷஷஷ்டி என்று சிலர் சொல்லுவது சரியன்று. சேஷம் என்பது சாமான்னிய சம்பந்தத்தைக்கூறுகிறது. ब्रह्मणः जिज्ञासा என்பதில்சேஷஷஷ்டிபிரயோகம் ஏற்பட்டிருந்தால் பிரம்ம சம்பந்தமானதைப்பற்றி விசாரமென்று அர்த்தமாகுமேதவிர பிரம்மத்தைப்பற்றி விசாரமென்று அர்த்தமாக மாட்டாது. ஜிஞ்ஞாஸா பதமோ அறிவு இச்சை இவ்விரண்டையும் கூறுகிறது. இச்சைக்கு விஷயம் ஞானம், ஞானத்துக்கு விஷயம் பிரம்மம். ஞா என்னும் பகுதி அறிவு என்னும் அர்த்தத்தை வகிப்பதால் ஒரு விஷயத்தை அபேக்ஷிக்கிறது. இந்த இச்சைக்கும் அறிவுக்கும் வேறு விஷயமோ கூறப்படவில்லை. விஷயம் அவசியம் வேண்டியதாக இருப்பதாலும் பிரகிருதத்தில் பிரம்மம்தான் விஷயமாக இருப்பதால் அத்துடன் சம்மந்தப்பட்டதைப்பற்றிச் சொல்லுவது அனாவசியமாகையாலும், சேஷஷஷ்டியை ஒப்புக்கொள்வது அயுக்தம். [69]

c. (1) ஆக்ஷேபம்:- சேஷஷஷ்டியை ஒப்புக்கொண்டாலும் பிரம்மமே ஜிஞ்ஞாஸைக்கு விஷயமென்றுசொல்லுவதில் விரோதமில்லை. ஆகவே சேஷஷஷ்டியை ஒப்புக்கொள்ளுவதிலும் சாமான்னிய சம்பந்தமூலமாக பிரம்மமே ஜிஞ்ஞாஸைக்கு கர்மமாக ஏற்படுவதால்யாதொரு பாதகமுமில்லை

உத்தரம். பிரத்தியக்ஷமாய் பிரம்மம் விஷயமாயிருப்பதை விட்டுவிட்டு சாமான்னிய சம்பந்தமூலமாக விஷயம் என்று சொல்லுவதில் வீணான சிரமமே உண்டாகிறது [70]

(2) ஆ:—பிரம்மஜிஞ்ஞாஸா என்பதால் பிரம்மத்தை ஆசிரயித்துக்கொண்டிருக்கிற

1. லக்ஷணம்,
2. பிரமாணம்,
3. யுக்தி,
4. ஞானம்,
5. சாதனம்,
6. பலம்,

இவைகளைப் பற்றி விசாரம் சொல்லப்பட்டிருக்கிறதே தவிர கேவலம் பிரம்மத்தைப்பற்றி மட்டும் சொல்லப்படவில்லை. பிரம்மசம்பந்தம் என்கிற பொதுவான வசனத்தில் அதின் லக்ஷணாதிகளின் சம்பந்தத்தை ஒப்புக்கொள்ளுவதுபோல் பிரம்மத்தின் சாக்ஷாத் சம்பந்தத்தையும் ஒப்புக்கொள்ளலாம். இந்த விசேஷவசனம் சாமான்னியத்தில் அடங்கியே இருக்கிறது. ஆகையால் பிரம்மசம்பந்தத்தைக் கூறுவதில் சிரமம் வியர்த்தம் என்று சொல்லக்கூடாது

ச:—அது சரியன்று, முக்கியமானதைச் சொன்னால் அதிலடங்கியது யாவற்றும் சேர்ந்துவிடும். பிரம்மமோ ஞானத்தால் அடையவேண்டியவைகளில் முக்கியமானது. இந்த முக்கியமானதைச் சொன்ன மாத்திரத்தில், எவைகளன்றியில் ஜிஞ்ஞாஸை சித்திக்க மாட்டாதோ, அவைகளும் இதில் சேர்ந்துவிடுவதால், அவைகளைப்பற்றித் தனிமையில் சொல்லவேண்டியதில்லை. "இந்த அரசன் போகிறான்" என்று சொன்னால், பரிவாரங்களுடன் போகிறான் என்று சொன்னதாக ஆகிறதுபோலும். [71]

d. சுருத்தியானுசாரம்.

மூலசுருதியை அனுசரித்திருப்பதினாலேயும் அதாவது சுருதியும் சூத்திரமும் ஒரே அர்த்தத்தைக் கூறுவதினாலேயும் கர்மணிஷஷ்டியையே ஒப்புக்கொள்ளவேண்டியது.

यतोवाइमानिभूतानि जायन्ते येनजातानि जीवन्ति यत्प्रयन्त्यभिसंविशन्ति तजिज्ञासस्व

அதாவது:—எதினின்றும் இந்த பிராணிகள் உண்டாகிறார்களோ, எதினால் இவர்கள் ஜீவிக்கிறார்களோ எதில் லயமடைகிறார்களோ அதை பிரம்மம் என்று அறி

என்கிற தைத்ரீய

(III-1) சுருதியானது சாக்ஷாத்பிரம்மமே விசாரவிஷயம் என்பதைக் காட்டுகிறது. இந்த தைத்ரீய சுருதிமூலம் கர்மணிஷஷ்டியை ஒப்புக்கொண்டால் மூலசுருதிக்கும் இந்த சூத்திரத்துக்கும் ஒரே அர்த்தம் சித்திக்கிறது. மூலத்துக்கும் சூத்திரத்துக்கும் விரோதம் கூடாது என்பது கருத்து)

e. ஆகையால் ब्रह्मणः என்பது கர்மணி ஷஷ்டியே. [73]

D. जिज्ञासा = ज्ञातुं + इच्छा

அறியவேண்டுமென்கிற இச்சை அதாவது பிரம்ம சாக்ஷாத்காரபரியந்தமான ஞானம் இச்சைக்கு விஷயம். இந்த இச்சைக்கு பலமும் பிரம்ம சாக்ஷாத்காரம் (இதர பகுதிகளுக்கு விஷயம் வேறாகவும் பலம் வேறாகவும் இருக்கும். கிராமத்துக்குப் போகிறான் என்பதில் போகிற செய்கைக்கு கிராமம் விஷயம். கிராமத்தை அடைதல் பலம். இச்சை என்னும் பகுதிக்கு விஷயமும் பலமும் ஒன்றே.)

எந்த பிரம்மசாக்ஷாத்காரம் அடைய இச்சிக்கப்படுகிறதோ அந்த பிரம்மசாக்ஷாத்காரத்துக்கு ஞானம் சாதகம். பிரம்மசாக்ஷாத்காரமே புருஷார்த்தம், ஏனெனின் அது சம்சாரபீஜமான அவித்தை முதலிய அனர்த்தத்தை நிவர்த்திக்கிறது, நாசம் செய்கிறது. ஆகையால் பிரம்மஜிஞ்ஞாஸா என்பதினால் பிரம்மத்தை அறியவேண்டும் என்கிற இச்சை தரிக்கத்தக்கது. அதாவது பிரம்மவிசாரம் செய்யத்தக்கது என்று அறியவேண்டியது. [74]

E. ர (अथअत: என்கிறசப்தங்களால் அதிகாரிசித்திக்கிறபடியால் அவன் பிரம்மஞானத்தின் பொருட்டு விசாரம் செய்யவேண்டியது என்பது சூத்திரார்த்தம்.) [75]

3-வது வர்ணகம் முற்றிற்று.

## X. நான்காவது வர்ணகம்.

1. விஷயம்:—பிரம்ம விசாரம் [76]

2. சந்தேகம்:—முதலாவது வர்ணகத்தில் பந்தத்துக்கு அத்தியாசம் சொன்னதினால் விஷயம் முதலியவை சித்தித்தாலும் பிரம்மம் பிரசித்தமானால் விஷயம் சம்பவிக்கும், பிரசித்தமாகாவிட்டால் விஷயம் சம்பவிக்க மாட்டாது ஆகையால் சாஸ்திரம் ஆரம்பிக்கத்தக்கதா, தகாததா? [77]

3. பூர்வபக்ஷம்:—

இந்த பிரம்மம்.

(1) பிரசித்தமா,

(2) அப்பிரசித்தமா?

ரா (1) (வேதாந்த விசாரத்துக்கு முன்னமேயே) பிரம்மம் அறியப்பட்டிருந்தால்,

a. அறியப்படாத விஷயமில்லை,

b. அஞ்ஞானமில்லாதபடியால் அதைநிவர்த்தி செய்தல் என்னும் பலமுமில்லை.

ஆகையால் பிரம்மத்தைப்பற்றி விசாரிக்க வேண்டியதில்லை.

ரா (2) அது (ஒருவனாலும் ஒரு பிரமாணத்தாலும்) அறியப்படாததாக இருந்தால், அதை உத்தேசித்து விசாரம் செய்ய முடியாது.

ரா (ஏனெனின் அறியப்படாததைப்பற்றி யாதொரு உத்தேசமும் சொல்லமுடியாது. விசார சாஸ்திரத்தாலும் உபநிஷத்துக்களாலும் அது பிரதிபாதிக்கப்படமாட்டாது. எப்போது அது பிரதிபாதிக்கப்படவில்லையோ, அப்போது அதைப்பற்றி ஞானம் உண்டாகமாட்டாது. அதினால் பலமும் சித்திக்கமாட்டாது. ஆகையால் சாஸ்திரம் ஆரம்பிக்கத் தக்கதன்று.) [78]

4. சித்தாந்தம்.

சாமான்னியஞானம்.

(1) பிரம்மம் பிரசித்தம். சர்வஞ்ஞமாயும், சர்வசக்தியுடன் கூடினதாயும், நித்திய சுத்த புத்த முக்தஸ்வபாவமுள்ளதாயும் பிரம்ம மிருக்கிறது [79]

(2) பிரம்ம பிரசித்திக்குப் பிரமாணம்.

(a) வியுத்பத்தி :—பிரம்மசப்தம் ப்ருஹ் தாது என்னும் பகுதியிலிருந்து வருகிறது. இந்த பகுதிக்கு விர்த்தி என்று அர்த்தம். [80]

(b) நித்திய சுத்தி புத்தி முதலிய அர்த்தங்கள் பகுதி அர்த்தத்தை அநுசரித்து விளங்குகின்றன.

ரா [எப்படியெனின் பிரம்மசப்தத்திற்கு (விர்த்தியால்) பெரிது என்று அர்த்தம். இந்த பெரிது என்பதற்கு அளவு இல்லை. அளவற்ற பெரியதாயிருக்கும் தன்மை அர்த்தம் (முடிவு) உள்ள இடத்திலும், சர்வஞ்ஞதன்மை அர்த்தம் சம்பந்தன்மை முதலிய குணங்களில்லாத இடத்திலும் சம்பவிக்கமாட்டாது. ஏனெனின் உலகத்தில் குணமில்லாதவனும் தோஷமுள்ளவனும் அல்லன் என்பது பிரசித்தம். ஆகையால், பகுதி அர்த்தத்தினின்றும் தேசகால வஸ்து பரிச்சேதமற்ற ஸ்வபாவமுள்ளது, நித்தியம் என்று விளங்குகிறது.]

ரா (அவித்தைமுதலிய தோஷங்களற்றதாகையால் சுத்த ஸ்வபாவம் விளங்குகிறது.)

ரா (ஜாட்டியமற்றதாகையால் புத்தத்தன்மை விளங்குகிறது.)

ரா (பந்தகாலத்திலும் தனக்கு பந்தமில்லாததால் முக்தஸ்வபாவம் விளங்குகிறது.)

ரா (ஆகவே சர்வஞ்ஞத்வாதி குணங்களோடு கூடின தத்பதவாச்சியமான பிரம்மம் பிரசித்தம். இனி த்வம் பதார்த்தத்தாலும் பிரசித்தம் என்பதைக் கூறுகிறார்.) [81]

c. (சகல லோகத்தினுடைய ஆத்மா இந்தபிரம்மத்தைவிட வேறாகாமையாலும்) அதாவது பிரம்மமே சகலத்துக்கும் ஆத்மாவாக இருப்பதாலும் பிரம்மம் இருக்கிறதென்பது பிரசித்தம். ஆத்மா இருக்கிறான் என்பதை ஒவ்வொருவனும் அறிந்திருக்கிறான். "நான் இருக்கவில்லை." என்பதாய் ஒருவனும் நினைக்கிறதில்லை. ஆத்மா இருக்கிறது தெரியாதிருந்தால் "நான் இல்லை" என்று ஒவ்வொருவனும் நினைப்பான்.

ரா (ஆனால் "நான் இருக்கிறேன்" என்றே ஒவ்வொருவனும் நினைக்கிறான். ஆகையால் ஆத்மா இருக்கிறதே பிரசித்தம்.)

ரா अयमात्माब्रह्म முதலிய சுருதிகளால் ஆத்மாவே பிரம்மம். [82]

2. விசேஷஞானம்

பூ :—உலகத்தில் பிரம்மம் ஆத்மா வென்று பிரசித்தமாக அறியப்பட்டிருந்தால், அறியப்படாதது ஒன்றுமில்லாதபடியால் விஷயாதியுமில்லை, ஆகையால் அதை விசாரிக்கவேண்டியதுமில்லை [83]

சி :—அது சரியன்று. பிரம்மத்தின் விசேஷஞானத்தில் விவாதமிருக்கிறது.

ரா ("இதுவெள்ளி" என்பதாய் கிளிஞ்சல் பிரசித்தமாயிருப்பதால் "நான் இருக்கிறேன்" என்பதால் சைதன்னியஸ்வரூப ஆத்மாவே பிரம்மம் என்று விளங்கினாலும் அதினுடைய பூரணாநந்தாதி விசேஷங்கள் தெரியவில்லை. சைதன்னியம் சத்ரூபம் என்கிற விஷயத்தில் வாதிகளுக்குள் வித்தியாசமில்லை. கிளிஞ்சலை நன்றாக அறிந்த மாத்திரத்தில் "இது வெள்ளியா வேறொன்றா" என்னும் விவாதம் உண்டாகிறதில்லை. ஆகவே பிரம்மம் சாமான்னியமாயறியப்பட்டிருந்தா

னும் விசேஷ ஸ்வரூபம் அறியப்படாமையால் விஷயாதிகள் சித்திக்கின்றன. சாமான்னிய விசேஷ பாவங்கள் ஆத்மாவினிடத்தில் கற்பிக்கப்பட்டிருக்கின்றன. [84]

ஆத்மா விஷயத்தில் பல அபிப்பிராயங்கள்.

1. சாஸ்திர ஞானமில்லாதவர்களும் லோகாயதர்களில் சிலரும் "சைதன்னியத்துடன் கூடின தேகம் தான் ஆத்மா" என்கிறார்கள்.

2. சேதனத்துடன் கூடின இந்திரியங்களே ஆத்மாவென்று சிலர் சொல்லுகிறார்கள்.

3. மனதே ஆத்மாவென்று சிலர் சொல்லுகிறார்கள். இவைகளில் சிலர் இந்திரியங்களாவது மனதாவது ஆத்மா வென்கிறார்கள்.

(இவர்களனைவரும் லோகாயதர்களில் உட்பிரிவினர்கள்.)

4. (யோகாசார மதத்தை அனுசரித்தவர்கள்) ஆத்மா விஞ்ஞானமாத்திரம் என்றும் ஒருக்ஷணமிருக்கிறதென்றும் (ஒருக்ஷணமிருக்கும் விஞ்ஞானமென்று அர்த்தம்) சொல்லுகிறார்கள்.

5. (மாத்தியமிகர்கள்) ஆத்மா சூன்னியம் என்கிறார்கள்.

ரா (மேற்சொன்னவர்களின் மதம் வேத பாஹியம்.)

6. (தார்க்கிகர்கள்) ஆத்மா தேகாதிகளுக்கு வேறாயினும், சம்சாரி என்றும், கர்த்தாவென்றும், போக்தாவென்றும் சொல்லுகிறார்கள்.

7. சாங்கியர்கள்—ஆத்மா போக்தாமட்டுந்தான், கர்த்தாவல்ல வென்கிறார்கள்.

8. த்வைதிகள் (யோகிகள்) ஜீவனைவிட வேறாக ஈசுவரன் சர்வஞ்ஞனும் சர்வசக்திமானுமாயிருக்கிறான் என்கிறார்கள்.

(1-முதல் 5-வரையில் உள்ள மதங்களில் ஆத்மா தேகம், இந்திரியம், மனது, புத்தி, சூன்னியம் என்பது சித்தாந்தம்.

6-ல். தேகாதிகளுக்கு வேறானாலும் சம்சாரி, கர்த்தா, போக்தா.

7-ல். போக்தாமட்டும், கர்த்தாவல்ல.

8-ல். அகர்த்தாவானாலும் ஈசுவரனை விட வேறு. ஆகையால் ஈசுவரனிருக்கிறார்.)

9. (வேதாந்திகள்) போக்தாவான ஜீவனுக்கு ஈசுவரன் ஆத்மா அதாவது ஸ்வரூபம் என்று சொல்லுகிறார்கள். [85]

இவ்விதமாக யுக்திசுருதி ஆபாசங்களை ஆசிரயித்துக்கொண்டிருக்கும் வாதங்கள் அனேகங்களாயிருக்கிறன.

ரா (யுக்தி வாக்கியங்களை ஆசிரயித்துக்கொண்டிருக்கிற சித்தாந்திகள்,

(१) जीवोब्रह्मैवआत्मत्वात्

முதலிய யுக்திகளாலும்

(२) तत्वमसि

முதலிய சுருதிவாக்கியங்களாலும்

ஜீவனே பிரம்மம் என்கிறார்கள் [86]

தேகாதிகளே ஆத்மா என்று சொல்லும் வாதிகள் தேகாதிகளே நான் என்றும் ஞானத்துக்கு விஷயமாயிருப்பதால் அவைகளே ஆத்மாவென்று யுக்தி ஆபாசத்தை கிரகிக்கிறார்கள். தேகாதிகள் பூதகாரியமாயிருப்பதாலும், திருசியமாயிருப்பதாலும் அனாத்மாக்களே என்கிற யுக்தியால் ஆபாசயுக்தி அடிபட்டுப்போகிறது.

இந்திரிய சம்வாதத்தில் चक्षुराद्य:तेहवाचमूचु: முதலிய சுருதிவாக்கியங்களில் இந்திரியங்களே ஆத்மாவென்று தெரியவருவதால் இந்த சுருதி வாக்கியத்தை அவர்கள் அனுசரித்து இந்திரியாதிகளே ஆத்மாவென்கிறார்கள், ஆனால் आनन्दमयोऽभ्यासात्

என்னும் (1-1-12) முதலிய சூத்திரங்களில் மேற்கூறிய சுருதி வாக்கியங்கள் ஆபாசங்கள் என்பது விவரமாய் கூறப்பட்டிருக்கிறது.) [87]

ரா (அனேக மதங்களிருக்கட்டுமே. எந்த மதத்தில் எவனுக்கு பிரியமிருக்கிறதோ, அதை ஆசிரயிக்கிறதினால் அவனுக்கு மோக்ஷம் கிடைக்கட்டுமே. பிரம்ம விசாரம் இப்போது ஆரம்பிப்பானேன். எனின்)

விசாரிக்காமல் எதையாவது ஒருவன் கிரகித்தால் மோக்ஷத்தை இழந்து விடுவது மன்றியில் அனர்த்தத்தையும் அடைவான்.

ரா (ஜீவப்பிரம்ம ஐக்கிய ஞானத்தால் மட்டும் மோக்ஷம் சித்திக்கு மென்பது வேதாந்த சித்தாந்தம் இதர மதங்களில் இப்படி ஏற்படாததினால் மோக்ஷம் சித்திக்கமாட்டாது. மேலும்,

अन्धं तम:प्रविशन्तियेकेचात्महनोजना:

என்கிற ஈசாவாஸ்ய முதலிய சுருதிகளால் ஆத்மாவை விபரீதமாக அறிகிறவன் சம்சாரமாகிய இருட்

டில் விழுகிறான் என்று சொல்லியிருக்கிறது. ஆகையால் சகல முமுக்ஷுக்களும் மோக்ஷத்தை அடையும் பொருட்டு வேதாந்த விசாரம் செய்யவேண்டியது என்று உபசம்ஹாரம் செய்கிறார்.) [88]

ஆகையால் பிரம்மஜிஞ்ஞாஸா என்பதை முதல்சூத்திரத்தில் உபந்யாசம் செய்வது மூலமாக வேதாந்தவாக்கியத்துடன் விரோதிக்காத யுக்திகளுடன் கூடினதாயும், மோக்ஷமென்ற பிரயோசனத்துடன் கூடினதாயுமிருக்கிற வேதாந்த வாக்கிய விசாரம் ஆரம்பிக்கப் படுகிறது.

(பந்தாத்தியாசமிருக்கிறதென்பதால் விஷயாதிகள் சித்திக்கிறபடியாலும், அர்த்தம் முன் சொல்லப்பட்டதினாலும், அதிகாரி சித்திக்கிறபடியாலும் பிரம்மம் விசேஷமாய் அறியப்படாமையால் விஷயாதிகள் சம்பவிக்கிறதினாலும் வேதாந்த விசாரமானது வேதாந்தத்துக்கு ஒத்திருக்கும் யுக்திகளால் மோக்ஷத்தின் பொருட்டு ஆரம்பிக்கத்தக்கது என்பது கருத்து. சூத்திரத்தில் விசாரத்தைக்கூறும் பதமில்லாதபடியால் விசாராரம்பமே இந்த சூத்திரத்தின் அர்த்தம் என்று எப்படி சொல்லலாமெனின், பிரம்ம ஞான இச்சை என்று சொல்லியிருப்பதால் அதின் மூலமாக விசாரம் ஆரம்பிக்கப்படுகிறது. அது செய்யத்தக்கது என்று சொல்லுகிறார்.)

ர (இவ்விதமாக முதல் சூத்திரத்துக்கு நான்கு வியாக்கியானங்களால் நான்கு அர்த்தங்கள் கூறப்பட்டன. அநேக அர்த்தங்களைக் கொள்ளுவது சூத்திரத்துக்கு பூஷணம்) [89]

ர பூ:– (இந்த சூத்திரம் சாஸ்திரத்தை ஆரம்பிக்கிறதென்று சொன்னதில் ஒரு சந்தேகம். இது சாஸ்திரத்திற்கு வெளியிலிருந்து ஆரம்பிக்கிறதா? அல்லது சாஸ்திரத்துக்குள் அடங்கியே ஆரம்பிக்கிறதா? முதல் பக்ஷத்தில் சாஸ்திரத்துக்கும் அதற்கும் சம்பந்தமில்லாத படியால் அது தள்ளத்தக்கது.

இரண்டாவது பக்ஷத்தில் தன்னைத் தானே ஆரம்பிக்கிறதாக முடிந்து ஆத்மாசிரயதோஷம் சம்பவிக்கும். ஆரம்பிக்கும் படியான வேறு சூத்திரமும் காணப்படவில்லையே.

சி: அத்தியயன விதியானது வேதத்துக்குள்ளேயே ஏற்பட்டிருக்கிறது. அது வேதங்களின் அத்தியயனத்தையும் விதிக்கிறது. இதில் யாதொரு தோஷமும் காணப்படவில்லை. அப்படியே சிரவணம் செய்ய வேண்டும் என்று விதிக்கும் இந்த சூத்திரம் சாஸ்திரத்துக்குள் அடங்கியிருந்தாலும் சாஸ்திரத்தை ஆரம்பிக்கக்கூடும். [90]

ஆ பூர்வபக்ஷபலன்:— விசாரம் ஆரம்பிக்கத் தகாததாலும், ஆகையால் ஞானமானது அதினால் சித்திக்காததாலும், முக்தியானது வேறு உபாயத்தால் சாத்தியம்.]

சித்தாந்த பலன்:— விசாரம் ஆரம்பிக்கத்தக்கதாக இருப்பதால், அதினால் ஞானம் சித்திக்கும். அந்த ஞானத்தால் முக்தி சாத்தியம். [91]

முதல் சூத்திரத்தின் அத்வைத பாஷ்யத்தின்

தமிழ்மொழி பெயர்ப்பு முற்றிற்று.

—:0:—

வியாஸாதிகரண மாலைப்படி

அத்வைத சுருக்கம்.

अविचार्यं विचार्यं वा ब्रह्माध्यासनिरूपणात् ।
असंदेहाफलत्वाभ्यां न विचारं तदर्हति ॥
अध्यासोऽहंबुद्धि सिद्धोऽसङ्गं ब्रह्मश्रुतीरितं ।
सन्देहान्मुक्तिभावाच्च विचार्यं ब्रह्मवेदत: ॥

बृ II-4-5.

I. ல் आत्मा वा अरे श्रोतव्यो मन्तव्यो निदिध्यासितव्य:

என்று சொல்லியிருக்கிறது. இவ்விடத்தில் ஆத்ம தரிசன பலத்தை உத்தேசித்து அதற்குச் சாதனமாக சிரவணம் விதிக்கப் பட்டிருக்கிறது. வேதாந்த வாக்கியங்கள் பிர்ம்மத்தினிடத்தில் தாற்பரியப் படுகின்றன வென்பதை நிர்ணயம் பண்ணுவதற்கு அனுகூலமாயிருக்கும் விசாரம் சிரவண மெனப்படும். [92]

II. இந்த விசாரத்தை விதிக்கும் வாக்கியம் விஷயம். [93]

III. பிர்ம்மத்தை விசாரிக்கும் சாஸ்திரம்

1. ஆரம்பிக்கத் தகாததா? அல்லது,
2. ஆரம்பிக்கத் தக்கதா?

என்பது சந்தேகம்.

பூர்வ உத்தர பக்ஷங்களின் யுக்திகளே எங்கும் சந்தேகபீஜங்களாக வைத்துக்கொள்ளத் தக்கவை. [94]

IV. பூ:–இது ஆரம்பிக்கத் தகாதது ஏனெனின்

1. விஷயமில்லை
2. பிரயோஜனமுமில்லை.

1. எதில் சந்தேகமிருக்கிறதோ அது விசாரத்திற்கு விஷயமாகலாம். பிர்ம்மவிஷயத்திலோ சந்தேகமில்லை, ஏனெனின்

(1) सत्यं ज्ञानं अनन्तं ब्रह्म (तै. II-1)

என்பதால் பிர்ம்மாகாரம் நிச்சயிக்கப் படுகிறது.

(2) நான் என்கிற ஞானத்தால் இது ஆத்மா வென்பதும் நிச்சயம். இந்த ஞானம் பிராந்திரூபம் என்றும் சொல்லக்கூடாது. ஏனென்னில் அத்தியாச நிரூபணம் ஏற்படவில்லை. ஏனென்னில் வெளிச்சமும் இருட்டும்போல் விருத்த சுவபாவமுள்ளவைகள் ஜட அஜடங்களான தேகாத்மாக்கள். ஆகையால் கிளிஞ்சிலில் வெள்ளிபோல் அன்னியோன்னிய தாதாத்மிய அத்தியாசம் ஏற்படமாட்டாது. இப்படி நான் என்கிற ஞானம் பிராந்திரூபமாகாததுபடியால் விசாரத்துக்கு விஷயமில்லை.

2. பிரயோஜனமும் காணப்படவில்லை. ஏனென்னின் முன் சொன்னபடி பிர்ம்மாத்ம ஞானம் நிச்சயமாயிருக்கிறது.

ஆகையால் பிரம்ம விசாரத்துக்கு யோக்கியமன்று. ஆகையால் சாஸ்திரம் ஆரம்பிக்கத்தக்கதன்று. [95]

V. சித்தாந்தம்:— சாஸ்திரம் ஆரம்பிக்கத் தக்கது. ஏனென்னின்,

1. விஷயமுமிருக்கிறது.

2. பிரயோஜனமுமிருக்கிறது.

1. சுருதியில் अयमात्मा ब्रह्म (2-5-19) என்பதாய் அசங்கமான பிர்ம்மத்தை ஆத்மாவாக சொல்லியிருக்கிறது.

अहम् मनुष्यः (நான் மனிதன்) என்று சொல்லும்போது தேகாதிகளே நான் என்கிற பாவனையுடன் ஞானம் விளங்குகிறது. ஆகையால் சுருதியில் சொன்னதற்கும் அநுபவத்துக்கும் விரோதமிருப்பதால் சந்தேகம்.

ஆதை நிச்சயிப்பதால் முக்தி என்கிற பிரயோஜனம் சித்திக்கிறதென்பது சுருதியாலும் வித்வான்களுடைய அநுபவத்தாலும் பிரசித்தம்.

ஆகையால் வேதாந்த வாக்கியங்களை விசாரிப்பது மூலமாக பிர்ம்மத்தை விசாரிக்கலாமாகையால் சாஸ்திரம் ஆரம்பிக்கத்தக்கது என்று சித்தித்தது. [96]

## விசிஷ்டாத்வைதம்.

I. இந்த அதிகரணத்துக்கு விஷயம்:— பிரம்மமீமாம்சா சாஸ்திரம். [97]

II. சந்தேகம்:— இது,

(1) ஆரம்பிக்கத் தக்கதா? அல்லது

(2) ஆரம்பிக்கத் தகாததா?

சந்தேகபீஜம்:— பூர்வபக்ஷி ஆரம்பிக்கத்தகாதது என்றும் சித்தாந்தி ஆரம்பிக்கத் தக்கதென்றும் சொல்லுவதால் சந்தேகம். [98]

III. விசாரம்:— சந்தேகம் நிரூபிப்பொருட்டு வேதாந்தங்கள்,

(1) பிரம்ம விஷயத்தில் பிரமாணங்களா?

(2) அல்லவா?

என்பதை விசாரிக்கவேண்டியது. சப்தங்கள் சித்தவஸ்துவை போதிக்குமா? போதிக்கமாட்டாதா என்பதையும் விசாரிக்கவேண்டியது. [99]

IV. பூர்வபக்ஷம்:—

சப்தங்கள் சித்த வஸ்துவை போதிக்கமாட்டா. ஏனென்னின் புஸ்தகம் என்ற வஸ்துவைப் பற்றி கேவலம் புஸ்தகம் என்ற பதம்மாத்திரம் போதிக்கமாட்டாது. படி, வை, முதலிய வினைச்சொற்கள் சேர்ந்தால் தான் ஒரு அர்த்தம் ஏற்படும். ஆகையால் சித்த வஸ்துவைப்பற்றி பதங்களால் போதம் உண்டாகமாட்டாது.

பிரம்மமோ சித்த வஸ்து. ஆகையால் வேதாந்தங்கள் பிரம்மத்தை போதிக்கமாட்டா. ஆகையால் இந்த சாஸ்திரம் ஆரம்பிக்கத் தக்கதன்று. [100]

V. சித்தாந்தம்:—

தாய், தந்தை, பசு, பக்ஷி முதலிய சித்தவஸ்துக்களை இந்தப் பதங்களை உச்சரித்து விரலால் குறிப்பிட்டுக் காட்டுவதால் அவர்களின் ஞானம் உண்டாகிறதை உலகத்தில் கண்டிருக்கிறோம். அப்படியே பிரம்மம் சித்தவஸ்துவாயிருந்தாலும் சப்தங்களால் போதிக்கப்படலாம். ஆகையால் வேதாந்தங்கள் பிரம்மத்துக்குப் பிரமாணமாகலாம். ஆகையால் சாஸ்திரம் ஆரம்பிக்கத்தக்கது. [101]

VI. பத உரை.

अथ — பிறகு அதாவது கர்மவிசாரத்துக்குப்பிறகு

अतः — ஆகையாலேயே

ब्रह्मजिज्ञासा — பிரம்மவிசாரம்

பொழிப்புரை.

கர்மவிசாரத்துக்குப்பிறகு, கர்மம் அஸ்திரமான பலத்தைக் கொடுக்கிறதாயிருப்பதால் ஸ்திரமானபலன் கிடைக்கும்பொருட்டு பிரம்மஞானம் சம்பாதிக்கத்தக்கது. [102]

## முலவசனம்.

இந்த சாஸ்திரத்தின் முதலாவது சூத்திரம்:—

# ओं ॥ अथातोब्रह्मजिज्ञासा ॥ ओं १

என்பதாம்.

இதுமுதல் ஐந்து அதிகரணங்கள் அத்தியாயத்தில் முக்கியமானவைகள். மற்றவைகள் இவைகளில் அடங்கிப்போகின்றன. "பிரணவமன்றியில் சொல்லப்படுவது நழுவிப்போகிறது," என்று சுருதியில் சொல்லியிருப்பதால் ஒவ்வொரு சூத்திரத்தின் ஆரம்பத்திலும் அந்தியத்திலும் பிரணவத்தை உச்சரிக்க வேண்டியது.

முதலாவது பிரணவத்திற்கு திர்ஷ்ட அதிர்ஷ்ட பலன்களுண்டு.

இரண்டாவது பிரணவத்திற்கு அதிர்ஷ்டபலன் தான். [103]

சங்கதி:—இதுமுதலாவது சூத்திரமானதால் சங்கதி ஏற்படவில்லை. [104]

விஷயம்:—तद्विजिज्ञासस्व तद्ब्रह्म என்கிற சுருதியில் சொல்லிய ஜிஞ்ஞாஸை விஷயம். [105]

சந்தேகம்:—ஜிஞ்ஞாஸை என்றால் விசாரம். அது

(1) செய்யத்தக்கதா? அல்லது

(2) செய்யத்தகாததா? என்பது சந்தேகம். [106]

பூர்வபக்ஷம்:—விசாரம் செய்யத் தக்கதன்று. ஏனெனின்,

(1) விஷயப்பிரயோஜனாதிகள் இல்லை.

(2) அணுத்மாவென்பதில்லை.

(3) சேஷ்டை முதலிய லிங்கங்களால் பரமாத்மா சித்தம்.

(4) தன்னுடைய ஆத்மாவைவிட பரமாத்மா வேறு என்பதற்குப் பிரமாணமில்லை.

(5) வேதாந்தங்கள் ஸ்வாத்மத்தைத் தான் பிரதிபாதிக்கின்றவைகளாகக் காணப்படுகின்றன.

(6) தன்னுடைய ஆத்மாவென்பது நான்என்கிற ஞானத்தால் சித்தித்துப்போவதால் சந்தேகத்துக்கு இடமில்லை. ஆகையால் விஷயமில்லை.

(7) இந்த ஆத்மாவை அறிந்தாலும் மோக்ஷமாவது வேறுபலனாவது கிடைக்கமாட்டாதாகையால் பிரயோஜனமில்லை.

(8) விஷயப்பிரயோஜனங்களில்லாதபடியால் அதிகாரியும் சம்பந்தமும் சுத்தமாய் ஏற்படமாட்டா. [107]

சித்தாந்தம்:—அநாத்மா, பரமாத்மா, ஸ்வாத்மா, இவைகளுக்குள்

(1) அநாத்மா அசத்தியமாகையால் விசாரத்துக்கு விஷயமாகாவிட்டாலும்

(2) ஜீவாத்மா நான் என்கிற ஞானத்துக்கு விஷயமாயிருப்பதால் விசாரத்துக்கு விஷயமாகாவிட்டாலும்,

(3) பரமாத்மா விசாரத்துக்கு விஷயமாகலாம். பரமாத்மா அநுமானத்தால் அறியப்பட்டிருப்பதால் விசார விஷயமன்று என்று சொன்னது சரியன்று. ஏனெனின் ब्रह्मजिज्ञास्य என்று சொல்லியிருக்கிறது. பிரம்ம சப்தத்தின் அர்த்தமோ தேசகால குணங்களால் அளவிடக்கூடாத வஸ்து வென்பதாம். இந்த அர்த்தம் ஜீவனிடம் பொருந்தமாட்டாதாகையால் ஜீவனை விட வேறான விஷ்ணு என்னும் வஸ்துவை ஒப்புக்கொள்ளவேண்டும். அந்தவஸ்து சகுணமென்றும் நிர்குணமென்றும், அற்பகுணமுள்ளதென்றும் வாதிகளின் விவாதமிருப்பதால் சந்தேகம் உண்டாகிறது. இதனால் விசாரத்துக்கு விஷயம் ஏற்படுகிறது. அவரை அறிந்தால் அவருடைய பிரசாதம் கிடைக்கிறது. அதினால் முக்தி என்கிற பலம் கிடைக்கிறது. அப்படி இச்சிக்கிற அதிகாரியிருப்பதால் சம்பந்தமும் சித்திக்கிறது. ஆனதால் பிரம்மம் விசாரிக்கத்தகாதது என்றுசொன்ன பூர்வபக்ஷம் யுக்தமன்று. [108]

பதஉரை.

अथ அத்தியயனம், சமதமாதிகளாகிற யோக்கியதை, இவைகள் சம்பாதிக்கப்பட்டபிறகு,

अतः மோக்ஷமென்னும் பலமிருப்பதால், அல்லது, நாராயணனுடைய பிரசாதத்தால்

ब्रह्मजिज्ञासा குணபூர்ணரான நாராயணனுடைய சிரவணமனனநிருப விசாரம் செய்யத்தக்கது.

பொழிப்புரை.

வேதத்தின் அத்தியயனம், சாந்தி, இந்திரியநிக்கிரகம் முதலியவைகளின் சேர்க்கையால் யோக்கியதைகிடைத்தபிறகு குணபரிபூர்ணமான பிரம்மத்தின் விஷயத்தில் சிரவணம் மனனம் நிதித்தியாசம், ஆகிய விசாரத்தைச் செய்யவேண்டியது. அதினால் மோக்ஷம் சித்திக்கிறது. [109]

பூர்வபக்ஷபலன்—சாஸ்திரம் ஆரம்பிக்கத்தக்கதல்ல.

சித்தாந்தபலன்— சாஸ்திரம் ஆரம்பிக்கத்தக்கது. [110]

# 1-1-2-வது அதிகரணத்தின்
# விஷயானுக்கிரமணிகை.

1-I-1-ல் இரண்டாவது அதிகரணத்தின் அனுக்கிரமணிகை முற்றிற்று.

## 1-1-2-வது அதிகரணம்

I. இதின்பெயர்:—ஜன்மாதி அதிகரண மென்பதாம் [1]

II. இதின் கருத்து:—பிரம்மலக்ஷணம் [2]

III. இதில் அடங்கிய சூத்திரம் ஒன்று (இரண்டாவது) [3]

IV. இதின் விஷயவாக்கியம்:—

( १ ) यतो वा इमानि भूतानि जायन्ते ।
येन जातानि जीवन्ति ।
यत्प्रयन्त्यभि सं विशान्ति ।
तद्विजिज्ञासस्व तद्ब्रह्म ( तैत्ति III-I-I)

( २ ) सत्यं ज्ञानमनन्तं ब्रह्म ( तैII-I-I)

அதாவது:—

(1) எவ்விடமிருந்து இந்த பூதங்கள் உண்டாகின்றனவோ உண்டானவைகள் எதினுல் ஜீவிக்கின்றனவோ எதை மரணத்துக்குப்பிறகு பிரவேசிக்கின்றனவோ, அது பிரம்மமென்று அறி(தை III-1-1)

(2) சத்தியமாயும் ஞானஸ்வரூபமாயும் அநந்தமாயுமிருப்பது பிரம்மம்(தை II-1-1)

இந்த இரண்டு சுருதிவசனங்களும் இந்த அதிகரணத்துக்கு விஷய வாக்கியங்களாம் [4]

V. சங்கதி

(1) முந்தின அதிகரணத்துக்கும் இதற்கும்:—

ரா:—முதலாவது அதிகரணத்தில் மோக்ஷ இச்சையுள்ளவன் பிரம்மஞானத்தின்பொருட்டு வேதாந்த விசாரம் செய்யவேண்டுமென்று சொல்லப்பட்டது. பிரம்மத்தை விசாரிக்கவேண்டுமென்று சொன்னதினுலேயே பிரமாணுதிகளின் விசாரமும் செய்யவேண்டியது என்று ஏற்பட்டாலும், பிரம்மம் இன்னதென்று குறிப்பிட்டு தெரிந்துகொள்ளாமல் பிரமாணம், யுக்தி முதலியவைகளை விசாரிக்க முடியாதபடியால், பிரம்மத்தின் ஸ்வரூபத்தை அறியும்பொருட்டு முதலில் அந்த லக்ஷணம் இந்த இரண்டாவது அதிகரணத்தில் விசாரிக்கப்படுகிறது.

முதல் அதிகரணத்தில் கூறப்பட்ட பிரம்மம் எப்படிப்பட்டது, அதின் லக்ஷணம் சம்பவிக்கமாட்டாது என்கிற ஆக்ஷேபத்தின்பேரில் இந்த அதிகரணம் ஏற்பட்டபடியால் இரண்டு அதிகரணங்களுக்கும் ஆக்ஷேப சங்கதி ஏற்படுகிறது. [5]

(2) சுருதி முதலிய சங்கதிகள்:—

எதில் பிரம்மலக்ஷணம் ஸ்பஷ்டமாயிருக்கிறதோ அப்படிப்பட்ட பிரம்மபோதக வேதாந்த வாக்கியம் லக்ஷியபிரம்மத்தினிடத்தில் சமன்வயப்படுகிறபடியால் சுருதி முதலிய சங்கதிகள் ஏற்படுகின்றன [6]

(3) இரண்டாவது சூத்திரத்துக்கும் பிந்தின சூத்திரங்களுக்கும் சம்பந்தம்:—

ர:—1 எதினிடத்தில் சகல விசேஷங்களும் கற்பிக்கப்படுகின்றனவோ.

2 எதுசத்தியஞானநந்தஸ்வரூபமாயும் அகண்டமாயுமிருக்கிறதோ

அதுவே பிரம்மசப்தத்தின் அர்த்தம். அதுவே இந்த சூத்திரத்தில் கூறப்படுகிறது.

( १ ) शास्त्रयोनित्वात्

( २ ) तत्तुसमन्वयात्

என்கிற 3-வது 4-வது சூத்திரங்களால் சகலவேதாந்தங்களாலும் பிரம்மத்துக்குப் பிரமாணம் என்று கூறப்படுகிறது.

( ३ ) ईक्षतेर्नाशब्दम्

என்கிற 5-வது சூத்திரமுதல் அத்தியாயம் முடியும்வரையில் பிரம்மத்தைத் தவிர வேறு ஒன்றைக்கூறுகிறதாகத் தோன்றும் வாக்கியங்களும் பிரம்மத்தையே கூறுகின்றன என்று காட்டப்படும். (7)

VI. (1) சந்தேகம்:—இந்த விஷயவாக்கியம் [தை III-(1) வாக்கியம்] பிரம்மத்தின் லக்ஷணத்தை

(1) கூறுகிறதா?

(2) இல்லையா?

(2) ரா சந்தேகபீஜம்:—லக்ஷணம்

(1) ஏற்படும் என்று சிலரும்

(2) ஏற்படமாட்டாது என்று சிலரும்

சொல்லுவதால் சந்தேகம். (8)

VII. ரா:—பூர்வபக்ஷம்:—பிரம்மலக்ஷணம் ஏற்படமாட்டாது. ஏனெனில்

(1) பிரபஞ்சத்திற்குறிய ஜன்மாதிகள் பிரம்மத்துக்கு லக்ஷணமாகமாட்டா.

(2) பிரம்மம் ஜகத்துக்கு உபாதானமாயும் கர்த்தாவாயும் இருக்கட்டுமே

என்பதற்கு, ஒரே பதார்த்தம் இரண்டுவித காரணமாயிருப்பதை நாம் பார்க்கவில்லை. ஆகையால் அநுமானிக்க முடியாது.

(3) அப்படி முடியாவிட்டாலும் சுருதியால் லக்ஷணம் சொல்லுவோமெனின்,

அநுமான சாதகமற்றதாயும் அல்லது அநுமானத்திற்கு விரோதமாயுமிருக்கும் சுருதியின் அர்த்தம் கிராஹியமன்று.

(4) கர்த்திருத்வம், உபாதானத்வம் இவைகளில் ஒன்றை லக்ஷணமாய்,

சொல்லும் பக்ஷத்தில் பிரம்மத்வம் சித்திக்கமாட்டாது. ஏனெனின் வஸ்து பரிச்சேதம் சம்பவிக்கும்

ஆகையால் எவ்விதத்திலும் நிர்விசேஷ பிரம்மத்துக்கு ஜகத்காரணத்வமாகிய லக்ஷணம் சொல்ல முடியாததால் பிரகிருத விஷயவாக்கியம் பிரம்மலக்ஷணத்தைக் கூறமாட்டாது. (9)

VIII. ஸி:—சித்தாந்தசுருக்கம்:— இந்திரியங்களுக்கு விஷயமாகாத விஷயங்களில் அநுமானமே பிரவிர்த்திக்கமாட்டாது. ஆனால் வேதாந்தத்தை நிச்சயம் செய்ய அநுமானம் உபயோகப்படும். பிரம்மம் இரண்டுவிதகாரணம் என்று வேதம் சொல்லுகிறது. இதை நிச்சயிப்பதற்கு சுகாதி திருஷ்டாந்தமிருக்கிறது. இதைக்கொண்டு சுருதி அர்த்தத்தை நிச்சயிக்கலாம், ஆகையால் வஸ்து பரிச்சேதமில்லை.

பிரம்மம் நிற்குணமாயிருந்தாலும் அதினிடத்தில் காரணத்தன்மையை கற்பிக்கலாம். ஆகையால் அது காரணமாகலாம்.

எது வெள்ளியோ அதுவே கிளிஞ்சல் என்று சொல்லுவதில் எப்படி வெள்ளியானது கிளிஞ்சலுக்கு லக்ஷணம் அதாவது சூசகமாக இருக்கிறதோ அப்படி எது ஜகத்காரணமோ அதுவே பிரம்மமென்று சொல்லுவதில் காரணத்வம் கற்பிக்கப்பட்டு லக்ஷணமாயிருக்கிறது. 10

(2) இந்த அபிப்பிராயத்தை மனதில்வைத்துக் கொண்டு வியாசர் சித்தாந்தத்தை

॥ जन्माद्यस्ययतः ॥ २ ॥

என்கிற சூத்திரத்தில் கூறுகிறார். (11)

3. சூத்திரார்த்தம்:—

(1) பதவுரை.

यतः எதினின்றும்.

अस्य இந்த பிரபஞ்சத்தினுடைய

जन्मादि உற்பத்தி ஸ்திதி பிரளயங்கள்

(भवति உண்டாகின்றனவோ)

(तद्ब्रह्म அது பிரம்மம்) [12]

(2) பொழிப்புரை.

ஜகத்தானது எதினின்றும் உண்டாகி எதில் ஸ்திரமாயிருந்து எதில் லயத்தை அடைகிறதோ அதுவே பிரம்மம் [13]

4. பாஷ்யம்.

(a) जन्मादि சப்தவிசாரம்:—

जन्म + आदिः + यस्य = जन्मादिः

எதற்கு ஜன்மம் ஆதியோ அது என்று அர்த்தம் செய்தால் ஆதியை விட்டுவிட்டு அந்த பதார்த்தத்தை கிரகிக்கும்படி நேரிடும்.

(வெண்மையானது என்றால் எது வெளுப்பாயிருக்கிறதோ அது என்று அர்த்தமாவதால் வெளுப்புக்கு அன்னியமான பதார்த்தத்தைக் கிரகிப்பதுபோலும்)

அது இவ்விடத்தில் அர்த்தமல்ல. எந்த சமுதாயத்துக்கு ஜன்மம் ஆதியோ அந்த சமுதாயம் (அதாவது ஜன்மம், ஸ்திதி, லயம்) என்று அர்த்தம் [14]

ஸி:—எது ஜன்மகாரணமோ அது பிரம்மம் என்று சொல்லும்பக்ஷத்தில் ஸ்திதி லயகாரணங்கள் வேறு என்றும் அவைகளைவிட ஜன்மகாரணம் வேறு என்றும் ஏற்படும். அப்போது பரிச்சேதமற்றது பிரம்மம் என்று சொல்லும் லக்ஷணத்துக்கு விரோதம் வரும். அது அபரிச்சின்னமான வியாபகம் என்று அறியமுடியாமற்போகும்.

ஆகையால் ஜன்மம், ஸ்திதி, லயம் ஆகிய மூன்றுக்கும் காரணமாயிருப்பதே லக்ஷணமாகக் கூறப்படுகிறதென்று அறியவேண்டும். (15)

ரா:—சம்சாரம் அநாதியானதையால் ஜன்மம் ஸ்திதி, லயம் இம்மூன்றில் எதையாவது ஒன்றை ஆதியாகச் சொல்லலாமே எனின்

(1) மூலசுருதியையும்

(2) வஸ்துவின் ஸ்வபாவத்தையும்

அநுசரித்து ஜன்மத்தை முதலில் கூறப்பட்டது.

(1) மூலசுருதியாவது:—

यतोवा इमानि भूतानि जायन्ते

येन जातानि जीवन्ति

यत्प्रयन्त्यभिसंविशन्ति

என்கிற தைத்ரீய சுருதி (III 1)

இதில் ஜன்மம், ஸ்திதி, பிரளயம் கிரமமாகக்காணப்படுகிறது.

(2) வஸ்து ஸ்வபாவத்திலும் எது உண்டாயிருக்கிறதோ அதுதான் ஸ்திதியை அடைந்தபிறகு லயத்தை அடைகிறது. (16)

b. अस्य பதவிசாரம்:—

(1) अस्य:—இந்த பதம் பிரத்தியக்ஷாதிப் பிரமாண சித்தமான ஜகத்தைக் கூறுகிறது [17]

(2) अस्यஎன்பது इदम् பதத்தின் ஆறும்வேற்றுமை. இந்த வேற்றுமைக்குசம்பந்தம் என்று அர்த்தம்.

ரா:—ஆகாசாதிகள் நித்தியமானதால் அவைகளுக்கு ஜன்மாதிகளில்லை என்னும் பக்ஷத்தில்,

சம்பந்தத்தைக்காட்டும் ஆறும்வேற்றுமை பதம் சூத்திரத்தில் உபயோகப்படுத்தியிருப்பதால், பிரபஞ்சத்துக்கும் ஜன்மாதிகளுக்கும் ஒரு சம்பந்தம் ஏற்படுகிறது. ஆகவே பிரபஞ்சத்திலடங்கிய ஆகாசாதிகளுக்கும் ஜன்மமுண்டு. மேல் வியத்பாதத்திலும் (II-3-1 வது அதிகரணம்) மகா பூதங்களுக்கும் ஜன்மாதி சம்பந்தம் இருக்கிறதென்று சூத்திரக்காரர் சொல்லியிருக்கிறார்] 18]

c. यत: சப்த விசாரம்:—

ரா:—यत:[ஜகத்துக்காவது ஜன்மாதிகளுக்காவது பிரம்மத்துடன் சம்பந்தம் சம்பவிக்காததால் எப்படி லக்ஷணம் கூடும்

எனின் அவைகளுக்குக் காரணமாயிருப்பதே லக்ஷணம் என்று இந்த ஐந்தாம் வேற்றுமையால் கூறுகிறார்.]

यत् சப்தத்தால் காரணத்தை அறியவேண்டியது.

ரா:—(இந்தபதம் சத்தியம்ஞானம் அநந்தம் ஆநந்தரூபம் இப்படிப்பட்ட வஸ்துவைக்கூறுகிறது) [19]

(ரா:—இவ்விதமாக பதங்களின் அர்த்தத்தைச் சொல்லி முதல் சூத்திரத்தினின்றும் பிரம்ம பதத்தை எடுத்துக்கொண்டு தத் என்றும் பதத்தையும் சேர்த்துக்கொண்டு சூத்திரார்த்தத்தைச் சொல்லுகிறார்.)

5. சூத்திரார்த்தம்.

சர்வஞ்ஞமாயும், சர்வசக்தியுள்ளதாயுமிருக்கிற காரணங்களுடன் எந்த காரணத்தினின்றும் இந்த அடியிற்கண்ட விசேஷணத்துடன்கூடின ஜகத்து உண்டாகி அந்தகாரணத்தில் ஸ்திதி அடைந்து அதிலேயே லயமாகிறதோ அந்த காரணம் பிரம்மம். [20]

இந்த ஜகத்து எப்படிப்பட்டதெனின், அது

(1) நாமரூபங்களால் பிரிக்கப்பட்டிருக்கிறது.

[ரா:—எப்படி குயவன் முதலில் ஒரு வஸ்துவின் ஆகாரத்தை மனதில் தரித்து, பிறகு மிருத்தினின்றும் கடம்என்னும் நாமரூபம் உள்ளபொருளை பிரிக்கிறானோ

அப்படி பரமகாரணமான பிரம்மம் அவ்வியாகிருதமான மாயையினின்றும் நாமரூபங்களுள்ள ஆகாசாதி பிரபஞ்சத்தைப் பிரிக்கிறது. கடம் குலாலனிடமிருந்து உண்டானதுபோல் பிரபஞ்சம் சேதனத்தினின்றும் உண்டானதால்

பிரதானவாதிகளுடைய பக்ஷமும்

சூன்னியவாதிகளுடைய பக்ஷமும் தள்ளப்பட்டது] [21]

(2) அநேக கர்த்தா போக்தாக்களுடன் கூடியிருக்கிறது.

ரா:—ஹிரணியகர்ப்பாதி ஜீவர்கள் ஜகத்துக்குக் காரணமென்று சொல்லும்பக்ஷத்தில்

அந்த ஜீவர்கள் பாரமார்த்திகத்தில் உற்பத்தி யற்றவர்களாயினும் ஸ்தூல சூக்ஷ்ம உபாதிமூலமாக காரியரூபமாக ஜகத்தில் அடங்கிப்போகிறபடியால் அவர்கள் ஜகத்காரணமாக மாட்டார்கள். [22]

(3) கிலுப்தமாய் ஏற்பட்ட தேசம், காலம், நிமித்தம் இவைகளுடன் கூடியே கிரியாபலத்துக்கு ஆசிரயமாயிருக்கிறது.

रा திருஷ்டாந்தம்:--மாம்பழம். இதுஇன்ன தேசத்தில், இன்னகாலத்தில், இன்ன நிமித்தத்துடன் கூடியிருந்தால்தான் சித்திக்கும் என்று ஏற்பட்டிருக்கிறது. இப்படிப்பட்ட பலத்துக்கு ஆசிரயமாயிருக்கிறது ஜகத்து.

ஜகத்துக்குக்கொடுத்திருக்கிற இந்த விசேஷணம் பிரம்மம் சர்வஞ்ஞம் என்பதை ஸூசிப்பிக்கிறது. எப்படியெனின் ஒரு சேவகன் அரசனை ஆசிரயிக்கிறான். அரசன் சந்தோஷமடைந்து அவனுக்கு மான்னியம் விடுகிறான். இந்த பலத்தைக் கொடுத்தவன் அறிவுள்ளவனாக இருப்பதுபோல் சகல கர்ம பலன்களையும் கொடுக்கும் பிரம்மமும் சர்வஞ்ஞமா யிருக்கவேண்டும்.] [23]

(4) இன்னவிதமாக இது செய்யப்பட்டது என்று மனதினாலுங் கூட நினைக்கக்கூடாததா யிருக்கிறது.

रा:—[ஜகத்து விசித்திரமா யிருப்பதால் அதை செய்தவரும் சர்வசக்திமானா யிருக்கவேண்டுமென்று தெரியவருகிறது.] [24]

6. जन्म பத விஷயமாய் விசேஷவிசாரம்:—

[रा:—1. விருத்தி

2. பரிணாமம்

3. அபக்ஷயம்

ஆகிறபாக்கியான மூன்று பாவவிகாரங்களையும் ஏன் எடுத்துச் சொல்லவில்லையெனின்

இம்மூன்றும் ஜன்மஸ்திதி நாசங்களில் அடங்கியிருப்பதால் ஜன்மாதி மூன்றைமட்டும் இவ்விடத்தில் கிரகித்திருக்கிறார். [25]

எப்படி அடங்கியிருக்கின்றனவெனின்:—

1:—விர்த்தியானது அவயவம் அதிகமாகுவதைக் காண்பிக்கிறபடியால் உற்பத்தியில் அடங்கிப் போயிற்று.

2. பரிணாமமானது மண்குடமாகிறதுபோல் அவஸ்தையின் உற்பத்தியைக் காண்பிக்கிறபடியால் அதுவும் உற்பத்தியில் அடங்கிவிட்டது.

3. அபக்ஷயமானது அவயவத்தின் குறைவைக் காண்பிக்கிறபடியால் நாசத்தில் அடங்கிவிட்டது. [26]

[रा:—யாஸ்கமுனியானவர்

जायते, अस्ति, वर्द्धते, परिणमते, अपक्षीयते, नश्यति

என்று நிருக்த கிரந்தத்தில் சொல்லியிருக்கிறார். இந்த வசனத்தை இந்த ஸூத்திரத்துக்கு ஏன் மூலமாகவைத்துக்கொள்ளக் கூடாதெனின்

யாஸ்கர்

ஜகத்தின் ஸ்திதிகாலத்தில் மகாபூதங்கள் பௌதிகங்களாக பரிணமிக்கிறதைப் பார்த்து

ஜன்மாதி ஆறு விகாரங்களை அறிந்து

அவைகளைப்பற்றி நிருக்த வசனத்தை ஏற்படுத்தினார்.]

அந்தவசனத்தை இந்த பிரம்ம ஸூத்திரத்துக்கு மூலமாக வைத்துக்கொள்ளும் பக்ஷத்தில்,

2. [रा:—(1) ஜகத்தின் ஸ்திதிகாலத்தில் (அதாவது மகாபூதங்கள் உண்டானபிறகு பௌதிக விகாரங்களான) உற்பத்திமுதலியவைகள் காணப்படுவதினாலும்

(2) ஸூத்திரத்தின் அர்த்தமானது

"எதினின்றும் உற்பத்திமுதலியவைகள் உண்டாகின்றனவோ அது பிரம்மம்"

என்பதாயிருப்பதாலும்

(3) பௌதிகங்களுடைய உற்பத்திமுதலியவைகளுக்கு மகாபூதங்கள் காரணமாயிருப்பதாலும்

மகாபூதங்களே பிரம்மம் என்று முடியும்.

மகாபூதங்களுள்பட]

ஜகத்து மூலகாரணத்தினின்றும் உற்பத்தி ஸ்திதி லயங்களை அடைகின்றதுவென்பது கிரகிக்கப்படாமல் போய்விடும்

3. [நிருக்தி வசனமானது பூதங்களின் மூலகாரணத்தைச் சொல்லவில்லை. ஆகையால் இந்த ஸூத்திரம் மகாபூதங்களின் லக்ஷணத்தைச் சொன்னதாக ஆகுமேதவிர பிரம்மலக்ஷணத்தைச் சொன்னதாக ஆகமாட்டாது.

4. ஆகையால்]

யாஸ்கருடைய வசனத்தை மூலமாகவைத்துக் கொள்ளாமல் எந்த சுருதியில் உற்பத்தி முதலியவைக

ளுக்கு பிரம்மம் காரணமென்று சொல்லப்பட்டிருக்கிறதோ அந்த சுருதியையே மூலமாக வைத்துக்கொள்ளவேண்டும். [27]

B. யுக்தி:—யின்பேரில் விசாரம்.

ரா:—யுக்தி:- ஜகத்துக்கு பிரம்மத்தைத்தவிர வேறு ஒன்று காரணமாயிருக்கும் பக்ஷத்தில்

பிரம்மலக்ஷணத்துக்கு அதிவியாப்தி தோஷம் வரும். அதை நிவர்த்திக்கும் பொருட்டு பிரம்மத்தைத்தவிர வேறு ஒன்றும் ஜகத்தின் ஜன்மாதிக்குக் காரணமாகமாட்டாது என்னும் சூத்திரத்தில் சூசிப்பிக்கப்படும் யுக்தியை மேல் தர்க்கபாதத்தில் விஸ்தாரமாய்ச் சொல்லியிருந்தாலும் இவ்விடத்தில் சுருக்கமாய்ச் சொல்லுகிறார்.

ரா:—(நாமரூபங்களால் பிரிக்கப்பட்ட என்று) முன் சொன்ன (நான்கு) விசேஷங்களுடன் கூடிய ஜகத்துக்கு

(சர்வஞ்ஞத்வாதி) முன் சொன்ன விசேஷங்களுடன் கூடின ஈசுவரனைவிட்டு

1. அசேதனமான பிரதானத்தையாவது

2. அசேதனமான [ரா:-ஆகையால் ஸ்வயம்பிரவிர்த்திக்க முடியாத] அணுவையாவது,

3. (சூன்னியவாதியின்) அபாவத்தையாவது

4. (கிஞ்சிஞ்ஞனும் அல்பசக்திமானுமிருக்கிற) ஜீவனையாவது

ஜகத்ஜன்மாதிகளுக்குக் காரணம் என்று சொல்லக்கூடாது.

[ரா:—அப்படியே ஸ்வபாவத்தாலேயே விசித்திரமான ஜகத்து உண்டாகிறது என்று லோகாயதர் சொல்லுகிறபடிக்கும்] ஸ்வபாவத்தினின்றும் ஜகத்தின் உற்பத்தி முதலியவைகள் உண்டாகமாட்டா.

[ரா:—ஏனெனின் ஸ்வபாவம் என்பதால்

தனக்குத் தானே காரணம் என்று அர்த்தமா? அல்லது

2. காரணம் வேண்டியதில்லை என்று அர்த்தமா?

1. முதல்பக்ஷத்தில் ஆத்மாசிரயதோஷம் வரும்.

2. இரண்டாவது பக்ஷமும் கூடாது. ஏனெனின்]

தேசகாலநிமித்தங்கள்வேண்டியதாயிருக்கின்றன. [ரா:—வேளாண்மை முதலிய ஒவ்வொரு காரியமும் அதற்கு வேண்டிய தேசகாலத்தை அபேக்ஷிக்கிறபடியால் காரியம் காரணத்தை அபேக்ஷிக்கவில்லை என்று சொல்லுவது அயுக்தம். அப்படி அபேக்ஷிக்காதபக்ஷத்தில் தான்யத்தை இச்சிக்கிறவன் தகுந்தபூமியையும், தகுந்தவர்ஷா காலத்தையும், விரை முதலிய நிமித்தத்தையும் தேடக்கூடாது.] [28]

ஆகையால் பிரம்மம்தான்காரணம்

2. யுக்தியேபோருமா:—

(1) [ரா:-முன்சொன்ன சர்வஞ்ஞத்வாதி விசேஷணங்களுடன் கூடின ஈசுவரனன்றியில் ஜகத்தின் உற்பத்திமுதலியவைகள் சித்திக்கமாட்டா என்று சொன்னதினால் கர்த்தாவன்றியில் காரியமாகமாட்டாது என்று ஏற்படுகிறது. எதுகாரியமோ அது கர்த்தாவை அபேக்ஷிக்கிறது என்பது அனுமானம்.]

இந்த அனுமானத்தையே (ஈசுவரனை) காரணமாக ஒப்புக்கொள்ளுகிறவர்கள் சொல்லுகிறதாவது:

1. ஜீவனைத்தவிர வேறாகஈசுவரன் இருக்கிறார் என்று அறியும் விஷயத்தில் அனுமானம் சாதனமாக இருக்கிறது.

2.[ரா:—சுருதியானது ஈசுவரனை காரணமாக அறிய வேண்டிய விஷயத்தில் முக்கியமான சாதனமாகிறதில்லை.

3. ஜன்மாதி சூத்திரத்தாலும் இந்த அனுமானமே சொல்லப்பட்டிருக்கிறது. [29]

(2) சித்தாந்தியின் உத்தரம்.

(a) [ரா:—வைசேஷிகன் சொல்லுகிறபடி சுருதியன்றியில் கேவலம் அனுமானயுக்தியே ஜகத்காரணத்தை அறிய சாதகமாயிருக்கும் பக்ஷத்தில்

அந்தகாரியத்துக்குக் காரணம் இருக்கிறதென்றுமட்டும் ஏற்படுமே தவிர அந்தகாரணம்

(1) ஒன்றா,
(2) அநேகமா
(3) சர்வஞ்ஞமா
(4) அல்லவா

முதலிய விவரங்கள் தெரியமாட்டா. அவைகளை சுருதி பலத்தாலேயே அறியவேண்டும். ஆகையால் சுருதியே கதி. சுருதியின் அர்த்தம் சரி என்பதை அனுமான யுக்தியானது காட்டுகிறதே தவிர, அந்த யுக்திமட்டும் போதாது.] [30]

(b) ரா:—சுருதிகள் ஸ்வதந்திரமாய் பிரமாணங்களாகாவிடின்

तत्तुसमन्वयात्

முதலிய சூத்திரங்களால் சுருதிகளின் தாற்பரியத்தை சூத்திரகாரர் விசாரிக்கவேண்டியதில்லை; மேல் சூத்திரங்கள் சுருதியை விசாரிக்கும் பொருட்டு ஏற்பட்டிருப்பதால் ஜன்மாதி சூத்திரத்திலும் சுருதியே விசாரிக்கப்பட்டிருக்கிறது, அனுமானம் விசாரிக்கப்படவில்லை.]

வேதாந்தவாக்கியங்களாகிற புஷ்பங்களைத் தொடுக்கிறதற்காக சூத்திரங்கள் ஏற்பட்டிருக்கின்றன. சூத்திரங்களால் குறிப்பிடப்படும் வேதாந்தவாக்கியங்கள் விசாரிக்கப்படுகின்றன. [31]

(c) [ரா:—மேலும் முமுக்ஷுவானவன் இச்சிப்பது பிரம்மசாக்ஷாத்காரம், அதற்காக இந்த சாஸ்திரம் ஆரம்பிக்கப்பட்டிருக்கிறது] இந்த பிரம்மசாக்ஷாத்காரம் வேதாந்த வாக்கியங்களையும் அவைகளின் அர்த்தங்களையும் விசாரிப்பதால் உண்டாகும் நிச்சய ஞானத்தால் சித்திக்கிறது. அனுமானம் முதலிய இதர பிரமாணங்களால் சித்திக்கிறதில்லை. (ஆகையால் அனுமானத்தை விசாரிக்கவேண்டியதில்லை.) [32]

(d) [ரா:—ஆனால் அனுமானமேவேண்டாமோ எனின்]

ஜகத் ஜன்மாதிகாரணத்தைச் சொல்லும் சுருதிகளுடன் தாற்பரியத்தை நிச்சயிக்கும் பொருட்டு வேதாந்தவாக்கியத்துக்கு விரோதமாகாத அனுமானத்தையும் பிரமாணமாக கிரகிக்கலாம், அதை தள்ளவேண்டியதில்லை.

[ஈ:—இந்த அனுமானமானது பிரமேயத்திலுண்டாகக்கூடிய சந்தேகத்தை நிவிர்த்திக்க உபயோகமாயிருக்கிறது.] [33]

(ய) சுருதியே தர்க்கத்தின் சஹாயத்தையும் ஒப்புக்கொண்டிருக்கிறது: எப்படி எனின்;

(1) श्रोतव्यो मन्तव्यः

என்கிற பிரஹதாரண்யகம் II-4-3 சுருதியும்

(2) पण्टितो मेधावी गन्धारानेवोपसम्पद्येत एवमेवेहाचार्यवान् पुरुषोवेद

என்கிற (சாந்தோக்கிய VI 14-2) சுருதியும்

வேதத்துக்கு புருஷபுத்தி அதாவது யுக்தியும் சாதகமாயிருக்கிறதென்பதைக் காட்டுகிறது.

ரா:—சாந்தோக்கிய சுருதியின் அர்த்தம்:—திருடர்கள் கந்தார தேசத்திலிருக்கிற ஒருவனை கண்ணைக் கட்டி காட்டில் விட்டுவிட்டுப்போக, தயாளுவான வழிப்போக்கன் அவனுடையகண்கட்டையும் அவிழ்த்துவிட்டு கந்தார தேசத்துக்குப் போகும் மார்க்கத்தையும் காட்டுகிறான். அவன் ஸ்வயம் புத்திசாலியானதால் ஊரைப்போய் அடைகிறான். இதுபோல அவித்தை காமம் முதலியவைகளால் ஸ்வரூபானந்தத்தினின்றும் நழுவி சம்சாரமாகிற ஆரணியத்தில் விழுந்த ஒருவன் தயாளுவான ஆசாரியரிடமிருந்து "நீ சம்சாரியன்று. நீ பிரம்மம்" என்பதாய் உபதேசம்பெற்று தான் ஸ்வயம் புத்திசாலியானதால் தன் ஸ்வரூபத்தை அறிகிறான். மற்றவிதமாய் அறிகிறதில்லை—என்பதாம். இந்த சுருதியானது தனக்கு புருஷபுத்தி சாதகமாயிருப்பதைக் காட்டுகிறது.]

ஆ:—मन्तव्य: என்கிற சுருதியும் புத்தியால் விசாரிக்கவேண்டியது என்பதை கூறுவதால் புத்திவிசாரமும் சுருதிக்குச்சாதகமாக ஏற்படுகிறது. புத்தியால் விசாரிப்பதே மனனம்] (34)

3. சுரிதியேபோதுமா?

[ஸ:—சங்கை:—தர்மம் போல் பிரம்மமும் வேதார்த்தமாகையால் மனனாதிகளை அபேக்ஷிக்கவில்லை. சுருதிமுதலியவைகளைமட்டும் அபேக்ஷிக்கிறது.] (35)

சமாதானம்:— தர்மவிசாரத்திற்போல் பிரம்மவிசாரத்தில் சுருதிமுதலியவைகள் மட்டும் பிரமாணமன்று. பின்னையோவெனின் சுருதிமுதலியவைகளும் அனுபவாதிகளும் கிடைத்தமட்டில் பிரமாணங்களாம்.

ஏ (ஒருவிஷயம் பிரத்தியக்ஷமாய் ஒருவிதமாய் விளங்கக்கூடும். சுருதியால் ஒருவிதமாய் விளங்கக்கூடும். இப்படி ஒரேவஸ்து இரண்டுவிதமாய் விளங்கும் சமயத்தில் விருத்த தோற்றத்தால் சம்சயமுண்டாகி மனதுகலங்கக்கூடும். அதை நிவிர்த்திக்கும்பொருட்டு மனனம் செய்யவேண்டியது. மனனம் என்றால் பிரத்தியக்ஷாதி விஷயத்தை யுக்தியால் விசாரித்து பகுத்தறிவது (சுருதிமுதலியவைகள் என்பதால் श्रुति लिंग वाक्य प्रकरण स्थान समाख्या என்பவைகளை அறியவேண்டும். இவைகளின் விவரம் பின்னால் கொடுக்கப்படும் (36)

பிரம்ம தர்ம வித்தியாசங்கள்.

1. பிரம்மஞானமானது (அதாவது சாப்தஞானமாவது)

(1) முக்தியின்பொருட்டு பிரம்ம சாக்ஷாத்காரத்தை அபேக்ஷிக்கிறது.

(2) ஸித்தவஸ்து விஷயமாயிருக்கிறது.

2. தர்மமோ (செய்யவேண்டிய விஷயத்தில் அபரோக்ஷமாயிருப்பதால்)

(1) பிரத்தியக்ஷாதிகளை அபேக்ஷிக்கவில்லை.

(2) ஆகையால் தர்மத்திற்கு சுருதிமுதலியவைகளே போதுமானவை.

(3) மேலும் பண்ணவேண்டிய காரியம் புருஷ பிரயத்தினத்தைப் பொருத்திருக்கிறது. ஆகையால் தர்மம் சுருதிமுதலிய பிரமாணத்தைத்தான் அபேக்ஷிக்கிறது)

(4) லௌகிக கர்மமும் வைதிக கர்மமும்

1. செய்யவாவது

2. செய்யாமல் இருக்கவாவது

3. வேறுவிதமாய்ச் செய்யவாவது

முடியும்.

திருஷ்டாந்தம்,

1. (1) குதிரை ஏறிபோகலாம்.

(2) காலால் நடந்துபோகலாம்

(3) வேறுவிதமாய்ப்போகலாம்

(4) அல்லது போகாமலிருக்கலாம்

2. அப்படியே அதிராத்திரம் என்னும் யாகத்தில்

(1) சோமரசத்தை 16 தடவை எடுத்துக்கொள்ளும்படி சொல்லியபடி எடுத்தாலும் எடுக்கலாம்

(2) எடுக்காமலுமிருக்கலாம்

3. (1) உதித்தபிறகு ஹோமம் செய்தாலும் செய்யலாம். –

(2) உதிக்கும் முன் செய்தாலும் செய்யலாம்.

[வ:—வைதிககர்மங்கள் புருஷனுடைய இச்சைப்படிசெய்யப்படுமாயின் விதிநிஷேதங்கள்வியர்த்தமாகுமேனனின்.]

(1) விதிநிஷேதங்களும்,

(2) விகற்பங்களும்,

(3) உற்சர்க்க அபவாதங்களும்,

கர்மவிஷயத்தில்பிரயோசன முள்ளவைகளாகவேயிருக்கின்றன. (எப்படியெனின்,

ஸ: (1) புருஷனுடைய ஹிதத்தை உத்தேசித்து வேதம் ஒரு காரியத்தை விதிக்கிறது. அதைச் செய்யாவிடின் கெடுதல் நேரிடுமாகையால் புருஷனுடைய இச்சை உபயோகமில்லை. விதிப்படி செய்தே தீரவேண்டும்.

(2) அப்படியே புருஷனுக்கு அஹிதமானதை வேதம் நிஷேதிக்கும். புருஷன் இச்சைப்படி அதை செய்தால் கெடுதல் நேரிடும். ஆகையால் நிஷேதித்ததைச் செய்யவேகூடாது. இதிலும் புருஷனுடைய இச்சை உபயோகமில்லை.

(3) விகற்பமாவது:—நெல்லைக் கொண்டாவது எவையைக்கொண்டாவது யாகம்செய் என்கிற விதியில் விகற்பம் காணப்படுகிறது.

(4) உற்சர்க்கம் = சாமானியசாஸ்திரம்.

ஆஹவநீயாக்கினியில் ஹோமம் செய்யவேண்டியது என்பது சாமானியவிதி,

(5) அபவாதம் = விசேஷவிதி. அதாவது அசுவமேத யாகத்தில் குதிரை அடிவைத்த இடத்தில் ஹோமம் செய் என்பது.)

இப்படி விதி முதலியவைகள் தர்மவிஷயத்தில் வேண்டியவை. (பிரயோசனமுள்ளவை.) (37)

[ஸ:—இவை பிரம்மவிஷயத்தில் பிரயோஜனப் படவில்லை. ஏனெனின்]

ஒரு ஸித்தவஸ்து

(1) இப்படிப்பட்டதா, அப்படிப்பட்டதா என்றுவது.

(2) இருக்கிறதா, இல்லையா என்றுவது,

விகற்பம் ஏற்படமாட்டாது,

[ஸ:—ஆத்மாமுதலான வஸ்துவிஷயத்தில் இருக்கிறது இல்லை என்பதாய் வாதிகளின் வாதம் காணப்படுகிறதே எனின்]

விகற்பங்கள் புருஷ புத்தியால் ஏற்படுகின்றன.

ஸ:— [மனதில் உதிக்கிற விகற்பங்கள் நிச்சய ஞானமாகமாட்டா, தர்மம் எப்படி எப்படி அறியப்படுகிறதோ அப்படி அப்படி செய்யமுடியும். ஆகையால் தர்மவிஷயத்தில் ஏற்படும் விகற்பங்கள் நிச்சய ஞானரூபமாகவே இருக்கலாம்

அப்படியே பிரஹ்மவிஷயத்தில் சொல்லக்கூடாது ஏனெனின்]

வஸ்துவின் வாஸ்தவமான ஞானம் புருஷபுத்தியை அபேக்ஷிக்கவில்லை. அது வஸ்துஸ்வரூபத்தையே பொருந்திருக்கிறது.

[ரா:—சாத்தியவஸ்துவின் ஞானம்போல் சித்த வஸ்துவின் ஞானமும் புருஷபுத்தியையே அபேக்ஷிக்கும்பக்ஷத்தில்,

சித்தவஸ்து விஷயமாய் உண்டாகும் விகற்பங்கள் யதார்த்தமாகும். சித்தவஸ்து ஞானமோ மனதின் விகற்பரூபமாயிராமல் பிரமாணத்தால் சித்திக்கிறது. வஸ்து ஏகரூபமாக இருப்பதால் ஒரே ஞானம் பிரமாரூபமாய் (சத்தியஞான ரூபமாய்) இருக்கும். மற்ற விகற்பங்கள் அயதார்த்தங்களே என்பது கருத்து.

இதற்கு திருஷ்டாந்தம்.]

ஒரு கட்டையில்

1. கட்டையா.
2. புருஷனா.
3. வேறொன்றா

என்பது தத்வஞானமல்ல.

[ரா:—கட்டையே என்று நிச்சயமாய் அறியப்பட்டவளவில் சகல விகற்பங்களும் பொய்யாய் விடுகின்றன.]

இவ்விடத்தில் (கட்டையிடத்தில்)

1. புருஷனா.
2. வேறொன்றா,

என்பது மித்தியா ஞானம்;

கட்டைதான் என்பது தத்வஞானம்.

[வஸ்துவைப் பொருந்தின ஞானம் யதார்த்தம்.

புருஷபுத்தியால் ஏற்படுவது மித்தை]

இவ்விதமாய் சகலவஸ்துக்களின் யதார்த்தஞானமும் வஸ்துக்களைப் பொருந்திருக்கிறது. இப்படி இருக்க பிரம்மஞானமும் வஸ்துவையே அதாவது பிரம்மத்தையே பொருந்திருக்கிறது. புருஷ புத்தியால் கற்பிக்கப்படவில்லை. கட்டை ஞானம்போல் சித்தவஸ்து ஞானமானதால் யதார்த்தமாயிருக்கிறது.

[ரா:—தர்மம் சாத்தியமானதால் புருஷாதீனம்.

பிரம்மம் சித்தமானதால் ஸ்வதந்திரம்.

என்பது இரண்டுக்கும் வித்தியாசம் இப்படி தர்மம்போல் பிரம்மம் இராதபடியால் மனனாதிகளின் அபேக்ஷை சித்திக்கிறது] (38)

4. பிரம்மத்தை பிரத்தியக்ஷாதிகளால் அறியலாமா.

[ரா:—ஆ. தர்மம்போல் பிரம்மம் இராதபடியால், கடம்போல் பிரம்மமும் சித்தவஸ்துவானதால் பிரத்தியக்ஷம் முதலிய பிரமாணங்களுக்கு விஷயமாகுமே.]

ரா:—அப்போது ஜன்மாதி சூத்திரத்தில் ஜகத்காரணானுமானத்தை விசாரிக்கவேண்டியது அனுவசியம். சித்தவிஷயத்தில் பிரத்தியக்ஷாதிகளே பிரமாணம். சுருதிபிரமாணமல்ல. ஆகையால் வேதாந்த வாக்கியங்களின் விசாரம் பிரயோஜனமற்றதாகும். (39)

[சமாதானம் ரா:—அனுமானம் பிரம்மத்தை அறிய சாதகமாயிருந்தால், அந்த அனுமானம் எப்படிப்பட்டது?

எது காரியமோ அது பிரம்மத்தினின்றும் உண்டாயிருக்கிறது என்று அறிகிறாயா? அல்லது,

எது காரியமோ அது காரணத்துடன் கூடியிருக்கிறது என்று அறிகிறாயா?

முதல்பக்ஷம் ஒவ்வாது. ஏனெனின்]

பிரம்மம் இந்திரியத்துக்கு விஷயமாகாமையால்

[ரா:—வியாப்திஞானம் உண்டாகமாட்டாது. ஆகையால்] அனுமானாதி பிரமாணங்களுக்கு விஷயமாகமாட்டாது.

[வியாப்தி ஞானமாவது:—நெருப்பையும் புகையையும் ஒரு இடத்தில் பிரத்தியக்ஷமாய் பார்த்திருந்தால் புகை இருக்கிற இடத்தில் நெருப்பு இருக்கிறதென்று ஒரு ஞானமுண்டாகிறது. இதுவே வியாப்திஞானம். இது இருந்தால்தான் காலாந்திரத்தில் அனுமானமுண்டாகும்.]

[ரா:—பிரம்மம் ஏன் இந்திரியத்துக்கு விஷயமன்றுஎனின் 1. पराञ्चिखानि व्यतृणत् स्वयंभूः

என்கிற கடவல்லி 1-3-1-வது சுருதியாலும்

2. பிரம்மமானது ரூபமுதலியவைகளற்றதாயிருப்பதாலும்

பிரம்மம் இந்திரிய விஷயமாகமாட்டாது]

ஸ்வபாவத்தில் இந்திரியங்களுக்கு விஷயங்கள் விஷயமேதவிர பிரம்மம் விஷயமன்று. பிரம்மம் இந்

திரியவிஷயமாக இருந்தால் இந்த ஜகத்தானது காரியமாக பிரம்மத்துடன் சம்பந்தப்பட்டிருக்கிறதென்று நாம் அறியக்கூடும்.

[ரா:—ஆனால் பிரம்மம் இந்திரியவிஷயமாகாமையால் இந்தகாரியமானது பிரம்மத்தினின்றும் உண்டாயிருக்கிறது என்று ஊஹிக்கமுடியாது] (40)

[ரா:—இரண்டாவது பக்ஷத்தில் அதாவது காரியமானது சாமான்னியமாய் காரணத்துடன் கூடியிருக்கிறதென்கிறபக்ஷத்தில், காரணம் சித்தித்தாலும் காரணம் பிரம்மந்தான் என்று சுருதியன்றியில் அறியமுடியாது. ஏனெனின்] காரியத்தைமட்டும் கிரகிக்கமுடியும் அது

(1) பிரம்மத்துடன் சம்பந்தப்பட்டதென்றும் (அதாவது பிரம்மத்தினின்றும் உண்டாயிருக்கிறதென்றும்) அல்லது

(2) வேறு ஒன்றினுடன் சம்பந்தப்பட்டதென்றும்

நிச்சயிக்கமுடியாது (41)

ஆகையால் ஜன்மாதிசூத்திரம் அனுமானத்தை உபந்யாசம்செய்யவில்லை.

[ரா:—சுருதியன்றியில் ஜகத்காரணம் பிரம்மமென்று நிச்சயம் ஏற்படாதபடியால், அந்த நிச்சயம் உண்டாகும்பொருட்டு சுருதியே பிரதானமாக விசாரிக்கத்தக்கது.]

ஆகவே இந்த சூத்திரமானது வேதாந்தவாக்கியத்தை விசாரிக்கவேண்டுமென்றுகாட்டுகிறது.

[ரா:—சுருதி அர்த்தத்தை திடப்படுத்துவதற்காக அனுமானதிகளை சுருதிசாதகமாக விசாரிக்கவேண்டியது என்பது கருத்து.] (42)

ரா[இனி சூத்திரத்தின் விஷயவாக்கியத்தை விசாரிக்கிறார்.]

இந்த பிரம்மத்தின் லக்ஷணத்தைக்கூறும் வாக்கியங்கள் எவையெனின்.

1 भृगुर्वै वारुणिः वरुणं पितरमुपससार अधी
हिभगवोब्रह्मेति

முதல்

यतोवाइमानिभूतानिजायन्ते येनजातानि जीवन्ति यत्प्रयन्त्यभिसंविशन्ति तद्विजिज्ञासस्वतद्ब्रह्म

என்கிற தை III-1-வது சுருதி

[ரா:—முதல்சூத்திரத்தில் சாதனசதுஷ்டய சம்பன்னனான அதிகாரி பிரம்மவிசாரம் செய்யவேண்டியது என்றுசொல்லி, பிரம்மத்தை அறிய இச்சிக்கிறவனுக்கு இரண்டாவது சூத்திரத்தில் பிரம்மலக்ஷணம் கூறப்பட்டது. அப்படியே சுருதியிலும் பிரம்மத்தை அறிய இச்சிக்கிறவனுக்கு ஜகத்காரண லக்ஷணத்தினால் பிரம்மம் உபதேசிக்கப்படுகிறது. ஆகையால் சூத்திரத்தின் பிரகாரமும் சுருதியின் பிரகாரத்தையே அநுசரித்திருக்கிறது.] (43)

மூன்றின் சுருதிவாக்கியத்தின் தாற்பரியம்

आनन्दाद्ध्येव खल्विमानि भूतानि जायन्ते, आनन्देन जातानि जीवन्ति आनन्दं प्रयन्त्यभिसंविशन्ति (तै III 6)

என்கிற வாக்கியத்தால் நிச்சயிக்கப்படுகிறது.

[ரா:—முதல்வாக்கியத்தால் ஜகத்காரணம் பிரம்மம் என்று மட்டும் தெரிந்ததே தவிர அதின் ஸ்வரூபலக்ஷணம் தெரியவில்லை. அந்த ஸ்வரூபம் ஆநந்தம் என்பதை இரண்டாவது சுருதி கூறுகிறது.] (44)

3. நித்திய சுத்த புத்த முக்த ஸ்வபாவமுள்ளதாயும் சர்வஞ்ஞஸ்வரூபமாயுமிருக்கிற காரணமான பிரம்மத்தை கூறும் இதைப்போலான

(1) यः सर्वज्ञः

(2) तस्मादेतद्ब्रह्म नामरूपमन्नं च जायते

(3) विज्ञानमानन्दंब्रह्म

(முதலிய இதரசாகைகளின் வாக்கியங்களையும் விஷயவாக்கியங்களாக உதாஹரிக்கவேண்டியது. (45)

1. [ரா:—பூர்வபக்ஷத்தால் சித்தித்தபலன்:—பிரம்மலக்ஷணம் சித்திக்காதபடியால் ஸ்வரூபம் சித்திக்கவில்லை. ஆகையால் பிரம்மஞானமும் அதினால் முக்தியும் சித்திக்கவில்லை.

2. சித்தாந்தபலன்:— விஷயவாக்கியத்தால் பிரம்மலக்ஷணம் சித்திக்கிறது. பிரம்ம ஸ்வரூபஞானமும் அதினால் முக்தியும் சித்திக்கின்றன. ஸ்வரூபலக்ஷணத்தைக்கூறும் சத்தியஞானாநந்த வாக்கியமும் தடஸ்தலக்ஷணத்தைக்கூறும் ஜகத்ஜன்மாதி வாக்கியமும் இரண்டு லக்ஷணங்களால் பிரம்மத்தை பிரதிபாதிக்கின்றன. அந்த அறிவதினால் முக்திகிடைக்கும் என்பது நிச்சயம்.] (46)

### X. வியாஸாதிகரணமாலைப்படி அத்வைதசுருக்கம்.

1 लक्षणं ब्रह्मणो नास्तिकिंवाऽस्ति, नहिविद्यते ।
जन्मादेरन्यनिष्ठत्वात्सत्यादेश्चाप्रासिद्धितः ॥
ब्रह्मनिष्ठं कारणत्वं स्याल्लक्ष्म स्रग्भुजङ्गवत् ।
लौकिकान्येव सत्यादीनिखण्डंलक्षयन्तिहि

(1) यतोवाइमानि என்கிற (तै III-I-Iம்)

(2) सत्यं ज्ञानं अनन्तं என்கிற (तै II-I-Iம்)

3. விஷயம் (48)

இதில் சொல்லிய பிரம்மலக்ஷணம்

1. சம்பவிக்குமா? அல்லது

2. சம்பவிக்கமாட்டாதா?

என்பது சந்தேகம் (49)

4. பூர்வபக்ஷம்:—சம்பவிக்கமாட்டாது ஏனெனின்

1. ஜன்மாதிகள்லக்ஷணமா? அல்லது

2. சத்தியாதிகளா?

முதலாவது அன்று. அவைகள் ஜகத்துக்குறிய வைகளானதால் பிரம்மத்தினிடத்தில் பொருந்தா.

இரண்டாவதும் அன்று. ஏனெனின் உலகப்பிரசித்தங்களான சத்தியாதிகளை கிரகித்தால் வெவ்வேறு என்ற ஞானமுண்டாகும். இவைகளால் அகண்டமான பிரம்மத்தை குறிப்பிடமுடியாது. பிரசித்தமாயிராத சத்தியாதிகளை லக்ஷணமாய்ச்சொல்லுவது யுக்தமன்று. ஆகையால்

1. தடஸ்தலக்ஷணமும் ஏற்படவில்லை

2 ஸ்வரூபலக்ஷணமும் ஏற்படவில்லை. (50)

5. சித்தாந்தம்:—எது ஒருபதார்த்தத்துக்கு வெளியேயும் இன்னும் ஒரு பதார்த்தமிருப்பதற்குக் காரணமாயிருக்கிறதோ அது தடஸ்தலக்ஷணம். ஜன்மாதிகள் ஜகத்தில் (பிரம்மத்துக்கு வெளியில்) இருந்தாலும் அவைகளுக்குக் காரணமாயிருக்கும் தன்மையை பிரம்மத்தில் கற்பிக்கலாம். ஆகையால் அது தடஸ்தலக்ஷணமாகிறது. எது சர்ப்பமோ அது கயிறு என்பதுபோல் எது ஜகத்காரணமோ அது பிரம்மம் என்று கற்பிப்பதினால் வஸ்துவை குறிப்பிடமுடியும். பிதா, புத்திரன், சகோதரன், மாப்பிள்ளை முதலியபெயர்கள் வெவ்வேறு பதார்த்தங்களைக் குறிப்பிட்டாலும் எல்லாம் ஒரேதேவதத்தனிடம் பொருந்தும், விரோதமில்லை. இதுபோல் சத்தியாதி சப்தங்கள் லோகத்தில் வெவ்வேறு அர்த்தங்களைக்கூறினாலும், அகண்ட பிரம்மத்தினிடத்தில் பரியவஸானமாகுவதால் ஸ்வரூபலக்ஷணம் சித்திக்கிறது. ஆகையால் இரண்டு லக்ஷணங்களும் சித்திக்கின்றன. (51)

### XI. I-1-2-வது அதிகரணத்துக்கு விசிஷ்டாத்வைதப்படி சுருக்கம்.

1. விஷயம்:—यतोवाइमानिभूतानिजायन्ते என்னும் தைத்திரீய II-1-வது வாக்கியம். (52)

2. சங்கதி:—முந்தின அதிகரணத்தில் பிரம்மம் விசாரிக்கத்தக்கது என்று ஏற்பட்டது. பிரம்மத்தின் லக்ஷணம் தெரியாதவரையில் விசாரத்தை ஆரம்பிக்கக்கூடாது என்று ஆக்ஷேபம் வர இப்போது அதின் லக்ஷணம் கூறப்படுகிறது. (53)

3. சந்தேகம்:—இந்தவாக்கியமானது அறியவேண்டியதாகச்சொன்ன பிரம்மத்தின் லக்ஷணத்தை

(1) கூறுகிறதா? அல்லது

(2) இல்லையா? (54)

4. பூர்வபக்ஷம்:—கூறவில்லை. ஏனெனின் ஜகத்ஜன்மாதிகளுக்கு பிரம்மம் காரணமன்று. அநேக விசேஷங்களுடன்கூடினதாய்ஒரு விசேஷ்யம் இருக்கமாட்டாது. (55)

5. சித்தாந்தம்:—தேவதத்தன் என்கிற ஒருவனே கருத்தும் யுவாவாயும் இருக்கமுடியும். இதுபோல் பிரம்மம் ஆகிற விசேஷ்யம் ஜகத்ஜன்மாதி ஆகிற அநேகவிசேஷணங்களுடன் கூடியிருக்கலாம். ஆகையால் தைத்திரீய சுருதியானது பிரம்மத்தின் லக்ஷணத்தைக்கூறலாம். (56)

6. சூத்திரார்த்தம்:—

अस्य :— அநேகபோக்தாக்கள் போக்கியங்கள் இவைகளுடன் கூடின ஜகத்துக்கு

यतः:—எதினின்றும்

जन्मादि:—ஜன்மம் முதலியவைகள் உண்டாகின்றனவோ

(57)

## XII. I. 1-2-வது அதிகரணத்துக்கு துவைதப்படி சுருக்கம்.

1. சங்கதி:—மூன் ஜிஜ்ஞாஸ்யம் (அறியத்தக்கது) என்பதால் சொல்லப்பட்ட பிரம்மத்தின் லக்ஷணம் இப்போது சொல்லப்படுகிறது. (58)

2. விஷயவாக்கியம்:—தைத்திரீயத்தில்

यतोवाइमानि भूतानि जायन्ते
येन जातानि जीवन्ति यत्प्रयन्त्यभिसंविशन्ति
तद्विजिज्ञासस्व तद्ब्रह्म (III-1)

என்று சொல்லுயிருக்கிறது.

प्रयन्ति பிரளயத்தில் அடைகிறார்கள் என்று அர்த்தம்; अभि ஸ்வேச்சையால் முக்தியில் பிரவேசிக்கிறார்கள் என்று அர்த்தம். மற்றது அத்வைதத்தில் போலவே.]

விஷயம்:—பிரம்மம் (59)

3. சந்தேகம்:—பிரம்மம் என்பது

(1) ஜீவனா?

(2) விஷ்ணுவா? (60)

4. பூர்வபக்ஷம்:—பிரம்ம சப்தத்துக்கு

1. பிராமணஜாதி

2. ஜீவன்

3. கமலாசனன் (சதுர்முகபிரம்மா)

4. வேதம்

இவைகள் அர்த்தமானதால், பிரம்மசப்தத்துக்கு ஜீவன் என்ற யோகார்த்தம் சித்திக்கமாட்டாதாகையால் ரூடி அர்த்தம் ஒப்புக்கொள்ளவேண்டும்.

(2) பிரம்ம சப்தத்துக்கு விஷ்ணு என்கிற அர்த்தம் ரூடியால் ஏற்படமாட்டாது.

ஆகையால் யோகார்த்தத்தைத்தான் ஒப்புக்கொள்ளவேண்டும்.

(3) யோகார்த்தம் ரூடி அர்த்தம் இவைகளுக்குள் ரூடி அர்த்தம்தான் பிரபலம்.

(4) यतोवा என்பதில் சொல்லிய காரணத்தன்மை ஜீவனுக்கும் அதிர்ஷ்டம் மூலமாக ஏற்படலாம்



(5) ஆகையால் ஜாதி முதலிய அர்த்தங்கள் இவ்விடத்தில் பொருந்தா

आत्मावा अरे द्रष्टव्य:

(6) என்கிற வாக்கியத்தில் ஜீவன் என்கிற அர்த்தத்தில் ஆத்மசப்தம் பிரயோகிக்கப்பட்டிருக்கிறது.

இந்த காரணங்களால் இந்த பிரம்மசப்தத்துக்கு ஜீவன்தான் என்று அர்த்தம். அவன் நான் என்கிற புத்தியால் சித்தஜுத்தையால் அவன் விஷயத்தில் ஜிஞ்ஞாசை செய்யவேண்டியதில்லை (61)

5. சித்தாந்தம்:—

यतोवाइमानि என்கிற வாக்கியத்தில் கூறப்பட்ட ஜகத் காரணத்தன்மை விஷ்ணுவினிடத்தில் தான் பொருந்தும்

அவர் மூன்று தடவை பிருகிவியை உயரெடுத்திருக்கிறார்

அதிர்ஷ்டம் மூலமாக ஜீவன் காரணம் என்று சொன்னால்

(1) ஜாதி முதலிய அர்த்தங்கள் அஸ்வாரஸியங்களாகும்

(2) इमानि என்பதின் அர்த்தத்தை குறிக்கும்படி நேரிடும். அதற்குக்காரணமில்லை.

(3) अभिसंविशन्ति என்பதினால் முக்தனால் அடையத்தகுந்த யாதொரு ஸ்தானம் தெரியவருகிறதோ அதற்கு இடமில்லாமற்போகும்.

(4) इतरव्यपदेशात् என்கிற II-1-22-வது சூத்திரத்தில் ஜீவன் கர்த்தாவென்பது நிராகரிக்கப்பட்டிருக்கிறது.

இந்தக்காரணங்களால் ஜீவன் ஜன்மாதிகாரணமான பிரம்மம் என்பது பொருந்தவில்லை. ஆகையால் ரூடி அர்த்தத்தைத் தள்ளிவிடவேண்டியது.

आत्मावा अरे என்கிற வாக்கியத்திலிருக்கிற ஆத்ம சப்தமும் स्वशब्दात् என்பதாய் இனி சொல்லப்போகிற நியாயப்படி விஷ்ணுவையேகூறும்.

तदेवब्रह्मपरमंकवीनां என்கிற இடத்தில் பிரம்மசப்தம் விஷ்ணுவைக்கூறுகிறது. அஞ்ஞானிகளுடைய கொள்கையைவிட ஞானிகளுடைய கொள்கை

பிரமாணமானது. ஆகையால் குணபூர்ணரான விஷ்ணுவே பிரம்மசப்தத்தால் அறியத்தக்கவர். அவர் விஷயமாய் சந்தேகம் வரக்கூடுமானதால் விசாரம் செய்யத்தக்கது. (62)

6. சூத்திரார்த்தம்.

அஸ்ய ஜீவஜடஸ்வரூபமான பிரபஞ்சத்துக்கு

யத:—எதினின்றும்

ஜன்மாதி:—ஜன்மம் முதலியவைகள் (அதாவது ஜன்மம் ஸ்திதி, லயம், நியமனம், ஞானம், அஞ்ஞானம், பந்தம், மோக்ஷம்) உண்டாகின்றனவோ அது பிரம்மம்.

முக்திரஸ்யயத: :—என்று சூத்திரத்தை ஏற்படுத்தவேண்டியதாயிருக்க

ஜன்மாத்யஸ்யயத: :—என்று ஏற்படுத்தியிருக்கிறாரே எனின் மோக்ஷம் நிச்சயமாய் சித்திக்கும் என்பது இந்தவசனத்தால் தெரியவருகிறது.

ஜிஞ்ஞாஸை செய்யத்தக்கது என்பது பலம். (63

I. 1-3-வது அதிகரணம்.

அனுக்கிரமணிகை.

மூன்றாவது அதிகரணத்தின் அனுக்கிரமணிகை முற்றிற்று.

---

## I-1-3-வது அதிகரணம்.

I. இதின்பேயர்:—சாஸ்திரயோனித்வாதிகரணமென்பதாம். (1)

II. இதின் கருத்து:—பிரம்மம்

1. வேதகர்த்தாவென்பதும்

2. வேதத்தாலேயே அறியக்கூடியது என்பதுமாம். (2)

III. இதில் அடங்கிய சூத்திரம்:—மூன்றாவது ஒன்றே. (3)

IV. இதின் வர்ணகங்கள்:—இந்த அதிகரணத்தில் இரண்டு வர்ணகங்களுண்டு.

1. பிரம்மம் வேதகர்த்தாவென்பது 1

2. பிரம்மம் வேதத்தாலேயே அறியக்கூடியது என்பது 1 (4)

V. முதலாவது வர்ணகம்:

1. இதின் விஷயவாக்கியம்.

अस्य महतो भूतस्य निश्वसित-
मेतदृग्वेदो यजुर्वेदः सामवेदोऽ-
थर्वाङ्गिरस पुराणं विद्याउपनि-
षदः श्लोकाः सूत्राणि अनुव्या-
ख्यानानि व्याख्यानानि

அதாவது:—இந்த மகாபூதத்தினின்றும் ரிக்வேதம் முதலியவைகள் வெளிப்பட்டன.

என்னும் बृ-उप II-4-10-வது சுருதி. (5)

2. சங்கதி:—

(1) முந்தின அதிகரணத்துக்கும் இதற்கும்

(க) ஏகவிஷயத்வம்:— [रा :—சைதன்னியமான பிரம்மம் ஜகத்காரணமென்று சொன்னதினால் பிரம்மம் சர்வஞ்ஞும் என்று சூத்திரகாரரால் சொன்னதாக ஏற்படுகிறது. ஞானமன்றியில் ஒன்றும் செய்யமுடியாது. எவன் எதைச் செய்கிறானோ அவன் அதை அறிந்திருக்கவேண்டியது. குயவன்போலும். ஆகவே சகலத்துக்கும் பிரம்மம் காரணமாகையால் அது சர்வஞ்ஞும். இப்படி]

ஜகத்காரணமாக இருக்கையால் காண்பிவிக்கப்பட்ட சர்வஞ்ஞத்தன்மையை

[ரா:— 1. பிரதானாதிகளுக்கு அது ஒவ்வாது என்பதினாலும்;

2. பிரம்மமே வேதத்துக்கும் கர்த்தாவென்னும் ஹேதுவாலும்]

திருடபடுத்துவதற்காக வியாசர் இந்த இரண்டாவது அதிகரணத்தை ஏற்படுத்திருக்கிறார். ஆகையால் ஏகவிஷயத்வசங்கதி ஏற்படுகிறது. (5)

(b) ஆக்ஷேபசங்கதி:— [ரா:—அல்லது பிரம்மம் சர்வத்துக்கும் கர்த்தாவென்பதாய் முந்தின அதிகரணத்தில் நிச்சயிக்கப்பட்டது. வேதம் நித்தியமாகையால் அதற்கு பிரம்மம் கர்த்தாவாகமாட்டாது என்பதாய் பூர்வபக்ஷி ஆக்ஷேபிக்கிறபடியால் ஆக்ஷேப சங்கதி ஏற்படுகிறது.

(2) சுருதிமுதலிய சங்கதிகள்:—

[ரா:—ஸ்பஷ்டபிரம்மம் லிங்கத்தைக் குறிப்பிடுகிற முந்தின வேதவாக்கியம் வேதகர்த்தாவான பிரம்மத்தினிடத்தில் சமன்வய (தாற்பரிய) ப்படுகிறதாக இந்த சூத்திரத்தில் சொல்லியிருப்பதால் இந்த சூத்திரத்துக்கும் சுருதி, சாஸ்திர, அத்தியாயபாதங்களுக்கும் உள்ள சங்கதிகள் முன் காட்டியபடியே சித்திக்கின்றன. இப்படியே பாதம் முடியும்வரையிலும் பார்த்துக்கொள்ளவும்]

3. (1) சந்தேகம்:—ரா முன் கூறப்பட்ட விஷயவாக்கியத்தில் சந்தேகம் என்னவென்னின்.

இந்தவாக்கியம் பிரம்மம் வேதகர்த்தாவாயிருப்பதால் அது

(1) சர்வஞ்ஞம் என்று சாதிக்கிறதா? அல்லது

(2) சாதிக்கவில்லையா?

என்பதாம்]

(2) சந்தேகபீஜம்:—[ ஆ:—வேதம் பிரம்மத்தை கர்த்தாவாக

1. அபேக்ஷிக்கிறதாகசிலரும்

2. அபேக்ஷிக்கவில்லை என்று சிலரும்சொல்லுவதால் சந்தேகம்]

4. [ரா:—பூர்வபக்ஷம்:—

[ब्रः—वाचाविरूपनित्यया

அதாவது:—ஈசுவரனே, நித்தியவாக்கினால் ஸ்துதியை பிரேரணைசெய்யும்

என்கிற ப்ரு-உப சுருதியானது வேதத்தை நித்தியம் என்று கூறுவதால் ஈசுவரன் வேதகர்த்தாவல்ல என்று ஏற்படுகிறது.

5. சித்தாந்தம்:—

(1) இப்படி பூர்வபக்ஷிசொல்ல வியாசர் சித்தாந்தத்தை

शास्त्रयोनित्वात् "3"

என்னும் சூத்திரத்தில் சொல்லுகிறார். (9)

(2) சித்தாந்தத்தின் சுருக்கம்:—

[ब्रः—

ரிக்வேதாதிகள் நித்திய சித்தமான பிரமத்தினின்றும் மூச்சுக்காற்றுப்போல் பிரயத்தினமன்றியில் சித்தித்தன என்பது விஷயவாக்கியத்தின் அர்த்தம் பிரம்மம் வேதத்தின் கர்த்தாவாக இருக்கக்கூடும். ஏனெனின்,

(1) மூச்சுக்காற்றுப்போல் பிரயத்தினமன்றியில் உண்டாயிற்று என்று சொல்லியிருக்கிறது.

(2) तस्माद्यज्ञात्सर्वहुतऋचः सामानि जज्ञिरे

இந்த வாக்கியத்தால் யஞ்ஞசப்தவாச்சியமான பிரம்மத்தினின்றும் வேதமுண்டானதாக ஸ்பஷ்டமாகத் தெரியவருகிறது.

(3) காளிதாசன் முதலானவர்களால் செய்யப்படும் வாக்கியங்கள் பிரயத்தினத்தின் பேரில் ஏற்படுகின்றன. மூச்சுக்காற்றுப்போல் பிரயத்தினமன்றியில் உண்டானவை என்று சொன்னதினாலேயே அபௌருஷேயம் அதாவது புருஷசம்பந்தமற்றது என்று ஏற்படுகிறது.

(4) வேதம் ஒவ்வொரு சிருஷ்டியிலும் முந்தின சிருஷ்டியை அனுசரித்து உண்டாவதால் பிரவாஹரூபமாய் நித்தியம் என்று அர்த்தம். சகல ஜகத்தின் ஸ்திதியையும் விளக்கிவைக்கிற வேதத்துக்குக் கர்த்தாவானதால் பிரம்மம் சர்வஞ்ஞமாயுமிருக்கிறது.] 10

(5) சூத்திரார்த்தம்:—

பதவுரை.

शास्त्रयोनित्वात् :—சாஸ்திரத்துக்கு யோனி அதாவது காரணமாக இருப்பதால் (11)

பொழிப்புரை.

சாஸ்திரத்துக்கு பிரம்மம் காரணமாக இருப்பதால் பிரம்மம் சர்வஞ்ஞம் என்று சித்திக்கிறது. (12)

(4) பாஷ்யம்.

ரிக்வேதாதிகள்

[ரா:—கிரந்தவிஸ்தாரத்தாலும்

அர்த்தபாஹுல்யத்தாலும்]

பெரிதாயிருக்கின்றன

[ரா:—ஹிதத்தை போதிக்கிறபடியால்]

சாஸ்திரம்

3. அநேகம் [ரா:—அதாவது

1. புராணம்
2. நியாயம்
3. மீமாம்சை
4. தர்மசாஸ்திரம்
5. சிக்ஷை
6. கல்பம்
7. வியாகரணம்
8. நிருக்தம்
9. சந்தஸ்
10. ஜோதிடம்

ஆகிய பத்துவித வித்தியாஸ்தானங்கள் வேதார்த்தத்தை அறிய சாதகங்கள்

4. தீபம்போல்சகல அர்த்தங்களையும் பிரகாசிப்பிக்கின்றன.

5. அப்படி பிரகாசிப்பித்தாலும் அசேதனமாகையால் சர்வஞ்ஞம் போலிருக்கின்றன.

இப்படிப்பட்ட ரிக்வேதாதி சாஸ்திரத்துக்கு பிரம்மம்

1. உபாதானகாரணமாயும்
2. கர்த்தாவாயுமிருக்கிறது.

[ரா:—உபாதானகாரணத்தில் சர்வஞ்ஞத்தன்மையில்லாமல் அதின் காரியத்தில் அத்தன்மை காணப்படாததால்

சர்வஞ்ஞகுணத்துடன்கூடின ரிக்வேதாதி சாஸ்திரம் சர்வஞ்ஞனைத்தவிர வேறு ஒன்றினிடமிருந்தும் உண்டாகமாட்டாது. எந்த எந்த விஸ்தார அர்த்தமுள்ள சாஸ்திரம் எந்த புருஷனிடமிருந்து உண்டாகிறதோ அந்த புருஷன் அந்தசாஸ்திரத்தைவிட அதிக அர்த்தஞானமுள்ளவன் என்பது உலகப்பிரசித்தம்.

திருஷ்டாந்தம்:—

வியாகரணத்தால் சப்தம் சரியாக இருக்கிறதா இல்லையாவென்று மட்டும் அறியக்கூடும். இந்த வியாகரணத்தைவிட அதைச்செய்த பாணினியானவர் ரொம்ப அர்த்தஞானமுள்ளவர். எப்போது ஸ்வல்ப அர்த்தமுள்ள சாஸ்திரம் அதிக அர்த்தஞானமுள்ளவனிடமிருந்து உண்டாகிறதோ அப்போது

अस्य महतः முதலிய சுருதியில் சொல்லிய அபரிச்சின்னமான சத்திய ஸ்வரூப பூதத்தினின்றும்

1. அநேக சாகைகளுடன்கூடியும்

2. தேவமிருக மனுஷ்யர்களின் வர்ணாசிரமாதிகளைப் பிரித்துக் காண்பித்துக்கொண்டும்

3. சர்வஞ்ஞமாயுமிருக்கிற

ரிக்வேதாதிகள் புருஷனுடைய மூச்சுக்காற்றுப்போல் பிரயத்தின மன்றியிலேயே விளையாட்டுப்போல் உண்டாகின்றன, அந்த பூதம்

1. சகலத்தைவிட சர்வஞ்ஞம் என்றும்
2. சர்வசக்தியுள்ளதென்றும்

சொல்லவேண்டியதென்ன

[இதனாலும் பிரம்மத்தின் சர்வஞ்ஞத்தன்மை அநுமானிக்கப்பட்டிருக்கிறது] (13)

6. பிரயோஜனம்:—

(1) பூர்வபக்ஷத்தின்பலன்:—

ரா:—முந்தின அதிகரணத்தால் ஜகத்காரணமாக சித்தித்த பிரம்மம் வேதகர்த்தாவாக இராத பக்ஷத்தில் (எப்படி பிரதானாதிகள் ஜகத்காரணமோ அப்படி பிரம்மமும் ஜகத்காரணம், ஆகையால் பிரம்மம் அசேதனம் சர்வஞ்ஞமன்று என்று முடியும்.

வேதகர்த்தாவாகாவிட்டால் சர்வபிரபஞ்ச கர்த்திருத்வம் சித்திக்கமாட்டாது.

(2) சித்தாந்தத்தின் பலன்:—பிரம்மம் வேதகர்த்தாவாகையால் சேதனம் என்று சித்திக்கிறது. வேதகர்த்தாவானதால் சகல பிரபஞ்சகர்த்திருத்வமும் சித்திக்கிறது. ஆகையால் சர்வஞ்ஞத்தன்மையும் சித்திக்கிறது. (14)

முதல்வர்ணகம் முற்றிற்று.

## VI. இரண்டாவது வர்ணகம்.

[த:—அ—கை:— இவ்விதமாக முதல் வர்ணகத்தில் ஈசுவரன் சாஸ்திரகர்த்தாவென்பதாய் வியாக்கியானம் செய்து, சாஸ்திரத்தாலேயே ஈசுவரன் அறியக்கூடிய வர் என்பதாய் இந்த சூத்திரத்துக்கு இந்த வர்ணகத்தில் வியாக்கியானம் செய்கிறார்] (15)

2. சங்கதி முந்தின அதிகரணத்துக்கும் இந்த வர்ணகத்துக்கும் (சம்பந்தம்):—

[ரா:-முந்தின அதிகரணத்தில் பிரம்மத்தின் லக்ஷணம் நிச்சயிக்கப்பட்டது

இந்த அதிகரணத்தில் பிரம்மத்துக்கு வேதம் பிரமாணம் என்று கூறப்படுகிறது

ஆக இரண்டு அதிகரணங்களும் பிரம்மத்தையே நிர்ணயம் செய்வதால் ஒரே பலத்துடன் கூடியிருப்பது சங்கதி] (16)

3. விஷயவாக்கியம்:—

तत्वौपनिषदं पुरुषं पृच्छामि (बृह III-9-26)

[व्या:—இந்த வாக்கியம் சாகல்லியனுக்கு யாஞ்ஞவல்கியரால் சொல்லப்பட்டது. இதில் பரபிரம்மமாகிற புருஷன் உபநிஷத்தால் அறியத்தக்கவன் என்று தெரியவருகிறது] (17)

4. ஐ (1) சம்சயம்:—இந்த சுருதியானது

1. பிரம்மம் வேதத்தால்மட்டும் அறியக்கூடியது என்று சொல்லுகிறதா? அல்லது

2. பிரத்தியக்ஷாதி பிரமாணங்களாலேயும் அறியக்கூடியது என்று சொல்லுகிறதா

என்பது சந்தேகம்

(2) சம்சயபீஜம்:—பூர்வோத்தர பக்ஷங்களின் யுக்திகளே (18)

5. [த:—பூர்வபக்ஷம்:—பிரம்மம்

1. ஜகத்காரணமென்றும்

2. சர்வஞ்ஞன் என்றும்

3. சர்வ சக்தியுள்ளதென்றும்

நிரூபிக்க சாஸ்திரம் வேண்டியதில்லை. காரியத்தால் காரணம் சித்திக்கிறதினால் ஜகத் காரியத்தைக் கொண்டு காரணமான பிரம்மத்தை அறியலாம். ஜகத் காரணமாக இருக்குகையாலேயே சர்வஞ்ஞத்வாதிகளையும் அறியலாம்] (19)

6. (1) [த:—சித்தாந்தம்:—இந்த பூர்வபக்ஷம் சரியன்று. ஏனெனின்

(a) ரூபசாதிகளற்றதாகையால் பிரம்மம் இந்திரியத்துக்கு விஷயமல்ல

(b) காரியத்தால் காரணமிருக்கிறதென்று மட்டும் ஊஹிக்கலாமேதவிர அந்த காரணம் பிரம்மம் என்று பூர்வபக்ஷி சொல்லுவதற்கு ஹேதுவில்லை

(c) பிரம்மம்போல் வேறு ஒருவஸ்து இருந்தால் சாதிர்சயத்தினால் பிரம்மத்தை அறியலாம். அப்படி வேறு வஸ்துவில்லாததாலும், சாதிர்சயமுமில்லை, அறியவும் முடியாது. ஆகையால் नावेदविन्मनुते तं बृहन्तं என்கிற சுருதிப்படி வேதத்தை அறியாதவன் பிரம்மத்தை அறியமுடியாதபடியால் பிரம்மம் வேதத்தாலேயே அறியத்தக்கது] (20)

(2) சூத்திரார்த்தம்:—

(a) பதவுரை

शास्त्रयोनित्वात्=शास्त्रं+योनिः+यस्य+तत् = शास्त्रयोनिः+तस्य भावो=शास्त्रयोनित्वं+तस्मात्=शास्त्रयोनित्वात्

ஆகையால் பிரம்மத்துக்கு சாஸ்திரம் காரணம் அதாவது பிரமாணமாயிருப்பதால் என்று அர்த்தம் (21)

(b) பொழிப்புரை.

ஐ பிரம்மம் சாஸ்திரத்தாலேயே அறியக்கூடியதாகையால் சாஸ்திரத்தைப் பிரமாணமாயுடையது (22)

(3) பாஷ்யம்.

(1) முன் சொல்லப்பட்ட ரிக்வேதாதி சாஸ்திரமானது இந்தப் பிரம்மத்தை உள்ளபடி அறிய காரணம் அதாவது பிரமாணமாயிருக்கிறது. சாஸ்திரமாகிற பிரமாணத்தாலேயே ஜகத்தின் ஜன்மாதிகாரணமான பிரம்மம் அறியப்படுகிறது என்பது கருத்து

அந்த சாஸ்திரம் எதுவெனின் அது முன் சூத்திரத்தில்

यतोवा इमानि भूतानि जायन्ते

என்பதாய் கூறப்பட்டிருக்கிறது (23)

(2) 2-வது 3-வது சூத்திரங்களின் வித்தியா சம்:—(இந்த சூத்திரத்தின் பிரயோசனம்):—முந்தின

சூத்திரத்திலேயே இப்படிப்பட்ட சாஸ்திரத்தை உதாகரித்த சூத்திரக்காரரால் பிரம்மமானது சாஸ்திரத்தால் அறியக்கூடியது என்று காட்டப்பட்டிருக்க

இந்தசூத்திரம் என்னத்திற்காக வெனின்

முன்சூத்திரத்தின் பதங்களால் ஸ்பஷ்டமாய் சாஸ்திரம் கூறப்படாமையால், ஜகத்தின் ஜன்மாதிகளைக்கொண்டு காரணத்தை அநுமானிக்கலாம் என்று சங்கை வரக்கூடும். அந்தச்சங்கையை நிவிர்த்திக்கும் பொருட்டு இந்த சூத்திரத்தைச் செய்தார்

[த்ர:—ஜன்மாதி சூத்திரபாஷ்யத்தில் சுருதிகளும் அநுபவம் முதலியவைகளும் பிரமாணம் என்று பாஷ்யக்காரர் சொல்லியிருக்க இந்த இடத்தில் அவர் வேதமே பிரமாணமென்று எப்படி சொல்லலாமெனின்:—

முதலில் சுருதியினாலேயே பிரம்மத்தை அறிய வேண்டியது. அப்படி அறிந்த அறிவை திடப்படுத்தும்பொருட்டு அநுமான அநுபவங்களை அங்கீகரிக்கவேண்டியது. ஆகையால் வேதமே பிரமாணம் என்பதில் விரோதமில்லை. (24)

7. பூர்வபக்ஷபலன்:-வேதத்தைத்தவிர இதர பிரமாணங்களால் பிரம்மத்தை அறியமுடியுமாகையால் வேதார்த்தத்தை விசாரிக்கவேண்டியதில்லை. அநுமானாதிகளையே விசாரிக்கவேண்டும்.

(8) சித்தாந்தபலன்:—வேதத்தாலேயே அறிய வேண்டியதாகையால் அதையே விசாரிக்கவேண்டியது. (25)

## VII. வியாஸாதிகரணமாலைப்படி

அத்வைதச்சுருக்கம்.

முதலாவதுவர்ணகம்:—

(1) नकर्तृ ब्रह्मवेदस्य<br>
किं वा कर्तृ, नकर्तृ तत् ।<br>
विरूप नित्यया वाचेत् ।<br>
एवं नित्यत्वदर्शनात्

(2) कर्तृ निःश्वसितायुक्तेः ।<br>
मित्यत्वं पूर्वसाम्यतः ।<br>
सर्वावभासि वेदस्य ।<br>
कर्तृत्वात्सर्वविद्भवेत् (26)

2. अस्यमहतोभूतस्य

என்னும் ப்ரு II-4-10-வது வாக்கியம் விஷயம். ரிக்வேதாதிகள் நித்திய சித்தமான பிரம்மத்தினின்றும் சுவாசம்போல் பிரயத்தினமன்றியில் சித்திக்கின்றன என்பது அர்த்தம். (27)

3. பிரம்மம் வேதத்தை

1. செய்கிறதா?

2. இல்லையா?

என்பது சந்தேகம். (28)

4. பூர்வபக்ஷம்:—செய்யவில்லை. ஏனெனின் வேதம் நித்தியம்.

(1) वाचा विरूप नित्यया

என்கிற மந்திரத்தால் விரூப என்பதாய் தேவதையை உத்தேசித்து "நித்தியமான வசனத்தினால் ஸ்துதி செய்யும்படி பிரேரணைசெய்யும்" என்பதாய் பிரார்த்தனை ஏற்பட்டிருக்கிறது.

(2) வேதம் நித்தியம் என்பது

अनादिनिधना नित्या वागुत्सृष्टा स्वयंभुवा ।<br>
आदौ वेदमयी दिव्या यतः सर्वाः प्रवृत्तयः ॥

என்கிற ஸ்மிருதியாலும் தெரியவருகிறது. ஆகையால் வேதகர்த்தா பிரம்மமல்ல. (29)

5. சித்தாந்தம்:—

பிரம்மம் வேதத்திற்குக் கர்த்தாவாக இருக்கக்கூடும். ஏனெனின்

(1) ஸ்வாசம்போல் பிரயத்தினமன்றியில் வேதமுண்டானதாகத் தெரியவருகிறது.

तस्माद्यज्ञात्सर्वहुत ऋचः सामानि जज्ञिरे

என்கிறதில் யஞ்ஞசப்தத்தால் கூறப்பட்ட பிரம்மத்தினின்றும் வேதமுண்டானதாக ஸ்பஷ்டமாகச் சொல்லியிருக்கிறது.

(3) பிரயத்தினமன்றியில் என்றுசொல்லியிருப்பதால் காளிதாசாதிகளுடைய வாக்குப்போல் அன்று. ஆகையால் வேதம் அபௌருஷேயம்.

(4) ஒவ்வொரு சிருஷ்டியிலும் முன்போலவே யிருப்பதால் பிரவாஹரூபமாய் வேதம் நித்தியம்.

இப்படிகர்த்தாவாகையால் பிரம்மம் சர்வஞ்ஞும் என்றும் சித்திக்கிறது. (30)

இரண்டாவதுவர்ணகம்.

(1) अस्त्यन्यमेयताऽप्यस्य ।
किंवा वेदैकमेयता ।
घटवात्सिद्धवस्तुत्वात्
ब्रह्मान्येनापि मीयते

(2) रूपलिङ्गादिराहित्यात् ।
नास्य मान्तरयोग्यता ।
तं त्वौपनिषदेत्यादौ ।
प्रोक्ता वेदैकमेयता (31)

2 तं त्वौपनिषदं पुरुषं पृच्छामि

என்கிற बृ III-9-26-வது வாக்கியம் விஷயம் (32)

3. பிரம்மம் பிரத்தியக்ஷாதிகளால்

1. அறியத்தக்கதா? அல்லது

2. அறியத்தகாததா?

என்பது சந்தேகம். (33)

4. பூர்வபக்ஷம்:—ஸ்பஷ்டம் (34)

5. சித்தாந்தம்:—

(1) பிரம்மம்

(a) ரூபரஸாதிகளற்றதால் இந்திரியவிஷயமன்று.

(b) இதைப்போல் அது என்று சொல்லுவதற்கு சதிர்சமான லிங்கமிராதபடியால் அனுமான உபமானங்களுக்கு விஷயமன்று.

(2) (a) उपानषस्ववाधिगतः

என்று சொல்லியிருப்பதாலும்

(b) नावेदविन्मनुते तंबहृभं

என்கிற நிஷேதசுருதியாலும் பிரம்மம் வேதத்தாலயே அறியத்தக்கது என்று ஏற்படுகிறது. (35)

## VIII. I-1-3-வது அதிகரணத்துக்கு

### விசிஷ்டாத்வைதசுருக்கம்.

1. இதின் விஷயவாக்கியம்:—முன்சொன்ன यतोवाइमानि भूतानि என்ற தைத்திரிய வாக்கியமே. (36)

2. சந்தேகம்:—இது ஜகத்காரணமான பிரம்ம விஷயத்தில்

(1) பிரமாணமா?

(2) பிரமாணமன்று?

என்பது சந்தேகம் (37)

3. பூர்வபக்ஷம்:—இது பிரமாணமன்று. ஏனெனின் அனுமானத்தால் சித்தமாகிற பிரம்மம் சாஸ்திர பிரமாணத்துக்கு விஷயமாகமாட்டாது. இதர பிரமாணத்தால் அறியக்கூடாதது தான் சாஸ்திரபிரமாணத்தால் அறியக்கூடும். ஜகத்தானது சாவயவமாயிருப்பதால் காரியம். காரியத்தால் காரணமான கர்த்தா ஒருவன் இருக்கவேண்டும் என்று ஏற்படுகிறது. அவன் சர்வஞ்ஞத்வாதி குணங்களுடனும் கூடி இருக்கவேண்டும். இப்படி ஜகத்கர்த்தாவை அனுமானிக்கும்படி இருப்பதால் சாஸ்திரத்தால் ஆகவேண்டிய தொன்றுமில்லே. ஆகையால் சாஸ்திரம் பிரமாணமன்று (38)

4. சித்தாந்தம்:—

ஜகத்காரியந்தான். ஆகையால்கர்த்தாவை ஊஹிக்கலாம். ஆனால் அந்த கர்த்தா ஒருவன் என்றாவது அநேகர்கள் என்றாவது நிச்சயமாகமாட்டாது. ஆகையால் சாஸ்திரத்தால்தான் நிச்சயம் ஏற்படவேண்டும். சாஸ்திரமோ பிரம்மம் ஜகத்காரணமென்று சொல்லுகிறது

ஆகையால் தைத்திரீயசுருதியானது ஜகத்காரணமான பிரம்ம விஷயத்தில் பிரமாணம் (39)

5. சூத்திரார்த்தம்

சாஸ்திரம்+யோனி :=காரணம் எதற்கோ அதாவது பிரமாணமோ அந்த பிரம்மம் சாஸ்திரயோனிः- பிரம்மம் இதர பிரமாணத்துக்கு விஷயமாகாததாலும் சாஸ்திரத்தால்மட்டும் பிரமாணம் ஏற்படுமாதலாலும் यतोवाइमानि என்கிற வாக்கியம் பிரமாணம் (40)

## IX. I. 1-3-வது அதிகரணத்துக்கு

### துவைத சுருக்கம்.

1. சங்கதிः—அதிவியாப்திநிரஸனம். அதாவது முன் சொன்ன லக்ஷணம் ருத்திரன் முதலானவர்களிடத்திலும் பொருந்துமாவென்று சந்தேகம் வரக்கூ

டும். அதை நிவர்த்திக்கும்பொருட்டு இந்த சூத்திரம் ப்ரவிருத்தித்திருக்கிறது. (41)

2. விஷயம்:—ஜகத்காரணத்வம் (42)

3. சந்தேகம்:—இது (1) விஷ்ணுவினிடமிருக்கிறதா? அல்லது

(2) மற்ற தேவதைகளிடத்திலுமிருக்கிறதா? (43)

4:—பூர்வபக்ஷம்:—மற்ற இடங்களிலும் இருக்கலாம். ஒருகாரியத்தை உத்தேசித்து காரணம் அநுமானிக்கப்படுகிறது. ஆகையால் ஜகத்துக்கு கர்த்தா இருக்கவேண்டும். பாசுபததந்திரத்தில் சிவனே ஜகத்கர்த்தாவாகச் சொல்லியிருக்கிறது. ஆகையால் ஜகத்கர்த்ருத்வம் ருத்திரன் முதலானவர்களிடத்திலுமிருக்கலாம். (44)

சித்தாந்தம்:—பாசுபத தந்திரங்கள் புருஷனால் செய்யப்பட்டவை. வேதம் அபௌருஷேயம். வேதத்தில் விஷ்ணு ஜகத்காரணமென்று சொல்லியிருக்கிறது. ஆகையால் விஷ்ணுவே ஜகத்காரணம் ஆகையால் அதிவியாப்தி தோஷமில்லை (45)

6. சூத்திரார்த்தம்:—

शास्त्रयोनित्वात् :—ஜகத்தின் கர்த்தா பிரம்மம் என்பது ரிக்வேதம் முதலிய சாஸ்திரத்தால் தெரியவருகிறது (46)

7. பூர்வபக்ஷபலன்:—சர்வஜகத்தின் ஜன்மாதிகளுக்குக் காரணம் என்பது லக்ஷணம் என்று சொல்லுவது சில நித்தியபதார்த்தங்களால் பொருந்தமாட்டாது. கர்த்தர்கள் சிலர் என்று சொன்னால் அதிவியாப்தி தோஷம்வரும். ஆகையால் முன் சொன்ன லக்ஷணம் சரியன்று.

சித்தாந்தபலன்:-விஷ்ணுவே ஜகத்காரணம் ஆகையால் லக்ஷணம் பொருந்தும். அதிவியாப்தி தோஷமில்லை (47)

மூன்றாவது அதிகரணம் முற்றிற்று.

---

## I. 1-4-வது அதிகரணத்தின்

### விஷயானுக்கிரமணிகை.

---

## I-1-4-வது அதிகரணம்.

I. இதின் பெயர் :—சமன்வயாதிகரண மென்பதாம். (1)

II. இதின் கருத்து:—

1. வேதாந்தங்கள் பிரம்மத்தை போதிக்கின்றன வென்பதாம்.

2. வேதாந்தங்கள் உபாசனைக்கு அங்கமாகாத ஸ்வதந்திரமான பிரம்மத்திலேயே தாற்பரியப்படுகின்றன வென்பதாம். (2)

III. இதிலடங்கிய சூத்திரம் ஒன்றுதான் (3)

IV. இதின் விஷயவாக்கியம்:—

सदेवसोम्येदमग्रआसीत् (சா VI-2-1)

முதலிய வேதாந்த வாக்கியங்கள். (4)

V. [ஏ:—சங்கதி:—

1. முதல்மூன்று அதிகரணங்களுக்கும் இதற்கும்:—

(1) முதலாவது அதிகரணத்தில் பிரம்மம் விசாரிக்கத்தக்கதென்றும்,

(2) இரண்டாவது அதிகரணத்தில் பிரம்மத்தின் லக்ஷணமும்,

(3) மூன்றாவது அதிகரணத்தின் இரண்டாவது வர்ணகத்தில் பிரம்மம் சாஸ்திர பிரமாணத்தால் அறியத்தக்கது என்றும்,

சொல்லப்பட்டது.

ஆகவேவேதாந்தங்கள் பிரம்மப்பிரதிபாதகங்கள் என்று முடிந்தது.

இதை பூர்வபக்ஷி ஆக்ஷேபிக்கிறபடியால் ஆக்ஷேபசங்கதி ஏற்படுகிறது.

2. இதரசங்கதிகள்:—

ஆ:—सदेवसोम्य

முதலிய வேதாந்தவாக்கியங்களில் பிரம்மம், சர்வாத்மா என்பது முதலிய ஸ்பஷ்ட பிரம்மலிங்கங்கள் காணப்படுகின்றன. ஆகையால் அவைகள் பிரம்மத்திலேயே தாற்பரியப்படுவதால் சுருதிமுதலிய சங்கதிகள் முன்போலவே சித்திக்கின்றன.] (5)

VI. இதிலடங்கிய வர்ணகங்கள்-இரண்டு. இவைகள் கருத்து பிரிவில் கொடுப்பட்டவைகளே. (6)

VII. முதலாவது வர்ணகம்:—(7—29)

1. (a) சந்தேகம்:—

[ரா:—வேதாந்தங்கள்

(1) சுத்தப்பிரம்மத்தைப் பிரதிபாதிக்கின்றனவா? அல்லது,

(2) கர்மம் முதலியவைப் பிரதிபாதிக்கின்றனவா?

என்பது சந்தேகம்.

(b) சந்தேகபீஜம்:—

1. வேதாந்தங்கள் முன்சொன்ன பிரம்மவிஷயத்தில்

(1) பிரமாணமாயிருந்தால் பிரயோஜனம்உண்டு

(2) பிரமாணமாயிராவிடின் பிரயோஜனமில்லை.

இந்தபிரயோஜனங்களின் பாவ அபாவங்களால் சந்தேகம்.

அல்லது:—

2. ரூபாதிகளற்ற பிரம்மத்தை போதிக்கிற வாக்கியம் கர்மபிரதிபாதக வாக்கியத்தை

(1) அபேக்ஷிக்கிறது என்று சிலரும்

(2) அபேக்ஷிக்கவில்லை என்று சிலரும் சொல்லுவதால் சந்தேகம். (7)

2. பூர்வபக்ஷம்:—

A. சாஸ்திரத்தில் பிரதிபாதிக்கப்பட்ட விஷயம்

(1) பிரம்மத்துக்குச் சாஸ்திரம் பிரமாணம் என்று எப்படிச் சொல்லலாம்.

ஜைமினி ரிஷியானவர்:—

आम्नायस्य क्रियार्थत्वादा-

नर्थक्यमतदर्थानाम् तस्मादनित्यमुच्यते

அதாவது:—வேதத்துக்கு கிரியையில் கருத்திருப்பதால் கிரியைக்கூறாத வேதவாக்கியங்கள் பிரயோஜனமற்றவை. ஆகையால் அவைகள் அப்பிரமாணங்கள்

என்னும் சூத்திரம் (I-2-1) ஏற்படுத்திருக்கிறார். இந்த சூத்திரத்தால் வேதமானது கிரியாபரம் என்று தெரியவருகிறது. வேதாந்தங்கள் கிரியையை போதிக்காதபடியால் நிஷ்பிரயோஜனங்கள்,

ரா:—(ஆகையால் அப்பிரமாணங்கள்) (8)

ரா:—(a) அத்தியயனம் செய்யவேண்டும் என்ற விதியினாலேயே வேதாந்தங்களும் அத்தியயனம் செய்யத்தக்கவை என்று ஏற்பட்டுப்போகிறபடியால் அவைகள் நிஷ்பிரயோஜனங்கள் என்றுசொல்லுவது யுக்தமன்று என்றுசொல்லும்பக்ஷத்தில் அப்போது]

1. கர்த்தா

2. தேவதை

முதலியவைகளை பிரகாசிப்பிக்கிறது மூலமாக அவைகள் கிரியா விதிக்கு அங்கமாக ஒப்புக்கொள்ளுகிறோம். அல்லது (9)

ரா:—(b) கர்மத்தையே கூறாத வேதாந்தம் எப்படி கர்மத்துக்கு அங்கமாகும் என்று கேட்கும்பக்ஷத்தில்.

வேதாந்தம் உபாசனை சிரவணம் மனனம் முதலிய வேறு கிரியை விதிக்கிறதாகச் சொல்லுகிறோம். (மோக்ஷ இச்சையுள்ளவன் தன்னைவிட வேறான பிரம்மத்தை தானாக நினைத்து அஹம் ப்ரஹ்மாஸ்மி நான் பிரம்மம் என்று உபாசிக்கட்டும் என்பதாய் உபாசனாவிதியை அறிவோம். (10)

B. சாஸ்திரத்தில் பிரதிபாத்தியமாயிராதவிஷயம்.

ரா:—(a) [ஸ்பஷ்டமாய்த் தெரியவருகிற பிரம்மத்தை விட்டுவிட்டுச் சொல்லாத உபாசனை முதலியவைகளை ஏன் கிரக்கவேண்டுமெனின்]

சித்தவஸ்துவானது பிரத்தியக்ஷாதிகளுக்கு விஷயமானதால், அப்படிப்பட்ட சித்தவஸ்துவை வேதம் பிரதிபாதிக்கமாட்டாது

ரா [அப்படிப் பிரதிபாதித்தால் "அக்கினியானது குளிரைப்போக்குகிறது" என்பது எப்படி பிரத்தியக்ஷமாயிருக்கிறதோ, அதைக்கூறும் வாக்கியம் அனுவாதரூபமாக இருக்கிறதேதவிர பிரமாணமாக இல்லையோ, அப்படி வேதாந்தமும் சித்தவஸ்துவைப் பிரதிபாதித்தால் அப்பிரமாணமாகும், தெரியாதவிஷயத்தை வேதம் சொல்லவேண்டியதே ஒழிய தெரிந்த விஷயத்தைச் சொல்லுவதில் பிரமாணமாகமாட்டாது. எப்படி சித்தமான கடமானது வேதார்த்தமன்றோ அப்படி பிரமாணாந்தரத்துக்கு விஷயமான பிரம்மமும் வேதார்த்தமல்ல] 11

(b) மேலும் எடுத்துக் கொள்ளும்படியாயும் தள்ளும்படியாயும் இராத பிரம்மத்தைப் பிரதிபாதிக்கிறதில் பலனுமில்லை

[ரா ஏனெனின் பலன் என்றால்

1. சுகப்பிராப்தி

2. துக்கநிவிர்த்தி

1. சுகத்தைக் கொடுக்கும் காரியத்தைச் செய்வதால் சுகப்பிராப்தியும்

2. துக்கத்தைத்தரும் காரியத்தைச் செய்யாததால் துக்கநிவிர்த்தியும்

சித்திக்குமேதவிர, சித்தவஸ்துவான பிரம்மத்தை அறிந்தமாத்திரத்தில் சித்திக்கமாட்டாது (12)

(c) இப்படி சித்தவஸ்துஞானத்தால் பலன் சித்திக்காதபடியால்

1. सोऽरोदीत् முதலியவாக்கியங்களுக்கு நிஷ்பிரயோஜனத்வம் ஏற்படக்கூடாதென்னும் கருத்துடன் அவைகள் விதி வாக்கியங்களுடன் சேர்க்கப்பட்டு அவைகளின் ஸ்துதிபரமாக பாவிக்கப்பட்டிருக்கின்றன

2. அப்படியே इषेत्वा முதலிய மந்திரங்களும் கர்மம், அவைகளின் சாதனங்கள் இவைகளைச் சொல்லுவதினால் கர்மசம்பந்த மடைந்திருக்கின்றன [13]

C. வேதாந்தம் விதிக்கு அங்கம்

रा:—(கர்ம பிரகரணத்திலிருக்கிற வாக்கியங்கள் விதிவாக்கியங்களுடன் சேர்ந்தவைகளாக இருக்கட்டும். வேதாந்தவாக்கியங்கள் சித்தவஸ்துவான பிரம்மவிஷயத்தில் ஏன் பிரமாணமாக இருக்கக்கூடாதெனின்)

வேதவாக்கியங்கள் விதிசம்பந்தமன்றியில் பிரயோஜன முள்ளனவகளாக எவ்விடத்திலும் காணப்படவுமில்லை, நிரூபிக்கவுமுடியாது. விதியானது கிரியையை விஷயீகரிக்கிறபடியால் பிரத்தியக்ஷமாய்த் தெரியவருகிற சித்தவஸ்துவினிடத்தில் விதி சம்பவிக்கமாட்டாது:

ஆகையால் கர்மத்துக்குவேண்டிய கர்த்தா தேவதை, முதலியவைகளின் ஸ்வரூபங்களை விளக்குதல் மூலமாக வேதாந்தங்கள் கர்மவிதிக்கு அங்கமாகின்றன.

பிரகரணமே வேறானதால் (பிரம்மபரமானதால்) பிரம்மம் கர்மவிதிக்கு அங்கமாகச் சொல்லக்கூடாதென்றாலும்,

அதிற் சொல்லிய உபாசனைமுதலிய கர்மத்தை வேதாந்தம் போதிக்கிறதாகச் சொல்லுகிறோம். (14)

D. தீர்மானம்:—

ஆகையால் பிரம்மம் வேதாந்த சாஸ்திரத்தால் அறியத்தக்கது என்று சொல்லக்கூடாது (15)

3. சித்தாந்தம் இப்படி பூர்வபக்ஷி சொல்ல சித்தாந்தத்தை

## १ ॥ तत्तु समन्वयात् ॥ ४ ॥

என்கிற சூத்திரத்தில் சூத்திரகாரர் கூறுகிறார் 16

(2) பதவுரை.

तु ஆனால்

तत् அந்த பிரம்மம்

(वेदान्तशास्त्रात् एव வேதாந்த சாஸ்திரத்தினலேயே अवगम्यते அறியப்படுகிறது)

(कथं எப்படியெனின்)

समन्वयात् சேர்ந்திருப்பதால் (17)

(3) பொழிப்புரை.

இந்த பிரம்மமானது வேதாந்த வாக்கியத்தாலேயே அறியப்படுகிறது. ஏனெனின் பிரம்மம் வேதாந்தவாக்கியங்களுடன் அவைகளின் தாற்பரியமாக சம்பந்தப்பட்டிருக்கிறது (18)

(4 பாஷ்யம். (19—28)

(a) तु:—இந்த சப்தமானது பூர்வபக்ஷத்தை நிராகரிக்கிறது (19)

(b) तत्

1. சர்வசக்தியுள்ளதாயும்

2. ஜகத்தின் உற்பத்திஸ்திதி லயங்களுக்குக் காரணமாயுமிருக்கிற

பிரம்மமானது வேதாந்தவாக்கியத்தாலேயேஅறியப்படுகிறது. அதற்குக் காரணமென்னவெனின்(20

(c) समन्वयात्:—

(1) சகல வேதாந்தங்களிலுமுள்ள வாக்கியங்கள் தாற்பரியத்தாலேயே பிரம்மத்தை பிரதிபாதிக்கின்றன

रा [வேதாந்தவாக்கியங்களின் தாற்பரியம் ஷட்விதலிங்கங்களால் பிரம்மபரம் என்று ஏற்படுகிறது, இதை அடியிற்கண்ட சுதிருக்ளால் நிரூபிக்கிறார்]

(1) सदेवसोम्येदमग्र आसीत् एकमेवाद्वितीयम्

(छा VI-2-1)

இதை அடியிற்கண்ட சுருதி வாக்கியங்களின் தாற்பரியம் ஷட்வித லிங்கங்களால் பிரம்மபரமென்று ஏற்படுகிறது

(இது வேதவாக்கியம்) ஓ பிரிய தர்சனமுள்ளவனே! இந்த சமஸ்த ஜகத்தும் உற்பத்திக்கு முன் சத்ரூபமான பிரம்மமாகவேயிருந்தது. அந்த பிரம்மம் ஒன்றாகவேயிருந்தது.

[ரா:—இது உபக்கிரமலிங்கம்]

रा:—ऐतदात्म्यमिदं सर्वं (छा VI-8-7)

இது எல்லாம் இந்த ஆத்மஸ்வரூபம்

இது உபசம்ஹாரம்

இவ்விரண்டும் சேர்ந்து ஒரு லிங்கமாக ஏற்படுறது. இரண்டுக்கும் விஷயம் ஒன்றானதால் லிங்கமும் ஒன்றாயிற்று]

रा:—तत्त्वमसि (छा VI-8-7)

நீ அதாக இருக்கிறாய்

என்று ஒன்பதுதடவை சொல்லியிருப்பதால் அப்பியாசலிங்கம் ஏற்படுகிறது]

रा:—अत्र वाव किल सत् सौम्य ननिभालयसे

என்கிற வாக்கியத்தினால் இந்த சரீரத்தில் இருக்கிற பிரத்தியக் பிரம்மத்தை நீ அறியமாட்டாய் என்று சொன்னதினால், ரூபாதிகளற்ற அத்விதீய பிரம்மம் இதர பிரமாணங்களால் அறியப்படமாட்டாது என்று தெரியவருகிறது. இதனால் அபூர்வதையென்னும் லிங்கம் சித்தித்தது.]

रा:—तस्य तावेदवचिरं यावन्न नाविमोक्ष्ये अथसम्पत्स्ये (छा VI-14-2)

அதாவது:—எதுவரையில் தேகம் விடுபடவில்லையோ அதுவரையில்தான் தாமஸம். தேகம் விழுந்தவுடன் ஞானீ விதேக கைவல்லியத்தை அனுபவிக்கிறான். இதில் பிரம்மஞானத்தால் வித்வானுக்கு பலன் கூறப்பட்டது. இது பலன் என்னும் லிங்கம்]

रा:—अनेन जीवेनात्मनानुप्रविश्य

என்று ஜீவரூபத்தால் பரமாத்மா பிரவேசித்ததாகச் சொல்லியிருப்பதால் பிரசம்சை என்னும் அர்த்தவாத லிங்கம் ஏற்படுகிறது.]

[यथा सोम्यै केन मृत्पिंडेन सर्वं मृण्मयं विज्ञातं स्यात् (छा VI-1-1)

அதாவது ஒரு மிருத்பாண்டத்தை அறிவதினால் சகல பாண்டங்களும் மிருத்ரூபமாயிருக்கிறது என்பதாய் அறியப்படுகிறது

என்று சொல்லியிருக்கிறது. இந்த திருஷ்டாந்தம் உபபத்தி என்னும் லிங்கத்தைக் கூறுகிறது]

[ரா இவ்விதமாக ஆறுவித லிங்கங்களால் சுருதி வாக்கியங்களின் தாற்பரியம் பிரம்மம் என்றே தெரிய வருகிறது]

(2) [ரா:—இப்படி ஒவ்வொரு உபநிஷத்திலும் காணப்படுகிறது. எப்படியெனின் ஐதரேயத்தில்]

आत्मावा इदमेक एवाग्र आसीत् என்கிற (ऐत II-1-1) ரிக்வேத வாக்கியத்தில் சிருஷ்டிக்குமுன் இந்த ஜகத்து ஆத்மாவாகவே இருந்தது என்று சொல்லியிருப்பதில் உபக்கிரமலிங்கம் காணப்படுகிறது

(3) பிரஹதாரணியகத்தில்

तदेतद्ब्रह्मापूर्वमनपरमनन्तरमबाह्यं अयमात्माब्रह्म-सर्वानुभूः (II-5-19)

அதாவது.—இந்த பிரம்மம் காரணமற்றதாயும் காரியமற்றதாயும், ஜாத்தியந்தர மற்றதாயும், அத்விதீயமாயுமிருக்கிறது. இதுவே சின்மாத்திரம் என்று சொல்லிய சுக்லயஜுர் வேதவாக்கிய உபசம்ஹாரம்

(4) முண்டகோபநிஷத்தால்

ब्रह्मैवेदममृतं पुरस्तात् (II-2-11)

[ரா:—அதாவது முன்னிருக்கிறவஸ்து அவித்வானுக்கு பிரம்மமல்லவென்பதுபோலும் வித்வானுக்கு பிரம்மமாகவும் விளங்குகிறது. இது அதர்வணவேத வாக்கியம்] சாந்தோக்கியத்தில் एकमेवाद्वितीयम् (VI 2-1) என்றுசொல்லியிருக்கிறது.

இவைமுதலிய வாக்கியங்களிலும் இப்படியே அறியவும் (21)

(2) 8-ல் ஆக்ஷேபத்துக்கு உத்தரம்:— வேதாந்தங்களுடைய தாற்பரியத்துக்கு பிரம்மம் விஷயமாயிருந்தாலும் காரியத்தையும் வேதாந்தம் கூறட்டுமேயெனின்

வேதாந்தங்களின் வாக்கியங்கள் பிரம்மத்தில் தாற்பரியப்படுகின்றன என்று நிச்சயித்ததின்பேரில் வேறு அர்த்தத்தைக்கூறுவது அயுக்தம். ஏனெனின்

(1) சொன்னதை விடும்படிக்கும்

(2) சொல்லாததை சேர்த்துக்கொள்ளும்படிக்கும்

சம்பவிக்கும் (22)

9-ல் ஆக்ஷேபத்துக்கு உத்தரம்.

(3) तत केन कं पश्येत् (बृह II-4-1)

என்கிற கருதியால் வித்தை (ஞானம்) சித்தித்த காலத்தில் கர்த்தா, காரகம், பலன் இவைகள் இல்லாமற் போகின்றன. ஆகையால் வேதாந்த வாக்கியங்கள் கர்த்தா முதலியவைகளைப் பிரதிபாதிப்பதில் முடிவுபெறுகிறதாகச் சொல்லக்கூடாது. (23)

11-ல் ஆக்ஷேபத்துக்கு உத்தரம்.

(4) [रा:—(பிரம்மம் சித்தவஸ்துவானதால் பிரமாணாந்தரங்களால் தெரியக்கூடியதே தவிர வேதத்தால் தெரியவேண்டியதில்லையே என்று செய்யும் ஆக்ஷேபத்துக்கு சமாதானம் என்னவெனின்) பிரம்மத்தின் ஸ்வரூபம் சித்தமாயிருந்தபோதிலும்

तत्वमसि (छा VI-8-7)

என்னும் மஹாவாக்கியமன்றியில் ஜீவப்பிரம்ம ஐக்கியத்தை அறியமுடியாதபடியால் பிரம்மம் பிரத்தியக்ஷாதிகளுக்கு விஷயமாகமாட்டாது. (24)

12-ல் ஆக்ஷேபத்துக்கு உத்தரம்.

(5) பிரம்மம் தள்ளக்கூடியதாயும் ஸ்வீகரிக்கக் கூடியதாயுமிராதபடியால் அதைப்பற்றிய உபதேசம் வியர்த்தமென்று சொன்னது சரியன்று. இப்படிப்பட்ட பிரம்மமே ஆத்மாவென்று அறிவதினாலேயே சகலதுக்கங்களும் நிவிர்த்தியாகுமாகையால் புருஷார்த்தம் (பிரயோஜனம்) சித்திக்கிறது. (25)

10உம் 13உம் ஆக்ஷேபத்துக்கு உத்தரம்.

(6) (a) [रा:—(வேதாந்தங்கள் உபாசனபரம் என்று சொன்ன விஷயத்தில்

(1) பிராணாக்கினி முதலியவைகளைப் பிரதிபாதிக்கும் வாக்கியங்கள் உபாசனபரமா? அல்லது

(2) சகலவாக்கியங்களும் உபாசனபரமா?

(1) முதல்பக்ஷத்தில் தேவதை முதலியவைகளைப் பிரதிபாதிக்கிற வாக்கியங்கள் அவைகளின் உபாசனையை விதித்ததினாலும் யாதொரு விரோதமில்லை.

(2) [रा:—(இரண்டாவது பக்ஷத்தில் விதியைக் கூறாத सत्यं ज्ञानं முதலிய வாக்கியங்கள் பிரம்மத்தைக் கூறுவதால் உபாசனபரம் என்று சொல்லக்கூடாது (26)

(b) रा:—(மேலும் பிரம்மமே உபாசனைக்கு அங்கம் என்று சொல்லும்பக்ஷத்தில்

(1) ஞானத்துக்கு முன்னா? அல்லது

(2) பின்னா?

(1) முதல்பக்ஷத்தில் சகுணப்பிரம்ம உபாசனையை ஒப்புக்கொண்டாலும் பிராணாதிதேவதைகளின் உபாசனைப்போல் நிர்க்குணப் பிரம்ம உபாசனை ஏற்படமாட்டாது.

रा:—(மேலும் நான் பிரம்மம் என்று) ஐக்கிய ஞானமுண்டானவளவில்

(1) ஸ்வீகரித்துக் கொள்ளும்படியாயும் தள்ளும்படியாயும் யாதொன்றுமில்லாதபடியால் பலன் யாதொன்றுமில்லை.

(2) மேலும் (உபாசிய உபாசகம் கர்ம்மம் சாதகம் முதலிய) துவந்தங்களுமில்லையாதலால் உபாசனைக்கு பிரம்மம் அங்கம் என்று சொல்லக்கூடாது.

रा:—(துவைதஞானமில்லாவிட்டாலும் அதின் சம்ஸ்காரபலத்தால் மறுபடியும் உண்டாகட்டுமே எனின்) உபாசனைக்குக்காரணம் பேதஞானம். ஐக்கிய ஞானம் சித்தித்தபிறகு துவைதஞானம் நசித்துப் போவதால் மறுபடியும் உண்டாகமாட்டாது.) (27)

14-ல் ஆக்ஷேபத்திற்கு உத்தரம்.

கர்மகாண்டத்தில் வேதவாக்கியங்கள் விதிசம்பந்தமன்றியில் பிரமாணங்களாகா விட்டாலும் ஆத்மஞானத்துக்கு (सोरोदीत्) முதலிய வாக்கியங்களுக்கு தனிமையில் பலனில்லாததுபோல் இராமல் பலனிருப்பதால் அதை விஷயமாக்கும் சாஸ்திரம் பிரமாணமன்று என்று சொல்லமுடியாது. வேதம் பிரமாணம் என்பது அனுமானத்தால் தெரியக்கூடியதாயிருந்தால் அது வேறு இடத்தில் காணப்பட்ட ஒரு திருஷ்டாந்தத்தை அபேக்ஷிக்காதபடியால் அது (பிரமாணியம்) ஸ்வத: சித்தம்.

(8) ஆகையால் (அதாவது சாஸ்திரத்துக்கு பிரம்மத்தில் தாற்பரியமிருப்பதால்) பிரம்மம் சாஸ்திரத்தாலேயே அறியத்தக்கது என்றுசித்திக்கிறது. (28

4. பூர்வபக்ஷபலன்:—முமுக்ஷுவுக்கு பிரவிர்த்தி உண்டாகமாட்டாது.

சித்தாந்தபலன்:—அதில் பிரவிர்த்தி உண்டாகும். (29

முதல் வர்ணகம் முற்றிற்று.

---

2-வது வர்ணகம்.

1. ரா:—[அவதாரிகை:—வேதாந்தங்கள் கர்மத்தைப் போதிக்கின்றன. பிரம்மத்தை போதிக்கவில்லை என்னும் மதம் முதல் வர்ணகத்தில் நிராகரிக்கப்பட்டது.

பிரம்மத்தைப் போதித்தாலும் சாக்ஷாத்தாய் போதிக்கவில்லை, உபாசனை விதிக்கு அங்கமாக போதிக்கிறது என்று சொல்லும் விருத்திகாரருடைய மதத்தை நிராகரிக்கும்பொருட்டு இந்தவர்ணகம் ஆரம்பிக்கப்படுகிறது.] (30)

2. சங்கதி:—

ரா:—[முந்தின அதிகரணத்துக்கும் இந்த வர்ணகத்துக்கும் பிராஸங்கிகசங்கதி ஏற்படுகிறது. அதாவது பிரம்மமானது வேதத்தால் பிரதிபாத்தியம் என்று சொன்னமாத்திரத்தில், வேதாந்தம் உபாசனவிதிபரம் என்று சொல்லுகிறவனுடைய மதம் ஞாபகத்துக்கு வர அது நிராகரிக்கப்படுகிறது. இதுவே பிராசங்கிக சங்கதி.] (31)

3. ரா:—[விஷயம்:—சத்தியம், ஞானம், அநந்தம் முதலிய சகல வேதாந்தவாக்கியங்கள்.] (32)

4. (a) ரா:—[சந்தேகம்:—வேதாந்தம்

(1) பிரம்மத்தை உபாசனவிதிக்கு அங்கமாக போதிக்கிறதா? அல்லது

(2) ஸ்வதந்திரமாக போதிக்கிறதா?]

(b) சந்தேகபீஜம்:—பூர்வபக்ஷசித்தாந்த யுக்திகளே. (33)

5. பூர்வபக்ஷம்:—

A. சாஸ்திரம் விதிபரம். 34-35.

(1) பிரம்மம் வேதாந்தத்தால் அறியத்தக்கது என்று சொன்ன விஷயத்தில் விருத்திக்காரர் (உபவர்ஷர்) சொல்லுவதாவது:—பிரம்மம் வேதாந்தத்தால் அறியக்கூடியதாக இருந்தாலும், விதிக்கு விஷயம் உபாசனை, உபாசனைக்கு விஷயம் பிரம்மம், இப்படி உபாசனவிதிக்கு விஷயமாக பிரம்மம் வேதாந்தத்தால் அறிவிக்கப்படுகிறது.

ரா (आत्मानं उपासीत என்கிற வாக்கியத்தால் உபாசனை விதிக்கப்படுகிறது. இந்த உபாசனைக்கு விஷயம் யாதெனின் சத்தியஞானாநந்த வாக்கியங்களால் போதிக்கப்பட்ட பிரம்மம்)

திருஷ்டாந்தம்:—

(1) यूपे पशुं बध्नाति

(2) आहवनीये जुहोति

அதாவது

(1) யூபத்தில் பசுவை கட்டவேண்டியது

(2) ஆஹவநீயத்தில் ஹோமம் செய்யவேண்டியது

என்று விதிகளை கேட்டமாத்திரத்தில்

யூபம் என்பது இன்னதென்றும்

ஆஹவநீயம் என்பது இன்னதென்றும்

உலகத்தில் தெரியவராதபடியால் யூபம் என்னவென்றும் ஆஹவநீயம் என்னவென்றும் கேட்கும்படி நேரிட

(1) यूपं तक्षति अष्टाश्रीकरोति

(2) अग्नीनादधीत

அதாவது

(1) யூபமானது எட்டுபட்டையாக செதுக்கப்பட்ட கட்டை என்றும்

(2) ஆஹவநீயமானது சில மந்திரங்களால் சுத்தப்படுத்தப்பட்ட அக்கினி என்றும்

விதிவாக்கியங்களால் யூபமும் ஆஹவநீயமும் குறிப்பிடப்படுகின்றன.

யூபத்தில் பசுவைகட்டு என்னும் வாக்கியத்தில் கட்டுதல் என்னும் செயலுக்கு

यूपं तक्षति अष्टाश्रीकरोति

என்கிற வாக்கியம் யூபத்தை குறிப்பிடுவது மூலமாக அங்கமாக (விஷயமாகக்) காட்டுகிறது.

இதுபோல் आत्मानं उपासीत

அதாவது ஆத்மாவை உபாஸி என்கிற விதிவாக்கியத்தைக் கேட்க, அந்த ஆத்மா என்னவென்ற பிரச்னம் ஜனிக்க

सत्यं ज्ञानमनन्तं ब्रह्म

என்னும் முதலிய வாக்கியம் அந்த ஆத்மாவை குறிப்பிட்டு, உபாசனை செயலுக்கு பிரம்மத்தை விஷயமாகக் காட்டுகிறது. (34)

ஏ:—2. (முன்சொல்லிய ஷட்விதலிங்கங்களால் வேதாந்ததாற்பரியத்துக்கு பிரம்மம் விஷயம் என்று சொல்லியிருக்க விதிக்கு சேஷம் என்று எப்படிச் சொல்லலாம்?)

ஏ:—(விருத்தாளுடைய வியவஹாரத்தால் சாஸ்திரத்தின் தாற்பரியம் நிச்சயிக்கப்படுகிறது. அவர்களோ ஒருவன் ஒரு விஷயத்தைச் செய்யவேண்டியதை உத்தேசித்தும் செய்யக்கூடாததை உத்தேசித்தும் தகுந்த வசனத்தைச் சொல்லுகிறார்கள். எப்படி அவர்களுடைய வசனத்துக்கு பிரவிர்த்தி நிவிர்த்தி அதாவது செய்கிறவிஷயத்திலும் செய்யக்கூடாத விஷயத்திலும் பிரயோஜனம் ஏற்படுகிறதோ அப்படி சாஸ்திரத்துக்கும் பிரவிர்த்தி நிவிர்த்திதான் பிரயோஜனம் (அந்த பிரவிர்த்தி நிவிர்த்திகள் இன்ன காரியத்தைச் செய்யலாம் செய்யக்கூடாது என்கிற ஞானத்தின்பேரில் ஏற்படுகின்றன. ஆகையால் சாஸ்திரத்துக்கு காரியத்திலேயே (விதியிலேயே) தாற்பரியம். அதினால் பிரம்மம் காரியத்தின் அங்கமாக ஏற்படுகிறது. வேதத்துக்கு விதியே தாற்பரியம் என்பது வேத தாற்பரியமறிந்த ஜைமினிரிஷியினுடையவும் அவருடைய கிரந்தத்துக்கு வியாக்கியானம் செய்த சபரரிஷியினுடையவும் அடியில்கண்ட வசனங்களால் தெரியவருகிறது.)

1. சபரவாக்கியம்.—

(1) दृष्टोहि तस्यार्थः कर्मावबोधनम् नाम

அதாவது வேதத்தின் கருத்து கர்மத்தை போதிப்பதாக ஜைமினிசூ I-1-1 பாஷ்யத்தால் தெரியவருகிறது.

(1) चोदनालक्षणोऽर्थोधर्मः

என்கிற ஜைமினி சூத்திர (I-1-2) த்தின் பாஷ்யத்தில் சோதனா சப்தத்துக்கு காரியத்தைச் செய்யும்படி போதிக்கும் வசனம் என்று சபரர் அர்த்தம் செய்திருக்கிறார்.

2. ஜைமினி சூத்திரம்:—

(1) तस्य ज्ञानं उपदेशः

அதாவது தர்மம் இன்னதென்று போதிக்கும் வேதவாக்கியம் உபதேசம் (இதனால் வேதத்துக்கு தர்மத்தில் தாற்பரியம் என்று ஏற்படுகிறது)

(2) तद्भूतानां क्रियार्थेन समाम्नायः (I-1-25)

வேதத்திலுள்ள சித்தார்த்தத்தை (அதாவது செய்கையை கூறாமல் கேவலம் சித்தவஸ்துவை மட்டும் கூறும் பதங்களின் காரியத்தை குறிப்பிடும் வினைச்சொல்லுடன் சேர்த்து சொல்லவேண்டியது. (இதனால் வேதத்துக்கு தாற்பரியம் வினைச்சொல்லில் கூறப்பட்ட செய்கையில் இருக்கிறதென்று தெரியவருகிறது)

(3) आम्नायस्य क्रियार्थत्वादानर्थक्यमतदर्थानामिति

(ஜை-சூ-I-2-1)

வேதத்தின் கருத்து கிரியையானதால் கிரியைக் கூறாத வேதவாக்கியங்கள் நிஷ்பிரயோஜனங்கள். ஆகையால் (விருத்தர்கள் இப்படி சொல்லுகையில் சில விஷயங்களில் புருஷன் பிரவிர்த்திக்கும்படியாகவும் சிலதில் பிரவிர்த்திக்காமலும் செய்கிற (விதிநிஷேத) வாக்கியமே சாஸ்திரம். அது பிரயோஜனமுள்ளதாக ஆகும். மற்றவாக்கியங்கள் அவைகளுக்கு அங்கமாகயிருந்துகொண்டு உபயோகப்படுகின்றன. கர்மசாஸ்திரம்போல் வேதாந்த சாஸ்திரமும் வேதமாகையால் வேதாந்தங்களும் காரியபரமாக இருந்துகொண்டு பிரயோஜனமுள்ளவைகளாகின்றன. (35)

B. மோக்ஷவிஷயத்திலும் விதி. (36-38)

1. (வேதாந்தம் விதிபரம் என்று சொன்னாலும் விதிக்கு வேண்டிய அதிகாரியும் விதிக்கவேண்டிய விஷயமும் காணப்படாததினால் வேதாந்தம் விதிபரம் என்று எப்படி சொல்லலாமெனின்) இப்படி விதிபரமாயிருக்க எப்படி ஸ்வர்க்காதிகளை இச்சிக்கிறவனுக்கு அக்கினிஹோத்திராதி சாதனங்கள் விதிக்கப்பட்டிருக்கின்றனவோ அப்படி மோக்ஷத்தை இச்சிக்கிறவனுக்கு பிரம்மஞானம் (உபாஸனம்) விதிக்கப்படுகிறது என்பது யுக்தம். (36)

2. சித்தாந்தியின் ஆக்ஷேபம்:—(கர்மகாண்டத்துக்கும் ஞானகாண்டத்துக்கும் விஷயம் வெவ்வேறு. அப்படி இல்லாவிடின் இரண்டு காண்டங்கள் ஏற்படவேண்டியதில்லை.)

(கர்மகாண்டத்துக்கு விஷயம் வெவ்வேறாயிருக்கும்போது பலமும் வேவ்வேறு என்று சொல்லவேண்டியது. முக்தி பலத்துக்கோ உபாசனை விதிக்கப்படவில்லை. அப்படி விதிக்கப்பட்டால் முக்தியும் ஞானகாலத்திலிராமல் பிறகு உண்டாகக்கூடிய தர்மம்.

ஞானகாண்டத்துக்கோ நித்திய சித்தமான பிரம்மம் என்னும் விஷயம் கர்மத்தால் சித்திக்கிறதாக ஆகும். அப்போது கர்மபலத்துக்கும் முக்திக்கும் வித்தியாசமில்லாமற்போகும், அப்போது விஷயத்துக்கும் பேதமில்லாமற்போகும். ஆகையால் அனுஷ்டானத்தை அபேக்ஷிக்கிற தர்மஞானபலத்தைவிட பிரம்மஞானபலம் வேறு என்றே சொல்லவேண்டும். (ஆகையால் நித்திய சித்த முக்தியானது கர்மபலத்தைவிட வேறாக இருப்பதால் முக்திக்குச் சாதனமான ஞானத்தில் விதிகூடாது. (37)

3. பூர்வபக்ஷியின் உத்தரம்:—இப்படி சொல்லுவது சரியன்று. ஏனெனின் உபாசனாவிதிக்கு அங்கமாகவே பிரம்மத்தைப் பிரதிபாதனம் செய்திருக்கிறது. (எப்படியெனின்)

(1) आत्मावा अरे द्रष्टव्यः (பி-II-4-5)

ஆத்மா பார்க்கத்தக்கது.

(2) य आत्मापहतपाप्मा सोऽन्वेष्टव्यः सजिविज्ञासितव्यः (சா-VIII-7-1)

பாபமற்ற ஆத்மா விசாரிக்கத்தக்கது. அறியத்தக்கது.

(3) आत्मेत्येवोपासीत (பி-I-4-7)

ஆத்மாவென்றே உபாசனை செய்யட்டும்

(4) आत्मानमेवलोकमुपासीत (பி-I-4-15)

ஆத்மாவையே ஒருவன் உபாசிக்கட்டும்

(5) ब्रह्मवेद ब्रह्मैव भवति (மு-III-2-9)

பிரம்மத்தை அறிந்தவன் பிரம்மமாகவே ஆகிறான். (உபாசனை செய்யவேண்டும் என்பது கருத்து.

இவைமுதலிய விதிவாக்கியங்களிருக்க அந்த ஆத்மா யார், அந்த பிரம்மம் எது என்று கேள்விகேட்கும் இச்சை ஜனிக்கிறது. அப்போது

नित्यः सर्वगतः नित्यतृप्तः नित्यशुद्धबुद्धमुक्तस्वभावः विज्ञानमानन्दं ब्रह्म

முதலிய சகல வேதாந்தங்களும் பிரம்மத்தின் ஸ்வரூபத்தைக் குறிப்பிடுவது மூலமாக உபயோகப்படுகின்றன. அதினுடைய உபாசனையால் இதர பிரமாணங்களால் அறியக்கூடாததாயும் வேதாந்த சாஸ்திரத்தால் அறியக்கூடியதாயுமிருக்கிற மோக்ஷபலன் சித்திக்கிறது. (38)

C. விதியின் அபாவம். (39-41)

பிரம்மத்தை உபாசனை விதிக்கு அங்கம் என்று சொல்லாமல் ஸ்வதந்திரம் என்று சொல்லும்பக்ஷத்தில் தள்ளக்கூடியதாயும் ஸ்வீகரிக்கக் கூடியதாயும் ஒன்றுமிராததால்

1. "ஏழு துவீபங்களுடன்கூடிய பூமி"

2. "இந்த அரசன் போகிறான்"

என்கிற வாக்கியங்கள்போல் வேதாந்த வாக்கியங்களும் நிஷ்பிரயோஜனங்களாகும். (39)

2. சித்தாந்தியின் ஆக்ஷேபம்:—வஸ்துமாத்திரம் என்று சொல்லுவதிலும் "இது ரச்சு, சர்ப்பமன்று" முதலியவைகள் பிராந்தியாலுண்டான பீதியை நிவர்த்திக்கிறதினால் பிரயோஜனப்படுவது ஸ்பஷ்டமாய்த் தெரியவருகிறது. அப்படியே வேதாந்த வாக்கியமும் நீ அசம்சாரியான ஆத்மாவென்று சொல்லுவதினால் சம்சாரி என்னும் பிராந்தி நிவர்த்திக்கிறது மூலமாக பிரயோஜன முள்ளதாக ஆகட்டுமே. (40)

3. பூர்வபக்ஷியின் உத்தரம்:— 1. ரச்சுசப்தத்தைக் கேட்டமாத்திரத்தில் சர்ப்பப்பிராந்திநிவர்த்தியாகிறதுபோல் பிரம்ம ஸ்ரூபத்தைக்கேட்ட மாத்திரத்தில் சம்சாரி என்னும் பிராந்தி நிவர்த்தியானால் நீ சொல்லுகிறபடி யிருக்கக்கூடும். ஆனால் சம்சார பிராந்தி நிவர்த்தியாகிறதில்லை. ஏனெனின் பிரம்ம ஸ்வரூபத்தைக் கேட்டவர்களும் முன்போலவே சுகம் துக்கம் முதலிய சம்சார தர்மங்களுடன்கூடியிருப்பதாகக் காணப்படுகிறார்கள்.

2. மேலும் श्रोतव्योमन्तव्यो निदिध्यासितव्यः

என்பதில் சிரவணத்துக்குப் பிறகு மனனநிதித்தியாசங்களைச் செய்யவேண்டுமென்று சொல்லியிருப்பதாலும் சிரவணமே போராது.

ஆகையால் பிரம்மத்தை உபாசனாவிதிக்கு விஷயமாக சாஸ்திரம் போதிக்கிறது என்று ஒப்புக்கொள்ளவேண்டியது. (41)

6. சித்தாந்தம் (42-94)

1. இனி சித்தாந்தம் கூறப்படுகிறது. (பூர்வபக்ஷி சொன்ன கட்சியானது அதாவது மோக்ஷம் உபாசனையால் சாத்தியம், உபாசனை மானசிககர்மம், ஆகையால் மோக்ஷமானது கர்மபலன்) சரியன்று ஏனெனின் கர்மஞானத்துக்கும் பிரம்மஞானத்துக்கும் பலம் வெவ்வேறு. எப்படியெனின். (42)

2. (காமவிவரம்) (43-49)

(1) கர்மமானது

(1) (a) சரீரத்தாலும்

(b) வாக்கினாலும்

(c) மனதினாலும்

பண்ணக்கூடியதாயிருக்கிறது.

(2) சுருதிஸ்மிருதிகளில் பிரசித்தமா யிருக்கிறது.

(3) தர்மம் என்று பெயருள்ளது.

(4) अथातोधर्मजिज्ञासा

என்கிற ஜைமினி சூத்திரத்தால் விசாரிக்கப்படுகிறது. நிஷேதவாக்கியங்களில் கூறப்பட்ட ஹிம்சை முதலிய அதர்மமும் அதின் பரிகரணத்தின்பொருட்டு விசாரிக்கத்தக்கது. (43)

(கர்மபலவிவரம்)

சாமான்னிய நிரூபணம்.

(2) (a) வேதங்களில் கூறப்பட்ட தர்மாதர்மங்களுக்கு பிரம்மாதி ஸ்தாவரம்வரையிலுள்ளவைகளில் விஷய இந்திரிய சம்பந்தத்தாலுண்டாகிறதாயும் சரீரம் வாக்கு மனது இவைகளால்மட்டும் அனுபவிக்கப்படுகிறதாயுமிருக்கிற பிரசித்தமான பிரத்தியக்ஷ சுகதுக்கங்கள் பலன்கள்.

रा:—மோக்ஷமோ இந்திரிய விஷயமன்று சோகமற்றது, சரீராதிகளால் அனுபவிக்கக்கூடாதது விஷயாதிகளால் உண்டாகாதது, அஞ்ஞானிகளுக்கு அப்பிரசித்தமானது. இப்படி இரண்டும் வித்தியாசப்படுகின்றன. (44)

रा இப்படி சாமான்னியமாய் கர்மபலத்தைச்சொல்லிஇனி தர்மபலத்தை தனியாக விவரமாய்ச் சொல்லுகிறார்)

விசேஷ நிருபணம்.

1. தர்மபலன்:—(a) மனிதன்முதல் ஹிரணியகர்பன் வரையிலுள்ள ஜீவர்களிடத்தில் சுகதாரதம்மியத்தை சுருதியானது அனுபவத்தை அனுசரித்துக் கூறுகிறது.

(b) சுகத்தில் தாரதம்மியமிருப்பதால் அதற்குக்காரணமான தர்மத்திலும் தாரதம்மியம் தெரியவருகிறது (மோக்ஷமோ நிரதிசயம். சாதனமோ ஒன்று. (45)

(c) அதிகாரிபேதம்:—தர்மதாரதம்மியத்தால் அதிகாரி தாரதம்மியமும் பிரசித்தம்

(மோக்ஷசாதன வித்தைக்கு சாதனசதுஷ்டயசம்பன்னனே அதிகாரி கர்மத்திலோ

1. பலேச்சையில் வித்தியாசத்தாலும்

2. புத்திராதிகளில் வித்தியாசத்தாலும்

3. [रा:—கர்மகாண்ட ஞானத்தாலும்

4. சாஸ்திர சம்மதத்தாலும்]

அதிகாரிக்கு தாரதம்மியம் பிரசித்தமாக ஏற்படுகிறது. (46)

(d) பலதாரதம்மியம் [रा:மோக்ஷமோ நித்தியசித்தம். கர்மபலமோ அடையக்கூடியது. எப்படியெனின்

1. யாகாதிகளை அனுஷ்டிக்கிறவர்களே உபாசனையால் ஏகாக்கிற சித்தத்தை அடைந்து உத்தராயண மார்க்கத்தால் பிரம்மலோகத்தை அடைகிறார்கள்.

2. கேவலம் இஷ்டம், பூர்த்தம், தத்தம் ஆகிய சாதனங்களுள்ளவர்கள் தக்ஷிணயனமார்க்கத்தால் (சந்திரலோகத்தை) அடைகிறார்கள்.

रा:—(இஷ்டம் யாதெனின் அக்கினிஹோத்திரம் செய்தல், தபஸ், சத்தியம், வேதாத்தியானம், அதிதிபூஜை, வைசுவதேவம்)

रा:—(பூர்த்தம் யாதெனின் கிணறு குளம் முதலியவைகளை வெட்டல் தேவாலயம் கட்டல் அன்னதானம் தோட்ட நிர்மாணம்)

रा:—(தத்தம் யாதெனில் சரணாகதி அடைந்தவனை இரக்ஷித்தல், அஹிம்சை, பொதுவாய் தானம்)

சந்திரலோகத்திலும்,

यावत्सम्पातमुषित्वा (சா-V-10-5)

அதாவது

“கர்மமிருக்கிறவரையிலிருந்து திரும்புதல்”

என்னும் சுருதிப்படிக்கு சுக தாரதம்மியமும் அதின் சாதனதாரதம்மியமும் தெரியவருகிறது.

மனிதன்முதல் நரகத்திலிருக்கிறவன் வரையிலும் ஸ்தாவரம்வரையிலும் தாரதம்மியத்தினால் அனுபவிக்கப்படும் அற்பசுகமும் வேதத்திற் சொல்லிய தர்மத்தால்தான் சாத்தியமென்று தெரியவருகிறது. (47)

2. அதர்மபலன்

रा:—(இனிதுக்கம், அதின்காரணம், அனுஷ்டிக்கிறவன், இவர்களின் தாரதம்மியம், பலன், இவைகளைக் கூறுகிறார்.)

அப்படியே ஹிரண்யகர்ப்பன்முதல் ஸ்தாவரம் வரையிலுள்ள ஜீவர்களிடத்திலும் தாரதம்மியம் காணப்படுவதால் அதற்குக்காரணமான அதர்மத்திலும் அதை அனுஷ்டிக்கிறவனிடத்திலும் தாரதம்மியம் தெரியவருகிறது. (48)

ரா:— (3) இவ்விதமாக அவித்தை [அஸ்மிதை (புத்தியும் ஆத்மாவும் ஒன்று என்பது) காமம் குரோதம் பயம்] இந்த தோஷங்களோடு கூடினவர்களுக்கு

1. தர்மாதர்ம தாரதம்மியத்தால் சித்திக்கிறதாயும்,

2. சரீராவலம்பத்தை முன்னிட்டுக்கொண்டும்,

3. சுகதுக்கதாரதம்மிய ரூபமாயும் அநித்தியமாயும்

4. சுருதி ஸ்மிருதி நியாயத்தால் பிரசித்தமாயுமிருக்கிற

சம்சாரம் சித்திக்கிறது.

(1) சுருதி பிரமாணம்.

नहवै सशरीरस्यसतः प्रियाप्रिययोरपहतिरस्ति (छा VIII-12-1)

அதாவது சரீரமுள்ளவரையில் சுகதுக்கங்களினின்றும் நழுவமுடியாது. இந்த சுருதி முன்கூறிய சம்சாரரூபத்தை அனுவதிக்கிறது.

(2) ரா:—ஸ்மிருதிப்பிரமாணம்:—

ते तं भुक्त्वा स्वर्गलोकं विशालं (गी IX 21)

முதலிய வசனங்கள்.

(3) நியாயம்:—

கட்டை அதிகப்பட ஜ்வாலையும் அதிகப்படுதல் காணப்படுவதால் பலதாரதம்மியத்தால் சாதனதாரதம்மியமும் அனுமானிக்கப்படுகிறது. (49)

3. மோக்ஷம்.

ரா:— (1) (மோக்ஷமானது கர்மபலத்தைவிட வேறு என்பதை இனி கூறுகிறார்)

अशरीरं वावसन्तं नप्रियाप्रिये स्पृशतः (छा VIII-12-1)

அதாவது தேகமற்ற ஆத்மாவை (விஷயசம்பந்தமுள்ள சுகதுக்கங்கள் பாதிக்கிறதில்லை

என்கிற மேற்கூறிய சுருதி வாக்கியத்தால் சரீர சம்பந்தமற்ற மோக்ஷமானது தர்ம (கர்ம) காரியமன்று என்று தெரியவருகிறது. மோக்ஷமானது உபாசனைக்கு பலனுயிருக்கும் பக்ஷத்தில் சுகதுக்கங்கள் பாதிக்கிறதில்லை என்பது ஒவ்வாது. (50)

(2) (விஷயசுகம் மோக்ஷத்திலில்லை என்று சொல்லுவோம். கர்மம் பலவிதபலன்களைக்கொடுப்பதால்) மோக்ஷம் தர்மபலனுயிருக்கட்டுமே யெனின் அது சரியன்று. ஏனெனின் சரீரசம்பந்தமற்ற மோக்ஷமானது ஸ்வதஸ்ஸித்தமாயிருக்கிறது. (ஆகையால் காரிசாத்தியமன்று) இதற்குப் பிரமாணவாக்கியம்:—

(*a*) अशरीरं शरीरेषु अनवस्थेष्ववस्थितम्
महान्तं विभुमात्मानं मत्वा धीरोन शोचति
(கட II-1-2)

ரா:—அதாவது ஸ்தூல சரீரமில்லாமலும் அநித்தியமான அநேக சரீரங்களில் ஏகமாயும், சர்வவியாபியாயும் இருக்கிற ஆத்மாவை அறிந்த ஞானியானவன் சோகரூபசம்சாரத்தை அனுபவிக்கிறதில்லை.

(*b*) अप्राणोह्यमनाः शुभ्रः (मु II-1-2)

அதாவது:—பிராணனன்று, மனதன்று, சுத்தம்.

(*c*) असङ्गोह्ययं पुरुषः (बृ IV-3-15)

இந்த புருஷன் அசங்கன்.

(முதல் சுருதியால் ஸ்தூல சரீரமில்லை என்றும் இரண்டாவது சுருதியால் சூட்சும சரீரமில்லை என்றும் ஸ்பஷ்டமாய் விளங்குகிறது. இப்படி இரண்டு தேகங்களுமில்லாதபடியால் 3-வது சுருதியானது ஆத்மா அசங்கன் என்றுகூறுகிறது.) ஆகையால் அனுஷ்டிக்கக்கூடிய கர்மத்தின் பலத்துக்கு வேறாயிருக்கும் மோக்ஷமானது தேகசம்பந்தமற்ற ஆத்மஸ்வரூபமாகையால் அனாதி நித்தியம் என்று ஏற்படுகிறது. 51

ரா:—(3) (மோக்ஷம் நித்தியம் என்று சொன்னதின்பேரில் எவ்விதமாய் நித்தியம் என்பதை விசாரிக்கிறார். நித்தியம் என்பது இருவகைத்து. ஒன்று பரிணாமிநித்தியம், மற்றொன்று கூடஸ்தநித்தியம்.) நித்திய வஸ்துக்களில் சிலது பரிணாமிநித்தியமாயிருக்கிறது. அதாவது வஸ்து பரிணாமத்தை அடைந்தாலும் அதுவே இது என்னும் புத்தி விலகிப்போகிறதில்லை. ஜகத்தை நித்தியம் என்று சொல்லுகிறவர்கள்

மதத்தில் பிருதிவீமுதலியவைகள் போலும்; சாங்கிய ர்களுடைய குணங்கள் போலும்.

ரா:—(பிருதிவியானது மரம் செடி வகைராக் களின் அவஸ்தையை அடைந்து அவைகள் நாசமடை ந்தபின் மண் ஆகிற அவஸ்தையை அடைகிறது, மண் ணுகவே ஆய்விடுகிறது. இந்த இரண்டு அவஸ்தை களிலும் பிருதிவியானது சேர்ந்தேயிருக்கிறது. ஆகை யால் பிருதிவி பரிணாமத்தால் நித்தியம். இப்படியே சர் வபரிணாமி நித்திய வஸ்துக்களை அறியவும்.

சத்வரஜஸ்தமோ குணங்கள் பிரளயகாலத்தில் சமானமானபிரதான அவஸ்தையை அடைந்து சிருஷ் டிகாலத்தில் குணங்களின் தாரதம்மியத்தை அடைந்து சுகதுக்காதி ஸ்வரூபத்தை அடைகின்றன. இரண்டு அவஸ்தைகளிலும் குணங்கள் சேர்ந்தே இருக்கின் றன.)

ஆனல் இந்தமோக்ஷமோ ஒருக்காலத்திலும்நாச த்தைஅடையாததால் கூடஸ்தநித்தியம் ஆகாசம்போல் எங்கும் வியாபித்து, சகலவிகாரங்களுமற்றது; நித்திய திருப்தம், அவயவமற்றது. ஸ்வயம் ஜோதிஸ்வபாவ முள்ளது. எவ்விடத்தில் தர்மாதர்மங்களும் அவை களின் காரியங்களும் (சுகதுக்கங்களும்) காலத்திரய சம்பந்தப்படவில்லையோ அந்த அசரீரமான வஸ்து வே மோக்ஷம் என்று பெயருள்ளது. தர்மாதிகளின் சம்பந்தமில்லை என்பதற்கு சுருதிப்பிரமாணம்:—

अन्यत्र धर्मादन्यत्राधर्मादन्यत्रास्मात् कृताकृतात्
अन्यत्र भूताच्च भव्याच्च (கட II-14)

ரா:—அதாவது தர்மாதர்மம், காரியகாரணம்முத லியவைகளுக்கு அன்னியமாய் எதை பார்க்கிருயோ அதைச்சொல்லு

முதலிய சுருதிகள். (52)

ரா:— (4) வேதாந்தங்கள் பிரம்மத்தை அசங் கியாகச் சொன்னுலும் மோக்ஷம் கர்மபலமாக இருக் கட்டுமேயெனின்) கர்மபலத்துக்கு விலக்ஷணமாயிரு ப்பதால் இந்த மோக்ஷமானது, எந்த பிரம்மத்தைப் பற்றி விசாரம் ஆரம்பிக்கப்பட்டிருக்கிறதோ, அந்த பிரம்மமே. (ஆகையால் அது கர்மபலனல்ல) (53)

(5) இந்த பிரம்மமானது சில காரியங் (உபாச னை)களுக்கு(அங்கமாக) சேஷமாகச் சொல்லும்பக்ஷத் திலும் மோக்ஷமானது அக்காரியங்களால் சித்திக்கிற தென்று ஒப்புக்கொள்ளும்பக்ஷத்திலும், அது (மோ க்ஷம்) அனித்தியமாகவே முடியும். அப்போது தார தம்மியமான அநித்திய கர்மபலன்களுக்குள் மோக்ஷம் சிரேஷ்டம் என்று சொல்லவேண்டும். ஆனல் எல்லா மோக்ஷவாதிகளும் மோக்ஷத்தை நித்தியம் என்று ஒப்புக்கொண்டிருக்கிருர்கள். ஆகையால் பிரம்மத்தை கர்மசேஷம் என்று அறியக்கூடாது.

மோக்ஷம் உபாசனையால் சாத்தியமானல் அநித் தியமாகும் என்று முன் சொல்லப்பட்டது. இப்போ து சுருதி விரோதம் வரும் என்று நிரூபிக்கிருர். எப் படி கர்மத்தால் சுவர்க்காதி பலன் நேரிடும் விஷயத் தில் கர்மத்துக்கும் பலனுக்கும் மத்தியில் அபூர்வம் (தர்மம்) ஒன்று ஏற்படுகிறதோ அப்படி உபாசனையால் மோக்ஷம் சாத்தியமானல் உபாசனைக்கும் மோக்ஷத்து க்கும் நடுவில் அபூர்வம் ஏற்படவேண்டியது. அப் போது தீபம் வந்தமாத்திரத்தில் இருட்டு போய்விடு வதுபோல் ஞானமுண்டானமாத்திரத்தில் அஞ்ஞா னம் நீங்கி உடனே மோக்ஷம் சித்திக்கிறதென்று பிர திபாதிக்கும் அடியிற்கண்ட சுருதிகள் விரோதப் படும். அந்த விரோதம் வராமலிருக்க மோக்ஷம் உபா சனை சாத்தியம் என்று சொல்லக்கூடாது என்று கூறு கிருர்.) (54)

4. மோக்ஷசித்தி.

(1) ब्रह्मवेद ब्रह्मैव भवति (मु III-2-9)

எவன் "நான் பிரம்மம்" என்று அறிகிருனே அவன் பிரம்மமாகவே ஆகிருன்.

(2) क्षीयन्ते चास्यकर्माणि तस्मिन् दृष्टे परावरे (मु II-2-8)

காரியகாரண ரூபமாயிருக்கிற பிரம்மம் பார்க்கப் பட்ட வளவில் இவனுடைய காரியங்கள் நசித்துப் போகின்றன.

(3) आनन्दं ब्रह्मणोविद्वान्न बिभेति कुतश्चन (तै 2-9)

பிரம்மத்தின் ஸ்வரூபாநந்தத்தை அறிந்தவன் இரண்டாவது ஒன்றுமில்லாதபடியால் ஒன்றும் பயப் படுகிறதில்லை.

(4) अभयंवै जनकप्राप्तोसि (बृ IV-2-4)

ஜனகரே அபயரூபமான பிரம்மத்தை அடைந்தி ருக்கிறீர்.

(5) तदात्मानमेवावेदहं ब्रह्मास्मीति (बृ 1-4-10)

அஞ்ஞான நாசத்தினால் ஜீவன் "நான் பிரம்மம்" என்பதாய் குருபதேசத்தினால் அறிந்தான்.

(6) तस्मात्तत्सर्वमभवत् (बृ IV-2-4)

ஞானத்தால் ஜீவன் பரிச்சேத பிராந்தி நாசத்தால் பூர்ணமாகிறான்.

(7) तत्र कोमोहः कः शोकः एकत्वमनुमश्यतः (ई 7)

"நான் பிரம்மம்" என்கிற அனுபவமிருக்கும் காலத்தில் மோக்ஷம் ஏது துக்கம் ஏது.

மேற்கூறிய சுருதிகள் பிரம்மத்தை அறிந்தவுடன் மோக்ஷம் சித்திக்கிறதாக கூறுகின்றன. (பிரம்மஞானத்துக்கும் பலத்துக்கும்) மத்தியில் ஞானத்தின் வேறு காரியத்தை நிஷேதிக்கின்றன.

(அடியில்கண்ட சுருதியும் மோக்ஷம் உபாசனை காரியமன்று என்பதைக் காட்டுகிறது.)

तद्धैतत् पश्यान्नृषिर्वामदेवः प्रतिपेदेऽहं मनुरभवं सूर्यश्च (बृ I-4-19)

அந்த பிரம்மம் நான் என்று அறிந்து, அந்த ஞானத்தால் வாமதேவர் என்கிற முனிசிரேஷ்டர் சுத்த பிரம்மத்தை அடைந்தார். அந்த ஞானத்தால் தான் சர்வத்துக்கும் ஆத்மா என்பதை பிரகாசிப்பிக்கும்

अहं मनुः सूर्यः

நான் மனு சூரியன்

முதலிய மந்திரங்களை பார்த்தார். இந்த சுருதியானது பிரம்மதர்சனத்துக்கும் சர்வாத்மபாவத்துக்கும் மத்தியில் செய்யவேண்டிய காரியம் ஒன்றுமில்லை என்பதைக் காட்டுகிறது. "நின்றுகொண்டு பாடுகிறான்" என்று சொல்லுமிடத்தில் நிற்கிறதற்கும் பாடுகிறதற்கும் மத்தியில் யாதொரு செய்கையுமில்லாதது போல் பார்த்து சர்வாத்மாவானார் என்பதில் பார்வைக்கும் சர்வாத்மாவாக ஆகுதலுக்கும் மத்தியில் ஒரு காரியமும் ஏற்படவில்லை. (55)

2.रा :— (மேலும் மோக்ஷமானது உபாசனையால் சித்திக்கும் பக்ஷத்தில், உபாசனையானது கர்மமானதாலும், ஞானத்தால்தான் அஞ்ஞானம் நிவிர்த்தியாகுமென்று கேட்டிருப்பதாலும், உபாசனையால் அஞ்ஞானம் நிவர்த்தியாகமாட்டாது. அப்போது மோக்ஷத்திலும் அஞ்ஞானம் தங்கும். இது அடியில் கண்ட சுருதிகளுக்கு விருத்தம்)

(1) त्वं हि नः पिता योऽस्माकमविद्यायाः परंपारं तारयसि (प्र VI—8)

பாரத்வாஜாதி ஆறு ரிஷிகள் பிப்பலாதர் என்கிற குருவை நமஸ்கரித்து சொன்னதாவது:—நீர் எங்களுடைய பிதா, ஏனெனின் அவித்தையாகிய மஹாசமுத்திரத்தின் புனராவிர்த்தியற்ற கரையை பிரம்மவித்தையாகிய தெப்பத்தால் நாம் அடையும்படிச் செய்கிறீர். ஞானத்தால் அஞ்ஞானத்தை நாசம் செய்கிறீர்.

(2) श्रुतंह्येवमे भगवद्दृशेभ्यस्तरति शोकमात्मवित् सोहं भगवः शोचामि तन्माभगवान्छोकस्य परंपारं तारयतु (छा VII-1-3)

"ஆத்மஞானியானவன் துக்கத்தை அதிக்கிரமிக்கிறான்" என்று உங்களைப்போன்றவர்களிடம் நான் கேட்டிருக்கிறேன். ஆனால் நான் அநுபவிக்கவில்லை. நான் அஞ்ஞானத்தையால் துக்கிக்கிறேன். அப்படி துக்கிக்கிற என்னை தாங்களே ஞானமாகிற தெப்பத்தால் துக்கசமுத்திரத்தின் கரையை அடையும்படிச் செய்யவேண்டும். இப்படி நாரதர் சனத்குமாரரைப் பார்த்துச்சொல்ல, அவர் (சனத்குமாரர்)

तस्मै मृदितकषायाय तमसः परंपारं दर्शयति भगवान् सनत्कुमारः (छा VII-26 2)

தபஸினால் தோஷநிவிர்த்தி அடைந்த நாரதருக்கு துக்ககாரணமான அஞ்ஞானத்தை நிவிர்த்திக்கக்கூடிய ஞானரூப பிரம்மத்தைக் காண்பிவித்தார்.

இவைமுதலிய சுருதிகள் ஆத்மஞானத்துக்கு பலன் மோக்ஷத்தின் பிரதிபந்த நிவிர்த்தி மட்டும்தான் என்று கூறுகின்றன.

रा:—(சுருதியின் யதார்த்தஞானம் முக்திக்கு ஹேதுவானதால் கர்மம் காரணமன்று)

रा:—முதலிய சப்தத்தால்

एतद्यो वेद निहितं गुहायां सोऽविद्याग्रन्थिं विकिरति

என்கிற சுருதியையும் அறியவும். (56)

3. விருத்தசம்மதி.

(மித்தியாஞான நிவிர்த்தியின்பேரில் மோக்ஷம் சித்திக்கிறது என்னும் விஷயத்தில் அக்ஷபாதகௌதம முனியினுடைய வாக்கியத்தை உதாகரிக்கிறார்.)

दुःखजन्मप्रवृत्तिदोषमिथ्याज्ञानानामुत्तरोत्तरापाये तदनन्तरापायादपवर्गः (न्या-सू- I-1-2)

என்கிற இவ்வகு நியாயமடங்கிய சூத்திரத்தை அக்ஷபாதகௌதமுனி என்னும் ஆசாரியார் ஏற்படுத்தியிருக்கிறார்.

ஷை சுருதிக்கு அர்த்தம்:—

ஐ (மித்தியாஞானம் என்பது அனாத்மாவான தேகாதிகளில் ஆத்மஞானம். இதின் காரியம் ராகாதி தோஷம். இராகாதிகளால் புண்ணியபாபங்களில் பிரவிர்த்தி உண்டாகிறது. பிரவிர்த்தியால் யோனிகளில் ஜன்மம் சம்பவிக்கிறது. ஜன்மத்தால் துக்கம் சம்பவிக்கிறது. காரணம் நாசமடைந்தால் காரியம் நாசமாகிறது)

रा (ஆகவே மித்தியாஞானம் நிவிர்த்தியானல் ராகதுவேஷாதிகள் நாசமாகின்றன. இவைகள் நீங்கவே தர்மாதர்மஸ்வரூப பிரவிர்த்தி நீங்கிவிடுகிறது. இது போகவே மறுபடியும் ஜன்மமடைதலில்லாமற் போகிறது. எப்போது ஜன்மமில்லையோ அப்போது துக்கம் இல்லை. இந்த துக்கநாசமே மோக்ஷஸ்வரூபம்.) (57)

4. மித்தியாஞான நிவிர்த்தியோ பிரம்மமே ஆத்மா என்னும் ஞானத்தால் உண்டாகிறது.

ஐ (நையாயிகமதத்தில் தத்துவஞானத்தால் மோக்ஷம் என்று கூறப்பட்டிருக்கிறது. சித்தாந்தத்திலும் தத்துவஞானத்தால் மோக்ஷம் என்று சொல்லப்பட்டிருக்கிறது. தத்துவத்தை இரண்டு மதங்களிலும் இன்னது என்பதை நிச்சயிக்காவிடின் இரண்டுமதங்களும் ஒன்றாகும். ஆனால் பேதமுண்டு. தத்துவஞானத்தால் முக்தி என்கிற விஷயத்தில்மட்டும் இரண்டு மதங்களுக்குள் வித்தியாசமில்லை. அந்த தத்துவமோ நையாயிகமதத்தில் பதினாறு பதார்த்தங்களின் பேதஞானம். சித்தாந்தத்திலோ ஜீவப்பிரம்ம ஐக்கிய ஞானம். பேதஞானமானது.

यत्रहि द्वैतमिव भवति (बृ II-4-14)

என்கிற சுருதியால் பிராந்திரூபமாயிருப்பதாலும்

मृत्योःसमृत्युमाप्नोतियइहनानेव पश्यति (कठ II-1-10)

B. என்கிற சுருதியால் அநர்த்த ஹேதுவாக இருப்பதாலும்

மோக்ஷத்துக்குக் காரணமாகிறதில்லை. ஆகையால் மித்தியாஞான நிவிர்த்தி பிரம்மாத்மைக்கியஞானத்தாலுண்டாகிறது. (58)

रा 5. (a) (பிரம்மாத்மைக்கிய ஞானத்தால் மோக்ஷம் சித்திக்கிறதென்று நிரூபிக்கப்பட்டது. இந்த ஞானம் சம்பத்ரூபமாயிருக்கட்டுமே.)

अनन्तंवैमनोऽनन्ता विश्वेदेवा अनन्तमेव स तेन लोकं जयति (बृ III-1-9)

(மனதானது தன் விர்த்தியால் அநந்தமாயிருக்கிறது. விசுவதேவதைகள் அநந்தமாயிருக்கிறார்கள். அல்பமானதைவிட்டு அதை உத்கிருஷ்டமாக அறிவதே சம்பத். இவ்விடத்தில் அநந்தம் என்பது மனதுக்கும் விசுவதேவதைகளுக்கும் சமமாயிருப்பதால், மனதை விசுவதேவர்கள் என்று உபாசிக்கிறவன் அநந்த பலத்தை அடைகிறான். அப்படியே ஜீவனுக்கும் பிரம்மத்துக்கும் சேதனத்தன்மை சமம். ஆகையால் ஜீவனை பிரம்மமாக அறிவதே சம்பத்து. இந்த சம்பத் உபாசனையால் மோக்ஷம் சித்திக்கட்டுமே எனின்)

இந்த பிரம்மாத்மைக்கிய ஞானம் சம்பத் ரூபமல்ல. (காரணம் பின் கொடுக்கப்படும்) (59)

(b) मनोब्रह्म (छा III-18-1 )
आदित्यो ब्रह्म (छा III-19-1 )

என்கிற சுருதிகளில் மனதை பிரம்மரூபமாயும் சூரியனை பிரம்மரூபமாயும் உபாசிக்கும்படி சொல்லியிருக்கிறது. மனதையும் சூரியனையும் பிரம்மமாகப் பாவிப்பதே அத்தியாசம். இதுபோல் अहंब्रह्म என்கிற ஞானமும் அத்தியாச ரூபமாயிருக்கட்டுமே யெனின்.

இந்த பிரம்மாத்மைக்கிய ஞானம் அத்தியாசரூபமல்ல. (சம்பத்ரூப உபாசனையில் இரண்டுக்கும் சாமான்னியதர்மம் காணப்படுகிறது. அத்தியாசரூப உபாசனையில் உபதேசமே ஆதாரம். இதுவே வித்தியாசம்) (60)

(c) (1) वायुर्वावसंवर्गः (छा IV-3-1)
(2) प्राणोवावसंवर्गः (छा IV-3-3)

1. பிரளயகாலத்தில் வாயுவானவன் அக்கினி முதலியவைகளை மறைக்கிறான் (संवृणोति) அதாவது சம்ஹரிக்கிறான். ஆனதால் வாயுவை சம்வர்க்கனாக தியானிக்கவேண்டும் என்று சாந்தோக்கியத்தில் சொல்லியிருக்கிறது.

2. சுஷுப்திகாலத்தில் பிராணன் வாக்குமுதலியவைகளை சம்ஹாரம் செய்வதால் சம்வர்க்கனென்று அவனை தியானிக்கும்படி சாந்தோக்கியத்தில் சொல்லியிருக்கிறது. இப்படி விசேஷமான கிரியையுடன் கூடியிருப்பதால் வாயுவும் பிராணனும் சம்வர்க்கனென்று தியானம் பண்ணப்படுகிறது போல், ஜீவனும் விர்த்தியடைதல் என்னும் கிரியையுடன் கூடியிருப்பதால் ஜீவனே பிரம்மம் என்கிற ஞானமுண்டாகட்டுமே யெனின் இதுவும் சரியன்று. (61)

(d) (யாகத்தில் ஹோமம் செய்யவேண்டிய நெய்யானது சம்ஸ்காரத்தை அடையும்பொருட்டு பத்னியினுடைய பார்வையை அபேக்ஷிக்கிறது போல்) கர்மத்தில் கர்த்தா என்கிற ரூபமாய் அங்கமாயிருக்கிற ஜீவனுக்கு சம்ஸ்கார முண்டாகும்பொருட்டு ஜீவனே பிரம்மம் என்கிற ஞானம் விதிக்கப்பட்டிருக்கட்டுமே யெனின் இதுவும் சரியன்று. (62)

(e) (மேற்சொல்லிய சம்பதாதிரூபஞானம் கூடாதென்பதற்கு இனி காரணம் சொல்லுகிறார்) பிரம்மாத்மைக்கிய விஞ்ஞானமானது சம்பதாதிரூபமாக இருக்கும்பக்ஷத்தில்

(1) तत्वमसि (சா VI-8-7)

(2) अहं ब्रह्मास्मि (பி I-4-10

(3) अयमात्माब्रह्म (பி II-5-19

முதலியவாக்கியங்களிலுள்ள பதங்களால் பிரம்மமே ஆத்மா என்று சொல்லிய விஷயமானது பாதிக்கப்படும்.

(ஏனெனின் உபக்கிரமாதிலிங்கங்களால் ஜீவனே பிரம்மம் என்று ஏற்படுகிறது. சம்பத்ரூபதியானத்தில் இரண்டு பதார்த்தங்களுக்கும் சமான தர்மமட்டும் ஏற்படுகிறது. பிரபலமான ஆதாரங்களைத் தள்ளக்காரணமில்லை.)

भिद्यते हृदयग्रन्थिश्छिद्यन्ते सर्वसंशयाः (मु II-2-8)

இவைமுதலிய அவித்தியா நிவிர்த்தியை பலனாகச்சொல்லுகிற சுருதிகள் நிஷ்பிரயோஜனங்களாகும்.

ரா (ஏனெனின் ஐக்கியஞானத்தால் ஹிருதயத்தின் ராகாதி முடிச்சுகள் நாசமாகின்றன என்று சொல்லியிருப்பதால் ஞானத்தால் அஞ்ஞான நிவிர்த்தி என்று ஏற்படுகிறது. சம்பத் ஞானமோ வாஸ்தவ ஞானமன்று. ஆகையால் அது அஞ்ஞானத்தை நிவிர்த்திக்கமாட்டாது. இதை ஒப்புக்கொள்ளும்பக்ஷத்தில் முந்தினதற்கு விரோதம் வருவதால் சம்பத்ரூபத்தை ஒப்புக்கொள்ளக்கூடாது.)

மேலும் ब्रह्मवेद ब्रह्मैव भवति (मु III-2-9)

முதலிய வசனங்கள் ஜீவன் பிரம்மபாவத்தை அடைவதாகவே அதாவது பிரம்மமாக ஆகிறதாகவே சொல்லுகின்றன. சம்பதாதிபக்ஷத்தில் இந்தவாக்கியங்கள் ஒவ்வா. ஏனெனின் ஜீவனுக்கு பிரம்மத்வம் சம்பத்ரூபம் என்று சொல்லும்பக்ஷத்தில், எப்படி பிரம்மமாகவே ஆவான். ஜீவரூபமிருந்தாலும் பிரம்மத்துடன் சேரமாட்டாது. நஷ்டமானாலும் சேரமாட்டாது. ஆகையால் சம்பதாதிரூபம் சித்திக்கமாட்டாது) ஆகையால் ஜீவபிரம்ம ஐக்கியஞானம் சம்பதாதிரூபமன்று. ஆகையால் பிரம்மாத்ம ஞானமானது புருஷவியாபாரத்தால் சாத்தியமன்று, பின்னேயோ வெனின், பிரத்தியக்ஷாதி பிரமாணங்களுக்கு விஷயமான வஸ்துஞானம்போல் வஸ்துவின் ஆதீனமே. (63)

## 5. பிரம்மம்.

(a) இப்படிப்பட்ட பிரம்மத்துக்காவது அதின் ஞானத்துக்காவது எந்த யுக்தியாலும் கர்மசம்பந்தத்தைக் கற்பிக்கமுடியாது.

மேலும் அறிதல் என்னும் கிரியைக்கு பிரம்மம் விஷயமாக இருப்பதால் பிரம்மத்துக்கு கர்மசம்பந்தம் இருக்கிறதென்று சொல்லக்கூடாது. ஏனெனின்

(1) अन्यदेव तद्विदितादथोऽविदितादधि (கே 1-3 )

என்கிற சுருதியானது பிரம்மம் அறியப்பட்டதை அதாவது காரியத்தைவிடவேறு என்றும், அப்படியே அறியப்படாததைவிட அதாவது காரணத்தைவிட வேறு என்றும் கூறுகிறது.

(2) येनेदं सर्वं विजानाति तं केन विजानीयात्

(நு II-4-13)

என்கிற சுருதியானது "எந்த ஆத்மாவால் இதையெல்லாம் லோகம் அறிகிறதோ அதை எந்த சாதகத்தினால் அறியலாம்" என்று சொல்லுவதால் பிரம்மம் அவிஷயம் என்று ஏற்படுகிறது.

இந்த இரண்டு சுருதிகளாலும் பிரம்மத்துக்கு கர்மசம்பந்தமில்லை என்று தெரியவருகிறது. (64)

(b) அப்படியே பிரம்மம் உபாசனக்கிரியைக்கும் விஷயமன்று. எனெனின்

यद्वाचानभ्युदितं येन वागभ्युद्यते (के I-4)

என்கிற சுருதி பிரம்மம் அவிஷயம் என்றும்

तदेव ब्रह्मत्वं विद्धि नेदं यदिदमुपासते (के I-4)

என்கிற சுருதியானது ஜனங்கள் உபாசிக்கிற உபாதிகளுடன் கூடின தேவதை முதலியவைகள் பிரம்மம் அன்று என்றும் கூறுகிறது. (65)

(c) ஆ न तत्र चक्षुर्गच्छति न वाक् गच्छति नोमनोन विद्मो नविजानीमोयथैदमनुशिष्यात् (के I-3)

என்கிறவாக்கியத்தால் பிரம்மம் ஞானத்துக்கு விஷயம் அன்று என்று ஏற்படுகிறது. அப்படியானுல் பிரம்மம் சாஸ்திரத்தினுல் அறியப்படமாட்டாது அப்போது शास्त्रयोनित्वात् என்கிற ஸூத்திரத்தால் பிரம்மம் சாஸ்திரத்தால் அறியத்தக்கது என்று சொன்னதானது பொருந்தாது.

ஐ (இந்த ஆக்ஷேபம் யுக்தமன்று. வேதாந்தத்தாலுண்டாகும் விருத்தியில் தோன்றும் சைதன்னியத்துக்கு பிரம்மம் விஷயமாகாவிட்டாலும், அந்த விருத்திக்கு விஷயமாகும்) அவித்தையால் கற்பிக்கப்பட்ட பேதத்தை நிவிர்த்தி செய்வதிலேயே சாஸ்திரத்தின் கருத்து ஏற்பட்டிருக்கிறது. சாஸ்திரமானது "இது பிரம்மம்" என்பதாய் பிரம்மத்தை ஞானத்துக்கு விஷயமாகக் கூறவில்லை. பின்னையோவெனின் ஜீவனே பிரம்மம் என்று சொல்லுவதினுல் அவிஷயம் என்று கூறி அவித்தியா கற்பிதமான அறிகிறவன், அறியத்தகுந்த வஸ்து, அறிதல்முதலிய பேதங்களையும் போக்கடிக்கிறது. இதற்குப்பிரமாணம்:—

यस्यामतं तस्य मतं यस्य न वेदसः (केन II-3)

அதாவது பிரம்மமானது சைதன்னியத்துக்கு விஷயமன்று என்று எவனுடைய நிச்சயமோ, அவன் அதை செவ்வையாக அறிந்தவன், பிரம்மம் சைதன்னியத்துக்கு விஷயம் என்று எவன் நினைக்கிறுனே அவன் அதை அறிந்தவனல்ல.

இந்த அர்த்தத்தையே அடியிற்கண்ட சுருதியும் கூறுகிறது.

(1) अविज्ञातं विजानतां विज्ञातं अविजानतां (के II-3)

ஞானிக்கு அவிஷயமாயும் அஞ்ஞானிக்கு விஷயமாயும் காணப்படுகிறது.

(2) न दृष्टेर्द्रष्टारं पश्येर्न विज्ञातेर्विज्ञातारं विजानीयाः (बृ 3-4-2)

சக்ஷு விருத்தி மனோவிருத்திகளுக்கு சாக்ஷியாயிருக்கிறதை இந்த விருத்திகளால் அறியாதே, புத்திவிருத்திக்கு சாக்ஷியாயிருப்பதை அவ்விருத்திக்கு விஷயமாக அறியாதே. (66)

6. மோக்ஷத்தின் ஸ்வரூபம்.

(ரா) ஆகையால், அதாவது பூர்வபக்ஷி சொல்லுகிறபடி சித்திக்காததால்

ஐ (எப்படியெனின்:-மோக்ஷமானது உபாசனையால் சாத்தியமாயும் நித்தியமாயு மிருக்கட்டுமே என்பது பூர்வபக்ஷியின் மதம். எது சாத்தியமோ அது அநித்தியம் என்று சுருதி அனுபவங்களால் தெரியவருகிறது. ஆகையால் மோக்ஷம் சாத்தியமாயும் நித்தியமாயும் இருக்கமுடியாது.) அவித்தையால் கல்பிதமான சம்சாரத்தை ஞானத்தால் நிவிர்த்திபண்ணுவது மூலமாக, (கழுத்தில் போட்டிருக்கும் மாலையானது இருந்தும் பிரமையால் இராததுபோல் முதலில்தோன்றி, பிறகு பிரமை நிவிர்த்தியின்பேரில் அகப்பட்டதுபோல் தோன்றுவதுபோல்) மோக்ஷஸ்வரூபம் நித்தியமுக்த ஆத்மஸ்வரூபமாகவே சித்தமாகிறபடியால், மோக்ஷமானது ஞானத்தால் சித்தமானுலும் அநித்தியம் என்கிற தோஷத்துக்கு உட்படவில்லை (67)

(ரா) 52-வது பிரிவில் மோக்ஷமானது பாரமார்த்திகத்தில் கூடஸ்தநித்தியம் என்று சொன்னதை உற்பத்தி, விகாரம், பிராப்தி, சம்ஸ்காரம் ஆகிய நான்குவிதமான காரியபலமாயும் மோக்ஷமிராததால், அது உபாசனசாத்தியம் அல்லவென்று கூறுவதினுல் இது முதல் வரையிலுள்ள கிரந்தத்தால் விஸ்தாரப்படுத்துகிறுர்.)

எவனுடைய மதத்தில் மோக்ஷமானது

1. உற்பத்தியடைகிறதாகச் சொல்லப்பட்டிருக்கிறதோ, அந்த மதத்தில் மோக்ஷம் மானஸிக, வாசிக காயிககர்மத்தால் உண்டாகிறது என்று சொல்லுவது யுக்தம்.

2. அப்படியே விகாரம் அதாவது வேறு அவஸ்தையை அடைவதாகச்சொல்லும் மதத்திலும் அறியவேண்டியது

இந்த இரண்டு பக்ஷங்களிலும் மோக்ஷம் நிச்சயமாக அநித்தியம் என்று ஏற்படுகிறது. (68)

3. (a) (1) விகாரமடையும் தயிர் முதலியதானது

(2) உண்டுபண்ணப்படும் கடாதியானது

நித்தியமாயிருப்பதாக லோகத்தில் காணப்படவில்லை. மோக்ஷம் அடையத்தகுந்ததாகையால் கர்மத்தை அபேக்ஷிக்கிறது என்று சொல்லுவது சரியன்று ஏனெனின்

रा (1) (பிரம்மம் ஜீவனைவிட வேறாகாதபக்ஷத்தில்) மோக்ஷமும் தன் ஸ்வரூபமாக இருப்பதால் அடையும்படியானது ஒன்றுமில்லை.

(2) தன்னைவிட வேறாக பிரம்மமிருக்கும்பக்ஷத்தில், அப்போதும் அடையத்தகுந்ததாக இல்லை. ஏனெனின் ஆகாசம்போல் எங்கும் வியாபித்திருப்பதால் எப்போதும் அடையப்பட்டதாகவே யிருக்கிறது. (69)

(3) (b) மேலும் இந்த மோக்ஷமானது யாதொரு சம்ஸ்காரத்தாலும் உண்டாகாததால் ஒரு வியாபாரத்தையும் அபேக்ஷிக்கவில்லை. சம்ஸ்காரமானது நூதனமாய் குணத்தைக் கொடுக்கிறதாயும் அல்லது இருக்கிறதோஷத்தை நிவிர்த்திக்கிறதாயுமிருக்கும் காரியம்.

(திருஷ்டாந்தம்:—தாம்பூலசரணத்தால் முகத்துக்கு குணபிராப்தி. ஸ்நானத்தியால் தேகத்துக்கு மலநிவிர்த்தி.) மோக்ஷம் நிர்குணபிரம்மஸ்வரூபமாகையால் எந்த சம்ஸ்காரத்தாலும் யாதொருகுணமும் உண்டாகமாட்டாது. மேலும் மோக்ஷமானது நித்தியசுத்த பிரம்மஸ்வரூபமாகையால் எதினாலும் தோஷநிவிர்த்தி செய்யக்கூடிய யாதொரு சம்ஸ்காரத்தையும் அபேக்ஷிக்கமாட்டாது. (70)

4. रा:—ஆ:-பிரம்மாத்மஸ்வரூபமே மோக்ஷம். அது அநாதியான அவித்தையாகிற மலத்தால் மூடப்பட்டிருக்கிறது. அந்தமலம் உபாசனையால் நஷ்டமானதின்பேரில் அது (பிரம்மஸ்வரூபம்) வியக்தமாய் விளங்குகின்றது. கண்ணாடியின் அழுக்கை தேய்த்தபின் அந்த கண்ணாடியானது சுத்தமாய் தெரிவதுபோலும் (71)

5. [रा:—ச:-சம்ஸ்காரத்தால் மலநாசமாகிறது என்று சொல்லுகிறாய். இந்த மலமானது ஆத்மாவினிடத்தில்

1. சத்தியமாயிருக்கிறதா?

2. கற்பிதமாயிருக்கிறதா?

1. கற்பிதம் என்று சொன்னால் ஞானத்தால் அது நாசமாகுமேதவிர கிரியையால் ஆகமாட்டாது.

2. சத்தியம் என்று சொன்னால் அந்த மலமானது.

(1) ஆத்மாவினிடத்திலிருக்கிறதா? அல்லது

(2) வேறு இடத்திலிருக்கிறதா?

1. முதலாவது பக்ஷம் கூடாது. ஏனெனின்] ஆத்மா யாதொரு கிரியைக்கும் ஆசிரயமாயில்லை. ஒரு கிரியையானது எதை ஆசிரயித்திருக்கிறதோ அதை விகாரப்படுத்தாமல் அது சித்திக்கமாட்டாது.

ஆத்மாவானது கிரியையால் விகாரமடைவதானால், அப்போது ஆத்மா அநித்தியம் என்று முடியும். அப்போது

अविकार्योयमुच्यते

முதலிய வாக்கியங்கள் பாதிக்கப்படுவதால் சம்மதமன்று. ஆகையால் ஆத்மாவை ஆசிரயித்திருப்பதாக யாதொரு கிரியையுமில்லை.



2. இரண்டாவது பக்ஷமும் கூடாது.

रा (சாவயவமான கண்ணாடிக்கும் செங்கற் பொடிக்கும் சம்பந்தமுண்டாவதுபோல்) நிரவயமான ஆத்மாவுக்கும் வேறு பதார்த்தத்துக்கும் சம்பந்தமுண்டாகாதபடியால், ஆத்மாசம்ஸ்காரத்தையடையமாட்டாது. (72)

6. ஆ:-रा வேறிடத்திலிருக்கிற கிரியையால் வேறு ஒருவன் சம்ஸ்காரமடைகிறதில்லை என்று சொன்னது யுக்தமன்று. ஏனெனின்) தேகத்தை ஆசிரயித்துக்கொண்டிருக்கிற ஸ்நான, ஆசமன, யஞ்ஞோபவீத முதலிய கிரியைகளால் தேகியான ஜீவன் சம்ஸ்காரமடைவதாக பிரத்தியக்ஷமாய் தெரியவருகிறது

ஆகையால் வேறிடத்திலிருக்கிற கிரியையால் ஆத்மாவுக்கு சம்ஸ்காரமுண்டாகமாட்டாது (என்பது) இல்லை. (73)

7. (a) சித்:—இந்த ஆக்ஷேபம் சரியன்று, "தேகம், அந்தக்கரணம் முதலியவைகளே நான்" என்று அவித்தையால் பாவிக்கிற ஜீவன்தான் சமஸ்

காரமடையக்கூடும். ஸ்நான ஆசமனாதிகள் தேகத்தில் சம்பந்தப்படுவது பிரத்தியக்ஷம். தேகத்தை ஆசிரயித்துக்கொண்டிருக்கிற கிரியையால் தேகத்தைத் தான் என்று அவித்தையால் பாவித்தவன் சம்ஸ்காரமடைவது யுக்தம். சரீரத்துக்குச்செய்த சிகிச்சையால் வாதபித்தாதிகள் சமதையை அடைந்து இந்தசரீரமே தான் என்று அபிமானமுள்ளவன் "நான் ரோகற்றவன்" என்பதாய் நினைக்கிறான் இதுபோல் ஸ்நானஆசமன யஞ்ஞோபவீதாதிகளால் நான் சுத்தன், சம்ஸ்காரமடைந்திருக்கிறேன், என்று எப்போது நினைக்கிறானோ, அப்போது அவனே சம்ஸ்காரமடைகிறான். அவனே தேகாத்தியாசமுள்ளவன். நான் என்கிற ஞானத்துக்கு விஷயமாயும் காமக்குரோதாதிகளுடன் கூடியுமிருக்கிற "நான் கர்த்தா" என்னும் அத்தியாசமுள்ளவனே சகல காரியங்களையும் செய்கிறான். அவைகளின் பலத்தையும் அவனே அனுபவிக்கிறான். (74)

(b) (விசிஷ்டனே போக்தா, கேவலசாக்ஷீ போக்தாவல்லவென்பதற்குப் பிரமாணம்:—)

(1) तयोरन्यः पिप्पलं स्वाद्वत्त्यनश्नन्नन्योऽभिचाकशीति (मु-III-1-1)

ஜீவன் பிரம்மம் இவர்களுக்குள் ஜீவன் கர்மபலத்தைத் அனுபவிக்கிறான். பிரம்மம் சுத்த சாக்ஷியாயிருந்துகொண்டு ஒன்றையும் புஜிக்காமல் ஸ்வப்பிரகாசமாயிருக்கிறது.

(2) आत्मेन्द्रियमनोयुक्तं भोक्तेत्याहुर्मनीषिणः (क I-3-4)

தேகம், இந்திரியம், மனது இவைகளுடையவன் போக்தாவான ஜீவன் என்று ஞானிகள் சொல்லுகிறார்கள். (75)

(c) (நிருபாதிகத்துக்கு சம்ஸ்காரமில்லை என்பதற்கு பிரமாணம்)

(1) एकोदेवः सर्वभूतेषु गूढः सर्वव्यापी सर्वभूतान्तरात्मा कर्माध्यक्षः सर्वभूताधिवासः साक्षी चेता केवलो निर्गुणश्च (श्वेVI-11)

சகல பூதங்களிலும் அத்விதீயனான ஒரேதேவதை ஸ்வயம் பிரகாசிக்கிறது. ஆயினும் மாயையால் மூடப்பட்டிருப்பதால் பிரகாசிக்கிறதில்லை. சர்வவியாபியாயும், சர்வபூதங்களிலும் அந்தராத்மாவாயும், கர்மசாக்ஷியாயும், சர்வபூதங்களிலும் அதிஷ்டானமாயிருந்து சாக்ஷியாயும், கேவலம் சேதனரூபமாயும், நிர்க்குணமாயும், இருக்கிறது.

(2) सपर्यगात् शुक्रमकायमव्रणमस्नाविरं शुद्धमपापविद्धम्

இந்த ஆத்மா எங்கும் வியாபி, தேஜஸ்வி, லிங்கமற்றவன் அடிபடாதவன் நரம்பற்றவன் (ஸ்தூல சூக்ஷும காரண சரீரங்களற்றவன்) ராகாதி தோஷமற்றவன் புண்ணியபாப சம்பந்தமற்றவன்.

இந்த மந்திரங்கள் பிரம்மத்தை நிர்க்குணமென்றும் நித்தியசுத்தமென்றும் காண்பிக்கின்றன. (76)

## 7. ஞானவிஷய விசாரம்.

(1) பிரம்மமே மோக்ஷம். ஆகையால் மோக்ஷமும் சம்ஸ்காரத்தை அடையமாட்டாது. உற்பத்தி ஆப்தி, விகாரம், சம்ஸ்காரம் இவைகளைத்தவிர வேறான ஒரு கிரியாபலன் இருக்கிறதென்றும் அந்த கிரியையால் மோக்ஷம் சித்திக்கும் என்றும் கற்பிக்கமுடியாது. ஆகையால் மோக்ஷ விஷயத்தில் ஞானத்தைத் தவிர ஒரு கிரியையின் வாசனைகூடச் சேரமாட்டாது. (77)

(2) ஆ:-ஞானமே மானசிககிரியை ஆனதே. 78

(3) சி:-மானசிகக்கிரியை அன்று. ஏனெனின் கிரியைக்கும் ஞானத்துக்கும் வெகு பேதமிருக்கிறது. எப்படி எனின், எந்த விஷயத்தில் வஸ்துஸ்வரூபத்தை அபேக்ஷிக்காமலே எது விதிக்கப்படுகிறதோ அது கிரியை எனப்படும். (கிரியையானது வஸ்துஸ்வரூபத்தை அபேக்ஷிக்காமல் சித்திக்கிறவிஷயத்தில் திருஷ்டாந்தம்)

(1) यस्यै देवतायै हविर्गृहीतं स्यात् तां मनसा ध्यायेद्वषट् करिष्यन्

எந்த தேவதையின் பொருட்டு அத்வர்யுவானவன் ஹவிஸைக்கிரகிக்கிறானோ அந்த தேவதையை ஹோதாவானவன் வஷட்காரத்தைப் பண்ணப்போகிறவனாயிருந்துகொண்டு மனதினால் தியானம் செய்யவேண்டியது.

(2) सन्ध्यां मनसा ध्यायेत्

சந்தியாதேவதையை மனதினால் தியானம் செய்யவேண்டியது.

இவைமுதலிய வாக்கியங்களில் வஸ்துவின் ஸ்வரூபத்தை கவனிக்காமலே எப்படி தியானிக்கவேண்டுமென்று சொல்லியிருக்கிறதோ அப்படி செய்வதே தியான கிரியையாம். தியானம் என்பது இந்தவிதத்தில் அது மானசிகமாயிருந்தாலும், புருஷனுடைய சுவாதீனமாக இருப்பதால், அந்த செய்யவாவது, செய்யாமலிருக்கவாவது, விபரீதமாய்ச் செய்யவாவது முடியும்.

ஞானமோ பிரமாணத்தால் உண்டாகிறது, பிரமாணமோ வஸ்துவை உள்ளபடி விஷயமாக்குகிறது. ஆகையால் ஞானத்தைச் செய்யவாவது, செய்யாமலிருக்கவாவது, அல்லது வேறு விதமாக செய்யவாவது முடியாது. ஞானம் கேவலம் வஸ்துவையே பொருந்திருக்கிறது. அது விதிக்குட்படமாட்டாது, புருஷனுடைய சுவாதீனத்திலுமில்லை. ஆகையால் ஞானம் மானசிகமாயிருந்தாலும், ஞானத்துக்கும் தியானத்துக்கும் மிகுந்த பேதமிருக்கிறது.

திருஷ்டாந்தம்:—

पुरुषो वाव गौतमाग्निः योषावावगौतमाग्निः (छा V—7—1)

இவ்விடத்தில் புருஷனிடத்திலும் ஸ்திரீயிடத்திலும் அக்கினி புத்தியானது மானசீகமாக உண்டாகிறது. அது கேவலம் விதியால் ஏற்பட்டபடியால் கிரியையே. அது புருஷனுடைய சுவாதீனத்திலிருக்கிறது.

பிரசித்தமான அக்கினியினிடத்தில் அக்கினி என்னும் யாதொரு புத்தியுண்டோ அது விதியின்பேரில் ஏற்பட்டதன்று, புருஷனுடைய இஷ்டத்தைப் பொருந்திருக்கவில்லை, ஆனால் அது (அக்கினிபுத்தி) பிரத்தியக்ஷமான வஸ்துவையே பொருந்திருக்கிறது. ஆகையால் அது ஞானமேதவிர கிரியை அன்று. இப்படியே சகல பிரமாணங்களுக்கும் விஷயமான வஸ்துக்களிலும் அறியவேண்டியது.

இப்படியிருப்பதினால் (ஞானமானது விதிக்கு விஷயமாயிராததால்) பிரம்மாத்மைக்கிய விஷயமும் ஞானமே, விதிக்குட்பட்டதன்று. ஆகையால்

ரா (1) आत्मानं पश्येत्

(2) ब्रह्मत्वं विद्धि (के 1—4)

(3) आत्मा द्रष्टव्यः (बृ IV—5—6)

முதலிய வாக்கியங்கள் விதிவாக்கியங்கள் போல் சொல்லியிருந்தாலும், அவைகள் கற்களில் பேரய்ப்பட்ட தீக்ஷணமான கத்திபோல் மழுங்கிப் போகின்றன. ஏனெனின் நியோஜ்ஜியனுமில்லை, விஷயமுமில்லை. [ரா "எனக்கு இந்த காரியம் ஆகவேண்டியது." என்று நினைக்கிறவன் நியோஜ்ஜியனாகிறான். காமத்தால் சாத்தியமானது தான் விதிக்கு விஷயமாகும். ஞானம் காமத்தால் சாத்தியமாகாமையால், நியோஜ்ஜியனும் (அதிகாரியும்) ஏற்படவில்லை. விதி விஷயமும் ஏற்படவில்லை.] (79)

(4) அப்படியானால்

आत्मावा अरे श्रोतव्यः द्रष्टव्यः (बृ IV—5—6)

முதலிய விதிபோல் காணப்படும் வாக்கியங்களின் பிரயோசனம் என்ன?

[ரா விதிகளைப்போதிக்கும் சப்தங்களால் ஆத்மஞானமானது பரபுருஷார்த்த சாதனம் என்று ஸ்துதிக்கப்படுகின்றது. இந்த ஸ்துதியால் அதிக்ப்பிரீதியின்பேரில் விஷயத்தில் உண்டாகும் யாதொரு பிராந்தியுண்டோ, அந்த பிராந்தியால் ஆத்மசிரவணாதிகளுக்குப் பிரதிகூலமான யாதொரு விஷயாதிகளில் பிரவிர்த்தியுண்டோ அந்த பிரவிர்த்தியை நிவர்த்திப்பதில் இந்த விதிபதங்கள் பிரயோசனப்படுகின்றன என்று சொல்லுகிறோம். பஹிர்முக புருஷன் எனக்கு இஷ்டமானது உண்டாகட்டும், அனிஷ்டமானது உண்டாகவேண்டாம் என்பதாய் ஒரு விஷயத்தில் பிரவிர்த்திக்கிறான். இப்படிப்பட்டவன் பரபுருஷார்த்தத்தை இச்சிக்கிறவனை சுவாபாவிகமான சரீரபிரவிர்த்திக்கு விஷயமானவைகளினின்றும் திருப்பி, பிரத்தியகாத்மாவினிடத்தில் சித்தத்தை எப்போதும் பிரவாஹரூபமாய் செலுத்தும்படி द्रष्टव्यः முதலிய வசனங்கள் செய்கின்றன.

(ரா ஞான சாதனங்களான சிரவணாதிகளில் பிரவிர்த்திக்கும்படி செய்கின்றன என்பது கருத்து) ஆத்மஞானத்தின்பொருட்டு பிரவிர்த்தித்தவனுக்கு அஹேயமாயும் அதாவது தள்ளத்தக்கதாயும் அனுபாதேயமாயும் அதாவது எடுக்கத்தகாததாயுமிருக்கிற ஆத்மதத்துவமானது அடியிற்கண்ட சுருதிகளால் உபதேசிக்கப்படுகின்றது:

(1) इदं सर्वं यदयमात्मा

இந்த ஜகத்து யாதொன்றுண்டோ அது ஆத்மாவே என்பதினால் அனாத்மா பாதிக்கப்பட்டு ஆத்மாவே போதிக்கப்படுகிறது.

(2) यत्रत्वस्य सर्वमात्मैवाभूत् तत् केनकंपश्येत् केनकं विजानीयात् (बृ VI—5—15)

எல்லாம் ஆத்மாவானபோது எதை எதினால் பார்க்கிறது, அறிகிறது.

(3) विज्ञातारमरे केन विजानीयादयमात्माब्रह्म (बृ IV-5-15)

அறிகிறவனை எதினால் அறிகிறது. இந்த ஆத்மா பிரம்மம்.

ஞானத்தில் விதியை ஒப்புக்கொள்ளாதபக்ஷத்தில் வாக்கியங்களுக்கு பிரவிர்த்தி நிவிர்த்தி பிரயோசனங்கள் ஏற்படமாட்டா என்று பூர்வபக்ஷிசொன்னது நமக்கு இஷ்டம்தான். பிரம்மாத்மைக்கிய ஞானமுண்டானவளவில் சர்வகர்மங்களையும் விட்டுவிடுவதும் கிருதகிருத்தியனாக ஆவதும் நமக்கு இஷ்டமே. பிரமாணம்

(1) आत्मानं चेद्विजानीयादयमस्मीतिपूरुषः किमिच्छन् कस्यकामाय शरीरमनुसंज्वरेत् ॥ बृ (VI-4-12)

ரா (ஸ்வயம் பிரகாசமான ஆநந்த ஸ்வரூப பரமாத்மாவே நான் என்று அறிகிறவன் எந்தபலத்தை இச்சித்து எவனுடைய திருப்தியின்பொருட்டு சரீரத்தை ச்சிரமப்படுத்துவான். போக்தாவும் போக்கியமுமிராதபடியால் ஆத்மஞானியானவன் கிருதகிருத்தியனாகிறான் என்பது கருத்து.

(2) एतद्बुद्ध्वा बुद्धिमान् स्यात्कृतकृत्यश्चभारत (गीता XV-20)

அர்ச்சுனா! இதை அறிந்து புத்திமானும் கிருதகிருத்தியனும் ஆவான். ஆகையால் பிரம்மமானது ஞான (உபாசனா) விதிக்கு விஷயமாக (அங்கமாக) ஏற்படவில்லை.

(விருத்திகார மதகண்டனை முற்றிற்று) (80)

8. (பிராபாகர் மதகண்டனை)

பிராபாகரன் சொல்லுகிறதாவது:—வேதமானது பிரவிர்த்தியையாவது நிவிர்த்தியையாவது அல்லது இவைகளுக்கு அநுகூலமானவைகளையாவது போதிக்கிறதேதவிர வேறு ஒன்றையும் போதிக்கவில்லை (39-வது பிரிவு பார்க்க.)

சித்தாந்தி:—இது சரியன்று. உபநிஷத்தால் அறியக்கூடிய புருஷன் பிரவிர்த்திநிவிர்த்திகளுடன் சம்பந்தப்பட்டவனன்று. உபநிஷத்தாலேயே அறியக்கூடிய புருஷன் அசம்சாரியானபிரம்மம் உற்பத்தி முதலியநான்குவித பலத்தைவிட வேறானவன்; வேறு ஒன்றுக்கும் அங்கமன்று (ஒன்றுடனும் சம்பந்தப்பட்டவனன்று) இவன் இல்லை என்றாவது, அறியப்படவில்லை என்றாவது சொல்லமுடியாது.

सएषनेतिनेतिआत्मा(बृ III—9—26)

என்று வேதம் ஆத்ம சப்தத்தால் பிரம்மத்தை கூறுகிறது. ஆத்மாவை இல்லையென்று சொல்லமுடியாது. எவன் இல்லை என்று சொல்லுகிறானோ அவனே ஆத்மாவாக இருக்கிறான்.

ரா ஆ:—ஆத்மா நான் என்னும் ஞானத்துக்கு விஷயமாயிருப்பதால் உபநிஷத்தாலேயே அறியத்தக்கது என்று சொல்லக்கூடாது.

சி:—அது யுக்தமன்று [ரா ஆத்மா அஹங்காராதிகளுக்கு சாட்சியாயிருப்பதால்] நான் என்கிற ஞானத்துக்குவிஷயமன்று. (ரா அந்தசாட்சிலோகசித்தமன்று. உபநிஷத்துசித்தமே) நான் என்கிற ஞானத்துக்கு விஷயமான யாதொரு கர்த்தா உண்டோ அவனைவிட வேறாயும் அவனுக்கு சாக்ஷியாயும் சர்வ பூதங்களிலும் இருக்கிறதாயும், சமமாயும், ஏகமாயும், கூடஸ்த நித்தியமாயும் இருக்கிற பிரம்மம் கர்மகாண்டத்திலாவது, தர்க்கத்திலாவது எவனாலாகிலும் அறியப்படவில்லை. ஆகையால் அது எவனாலும் நிராகரிக்கவும் முடியாது. விதிக்கு அங்கம் என்று சொல்லவாவது எவனாலும் முடியாது. சகலத்துக்கும் ஆத்மாவாக இருப்பதால் அதை தள்ளவும் முடியாது, எடுத்துக்கொள்ளவும் முடியாது. நாசத்தை அடையக்கூடிய புருஷவரையிலுள்ள (அதாவது புருஷன் நீங்கலாக) சகலமும் விகாரமடைவதால் நசித்துப்போகிறது. புருஷனோ நாசமடைவதற்குக் காரணமிராதபடியால் அவினாசியாயிருக்கிறான். விகாரத்தை அடைய காரணமிராததால் கூடஸ்த நித்தியனாயிருக்கிறான். ஆகையால், (நிர்விகாரமாகையால் ஸ்வபாவத்தில்) நித்திய சுத்தனாயும் புத்தனாயும் முக்தனாயுமிருக்கிறான். ஆகையால்,

(1) पुरुषात् नपरं किञ्चित् साकाष्टासापरागतिः (க. I.3-11)

புருஷனைவிட சிரேஷ்டமானது ஒன்றுமில்லை. புருஷனே சகலத்துக்கும் முடிவு.

ரா (இந்த சுருதியானது பிரம்மம் விதிக்கு அங்கமன்று என்பதைக் கூறுகிறது. அடுத்த சுருதி பிரம்மம் வேதாந்தத்தால் வேத்தியம் என்பதைக் கூறுகிறது.)

(2) तन्त्वौ पनिषदंपुरुषं पृच्छामि (ப்ரு III-9-26)

சாகல்லியரே, காரணசகித சூத்திராத்மாவுக்கு அதிஷ்டானமான புருஷனைப்பற்றி உம்மைக் கேட்கிறேன்.

இந்த சுருதியில் புருஷனுக்குக் கொடுத்திருக்கிற ஔபநிஷதம் என்னும் விசேஷணத்தால் உபநிஷத்தாலேயே முக்கியமாய் புருஷன் பிரதிபாதிக்கப்படுகிறான் என்பது தெரியவருகிறது. ஆகையால் சித்தவஸ்துவைச் சொல்லுவதாக யாதொரு வேத பாகமும் காணப்படவில்லை என்று சொன்னதானது அபவசனமே. (81)

9. (35-வது பிரிவில் சொன்னதற்கு உத்தரம்.)

வேதத்தின் கருத்தானது கர்மத்தைப் போதிப்படுதென்பதாய் சாஸ்திரஞ்ஞர்களுடைய அபிப்பிராயம் என்று முன் பூர்வபக்ஷி சொன்னான். இந்த சாஸ்திரஞ்ஞர்களுடைய வசனங்கள் தர்மத்தை விசாரிக்கிறபடியால் விதிநிஷேதங்களைக்கூறும் சாஸ்திர (கர்மகாண்ட) விஷயமாய் ஏற்பட்டதாய் நினைக்கவேண்டியது. (சகல வேதங்களைப்பற்றியும் சொல்லுவதாய் நினைக்கக்கூடாது.)

மேலும் आम्नायस्य क्रियार्थत्वादानर्थक्यमतदर्थानाम्

என்கிற வாக்கியத்தினால்

1. வேதங்களுக்கு கருத்து கிரியையே

2. கிரியையைக்கூறாத வேதவாக்கியம் நிஷ்பிரயோசனம்

என்று நியமமாய் ஒப்புக்கொள்ளுகிறவர்களுடைய மதத்தில் சித்தவஸ்துவின் உபதேசம் வியர்த்தமாகும்.

(ரா திருஷ்டாந்தம் தயிரால் ஹோமம் செய் என்கிற இடத்தில் தயிர் சித்தவஸ்துவானதாலும் ஹோமம் செய்வதே வேதத்தின் கருத்தானதாலும், அதைப்பற்றிய பிரஸ்தாபம் வியர்த்தமாகும். அப்படி வியர்த்தமாகாமலிருக்கும்பொருட்டு) பிரவிர்த்தி நிவிர்த்திகளன்றியில் அவைகளுக்கு அங்கமாக சித்தவஸ்துக்களையும் வேதம் உபதேசிக்கிறதாகச் சொல்லும் பக்ஷத்தில், सत्य முதலிய வேதவாக்கியங்கள் கூடஸ்த நித்தியமான பிரம்மமாகிற சித்தவஸ்துவை உபதேசிக்கவில்லை என்று சொல்ல என்ன காரணமிருக்கிறது. (கர்மகாண்டத்தில் दध्ना जुहोति முதலிய இடங்களில் உபதேசமானது கிரியாபரமாயும் அல்லது கிரியையின் அங்கபரமாயும் ஏற்பட்டிருப்பதுபோல் கூடஸ்த விஷயத்தில் கிரியாபரமாயும் அங்கபரமாயும் ஏற்படவில்லை என்று சொல்லுகிறாயா ?)

முதலாவது பக்ஷத்தில் உபதேசிக்கப்படுகிற சித்தவஸ்துவானது கிரியை ஆகமாட்டாது.

இரண்டாவது பக்ஷமும் சித்தவஸ்துவானது கிரியையாகாவிட்டாலும் கிரியைக்கு சாதனமாயிருப்பதால் அந்த உபதேசத்தின் கருத்து கிரியை உத்தேசித்தே என்று சொல்லும்பக்ஷத்தில் அதில் தோஷமில்லை. கிரியை உத்தேசித்தே உபதேசம் செய்யப்பட்டிருந்தாலும், எந்தவஸ்துவைப்பற்றி உபதேசம் செய்யப்பட்டிருக்கிறதோ அது அந்த கிரியையை நிறைவேற்றுவதில் சமர்த்தமாயிருக்கிறது. அதின் பிரயோசனம் கிரியை உத்தேசித்தே இதனால் வஸ்து உபதேசிக்கப்படவில்லை என்று ஏற்படமாட்டாது. இப்படி உபதேசம் செய்வதினால் உனக்கு என்னப்பிரயோசனம் கிடைத்து விட்டது என்று கேட்பாயோ

ரா (அதாவது தயிர் முதலியவைகள் ஸ்வத: பிரயோசனமற்றவையானாலும் கிரியை மூலமாக பிரயோசனமுள்ளவைகளானதால் அவைகளைப்பற்றி உபதேசம் ஏற்பட்டிருந்தாலும், கூடஸ்தப் பிரம்மத்தை ஒப்புக்கொள்ளுகிறவர்களுக்கு கிரியை மூலமாக யாதொரு பிரயோசனமும் இல்லாதபடியால், தயிர் திருஷ்டாந்தத்தால் என்ன பிரயோசனம் என்று கேட்பாயோ)

(சித்தவஸ்துவின் உபதேசம் பிரயோசனப்படுவதற்கு கிரியையே த்வாரம் காரணம் என்பது நியமமில்லை. ரஜ்ஜு ஞான மாத்திரத்தாலேயே பிரயோசனம் கண்டிருக்கிறோம் என்று சொல்லுகிறார்

இதரப்பிரமாணங்களால் அறியப்படாத ஆத்ம வஸ்து விஷயமான உபதேசம் தயிர் முதலியவைகள் போல் பிரயோசன முள்ளதாகும். அதை அறிவதினால் சம்சாரத்துக்குக் காரணமான மித்தியாஞானமானது நிவிர்த்தியாகிறதால் பிரயோசனம் கிடைக்கிறது.

श (தயிர் முதலியவைகளுக்கு கிரியை மூலமாக பிரயோசனம் ஏற்படுகிறது. பிரம்மத்துக்கு ஸ்வத: பிரயோசனம் ஏற்படுகிறது. இப்படி இரண்டுக்கும் வித்தியாசம் காணப்பட்டாலும், கர்மகாண்டம் சித்தவஸ்துவின் பிரயோசனத்தைக் கூறுவதுபோல்) வேதாந்தங்கள் சித்தவஸ்துவின் பிரயோசனத்தைக் கூறுவதில், தயிர் முதலியவைகளின் உபதேசத்துக்குச் சமானமாயிருக்கின்றன. (82)

(இதுவரையில் விதி வாக்கியத்திலுள்ள தயிர் முதலியபதங்கள் சித்தவஸ்துவை உபதேசிப்பதினால் பிரயோசனமுள்ளவைகளாக இருப்பதுபோல், வேதாந்தமும் சித்தவிஷயத்தையே உபதேசிக்கின்றன என்று சொல்லப்பட்டது, இனி நிஷேதவாக்கியம் சித்தார்த்தத்தை சொல்லுவதுபோல் வேதாந்தமும் சொல்லுகிறதென்பதை காட்டுகிறார்.)

"ब्राह्मणो न हन्तव्यः"

(பிராம்மணனைக்கொல்லவேண்டாம் முதலிய வாக்கியங்கள் நிவிர்த்தியை உபதேசிக்கின்றன. இந்த நிவிர்த்தியானது கிரியையுமன்று, கிரியாசாதனமுமன்று. கிரியைபோதிக்காத வாக்கியம் நிஷ்பிரயோசனமென்று சொல்லும் பக்ஷத்தில், நிவிர்த்தியை உபதேசிக்கிற ब्राह्मणो न हन्तव्यः முதலிய வாக்கியங்கள் நிஷ்பிரயோசனமாய்விடும். அது இஷ்டமன்று. இராகத்துவேஷாதிகளால் யாதொரு ஹநநக்கிரியை சம்பவிக்கக்கூடுமோ அதினின்றும் நிவிர்த்தியாகிய ஔதாஸீன்னியத்தைத் தவிர வேறு கிரியாரூபமான அர்த்தத்தை ந காரத்தால் கற்பிக்கமுடியாது. ந காரத்தின் ஸ்வபாவமோ எதனுடன் சம்பந்தப்பட்டிருக்கிறதோ அதின் அபாவத்தைக் கூறுவதேயாம். नात्र घटः என்ற இடத்தில் ந காரம் கடாபாவத்தைக் கூறுவதுபோலும்) அபாவபுத்தியோ உதாஸீனத்தன்மையைக்காப்பாற்றுகிறது.

श (புத்தி க்ஷணக்ஷணத்தில் மாறிக்கொண்டிருப்பதால், அபாவபுத்தி போனவுடன் ஔதாஸீன்னியமும் போய் ஹநநக்கிரியையிலும் பிரவிர்த்தியுண்டாகுமே எனின்)

எப்படி அக்கினியானது காஷ்டத்தை தஹித்து சாந்தமாகிறதோ, அப்படி இந்த நகார அர்த்தமான அபாவபுத்தியும் ஹநநாதிகளுக்குச் சாதகமான இராகமாகிய காஷ்டத்தை தஹித்துவிட்டே சாந்தியடைந்துவிடுகிறது.

(श ராகத்தால் காரியம் நேரிடுகிறது. இராகம் நீங்கினால் காரியம் எப்படி சம்பவிக்கும்?)

ஆகையால் ब्राह्मणो न हन्तव्यः

முதலிய நிஷேதவாக்கியங்கள் யாதொரு காரியத்தையும் செய்யாமல் உதாஸீனமாயிருப்பதையே கூறுவதாக நாம் நினைக்கிறோம்.

பிரஜாபதி விரதமுதலிய வாக்கியங்களில்மட்டும் நகாரத்துக்கு இந்த அபாவம் அர்த்தம் அன்று. (அந்தப்பிரஜாபதி விரத வாக்கியத்தில் "உதிக்கிற சூரியனை பார்க்கமாட்டேன்" என்கிற சங்கற்பம் அதாவது மானசிகக்கிரியை உபதேசிக்கப்பட்டிருக்கிறது.) (நிஷேதவாக்கியம் ஔதாஸீன்னியமாகிய சித்தவஸ்துவைகூறுவதுபோல் வேதாந்தம் பிரம்மத்தை கூறுகிறது என்பது கருத்து) ஆகையால் अक्रियार्थानां आनर्थक्यं

என்பதில் கூறிய நிஷ்பிரயோசனத்வதோஷமானது வேதாந்த வாக்கியங்களுக்கு சம்பந்தப்படாமல், சுதாரூபமாயும், மனிதனுக்கு உபயோகப்படாமலுமிருக்கிற சித்தவஸ்து விஷயமாகத்தான் ஏற்பட்டதாக பாவிக்கத்தக்கது. (83)

10. 39-வது பிரிவிற்கூறிய ஆக்ஷேபத்துக்கு அதாவது வேதம் பிரம்மமானது உபாசனாவிதிக்கு அங்கம் என்று உபதேசிக்காமல் கேவலம் சித்தவஸ்துவே என்று சொல்லுவது நிஷ்பிரயோசனம் ஏழு த்வீபங்களுடன் கூடினது பூமி என்னும் முதலியவாக்கியங்கள் போலும்.

இந்த ஆக்ஷேபத்திற்குச் சமாதானம் அவ்விடத்திலேயே கூறப்பட்டது. இது ரச்சு சர்ப்பம் அன்று என்று வஸ்துவைமட்டும் கூறுவதிலும் பிரயோசனம் காணப்படுகிறது. (84)

11. (अ) ஒருவன் பிரம்மத்தைப்பற்றி விசாரித்தாலும் முன்போலவே சம்சாரியாகக் காணப்படுகிறான். ஆகையால் ரச்சு ஸ்வரூபத்தைக் கூறுவதுபோல் பிரம்மஸ்வரூபவிசாரமும் பிரயோசனமுள்ளது

க்ச் சொல்லக்கூடாது. இப்படி முன் (41-வது பிரிவு பார்க்க). செய்த ஆக்ஷேபத்துக்குச் சமாதானம் என்னவென்னின்:—

நான் பிரம்மம் என்று அறிந்தவன் முன்போலவே சம்சாரியாக இருக்கிறான் என்று காண்பிவிக்க முடியாது. நான் பிரம்மம் என்கிற வேதப்பிரமாணத்தாலுண்டாகிற சாக்ஷாத்காரத்துக்கு விரோதம் வரும். சரீராதிகளே ஆத்மா என்று பாவித்தவனுக்கு துக்கம் பயம் முதலியனவைகள் உண்டாவதைக் கண்டிருக்கிறோம். வேதாந்த ஞானத்தால் பிரம்மமே தான் என்று அறிந்தமாத்திரத்தில் தேகாதிகளில் அபிமானம் நிவிர்த்தியானவனில் அவனுக்கே மித்தியா ஞானத்தாலுண்டாகும் துக்கம் பயம் முதலியவைகள் உண்டாகும் என்று கற்பிக்கமுடியாது. தனத்தில் அபிமானமுள்ள தனிகனான கிரஹஸ்தனுக்கு தனத்தை அபகரிக்கிறதினால் துக்கம் உண்டாகிறதென்று, அவனே தனாபிமானமற்ற சன்னியாசி ஆனபிறகு அவனுக்கே தனாபஹாரத்தால் துக்கமுண்டாகிறதில்லை. ஆபரணத்தை தரித்தவனுக்கு அதினால் சுகம் உண்டாகிறதைப் பார்த்திருக்கிறோம். ஆபரணத்தில் அபிமானம் போனபிறகும் அவனுக்கே முந்தின சுகம் உண்டாகிறதில்லை. சுருதிப்பிரமாணம்:—

अशरीरं वावसन्तं न प्रियाप्रिये स्पृशतः

(஛ VII-12-1)

சரீரமில்லாதவனுக்கு சுகதுக்கங்கள் ஒட்டவில்லை. (85)

(b) 1வது ஆக்ஷேபம்:—சரீரம்விழுந்தபின் சரீரமற்றவன் என்று சொல்லலாம். ஜீவித்திருக்கும்போதே சரீரமற்றவன் என்று சொல்லக்கூடாதெனின்:—

சமாதானம்:—ஆத்மா சரீரமுள்ளவன் என்னும் ஞானம் பிராந்தியாலுண்டாகிறது. இந்த பிராந்தியன்றியில் வேறுவிதமாய் ஆத்மாவுக்கு சரீரம் சித்திக்கிறதாக கற்பிக்கமுடியாது. (ஆகையால் ஜீவித்திருக்கும்போதே பிராந்தி நாசத்தின்பேரில் அசரீரி என்று சொல்லமுடியும்) யாதொரு கர்மத்தாலும் ஆத்மா உண்டாகாதபடியால் எப்போதும் அசரீரி என்று நாம் முன்னமேயே சொல்லியிருக்கிறோம். (86)

(c) 2-வது ஆக்ஷேபம்:—ஆத்மாவினுடைய தர்மாதர்மங்களால் ஆத்மாவுக்கு சரீரம் சித்திக்கிறதென்று சொல்லும் பக்ஷத்தில்,

சமாதானம்:—அது சரியன்று, ஆத்மாவுக்கும் சரீரத்துக்கும் சம்பந்தமே சித்திக்காதபடியால் தர்மாதர்மங்கள் ஆத்மாவால் சித்திக்கின்றன என்று சொல்லக்கூடாது.

3வது:— ஆத்மாவே சரீரியாயிருப்பதால் தர்மாதர்மங்கள் சித்திக்கின்றனவென்று சொல்லும்பக்ஷத்தில்,

அன்னியோன்னியாசிரயதோஷம் அதாவது சரீரத்தால் தர்மாதர்மம், தர்மாதர்மத்தால் சரீரம் இப்படிப்பட்ட தோஷம் சம்பவிக்கும். அனாதியாக இப்படி இருப்பதாகச் சொல்லுவது அந்த பரம்பரைக்குச்சமானமாகும். அதாவது அந்தகர்களில் ஒருவன் மற்றொருவனுக்கு வழிகாட்டுகிறதுபோலாகும். இது பிராமாணிகமாக மாட்டாது.

ஏ விதையினின்றும் மரம், மரத்தினின்றும் விதை இப்படி உண்டாவதை பிரத்தியக்ஷமாய் பார்த்திருப்பதுபோல் கர்மத்தால் ஆத்மாவுக்கு சரீரசம்பந்தம் உண்டாகிறதாகத் தெரியவில்லை; வேதத்தாலும் தெரியவில்லை; அசங்கன் என்று வேதத்தால் தெரியவருகிறது. ஆகையால் ஆத்மா கர்த்தாவேயன்று என்பது கருத்து. (87)

(d) (இனி யுக்தியைக்கூறுகிறார்)

ஆத்மா யாதொரு கர்மத்துடனும் சம்பந்தப்படாததால் கர்த்தாவாக மாட்டான்.

அரசன் முதலானவர்கள் (ஸ்வயம் காரியத்தைச் செய்யாவிடினும், சேவகர்கள் மூலமாக) காரியத்தைச் செய்வதுபோல் ஆத்மா தன்னுடைய சன்னிதி மாத்திரத்தினால் கர்த்தாவாகட்டுமே என்பதுங் கூடாது. இராஜாக்கள் சேவகர்களுக்கு பணத்தைக் கொடுப்பதினால் அவர்களுக்கும் இவர்களுக்கும் ஒரு சம்பந்தம் ஏற்பட்டு இராஜாக்கள் கர்த்தாக்கள் என்று சொல்லலாம். அப்படி சரீரத்துக்கு இராஜாவான ஆத்மாவுக்கும் சேவகர்கள்போன்ற சரீராதிகளுக்கும் சம்பந்தத்தை உண்டுபண்ணும்படியானது யாதொன்றும் காணப்படவில்லை. மித்தையான அபிமானமே பிரத்தியக்ஷசம்பந்தத்துக்குக் காரணம். யாகாதிகளில் ஆத்மா கர்த்தா என்று சொன்னதற்கும் பிராந்திதான் காரணம் என்பது விளங்கும். (88)

(e) பிரபாகரர்கள் சொல்லுகிறதாவது:— தேகாதிகளைவிட வேறான ஆத்மாவுக்கு தன்னுடைய தே

காதிகளிலிருக்கும் அபிமானம் கௌணமே தவிர, பொய் அல்ல. (ரா இவர்கள் மதத்தில் பிராந்தியில்லாத படியால் தேகாதி சம்பந்தம் சத்தியம் என்பது கருத்து.)

சி:—இது சரியன்று. பிரசித்தமான இவ்வே றுவஸ்துக்கள் விஷயத்தில்தான் முக்கியம் என்றும் கௌணம் என்றும் வியவஹாரம் சம்பவிக்கும். ஒரு வித ஆகிருதியுடனும் தாடி மீசை முதலியதுடனும் கூடிய மிருக விசேஷத்தைபார்த்து, அதின் விஷயத் தில் சிங்கம் என்கிற சப்தத்தை பிரயோகிக்கிறோம். அது சிங்கம் என்றும் அறிகிறோம். இவ்விடத்தில் சிங்க சப்தம் முக்கியார்த்தத்தைக் கூறுகிறது. ஒரு புருஷனிடத்தில் க்ரௌரியம், சௌரியம் முதலிய சிங்கத்தின் குணங்களைப் பார்க்கிறோம். அவன் விஷ யத்தில் சிங்க சப்தப் பிரயோகமும் அவன் சிங்கம் என்கிற ஞானமும் கௌண்மாயிருக்கின்றன. வஸ்து க்களின் பேதம் பிரசித்தமாயிராதபக்ஷத்தில் ஒன்றி னிடத்தில் மற்றொன்றின் சப்தத்தை உபயோகிப்ப தும், மற்றொன்றுபோல் அறிவதும் பிராந்தியால் ஏற் படுமேதவிர, அவைகள் கௌணங்களாகா.

திருஷ்டாந்தம்:—

மந்தாந்தகாரத்தில் "இது கட்டை" என்று தெரியாதவரையில் அதினிடத்தில் புருஷ சப்த பிர யோகமும் புருஷன் என்கிற ஞானமும் ஏற்படுகிறது. அப்படியே கிளிஞ்சல் விஷயத்திலும் வெள்ளி என் கிற ஞானமும் வெள்ளி என்றும் சப்த பிரயோகமும் ஏற்படுகிறது இதுபோல் தேகாதிசங்காதமே நான் என்று சொல்லுமிடத்திலும் ஆத்மாவையும் அனாத்மா வையும் பிரித்துப்பார்க்காமல் நான் என்கிற சப்தத்தை உபயோகிப்பதும் நான் என்று அறிவதும் எப்படி கௌணம் என்று சொல்லமுடியும். ஆத்மா அனாத் மாக்களைப் பிரித்துப் பார்க்கும் பண்டிதர்களும் ஆட்டிடையர்கள்போல் சப்தத்தை உபயோகிக்கிறார் கள். அப்படியே அறிகிறார்கள். ஆகையால் தேகா திகளைவிட வேறாக ஆத்மா இருக்கிறதென்று சொல் லுகிறமதத்தில் தேகாதிகளில் நான் என்னும் ஞான மானது மித்தையே தவிர கௌணமன்று. ஆகை யால் ஆத்மாவுக்கு சரீரத்வம் மித்தியா ஞானத்தால் ஏற்படுவதால் வித்வான் ஜீவித்துக்கொண்டிருந்தாலும் சரீரமற்றவன்தான். பிரம்மஞானி விஷயமான சுருதி யும் அப்படியே சொல்லுகிறது. எப்படி யெனின்

अहिनिर्ल्वयनी वल्मीके मृता प्रत्यस्ता शयीतैवमेवेदं शरीरं शेते अथायमशरीरोऽमृतः प्राणो ब्रह्मैव तेज एव

(ப்ரு IV-4-7)

ரா அதாவது சர்ப்பத்தினால் கழட்டப்பட்ட சட் டையானது புத்துமுதலிய இடங்களில் மிருதமாயும் சர்ப்பத்தினால் அபிமானமின்றிமில் எறிந்துவிடப்பட் டதாயும் இருக்கிறதுபோல் இந்த சரீரம் வித்வானு டைய அபிமானமின்றியில் இருக்கிறது. சட்டை கழ ட்டப்பட்ட சர்ப்பம்போல் இந்த தேகி சரீரமற்றவனா யிருக்கிறான். சர்ப்பத்துக்கு சட்டையில் அபிமான மில்லாததுபோல் வித்வானுக்கு சரீரத்தில் அபிமான மிராதபடியால் அவன் அமிருதன், ஜீவித்திருந்தாலும் பிரம்மமே. அந்த பிரம்மம் என்னவெனின் ஸ்வயம் ஜோதிரூபம் ஆநந்த ரூபம்.

सचक्षुरचक्षुरिवसकर्णोऽकर्णइव सवागवागिव समना अमनाइवसप्राणोऽप्राणइव (छा )

அதாவது:—கண்ணுடனிருந்தாலும், கண்ணில் லாதவன்போலிருக்கிறான். காதுடனிருந்தாலும் காதி ல்லாதவன்போலிருக்கிறான். வாக்குடனிருந்தாலும் வாக்கில்லாதவன்போலிருக்கிறான். மனதுடனிருந்தா லும் மனதில்லாதவன்போலிருக்கிறான். பிராணனுட னிருந்தாலும் பிராணனில்லாதவன் போலிருக்கிறான். (வாஸ்தவத்தில் சக்ஷுராதிகளில்லாதவனானாலும் பிர ம்மஞானத்தால் பாதிக்கப்படும் சக்ஷுராதிகளுடன் கூடியிருப்பதால் சக்ஷுராதிகளுடன் கூடினவன்போ லிருக்கிறான் என்பதாய் பாமாணந்தியத்தில் சொல்லிருக் கிறது. இவ சப்தம் அபிமானாபாவத்தைக் கூறுகிறது என்று பிரம்மவித்தியா பரணகாரர் சொல்லுகிறார்)

(3) ஸ்மிருதி வசனம்:—

स्थितप्रज्ञस्य काभाषा (गी II-54)

ஸ்திதப் பிரஞ்ஞனுடைய லக்ஷணங்களைக்கூறும் ஸ்மிருதிவசனமும் வித்வானுக்கு யாதொன்றிலும் பிர விருத்தியில்லை என்பதைக் காட்டுகிறது. (89)

(f) ஆகையால் ஜீவப்பிரம்ம ஐக்கியத்தை அறி ந்தவனுக்கு முன்போல சம்சாரித்வம் சித்திக்கவில்லை எவன் முன்போலவே சம்சாரியாக இருக்கிறானோ

அவன் பிரம்மாத்மபாவத்தை அறிந்தவனல்ல. ஆகவே பிரம்மாத்மஞானத்தால் முக்தி சித்திக்கிறபடியால் வேதாந்தங்கள் பிரமாணம் என்று சித்தித்தன. 71

रा [மேலும் விதித்தைக் கூறுவதினால் அவைகள் சாஸ்திரம். ஆகையால் யாதொரு தோஷமில்லை.] (90)

12. சிரவணத்துக்குப் பிறகு மனன நிதித்தியாசனங்கள் சொல்லியிருப்பதால் பிரம்மம் விதிக்கு அங்கமாக சொல்லப்பட்டிருக்கிறதேதவிர, அதின் ஸ்வரூபம் சொல்லப்படவில்லை என்று செய்த ஆக்ஷேபமும் சரியன்று.

(பிரம்மஞானத்தை உத்தேசித்து சிரவணம் விதிக்கப்பட்டதுபோல் மனன நித்தியாசனங்களும் விதிக்கப்பட்டிருப்பதால் பிரம்மம் விதிசேஷமாகமாட்டாது ஏனெனின் இவைகளால் பிரம்மஞானமே அடையப்படுவதால், பிரம்மம் பிரதானமாய்விடுகிறது.) (சிரவணாதிகளுக்கு பிரம்மம் அங்கமாகமாட்டாது.) (91)

13. (a) (ஞானவிஷயத்தில் விதியான்து ஒப்புக்கொள்ளப்பட்டதற்குக் காரணம் இனி சொல்லுகிறார்.) ஞானத்தின் விதியை ஒப்புக்கொண்டு வேதாந்தத்தால் அறியப்பட்ட பிரம்மத்தை அந்த ஞானத்துக்கு கர்மமாக சொல்லும்பக்ஷத்தில் அப்போது பிரம்மமானது விதிக்கு அங்கமாக முடியும். ஆனால் அறியப்பட்ட பிரம்மத்துக்கு விநியோகம் சொல்லப்படவில்லை. ஏனெனின் பிரம்மஞான முண்டான மாத்திரத்தில் பலம் சித்தித்துப்போகிறது. அப்போது விதிக்கு பிரயோசனமில்லை. விதி, பிரயோசனத்திற்காக ஏற்படவேண்டும். பிரயோசனம் கிடைத்தபின் விதிக்கு என்னபிரயோசனம். ஆகையால் விதி ஏற்படவில்லை) ஆகையால் (விதி ஏற்படாததால் உபாஸனாவிதிக்கு விஷயமாக பிரம்மம் சாஸ்திரத்தில் பிரதிபாதிக்கப்படவில்லை. இப்படி அங்கத்வம் ஏற்படாதபடியால் அதாவது சத்தியாதிவாக்கியங்களால் ஞானம்கிடைத்து அஞ்ஞான நிவிர்த்தியாகிற பலம் கிடைத்தவளவில், வேதாந்தவாக்கியங்களுக்கு பிரம்மத்திலேயே தாற்பரியமிருப்பதால், பிரம்மமானது ஸ்வதந்திரமாகவே வேதாந்த சாஸ்திரத்தால் பிரதிபாதிக்கப்படுகிறது என்று சித்திக்கிறது. (92)

(b) இப்படி மேற்சொன்னபடி பிரம்மத்துக்கு ஸ்வாதந்திரியமிருக்க, பகவான் வேதவியாசர் பிரம்மவிஷயமான अथातोब्रह्मजिज्ञासा என்று நூதன சாஸ்திரத்தை ஆரம்பித்தது யுக்தமே. வேதாந்தம் உபாசனா விதிபரமாயிருக்கும் பக்ஷத்தில், अथातोधर्मजिज्ञासा என்று சாஸ்திரம் முன்னமேயே ஆரம்பித்திருப்பதால், நூதனமாக சாஸ்திரத்தை ஆரம்பிக்கவேண்டியதில்லை. அப்படி ஆரம்பிக்கவேண்டுமானால், अथातः परिशिष्टधर्मजिज्ञासा என்பதாய் ஆரம்பிக்கவேண்டும்.

(அதாவது

अथ பாஹ்ய சாதனதர்மங்களை விசாரித்தபிறகு

अतः பாஹ்ய தர்மானுஷ்டானத்தால் சித்த சுத்தி உண்டாயிருப்பதால்

परिशिष्टधर्मजिज्ञासा பாக்கியிருக்கிற மானசிக தர்மவிஷயமான விசாரம் செய்யத்தக்கது என்று சூத்திரம் ஏற்பட்டிருக்கவேண்டியது.

अथातः क्रत्वर्थपुरुषार्थयोर्जिज्ञासा

என்கிற வாக்கியம் போலும். (பூர்வமீமாம்சா சாஸ்திரத்தின் 4-வது அத்தியாயத்தில் சுருதிகளால் அங்கம் அங்கி இவைகள் நிர்ணயம் செய்யப்பட்டபின் அங்கியுடன் அங்கம் சேர்க்கவேண்டியதாகையால் யஞ்ஞத்துக்கு அங்கம் எது, புருஷனுக்கு அங்கம் எது என்பதை அறியவேண்டியதின்பொருட்டு மேற்கூறிய சூத்திரம் 4-வது அத்தியாயத்தில் ஆரம்பிக்கப்படுகிறது. அப்படி இவ்விடத்திலும் ஆரம்பித்திருக்கவேண்டும். ஆனால் அப்படியில்லாததால் வேறு தர்மம் சொல்லப்படுவதாக சொல்லுவது அயுக்தம்.)

பிரம்மாத்மைக்கிய ஞானம் முன் நிச்சயிக்கப்படாதபடியால் (ஜைமினியால் பிரம்மம் விசாரிக்கபடாததால்) अथातोब्रह्मजिज्ञासा என்னும் சாஸ்திராரம்பம் யுக்தம். (93)

(c) வேதாந்தத்தின் அர்த்தம் அத்வைதமானால் துவைதத்தை அபேக்ஷிக்கும் விதி முதலியவைகளுக்கு என்ன பிரயோசனமெனின்.)

நான் பிரம்மம் என்கிற ஞானமுண்டாவதற்கு முன்னேயே சகலவிதிகளும் சகலமான இதர பிரமாணங்களும் உபயோகப்படுகின்றன. (பிறகு உபயோகப்படுகிறதில்லை) தள்ளத்தக்கதாயும், சுவீகரிக்கத்தக்கதாயுமிருக்கிற அத்வைத பிரம்மம் அறியப்பட்டவளவில் விஷயமுமில்லை, பிரமாதாவுமில்லை.

रा (பிரம்மம் காரிய சேஷமன்று. அதின் ஞானமுண்டாவதற்கு முன்னமேயே சகல வியவஹாரங்களும் ஏற்படுகின்றன என்பதற்கு பிரம்ம வித்துக்களின் வாக்கியத்தை உதாகரிக்கிறார்.)

गौणमिथ्यात्मनोऽसत्वे पुत्रदेहादिबाधनात् ।
सद्ब्रह्मात्माहमित्येवं बोधे कार्यं कथंभवेत् ॥
अन्वेष्टव्यात्मविज्ञानात् प्राक् प्रमातृत्वमात्मनः ।
अन्विष्टः स्यात्प्रमातैव पाप्मदोषादिवर्जितः ॥
देहात्मप्रत्ययो यद्वत् प्रमाणत्वेनकल्पितः ।
लौकिकं तद्वदेवेदं प्रमाणं त्वात्मनिश्चयात् ॥

ர: சத்ரூபமான (பாதிக்கப்படாத) பிரம்மமே நான் சர்வசாக்ஷி என்னும் ஞான முண்டானவளவில் புத்திரன், தேகம் முதலியவைகள் சத்ரூபம் (வாஸ்தவம்) என்கிற புத்தி பாதிக்கப்படுவதால் அதாவது மாயாமாத்திரம் என்று நிச்சயிக்கப்படுவதால், புத்திரன், சம்சாரம் முதலானவர்களே என்னுடையது என்னும் அபிமானம் என்ன, நான் மனிதன், கர்த்தா, மூடன், முதலிய மித்தியாபிமானம் என்ன இவைகளால் ஏற்படும் சகலவியவஹாரங்களும் ஒய்வடைவதால், விதி நிஷேதாதி வியவஹாரம் எப்படி சம்பவிக்கும். (காரணமில்லாதபடியால் ஒன்றும் சம்பவிக்க மாட்டாது என்பது கருத்து)

य आत्मापहतपाप्मा विजरो विमृत्युर्विशोकः सोऽन्वेष्टव्यः

என்கிற சுருதியிற் கூறியபடி அறியவேண்டியதான பரமாத்மாவை அறிவதற்கு முன்னேயே ஆத்மா பிரமாதாவாக இருக்கிறான். பிரமாதாவே அறியப்பட்டவளவில் பாபம், இராகம், துவேஷம், மரணம் இவைகளற்ற பரமாத்மாவாகவே ஆய்விடுகிறான். வேதம் அறிந்தவர்கள் வியவஹாரத்தின்பொருட்டு தேகமே ஆத்மா என்னும் ஞானத்தை பிரமாணமாக ஒப்புக்கொண்டிருக்கிறார்கள். இதுபோல் ஆத்மஞான முண்டாகும்வரையில் வியவஹாரகாலத்தில் ப்ரத்தியக்ஷாதிகளையும் பிராமாணிகமாக ஒப்புக்கொள்ளவேண்டும். பிரமாதா கல்பிதனாயிருந்தாலும் ஆத்மஞானம் உண்டாகும் வரையிலும் விஷயங்கள் பாதிக்கப்படாமையால் பிரமாணங்களே. (94)

7. பூர்வபக்ஷபலன்:—

ர:—உபாசனையால் முக்தி.

சித்தாந்தபலன்:—

தத்துவஞானத்தாலேதான் முக்தி. (95)

IX. வியாசாதிகரணமாலைப்படி அத்வைதசுருக்கம்.

I. முதல் வர்ணகம் (96—99)

(1) சுருக்கம்:—

वेदान्ताः कर्तृदेवादिपरा ब्रह्मपरा उत ।
अनुष्ठानोपयोगित्वात्कर्त्रादिप्रतिपादकाः ॥
भिन्नप्रकरणाल्लिङ्गषट्काच्च ब्रह्मबोधकाः ।
सति प्रयोजनेऽनर्थहानेऽनुष्ठानतोऽत्र किम् ॥

(2) விஷய சம்சயங்கள் ஸ்பஷ்டம். (97)

(3) பூர்வபக்ஷம்:—

(a) ஜீவனைக்கூறும் வாக்கியங்கள் கர்த்தாபரம்.

(b) பிரம்மத்தைக்கூறும் வாக்கியங்கள் தேவதாபரம்.

(c) சிருஷ்டியைக்கூறும் வாக்கியங்கள் சாதனபரம்.

இப்படியிருப்பதால் வேதாந்தங்கள் அனுஷ்டானத்தால் உபயோகப்படுகின்றன என்று ஏற்படுகிறது.

பிரம்மபரம் என்றுசொன்னால் அனுஷ்டானம் ஏற்படாதபடியால் அவைகள் நிஷ்பிரயோஜனமாகும்.

ஆகையால் வேதாந்தங்கள் கர்த்தா, தேவதை, சாதனம் இவைகளைப் பிரதிபாதிக்கின்றன. (98)

(4) சித்தாந்தம்:—

வேதாந்தங்கள் பிரம்மபரமே.

(a) ஏனெனின் வேறு பிரகரணத்தில் படிக்கப்பட்ட அவைகள் கர்த்தாமுதலியவைகளை பிரதிபாதிக்கிறதினால் கர்மசேஷங்களாகமாட்டா.

(b) தாற்பரியத்தை நிச்சயிக்கும் ஆறுலிங்கங்களாலும் பிரம்மபரமே என்பது சித்திக்கிறது. இந்த லிங்கங்கள் உபக்கிரமாதிகள். இவைகளால் வேதாந்தங்கள் பிரம்மபரம் என்பது நிச்சயம்.

(c) மேலும் அனுஷ்டானமன்றியில் பிரயோஜனமில்லை என்பதில்லை.

नायंसर्पः (இது சர்ப்பமன்று) முதலிய இடங்களிற்போல் ஞானத்தால் அநர்த்த நிவிர்த்தி ஏற்படுகிறது. (99)

2. இரண்டாவது வர்ணகம் (100—102)

(1) சுலோகம்:—

प्रतिपत्तिं विधित्सन्ति ब्रह्मण्यवसिता उत ।
शास्त्रत्वाचे विधातारो मननादेश्च कीर्तनात् ॥
नाकर्तृतन्त्रेऽस्ति विधिः शास्त्रत्वं शंशसनादपि ।
मननादिःपुराबोधाद्ब्रह्मण्यवसितास्ततः ॥

(2) பூர்வபக்ஷம்

சிலர் சொல்லுகிறதாவது:—

(a) பிரம்ம பரமாயிருந்தாலும் வேதாந்தங்கள் பிரம்மத்திலேயே பரிவசனப்படுகிறதில்லை. பின்னையோவெனின் பிரம்மதத்துவத்தை பரோக்ஷமாகச் சொல்லி பிறகு அபரோக்ஷ உபாசனையை விதிக்கின்றன. இப்படி வேதாந்தங்கள் விதிப்பதினால் சாஸ்திரமாகின்றன.

(b) மேலும் श्रोतव्यः என்கிற சப்தஞான ஸ்வரூப சிரவணத்தை விதித்து मन्तव्यः निदि ध्यासितव्य என்கிற அநுபவஞானஸ்ரூபமான மனனாதிகளை ஸ்பஷ்டமாகவே விதிக்கின்றன. ஆகையால் வேதாந்தங்கள் உபாசனையை விதிக்கின்றன. (101)

(3) சித்தாந்தம்:—

பிரம்ம விஷயத்தில் உபாசனை விதிக்கப்படவில்லை. ஏனெனின் அதை செய்யவாவது, செய்யாமலிருக்கவாவது, வேறு விதமாய்ச் செய்யவாவது முடியாது. அது புருஷபிரயத்தினத்தையும் பொருத்திருக்கவில்லை. அநுஷ்டான விதியால்தான் சாஸ்திரத்தன்மை ஏற்படவேண்டுமென்பதில்லை. சித்தவஸ்துவைச் சொல்லுவதினாலும் அத்தன்மை ஏற்படும். சாப்தஞானமுண்டானவளவில் அநுபவாத்மகமான மனனாதிகள் விதிக்கப்படுகின்றன என்று சொல்லுவது யுக்தமன்று. "நீ பத்தாவது புருஷன்" என்பதுபோல், சப்தத்தாலேயே அபரோக்ஷ அநுபவம் ஏற்படுகிறது. சாப்தபோதத்திற்கு முன்னமேயே அஸம்பாவனாதி தோஷங்கள் நிவிர்த்தியாகும் பொருட்டு மனிதனுடைய சுவாதீனத்திலிருக்கிற மனனாதிகள் விதிக்கப்படுகின்றன.

ஆகையால் तत्वमसि முதலிய வேதாந்தங்கள் பிரம்மத்திலேயே பரிவசனப்படுகின்றன. (102)

X. விசிஷ்டாத்வைதப்படி I—1—4-வது

அதிகரணத்தின் சுருக்கம்.

1. அவதாரிகை:—

மூன்றாவது அதிகரணத்தில் பிரம்மம் இதர பிரமாணங்களால் அறியப்படாதது என்றும் சாஸ்திரத்தால்தான் அறியப்படும் என்றும் நிரூபிக்கப்பட்டது. இதனால் பிரம்மத்துக்கு சாஸ்திரம் பிரமாணம் என்பது சித்தித்தது.

ஒரு சாஸ்திரம் பிரமாணமாக இருப்பதற்கு அது பிரவிர்த்தியையாவது நிவிர்த்தியையாவது போதிக்க வேண்டும். அப்போதுதான் அது பிரமாணமாகும். பிரம்மமோ பிரவிர்த்தியற்றது. ஆகையால் அப்படிப்பட்ட பிரம்ம விஷயத்தில் சாஸ்திரம் பிரமாணமாகமாட்டாது என்கிற சந்தேகம் வரக்கூடும். அதை நிவிர்த்திக்கும் பொருட்டு இந்த அதிகரணம் ஏற்பட்டது.

2. சூத்திரார்த்தம்.

तु:—இந்த சப்தம் சங்கையை நிவிர்த்திக்கிறது.

तत् சாஸ்திரயோனித்வம் (சாஸ்திரப்பிரமாணகத்வம்) பிரம்மத்துக்கு சம்பவிக்கும். ஏனெனின்,

समन्वयात् பரம புருஷார்த்தமான பிரம்மத்தையே பிரதிபாதிக்கிறதற்காக பதங்களுடைய (அன்வயம்) சேர்க்கை ஏற்பட்டிருக்கிறது. (104)

8. தாற்பரியம்.

பிரம்ம விஷயத்தில் சாஸ்திரம் பிரமாணகம். ஏனெனின் பதங்களின் சேர்க்கையானது பரமபுருஷார்த்தமான பிரம்மத்தையே பிரதிபாதிக்கிறது. (105

XI துவைதப்படி I-1-4-வது அதிகரணத்தின் சுருக்கம்.

சங்கதி:—காரணத்வம் சாஸ்திரத்தினுலே அறியத்தகுந்ததாகையால் இதர கிரந்தங்களால் அதிவியாப்தி ஏற்படவில்லையென்று முன் சொல்லப்பட்டது. இந்த காரணம் விஸ்ணுவல்ல வென்று பூர்வபக்ஷி ஆசேஷபிக்கிறபடியால் இப்போது இந்த காரணம்.

(1) விஷ்ணுவா? அல்லது

(2) வேறு தேவதையா?

என்பது விசாரிக்கப்படுகிறது. ஆசேஷபத்தின் பேரில் அதிகாரணம் ஏற்பட்டபடியால் ஆசேஷபசங்கதி ஏற்படுகிறது. (106)

2. விஷயம்:—சாஸ்திரத்தால் கர்த்தாவாக அறியப்பட்டவர். (107)

3. சந்தேகம்:—அவர்

(1) விஷ்ணுவா? அல்லது

(2) வேறு ஒருவரா? (108)

4. பூர்வபக்ஷம்:—பாசுபதமுதலிய கிரந்தங்கள் வேதங்களின் வியாக்கியானங்களானதாலும், மூல கிரந்தங்களைவிட வியாக்கியானங்கள் தெளிவான ஞானத்தைக் கொடுக்குமாதலாலும் பாசுபதாதிகளில் ருத்திராதிகள் காரணமாகச் சொல்லியிருப்பதாலும் அவர்களைக் காரணமாகச் சொல்லுவதும் வேதசம்மதம் தான். (109)

5. சித்தாந்தம்:—ஆகமங்கள் பரஸ்பரம் விருத்தங்களாயிருப்பதால் வேதவாக்கியங்களாகமாட்டா. ஆகையால் அவைகளை பிரதிபாதிக்கப்படும் ருத்திராதிகளும் காரணமாகமாட்டா. (110)

6. பதவுரை:—

**தத்** சகல சாஸ்திரங்களால் எவருடைய ஞானம் உண்டாகிறதோ அவர் நாராயணர் என்ற பிரம்மமே. ஏனெனின்

**ஸமந்வயாத்** வேதாந்தங்களின் சர்வமதங்களும் லக்ஷணையன்றியிலேயே சக்தி பலத்தாலேயே பிரம்மத்தையே கூறுகின்றன. (111)

பூர்வபக்ஷபலன்:—அதிவியாப்தி உண்டு.

சித்தாந்த பலன்:—அதிவியாப்தி இல்லை என்பதாம்.

I-1-4-வது அதிகரணம்.
முற்றிற்று.



## I-1-5-வது அதிகரணத்தின்

### அனுக்கிரமணிகை.

I-1-5-வது அதிகரணம்

முற்றிற்று.

## I-1-5-வது அதிகரணம்.

I. இதன் பெயர் :—ஈக்ஷதி அதிகரணமென்பதாம். (1)

II. இதின் கருத்து :—பிரதானம் ஜகத்கர்த்தா வல்ல, சத் சப்தத்தால் கூறப்படும் ஜகத்காரணம் பிரம்மமே என்பதாம். (2)

III. அவதாரிகை :—

அ-கை : 1. மூன்றாவது நான்காவது அதிகரணங்களால் சகல வேதாந்த வாக்கியங்களும்,

(1) பிரம்மமே ஆத்மாவென்னும் ஞானத்தைப் போதிக்கின்றனவென்றும்,

(2) பிரம்மத்தினிடத்தில் தாற்பரியப்படுகின்றனவென்றும்,

(3) கர்மசம்பந்தமன்றியிலேயே பிரம்மத்தில் முடிவுபெறுகின்றனவென்றும்,

கூறப்பட்டது.

2. இரண்டாவது அதிகரணத்தால் அந்தப் பிரம்மம்,

(1) சர்வஞ்ஞமென்றும்,

(2) சர்வ சக்தியுள்ளதென்றும்,

(3) ஜகத்தின் உற்பத்தி ஸ்திதி நாசங்களுக்குக் காரணமென்றும்,

கூறப்பட்டது.

[ஏ] இந்த மூன்று சூத்திரங்களால் ஜகத்காரணம்,

(1) சர்வஞ்ஞமென்றும்,

(2) பரமப்பிரயோசன ஸ்வரூபமென்றும்,

(3) வேதாந்தத்தால் பிரதிபாதிக்கத்தக்கதென்றும்;

கூறப்பட்டது.

2. (a) சாங்கியர் முதலானவர்கள்,

சித்தவஸ்துவானது இதரப் பிரமாணங்களால் அறியத்தக்கதென்று நினைத்துக்கொண்டு,

பிரதானம் முதலியவைகளே காரணங்கள் என்று அனுமானித்து,

வேதாந்த வாக்கியங்களையும் அப்படியே அர்த்தம் செய்கிறார்கள். சிருஷ்டியைக் கூறும் சகல வேதாந்தவாக்கியங்களிலும் காரியத்தினாலேயே காரணம் ஊகிக்கத்தக்கதென்று சொல்லப்பட்டிருக்கிறது.

பிரதான புருஷர்களின் சேர்க்கையானது எப்போதும் ஊகிக்கத்தக்கதென்று சாங்கியர்கள் நினைக்கிறார்கள்.

1. கடம்போல் எது காரியமோ அது ஜடப்பிரகிருதியாலுண்டாகிறது.

2. இரதம் முதலியதுபோல் எது ஜடமோ அது சேதனத்துடன் சம்பந்தப்பட்டிருக்கிறது.

(3) இதுபோல் பிரதான புருஷ சம்பந்தத்தை ஊகிக்கலாம்.

(b) கணாதமதஸ்தர்கள் (தார்க்கிகர்கள்) இந்தவாக்கியங்களாலேயே,

(1) ஈசுவரன் நிமித்தகாரணமென்றும்,

(2) அணுக்கள் உபாதான காரணமென்றும்,

பாவிக்கிறார்கள்.

(c) இப்படியே இதர தார்க்கிகர்களான [பௌத்தாதிகள்

असद्वाइदमग्र आसीत् முதலிய]

ஆபாச வாக்கியங்களையும்,

எது வஸ்துவோ அதுசூன்யியத்தில் பரியவசானமடைகிறது, தீபம்போலும், இப்படிப்பட்ட]

2. ஆபாச யுக்திகளையும் கிரகித்து பூர்வபக்ஷிகளாக ஏற்படுகிறார்கள்.

(d) இப்படியிருக்க,

1. பதம்

2. வாக்கியம்

3. பிரமாணம்.

(அதாவது வியாகரணம், மீமாம்சை நியாயம்)

இந்த சாஸ்திரங்களை அறிந்திருக்கிற வியாசர், வேதாந்த வாக்கியங்கள் பிரம்மஞானத்துக்காகவே ஏற்பட்டிருக்கின்றன வென்பதைக் காண்பிக்கும்பொருட்டு வாக்கியாபாசயுக்தி ஆபாசங்களை பூர்வபக்ஷமாக்குகிறார்.

ஏ [இந்த அதிகரணத்தில் சாங்கியமதம் நிராகரிக்கப்படுகிறது. மற்ற மதங்கள் एतेनसर्वे व्याख्याताः என்கிற I-4-8-வது அதிகரணத்தில் நிராக்கப்படுகின்றன.]

ரா [1. பிரம்மம் காரணமென்பது ஸ்மிருதிபாதத்தில் அதாவது இரண்டாவது அத்தியாயத்தின் முதல் பாதத்திலும்,

2. பிரதானம் காரணமன்று என்பது யுக்தியால் ஷை அத்தியாயத்தின் இரண்டாவது பாதமாகிய தர்க்க பாதத்திலும்,

3. இந்த அதிகரணத்தில் பிரதானம் காரணமல்லவென்பது சுருதிகளாலும்,

பிரதிபாதிக்கப்படுகின்றது.]

ஜ IV. சங்கதி :—

(1) முந்தின அதிகரணத்துக்கும் இந்த அதிகரணத்துக்கும் சங்கதி :—

பிரம்மமானது சர்வஞ்ஞமென்றும், ஜகத்காரணமென்றும் வேதாந்தத்தால் பிரதிபாத்தியமென்றும் சொல்லப்பட்டது.

இந்த ஜகத்காரணமானது,

1. ஸ்வயம்பிரகாசமான ஆநந்தரூபபிரம்மமல்ல,
2. அதைவிட வேறான பிரதானம்தான்.

என்று சாங்கியர்கள் ஆக்ஷேபிக்கிறபடியால்

முந்தின அதிகரணத்துக்கும் இந்த அதிகரணத்துக்கும் ஆக்ஷேப சங்கதி ஏற்படுகிறது.

ரா (2) இதரசங்கதிகள் :—

ரா பிரம்மத்தை ஸ்பஷ்டமாய்க் கூறும் ஸதேவ முதலிய வாக்கியங்கள் பிரதானத்தைக் கூறாமல் பிரம்மத்தையே கூறுவதால் சுருதிமுதலிய சங்கதிகள் முன்போலவே ஏற்படுகின்றன. (4)

V. விஷயவாக்கியம் :— சாந்தோக்கியத்தில் ஆறுவது அத்தியாயத்தில்,

सदेव सोम्येदमग्र आसीदेकमेवाद्वितीयम्

तदैक्षत—बहुस्यां प्रजायेय—तत्तेजोऽसृजत ॥

என்று (சாந்தோக்கிய VI-2-1) சுருதி வசனம் ஏற்பட்டிருக்கிறது. இதுவே இந்த அதிகரணத்துக்கு விஷயவாக்கியம். (5)

VI. (a) சந்தேகம் :—

1. ஜடமான பிரதானம் ஜகத்காரணமென்று சாங்கியர்கள் சொல்வதாகவும்,

2. சேதன ரூப பிரம்மம் ஜகத்காரணமென்று வேதாந்திகள் சொல்வதாலும்,

முந்தின விஷயவாக்கியத்தில் ஸத் சப்தத்தால் கூறப்பட்ட காரணம்,

1. பிரதானமா
2. பிரம்மமா

என்று சந்தேகம் ஜனிக்கிறது.

ரா (b) சந்தேகபீஜம் :— ஈக்ஷண சப்தத்தின்

1. முக்கிய (சேதன)
2. கௌண (அசேதன)

அர்த்தங்கள் சந்தேக பீஜங்கள். (6)

VII. இதில் அடங்கிய சூத்திரங்கள் 7-(5-முதல் 11 முடிய).

இவைகளில் 5, 6, 7, 8, 9, 10-வது சூத்திரங்களில் பிரம்மத்தினுடையதும் பிரதானத்தினுடையதுமான லிங்கங்களை உத்தேசித்து பிரதானம் ஸத் சப்தவாக்கியமான ஜகத்காரணமாகமாட்டாது என்றும், பிரம்மம்தான் அக்காரணமென்றும்,

11-வது சூத்திரத்தில் சுருதியின் வியக்த வசனத்தாலும் பிரம்மம்தான் அக்காரணமென்றும் நிரூபிக்கப்படுகிறது.

மேலும் 5- 8-வது சூத்திரங்களில் அசேதனமான பிரதானம்,

(1) சங்கற்பிக்கமாட்டாதென்றும்,

(2) ஆத்ம சப்தத்தால் கூறப்படமாட்டாதென்றும்,

(3) மோக்ஷஸ்தானமாகமாட்டாதென்றும்,

(4) ஒரு விதத்திலும் வேதாந்தத்தால் உத்தேசிக்கப்பட்டிருக்கமாட்டாதென்றும்,

இக்காரணங்களால் ஜகத்காரணமாகமாட்டாது என்று நிரூபிக்கப்படுகிறது.

9-11-வது சூத்திரங்களில் ஜகத்காரணமானது

(1) ஜீவன் சுஷுப்தியில் அடைகிற ஸ்தானமாயிருப்பதாலும்,

(2) வேதாந்தங்கள் ஒன்றையே காரணமாகச் சொல்லுவதாலும்,

(3) வியக்தவசனத்தாலும் பிரம்மம்தான் இருக்கவேண்டுமென்று நிரூபிக்கப்படுகிறது. (7)

VII. பூர்வபக்ஷம் :—

1. அசேதனமாயும்
2. மூன்று குணங்களுடன் கூடியும்

இருக்கிற பிரதானமே ஜகத்காரணமென்று பாவிக்கிற சாங்கியர்கள் சொல்லுகிறதாவது :—

எந்த வேதவாக்கியங்கள்

1. சர்வஞ்ஞமாயும்
2. சர்வசக்தியுடன் கூடியுமிருக்கிற

பிரம்மத்தை ஜகத்காரணமென்று காட்டுவதாகச் சொல்லுகிறீர்களோ அந்த வாக்கியங்களை பிரதானத்தைக் காரணமாய்ச் சொல்லும் பக்ஷத்திலும் பொருந்தும்படி செய்ய முடியும்.

எப்படி யெனின்:—

சர்வசக்தித்வம்:—

பிரதானமானது சகல விகாரங்களையும் உண்டுபண்ணுவதால் அதினிடத்தில் சகலசக்திகளும் இருக்கின்றன. (8)

சர்வஞ்ஞத்வம்:—

(1) அப்படியே அதினிடத்தில் சர்வஞ்ஞத்வமும் பொருந்தியிருக்கிறது.

எப்படி யெனின்:—

1 सत्वात् सञ्जायतेज्ञानं (गीता XIV 17)

அதாவது சத்வகுணத்தினின்றும் ஞானமுண்டாகிறது

என்று கூறிய கீதாவசனப்படி எதை ஞானமென்றுபாவிக்கிறாயோ அதுசத்வத்தாலுண்டாகிறது (9)

(2) இந்த சத்வகுணகாரியமான ஞானத்தால் சரீரேந்திரியங்களுடன் கூடின புருஷர்கள் சர்வஞ்ஞயோகிகளென்று சொல்லப்படுகிறார்கள். அத்தியுத்கிருஷ்டமான சத்வகுணமிருந்தால் சர்வஞ்ஞத்வம் பிரசித்தமாய் ஏற்படுகிறது. (10)

சரீரேந்திரியங்களில்லாத கேவலம் ஞானஸ்வரூபமான பிரம்மத்தினிடத்தில் சர்வஞ்ஞத்தன்மையையாவது கிஞ்சிஞ்ஞத்தன்மையையாவது கற்பிக்க முடியாது.

(3) பிரதானமானது மூன்று குணங்களுடன் கூடியிருப்பதால் பிரளய காலத்திலும் அதினிடத்தில் சகலஞானத்துக்கும் காரணமான சத்வகுணமிருக்கிறது.

ஆகையால் வேதாந்த வாக்கியங்களில் சத்சப்தத்தால் கூறப்பட்ட அசேதன பிரதானத்திற்கே சர்வஞ்ஞத்வம் உபசாரமாக சொல்லப்பட்டிருக்கிறது. (11)

2. (1) பிரம்மத்தை சர்வஞ்ஞம் என்று ஒப்புக்கொள்ளும் நீயும் பிரம்மம் சர்வஞான சக்தியுடன் கூடியிருப்பதால் சர்வஞ்ஞமாயிருக்கிறது என்று அவசியம் ஒப்புக்கொள்ளவேண்டும்.

(ஏனெனின்) பிரம்மமானது எப்போதும் எல்லாவற்றையும் அறிந்துகொண்டிருக்கவில்லை. அப்படி அறிந்துகொண்டிருந்தால்

[ஞானம்

1. நித்தியமாயாவது
2. அநித்தியமாயாவது

இருக்கவேண்டும்.

ஞானம்

1. நித்தியமானால் அந்த ஞானகிரியையை உத்தேசித்து பிரம்மத்துக்கு ஸ்வாதந்திரியமும் இல்லாமல் போகிறது. (ஏனெனின் ஞானமே நித்தியமாகையால் பிரம்மத்தால் அதின் விஷயமாய் யாதொன்றும் செய்யமுடியாது. ஆகவே பிரம்மம் அஸ்வதந்திரமாகும்)

2. அநித்தியமானால் ஞானக்கிரியையினின்றும் பிரம்மம் ஒளிவடையும் (அதாவது எப்போதும் பிரம்மத்துக்கு ஞானமிருக்கமாட்டாது. இது அனிஷ்டம்)

ஆகையால் சர்வஞான சக்தியுடன் கூடியிருப்பதால்தான் சர்வஞ்ஞானம் ஏற்படுகிறது. (12)

(2) மேலும் ஜகத்துத்பத்திக்கு முன் பிரம்மத்துக்கு யாதொரு சாதனமுமில்லை என்று சொல்லுகிறாய். ஞான சாதனங்களான சரீரம் இந்திரியம் முதலியவைகளில்லாத வரையில் எவனுக்கும் ஞானமுண்டாகமாட்டாது. (13)

(3) च (இதுவரையில் இரண்டுமதங்களுக்கும் பொதுவாயிருக்கும் விஷயங்கள் சொல்லப்பட்டன. இனிசாங்கியன் தன் மதத்திலுள்ள விசேஷத்தைக் காட்டுகிறான்)

மஹதஹங்காராதி அநேகஸ்வரூபமான பிரதானம் பரிணாமத்தை அடைவதால் மிருத்து முதலியவைகள் போல் (உபாதான) காரணமாகலாம்.

ஒன்றுடனும் சேராத ஏக ரூபமான பிரம்மம் காரணமாகமாட்டாது.

ஏ(உலகத்தில் அவயவத்துடன் கூடினதே உபாதானமாகக் காணப்படுகிறதேதவிர நிரவயவமானது அப்படி காணப்படவில்லை. ஆகையால் வேதாந்தத்தால் ஜகத்காரணமாக பிரதிபாதிக்கப்பட்டது பிரதானமே தவிர பிரம்மமன்று) (14)

IX. சித்தாந்தம்:—

1. இந்த ஆக்ஷேபங்களுக்குச் சமாதானத்தை வியாசர்

ईक्षतेर्नाशब्दम् ॥ ५ ॥

என்னும் சூத்திரத்தில் சொல்லுகிறார். (15)

2. பதவுரை.

न (பிரதானம் ஜகத்காரணம் அல்ல. (ஏனெனின் அது)

अशब्दं வேதத்தில் கூறப்படவில்லை. ஏனெனின்)

ईक्षतेः பார்வை அதாவது சங்கற்பம் கூறியிருப்பதால் (16)

3. மொழிப்புரை.

பிரதானம் ஜகத்காரணமன்று. ஏனெனின் அது வேதாந்தத்தால் பிரதிபாக்கப்படவில்லை. இது எப்படி தெரியவருகிறதெனின் ஜகத்காரணம் சங்கற்பித்திறதாகச் சொல்லப்பட்டிருக்கிறது. (17)

4. பாஷ்யம். (18—35)

3. ஸ்வமத சித்தாந்தம்.

1. न சாங்கியர்களால் கற்பிக்கப்பட்ட அசேதனமான பிரதானம் ஜகத்தின் உபாதான காரணமென்பதாய் வேதாந்த வாக்கியங்களில் காணமுடியாது (18)

2. अशब्दम् ஏனெனின் அது வேதத்தில்கூறப்படவில்லை. (19)

3. ईक्षतेः வேதத்திற் கூறப்படவில்லை என்று எப்படி தெரியவருகிற தெனின் காரணம் சங்கற்பித்திறதாகசுருதி சொல்லுகிறது. எப்படி யெனின்

"सदेवसौम्येदमग्र आसीत्" (சா VI-2-1)
एकमेवा द्वितीयं ( ஷை )

என்று ஆரம்பித்து

तदैक्षत बहु स्यां प्रजायेय (சா VI-2-3)
तत्तेजोऽसृजत ( ஷை )

என்று முடியும் வரையிலுள்ள சுருதிகளில்

इदं சப்தத்தால் கூறப்பட்டும்

நாம ரூபங்களால் பிரிவினை அடைந்தும்

இருக்கிற ஜகத்தானது

உற்பத்திக்கு முன் சத்ரூபமாகவே யிருந்தது என்றும்

அந்த சத் சப்தத்தால் கூறப்பட்டதே சங்கற்பித்து தேஜஸ் முதலியவைகளை சிருஷ்டித்தது என்றும்

தெரியவருகிறது.

(2) அப்படியே ஐதரேயத்திலும்

आत्मावा इदमेक एवाग्र आसीन्नान्यत् किञ्चन
मिषत् सऐक्षत लोकान्नुसृजा
सइमां लोकानसृजत (I-1-1)

என்கிற (I-1) வாக்கியங்களில் சங்கற்பத்தை முன்னிட்டுக்கொண்டே சிருஷ்டியுண்டானதாக கூறப்பட்டிருக்கிறது.

பிரச்னோப நிஷத்தில் பதினாறுகலைகளையுடைய புருஷனைப்பற்றி பிரஸ்தாபித்த இடத்தில்

सईक्षाञ्चक्रे सप्राणमसृजत (VI-3)

"அவன் சங்கற்பித்தான் அவன்பிராணனை சிருஷ்டித்தான்" என்று சொல்லியிருக்கிறது.

ईक्षतेः என்னும் பதமானது ஈக்ஷதி: என்னும் பெயர்ச்சொல்லின் ஐந்தாம் வேற்றுமை. ஆகையால் ஈக்ஷதே: என்பது பதத்தைத்தான் கூறும் பதத்தின் அர்த்தத்தைக் கூறமாட்டாது. பிரகிருத்தில் அர்த்தம்தான் தேவையானதால் பதத்தைவிட்டு பதத்தின் அர்த்தத்தை கிரகிக்கவேண்டியது. திருஷ்டாந்தம்:—

इतिकर्त्तव्यताविधेर्यजतेः पूर्ववत्वम्

என்கிற ஜைமினி சூத்திரம் ஏழாவது அத்தியாயத்தில் यजतेः என்கிற பதமும் பதத்தைக்கூறுகிறதேதவிர பதார்த்தமான யாகத்தைக் கூறவில்லை, ஆயினும் அவ்விடத்தில் யாகம் என்கிற அர்த்தம் தான் கிரகிக்கப்பட்டிருக்கிறது.

இவ்விதமாக ईक्षतेः என்னும் பதத்துக்கு சங்கற்பம் என்கிற அர்த்தத்தை ஒப்புக்கொள்ளுவதினால்

यः सर्वज्ञः सर्वविद्यस्यज्ञानमयंतपः
तस्मादेतद्ब्रह्म नामरूपमन्नं चजायते (மு 1-1-9)

என்கிற வாக்கியம் என்ன, இதைப்போலான வாக்கியங்களென்ன இவைகளையும் ஜகத்காரணமான சர்வஞ்ஞ ஈசுவரனையே கூறுகின்றனவென்று உதாகரிக்கலாம், (கேவலம் பதத்தை மட்டும் கிரகித்தால் ஒரு பிரயோஜனமும் சித்திக்கவில்லை.) பிரதானத்தைக் காரணம் என்று சொல்லுவதில் உபயோகப்படவில்லை. (ஞான சப்தத்திற்கு ஈக்ஷணம் என்று அர்த்தம்) (20)

2. பரமதகண்டனம்.

11-ல் செய்த ஆக்ஷேபத்துக்கு உத்தரம்:—

(1) சத்வகுணத்தின் காரியமான ஞானத்தால் பிரதானம் சர்வஞ்ஞமாகிறது என்று சொன்னது பொருந்தாது. ஏனெனின் பிரதான (பிரளய) அவஸ்தையில் குணங்கள் சமமாயிருப்பதால் சத்வகுணத்தின் காரியமான ஞானம் சித்திக்கமாட்டாது.

अ [ ஏனெனின் சாங்கிய மதத்தில்,

1. சத்வமானது
   (1) லகுவாயும்
   (2) பிரகாசத்தை உண்டுபண்ணுகிறதாயும்
2. ரஜோகுணம்
   (1) சலனஸ்வபாவமுள்ளதாயும்
   (2) பிரவிர்த்தி யுண்டுபண்ணுகிறதாயும்
3. தமோகுணம்
   (1) குருவாயும்
   (2) பிரதிபந்தகாரியாயும்

இருக்கிறது. சத்வகுணத்துக்கு சலன ஸ்வபாவ மில்லாதபடியால் அது ஞானுகாரமாக பரிணமிக்கமாட்டாது; ரஜோகுணத்தால் பிரேரணைசெய்யப்பட்டால்தான் ஞானுகாரமாக பரிணமிக்கும்.) (21)

(2) சர்வஞானசகதியுடன் கூடியிருப்பதால் சர்வஞ்ஞத்வம் ஏற்படுகிறது என்று சொன்னதும் பொருந்ாது. ஏனெனின்

பிரளயவஸ்தையில் குணங்கள் சமமாயிருக்கும்போது சத்வகுணத்தால் ஞானசக்தி சித்திக்கிறதென்றும் அதினல் பிரதானம் சர்வஞ்ஞம் என்றும் சொல்லும்பக்ஷத்தில்,

அதே அவ்ஸ்தையில் ரஜோகுணம் தமோகுணமுமிருப்பதால், இவைகளால் ஞானத்துக்குப் பிரதிபந்தகமானசக்தி ஏற்படுகிறதென்றும் அதினல் கிஞ்சிஞ்ஞத்வம் சித்திக்கிறதென்றும் சொல்லவேண்டும். (22)

(இதுவரையில் சத்வகுணம் ஞானத்தை உண்டுபண்ணும் என்பதை ஒப்புக்கொண்டு பிரதானத்துக்கு சர்வஞ்ஞத்வம் ஏற்படமாட்டாது என்று சொல்லப்பட்டது. இப்போது கேவலம் சத்வவிருத்தியே ஜடமானதால் அதினல் ஞானம் உண்டாகமாட்டாது. சைதன்னிய சம்பந்தமிருந்தால்தான் உண்டாகுமானதால் ஜடமான பிரதானதுக்கு ஒருக்காலும் ஞானம் சம்பவிக்கமாட்டாதென்பதை நிரூபிக்கிறார்.)

(3) 9-ல் செய்த ஆக்ஷேபத்துக்கு உத்தரம்:—

மேலும் சாக்ஷிசம்பந்தமற்ற சத்வவிருத்தியானது ज्ञावि என்னும் பதத்தின் அர்த்தமாகமாட்டாது. அசேதனமான பிரதானமானது சாக்ஷியாகமாட்டாது. ஆகையால் பிரதானத்துக்கு சர்வஞ்ஞத்வம் பொருந்தாது. (23)

(4) 10-ல் சொல்லியதற்கு உத்தரம்:—யோகிகள் சேதனஸ்வரூபமாயிருப்பதால், அவர்களிடத்தில் சத்வகுணம் விசேஷமாயிருந்து, அதினல் அவர்களிடத்தில் சர்வஞ்ஞத்வம் ஏற்படக்கூடும். ஆகையால் அவர்களுடைய திருஷ்டாந்தத்தைக் கொடுக்கக்கூடாது(24)

(5) ஈசுவரன் ஒருவனிருக்கிறன். சிருஷ்டிகாலத்தில் பிரதானத்திடத்தில் சத்வவிருத்தியானது உண்டாகிறது. அந்தவிருத்தியில் ஈசுவரனுடைய ஞானம் சம்பந்தப்படுகிறது (விளங்குகிறது). அதினல் பிரதானத்துக்குசர்வஞ்ஞத்வம் ஏற்படுகிறது. அக்கினி சம்பந்தப்பட்ட அய:பிண்டத்துக்கு தஹிக்கும் சாமர்த்தியம் ஏற்படுவதுபோலும் இப்படி சேஸ்வரசாங்கியன் சொல்லும்பக்ஷத்தில், எந்தகாரணத்தால் பிரதானத்துக்கு சங்கற்பிக்கும் தன்மை ஏற்படுகிறதோ அந்த சர்வஞ்ஞமான பிரம்மத்தையே ஜகத்காரணமாகச் சொல்வது யுக்தம். (25)

(பிரம்மத்துக்கு சர்வஞ்ஞத்வம் சொல்லக்கூடாது, சர்வஞான சக்தியைத்தான் சொல்லவேண்டும் என்று 12-வது பிரிவில பூர்வபக்ஷி சொன்னதற்கு உத்தரம் இனி கூறுகிறர்.)

பிரம்மத்துக்கும் சர்வஞ்ஞத்வம் ஏற்படவில்லை. ஞானம் நித்தியமாயிருக்கும்பக்ஷத்தில் அதை உத்தேசித்து பிரம்மத்துக்கு ஸ்வாதந்திரியம் போய்விடும் என்று சொன்ன பூர்வபக்ஷியை பார்த்து கேட்கவேண்டியதாவது:—

ஞானக்கிரியை நித்தியமானல் சர்வஞ்ஞத்வத்துக்கு எப்படி ஹானி உண்டாகிறது? சகல விஷயங்களையும் பிரகாசிப்பிக்கும் ஞானம் எவனிடத்தில் நித்தியமாயிருக்கிறதோ, அவன் சர்வஞ்ஞனல்லவென்று சொல்வது விருத்தம்.

ஞானம் அனித்தியமானல் சில சமயத்தில் அறிவான், சில சமயத்தில் அறியமாட்டான். அப்போது அசர்வஞ்ஞத்வம் ஏற்படும். ஞானம் நித்தியமானல் இந்த தோஷம் சம்பவிக்கமாட்டாது. (26)

ஞானம் நித்தியமானல் சுவாதந்திரியம் போய்விடும் என்று சொன்னதும் யுக்தமன்று. எப்போதும் உஷ்ணத்துடனும் பிரகாசத்துடனும் கூடிய சூரியன் தஹிக்கிறன் என்றும் பிரகாசிப்பிக்கிறன் என்றும் அவனுக்கு ஸ்வாதந்திரியம் போய்விட்டதா? (27)

சிருஷ்டிக்குமுன்ஞானத்துக்கு விஷயம் வேண்டியதில்லை

ஆக்ஷேபம்:—

சூரியனுக்கும் தஹிக்கப்படும் பதார்த்தத்துக்கும் அல்லது பிரகாசிப்பிக்கப்படும் பதார்த்தத்துக்கும் சம்பந்தம் உண்டானவளவில் தஹிக்கிறன், பிரகாசிப்பிக்கிறன் என்கிற வியவஹாரம் ஏற்படுகிறது. ஜகத்தின்

உற்பத்திக்குமுன் ஞானத்துக்கு விஷயமான பதார்த்தமே இராதபடியால், ஞானத்துக்கும் விஷயத்துக்கும் சம்பந்தம் ஏற்படவில்லை. ஆகையால் சூரியனுடைய திருஷ்டாந்தம் சரியன்று.

சமாதானம் :—இந்த ஆக்ஷேபம் சரியன்று. சூரியன் பிரகாசிப்பிக்கும் விஷயத்தைக் குறிப்பிட இச்சையில்லாமலே சூரியன் பிரகாசிக்கிறான் என்கிற வியவஹாரம் காணப்படுவதுபோல், பிரம்மஞானத்துக்கு விஷயமான பதார்த்தமில்லாமலிருந்தாலும் பிரம்மம் சங்கற்பித்தது என்பதாய் சொல்லுவதில் தோஷமில்லை. (28)

வேண்டுமானாலும் விஷயமிருக்கிறது.

(சூரியன் பிரகாசிக்கிறான் என்று சொல்லுவதில் எதைப் பிரகாசிப்பிக்கிறான் என்கிற கேள்வி ஏற்படமாட்டாது. ஆகையால் சூரியன் பிரகாசிக்கிறான் என்கிற வியவஹாரம் ஏற்படும். பிர்ம்மம் சங்கற்பித்தது என்று சொன்னால் எதை சங்கற்பித்தது என்று அவசியம் கேள்வி ஏற்படுகிறது. ஆகையால் சிருஷ்டிக்குமுன் யாதொன்றுமில்லாதபடியால் பிரம்மம் சங்கற்பித்தது என்று சொல்லுவது அயுக்தம் என்று ஆக்ஷேபிக்கும்பக்ஷத்தில்)

விஷயத்தை அபேக்ஷித்தாலும் பிரம்மத்தினிடத்தில் சங்கற்பத்தைக்கூறும் சுருதிகள் செவ்வையாய் பொருந்திருக்கின்றன.

உற்பத்திக்குமுன் ஈசுவரனுடைய ஞானத்துக்கு விஷயமாகும் விஷயமென்ன? சத்ரூபமாயிராமலும் அசத்ரூபமாயிராமலும் சூக்ஷமமாயும் ஸ்தூலமாயாகும்படியாயுமிருக்கிற நாமரூபங்கள் என்று சொல்லுகிறோம்.

[அதாவது] ர. பிரகாசரூபமான சூரியன் பிரகாசிக்கிறான் என்று ஔபசாரிகமாக சொன்னதுபோல் சித்ரூபமான பிரம்மம் சங்கற்பித்தது என்று ஔபசாரிகமாக சொல்லுவதினால் இரண்டுக்கும் வித்தியாசம் ஏற்படவில்லை என்று முன் சொல்லப்பட்டது. இப்போது சொல்லுகிறதாவது குயவன் ஒரு கடத்தைச் செய்யுமுன் மனதினால் அதின் ஆகாராதிகளை சங்கற்பிக்கிறான். ஆகவே இனி உண்டாகப்போகிற கடம் குசவனுடைய உபாதியாகிற அந்தக்கரணத்தில் சூக்ஷமரூபமாயிருந்து அவனுடைய சங்கற்பத்துக்கு விஷயமாகிறதுபோல், ஈசுவரனுடைய உபாதியான அவித்தையில் சகல சிருஷ்டி சம்ஸ்காரமும் அடங்கி, (பிரளயம்) முடிந்து சிருஷ்டி ஆரம்பமாகுமுன் வெளிப்படுகிறது. இப்படிப்பட்ட சம்ஸ்காரங்களையுடைய அவித்தையானது சிருஷ்டிரூபமாகப் பரிணமிக்கிறது, அப்படிப்பரிணமிக்குமுன் சகல காரியங்களும் சூக்ஷமரூபமாயிருக்கின்றன. ஆகவே இந்த சூக்ஷமத்தை அவர் பார்க்கிறபடியால், அவர் கர்த்தாவென்று சொல்லலாம். (29)

ஈசுவரன் சர்வஞ்ஞன்.

[ ஐ யோக சாஸ்திரத்தில்

ततः प्रत्यक्चेतनाधिगमोऽन्तरायाभावश्च

அதாவது ஈசுவரனுடைய தியானத்தினால் பிரத்தியகாத்மஞானமும் இராக த்வேஷாதிகளில்லாமையும் உண்டாகின்றன என்று சொல்லியபடி

யோகசாஸ்திரத்தை அறிந்தவர்கள், எவருடைய பிரசாதத்தால் யோகிகள் சென்றகாலத்தையும் வருங்காலத்தையும் பிரத்தியக்ஷமாய் அறிவதாகச் சொல்லுகிறார்களோ அந்த நித்திய சுத்த ஈசுவரனுக்கு சிருஷ்டிஸ்திதி சம்ஹார விஷயமான ஞானம் எப்போதுமிருக்கிறதென்பதற்கு சொல்லவேண்டுமா? (30)

13-ல் சொல்லியதற்கு உத்தரம்.

சிருஷ்டிக்குமுன் பிரம்மத்துக்கு சரீராதி சம்பந்தமன்றியில் சங்கற்பிக்கும் தன்மையை ஒப்புக்கொள்ளக் கூடாதென்று யாதொரு ஆக்ஷேபம் செய்யப்பட்டதோ அதற்கிடமில்லை. ஏனெனின் சூரியனுடைய பிரகாசம்போல் பிரம்மத்தினுடைய ஞானஸ்வரூபம் நித்தியமானதையால் ஞானசாதனங்களின் அபேக்ஷையில்லை. (31)

[ஐ ஈசுவரனுடைய ஸ்வரூபமே நித்தியஞானமாயிருப்பதால் சரீராதிகளை அபேக்ஷிக்காவிட்டாலும் விருத்திரூபஞானத்தில் அவைகளின் அபேக்ஷை இருக்குமே எனின்)

அவித்தை முதலியவைகளுடன் கூடின ஜீவனுக்கு ஞானமுண்டாகிற விஷயத்தில் சரீராதிகளின் அபேக்ஷையிருந்தாலும் ஞானப் பிரதிபந்த காரணமற்ற ஈசுவரனுக்கு சரீராதிகளின் அபேக்ஷையில்லை.

அ [ஈசுவரனுக்கு சரீராதிகளில்லாவிட்டாலும் மாயாவிருத்தி உண்டாகிறது என்பது கருத்து.] (32)

ஈசுவரனுக்கு சரீராதிகளின் அபேக்ஷையில்லை என்பதையும் அவருடையஞானத்தில் மறைவுமில்லை என்பதையும் அடியிற்கண்ட மந்திரங்கள் காட்டுகின்றன.

(1) न तस्य कार्यं करणं चाविद्यते ।
न तत्समश्चाभ्यधिकश्चदृश्यते ।
परास्यशक्तिर्विविधैव श्रूयते ।
स्वाभाविकी ज्ञानबलक्रिया च "श्वे VI-8"

(2) अपाणिपादो जवनो गृहीता
पश्यत्यचक्षुः सशृणोत्यकर्णः ।
स वेत्तिवेद्यं न चतस्यास्तिवेत्ता
तमाहुरग्र्यं पुरुषं महान्तम् "श्वे VI-19"

*அர்த்தம்:—*

(1) ஈசுவரனுக்கு சரீரமில்லை, இந்திரியமில்லை. அவருக்குச் சமானமாகவாவது அதிகமாகவாவது ஒன்றும் காணப்படவில்லை. இவருடைய சக்தியானது மாயை. இது தன் காரியத்தை உத்தேசித்து சிரேஷ்டமாயிருக்கிறது, விசித்திரகாரியங்களைச் செய்கிறது, ஆனால் அது பிரத்தியக்ஷாதிப் பிரமாணசித்தமல்ல, ஸ்வாபாவிகமான ஞானபலக்கிரியையுடன் கூடினது.

(2) கையற்றவனாயினும் கிரகிக்கிறான், காலற்றவனாயினும் வேகமுள்ளவன் கண்ணில்லாவிடினும் பார்க்கிறான். காதில்லாவிடினும் கேட்கிறான். அறியக்கூடியதை அவர் அறிகிறார். அவரை அறிகிறவர் ஒருவருமில்லை. அவரை அனாதி என்றும், வியாபகரான புருஷன் என்றும் சொல்லுகிறார்கள். (33)

नान्योऽतोऽस्ति द्रष्टा नान्योतोऽस्ति विज्ञाता
(बृ III-7-23)

என்கிற சுருதியில் ஈசுவரனைவிட வேறான திரஷ்டாவும் ஞாதாவும் இல்லை என்று சொல்லியிருப்பதால் ஞானபிரதிபந்தகாரணங்களை உடையவராயும் ஈசுவரனைவிட வேறாயும் சம்சாரியில்லையே. அப்படியிருக்க சம்சாரிக்கு ஞானமுண்டாகிற விஷயத்தில் சரீராதிகளை ஜீவன் அபேக்ஷிக்கிறானென்றும், ஈசுவரனுக்கு அபேக்ஷையில்லை என்றும் சொல்லவேண்டிய காரணமென்ன?

தி. வாஸ்தவம்தான் ஈசுவரனைவிட ஜீவன் வேறில்ல. ஆயினும் ஆகாசத்துக்கு கடம், கரகம் (பாத்திரவிசேஷம்) மலையின்குகை, முதலிய உபாதிகளின் சம்பந்தம் சொல்லப்படுவது போல் தேகாதி சங்காதமாகிற உபாதியின் (ஈசுவரனுடன்) சம்பந்தம் சொல்லத்தான் படுகிறது. கடத்துக்குள்ளிருக்கும் ஆகாசத்துக்கும் கரகத்துக்குள்ளிருக்கும் ஆகாசத்துக்கும் பேதமில்லாமல் எல்லாம் ஒரே ஆகாசமாயிருந்தாலும், கடாகாசம் கரகாகாசம் முதலிய வியவஹாரங்கள் உலகத்தில் ஏற்பட்டு கடாதி சப்தங்கள் என்ன, அவைகளின் பாவனை (ஞானம்) என்ன இவைகள் விளங்குகின்றன. இவைகளால் ஏற்பட்ட கடாகாசாதி பேதமும் பொய்யென்றே தெரியவருகிறது. இது போல் தேகாதி உபாதி சம்பந்தத்தால் ஈசுவரனுக்கும் ஜீவனுக்கும் பேதமிருக்கிறதென்கிற மித்தியாஞானமானது அவிவேகத்தால் ஏற்படுகிறது. (வாஸ்தவத்தில் தேகாதிகளாயிராத ஸ்வயம் பிரகாசமான) ஆத்மாவுக்கு (நான் மனிதன் என்கிற) பிரமை (ஞானப்படுவதால் அதை தள்ளமுடியாது.) இந்தப்பிராந்தியால் அதற்குக் காரணமான அஞ்ஞானம் கற்பிக்கப்படுகிறது. இந்தப் பிராந்தியானது முந்தின பிராந்தியால் ஏற்படுகிறது. ஜீவனுக்கு இப்படி சம்சாரம் ஏற்படுவதினால் அவன் சங்கற்பிக்கிற விஷயத்தில் தேகாதிகளின் அபேக்ஷை இருக்கிறது.

[ஆ அசம்சாரியான ஆகாசம்போன்ற ஈசுவரன் சங்கற்பிக்கிற விஷயத்தில் தேகாதிகளை அபேக்ஷிக்கிறதில்லை.] (34)

14-ல் சொல்லியதற்கு உத்தரம்

1. பிரதானமானது அநேக ரூபமாயிருப்பதால் மிருத் முதலியவைகள்போல் காரணமாகலாம்.

2. ஒன்றுடனும் சேராத பிரம்மம் காரணமாக மாட்டாது.

என்று செய்த ஆக்ஷேபமானது பிரதானம் வேதத்தில் கூறப்படாததாலேயே தள்ளப்பட்டது. தர்க்கத்தாலும் பிரம்மமே காரணமென்றும், பிரதானம் முதலியவைகள் காரணமல்லவென்றும் நிரூபிக்கமுடியும். அப்படியே नविलक्षण त्वादस्य (II-1-4) முதலிய சூத்திரங்களில் சூத்திரகாரர் நிரூபிக்கப்போகிறார். 35

5-வது சூத்திரம் முற்றிற்று.

I-1-5-ல் 2 (6) வது சூத்திரம்.

இப்போது சாங்கியன் ஒரு நூதன யுக்தியை கற்பிக்கிறான். சங்கற்பிக்கும் தன்மையைச் சுருதியானது கூறியிருப்பதால் அசேதனமான பிரதானம் ஜகத்காரணமாகமாட்டாது என்று செய்த ஆக்ஷேபத்தை வேறுவிதமாய் பரிகரிக்கமுடியும். எப்படியெனின் அசேதனமும் சேதனமாக உபசாரமாகச் சொல்லப்படுகிறது. (36)

(திருஷ்டாந்தம்) ஒரு ஆற்றின் கரையானது இடிந்து விழும்படி யிருக்கிறதைப்பார்த்து, கரையானது இடிந்துவிழ இச்சிக்கிறது என்று ஜனங்கள் சொல்லுகிறதினால் அசேதனமான கரையினிடத்திலும், சேதனம்போல் வியவஹாரம் காணப்படுகிறது. அதுபோல் சிருஷ்டியை ஆரம்பிக்கத்தயாராயிருக்கும் அசேதனமான பிரதானத்தினிடத்திலும், அது சங்கற்பித்தது என்று ஒளபசாரிக வியவஹாரம் உண்டாகலாம்.

(சங்கற்பத்தைக் கெளணமாகச் சொல்லும்படி பிரதானத்துக்கும் சேதனத்துக்கும் என்ன சாம்யம் இருக்கிறதெனின்)

உலகத்தில் ஒருவன் ஸ்னானம்செய்து, சாப்பிட்டு மத்தியானம் கிராமத்திற்கு வண்டி ஏறிப்போகிறேன் என்று சங்கற்பித்து பிறகு அப்படியே நியமமாகச் செய்கிறான். இதுபோல் பிரதானமும் மஹத்முதலிய ஆகாரமாக நியமமாகப் பிரவிர்த்திக்கிறது. ஆகையால் சேதனம்போல் உபசாரமாகச் சொல்லப்படுகிறது.

(புருஷனிடத்தில் நியமமான கிரமம்போல் பிரதானத்தினிடத்திலும் காரியத்தைச் செய்யும் தன்மை காணப்படுவதே இரண்டுக்கும் சாம்யம்.) (37)

சங்கற்பத்தின் முக்கியார்த்தத்தை விட்டுவிட்டு ஒளபசாரிகார்த்தத்தை ஏன் கிரகிக்கவேண்டும்?

(1) तत्तेज ऐक्षत (छा VI-2-3)

(2) ता आप ऐक्षन्त (छा VI-2-4)

என்கிற வாக்கியங்களில் அசேதனங்களான அப்பும் தேஜசும் சேதனம்போல உபசரிக்கப்பட்டிருக்கின்றன. ஆகையால் சத் என்பது சங்கற்பத்தைச் செய்கிறது என்று சொல்லிய இடத்திலும் சங்கற்பத்தை உபசாரமாக அறியவேண்டியது. ஏனெனின் கெளணார்த்தத்தை விசேஷமாய்ச் சொல்லும் பிரகாரணத்தில் இவைகள் கூறப்பட்டிருக்கின்றன. (38)

சித்தாந்தம்.

1. சூத்திரம்.

இப்படி சாங்கியன் சொன்னதை உத்தேசித்து

# गौणश्चेन्नात्मशब्दात् ॥ ६ ॥

என்னும் சூத்திரம் ஆரம்பிக்கப்படுகிறது. (39)

2. பதஉரை.

गौणः चेत् न (சங்கற்பம்) ஒளபசாரிகம் என்றாலும் பிரதானம் காரணமன்று.

आत्मशब्दात् ஆத்மசப்தம் வேதத்தில் கூறப்பட்டிருப்பதால். (40)

3. பொழிப்புரை.

"சங்கற்பித்தது" என்று சொன்னதானது ஒளபசாரிகம் என்று சொன்னாலும் அப்போதும் பிரதானம் ஜகத்காரணமாகமாட்டாது. ஏனெனின் காரணவிஷயத்தில் ஆத்மசப்தம் பிரயோகிக்கப்பட்டிருக்கிறது. (41)

4. பாஷ்யம்.

36-37-ல் கூறிய ஆக்ஷேபத்திற்கு உத்தரம்.

1. गौणः 1. சத் சப்தத்தால் கூறப்பட்டதானது அசேதனமான பிரதானம்.

2. அதினிடத்தில் சங்கற்பம் ஒளபசாரிகமாகச் சொல்லப்பட்டது. அப்புதேஜஸ் இவைகள் விஷயத்திற் போலும். (42)

2. चेत् न இப்படி சொன்னது சரியன்று. (43)

ஏனெனின்

3. आत्मशब्दात्

सदेव सोम्येदमग्र आसीत् (छा VI-2-1)

என்று ஆரம்பித்து

तदैक्षत तत्तेजोऽसृजत (छा VI-2-3)

என்பதினால் அப்பு தேஜஸ் இவைகளின் சிருஷ்டியைக்கூறி

सेयं देवतैक्षत हन्ताहमिमास्तिस्रो देवता
अनेन जीवेनात्मनानुप्रविश्य नामरूपे
व्याकरवाणि

என்கிற சுருதியில் பிரகிருத சத் சப்தத்தால் கூறப்பட்ட சங்கற்பகர்த்தாவானது தேஜஸ், அப்பு, அன்னம் இவைகளை தேவதா சப்தத்தால் குறிப்பிட்டு

"நான் இந்த மூன்று தேவதைகளையும் இந்த ஜீவஸ்வரூபமாய்ப் பிரவேசித்து ஸ்தூலமான நாமரூபங்களைச் செய்கிறேன் என்று சங்கற்பித்தது"

என்று சுருதி சொல்லுகிறது.

இவ்விடத்தில் அசேதனமான பிரதானமே சங்கற்பிக்கிறதென்று சொன்னால் அப்போது பிரகிருதத்தில் அதுவே கூறப்பட்டிருந்தால் அதுவே தேவதை என்று ஒப்புக்கொள்ளவேண்டும். அப்போது தேவ

தையானது ஜீவனை ஆத்மசப்தத்தால் கூறமாட்டாது. தன் ஸ்வரூபமாகச் சொல்லமாட்டாது) உலக பிரசித்திப்படிக்கும் பதத்தின் ரூபத்தின் படிக்கும் ஜீவன் என்றால் சரீராதிகளின் அதிபதி, பிராணன்களை தரிக்கிறவன், சேதனம்; இவன் எப்படி அசேதனமான பிரதானத்துக்கு ஆத்மா ஆவான்.

ஆத்மா என்றால் ஒன்றின் ஸ்வரூபம். அசேதன பிரதானத்துக்கு சேதனமான ஜீவன் ஸ்வரூபமாக மாட்டான்.

நம்முடைய பக்ஷத்தில் அதாவது சேதனமான பிரம்மம் முக்கியமான ஈக்ஷிதா (சங்கற்பிக்கிறவன்) என்று ஒப்புக்கொள்ளும் பக்ஷத்தில் (பிம்பப்பிரதிபிம்பங்களின் பேதம் கற்பிதமாகையால்) ஜீவவிஷயத்தில் आत्मा (அதாவது தன் ஸ்வரூபம்) என்னும் சப்தத்தை உபயோகித்ததான்து யுக்தம். (ஜீவனே பிரம்மத்தின் ஸ்வரூபம் என்பது கருத்து.

(சத் சப்தார்த்தத்தை உத்தேசித்து ஜீவவிஷயத்தில் ஆத்ம (ஸ்வரூபம்) சப்தம் பிரயோகிக்கப்பட்டது. இதனால் சத்தின் ஸ்வரூபம் ஜீவன் அதாவது சேதனம் பிரதானமன்று என்று முடிந்தது.) (44)

அப்படியே,

सयएषोऽणिमैतदात्म्यमिदं सर्वं तत्सत्यं
स आत्मा तत्वमसि श्वेतकेतो (छा (VI-8-7)

என்கிற இடத்தில் स आत्मा (அது ஆத்மா) என்கிற வாக்கியமானது பிரகிருத அத்தியாயத்தில் கூறப்பட்டதை ஆத்ம சப்தத்தால் கூறுகிறது. तत्वमसि என்னும் கடைசியான வாக்கியமும் சேதன் ஸ்வரூப சுவேதகேதுவை ஆத்மாவாக உபதேசிக்கிறது.

[ரா ஆகவே சத் சேதனாத்மாவாயிருப்பதால் (சேதன் ஸ்வரூபமாயிருப்பதால்) சேதனமே.

[ரா சுருதியின் அர்த்தம்:—சத் என்று பெயருள்ள பரமசூக்ஷுமமான இதுவே இந்த சகலஜகத்தும் அந்த சத்தே சத்தியம். ஏனெனின் விகாரம் பொய். அதுவே சகலத்துக்கும் ஆத்மா. ஓ சுவேதகேதுவே நீ சம்சாரியன்று. அந்த சத்தாகிய பிரம்மமே நீ ஆகவே சத் சேதன ஸ்வரூபமாக இருப்பதால் சேதனமே. ()

38-ல் கூறிய பூர்வபக்ஷத்திற்கு உத்தரம்.

அப்பும் தேஜஸ்ஸும் சேதனத்துக்கு விஷயங்களானதால் அசேதனங்கள் நாமரூப சிருஷ்டியில் அவைகளை சேர்க்கப்பட்டிருக்கிறது. மேலும் அப்பு தேஜஸ் விஷயத்தில் சங்கற்பம் முக்கியம் என்று சொல்லுகிறதற்குக் காரணமில்லை. ஏனெனின் இதர இடத்தில் (சத் விஷயத்தில்) ஆத்மசப்தம் உபயோகித்திருப்பதுபோல் இவர்கள் விஷயத்தில் ஆத்மசப்தம் உபயோகப்படவில்லை. ஆகையால், கறைபோல் அவைகளின் சங்கற்பமும் கௌணமென்று சொல்லுவது யுக்தம்.

(கௌணமென்றால் குணசம்பந்தமுள்ளது. காரியத்தைச் செய்யும் சேதனத்தின் குணமானது இவைகளிடத்திலும் காணப்படுவதால் கௌணம் என்று சொல்லப்படுகிறது.) (46)

(இதுவரையில் அப்பு தேஜஸ்கள் ஜடமானதால் அவைகளின் சங்கற்பம் கௌணமாக சொல்லப்பட்டது. இப்போது அப்பு தேஜஸ் பதங்கள் அவைகளின் அதிஷ்டானமான சத்தை (பிரம்மத்தை) க் கூறுகிறபடியால் சங்கற்பத்தை முக்கியமாய் அறியலாம். சத்தின் சங்கற்பமானது ஆத்மசப்தப் பிரயோகத்தினால் கௌணமன்று முக்கியம் என்று முன்னமேயே சொல்லப்பட்டிருக்கிறது. (47)

(6-வது சூத்திரபாஷ்ய மொழிபெயர்ப்பு)

முற்றிற்று.

---

I-1-5ல்-3 (7)வது சூத்திரம்.

அ-கை: முந்தின சூத்திரங்களுக்கும் இதற்கும் சம்பந்தம்:—

(5-வது சூத்திரத்தில் ஜகத்காரணம் பிரதானமாக இருக்கலாமே என்று பூர்வபக்ஷிசொன்னதற்கும் சங்கற்பிக்குந்தன்மை அசேதனத்தினிடத்தில் ஏற்படமாட்டாதாகையால் பிரதானம் காரணமாகமாட்டாது என்று சித்தாந்தி சொன்னான்.

அதின்பேரில், அசேதனமான அப்புமுதலியவிஷயத்தில் சங்கற்ப சப்தம் கௌணமாகப் பிரயோகிக்கப்பட்டிருப்பதுபோல், பிரதானமும் கௌணமாக சங்கற்பிக்கட்டுமே என்று பூர்வபக்ஷி கேட்க 6-வது சூத்திரத்தில் அப்படி கௌணமாகக்கூடச் சொல்லக் கூடாது. ஏனெனின் ஆத்மசப்தம் உபயோகிக்கப்பட்டிருக்கிறது அது பிரதானவிஷயத்தில் ஒவ்வாது என்று சித்தாந்தி சொன்னான்.

இந்த 7-வது சூத்திரத்தில், அந்த ஆத்ம சப்தத்தையே பிரதானவிஷயத்தில் உபயோகித்துக்கொண்டால் சங்கற்பம் கௌணமாகக்கூட ஏற்படமாட்டாது

என்று எப்படி சொல்லலாம் என்பதாய் பூர்வபக்ஷி கேட்க இந்தச்சூத்திரத்தில் உத்தரம் கூறப்படுகிறது. (48)

2. பூர்வபக்ஷம்:—

பிரதானம் அசேதனமாக இருந்தாலும் அதின் விஷயத்தில் ஆத்மசப்தத்தை உபயோகிக்கலாம். ஏனென்னின் அது சகல பிரயோசனங்களையும் (ஜீவனுக்கு) செய்கிறது. (49)

ஒரு அரசன் தன்னுடைய சகல காரியங்களையும் செய்கிற சேவகனைப்பார்த்து "இந்த பத்திரசேனன் என்னுடைய ஆத்மா" என்பதாய் அவன் விஷயத்தில் ஆத்மசப்தத்தை உபயோகிக்கிறான். அரசனுடைய சேவகன் சந்தியுத்தங்களில் பிரவிர்த்திப்பதுபோல் பிரதானமும் ஆத்மாவாகிற புருஷனுடைய போகமோக்ஷங்களைச் செய்கிறதால் புருஷனுக்கு உபகாரம்செய்கிறது. (50)

அல்லது ஒரே ஆத்மசப்தம் பூதாத்மா இந்திரியாத்மா என்பதுபோல் சேதனு சேதனவிஷயங்களில் உபயோகப்படலாம். (51)

ஜோதிஸ் என்னும் ஒரே சப்தம் யாகத்தையும் ஜ்வாலையையும் கூறுவதுபோலும். (ஆகவே இரண்டுவிதத்திலும் ஆத்மசப்தத்தை பிரதானவிஷயத்தில் உபயோகிக்கலாம்) இப்படியிருக்க ஏன் ஆத்மசப்தத்தால் சங்கற்பம் கௌணமன்று என்றுசொல்லுவார்கள். (52

3. சித்தாந்தம்.

(1) சூத்திரக்காரர் இதற்கு

## तन्निष्ठस्य मोक्षोपदेशात् ॥ ७ ॥

என்கிற சூத்திரத்தில் உத்தரம் கூறுகிறார். (53)

(2) பதவுரை.

तन्निष्ठस्य சத்யதார்த்தத்தில் அபேதஞானமுடையவனுக்கு.

मोक्षोपदेशात् முக்தி சொல்லியிருப்பதால். (54)

(3) பொழிப்புரை.

பிரம்மமும் ஜீவனும் ஒன்று என்பதாய் அறிந்தவனுக்குத் தான் மோக்ஷம் சித்திக்கும் என்று சுருதி சொல்லுகிறது. (55)

(4) பாஷ்யம்.

A. முதலாவது அர்த்தம்.

ஸ்வமதசித்தாந்தம்.

அசேதனமான பிரதானம் ஆத்மசப்தத்தால் கூறப்படமாட்டாது. ஏனென்னின் சுருதியானது,

(1) स आत्मा என்னும் வாக்கியத்தில் பிரகிருதப்ரஸ்தாபத்திலிருக்கிற சூட்சுமமான சத்தை குறிப்பிட்டு,

(2) तत्त्वमसि श्वेतकेतो என்ற வாக்கியத்தில் சேதனன் சுவேதகேதுவுக்கு மோக்ஷம் கிடைக்கும்பொருட்டு அதிலேயே நிஷ்டை இருக்கவேண்டும் என்று உபதேசித்து,

आचार्यवान् पुरुषोवेद तस्य तावदेवं चिरं
यावन्नविमोक्ष्ये अथसम्पत्स्ये

என்ற வாக்கியத்தில் எவனுக்கு குரு இருக்கிறனோ அவன் தத்வஞானத்தை அடைகிறான். அவனுக்குப் பிராரப்தமிருக்கும்வரையில்தான் விளம்பம், சரீரம் விழுந்தபின் அவன் சத்சம்பத்து அடைகிறான் என்று மோக்ஷத்தை உபதேசிக்கிறது. (56)

அசேதனமான பிரதானத்தை சத்சப்தத்தால் கூறினதாகச் சொன்னால், நீ அதுவாயிருக்கிறாய் என்றுசொன்னதாக ஆகும். அப்போது சேதனனுமுமுக்ஷுவை அசேதனனாயிருக்கிறாய் என்று சொன்னதாக ஆகும். சேதனனை அசேதனன் என்று சொல்லும் விபரீத சாஸ்திரம் புருஷனுக்கு அனர்த்தத்துக்கு ஏற்படும். ஆகையால் அது பிரமாணமாகமாட்டாது. தோஷமற்ற சாஸ்திரத்தை அப்பிரமாணமென்று சொல்லுவது யுக்தமன்று. பிரமாணமாயிருக்கும் சாஸ்திரம் அஞ்ஞானியும்மோக்ஷயிச்சையுள்ளவனுமிருக்கிறவனுக்கு அசேதனமான அனாத்மாவை (பிரதானத்தை) ஆத்மாவென்று உபதேசித்தால், சிரத்தையுள்ள அவன் அந்தகோலாங்கூல நியாயப்படி அதையே ஆத்மாவாக பாவித்து அதைவிடவேறான ஆத்மாவை அறியமாட்டான். அப்போது புருஷார்த்தத்தையும் இழந்து அனர்த்தத்தையும் அடைவான்.

அந்தகோலாங்கூல நியாயமானது ஏ:-காட்டில் வழிதப்பி தன்னூருக்குப் போகவேண்டுமென்று இச்சித்துக்கொண்டிருக்கும் ஒருகுருடனை ஒரு கெட்ட மனிதன் பார்த்து ஏன் துக்கப்பட்டுக்கொண்டிருக்கிறாய் என்று கேட்டான்.

இவனுடைய அன்பான வார்த்தையைக்கேட்டு அவனை நல்லவனாகப்பாவித்து என்ன அதிர்ஷ்டம் நின்

ஞன் நான் ஊர்போய்ச் சேரும்படியாய் நல்லவார்த்தையைச் சொல்லுகிறாயே யென்று குருடன் சொன்னன். மோசக்கருத்துள்ள அவன் துஷ்டமாட்டைக் கொண்டுவந்து அதின்வாலை பிடித்துக்கொள்ளும்படி குருடனுக்குச்சொல்லி, இது உன்னுடைய ஊருக்குக் கொண்டுபோய்விடும் என்றும் சொன்னன். இதை நம்பின குருடன் வாலைவிடாமல் தன்னிஷ்டத்தை இழந்துவிட்டதுமன்றியில் அநர்த்தத்தையுமடைந்தான். இதுவே அந்தகோலாங்கூல நியாயம் எனப்படும். (57)

ஆகையால் எப்படி ஸ்வர்க்காதிகளை இச்சிக்கிறவனுக்கு அக்கினிஹோத்திராதி சாதனங்களை சாஸ்திரம் உள்ளபடி உபதேசிக்கிறதோ அப்படியே மோக்ஷ இச்சையுள்ளவனுக்கும்

स आत्मा तत्वमसि श्वेतकेतो

என்பதாய் ஆத்மாவை உள்ளபடி உபதேசிக்கிறதென்று சொல்லுவது யுக்தம். இப்படி உள்ளபடி உபதேசித்தால்தான், பழுக்கச்சுட்டகோடாலிகிரகண திருஷ்டாந்தத்தால் சத்தியத்தை தியானம் செய்கிறவனுக்குச் செய்த மோக்ஷோபதேசம் ஒவ்வும்.

ஏ (எப்படியெனின், திருட்டுபோனவிடத்தில் சந்தேகத்தை தீர்க்கும்பொருட்டு எவனிடத்தில் சந்தேகமிருக்கிறதோ அவனை உத்தேசித்து நெருப்பில் கோடாலியைபோட்டு பழுக்கச்சுடவைக்கிறார்கள். இவன் "நான் திருடவில்லை" என்று பொய் சொன்னால் அந்த கோடாலியைகையால் எடுப்பதினால் தகிக்கப்படுகிறான். "நான் திருடவில்லை" என்று நிஜத்தை சொல்லுகிறவன் அப்படி கோடாலியை எடுத்தும் தஹிக்கப்படுகிறதில்லை; தஹிக்கப்படாமைமைய பிரயோசனமாகவுடைய "நான் திருடன் அல்ல" என்னும் வாக்கியத்தின் விஷயம் எப்படி சத்தியமோ அப்படியே இந்த திருஷ்டாந்தத்தை முன்னிட்டுக்கொண்டு "சத்சப்தத்தால் கூறப்பட்டபொருள் சத்தியம், அதுவே ஆத்மா, ஆது ேவ நீ" என்று செய்யப்பட்ட உபதேசமும் நிஜமாகும். இந்த உபதேசமும் கௌணமாகாது. (58)

ஏ (ஜீவனே பிரதானம் என்பதாய் சம்பத் உபாசனை இந்தவாக்கியம் கூறுகிறதாயிருந்தால்), சத்ஆத்மா என்னும் உபதேசம் முக்கியமாகமாட்டாது. அப்போது "நான் ... சாஸ்திரவிசேஷமாயிருக்கிறேன்" என்று பாவிப்பதில் எப்படிபலன் அநித்தியமாயிருக்கிறதோ அது (மானஸிகக்கிரியை ஆகையால் அதின்பலன் அநித்தியம்), அப்படி பிரதானமே ஆத்மா என்னும் தியானமும் அநித்திய பலத்தையேகொடுக்கும். ஆய்போது மோக்ஷத்தின் உபதேசம் பொருந்தாது. ஆகையால் ஆத்மசப்தம் ஜடசுமுமான ச த்தை கௌணமாகக்கூறவில்லை. (59)

ஸேவகன்விஷயத்திலோ, எஜமானனுக்கும் ஸேவகனுக்கும் பேதம் பிரத்தியக்ஷமாயிருப்பதால் "என்னுடைய ஆத்மா பத்திரஸேனன்" என்கிற இடத்தில் உபயோகிக்கப்பட்ட ஆத்மசப்தம் கௌணமே. (60)

மேலும் சில இடங்களில் சப்தங்கள் கௌணமாக உபயோகித்திருப்பதைப் பார்த்து ஆதினால் (நான் ஆத்மா முதலிய) வேதப்பிரமாணத்தால் சித்திக்கும் விஷயங்கள் எல்லாம் கௌணமென்று சொல்லுவது நியாயமன்று. ஏனெனின் (நம்பிக்கை) விசுவாசமில்லாமற் போய்விடும். (61)

யாகத்தையும் ஜ்வாலையையும் ஜோதிஸ் சப்தம் கூறுவதுபோல் சேதனத்தையும் அசேதனத்தையும் ஆத்மசப்தம் கூறுகிறதென்று சொன்னதும் யுக்தமன்று. ஏனெனின் ஒரு பதத்துக்கு அநேக அர்த்தங்களைக்கூறுவது நியாயமன்று.

ஆகையால் ஆத்மசப்தம் முக்கியமாய் சேதனத்தையே கூறும். பூதாதிகளிடத்தில் சேதனம் உபசாரமாக சொல்லப்படுவதினால் பூதாத்மா இந்தபரமாத்மா என்பதாய் ஆத்ம சப்தமும் உபயோகிக்கப்படலாம்.

ஆத்மசப்தம் சேதனுசேதனங்களிரண்டையும் கூறுவதாயிருந்தாலும் அதை நிச்சயிக்கும் பிரகரணமானது, விசேஷபதமானது இல்லாவிடின், அது இன்னதைத்தான் கூறுகிறதென்று நிர்ணயம் செய்யமுடியாது. இந்த (பிரகிருத) இடத்தில் அசேதனத்தைத்தான் கூறுகிறதென்று நிச்சயிக்க யாதொரு காரணமுமில்லை. பிரகிருத பிரஸ்தாபமோ சங்கற்பிக்கிற சத். அதற்கு சமீபத்தில் சேதனரூபமான ஸ்வேதகேது பிரஸ்தாபிக்கப்படுகிறான். சேதனனான ஸ்வேதகேதுவுக்கு அசேதனம் ஆத்மாவாக மாட்டாது என்று முன்னமேயே சொல்லியிருக்கிறோம். ஆகையால் சேதன விஷயத்திலேயே ஆத்மசப்தம் பிரயோகிக்கப்பட்டிருக்கிறது என்று நிச்சயமாகிறது. (62)

ஜோதிஸ் சப்தமும் ஜ்வாலையையே ரூடியாய் குறிப்பிடுகிறது. (ஜ்வாலையானது பதார்த்தங்களை பிரகாசிப்பிக்கிறதுபோல் யாகத்தில் சில மந்திரசமூகங்கள் சில விஷயங்களைப் பிரகாசிப்பிக்கிறதினால் அந்தயாகத்துக்கு ஜோதிஷ்டோமயாகம் என்று பெயர் வந்தது. இதில் உபயோகிக்கப்படும் ஜோதிஸ் சப்தத்

துக்கு முக்கியார்த்தமில்லை. கௌணார்த்தமே. ஆகையால்) ஜோதிஸ் திருஷ்டாந்தம் ஒவ்வாது. (63)

(இந்த சூத்திரத்துக்கே வேறு ஒரு அர்த்தம்) அல்லது முந்தின சூத்திரத்திலேயே ஆத்மசப்தத்துக்கு கௌணார்த்தமா, அநேகார்த்தமா என்கிற சங்கையை நிவர்த்தித்து இப்போது பிரதானம் காரணமாகமாட்டாது என்கிற விஷயத்தில் ஸ்வதந்திரமாக तन्निष्ठस्य मोक्षोपदेशात् என்னும் சூத்திரம் காரணத்தைக் கூறுவதாக வியாக்கியானம் செய்யப்படுகிறது. ग(முன் சூத்திரத்தில் ஆத்மசப்தத்துக்கு முக்கியார்த்தம் சுலபமாய்க் கிடைக்கிறபடியால் கௌணார்த்தத்தையாவது அநேகார்த்தத்தையாவது தள்ளும்பொருட்டு வேறு சூத்திரத்தைச் செய்யவேண்டியதில்லை. அதிலேயே செய்துவிடலாமே. ஆகையால் இவ்வளவு வியாக்கியானமும் அனாவசியம், திருப்தியில்லை என்பதாய் வேறுவிதமாயும் அர்த்தம் செய்யலாம் என்று பாஷ்யகாரர் சொல்லுகிறார்.) அதாவது:—பிரம்ம நிஷ்டனுக்கே மோக்ஷம் உபதேசிக்கப்பட்டிருக்கிறது.

ஆகையால் அசேதனமான பிரதானம் சத் சப்தத்தால் கூறப்படவில்லை. (64)

(7-வது சூத்திரத்தின் பாஷ்யமொழிபெயர்ப்பு)

முற்றிற்று.

## 1-1-5-ல் 4 (8) வது சூத்திரம்.

1. (முந்தின சூத்திரத்துக்கும் இந்த சூத்திரத்துக்கும் சம்பந்தம்:—இந்தசூத்திரமும் முந்தின சூத்திரம்போல் பிரதானம் ஜகத்காரணமல்லவென்பதை நிரூபிக்கிறது.) (65)

2. பூர்வபக்ஷம்:—சத்சப்தவாச்சியமான ஜகத்காரணம் பிரதானமல்லவென்பது எப்படி?

(சத்சப்தத்தால் பிரதானம் பிரதிபாதிக்கப்பட்டால் அய்யோது தத்வமஸ்யாதி வாக்கியங்களிலும் தத் சப்தத்தால் அந்த பிரதானமேகூறப்பட்டதாக ஆகும். அப்போது மோக்ஷ இச்சையுள்ளவனுக்கு பிரதான நிஷ்டையையே சொல்லுவதினால் தோஷம் சம்பவிக்க மாட்டாது. ஆத்ம நிஷ்டையே மோக்ஷத்துக்கு முக்கியமான சாதனமானாலும், பிரதான நிஷ்டை அப்படி ஆகாவிட்டாலும், ஸ்தூலாருந்ததி நியாயப்படி பிரதான நிஷ்டையும் மோக்ஷத்துக்கு உபயோகப்படட்டுமே. அப்போது யாதொரு தோஷமில்லையே.) (66)

3. இப்படி பூர்வபக்ஷி சொல்ல, சூத்திரக்காரர்

## हेयत्वावचनाच्च ॥ ८ ॥

என்கிற சூத்திரத்தில் சித்தாந்தங்கூறுகிறார். (67)

(2) பதவுரை

हेयत्वावचनात् தள்ளத்தக்கது என்று சொல்லாதபடியாலும்,

च பிரதிஞ்ஞாவிரோதம் வருமாகையாலும் (68)

3. பொழிப்புரை.

பிரதானமே ஆத்மா என்னும் உபதேசம் தள்ளத்தக்கதென்று சொல்லப்படாததினாலும், ஒன்றை அறிந்தால் சகலத்தையும் அறியலாம் என்கிற பிரதிஞ்ஞைக்கு விரோதம் வருவதாலும் பிரதானமானது சத்சப்தத்தால்கூறப்பட்டஜகத்காரணமாகமாட்டாது (69)

(4) பாஷ்யம்.

1. हेयत्वावचनात्:—அநாத்மாவான பிரதானமே சத்சப்தத்தால் கூறப்பட்டிருந்தால்,

स आत्मा तत्त्वमसि

என்கிற வாக்கியங்களால் "பிரதானமே ஆத்மா" என்றும், "நீ பிரதானம்" என்றும் உபதேசிக்கப்பட்டதாக ஆகும். இந்த உபதேசம்பெற்றவன் அநாத்மஞானத்தால் தன்னிஷ்டன் ஆவான். (அதுவேதான் என்று பாவிக்கிறவனாவான்.) அப்படி தன்னிஷ்டனாயிருக்கக்கூடாது என்பதற்கு முக்கியமான ஆத்மாவை உபதேசிக்க இச்சிக்கும் குருவானவர் முந்தின உபதேசத்தை தள்ளிவிடவேண்டும் என்று உபதேசித்திருப்பார். திருஷ்டாந்தம்:—அருந்ததிநக்ஷத்திரத்தைக் காண்பிக்க இச்சித்தவன் அதின் சமீபத்திலிருக்கிற பெரிய நக்ஷத்திரத்தை காண்பித்து இதுவே அருந்ததி என்று நிரகிக்கும்படி செய்து, பிறகு அதுவன்றுவென்று சொல்லி, நிஜமான அருந்ததியையே நிரகிக்கும்படி செய்வான். இதுபோல (பிரதானத்தை ஆத்மா என்று முதலில் உபதேசித்திருந்தாலும், பிறகு) இது ஆத்மாவல்ல என்று சொல்லியிருப்பார். அப்படியோ சொல்லவில்லை. சாந்தோக்கிய ஆறுவது பிரபாடகம் ஆத்மா சத்தைத்தவிர வேறல்லவென்கிற உபதேசத்துடனேயே முடிவுபெறுகிறது. (70)

ग 2. च:-(சூத்திரத்திலிருக்கிற) ச சப்தம் பிரதிஞ்ஞைக்கு விரோதம்வரும் என்கிற (முன் சொல்லப்படாத) நூதன யுக்தியையும் கூறுகிறது. அது என்னவெனின் தள்ளவேண்டியது என்பதை சொல்லியிருந்தாலும் பிரதிஞ்ஞைக்கு விரோதம் வரும். காரணத்தை அறிந்ததினாலேயே சர்வமும் அறிந்ததாக ஆகி

றது என்பது பிரதிஞ்ஞை. வேதத்தை அத்தியயனம் செய்துவந்த கர்விஷ்டனான புத்திரனைப்பார்த்து பிதா கேட்டார் :—மகனே எதை அறிந்ததினால் சகலத்தையும் அறியலாமோ அப்படிப்பட்டதைக் குருவினிடத்தில் கேட்டாயோ,

उत तमादेशमप्राक्ष्यः येनाश्रुतं श्रुतं भवति
अमतं मतं अविज्ञातं विज्ञातं (छा VI-1-2)

ஒன்றை அறிந்ததினால் எல்லாவற்றையும் எப்படி அறிந்ததாகும் என்று சங்கித்து புத்திரன் பிதாவைப்பார்த்து,

कथं नु भगवः स आदेशो भवति

சுவாமி அது எப்படிப்பட்டது என்றுகேட்டான். இதற்கு பிதாவானவர்.

यथा सोम्यैकेन मृत्पिंडेन सर्वं मृण्मयं
विज्ञातं स्यात् वाचारम्भणं विकारो
नामधेयं मृत्तिकेत्येव सत्यं एवं सोम्य
स आदेशोभवति (छा VI-1-6)

என்று உத்தரம் சொன்னார். அதாவது,

(ஒரு மிருத்பிண்டத்தினால் மண்ணாலானதெல்லாம் தெரிந்ததாக ஆகிறது. ஏனெனின் வாக்கினால் ஆரம்பிக்கப்படுகிறது பெயரேதவிர கடாதிகளன்று. நாமதேயம்தான் விகாரம் (காரியம்), இது கேவல வாக்கினால் ஏற்படுகிறது, இது காரணத்தைவிட வாஸ்தவத்தில் வேறாக இல்லை. மிருத்தே சத்தியம் விகாரம் பொய். காரணம் காரியத்தைவிட வேறான சத்தை, காரியம் காரணத்தைவிட வேறன்று. ஆகையால் காரணத்தைவிட்டு காரியத்துக்கு ஸ்வரூபம் சித்திக்காதபடியால் காரணஞானத்தால் காரியஞானம் அவசியமுண்டாகும். மிருத்துபோல் பிரம்மமே சத்தியம். ஆகாசாதி விகாரங்கள் பொய். இப்படி பிரம்மஞானமுண்டானவளவில், அறியவேண்டியதாக யாதொன்றுமில்லை).

போக்கியவர்க்கத்துக்குக் காரணமான பிரதானமானது சத்சப்தத்தால் கூறப்பட்டிருந்தால், அந்த பிரதானம் தள்ளத்தக்கது என்று அறியப்பட்டாலும்சரி, தள்ளத்தகாதது என்று அறியப்பட்டாலும்சரி, எவ்விதத்திலும் ஜீவவர்க்கம் அறியப்பட்டதாக ஆகமாட்டாது. ஏனெனின் ஜீவகோடிகள் பிரதான காரியமன்று. ஆகையால் சத்சப்தத்தால் கூறப்பட்டது பிரதானமன்று. (71)

(8-வது சூத்திரத்தின் பாஷ்யமொழிப்பெயர்ப்பு)
முற்றிற்று.

## I-1-5ல்-5 (9) வது சூத்திரம்.

1. முந்தின சூத்திரத்துக்கும் இதற்கும் சம்பந்தம் :—முந்தின சூத்திரம்போல் இதுவும் சத்சப்தத்தால் கூறப்பட்ட ஜகத்காரணம் பிரதானமல்லவென்பதை நிரூபிக்கிறது.

இந்த அதிகரணத்தின் முதல் 4 சூத்திரங்களால், ஜகத்காரணத்துக்கு ஆத்மத்வமும் ஈக்ஷித்ருத்வமும் சொல்லியிருப்பதாலும் பிரதானம் ஆத்மாவாகாதபடியாலும் சங்கல்ப கர்த்தாவாகாதபடியாலும் ஜகத்காரணம் ஆகமாட்டாது என்று சொல்லி, பிந்தின சூத்திரங்களால் சுவதந்திரமாகவும் ஆகமாட்டாது என்று நிரூபிக்கிறார். (72)

2. பூர்வபக்ஷம் :—சத்சப்தத்தால் கூறப்பட்ட காரணம் பிரதானமல்லவென்று சொல்லவேண்டிய காரணமென்ன ? (73)

3. சித்தாந்தம்.

(1) சூத்திரம்.

**स्वाप्ययात् ॥ ९ ॥**

என்கிற சூத்திரத்தாலும் பிரதானம் காரணமாகமாட்டாது என்று சொல்லுகிறார். (74)

(2) பதஉரை.

स्वाप्ययात् தன்னிடத்தில் சேருவதினால். (75)

(3) பொழிப்புரை.

சுஷுப்திகாலத்தில் ஜீவன் சத்ரூபமான தன்னிடத்தில் சேருவதாக சுருதி சொல்லுகிறபடியால் சத் என்பது சேதனமே. (76)

(4) பாஷ்யம்.

அந்த சத்சப்தத்தால் கூறப்படும் காரணவிஷயத்தில்,

यत्रैतत्पुरुषः स्वपिति नाम सता सोम्य तदा
सम्पन्नो भवति स्वमपीतो भवति तस्मादेनं
स्वपितीत्याचक्षते स्वं ह्यपीतो भवति

என்கிற (சாந்தோக்கிய VI—8—1) சுருதி ஏற்பட்டிருக்கிறது. இந்த சுருதியின் அர்த்தமென்னவெனின் சுஷுப்தியில் புருஷன் சத்துடன் ஒன்றுகிறபடியால் ஸ்வபிதி என்னும் பெயரை அடைகிறான்.

रा (சத்துடன் ஒன்றுவதும் ஸ்வபிதி என்னும் பெயரை அடைவானேன் எனின் ஸ்வம் தன்னை அபீதோ பவதி அடைந்தவனாக ஆகிறான். அவன் சத்ரூபமான ஆத்மாவை (தன்னை) அடைகிறபடியால் அவன் ஸ்வபிதி (தூங்குகிறான்) என்று உலகத்தில் பிரசித்தமாகச் சொல்லுகிறார்கள்.

இந்தச் சுருதியானது புருஷனுடைய லோகப்பிரசித்தமான ஸ்வபிதியென்னும் பெயரைக் கூறுகிறது. பிரகிருத சத்சப்தவாச்சியமான ஆத்மா ஸ்வ சப்தத்தால் இந்த சுருதியில் கூறப்படுகிறது. அந்த ஆத்மாவில் லயமடைகிறான் என்பது கருத்து. அபியை முன்னிட்டுக்கொண்டுவரும் 'இதி' என்னும் வினைப்பகுதிக்கு லயமென்பது பிரசித்தமான அர்த்தம், प्रभवाप्ययौ என்பதற்கு உற்பத்தி பிரளயங்கள் என்று அர்த்தம் செய்யப்பட்டிருக்கிறது. (77)

இதில் ஒரு ஆக்ஷேபம்:—ஜீவனுக்கு ஸ்வபிதி என்னும் பெயரை சுருதி கூறுகிறது. சுஷுப்தியில் ஜீவன் தன்னிடத்திலேயே லயமடைந்து விடுகிறபடியால் இந்த பெயர் சித்திக்கலாம். இதனால் சத்சப்தம் பிரதானமன்று என்று எப்படி சொல்லமுடியும்.)

अ (சமாதானம்.

ஸ்வபிதி என்னும் பதம் என்ன

அந்த பெயர் வந்ததற்குக் காரணத்தைக் கூறும் स्वमपीतो भवति என்னும் பதங்கள் என்ன

இவைகளுக்கு மத்தியில்

सता सोम्य तदासम्पन्नो भवति

என்கிற வாக்கியம் ஏற்பட்டிருக்கிறது. இதனால் ஸ்வ சப்தத்துக்கும் ஸத் सत् சப்தத்துக்கும் ஒரே அர்த்தமென்று தெரியவருகிறது.

நாம நிர்வசனங்களுக்கு மத்தியிலிருப்பதால் மட்டும் எப்படி स्व சப்தமும் सत् சப்தமும் சாமானாதிகரணியமில்லாதபடியால் ஒரு அர்த்தத்தைக் கொடுப்பதாகச் சொல்லக்கூடுமெனின்,

सता सोम्य என்கிற வாக்கியம் நாம நிர்வசனங்களுக்கு மத்தியில் வரவேண்டிய காரணமென்ன என்பதை யோசித்துப் பார்க்குமளவில், சத் பிரகிரணத்தில் ஸ்வபீதி என்னும் பிரஸ்தாபம் வரவேண்டிய காரணமென்னவென்று ஒரு சந்தேகம் ஜனிக்கும். அதை நீக்கும்பொருட்டு இந்த सता सोम्ये என்கிற வசனம் மத்தியில் போடப்பட்டிருக்கிறது.

सता सम्पन्न அதாவது சத்சம்பத்தியும் (சத்தை அடைவதும்)

स्वमपीत: தன்னை அடைவதும்

ஒன்று என்று சொல்லுவதினால் மேற்கூறிய சந்தேகம் நிவிர்த்தியாகிறது.

சத் பிரகிரணத்தில் ஸ்வபீதி என்பதின் பதார்த்தத்தை நிஷ்கர்ஷிக்கவேண்டிய காரணம் என்னவெனின்

சுஷுப்தியில் ஜீவனுக்கு ஸ்வபிதி என்னும் பெயர் பிரசித்தமாக விளங்குகிறது. அந்த பதத்தின் ஸ்வருபார்த்தத்தை விசாரிக்கும்போது ஜீவனுக்கு சுஷுப்தியில் சத் தான் ஆதாரம் என்று தெரியவருகிறது. எப்படி அக்கினிமுதலிய காரியங்களை உத்தேசித்து சத் என்னும் பதார்த்தம் சித்திக்கிறதோ, அப்படி ஸ்வபிதி என்னும் பதத்தை விசாரிக்கும்போது சத் பதார்த்தம் சித்திக்கிறது.

सता सोम्य सम्पन्न என்கிற வாக்கியத்தால் பிரதிபாதிக்கப்பட்டதும்

स्वमपीत: என்பதால் பிரதிபாதிக்கப்பட்டதும்,

ஒன்று என்பதைக்காட்டும்பொருட்டு நாமநிர்வசனங்களுக்கு மத்தியில் सता முதலியவாக்கியம் சேர்க்கப்பட்டிருக்கிறது. ஆகையால் स्व சப்தத்துக்கும் सत् சப்தத்துக்கும் ஒரே அர்த்தத்தைச் சொல்லவேண்டும். ஸ்வ சப்தம் ஜீவபரமாக இருப்பதால் அதற்கு வேறாகாத सत् சப்தமும் அந்த அர்த்தத்தையே கூறவேண்டும். ஆகையால் சத்சப்தம் பிரதானத்தை கூறமாட்டாது, (78)

रा (ஜீவன் நித்தியனானதால் அவன் லயமடைவதாக எப்படிச் சொல்லலாமெனின், உபாதிகள்தான் லயமடைகின்றனவென்பதைக் காட்டும்பொருட்டு ஜாக்கிரத் ஸ்வப்ந உபாதிகளைக் கூறுகிறார்).

रा (இந்திரிய சம்பந்தத்தாலுண்டாகும் மனோவிர்த்திகள் உபாதிகள், இவைகளால் கடம்முதலிய ஸ்துலபதார்த்தங்களுக்கும் ஆத்மாவுக்கும் சம்பந்தம் உண்டாகிறது. அதினால் ஆத்மா விஷயங்களைப் பார்க்கிறான், ஸ்துல தேகமேதான் என்னும் பிராந்தியை

அடைகிறான், விசுவன் என்னும் பெயரையும் அடைகிறான். இப்படிப்பட்ட ஜீவன் ஜாக்கிராவஸ்தையிலிருக்கிறான்.)

ஜாக்கிறத்காலத்தின் வாசனைகளடங்கிய மனதுடன் கூடினவனுய் தைஜஸன் என்னும் பெயரை அடைந்து ஸ்வப்நத்தில் வாசனைகளால் ஏற்படும் மாயாபரிணுமங்களையும் பார்க்கிறுன். सोम्यतन्मनः என்கிற சுருதியிலிருக்கும் மனஃ என்னும் பதத்தால் கூறப்படுகிறுன்.)

रा (ஸ்தூலசூக்ஷ்ம உபாதிகள் நீங்கினபின், நான் மனிதன், கர்த்தா என்பதாய் விசேஷமான அபிமான மற்றவனுய் தன் ஸ்வரூபத்தினிடத்தில் லீனமாய்விட்டதுபோல் சொல்லப்படுகிறுன். ஆகையால் அவன் தன்னை அடைந்ததாக சொல்லப்படுகிறுன்.

रा (ஸ்வபிதி என்னும் பதத்தின் நிருக்தியைக்கொண்டு ஸ்வ சப்தத்தால் கூறப்பட்டது சத் என்று சொல்லப்பட்டது. இது அர்த்தவாதம், யதார்த்தமன்று என்று ஒருவன் ஆக்ஷேபிக்கும்பக்ஷத்தில் வேறு சில பதங்களும் நிருக்தியின்பேரில் உபயோகிக்கப்பட்டிருக்கின்றன. அவைகள் யதார்த்தத்தைச் சொல்லுவதாக ஒப்புக்கொள்வதுபோல் இதையும் ஒப்புக்கொள்ளவேண்டும் என்று திருஷ்டாந்தம் கூறுகிறுர்.)

स वा एष आत्मा हृदि तस्यैतदेव
निरुक्तं हृदयम् तस्मात् हृदयम् (छा VIII-3-3)

என்கிற சுருதியில் ஆத்மாஹிருதயத்தில் இருப்பதால் ஹிருதயம் எனப்படுகிறுன் என்று சொல்லியிருக்கிறது.

அப்படியே

आप एव तदशितंनयन्ते तेज एवतत्पीतं
नयन्ते (छा VI-8 3 5)

என்ற சுருதியும் अशनाया उदन्या என்கிற சப்தங்களின் நிருக்தியைக் காட்டுகிறது. எப்படியெனில் ஜலமானது अशितं अन्नं नयन्ते சாப்பிடப்பட்ட அன்னத்தை ஜீரணத்துக்குவரும்படி செய்வதால் अशनाया என்று சொல்லப்படுகிறது.

அக்கினியானது पीतं उदकं नयते அதாவது பானம் பண்ணப்பட்ட ஜலத்தை சோஷிக்கிறது என்று சொல்லியிருப்பதால் उदन्या என்னும் பெயரை அடைந்தது.

இதுபோல்

स्वमात्मानं सच्छब्दवाच्यं अपीतो भवति

என்பதாய் அதாவது சத்சப்தத்தால் கூறப்படும் ஸ்வ தன்னுடைய ஆத்மாவை அடைகிறுன் என்கிற அர்த்தம் स्वपिति என்னும் பதத்தின் நிருக்தியால் தெரியவருகிறது.

சேதனமான ஆத்மா அசேதனமான பிரதானத்தை ஸ்வரூபமாக அடையமாட்டாது. (79)

ஸ்வ சப்தத்துக்கு "தன்னுடையது" என்னும் ஒரு அர்த்தமிருப்பதால், பிரதானமே ஆத்மாவினுடையதாகையால் ஸ்வ சப்தத்தால் பிரதானமே கூறப்படட்டுமே எனின், அப்போதும் சேதனம் அசேதனத்தை அடைகிறது என்கிற விருத்தம் ஏற்படும்.

प्राज्ञेनात्मना सम्परिष्वक्तो
नबाह्यं किंच न वेदनान्तरम् (बृ IV-3-21)

அதாவது :—

பிராஞ்ஞனுகிற ஈசுவரனுல் ஆலிங்கனம் செய்யப்பட்டவனுய் வெளியிலிருப்பதாக யாதொன்றையும் அறிகிறதில்லை, உள்ளேயிருப்பதாகவும் அறிகிறதில்லை என்கிற சுருதியும் சுஷுப்தி அவஸ்தையில் சேதனத்தில் லயம் கூறுகிறது.

ஆகையால் சகல சேதனங்களுக்கும் எதினிடத்தில் லயம் சொல்லப்பட்டிருக்கிறதோ அந்த சேதனமே சத் சப்தத்தால் கூறப்பட்ட ஜகத்காரணம்; பிரதானமன்று என்று அறியப்படவேண்டியது. (80)

(9-வது சூத்திரபாஷ்யத்தின் தமிழ் மொழிபெயர்ப்பு)

முற்றிற்று.

## I-1-5- 6 (10) வது சூத்திரம்.

முந்தின சூத்திரத்துக்கும் இதற்கும் சம்பந்தம்:—

முந்தின சூத்திரங்கள் பிரதானம் காரணமாகமாட்டாது என்று சொன்னதுபோலவே இந்த சூத்திரமும் அவ்விஷயத்தில் நூதன காரணத்தைக் கூறுகிறது. (81)

பூர்வபக்ஷம்:—

ஜகத்காரணம் பிரதானமன்று என்று சொல்லவேண்டிய காரணமின்னுமென்ன ? (82)

சித்தாந்தம்.

## गतिसामान्यात् ॥ १० ॥

என்கிற சூத்திரத்தில் சூத்திரக்காரர் வேறு ஒரு காரணத்தைக் கூறுகிறார். (83)

பத உரை.

गतिसामान्यात् அடையும் நிச்சயம் சமானமாயிருப்பதால் (84)

பொழிப்புரை :—சேதனமே காரணமென்பதில் வேதாந்த வாக்கியங்களின் தாற்பரியம் பொதுவாயிருப்பதால் அசேதனமான பிரதானம் ஜகத்காரணமாக மாட்டாது. (85)

பாஷ்யம்.

தார்க்கிகர்கள் சொல்லுவதுபோல் வேதாந்தவாக்கியங்களிலும்

1. சில இடங்களில் சேதனமான பிரம்மம் ஜகத்காரணமென்றும்
2. சில இடங்களில் அசேதனமான பிரதானம் ஜகத்காரணமென்றும்
3. சில இடங்களில் (ரி. பரமாணு முதலியதுபோல) வேறு சிலது ஜகத்காரணமென்றும்

இப்படி ஜகத்காரணம் பலவிதமாக சொல்லியிருப்பதால், சங்கற்பம் முதலியவைகளைக் கூறும் சுருதிகளையும் பிரதானத்தைக் காரணமாக சொல்லுகிறமதத்தை அநுசரித்து அர்த்தம் செய்யலாம். ஆனால் சகலவேதாந்தங்களும் சேதனமே காரணமென்று சொல்லுவதில் சமானமாயிருக்கிறபடியால் வெவ்வேறு காரணம் ஏற்படவில்லை.

எப்படியெனின்:—

(1) अग्नेर्ज्वलतः सर्वा दिशो विस्फुलिङ्गा विप्रतिष्ठेरन्
एवमेवैतस्मादात्मनः सर्वे प्राणा यथायतनं
विप्रतिष्ठन्ते प्राणेभ्यो देवा
देवेभ्यो लोकाः (कौ उप III-3)

ஜ்வலிக்கிற அக்கினியினின்றும் பொறிகள் சகல திக்குகளிலும் செல்லுகிறதுபோல் இந்த ஆத்மாவினிடமிருந்து சக்ஷுராதி சகல பிராணன்களும் அவையவைகளின் கோளகங்களுக்குச் செல்லுகின்றன. பிராணன்களுக்குப் பிறகு அவைகளுக்கு அனுக்கிரகம் செய்யும் சூரியாதி தேவதைகள் உண்டானார்கள் அவர்களுக்குப் பிறகு விஷயங்கள் உண்டாயின.

(2) तस्माद्वा एतस्मादात्मन आकाशः संभूतः (तै. II-1)

இந்த ஆத்மாவினிடமிருந்து ஆகாசம் உண்டாயிற்று.

(3) आत्मन एवेदं सर्वं (छा VII-26-1)

ஆத்மாவினிடமிருந்து எல்லாம் உண்டாயிற்று.

(4) आत्मन एष प्राणो जायते (प्र III-3)

ஆத்மாவிடமிருந்து இந்த பிராணன் உண்டாகிறான்.

இந்த வேதாந்த வாக்கியங்கள் எல்லாம் ஆத்மாவே காரணமென்று காட்டுகின்றன.

ஆத்ம சப்தமும் சேதனத்தைத்தான் கூறும் என்பதை முன்னமேயே சொல்லியிருக்கிறோம். எப்படி சகல சக்ஷுஸ்களும் ஒரு ரூபத்தை அறிய சாதகமாயிருக்கின்றனவோ, (ரி. சகலகாதுகளும் சப்தத்தை கேட்க சாதகமாயிருக்கின்றனவோ சகல கிராணேந்திரியங்களும் கந்தம்முதலியதை அறிய சாதகங்களாயிருக்கின்றனவோ), அப்படி சகல வேதாந்தங்களும் பிரம்மமே ஜகத்காரணமென்கிற விஷயத்தில் ஒரு தாற்பரியத்தைத் தருகின்றன. ஆகையால் இது பெரிய பிரமாணம், அதாவது பிரமாணத்தை திடம் செய்ய சாதகமாக இருக்கிறது. ஆகையால் சகலவேதாந்த வாக்கியங்களின் தாற்பரியமும் ஒன்றாயிருப்பதால் சர்வஞ்ஞனான பிரம்மமே ஜகத்காரணம். (86)

(10-வது சூத்திரத்தின் பாஷ்யமொழிபெயர்ப்பு)

முற்றிற்று.

---

### I-I-5-ல் 7 (11) வது சூத்திரம்.

ரி. முந்தின சூத்திரங்களுக்கும் இந்த சூத்திரத்துக்கும் சம்பந்தம்:— முந்தின சூத்திரங்களில் ஆத்மா முதலிய சப்தங்களால் சேதனம் காரணமென்று அறியப்படுவதாகச் சொல்லப்பட்டது. இப்போது சாக்ஷாத் ஈச்வரனைக் கூறும் சப்தங்களால் அவரே ஜகத்காரணமென்று நிரூபிக்கிறார். (87)

அ-கை:—சர்வஞ்ஞமான பிரம்மம் ஜகத்காரணமென்பது எப்படி என்னின். (88)

# श्रुतत्वाच्च ॥ ११ ॥

என்று சொல்லுகிறார். (89)

பதவுரை.

श्रुतत्वात् च சுருதியில் சொல்லியிருப்பதாலும் (90)

பொழிப்புரை:—சர்வஞ்ஞன் பரமேசுவரனைக் குறித்து स सर्ववित् कारणं என்று சுருதி சொல்லுவதால் அசேதனம் காரணமன்று. (91)

சுவே தாசுவதரர்களுடைய மந்திரோபநிஷத்தில் VI—9)

न तस्यकश्चित्पतिरस्ति लोके
न चेशिता नैव चतस्य लिंगम्
स कारणं करणाधिपाधिपो
न चास्यकश्चिज्जनिता नचाधिपः

லோகத்தில் அவருக்கு பதி ஒருவருமில்லை. அவரை நியமனம் செய்கிறவனில்லை. அவரை கண்டுபிடிக்க அடையாளமில்லை. ஜீவர்களுக்கு அவர் எஜமான் இவரை உண்டுபண்ணுகிறவனில்லை.

என்கிற இந்த சுருதியில் सः (அவர்) என்பதால் கூறப்பட்டவர் முந்தின சுருதியில் சர்வஞ்ஞர் என்று சொல்லப்பட்ட ஈசுவரனே. இவரே ஜகத்காரணம் என்று சுருதி கூறுகிறது.

ஆகையால் சர்வஞ்ஞமான பிரம்மம் ஜகத்காரணம் அசேதனமான பிரதானமும் அன்று, பரமாணு முதலான வேறு ஒன்றும் அன்று என்று சித்தித்தது. (92)

(11-வது சூத்திரத்தின் பாஷ்யமொழிபெயர்ப்பு)

முற்றிற்று.

---

ஆ பூர்வபக்ஷத்தின் பிரயோசனம்:—ஜீவப்பிரதானங்களின் ஐக்கிய உபாஸ்தி

சித்தாந்தத்தின் பிரயோசனம்:—ஜீவப்பிரம்ம ஐக்கியஞானம். (93)

5-வது அதிகரணம்

முற்றிற்று.

XVII. வியாஸாதிகரணமாலைப்படி அதிகரணச் சுருக்கம்.

1. சுருக்கமான சுலோகங்கள் (94)

तैद क्षतेति वाक्येन प्रधानं ब्रह्म वोच्यते ।
ज्ञानक्रियाशक्तिमत्वात्प्रधानं सर्वं कारणम् ॥
ईक्षणाच्चेतनं ब्रह्म क्रियाज्ञाने तुमायया ।
आत्मशब्दात्मतादात्म्ये प्रधानस्य विरोधिनी ॥

2. பூர்வபக்ஷம்:—சாந்தோக்கியம் ஆறுவது அத்தியாயத்தில்

सदेव सोम्ये दमग्र आसीदेकमेवाद्वितीयम्

என்று ஆரம்பித்து

तदैक्षत—बहुस्यां प्रजायेय—इति
तत्तेजोऽसृजत

என்று சொல்லியிருக்கிறது. இவ்விடத்தில் சாங்கியர்களின் அபிப்பிராயம் என்னவெனின் சத் சப்த வாச்சியமான சர்வஜகத்காரணம் பிரதானம் பிரம்மமன்று. ஏனெனின் பிரதானமானது சத்வகுணத்துடன் கூடியிருப்பதால் ஞானசக்தியுடனும் பரிணாமத்தை அடைவதால் கிரியாசக்தியுடனும் கூடியிருக்கிறது.

நிர்குணமாயும் கூடஸ்தனுமாயுமிருக்கிற பிரம்மத்தினிடத்தில் இவைகள் பொருந்தா. (95)

3. சித்தாந்தம்.

ईक्षितृत्वं (சங்கற்பித்தல்) சுருதியில் சொல்லியிருப்பதால் சேதனமான பிரம்மம் சத் சப்தத்தால் கூறப்பட்டது. ஏனெனின் அசேதனமான பிரதானத்தினிடத்தில் சங்கற்பம் ஏற்படமாட்டாது. ஞானக்கிரியா சக்திகளோ பிரம்மத்தினிடத்தில் மாயையால் ஏற்படுகின்றன. மேலும்,

अनेन जीवेन आत्मना अनुप्रविश्य
नामरूपे व्याकरवाणि

என்கிற சுருதியில் நாமரூபங்களைச் செய்யும் ஜகத்காரண தேவதையானது தன்னைக் கூறும் ஆத்ம சப்தத்தால் சேதனமான ஜீவனைக் கூறுவதாக தெரியவருகிறது. அப்படியே तत्वमसि என்பதால் சேதனமான சுவேதகேதுவே ஜகத்காரணம் என்பதாய் சுரு

உபதேசிக்கிறார். இவ்விரண்டும் அசேதனமான பிரதானம் ஜகத்காரணமென்கிற விஷயத்தில் விருத்தப்படும். ஆகையால் சேதனப் பிரம்மமே சத்சப்தத்தால் கூறப்படுகிறது. (96)

விசிஸ்டாத்வைதப்படி

## I-1-5-வது அதிகரணத்தின் சுருக்கம்.

I. அ-கை:— முந்தின அதிகரணங்களில் यतोवाइमानिभूतानि முதலிய ஜகத்காரணத்தை கூறும் வாக்கியங்கள் பிரம்மத்தையே காரணமாக குறிப்பிடுகின்றன என்றும், அப்படிப்பட்ட பிரம்மம் விசாரிக்கத்தக்கதென்றும் சொல்லப்பட்டது.

இனி பாதம் முடியும் வரையில் இந்த வாக்கியங்கள் வேறு (பிரதானாதி) காரணங்களைக்குறிப்பிடுகின்றன என்று இசால்லும் மதங்கள் நிராகரிக்கப்பட்டு பிரம்மமே காரணம் என்னும் பக்ஷம் ஸ்திரப்படுத்தப் படுகிறது. (97)

2. இதின் கருத்து:—ஜகத்காரணம் பிரதானமல்லவென்பதாம். (98)

3. விஷயவாக்கியம்:—

सदेव सोम्ये दमग्र आसीत्

என்னும் சாந்தோக்கிய (VI-2-1) வாக்கியம் (99)

4. சந்தேகம்:—இந்த வாக்கியம்

(1) சாங்கியர்களால் கூறப்படும் பிரதானத்தைக் காரணமாகச் சொல்லுகிறதா ? அல்லது

(2) நிரதிசயாநந்த பிரம்மத்தைக் கூறுகிறதா ?

என்பது சந்தேகம். (100)

5. பூர்வபக்ஷம்:—பிரதானம் தான் கூறப்படுகிறது. ஏனெனின்:—

ஸ்வயம்பாகசாலையில் புகை இருப்பதுபோல் மலையில் புகை இருப்பதைக்கண்டு மலை அக்கினியுள்ளது என்று அநுமானிக்கிறோம். இவ்விடத்தில் மலை அக்கினியுள்ளது என்பது பிரதிஞ்ஞை, ஸ்வயம்பாகசாலை திருஷ்டாந்தம், இதின்பேரில் மலையில் அக்கினியிருக்கவேண்டும் என்னும் அநுமானம் ஏற்படுகிறது.

இதுபோல் ஏகவிஞ்ஞானேன சர்வவிஞ்ஞானம் என்பது பிரதிஞ்ஞை, மிருத்முதலியது (ஸ VIII) திருஷ்டாந்தம். மேலே திருஷ்டாந்தத்தில் அநுமானமானது பிரதிஞ்ஞை திருஷ்டாந்தங்களுடன் கூடியிருப்பதுபோல் இவ்விடத்திலும் சாஸ்திரம் பிரதிஞ்ஞை திருஷ்டாந்தங்களுடன் கூடியிருப்பதால் சாஸ்திரம் அநுமானத்துக்குச்சமானமாயிருக்கிறது. அநுமானத்தால் பிரதானம் தான் கூறப்படுகிறது. ஆகையால் சாஸ்திரம் பிரதானத்தையே கூறுகிறது. (101)

6. சித்தாந்தம் சூத்திரத்தால் கூறப்படுகிறது (102)

7. சூத்திரார்த்தம்.

அசப்தம் வேதாந்தத்தில் கூறப்படாத பிரதானமானது

ந ஜகத்காரணமாக மாட்டாது. ஏனெனின்

ईक्षते: ஜகத்காரணமானது சங்கற்பிக்கிறதுஎன்று சுருதி சொல்லுகிறது அசேதனமான பிரதானம் ஜகத்காரணமாகமாட்டாது. சர்வஞ்ஞனான பிரம்மமே ஜகத்காரணமாகும். (103)

## I-1-5-ல் 2-வது சூத்திரம்.

1. அ-கை:— முந்தின சூத்திரத்தில் ஜகத்காரணமானது சங்கற்பிக்கிறது என்று சொல்லியிருப்பதால் அது பிரம்மம்தான், பிரதானமன்று என்று நிர்மாணிக்கப்பட்டது.

இப்போது அந்த சங்கற்பத்தை கௌணமாக வைத்துக்கொண்டு பிரதானத்தையே கூறும் சங்கைக்குச் சமாதானம் சொல்லப்படுகிறது. (104)

2. சூத்திரார்த்தம்.

गौण: चेत् — तत् तेजऐक्षत

என்கிற இடத்தில் தேஜஸ் சங்கற்பித்தது என்கிறஇடத்தில்சங்கற்பம் கௌணமாக இருப்பதுபோல் இவ்விடத்தில் பிரதானத்தின் சங்கற்பமும் கௌணம் என்று சொன்னால் ந அது சரியன்று, பிரதானம் காரணமாகமாட்டாது. ஏனெனின் आत्मशब्दात्=सआत्मा என்பதில் சேதனத்தைக் கூறும் ஆத்ம சப்தம் இந்த காரணவிஷயத்தில் பிரயோகிக்கப்பட்டிருக்கிறது.

ஆகையால் பிரதானம் ஜகத்காரணமன்று. (105)

## I-1-5-ல் 3-வது சூத்திரம்.

1. அ-கை:—அடியில் வரும் காரணத்தினாலேயும் பிரதானம் ஜகத்காரணமாகமாட்டாது என்று சொல்லுகிறார். (106)

2. तन्निष्ठस्य :—தத்வமஸி என்கிற உபதேசத்தால் எப்போதும் பிரத்தியகாத்ம தியானத்திலிருக்கிறவனுக்கு

मोक्षोपदेशात् மோக்ஷம் கிடைக்கும் என்று சொல்லியிருப்பதால் பிரதானம் காரணமாகமாட்டாது. ஏனெனின் பிரதானத்தின் தியானம் மோக்ஷத்தைக் கொடுக்கமாட்டாது. (107)

I-1-5-ல் 4-வது சூத்திரம்.

1. அ-கை:—இனி சொல்லப்போகிற காரணத்தாலும் பிரதானம் காரணமன்று. (108)

2. சூத்திரார்த்தம்.

பிரதானமானது காரணம் என்று சொல்லும் இச்சையிருக்கும் பக்ஷத்தில் அது மோக்ஷத்துக்கு விருத்தமாகையால் அதைத் தள்ளும்படி சொல்லவேண்டும். ஆனல் விட்டுவிடும்படி சொல்லவில்லை. தன்னிஷ்டனுகவேயிருக்கும்படி சொல்லியிருப்பதால் அது (காரணம்) பிரதானமாகமாட்டாது. (109)

I-1-5-ல் 4 (a) சூத்திரம்

प्रतिज्ञा विरोधात्

இது அத்வைதப்பாடத்திலில்லை.

அ-கை:—அடியில் வரும் காரணத்தாலும் பிரதானம் காரணமன்று. (110)

சூத்திரார்த்தம்.

பிரதானவாதத்தில் பிரதிஞ்ஞைக்கு விரோதம் வருகிறது. எப்படியெனின்

येनाश्रुतं श्रुतं भवति என்கிற பிரதிஞ்ஞையிலிருக்கும்பொருட்டு மேல் கிரந்தத்தில் ஜகத்காரணத்தை அறிந்தால் சித்ஜடஸ்வரூபமான ஜகத்துமுழுவதும் அறியப்பட்டதாக ஆகும் என்று சொல்லியிருக்கிறது. பிரதானம் காரணமாயிருந்தால் ஜடஸ்வரூப ஜகத்தைமட்டும் அறிந்ததாக முடியும். அப்போது “எதினல் அறியாததெல்லாம் அறிந்ததாய் விடுகிறதோ” என்று பொதுவான பிரதிஞ்ஞைக்கு விரோதம் வரும். ஆகையால் பிரதானம் காரணமாகமாட்டாது. (111)

I-1-5-ல் 5-வது சூத்திரம்.

1. அ-கை:—அடியில்வரும் காரணத்தாலும், பிரதானம் காரணமன்று. (112)

2. சாந்தோக்கியம் VI-8-1-ல் ஜீவன் தன்னுடைய காரணத்தில் லயமாகிறதாகச் சொல்லியிருக்கிறது. ஜீவனுக்கு ஜடமான பிரதானம் காரணமாகமாட்டாது. ஆகையால் பிரதானம் காரணமன்று. (113)

I-1-5 ல் 6 (10-வது சூத்திரம்)

1. அ-கை:—பிரதானம் காரணமன்று என்பதற்கு இன்னும் ஒருகாரணம் சொல்லப்படுகிறது. (114)

2. गतिसामान्यात् அநேக சுருதிகளின் (கதி) கருத்தானது சமானமாயிருக்கிறது. அதாவது ஜகத்காரணம் பரமேசுவரன்தான் என்பதில் இருக்கிறது.

ஆகையால் பிரகிருத சுருதியாலும் பிரம்மத்தையே காரணமாக அறியவேண்டியது. பிரதானத்தை அறியக்கூடாது. (115)

I-1-5-ல் 7—வது சூத்திரம் (11)

1. அ-கை:—பிரதானம் காரணமன்று என்பதற்கு இன்னும் ஒரு காரணம் சொல்லப்படுகிறது. (116)

2. श्रुतत्वात् இந்த உபநிஷத்திலேயே आत्मत एवेदं सर्वं (ஆத்மாவிடமிருந்தே இதெல்லாம்) என்று சொல்லியிருப்பதாலும், சத் சப்தத்தால் கூறப்படும் ஜகத்காரணம் சர்வஞ்ஞ சர்வ சக்திமானான ஈசுவரனக இருக்கவேண்டியதேதவிர ஜடபிரதானம் காரணமாகமாட்டாது. (117)

துவைதப்படி

I-1-5-வது அதிகரணத்தின் சுருக்கம்.

I. இதின் கருத்து:—பிரம்மத்தைப்பற்றிப் பூர்வாக சொல்லமுடியாவிட்டாலும், ஏதோ கொஞ்சம் சொல்லலாம் என்பதாம். (118)

II. இதில் அடங்கிய சூத்திரங்கள்:—7 (5 முதல் 11 வரையில்) (119)

III. சங்கதி:—சகல சாஸ்திரங்களும் முக்கிய (முக்தி) விருத்தியாலேயே பிரம்மத்தைக் கூறுகின்றன வென்று சொன்னதை பூர்வபக்ஷி ஆக்ஷேபிக்கிறபடியால் ஆக்ஷேபசங்கதி ஏற்படுகிறது. (120)

IV. சந்தேகம்:—சகல சாஸ்திரயோனித்வம் என்பது (அதாவது ரிக்வேதாதி சாஸ்திரங்களால் பிரம்

மம் ஜகத்காரணமென்று தெரியவருகிறது என்பதாய் யாதொன்று முன் சொல்லப்பட்டதோ அது)

(1) பிரம்ம விஷயத்தில் பொருந்துமா?

அல்லது

(2) பொருந்தமாட்டாதா?

என்பது சந்தேகம். (121)

V. பூர்வபக்ஷம்:—

அப்படி சொல்லுவது யுக்தமன்று.

ஏனெனின்

यतोवाचोनिवर्तन्ते अप्राप्य मनसासह

என்கிறதை தைத்திரீய முதலிய சுருதிகள் பிரம்மம் அவாச்சியம் (வாக்குக்கு விஷயமன்று) என்று சொல்லுகின்றன.

மேலும்

अनंता वैवेदाः

என்கிற சுருதியானது வேதங்கள் அநந்தங்கள் என்று சொல்லுவதால் ஸ்வல்ப ஆயுஸ்ஸும் ஸ்வல்ப ஞானமும் உள்ள புருஷன் அநந்தவேதங்கள் பிரம்மத்தைத்தான் சொல்லுகின்றனவென்று சொல்லமுடியாது. ஆகையால் சாஸ்திரயோனித்வம் சொன்னது அயுக்தம். (122)

VI. சித்தாந்தம்:—

1-வது சூத்திரம்:—

(तत् அந்த பிரம்மம்)

अशब्दं அவாச்சியம் அதாவது வேதங்களால் கூறப்படாதது

न அல்ல. பின்னேயாதெனின் வாச்சியமே.

ஏனெனின்

ईक्षतेः அது ஞானத்துக்கு விஷயமாயிருக்கிறது என்பது

(1) स एतस्मात् जीवघना त्परात्परं पुरिशायं पुरुषमीक्षते (छां )

(2) आत्मन्ये व आत्मानं पश्येत्

(3) वेदैश्च सर्वै रहमेववेद्यो वेदान्तकृद्वे दवि देव चाहं

முதலிய சுருதி ஸ்மிருதிகளால் தெரியவருகிறது. (123)

VII. I-5ல் 2-வது சூத்திரம்.

ॐ गौणश्चेन्नात्मशब्दात् ॐ ॥ 6

1. அவதாரிகை:— முன் சொன்னதை ஆக்ஷேபித்து சமாதானம் சொல்லுகிறார். (124)

2. गौणः எது சப்தத்தால் வர்ணிக்கத் தகுந்ததாயிருக்கிறது என்று முன்சொல்லப்பட்டதோ அது சத்வ, ரஜஸ், தமஸ், ஆகிய குணங்களுடன் கூடின ஜீவன் என்று,

चेत् —சொன்னால்

न — அது அப்படியல்ல. ஏனெனின் आत्मशब्दात्— எது ஞானத்துக்கு விஷயமோ அது आत्मानं पश्येत् என்கிற சுருதியில் ஆத்மசப்தத்தால் கூறப்படுகிறது. (125)

VIII. I-1-5ல் 3-வது சூத்திரம்.

அ-கை:—அப்போதும் ஜீவன் ஆத்மாவாகமாட்டானே என்கிற சங்கை வரும். அதற்கு சமாதானம் கூறுகிறார். (126)

2. तन्निष्ठस्य = பரமாத்மாவை அறிந்தவனுக்கு मोक्षोपदेशात् மோக்ஷம் சித்திக்கிறது என்பதாய் यस्यानुवित्तः முதலிய சுருதிகளில் आत्म சப்தத்தால் சொல்லப்பட்டிருக்கிறது. ஆகையால் ஆத்ம சப்தத்துக்கு முக்கியார்த்தம் ஜீவன் என்று ஏற்படவில்லை. அந்த சுருதியில் பார்க்கத் தகுந்தது ஆத்மா என்று சொல்லியிருப்பதால் ஆத்மா ஜீவனாகமாட்டான். (127)

IX. I-1-5ல் 4-வது சூத்திரம்.

(அ-கை: ஆத்மசப்தத்தால் ஜீவனை அறியக்கூடாதென்பதற்குஇன்னும்ஒருகாரணம்சொல்லுகிறார். (128)

2. च மேலும்

हेयत्वाव चनात् —மோக்ஷத்தின் பொருட்டு பிரமத்தின் ஞானம் அவசியமாயிருப்பதால் அதை விட்டுவிடக்கூடாதென்று தான் சொல்லியிருக்கிறதென்பதில்லை. பின்னேயாதெனின் ஞானத்தின்பொருட்டு பிரம்மமே அறியத்தக்கது. இது तमेवैकं முதலிய முண்டக சுருதியில் (II-2-5) சொல்லியிருக்கிறது. அவ்விடத்தில் ஆத்ம சப்தம் உபயோகப்பட்டிருக்கிறது. ஆகையால் ஆத்ம சப்தத்தால் ஜீவனை அறியக்கூடாது. நிர்க்குண பிரமத்தையே அறியவேண்டியது. (129)

**X. I-1-5ல் 5-வது சூத்திரம்.**

1. அங்கை:—நிர்குணபிரமத்தையே அறியவேண்டும் என்பதற்கு இன்னும் ஒரு காரணம் கூறப்படுகிறது. (130)

2. **अस्मनं विलपयति** என்கிற சுருதியில் தன்னிடத்திலேயேதான் லயமாகிறதாகச் சொல்லியிருப்பதால் ஆத்ம சப்தத்துக்கு ஜீவன் என்று அர்த்தமாகமாட்டாது. இதனாலும் பிரமம் சப்தத்தால் கூறத்தகுந்தது என்று அர்த்தமாகிறது. (131)

**XI. I-1-5ல் 6-வது சூத்திரம்.**

1. அங்கை:—சகல சாஸ்திரங்களாலும் ஜகத்காரணம் பிரம்மம்தான் என்று சொல்லுகிறார். (132)

2. **गतिसामान्यात्** சகல சாஸ்திரங்களினின்றும் ஒரேவிதமான ஞானம் உண்டாகிறதினால், ஜகத்காரணமாக வேறு சாஸ்திரங்களில் எது சொல்லப்பட்டிருக்கிறதோ அது பிரம்மத்தைவிட வேறல்ல. ஆகையால் பிரம்மம் ஞேயம், அறியத்தகுந்தது. (133)

**XII. I-1-5ல் 7-வது சூத்திரம்.**

1. அங்கை:—நிர்குணமான பிரம்மம் வாச்சியம் என்பதற்கு இன்னும் ஒரு காரணம் சொல்லுகிறார். (134)

2. **च**: மேலும் பிரமம் சப்தத்தால் வர்ணிக்கத் தகாதது என்பதில்லை ஏனெனின்.

**श्रुतत्वात् एकोदेवःसर्वभूतेषुगूढः**

என்கிற ஶ்வே VI-II முதலிய சுருதிகளில் பிரமம் வர்ணிக்கப்பட்டிருக்கிறது. (135)

**XIII.** பூர்வபக்ஷபலன்:—பிரம்மம் சகல சப்த வாச்சியமன்று.

சித்தாந்தபலன்:—சகல சப்தவாக்கியம். (136)

---

**1-1-6-வது அதிகரணத்தின்**

**அனுக்கிரமணிகை.**

(a) இச்சாபிரஸ்தாபத்தால் ஆநந்தமயம் பிரதானமுமல்ல 63

(b) பிரதானத்தை இவ்விடத்தில் பிரஸ்தாபிக்கவேண்டிய காரணம். 64

13. (1) 19-வது ஸூத்திரம் 65

(2) 18-க்கும் 19-க்கும் சம்பந்தம் 66

(3) பதவுரை 67

(4) பொழிப்புரை 68

(5) பாஷ்யம்

(a) च சப்த விஷயமாய் 69

(b) अस्मिन् ஷை 70

(c) अस्य ஷை 71

(d) तद्योगं शास्ति ஷை 72

14. பூர்வபக்ஷ சித்தாந்தபலன் 73

VI. இரண்டாவது வர்ணகம்.

1. அவதாரிகை 74

2. விருத்திகாரருடைய மதத்தின் பேரில் பாஷ்யகாரருடைய ஆக்ஷேபங்கள் (75—92)

a. மயட் என்பதற்கு மிகுதி என்னும் அர்த்தம் செய்த விஷயத்தில் (75—86)

1. முதலாவது தோஷம்:—(29-வது பிரிவுபார்க்க) நான்கு இடங்களில் மயட்டுக்கு விகாரம் என்ற அர்த்தம் செய்து ஒரு இடத்தில் மட்டும் மிகுதி என்னும் அர்த்தம் செய்யவேண்டிய காரணமென்ன 75

2. 2-வது தோஷம்:-(40-வது பிரிவுபார்க்க) பிரம்மப் பிரகரணமானதால் என்றால் அன்னமயாதிகளும் பிரம்மமாகும் 76

3. 3-வது தோஷம்:--(20-41-வது பிரிவுகள் பார்க்க) சர்வாந்திரம் என்றாலும் பிரியம் முதலிய அவயவங்களால் ஆநந்தமயம் பிரம்மமாகமாட்டாது 77

4. (4-a-வது பிரிவைபார்க்க) ஆநந்தமயனை ஜீவனாக அறிவதாலும் பிரகிருதஹானி ஏற்படமாட்டாது. 78

5. புச்ச சப்தமிருந்தாலும் பிரம்ம சப்தம் முக்கியத்தையே கூறும். 79

6. 4-வது தோஷம் :—அவயவியும் அவயவமும் ஒன்றாகும். 80

7. 5-வது தோஷம் :—தைத்திரிய II-6-வது சுருதி அசங்கதமாகும். 81

8. 6-வது தோஷம் :—ब्रह्मपुच्छं என்பதில் பிரமத்தை அவயவமாய் அறியும்படி நேரிடும். 82

9. 7-வது தோஷம் :—பிரியம் முதலியவைகளால் சவிசேஷப் பிரம்மம் ஏற்பட்டு II-9-வது சுருதி அசங்கதமாகும். 83

10. விருத்திகாரர் மதப்படிக்கும் பாஷ்யக்காரர் மதப்படிக்கும் விஷயவாக்கியங்கள் வெவ்வேறு 84

11. 8-வது தோஷம் :—(29-வது பிரிவைப் பார்க்க) மிகுதி என்று சொன்னால் அற்பம் இருக்கிறதென்று ஏற்படும். 85

12. 9-வது தோஷம் :—ஆநந்தமயம் பிரம்மமானால் ஒவ்வொரு சரீரத்திலும் பிரம்மம் வெவ்வேறாக இருக்கவேண்டும். 86

b. अभ्यास பதவிஷயத்தில் :—அப்பியாசம் ஆநந்தமயத்துக்குச் சொல்லப்படவில்லை—அன்னியோன்னியாசிரய தோஷம். 87

c. சுருதிகளை ஆதாரமாய் எடுத்தவிஷயத்தில் தோஷம்

1. (48-வது பிரிவுபார்க்க)सोकामयत என்பது ஆனந்தமயத்தைக் கூறமாட்டாது. 88

2. (54-வது பிரிவு) रसोवैसः என்பதும் அப்படியே. 89

3. सः என்கிற ஆண்பால் பிரயோகம் பிரம்ம விஷயத்திலும் பொருந்தும். 90

4. (42-வது பிரிவு) இரண்டு வல்லிகளிலும் ஒரே பிரம்மம் கூறப்படவில்லை. 91

d. தீர்மானம். 92

3. சங்கதி.

(1) முந்தின அதிகரணத்துக்கும் இதற்கும் 93

(2) இதர சங்கதிகள். 94

4. விஷயவாக்கியம் 95

5. (1) சந்தேகம்

(2) சந்தேகபீஜம் 96

6. இதிலடங்கிய ஸூத்திரங்கள். 97

7. பூர்வபக்ஷம். 98

8. சித்தாந்தம்.

(1) 12-வது ஸூத்திரம்-பதவுரை. 99

(2) பொழிப்புரை. 100

(3) பாஷ்யம்.

(a) आनन्दमय பதவிஷயமாய் 101

(b) अभ्यास ஷை 102

(4) पुच्छ-प्रतिष्ठा பதங்களின் பிரயோஜனம் 103

9. (1) 13-12-வது ஸூத்திரங்களின் சம்பந்தம். 104

(2) பத உரை. 105

(3) பொழிப்புரை. 106

(4) பாஷ்யம்.

## I—1—6-வது அதிகரணம்.

I. இதின் பெயர்:—ஆநந்தமயாதிகரணமென்பதாம். 1

II. இதின் கருத்து:—

(1) விருத்திகாரர் மதப்படி ஆநந்தமயமே பிரம்மமென்பதாம்.

(2) பாஷ்யகாரர் மதப்படி ஆநந்தமயஜீவாதாரம் பிரம்மமென்பதாம். (2)

III. அவதாரிகை:—முதலில் விருத்திகாரருடைய மதம் பிரதிபாதிக்கப்படுகிறது.

ஆ [ மேல் கிரந்தம் ஆரம்பிக்கவேண்டிய காரணமென்ன?

(1) வேதாந்தங்கள் பிரம்மத்துக்குப் பிரமாணங்கள் என்று ஸ்தாபிக்கும் பொருட்டா?

(2) பிரம்மத்தை அறிய வேறு பிரமாணங்களுண்டு. அவைகளை நிரூபணம் செய்யும் பொருட்டா?

(3) வேறு பிரமாணத்தால் வரும் விரோதத்தை நிவிர்த்திக்கும் பொருட்டா?]

(1) முதலாவது பக்ஷம் கூடாது. ஏனெனின்

(a) जन्माद्यस्य यतः என்கிற இரண்டாவது சூத்திரம் முதல் श्रुतत्वाच्च என்கிற 11-வது சூத்திரம் முடியும்வரையிலுள்ள சூத்திரங்களில் ஏந்த வேதாந்த வாக்கியங்கள் கூறப்பட்டனவோ, அவைகளால் சர்வஞ்ஞனுயும், சர்வசக்தி மானுயுமிருக்கிற ஈசுவரனே ஜகத்தின் உற்பத்தி ஸ்திதிலயகாரணமென்கிற விஷயம் நியாயத்துடன் நிரூபிக்கப்பட்டது.

(b) गति सामान्यात्

என்கிற 10-வது சூத்திரத்தில் சகலவேதாந்தங்களின் தாற்பரியத்தால் சேதனமே காரணமென்றும் நிரூபிக்கப்பட்டிருக்கிறது.

ஆகையால் வேதாந்தங்கள் பிரம்மத்தை அறிய சாதகங்கள் என்று ஸ்தாபிக்கும்பொருட்டு நூதன கிரந்தம் ஆரம்பிக்கவேண்டியதில்லை.

(2) [ஆ இரண்டாவது பக்ஷமும் கூடாது:—ஏனெனின் பிரம்மமானது உபநிஷத்தாலேயே அறியத்தகுந்ததாகையால் இதர பிரமாணத்துக்கு விஷயமாகமாட்டாது. ஆகையால் அதின்பொருட்டு கிரந்தமாரம்பிக்கவேண்டியதில்லை.]

(3) [ஆ மூன்றாவது பக்ஷமும் கூடாது:—மூன்றாவது கேள்வி கேட்டவனுடைய கருத்து என்னவெனின்.

இதர பிரமாணத்தால் பிரம்மமில்லை என்று சித்திக்கிறது. இந்த சித்தாந்தத்துக்கும் பிரம்மமிருக்கிறதென்கிற சித்தாந்தத்துக்கும் விரோதம் வருகிறது. இதை நிவிர்த்திக்குப்பொருட்டு மேல் கிரந்தம் ஆரம்பிக்கப்படுகிறதா?

என்பதாம்.

[கண்ணனது ரூபத்தை நிச்சயம் பண்ணும், சப்தத்தை கிரகிக்கமாட்டாது. சப்தவிஷயமாய் ஏற்பட்ட பிரமாணம் காதுதான், கண் அன்று. சப்தத்தை கிரகிக்கவும் கிரகிக்காமலிருக்கவும் சாமர்த்தியம் காதுக்குத்தான் இருக்கிறதே தவிர கண்ணுக்கு இல்லை. ஆகையால் சப்தமில்லை என்கிற வியவஹாரம் அதை கிரகிக்க யோக்கியதையுள்ள காதாலேயே சித்திக்கும் மற்றதால் ஆகமாட்டாது.

இதுபோல் பிரம்மமில்லை என்று சொல்லும்பிரமாணம் பிரம்மத்தை அறிய யோக்கியதையுள்ளதாக இருக்கவேண்டும். வேதாந்தத்தை தவிர வேறு பிரமாணத்துக்கு இப்படிப்பட்டயோக்கியதை ஏற்படமாட்டாது. வேதாந்தமோ பிரம்மமிருக்கிறதென்றே பிரதிபாதிக்கிறது. ஆகையால் விரோதத்தைக் காட்டும்படியான பிரமாணமேயில்லை. ஆகையால் இக்காரணத்தாலும் கிரந்தத்தை ஆரம்பிக்கவேண்டியதில்லை.] (3)

இவ்விதமாக முதலாவது அத்தியாயத்தின் அர்த்தமே சொல்லப்பட்டபடியால் மேல் கிரந்தத்தை ஆரம்பிக்கக்காரணமென்னவெனின் அது இனி சொல்லப்படுகிறது:—

பிரம்மம் இரண்டுவிதமாக அறியப்படுகிறது.

(1) ஒன்று நாமரூப விகாரபேதங்களாகிற உபாதியுடன் கூடினது.

(2) மற்றொன்று சகல உபாதியுமற்றது.

[ர வேதாந்தங்களில் சகுண நிர்குண பிரம்மத்தைப் பிரதிபாதிக்கும் வாக்கியங்கள் அநேகம் காணப்படுகின்றன.

எந்த வாக்கியம் சகுண உபாசனைமூலமாக நிர்குண பிரம்மத்தில் தாற்பரியப்படுகிறது.

எந்த வாக்கியம் குணத்தைக் கூறுமேல் சாட்சாத்தாய் பிரமத்தில் தாற்பரியப்படுகிறது.

இப்படி இந்த விஷயத்தை அறிய ஒரு ஆசை உண்டாகும். இதுவே காரணம்.]

அடியிற்கண்ட வாக்கியங்களை கவனிக்க.

यत्रहि द्वैतमिव भवति तदितर इतरं पश्यति
यत्रत्वस्य सर्वमात्मैवाभूत्तत् केन कं पश्येत्
(बृ IV-5-15)

அதாவது:—

(ரா எந்த அஞ்ஞான அவஸ்தையில் கற்பிதமிருக்கிறதோ அப்போது ஒருவன் வேறு ஒன்றைப்பார்க்கிறான். பார்க்கப்பட்ட உபாதியுடன்கூடின வஸ்து விளங்குகிறது. எந்த ஞானவஸ்தையில் வித்வானுக்கு சகல ஜகத்தும் ஆத்மாவாகமட்டும் விளங்குகிறதோ அப்போது எதினால் எதை பார்ப்பான். இந்த ஆக்ஷேபத்தால் உபாதியற்ற தத்வம் விளங்குகிறது.)

(2) (a) यत्र नान्यत् पश्यति नान्यच्छृणोति नान्यद्विजानाति सभूमा

(b) अथ यत्रान्यत्पश्यत्यन्यच्छृणोत्यन्यद्विजानाति तदल्पं

(c) योवै भूमा तदमृतं
अथ यदल्पं तन्मर्त्यं ॥ (छा VII-24-1)

அதாவது:—

(a) எதினிடத்தில் நிச்சயத்தை அடைந்த வித்வான் வேறு ஒன்றையும் பார்க்கிறதில்லையோ, வேறு ஒன்றையும் கேட்கவில்லையோ, வேறு ஒன்றையும் அறியவில்லையோ, அது பூமா (பெரிது, வியாபகம்) ரா (வித்வான் வேறு ஒன்றையும் அறியாமையால், அவன் அறிந்தது அத்விதீயமான நிர்குண பரமாத்மாவே.

(b) எதினிடத்தில் நிச்சயத்தை அடைந்தவன் வேறு ஒன்றை பார்க்கிறானோ, கேட்கிறானோ, அறிகிறானோ அது அல்பம். சகுணத்தை அறிந்தவன் பரிச்சின்னமான அல்பத்தை அறிகிறான்.

(c) எது பூமாவோ அது அமிருதம் (நித்தியம்) எது அல்பமோ அது மரண தர்மமுள்ளது.

(3) सर्वाणि रूपाणि विचित्य विचित्य धीरः
नामानि कृत्वाभिवदन् यदास्ते (तै आ III-12-7)

அதாவது:—

ரா (பரமாத்மா சகல ரூபங்களையும் சிருஷ்டித்து நாமங்களையும் செய்து, புத்திமுதலியதில் பிரவேசித்து ஜீவன் என்கிற பெயருடன் விளங்கும்போது சகுணனாகிறான், அவனே நிர்குணனாக அறிந்தவனும் அமிருதனாகிறான்.)

(4) निष्कलं निष्क्रियं शान्तं निरवद्यं निरञ्जनं
अमृतस्य परं सेतुं दग्धेन्धनमिवानलं (श्वे VI-19)

அம்சங்களற்றவன், ஆகையால் கிரியையற்றவன், பரிணாமமற்றவன், இராகாதி தோஷமற்றவன் காரணாவித்தை அல்லது தர்மாதிகளற்றவன், வேதாந்த வாக்கியங்களாலுண்டான விருத்திஞானத்தால் அவரை அடையலாமாகையால் அவரே மோக்ஷத்திற்கு பாலம் போலிருக்கிறார். அணைந்துபோன நெருப்புப்போலிருக்கிறது. ஞானியானவன் அவித்தையையும் அதின்காரியத்தையும் தகித்துவிட்டு நிர்குண பரமாத்மாவை அறிகிறான்.

(5) नेति नेति (बृ II-3-6)

ரா (ஸ்தூலமுதலிய துவைதமன்று.)

(6) अस्थूलमनणु मह्रस्वमदीर्घम् (बृ 3-8-8)

(6) ஸ்தூலமன்று, அணுவன்று, குட்டையன்று, தீர்க்கமன்று.

(7) न्यूनमन्यत् स्थानं स म्पूर्णमन्यत्

ரா (ஒன்று குறைவுள்ளது, மற்றொன்று சம்பூர்ணமானது. இந்த சுருதி இரண்டு ரூபங்களைக் கூறுகிறது. சகுணமானது நிர்குணத்தைவிட வேறானது அல்பம், நிர்குணமானது சகுணத்தைவிட வேறு சம்பூர்ணம்.)

இப்படிப்பட்ட அநேக வாக்கியங்கள் பிரமத்தை வித்தைக்கும் அவித்தைக்கும் விஷயம் என்று காட்டுவது மூலமாக பிரமத்தின் இரண்டு ரூபங்களையும் காட்டுகின்றன.

ரா (ஒன்றுக்கு இரண்டு ரூபங்கள் விருத்தமே எனின்:—

வித்தைக்கு விஷயமானது ஞேயம் அதாவது அறியத்தக்க நிர்குண சத்தியம்.

அவித்தைக்கு விஷயமானது உபாசிக்கத்தக்க சகுணம். இது கற்பிதம்.

ஆகையால் இரண்டுக்கும் விரோதமில்லை.)

அவித்தியாவஸ்தையில் பிரம்மம் உபாசிக்கத்தக்

க்கேதன்றும், உபாசகன் முதலானவர்கள் இருக்கிறார்கள் என்றும் சகல வியவஹாரமும் ஏற்படுகிறது.

(1) அவைகளில் ரிக்வேதாதி நாமங்களை உபாசிக்கும்படி சொல்லிய சில பிரம்மோபாசனைகள் (பசுபுத்திராதி சம்பத்தைக் கொடுக்கின்றன.

(2) தஹராதி உபாசனைகள் சிலக்கிரமமுக்தியைக் கொடுக்கின்றன.

(3) உத்கீதாதி தியானம் கர்மம் சபலமாகும்படிச்செய்கின்றது. இப்படி

1. (ரா சத்திய காமன்முதலிய) குணவிசேஷத்தாலும்,

2. (ரா ஹிருதயம் முதலிய) உபாதி பேதத்தாலும்

3. (ரா உபாசிய பிரம்மம் ஒன்றானாலும் உபாசனைகளின்) பேதம் ஏற்படுகிறது. ஒரே பரமாத்மாவான ஈசுவரன் அந்தந்த குணவிசேஷணங்களுடன் கூடி ஒரே உபாசியனாக இருந்தாலும், உபாசனை எப்படி எப்படி ஏற்படுகிறதோ அப்படி அப்படி பலமும் வித்தியாசப்படுகிறது. இதற்கு பிரமாண வாக்கியங்கள்:—

(1) (a) तं यथा यथोपासते तदेव भवति

(छा 3-14-1)

(2) (b) यथा क्रतुरस्मिन् लोके पुरुषो भवति तथेतः

प्रेत्य भवति (छा III-14-1)

அதாவது :—

(a) பரமாத்மாவை எந்த எந்த குணத்துடன் கூடினவராக ஜனங்கள் அரசனைப்போல் உபாசிக்கிறார்களோ, அப்படியே பலமும் அந்த குணமுள்ளதாக ஆகும்.

(b) இவ்விடத்தில் எப்படி தியானம் ஏற்படுகிறதோ, அப்படியே இறந்தபின் உபாசிய ரூபத்தை அடைகிறான்.

(3) यं यं वापि स्मरन् भावं त्यजत्यन्ते कलेवरम्

तं तमेवैति कौन्तेय सदा तद्भावभावितः

(भगी VIII-6)

அதாவது :—

எந்த எந்த ரூபத்தை தியானித்து ஒருவன் சரீரத்தை விடுகிறானோ, எப்போதும் அந்த பாவத்துடன் கூடினவனாய் அந்தந்த ரூபத்தையே அவன் அடைகிறான்,

என்று ஸ்ரீகிருஷ்ணபரமாத்மா அர்ச்சுனனுக்குச் சொல்லியிருக்கிறார்.

ரா (சகல பூதங்களிலுமிருக்கிற பரமாத்மா ஒன்றானதால், உபாசிய உபாசகதாரதம்மியங்களைக் கூறும் சுருதிகள் எப்படி ஏற்படலாமெனின்)

ஸ்தாவர ஜங்கமங்களில் மறைந்திருக்கிற ஆத்மா ஒன்றானாலும், உபாதிகளுடைய சித்தசுத்தி தாரதம்மியத்தால், ஐசுவரியம், ஞானம், சுகம் முதலிய சக்திகளின் தாரதம்மியங்கள் ஏற்படுகின்றன. இவைகளால் கூடஸ்த நித்திய ஏகரூபமான ஆத்மாவுக்கும், மனிதன்முதல் ஹிரணியகர்ப்பன் வரையிலுள்ள சரீரங்களில் பிரவேசதாரதம்மியம் ஏற்படுகிறது. சுருதிப்பிரமாணம் :—

(1) तस्य य आत्मानमाविस्तरां वेद

(ऐ-आ-II-3-2)

அதாவது :—

எந்த ஆத்மாவின் மேன்மையான ஸ்வரூபத்தை எவன் அறிகிறானோ, உபாசிக்கிறானோ அவன் அதை அடைகிறான். (இதனால் நிகிருஷ்ட உபாதியுள்ள ஆத்மாவே உபாசகன் என்றும், உத்கிருஷ்ட உபாதியுள்ள ஈசுவரனே உபாசியன் என்றும் இப்படி உபாதி தாரதம்மியம் ஏற்படுவதினால் விரோதமில்லை என்பது கருத்து.

(பகவத்கீதை) ஸ்மிருதியிலும்

(2) यद्यद्विभूतिमत्सत्त्वं श्रीमदूर्जितमेव वा ।

तत्तदेवावगच्छत्वं मम तेजोंऽशसम्भवम् ॥

(भगी X-41)

அதாவது :—

ஐசுவரியத்தை அடையவும்

காந்தியை அடையவும்

குணாதிசயங்களை அடையவும்

ஆகிய எனது எதெதோ அதெல்லாம் என் தேஜஸ்வினுடைய பாகத்தினால் உண்டாகிறதென்றே அறி

என்று சொல்லப்பட்டிருக்கிறது.

ஆகவே எங்கெங்கே விபூதிமுதலியவைகள் விசேஷமாக இருக்கின்றனவோ, அவ்விடத்தில் ஈசுவரன் உபாசிக்கத்தக்கவன் என்று விதிக்கப்படுகிறது.

रा (ஆகவே சூரியாதிகளையும் சகுணமாகவே உபாசிக்கவேண்டியது யுக்தமென்று ஏற்படுகிறது.)

(रा இனி சூத்திரக்காரருடைய சம்மதியைக் கூறுகிருர்.) இவ்விடத்திலும் (சூத்திரங்களிலும்) சகலபாப சம்பந்தமற்றவன் என்கிற லிங்கத்தால் சூரியமண்டலத்திலிருக்கிற ஹிரண்மய புருஷன் பரமாத்மா என்றே சூத்திரகாரர் I-1-20 சொல்லப்போகிருர். அப்படியே

## आकाशस्ताल्लिङ्गात् (ब्रसू I-1-22)

முதலிய சூத்திரங்களிலும் அறியவேண்டியது. உடனே முக்தி கிடைக்கவேண்டியதற்குக் காரணம் ஆத்மஞானமாயிருந்தாலும், அந்த ஞானமானது (அன்னமயாதி கோசங்களாகிற) உபாதி விசேஷம்மூலமாக உபதேசிக்கப்பட்டிருக்கிறது. ஆனால் ஆத்மாவுக்கும் உபாதிக்கும் சம்பந்தத்தைக் காட்டவேண்டும் என்கிறது வேதத்தின் கருத்தன்று. ஆகையால் உபாதிவிசேஷத்தைக்கூறும் வாக்கியத்தைக் கேட்டவுடன் இது பரப்பிரம்மத்தைக் கூறுகிறதா அல்லது அபரபிரம்மத்தைக் கூறுகிறதா என்கிற சந்தேகம் ஜனிக்கும். ஆகையால் வாக்கியத்தின் தாற்பரியத்தை விசாரித்து நிர்ணயம் செய்யவேண்டியதாக இருக்கிறது.

திருஷ்டாந்தம்:—

## आनन्दमयोऽभ्यासात्

என்னும் சூத்திரம் பார்க்க.

ஆகவே மேல்கிரந்தத்தை ஆரம்பிக்கிறதின் கருத்தானது, வேதாந்தங்கள் பிரம்மத்தை

(1) உபாதி சம்பந்தமுள்ளதாயும் ஆகையால் உபாஸ்யமாயும்,

(2) உபாதி சம்பந்தமற்றதாயும் ஆகையால் ஞேயமாயும்,

இருக்கிறதென்று காட்டுவதேயாம்.

रा (எந்த வாக்கியத்தில் உபாதி கூறப்பட்டிருக்கிறதோ அது உபாசனபரம் என்றும், எந்த வாக்கியத்தில் இது கூறப்படவில்லையோ அது ஞேயப்பிரம்மபரம் என்றும் அறியவேண்டியது என்பதை மேல்கிரந்தம் காண்பிவிக்கிறது.)

रा (வேதாந்தங்கள் நிர்க்குண பிரம்மத்தைவிசாரிக்கவேண்டியதாக இருக்க சகுண பிரம்மத்தை விசாரிப்பானேனென்னின், சகுண உபாசனையானது சித்த ஏகாக்கிரியும் கொடுக்கிறது. இந்த சித்த ஏகாக்கிரியம் மூலமாக நிர்குண பிரம்மத்தை அறிய சாதகமாக இருக்கிறது. ஆகையால், சகுணபிரம்மத்தையும் வேதாந்தம் விசாரிக்கவேண்டியது யுக்தம்தான்.)

மேலும் गतिसामान्यात् என்கிற சூத்திரத்தில் அசேதனம் காரணமாகமாட்டாது என்று சொன்னதை சூத்திரகாரர் பிரம்மத்தைக்கூறும் இதரவாக்கியங்களை வியாக்கியானம்செய்கிற சமயத்தில் பிரம்மத்துக்கு அன்னியமான காரணமில்லை என்று ஆக்ஷேபித்து விவரிக்கிருர். (3)

IV. இதிலடங்கிய வர்ணகங்கள் இரண்டு. இவைகள் II-வது பிரிவில் சொல்லிய கருத்தால் ஏற்படுகின்றன. (4)

V. முதல் வர்ணகம் (வார்த்திகமதம்) (6—)

1. சங்கதி:—

(a) முந்தின அதிகரணத்துக்கும் இதற்கும்:—

## सेयं देवता ऐक्षत

என்கிற வாக்கியத்திலுள்ள ऐक्षत என்பதற்கு முக்கியார்த்தத்தையே கிரகிக்கவேண்டியதாகையால் கௌணார்த்தம் சம்பவிக்கமாட்டாது.

## आपोऐक्षन्त तेजोऐक्षत

முதலிய இடங்களில் கௌணபிராயபாடம் (பெரும்பான்மையாகச் சொல்லுதல்) கௌணார்த்தத்தை நிச்சயிப்பதுபோல்

## सेयं देवता ऐक्षत

என்கிற இடத்திலும் ஈக்ஷணத்துக்கு கௌணார்த்த நிச்சயிக்கட்டுமே எனின்,

கௌணார்த்தத்துக்கும் முக்கியார்த்தத்துக்கும் சமான அம்சமில்லை. ஆகையால் எதை எடுத்துக்கொள்ளுகிறது என்கிற சம்சயமில்லை. ஆகையால் இந்த கௌணப்பிராயபாடம் முக்கியார்த்தத்தையும் கௌணமாக நிரூபிக்கச் சாதகமாகிறதில்லை. ஆயினும் இந்த அதிகரணத்தில் அன்னமயாதிகளின்அர்த்தத்தை அனுசரித்து மயட் என்பதற்கு விகாரம் என்றும், பிரசுரம் என்றும் அர்த்தம். இரண்டு அர்த்தங்களும் முக்கியமானவை; அவைகளில் எதைக் கிரகிக்கவேண்டியது என்கிற சந்தேகம் ஜனிக்கக்கூடும். அன்னமய பிராணமய, மனோமய, விஞ்ஞானமய மென்கிற

இடங்களில் மயட் என்பதற்கு விகாரம் என்கிற அர்த்தம் ஏற்படுவதுபோல் ஆநந்தமயம் என்கிறதிலுள்ள மயட்டுக்கும் விகாரம் என்று அர்த்தம் பொருந்துமாகையால் விகார பிராயபாடம் ஆநந்தத்தின் விகாரனான ஜீவன் ஆநந்தமயன் என்று நிச்சயிப்பதில் உபயோகப்படுகிறது. ஆகவே முந்தின அதிகரணத்தில் பிராயபாடம் உபயோகப்படாதிருக்க அதற்கு எதிரிடையாக இந்த அதிகரணத்தில் பிராயபாடம் உபயோகப்படுகிறது. இந்த எதிரிடை திருஷ்டாந்தமே இரண்டு அதிகரணங்களுக்குமுள்ள சங்கதி. இதற்கு பிரத்தியுதாஹரணசங்கதி என்று பெயர். (5)

(b) இதரசங்கதிகள்:—

இந்த அதிகரணம் சுருதியின் அர்த்தத்தை நிச்சயிக்கிறபடியாலும் பிரம்மத்தைப்பற்றி விசாரிப்பதாலும் சுருதிமுதலிய சங்கதிகளை முன் போலவே அறியவேண்டியது. (6)

2. இதின் விஷயவாக்கியம்:—

தைத்ரீய உபநிஷத்தில்

(1) அன்னமயம் (ஆ அன்னரஸவிகாரமான தேகம்)

(2) பிராணமயம் (ஆ பிராணனை உபாதியாயுடைய ஆத்மா பிராணவிகாரம்)

(3) மனோமயம் (ஆ மனதை உபாதியாயுடைய ஆத்மா மனோவிகாரம்)

(4) விஞ்ஞானமயம் (ஆ விஞ்ஞானத்தை உபாதியாயுடைய ஆத்மா விஞ்ஞானவிகாரம்)

இவைகளையும்

स वा एषः (तै II-1, 2, 3, 4, 5)

என்பதினால் கிரமமாகச் சொல்லி,

तस्माद्वा एतस्माद्विज्ञानमयात् अन्योऽन्तर

आत्मानन्दमयः (तै II-5)

அதாவது:—

எதற்கு சிரத்தையே சிரஸ்————என்பதாய் முன் II-4-ல் சொல்லப்பட்டதோ அப்படிப்பட்ட விஞ்ஞான மயத்தைவிட வேறானது ஆனந்தமயம்

என்று சொல்லியிருக்கிறது.

இந்த வாக்கியமே விஷயவாக்கியம். (7)

3. (a) சந்தேகம்:—இவ்விடத்தில் ஆநந்தமய சப்தத்தால்

(1) सत्यं ज्ञानं आनन्दं ब्रह्म (तै II-1)

என்பதாய் எந்த பிரம்மம் பிரகிருதத்தில் பிரஸ்தாபிக்கப்பட்டிருக்கிறதோ அந்த பரப்பிரம்மமே கூறப்படுகிறதா? அல்லது

(2) அன்னமயாதிகள்போல் பிரம்மத்தைவிட வேறானது கூறப்படுகிறதா? (ஜீவன் கூறப்படுகிறானா?)

என்பது சந்தேகம்.

(b) சந்தேகபீஜம்:—மயட் என்பதற்கு

(1) விகாரம் என்று அர்த்தமானால் ஆநந்தமயம் ஜீவன் என்று முடியும்.

(2) பிராசுர்யம் (மிகுதி) என்று அர்த்தமானால் ஆநந்தமயம் பிரம்மம் என்று முடியும்.

இந்த இரண்டு அர்த்தங்களும் சித்திக்கக்கூடியதாகையால் சந்தேகம் ஜனிக்கிறது. (8)

4. இதிலடங்கிய சூத்திரங்கள்:—

(1) 8 (12முதல் 19முடிய)

(2) இவைகளில் 13-வது சூத்திரத்தில் பூர்வபக்ஷமும் சித்தாந்தமும் சேர்ந்திருக்கின்றன. மற்ற சூத்திரங்கள் சித்தாந்த சூத்திரங்களே.

(3) விர்த்திகாரருடைய பூர்வபக்ஷியானவன் (அதாவது இரண்டாவது வர்ணகத்தின் சித்தாந்தி) ஆநந்தமயத்துக்கு (a) சாவயவத்வம், (b) சாரீரத்வம் சொல்லப்பட்டிருப்பதாலும் மயட் என்பதற்கு விகாரம் என்கிற அர்த்தமானதாலும் (பிரம்ம) பிரகரணத்தைவிட, லிங்கமே பிரபலமானதால் ஆநந்தமயத்தால் ஜீவனையே அறியவேண்டும் என்று சொல்லுகிறான்.

(4) இந்த வர்ணகத்தின் சித்தாந்தியான விர்த்திகாரர் பிராயபாடப் பிரகரணத்தைவிட ஸ்வாந்திரத்வம் என்கிற லிங்கம் பிரபலமானதாலும் பிரகரணம் பிரம்ம பரமானதாலும் ஆநந்தமயத்தால் பிரம்மத்தையே அறியவேண்டியது என்று சொல்லுகிறார். இவருடைய அபிப்பிராயப்படி இந்த 8 சூத்திரங்களில்

(a) 12, 13, 14, 15-வது சூத்திரங்கள் ஆநந்தமயம் பிரம்மம்தான் என்பதையும்

(b) 16, 17-வது சூத்திரங்கள் ஆநந்தமயம் ஜீவன் அல்லவென்பதையும்

(c) 18-வது சூத்திரம் ஆநந்தமயம் பிரதானமல்லவென்பதையும்

(d) 19-வது சூத்திரம் ஆநந்தமயம் ஜீவனுமல்ல, பிரதானமுமல்லவென்பதையும்

பிரதிபாதிக்கின்றன. (10)

5. பூர்வபக்ஷம்:—(11—12)

இப்படி சந்தேகம் ஜனிக்க, பிரம்மத்தைவிட வேறான அமுக்கிய ஆத்மாவே (ஜீவனே) ஆநந்தமயன் என்று நினைக்கவேண்டியது.

ஏனெனின்:—

(1) அன்னமயாதி அமுக்கிய ஆத்ம பிரவாஹத்துடன் ஆநந்தமயத்தையும் சேர்த்திருக்கிறது.

ஆ இந்த விகார பிராயபாடம் ஒருகாரணம்)

(2) (a) பூர்வபக்ஷி ஆயினும் (விகாரபிராயபாடமிருந்தாலும்) ஆநந்தமயம் சர்வத்துக்கும் ஆந்தரமாயிருப்பதால் முக்கிய ஆத்மாவே.

(ஆ பிரகரணத்தைவிட லிங்கம் பலமானது என்பது இவனுடைய கருத்து)

(b) சித்தாந்தி:— அப்படியல்ல.

ஏனெனின், ஆநந்தமயன்

1. (1) பிரியம் முதலிய அவயவங்களுடன் கூடியிருக்கிறான்.

(2) சரீரத்துடன் கூடியிருக்கிறான்.

என்று சொல்லியிருக்கிறது.

( இந்த லிங்கங்களால் பிரகரணமே பிரபலம் என்று ஏற்படுகிறது. இந்த லிங்கங்களால் வேறு விதமாயும் ஏற்படமாட்டாது என்று இனி சொல்லுகிறார்.)

2. இந்த ஆநந்தமயனுக்கோ இவ்விடத்தில்

(1) प्रियमेवशिरः (तै II-5)

முதலிய வசனங்கள் சிரஸ்முதலியவைகளைக் கூறுகின்றன.

(2) तस्यैष एवशारीर आत्माय: पूर्वस्य (II-5)

என்கிற இடத்தில் [illegible] சொல்லப்பட்டிருக்கிறது. (இந்தசுருதி அந்த முந்தின விஞ்ஞானமயனுக்கு எவன் ஆநந்தமயனோ அவனே சாரீர ஆத்மா என்று சொல்லியிருக்கிறது. (சரீரத்திலிருக்கிறதினால் சரீரமுடையவன் என்று உபநிஷத் பாஷ்யத்தில் ஆசாரியார் அர்த்தம் செய்திருக்கிறார்.) சரீரமுடையதற்கு பிரியம், அப்பிரியம் இவைகளின் சம்பந்தம் வராமலிருக்கும்படி செய்யமுடியாது.

1. ஆ இவைகளிருந்தால் சம்சாரித்வம் ஏற்படும்.

வி (பரமாத்மாவோ அவயவமற்றவர்) ஆகையால் ஆநந்தமய ஆத்மா சம்சாரியே. (11)

2. ஆ அப்படியானால் सर्वान्तरत्व த்துக்குள்ள அர்த்தம் செய்கிறதெனின் அன்னமயாதி நான்குக்கு அந்தரம் என்று அர்த்தமேதவிர சர்வாந்தரம் என்று அர்த்தமல்ல.] (12)

6. சித்தாந்தம்:—

(1) இந்த பூர்வபக்ஷத்துக்கு விருத்திகாரர்

# आनन्दमयोऽभ्यासात् ॥ १२ ॥

என்கிற சூத்திரத்தில் உத்தரம் கூறுகிறார். (13)

(2) பதஉரை.

अभ्यासात् அடிக்கடி சொல்லியிருப்பதால்

आनन्दमयः ஆநந்தமயன் பரமாத்மா. (14)

(3) பொழிப்புரை:—

பரமாத்மாவைக்கூறும் ஆநந்தசப்தம் அடிக்கடி உபயோகிக்கப்படுகிறபடியால் ஆநந்தமய ஆத்மா பரமாத்மாவே. (15)

(4) பாஷ்யம்.

A. ஸ்வமத சித்தாந்தம் (16—19)

1. आनन्दमयः பரமாத்மாவையே ஆநந்த சப்தத்தால் அறிவது யுக்தம். (16)

ஏனெனின்

2. अभ्यासात् பரமாத்மபரமாகவே ஆநந்த சப்தம் பலதடவை உபயோகப்பட்டிருக்கிறது. எப்படி எனின், ஆநந்தமயனை உத்தேசித்து

தைத்ரீயசுருதியில்:—

(1) (a) रसो वैसः (तै II-7)

என்கிறதில் அதுவே ரஸம் என்று சொல்லி

(1) रसं ह्येवायं लब्ध्वानन्दी भवति कोह्येवान्यात्
कः प्राण्याद्यदेष आकाश आनन्दो न स्यात्
एषह्येवानन्दयाति (तै II-7)

(2) सैषानन्दस्यमीमांसा भवति (तै II-8)

(3) एतमानन्दमय मात्मानमुपसं क्रामति (तै II-8)

(4) आनन्दं ब्रह्मणो विद्वान्नबि भेति कुतश्चन (3-6)

(5) आनन्दो ब्रह्मेति व्यजानात् (तै III-6)

என்றும் சொல்லியிருக்கிறது.

இஷ் சுருதிகளின் அர்த்தம்:—

(a) அது ரஸம்

(b) ரஸத்தை இவன் அடைந்து ஆநந்தனாகிறான்,

இந்த ஆகாசரூப ஆநந்தம் (அல்லது ஹிருதயாகாசத்தில் ஆநந்தம்) இல்லாவிடின் எவன் பிராண சேஷ்டை செய்வான், அபான சேஷ்டை செய்வான்.

இவனே (மற்றவர்களை) ஆநந்திக்கிறான்.

(2) இது மனிதன் முதல் பிரம்மாவரையிலுள்ள ஆநந்ததாரதம்மியத்தின் விசாரம்.

(3) இந்த ஆநந்தமய ஆத்மாவை அடைகிறான். அல்லது, வித்வான் பஞ்சகோசங்களையும் தாண்டி பிரத்தியகாத்மாவாகவே ஆகிறான் என்று அறியவேண்டியது.

(4) பிரம்மத்தின் ஆநந்தத்தை அறிகிறவன் யாதொன்றிற்கும் பயப்படுகிறதில்லை.

(5) ஆநந்தம் பிரம்மமென்று அறிந்தான்.

ரா [மேற்கூறிய வாக்கியங்களில் ஆநந்த சப்தம் அடிக்கடி சொல்லப்படுகிறதே தவிர ஆநந்தமய சப்தம் சொல்லப்படவில்லையே. அப்படியிருக்க அது பிரம்மத்தைக் கூறுமென்று எப்படி சொல்லலாமெனின்.

ஜோதிஷ்டோமாதி பிரகரணத்தில் ஜோதிஸ்சப்தம் ஜோதிஷ்டோமத்தைக் கூறுவதுபோல், ஆநந்தமயாதி பிரகரணத்தில் ஆநந்த சப்தம் ஆநந்தமயத்தைக் கூறும்.] (17)

வேறு (பிருஹதாரண்யக):—சுருதியிலும்

विज्ञानमानन्दं ब्रह्म (III-9-8)

என்கிற இடத்தில் ஆநந்த சப்தத்தை பிரம்மத்துக்கே உபயோகிக்கப்பட்டதாக காணப்படுகிறது. (18)

இவ்விதமாக ஆநந்த சப்தம் வெகு இடங்களில் பிரம்மத்துக்கே உபயோகிக்கப்பட்டிருப்பதால் ஆநந்தமய ஆத்மா பிரம்மம் என்று அறியப்படுகின்றது. (19)

## B. பரமதக்கண்டனம்.

[ஆ இப்படி லிங்கத்தால் ஆநந்தமயம் பிரம்மம் என்று சொல்லி இனி பிரம்மமாகமாட்டாது என்று சொன்ன யுக்தியை விசாரிக்கிறார்.]

11-வது பிரிவுக்கு உத்தரம்:—

அன்னமயம் முதலிய அமுக்கிய ஆத்மாக்களுடன் ஆநந்தமய ஆத்மாவையும் சேர்த்திருப்பதால் ஆநந்தமயாத்மாவும் அமுக்கியாத்மா

என்று பூர்வபக்ஷி சொல்லியிருக்கிறான். இதில் தோஷமில்லை. ஏனெனின்

ஆநந்தமயன் சர்வாந்தரம். முக்கியமான ஆத்மாவைப்பற்றியே உபதேசிக்க இச்சிக்கும் சாஸ்திரம், (ஸ்தூலத்தை கிரகிக்கும்) லோகபுத்தியை அனுசரித்து, அதி மூடஜனங்கள் அனாத்மாவான அன்னமய சரீரத்தை ஆத்மாவாகபாவிப்பதை பிரஸ்தாபித்து கருவில் உருக்கிவிடப்பட்ட தாம்பிரம் கருவின் ஆகாரத்தை அனுசரித்து பிரதிமையாகக் காணப்படுவதுபோல், அன்னமயத்துக்கு சமானமாயும் அதற்குள்ளடங்கியுமிருக்கிற அனாத்மாவை ஆத்மாவாய் உபதேசித்து இப்படியே முன்வரும் ஒவ்வொன்றுக்கும் உள்ளிருக்கும் பின்வரும் ஒவ்வொன்றையும் உபதேசிக்கிறது.

(அதாவது பிராணனுக்கு தேகாகாரம்,

தேகத்துடன் சாமான்னியம்,

மனதிற்கு பிராணாகாரம்,

பிராணனுடன் சாமான்னியம் இப்படியே அறியவும்)

சுலபமாய் அறியமுடியும் என்கிற கருத்துடன் அனாத்மாவை ஆத்மாவாக முதலில் உபதேசிக்கிறது. சகலத்துக்கும் அந்தரமாயிருக்கும் ஆநந்தமய ஆத்மாவை முக்கிய ஆத்மாவாக உபதேசிக்கிறது. இதற்குமேல் ஒன்றும் சொல்லப்படாமையால் இதுவே முக்கிய ஆத்மா)

திருஷ்டாந்தம்:—அருந்ததி நக்ஷத்திரத்தைக் காட்டுகிறதில் அமுக்கியமான அநேக நக்ஷத்திரங்களை அருந்ததி என்று காட்டப்பட்டவளவில், கடைசியில் எது காட்டப்பட்டதோ அதுவே முக்கியமான அருந்ததி என்று ஏற்படுகிறது. இப்படியே இவ்விடத்திலும் ஆநந்தமயம் சகலத்துக்கும் அந்தரமாக சொல்லியிருப்பதால் முக்கியமாகிறது. (20)

12 (b) க்கு உத்தரம்:—

முக்கியமான ஆத்மாவுக்கு பிரியம் முதலியவைகளை சிரசு முதலியவைகளாக கற்பிப்பது பொருந்தாது என்று சொன்னதும் சரியன்று. ஏனெனின் அந்த கற்பனையானது முன்னடுத்திருக்கும் விஞ்ஞானமயகோசத்தால் ஏற்பட்டது. சுவாபாவிகமன்று. ஆகையால் தோஷமில்லை.

12 (c) க்கு உத்தரம்:—ஆனந்தமயனுக்கு சரீரத்வம் சொன்னதும் அன்னமயாதி சரீரபரம்பரையில் அதை அதியலர்மாகையால் அதற்கும் சரீரசம்பந்தம் சொல்லப்பட்டதேதவிர, ஜீவனுக்கு சாக்ஷாத்தாய் சரீரம் ஏற்பட்டதுபோல் ஏற்படவில்லை. ஆகையால் ஆநந்தமயன் பரமாத்மாவே.

ஈ. புத்திவிருத்தியால் அவயவம் கற்பிக்கப்படியால் அவயவம் சாக்ஷாத்தாய் ஏற்படவில்லை. அன்னமயத்தையும் பிராணனையும் உத்தேசித்து அன்னமயம் சரீரம் என்றும் பிராணன் ஆத்மாவென்றும் சொன்னதினால் பிராணன் எப்படி அன்னமய சரீரத்தால் அறியபடுகிறனோ, அப்படியே ஆநந்தமய ஆத்மா அறியப்படுகிறபடியால் சாரீரத்வம் கற்பிக்கப்பட்டது. ஆகையால் சுவயமான சரீரம் ஏற்படவில்லை. இப்படி அவயவகற்பனையும் சாரீரத்வ கற்பனையும் துர்ப்பலமாயிருவதாலும் அப்பியாசமும் (அடிக்கடி சொல்லப்படுகையும்) சகலத்துக்கும் அந்தரமாக இருக்குகையும் இருப்பதாலும், ஆநந்தமய சப்தத்துக்கு விகாரம் என்றும் அர்த்தம் செய்வதில் பிராயபாடம் உபயோகப்படவில்லை. (21)

I-1-6-ல் 2 (13) வது சூத்திரம்.

1. முந்தினதற்கும் இதற்கு சம்பந்தம்:—

பிரம்மவிஷயமாய் ஆநந்தசப்தம் அடிக்கடி சொல்லியிருப்பதால் ஆநந்தமயத்தால் பிரம்மம்தான் அர்த்தம் ஆகவேண்டும், அன்னமயாதிகளின் சன்னிதியில் மயட்டுக்கு வேறு அர்த்தமாகமாட்டாது என்று முன் சொல்லப்பட்டது. இப்போது அந்தவரிசையை கவனிக்காமலே கேவலம் ஆநந்தமய சப்தத்தைமட்டும் எடுத்துக்கொண்டு, அதிலுள்ள மயட் சப்தத்துக்கு விகாரம் அர்த்தம் இசையலாமே என்னும் சங்கதியை விசாரிக்கிறார். (22)

2. சூத்திரம்:—

## विकारशब्दान्नेति चेन्न प्राचुर्यात् १३

3. பதஉரை:—

विकारशब्दात् (ஆநந்தமயம்) விகார அர்த்தத்தையுடையதாகையால்

न (பிரம்மம்) அல்ல

इति चेत् என்றுசொன்னால்

न (அது அப்படி) யல்ல

प्राचुर्यात् அதிகம் என்கிற அர்த்தம்கூடுமாகையால் (24)

4. பொழிப்புரை:—

ஆநந்தமய சப்தம் விகாரம் என்கிற அர்த்தத்தை தரக்கூடியதாகையால் அது பரபிரம்மத்தை கூறமாட்டாது என்று சொல்லும்பக்ஷத்தில், அதை நாம் ஒப்புக்கொள்ளவில்லை. ஏனெனின் மயட் சப்தம் மிகுதி என்னும் அர்த்தத்தையும் கூறும். (25)

5. பாஷ்யம்.

பூர்வபக்ஷி சொல்லுகிறான்:—

1. न:—ஆநந்தமய சப்தம் பரமாத்மாவைக் கூறமாட்டாது. (26)

2. विकारशब्दात् ஏனெனின் மயட் என்பதற்கு விகாரம் என்கிற அர்த்தமிருப்பதால், ஆநந்தமய சப்தத்துக்கு ஆநந்தத்தைவிட வேறான விகாரம் என்கிற அர்த்தம் கிடைக்கிறது. ஆகையால் அன்னமயாதி சப்தங்கள்போல் ஆநந்தமய சப்தமும் விகாரத்தையே கூறுகிறது. (27)

சித்தாந்தம்:—

3. इतिचेत् न:—இப்படி பூர்வபக்ஷி சொன்னானேயானால் அது யுக்தமன்று. (28)

ஏனெனின்

4. प्राचुर्यात् மிகுதி என்கிற அர்த்தத்திலும் மயட் சப்தம் உபயோகிக்கப்படுகிறது.

தத்ப்ரக்ருதவசநே மயட் ... என்கிற பாணினிஸூத்திரத்தில் (V-4-21) மிகுதியைக் கூறுவதிலும் மயட் உபயோகப்பட்டதாம் என்றுசொல்லியிருக்கிறது.

திருஷ்டாந்தம்:—

அன்னமயஃயஜ்ஞ: என்கிறதில் யஜ்ஞத்தில் அன்னம் விசேஷமாய் உபயோகப்படுவதால் மயட் என்பது மிகுதியைக் காட்டுகிறது. இப்படியே விசேஷமான அதாவது மிகுதியான ஆநந்தமுடைய பிரம்மம் ஆநந்தமயம் என்று சொல்லப்படுகின்றது. தைத்ரீயம் II-8-ல் மனிதனுடைய ஆநந்தம் முதல் மேல்மேல் ஒவ்வொரு ஆநந்தமும் முந்தினதைவிட நூறுமடங்கு அதிகம் என்றுசொல்லி பிரம்மம் நிகரற்ற ஆநந்தம் என்று சொல்லப்பட்டிருக்கிறது. ஆகையால் மிகுதி என்கிற அர்த்தத்தில் மயட் உபயோகிக்கப்பட்டிருக்கிறது.

(மயட் என்பதற்கு மிகுதி என்கிற அர்த்தமும் விகாரம் என்கிற அர்த்தமும் சமமாயிருந்தாலும் தைத்ரீயம் பிரம்மாநந்தவல்லியில் உபக்கிரமத்தில் சர்வத்துக்கும் அந்தரம் என்று சொல்லியிருப்பதாலும் உபசம்ஹாரத்தில் அப்பியாச லிங்கம் காணப்படுவதாலும், விகாரம் என்பதை விட்டுவிட்டு மிகுதி என்கிற அர்த்தத்தையே கிரகிக்கவேண்டியது. (29)

(13-வது ஸூத்திரபாஷ்ய மொழிபெயர்ப்பு)

முற்றிற்று.

---

## I-1-6ல்-3 (14)-வது ஸூத்திரம்.

1. முந்தின ஸூத்திரத்துக்கும் இதற்கும் சம்பந்தம்:—முந்தின ஸூத்திரத்தில் மயட் சப்தத்துக்கு மிகுதி என்று அர்த்தம்செய்யவேண்டியது என்று சொன்னதற்கு வேறு காரணத்தைக் கூறுகிறார். (30)

2. ஸூத்திரம்.

# तद्धेतुव्यपदेशात् ॥ १४ ॥

3. பதவுரை:—

च மேலும்

तद्धेतुव्यपदेशात् அதின் காரணமென்றுசொல்லியிருப்பதால், (32)

4. மொழிப்புரை.

பிரம்மமானது ஆநந்தத்திற்குக் காரணமென்று சொல்லியிருப்பதாலும் ஆநந்தமயம் பிரம்மமே. (33)

5. பாஷ்யம்.

(1) च:—एषह्येवानन्दयाति (தை II-7)

என்கிற சுருதியானது ஆநந்தத்துக்குக் காரணம் பிரம்மம் என்று சொல்லியிருப்பதால் மயட் சப்தத்துக்கு மிகுதியென்றே அர்த்தம் செய்யவேண்டியது. "இதுவே ஆநந்தமுண்டாகும்படி செய்கிறது" என்பது சுருதியின் அர்த்தம், எவன் மற்றவர்களை ஆநந்தப்படுத்துகிறானோ அவன் மிகுதியான ஆநந்தமுடையவன் என்பது பிரசித்தம். எப்படியெனின் உலகத்தில் எவன் மற்றவர்களை விசேஷ தனமடையும்படிச் செய்கிறானோ அவன் மகா தனிகன் என்று அறியப்படுகிறான். ஆகையால் மிகுதி என்கிற அர்த்தத்திலும் மயட் என்னும் பதம் உபயோகப்படுமாகையால் ஆநந்தமயன் பரமாத்மாவே. (34)

(I-1-14-வது ஸூத்திரத்தின் பாஷ்யமொழிபெயர்ப்பு)

முற்றிற்று.

---

## I-1-6ல்-4(15)-வது ஸூத்திரம்.

# मान्त्रवर्णिकमेवचगीयते ॥ १५ ॥

1. ஸூத்திரம்.

2. முந்தின ஸூத்திரத்துக்கும் இதற்கும் சம்பந்தம்:—முந்தின ஸூத்திரங்களில் சர்வாந்தரத்வம் அப்பியாசம் ஆகிய லிங்கங்கள் கூறப்பட்டன, இப்போது பிரகரணத்தினாலும் ஆநந்தமயம் பிரம்மம்தான் என்று காட்டுகிறார். (36)

3. பதவுரை:—

च மேலும்

मन्त्रवर्णिकमेव மந்திரபாகத்தில் கூறப்பட்டதே

गीयते (பிராம்மணபாகத்தில்) கூறப்பட்டிருக்கிறது. (37)

4. மொழிப்புரை.

மேலும், மந்திரபாகத்தில் கூறப்பட்ட பிரம்மமே பிராம்மணபாகத்திலும் ஆநந்தமயமென்று கூறப்பட்டிருப்பதால், ஆநந்தமயம் பிரம்மமே. (38)

5. பாஷ்யம்.

1. ச: மேலும் ஆநந்தமயம் பரமாத்மாவே. (39)
ஏனெனின்

मान्त्रवर्णिकमेव गीयते:—

ब्रह्मविदाप्नोति परं

என்று ஆரம்பித்து

सत्यं ज्ञानमनन्तं ब्रह्म (तै II-1)

என்கிற மந்திரத்தில் கூறப்பட்ட பிரம்மமானது சத்தியம், ஞானம், ஆநந்தம் ஆகிய விசேஷங்களால் நிச்சயிக்கப்பட்டது.

பிறகு வரும் பிராம்மணபாகத்தில்,

இதினின்றும் ஆகாசாதிகளும், ஸ்தாவரஜங்கமங்களும், பூதங்களும் உண்டாயினவென்றும்,

இது பூதங்களை சிருஷ்டித்து அவைகளில் அநுப்பிரவேசம்செய்து, ஹிருதய குஹையிலிருக்கிறது என்றும்,

அதை அறியும்பொருட்டு

अन्योऽन्तर आत्मा अन्योऽन्तर आत्मा (तै II-5)

(சர்வத்துக்கும் உள்ளேயிருக்கிற ஆத்மா வேறு) என்றும்,

சொல்லியிருக்கிறது.

மந்திரத்தில் பிரஸ்தாபிக்கப்பட்ட பிரம்மமே பிராம்மணபாகத்தில் अन्योऽन्तर आत्मा आनन्दमयः என்கிறதாகக் கூறப்பட்டிருக்கிறது. மந்திரத்துக்கும் பிராம்மணத்துக்கும் விரோதமில்லாதபடியால் ஒரே அர்த்தத்தைச் சொல்லுவது யுக்தம்.

(பிராம்மணம் என்பது மந்திரத்துக்கு வியாக்கியானரூபமாகையால் மந்திரத்துக்குச் சாதகமேதவிர பாதகமன்று).

இல்லாவிடின் பிரகிருதஹாநி அதாவது ஆரம்பித்ததைப்பற்றிச் சொல்லாமையும், ஆரம்பிக்காததைப் பற்றிச் சொல்லுவதுமாகிய தோஷம்சம்பவிக்கும். 40

மேலும்

[ஏ அன்னமயாதிகளையும் பிரம்மமாகச் சொல்லலாமே எனின்] அன்னமயாதிகளைவிட வேறு என்று சொன்னதுபோல் ஆநந்தமயத்தைவிட வேறானதும் உள்ளிருப்பதுமான ஆத்மா சொல்லப்படவில்லை. (41)

सैषा भार्गवी वारुणी विद्या

என்கிறவாக்கியமும் பிரம்மத்திலேயே முடிவு பெறுகிறது.

ஏ (எப்படியெனின், வருணனால் பிருகுவுக்கு உபதேசிக்கப்பட்ட பிருகுவல்லியானது 5-வது பரியாயமான ஆநந்தத்தில் முடிவுபெறுகிறது. எப்படியெனின் முதலில் அன்னத்தை பிரம்மமாக அறி என்று சொல்லியிருக்கிறது, பிறகு பிராணனை பிரம்மமாக அறி என்றும், பிறகு மனதை பிரம்மமாக அறி என்றும், பிறகு விஞ்ஞானத்தை பிரம்மமாக அறி என்றும் கடைசியில் ஆநந்தத்தை பிரம்மம் என்று அறி என்றும் இப்படி 5-வது தடவையில் செய்த உபதேசம் ஆநந்தமே பிரம்மம் என்பதில் முடிவுபெறுகிறது. பிரம்மவல்லியிலும் 5-வது பிரஸ்தாபத்தில்தான் ஆநந்தமயனைப்பற்றிச் சொல்லியிருக்கிறது. இந்த 5-வது என்கிற ஸ்தானத்தை உத்தேசித்து பிருகுவல்லியும் பிரம்மவல்லியும் ஒரே அர்த்தத்தைக் கூறுவதாகச் சொல்வது யுக்தம்.) (42)

ஆகையால் ஆநந்தமயம் பரமாத்மாவே. (43)

I-1-6ல் 5 (16)-வது சூத்திரம்.

1. नेतरोऽनुपपत्तेः ॥ १६ ॥ (44)

2. முந்தின சூத்திரத்திற்கும் இதற்கும் சம்பந்தம்:—முந்தின சூத்திரங்களில் ஆநந்தமயன் பிரம்மம் என்று சொன்னதை பூர்வபக்ஷி ஜீவன் என்று சொன்னால் அது யுக்தமன்று என்று இந்த சூத்திரத்திலும் நிரூபிக்கிறார்.

ஏ. (பூர்வபக்ஷியின் கருத்து:—ஆநந்தமயனே ஜீவன்.

सोऽकामयत बहुस्यां प्रजायेय

என்கிற வாக்கியத்தில் சிருஷ்டியின் கர்த்தாவாகச் சொல்லப்படும் सः என்பது ஜீவனையே குறிப்பிடுகிறது. ஜீவன் அதிஷ்டத்தினால் (புண்ணியத்தால்) சிருஷ்டியின் கர்த்தாவாகலாம். நிரதிசயானந்தம் சொல்லியிருக்கிறதே எனின்,

शास्त्रदृष्ट्या तु उपदेशो वामदेववत्

என்கிற I-1-30-வது பிரம்ம சூத்திரத்திற் சொல்லியபடி சாஸ்திரஞானத்தால் நிரதிசயானந்தம் உண்டாகலாம். ஆகவே ஆநந்தமய சப்தத்தால் ஜீவனையே

அறியவே அறியவேண்டியது, இந்த பூர்வபக்ஷ அபிப்பிராயத்தைத் தள்ளும்பொருட்டு இந்த சூத்திரம் ஏற்பட்டது. (45)

3. பத உரை.

इतरः வேருனவன் (ஜீவன்)

न ஆநந்தமயனல்ல.

अनुपपत्तेः பொருந்தாமையால் (46)

4. பொழிப்புரை.

ஆநந்தமயன் ஜீவனல்ல. ஏனெனின் சிருஷ்டி முதலியவைகள் இவனிடத்தில் பொருந்தா. (47)

5. பாஷ்யம்.

(a) नेतरः மேலும், ஆநந்தமயன் பரமாத்மாவே ஈசுவரனைவிட வேருன சம்சாரி அதாவது ஜீவனன்று. ஏனெனின்,

(b) अनुपपत्तेः ஜீவனை ஆநந்தமய சப்தத்தால் கூறக்கூடாது. ஏனெனின் ஆநந்தமயனை உத்தேசித்து,

(1) सोऽकामयत बहुस्यां प्रजायेय

(2) सतपस्तप्त्वा इदं सर्वमसृजत यदिदं किंच

என்கிற (தைத்திரீய II-6) சுருதியில்

அநேகமாக வேண்டுமென்று இச்சித்து சகலத்தையும் சிருஷ்டித்தது

என்று சொல்லியிருக்கிறது. சரீராதிகளின் உற்பத்திக்குமுன், இச்சை, சிருஷ்டிக்கப்படும் பதார்த்தங்களுக்கும் சிருஷ்டிக்கிறவனுக்கும் அபேதம், சகல விகாரங்களின் சிருஷ்டி, இவைகள் பரமாத்மாவைத் தவிர வேறு இடத்தில் பொருந்தாவாம். (48)

I-1-6-ல் (17) வது சூத்திரம்

1. भेदव्यपदेशाच्च ॥१७॥ (49)

2. முந்தின சூத்திரத்துக்கும் இதற்கும் சம்பந்தம்:—

ஆநந்தமயன் ஜீவனல்லவென்பதற்கு வேறு காரணத்தைக் கூறுகிறார். (50)

3. பதஉரை:—

च மேலும்

भेदव्यपदेशात् பேதம் சொல்லப்பட்டிருப்பதால் (55)

4. பொழிப்புரை:—

ஜீவனும் ஆநந்தமயனும் வெவ்வேறு என்றுசொல்லியிருப்பதால் ஆநந்தமயன் ஜீவனுகமாட்டான். (52)

5. பாஷ்யம்:—

च மேலும் ஆநந்தமயன் ஜீவன் அல்ல. (53)

भेदव्यपदेशात् ஏனெனின் ஆநந்தமய பிரகரணத்தில்

रसोवै सः रसं ह्येवायं लब्ध्वा नन्दी भवति (तै II-7)

அதாவது

அது ரஸம், அதை அடைந்து ஜீவன் ஆநந்தமடைகிறான்.

என்று சொல்லியிருக்கிறது.

இந்த சுருதியில் ஜீவனும் ஆநந்தமயனும் வெவ்வேறு என்று கூறப்பட்டிருக்கிறது. அடைகிறவன் அடையப்பட்ட பதார்த்த மாகமாட்டான். (54)

ஆக்ஷேபம் :— அடைகிறவன் அடையப்பட்டதைவிட வேறு என்று சொன்னல்,

(1) आत्मा अन्वेष्टव्यः

(ஆத்மா தேடத்தக்கவன்) என்கிற சுருதிவாக்கியமும்,

(2) आत्मलाभात् न परं विद्यते

(ஆத்மலாபத்தைவிட சிரேஷ்டமானது ஒன்றுமில்லை) என்கிற ஸ்மிருதிவாக்கியமும் எப்படி ஒவ்வும்.

பாமதி (பரமாத்மாவைவிட வேருகாத ஜீவன் பரமாத்மாவை அடைகிருன் என்று சொல்லியிருக்கிறதே. அது எப்படி ஒவ்வும்.) (55)

சமாதானம் :— நீ சொல்லுகிறது சரிதான்.

(அபேதம் வாஸ்தவந்தான். கற்பிதபேதத்தால் சுருதியில் பேதம் சொல்லியிருக்கிறது). அபேதமிருந்தாலும், ஆத்மாவானது வாஸ்தவத்தில் ஆத்மாவாகவேயிருக்கிறது. அந்த சொரூபத்தினின்றும் நழுவுகிறதில்லை. ஆயினும் இந்த தத்துவத்தை அறியாமையால் அநாத்மாவான தேகாதிகளில் ஆத்மா (நான்) என்கிற பிரமை உண்டாகிறது. இந்த பிராந்தியால் தேகாதிகளாக பாவிக்கப்பட்ட ஆத்மாவிஷயத்தில், (சாஸ்திரத்தால் தேகத்தைவிட ஆத்மா வேறு என்று தெரிந்துகொண்டதின்பேரில்) ஆத்மா தேடப்பட்டவில்லை. தேடத்தக்கது (தேகாதிகளுக்கு வேருக விசாரிக்கத்தக்கது) அடையப்படவில்லை. விவேகஞான

த்தால் அடையத்தக்கது அதாவது சாக்ஷாத்கரிக்கத்தக்கது, கேட்கப்படவில்லை, (அதற்காக) கேட்கத்தக்கது, மனனம் செய்யப்படவில்லை, மனனம் செய்யத்தக்கது, அறியப்படவில்லை, அறியத்தக்கது (நிதித்தியாஸனம் செய்யத்தக்கது) இவைமுதலிய பேதவசனங்களுக்குஅவகாசம் உண்டாகிறது.

नान्योऽतोऽस्ति द्रष्टा (बृ III-7-23)

முதலிய சுருதிகளால் வாஸ்தவ்வியத்தில் சர்வஞ்ஞரான பரமேசுவரனைவிட வேறான திர்ஷ்டாவாவது சுரோதாவாவது ஒருவனுமில்லை என்று நிஷேதிக்கப்படிருக்கிறது. (56)

रा (ஈசுவரனைவிட ஜீவன் வேறாகாவிட்டால், ஜீவனைவிட ஈசுவரன் வேறாகமாட்டான். அப்போது ஜீவன் கற்பிதனானதால் ஈசுவரனும் கற்பிதனாவான். எனின்;)

பரமேசுவரனோ, அவித்தையால் கற்பிக்கப்பட்டவனும், சரீரசம்பந்தமுள்ளவனும், கர்த்தாவாயும், போக்தாவாயுமிருக்கிற விஞ்ஞானாத்மாவை (ஜீவனை)விட வேறானவன்.

(ஜீவன் அவித்தியாபிரதிபிம்பனானதால் கற்பிதன், சித்ரூபமான ஈசுவரன் பிம்பனானதால் வேறு ஆனதால் கற்பிதனன்று).

रा (கற்பிதமானது அதிஷ்டானத்தைவிட வேறாகாவிட்டாலும், அதிஷ்டானம் கற்பிதத்தைவிட வேறு என்பதற்கு திருஷ்டாந்தம் யாதெனின்),

(1) கேடயத்தையும் கத்தியையும் தரித்துக்கொண்டு கயிற்றைப் பிடித்துக்கொண்டு ஆகாசத்தில் ஏறுகிற மாயாவியான வித்தையாடியைவிட பூமியிலிருக்கிற வாஸ்தவமான அந்த வித்தையாடி வேறானவன்.

(2) உபாதியால் வளைக்கப்பட்ட கடாகாசத்தைவிட உபாதியற்ற ஆகாசம் வேறு.

रा (கயற்றில் ஏறினவன் முழுமையும் பொய் ஆயிற்றே, ஜீவன் அப்படி அல்லவே ஆகையால் மாயாவியின் திருஷ்டாந்தம் கூடாதென்னும் ஆக்ஷேபத்துக்காக ஆகாசதிருஷ்டாந்தம் கொடுக்கப்பட்டது.) (57)

ஜீவனுக்கும் பரமாத்மாவுக்கும் இருக்கிற (கற்பித பேதத்தைக்கொண்டு, नेतरोऽनुपपत्तेः भेदव्यपदेशाच्च என்கிற சூத்திரங்களில் ஆநந்தமயன் பரமாத்மாவே, ஜீவனல்லவென்று சொல்லப்பட்டது. இது யுக்தம்.

रा (சூத்திரங்களில் ஜீவனுக்கும் பிரம்மத்துக்கும் பேதம் தெரியவருகிறதே எனின்; சூத்திரங்களில் பேதம் சத்தியம் என்கிற பதங்களில்லை.

तदनन्यत्वात् (II-1-14)

முதலிய சூத்திரங்களும், சுருதிகளுமிருப்பதால் பேதமில்லை என்பது கருத்து). (58)

I-1-6ல் 7 18-வது சூத்திரம்.

1. कामाच्चनानुमानापेक्षा ॥ 19 (59)

2. (முந்தின சூத்திரத்துக்கும் இதற்கும் சம்பந்தம் :—முந்தின சூத்திரங்களில் ஆநந்தமயன் பிரம்மம்தான், ஜீவன் அல்லவென்று சொல்லப்பட்டது. இப்போது பிரதானமுமல்லவென்பது நிரூபிக்கப்படுகிறது.

रा ஆநந்தாத்மா சத்வப்பிரசுரமான பிரதானம் ஆநந்தமயமாயிருக்கக்கூடுமே என்று ஒருவன் சொன்னால் அதுவும் அல்லவென்று இதில் நிரூபிக்கப்படுகிறது. (60)

3. பத உரை.

च மேலும்

कामात् இச்சையால்

अनुमानापेक्षा அனுமானத்தின் அபேக்ஷை

न இல்லை. (61)

4. பொழிப்புரை.

மேலும் ஆநந்தமயத்துக்கு இச்சை கூறப்பட்டிருப்பதால், சாங்கியர்கள் அனுமானிக்கும் பிரதானம் ஆநந்தமயமாகமாட்டாது. (62)

5. பாஷ்யம்:—

ஆநந்தமய பிரகரணத்தில்

सोऽकामयत बहुस्यां प्रजायेय (तै II-6)

என்கிற வாக்கியத்தில் இச்சிக்கும் தன்மை சொல்லியிருப்பதால், அனுமானிக்கக்கூடிய அதாவது சாங்கியர்களால் ஒப்புக்கொள்ளப்பட்ட அசேதனமான பிரதானம் ஆநந்தமயம் என்றாவது காரணமென்றாவது சொல்லமுடியாது. (63

ईक्षतेर्नाशब्दम् (I-1-5)

என்கிற (I-1-5) சூத்திரத்தில் பிரதானம் காரணமல்லவென்று நிராகரிக்கப்பட்டிருந்தாலும், முந்தின

(16-வது) சூத்திரத்தில் ஜகத்காரணம் இச்சிக்கிறது என்று சொல்லிய சுருதியை அநுசரித்து, சகல சுருதிகளும் ஒரு அர்த்தத்தையே சொல்லுகின்றனவென்பதை ஸ்தாபிக்கும்பொருட்டு, பிரசங்கத்தில் மறுபடியும் பிரதானம் நிராகரிக்கப்பட்டது. (64)

I-1-6 வ 8(19) வது சூத்திரம்.

## अस्मिन्नस्य च तद्योगं शास्ति

2. முந்தின சூத்திரத்துக்கும் இதற்கும் சம்பந்தம்:—

இந்த சூத்திரத்திலும் பிரதானமும் ஜீவனும் ஆநந்தமய சப்தார்த்தமல்லவென்று சொல்லுகிறார். (66)

3. பதவுரை.

च மேலும்

अस्मिन् இந்த ஆநந்தமய விஷயத்தில்,

अस्य (ஆநந்தமயனை அறிந்த) ஜீவனுக்கு

तद्योगं ஆநந்தமயத்துடன் யோகத்தை (சேர்க்கையை)

शास्ति விதிக்கிறது. (67)

4. பொழிப்புரை.

மேலும், ஆநந்தமயனை அறிந்த ஜீவன் ஆநந்தமயனுடன் ஒன்றாய் விடுகிறான் என்று சுருதி சொல்லுகிறது. (68)

5. பாஷ்யம்.

(1) च:—மேலும் ஆநந்தமய சப்தமானது பிரதானத்தையும் கூறவில்லை, ஜீவனையும் கூறவில்லை (69)

ஏனெனின்

(2) अस्मिन् பிரகிருத ஆனந்தமயனை ஆத்மாவை அறிந்த (70)

(3) अस्य ஜீவனுக்கு (71)

(4) तद्योगं शास्ति அத்துடன் சேர்க்கை அதின் ஸ்வரூபத்தை அடைதலை அதாவது முக்தியை சரிவ் திரமானது கூறுகிறது.

यदाह्येवैष एतस्मिन्नदृश्येऽनात्म्येऽनिरुक्तेऽनिल
यनेऽभयं प्रतिष्ठां विन्दते अथ सोऽभयं
गतोभवति यदाह्येवैष एतस्मिन्नुदरमन्तरं
कुरुते अथ तस्य भयं भवति (तै II-5)

என்கிற சுருதியில்,

ஸ்தூலபிரபஞ்சமின்றியிலும், லிங்கசரீரமின்றியிலும், சப்தத்தால் கூறப்படாமலும் சகலத்துக்கும் லயஸ்தானமான மாயையற்றதாயுமிருக்கிற பிரம்மத்தினிடத்தில் அபயத்தை பார்த்து மனதையும் அதினிடத்தில் விசேஷமாய் எந்த ஞானி எப்போது செலுத்துகிறானோ, அப்போது அவன் பயமற்ற பிரம்மத்தை அடைகிறான்: எப்போது இவன் பிரம்மத்தில் பேதத்தை கொஞ்சமாகிலும் பார்க்கிறானோ அப்போது அவனுக்கு பயமுண்டாகிறது

என்று சொல்லியிருக்கிறது. இதனால் ஆநந்தமயத்தில் எவன் கொஞ்சபேதத்தை பார்த்தாலும் (அதாவது ஐக்கியமில்லை என்று அறிந்தால்) அவன் சம்சார பயத்தினின்றும் விடுபடுகிறதில்லை என்று ஏற்படுகிறது.

எப்போது ஆநந்தமயனே தான் என்று இடைவெளியன்றியில் அதினிடத்தில்பிரதிஷ்டையை அடைகிறானோ அப்போது சம்சார பயத்தினின்றும் விடுபடுகிறான். இந்த நிரந்தரமான பிரதிஷ்டையானது ஆநந்தமயத்தை பரமாத்மாவாக அறிவதால் சித்திக்குமே தவிர பிரதானமாகவாவது ஜீவனாகவாவது அறிவதால் சித்திக்கமாட்டாது. ஆகையால் ஆநந்தமயன் பரமாத்மாவென்றே சித்தம். (72)

இந்த அதிகரணத்திற்கு

14. பூர்வபக்ஷத்தின் பலன்:—ஜீவனை உபாஸிப்பதால் பிரியம் முதலியவைகளின் பிராப்தி.

சித்தாந்தத்தின் பலன்:—பிரம்மத்தின் உபாஸனையால் பிரியம் முதலியவைகளின் பிராப்தி. (73)

பாஷ்யகாரருடைய மதப்படி

வியாக்கியானம். (6)

(அ-கை) தைத்ரீயத்தில் அன்னமயம், பிராணமயம், மனோமயம், விஞ்ஞானமயம் இவைகளைச் சொல்லி பிறகு

तस्माद्वा एतस्माद्विज्ञानमयात् अन्योऽन्तर
आत्माऽऽनन्दमयः तस्य प्रियमेव शिरः।
मोदोदक्षिणः पक्षः। प्रमोद उत्तरः पक्षः।
आनन्द आत्मा ब्रह्मपुच्छं प्रतिष्ठा (II-5)

என்று சொல்லியிருக்கிறது. இதில் ஆநந்தமயன் ஜீவன் என்பதை பூர்வபக்ஷம் செய்து, பிரம்மம் தான் என்று விருத்திகாரர் சூத்திரங்களின் ஒழுங்கை அநுசரித்து வியாக்கியானம் செய்தார். இப்படி செய்வதில் சுருதி விரோதம் வருவதாக எண்ணி, ஆநந்தமயனுக்கு ஜீவன் தான் அர்த்தம் என்று ஸ்தாபித்து அதிகரணத்துக்கு வேறுவிதமாய் பாஷ்யகாரர் பாஷ்யம் செய்கிறார்.) (74)

இந்த ஆநந்தமயவிஷயத்தில்,

(1) स वा एष पुरुषोऽन्नरसमयः (तै II-1)

(2) तस्माद्वा एतस्मादन्नरसमयात् अन्योऽन्तरात्मा प्राणमयः (तै II-2)

(3) तस्मादन्योऽन्तरात्मा मनोमयः (तै II-3)

(4) तस्मादन्योऽन्तरात्मा विज्ञानमयः (तै II-4)

இந்த சுருதிகளிலுள்ள நான்கு மயட் சப்தத்துக்கும் விகாரம் என்கிற அர்த்தம் ஏற்பட்டிருக்க, (அதே பிரகரணத்திலுள்ள) ஆநந்தமய சப்தத்திலுள்ள மயட்டுக்கு மிகுதி என்னும் அர்த்தத்தை எந்த திருஷ்டாந்தத்தின்பேரில் ஒப்புக்கொண்டு, ஆநந்தமயத்தால் பிரம்மமென்று அறிகிறது. ஒரு பிரகரணத்திலுள்ள ஒரேபதத்துக்கு காரணமன்றியில் இரண்டு அர்த்தங்களைக்கூறுவது அர்த்தஜரதீயம் அதாவது ஒரு உடம்பில் பாதிச்சரீரம் கிழம் என்றும் பாதி சரீரம் பாலியம் என்றும் சொல்லுவது போலிருக்கிறது. (75)

சத்தியம் ஞானம் அநந்தம் பிரம்மமுதலிய மந்திரவர்ணத்தில் எந்த பிரம்மத்தைப்பற்றிச் சொல்லியிருக்கிறதோ அந்த பிரம்மப் பிரகிரணத்தில் ஆநந்தமயனைப்பற்றி சொல்லியிருப்பதால் ஆநந்தமயன் பிரம்மம் என்று சொல்லும்பக்ஷத்தில்,

அது சரியன்று. ஏனெனின்

அந்தப்பிரகிரணத்திலுள்ள அன்னமயாதிகளையும் பிரம்மமாக அறியும்படி நேரிடும். (76)

பூர்வபக்ஷி—அன்னமயாதிகளில் முன் சொன்னதற்கு பின் சொல்லப்படுவது ஆந்தரம் என்றும் ஆத்மாவென்றும் சொல்லியிருப்பதால் அன்னமயாதிகளை பிரம்மமாக அறியாமை யுக்தம். ஆநந்தமயத்துக்கோ இதைவிட வேறாயும், ஆந்தரமாயும் இதற்கு ஆத்மாவாயுமிருப்பதாக ஒன்றும் சொல்லப்படவில்லை. ஆகையால் ஆநந்தமயம் பிரம்மம் என்று அறியப்படுகிறது. ஆநந்தமயனை பிரம்மமாக ஒப்புக்கொள்ளாத பக்ஷத்தில் பிரகிருதமான பிரம்மத்தைவிட்டு அப்பிரகிருதமான ஜீவனை கிரகிக்கும்படி நேரிடும்.

சித்தாந்தி:—அன்னமயாதிகளுக்குப்போல் ஆநந்தமயனுக்கும் உள்ளே வேறு ஆத்மா சொல்லப்படாவிட்டாலும், ஆநந்தமயன் பிரம்மமாகமாட்டான்.

ஏனெனின் ஆநந்தமயனைக்குறித்து

तस्य प्रियमेव शिरः मोदो दक्षिणः पक्षः

प्रमोद उत्तरः पक्षः आनन्द आत्मा

ब्रह्म पुच्छं प्रतिष्ठा

என்று சொல்லியிருக்கிறது.

ரா சுருதியின் அர்த்தம்:—இஷ்டமான விஷயத்தைப் பார்ப்பதினாலுண்டாகும் சுகம் பிரியம். அதை ஸ்மரிக்கிறதினாலுண்டாகுவது மோதம். அதை அடிக்கடி நினைப்பதே பிரமோதம். காரணமான பிம்பசைதன்னியம் ஆநந்தம். இதுவே ஆத்மா அதாவது சிரசுக்கும் வாலுக்கும் மத்தியிலுள்ள பாகம். சுத்தப்பிரம்மம் தான் ஆதாரமான வால்.

மேற்கண்ட சுருதியில் ஆநந்தமயனுக்கு அவயவங்கள் கூறப்பட்டிருக்கின்றன. அவயவமற்ற பரமாத்மாவுக்கு அவயவங்களைக் கூறுவது யுக்தமன்று. ஆகையால் ஆநந்தமயன் பிரம்மமல்ல. (77)

மந்திரவர்ணத்தில் सत्यं ज्ञानं अनन्तं ब्रह्म என்கிற இடத்தில் (ரா குஹையிலிருக்கிறதென்பதினால் சகலத்துக்கும் ஆந்தரம் என்பதாய்) எந்த பிரம்மம் ब्रह्म पुच्छं प्रतिष्ठा என்கிற புச்சவாக்கியத்தில் பிரம்ம சப்தத்தால் கூறப்பட்டிருக்கிறதோ அந்த பிரம்மத்தை அறிவிக்கும்பொருட்டே அன்னமயம்முதல் ஆநந்தமயம்வரையிலுள்ள ஐந்து கோசங்களாகிற (குஹை) கற்பிக்கப்பட்டிருக்கிறது. ஆகவே (ரா அதாவது புச்சவாக்கியம் பிரதானமான பிரம்ம பரமாயிருப்பதால்) பிரகிருதஹானி அப்பிரகிருத பிரஸ்தாபம் என்கிற தோஷத்துக்கு இடமேது. (78)

பூர்வபக்ஷி:—அன்னமயாதிகளுக்கு इदं पुच्छं प्रतिष्ठा என்பதாய் அவயவம் கூறியிருப்பதுபோல் ஆநந்தமயனுக்கும்,

इदं पुच्छं प्रतिष्ठा

என்பிறு அவயவமாகச் சொல்லப்பட்டிருக்கிறது.

ஆகவே பிரம்மத்தைத்தான் பிரதானமாக எப்படி அறியமுடியும்.

ஸ பிரம்மம் பிரகிருதமாயிருப்பதால் பிரம்மம் தான் பிரதானம் என்று சொல்லுகிறோம்.

பிரம்ம சப்தத்தால் பிரதானமான பிரம்மத்தையும் புச்ச சப்தத்தால் அவயவத்தையும் அறியவேண்டியது. ஒரே இடத்தில் ब्रह्म पुच्छ என்கிற இரண்டு பதங்களும் சேர்ந்திருக்கும்போது விருத்தார்த்தங்கள் காணப்பட்டாலும் முதல் பதமே பிரதானம், அதை அனுசரித்தே இரண்டாவது பதத்துக்கும் அர்த்தம் செய்யவேண்டும். அப்போது புச்ச சப்தத்துக்கு ஸ்வாபாவிகமான அர்த்தம்பாதிக்கப்படுகிறது. ஆகவே பிரம்மமே பிரதானமாக சொல்லப்பட்டது. (79)

பூ:-ஆநந்தமயத்துக்கு பிரம்மம் அவயவமாக அறிவதாலும் பிரகிருதம் (பிரகரணம்) கெட்டுப்போகவில்லை. ஏனெனின் ஆநந்தமயன் பிரம்மம் (அப்போதும் பிரம்ம பிரகரணமென்றே ஏற்படுகிறது.)

சி. அப்படியானால் பிரம்மமே ஆநந்தமய ஆத்மா என்பதினால் பிரம்மம் அவயவியாகவும் பிரம்மபுச்சம் பிரதிஷ்டா என்பதினால் பிரம்மம் அவயவமாகவும், இப்படி விருத்தம் சித்திக்கும் அப்போது.

अन्योऽन्तर आत्मा आनन्दमयः

என்கிறவாக்கியத்தையாவது,

ब्रह्मपुच्छं प्रतिष्ठा

என்கிறவாக்கியத்தையாவது கிரகிக்கவேண்டும். இரண்டாவது வாக்கியத்தில்தான் பிரம்ம சப்தமிருப்பதாலும், ஆநந்தமய வாக்கியத்தில் பிரம்ம சப்தமிராதபடியாலும், ब्रह्मपुच्छं प्रतिष्ठा என்கிறவாக்கியம்தான் பிரம்மத்தை நிச்சயிக்கிறதென்று சொல்வது யுக்தம். (80)

மேலும் ब्रह्मपुच्छं प्रतिष्ठा என்று சொல்லி உடனே

तदप्येष श्लोको भवति असन्नेव स भवति

असद्ब्रह्मेति वेद चेत् अस्ति ब्रह्मेति चेद्वेद

सन्तमेनं ततो विदुः

இந்த சுலோகத்தில் ஆநந்தமயத்தை இழுக்காமலே, பிரம்மம் இருக்கிறது என்று அறிவதால், சத்தாயும் இல்லையென்று அறிவதால் அசத்தாயும் ஆகிறான் என்று சொல்லியிருப்பதால் ब्रह्मपुच्छं प्रतिष्ठा என்கிற இடத்தில் பிரம்மமே பிரதானமானது என்று சொன்னதாக அறியத்தக்கது. ஆநந்தமய ஆத்மா இருக்கிறதென்றாவது இல்லை என்றாவது சங்கை உண்டாகமாட்டாது. ஏனெனின் பிரியமோதாதி விசேஷணங்களுடன் கூடின ஆநந்தமயன் சர்வலோக பிரசித்தம். (81)

பூ. ब्रह्मपुच्छं प्रतिष्ठा என்கிற இடத்தில் பிரதானமாயிருக்கும் பிரம்மத்தை ஆநந்தமயத்துக்கு புச்சமாக எப்படிச் சொல்லலாம்?

சி. இதில் தோஷமில்லை. புச்ச சப்தத்தால் புச்சம்போல் பிரதிஷ்டை அதாவது ஸ்தானம் அதாவது லௌகிக ஆநந்தங்களுக்கெல்லாம் பிரம்மாநந்தம் அதிஷ்டானம் என்று அறியவேண்டியதேதவிர அவயவம் என்று அறியக்கூடாது.

एतस्यैवानन्दस्यान्यानि भूतानिमात्रा-

मुपजीवन्ति (बृ IV-3-32)

(இந்த ஆநந்தத்தின் அம்சத்தால் இதர பிராணிகள் ஜீவிக்கிறார்கள்)

என்று சொல்லியிருப்பதால் பிரம்மாநந்தம் ஆதாரம் என்று தெரியவருகிறது.

ஸ [உன் பக்ஷத்தில் புச்ச சப்தத்துக்கு வால் என்னும் முக்கியார்த்தம் என்று நீயும் சொல்லமுடியாது. பிரதிஷ்டா என்கிற பதம் சேர்ந்திருப்பதால், ஆதாரம் என்று அர்த்தம்செய்வதே யுக்தம். பிரம்ம சப்தத்துக்கும் முக்கியார்த்தம் சித்திக்கும். உன்பக்ஷத்தில் பிரம்மசப்தத்துக்கு அவயவம் என்று சொல்லும்படிநேரிடும், உன் மதம் கிரகிக்கத்தக்கதல்ல]. (82)

மேலும் ஆநந்தமயன் பிரம்மமானால் பிரியம் முதலிய அவயவங்களால் பிரம்மம் சவிசேஷம் என்று அறியவேண்டும்.

यतोवाचोनिवर्तन्ते अप्राप्य मनसा सह आनन्दं

ब्रह्मणोविद्वान्न बिभेति कुतश्चन (तै II-9)

என்கிற கடைசிவாக்கியத்தில் பிரம்மானந்தம் வாக்குக்கும் மனதிற்கும் எட்டாதது என்று சொல்லியிருப்பதால், நிர்விசேஷ பிரம்மமே கூறப்பட்டிருக்கிறது. (83)

(ரா விருத்திகாரரும், சுருதியின் கருத்து பிரம்மம் என்பதற்கு अन्योन्तर முதலிய வாக்கியத்தை உதாகரித்திருக்க, இதை விட்டு அந்த பிரம்ம விஷயமாகவே ब्रह्मपुच्छ என்கிற வேறு வாக்கியத்தை உதாகரிப்பானேன் எனின்:

ஆநந்தமய வாக்கியம் சவிசேஷ பிரம்மத்தைக் கூறுகிறது. கடைசியான அநுவாகத்தில் நிர்விசேஷ பிரம்மம் கூறப்பட்டிருக்கிறது. ब्रह्मपुच्छ என்கிற வாக்கியமோ இப்படிப்பட்ட பிரம்மத்தைத்தான் கூறுகிறது. ஆகவே இந்த இரண்டாவது வாக்கியத்தைத் தான் உதாகரிக்கவேண்டியது.) (84)

மேலும் ஆநந்தமய சப்தத்துக்கு மிகுதியான ஆநந்தம் என்று அர்த்தம் செய்தால் ஸ்வற்பம் துக்கம் இருக்கிறதென்று ஏற்படுகிறது. பிரபஞ்சத்தில் மிகுதியிருக்கும் இடத்தில் அதின் விரோதியின் அற்பத்தையும் பார்த்திருக்கிறோம்.

(மா திருஷ்டாந்தம் அதிக பிராம்மணர்களிருக்கிற கிராமம் எது என்று கேட்டால் எந்தகிராமம் குறிப்பிடப்படுகிறதோ அதில் சூத்திரர்கள் ஸ்வற்பம் என்று தெரியவருகிறது.)

ஆகவே மிகுதி என்னும் அர்த்தம் சொல்லும் பக்ஷத்தில்

यत्र नान्यत् पश्यति नान्यच्छृणोति
नान्यद्विजानाति स भूमा (छा VII-24-1)

என்கிற சுருதியானது விருத்தப்படும். ஏனென்னின் இந்த சுருதியில் "எவ்விடத்தில் வேறு ஒன்றையும் பார்க்கிறதில்லையோ, கேட்கிறதில்லையோ, அறிகிறதில்லையோ அது भूमा அதாவது அநந்தம் வியாபகம்" என்று சொல்லியிருக்கிறது. இதனால் பூமா அதாவது பிரம்மத்தைத் தவிர அதற்கு வேறானது ஒன்றுமில்லை என்று தெரியவருகிறது. ஆகையால் மிகுதிக்காவது அற்பத்துக்காவது இடமில்லை. (சுருதிவிரோதம் வாராமையின்பொருட்டு மிகுதி என்னும் அர்த்தத்தைச் செய்யக்கூடாது.) (85)

மேலும், ஒவ்வொரு சரீரத்திலும் பிரியம் முதலியவைகள் பேதப்படுவதால் ஆநந்தமயரும் வெவ்வேறு. பிரம்மமோ ஒவ்வொரு சரீரத்திலும் பேதப்படுகிறதில்லை.

सत्यं ज्ञानं अनन्तं ब्रह्म

என்று முதலில் சொல்லியிருக்கிறது. (तै II-1)

एकोदेवः सर्वभूतेषुगूढः सर्वव्यापि सर्वभूतान्तरात्मा (श्वे VI-11)

என்கிற சுருதியும் சகலபூதங்களுக்குள்ளிருக்கும் பிரம்மம் ஒன்றே என்று கூறுகிறது. (86)

B. अभ्यास பத விஷயத்தில்:—

மேலும் ஆநந்தமயனுக்கு அப்பியாசம் சுருதியில் சொல்லப்படவில்லை. ஆநந்தம் என்கிறதுமட்டும் அடியிற்கண்ட சுருதிகளிலெல்லாம் காணப்படுகிறது.

(1) रसोवै सः रसं ह्येवायं लब्ध्वाऽऽनन्दी भवति (तै II 7)

(2) कोह्येवान्यात्कः प्राण्यात् यदेष आकाश आनन्दो न स्यात् (तै II-7)

(3) एषह्येवानन्दयति सैषानन्दस्य मीमांसा भवति (तै II-8)

(4) आनन्दं ब्रह्मणो विद्वान् बिभेति कुतश्चन (तै II-9)

(5) आनन्दो ब्रह्मेति व्यजानात् (तै III-6)

(இவைகளுக்கு அர்த்தம் முன் பக்கத்தில் பார்க்க.)

ஆநந்தமயன் பிரம்மம் என்று நிச்சயமானால் ஆநந்தபதத்தை பிரம்மபரமாக அறியமுடியும். அப்போது ஆநந்தபதத்தைமட்டும் உபயோகித்த இடங்களில் அப்பியாசம் சித்திக்கும். ரா (அப்பியாசம் சித்தித்தால் ஆநந்தமயன் பிரம்மமாவான். ஆகவே பரஸ்பராசிரயம் வரும்.) ஆனால் பிரிய சிரசுமுதலிய காரணங்களால் ஆநந்தமயன் பிரம்மமாகமாட்டான் என்று சொல்லியிருக்கிறோம். ஆகவே

विज्ञानं आनन्दं ब्रह्म (बृ III-9-28)

என்கிற இடத்தில் ஆநந்தசப்தத்தை பிரம்மத்தைக் கூறுவதாக சொல்லியிருப்பதால்

यदेष आकाश आनन्दो न स्यात् (तै II-7)

முதலிய வாக்கியத்திலும் ஆநந்தசப்தம் பிரம்ம விஷயமாக உபயோகிக்கப்பட்டிருக்கிறதாக அறியவேண்டியதே தவிர ஆநந்தமய அப்பியாசத்தை கூறுவதாக அறியக்கூடாது.

एतमानन्दमयमात्मानमुपसंक्रमति (तै II-8)

என்கிற சுருதியில் ஆநந்தமய சப்தம் உபயோகிக்கப்பட்டிருக்கிறதே எனின்

அது பிரம்மத்தைக் கூறமாட்டாது. ஏனெனின் அது விகாரங்களாயும் தள்ளவேண்டியவைகளாயுமிருக்கிற அன்னமயம் முதலிய அஞ்சாத்மாக்களுடன் சேர்த்து சொல்லப்பட்டிருக்கிறது.

அடையவேண்டிய ஆநந்தமயம் அன்னமயாதிகள்போல் பிரம்மமாகவிட்டால் ஞானிக்கு பிரம்மபிராப்தி பலம் சொல்லப்பட்டதாகவே ஆகமாட்டாது. (ஆனால் தைத்ரீயம் II-8-ல் இந்த பலம் சொல்லியிருக்கிறதே)

இது தோஷமன்று. ஆநந்தமயத்தை தள்ளவேண்டியது என்று (தை-II-8-ல்) சொன்னதினாலேயே ஞானி புச்சபிரதிஷ்டையாகிற பிரம்மத்தை அடைகிறான் என்று சொன்னதாக ஆகிறது. (ஏனெனின் அதையும் தள்ளும்படி சொல்லவில்லையே)

तदप्येष श्लोकोभवति यतोवाचोनिवर्तन्ते

என்கிற அடுத்தவாக்கியமும் பிரம்மபிராப்தி பலத்தைக் கூறுகிறது. (87)

C. சுருதிகளை ஆதாரமாய் எடுத்தவிஷயத்தில்

सोकामयत बहुस्यां प्रजायेय (तै II-6)

என்கிற சுருதியானது ஆநந்தமயனைப்பற்றி பிரஸ்தாபித்தவுடனே சமீபத்தில் ஏற்பட்டிருப்பதால் स: என்பதால் குறிப்பிடப்பட்டது ஆநந்தமயனாகிற பிரம்மம்.

இப்படி பூர்வபக்ஷிசொன்னது சரியன்று. இந்த சுருதியானது ब्रह्मपुच्छं प्रतिष्ठा என்கிற அதிசமீபத்திலிருக்கிற பிரம்மத்துடன் சம்பந்தப்படுகிறது. ஆகையால் அது ஆநந்தமயன் பிரம்மம் என்பதை போதிக்கமாட்டாது. (88)

रसोवै स: என்கிற முதலிய மேல்வாக்கியங்களும் பிரம்மத்தைக் கூறுவதால் ஆநந்தமயனை கூறமாட்டா. (89)

பூ. सोऽकामयत

என்கிற இடத்தில் அவன் என்கிற ஆண்பால் பிரயோகம் செய்யப்பட்டிருக்கிறதே பிரம்மத்தினிடத்தில் இது ஒவ்வாதே எனின்

சி. பாதகமில்லை.

तस्माद्वा एतस्मादात्मन आकाशःसंभूतः

என்கிற வாக்கியத்தில் ஆண்பாலான ஆத்மசப்தத்தால் பிரம்மம் கூறப்பட்டிருக்கிறது. (90)

பிருகுவல்லியில் 5-வது பிரகிணத்தில்

आनन्दोब्रह्मेति व्यजानात्

என்று சொல்லியிருப்பதுபோல் பிரம்மாநந்தவல்லியிலும் 5-வது பிரகிரணத்தில் ஆநந்தமயனைச்சொல்லியிருப்பதால் ஆநந்தமயன் பிரம்மம் என்று பூர்வபக்ஷி சொன்னவிஷயத்தில்

சி. அந்த மேற்கண்ட சுருதியில் மயட்என்பதை கூறுதபடியாலும் பிரிய சிரசுமுதலியவைகளைப் பற்றிச் சொல்லாததினாலும் ஆநந்தம் பிரம்மம் என்று சொல்லுவது யுக்தம்.

(மயட்டுக்கு விகாரம் அர்த்தமானதாலும் பிரியம் முதலிய அவயவம் சொல்லியிருப்பதாலும், சுருதியில் சொல்லிய ஆநந்தம் பிரம்மமல்லவென்று ஏற்படுகிறது. (91)

D. ஆகையால் பிரம்மத்துக்கு கொஞ்சமாவது விசேஷத்தைக் கற்பிக்காமல் அதற்கு பிரிய சிரசுமுதலியவைகளைச் சொல்லமுடியாது. வாக்குக்கும் மனதிற்கும் எட்டாதது என்று சொல்லியிருப்பதால் (II-9) சவிசேஷ பிரம்மத்தைச் சொல்லுவதில் சுருதிக்கு இஷ்டமில்லை. ஆகையால் அன்னமயாதிகளில்போல் ஆநந்தமயத்திலும் மயட்டுக்கு விகாரம் என்கிற அர்த்தத்தைத்தான் அறியவேண்டியது. பிருதி என்னும் அர்த்தத்தை ஒப்புக்கொள்ளக்கூடாது.

ரா (இவ்விதமாக வேதத்துக்கும் ஸூத்திரத்துக்கும் விரோதம் காணப்படும்போது, வேதம் முக்கியமானபடியாலும், ஸூத்திரம் கௌணமானதாலும், முக்கியத்தைவிட்டு கௌணத்தை எடுத்துக்கொள்ளுவது அந்நியாயமானதாலும், ஸூத்திரங்களுக்கு வேறுவிதமாய் அர்த்தம் செய்யவேண்டும்.) (92)

(3) ரா (முந்தின அதிகரணத்துக்கும் இந்த அதிகரணத்துக்கும் ஸங்கதி:— முந்தின அதிகரணத்தில் ஈக்ஷண கிரியைக்கு முக்கியார்த்தத்தைத்தான் எடுத்துக்கொள்ளவேண்டியதாக இருந்தபடியால், அந்த அர்த்தத்தை நிச்சயிக்க கௌணப்பிராயபாடம் உபயோகப்படவில்லை. இந்த அதிகரணத்தில் புச்ச சப்தத்துக்கு (1) அவயவம் (2) ஆதாரம் என்கிற இரண்டு

அர்த்தங்களும் முக்கியமாயிருப்பதால் எதை எடுத்துக்கொள்ளுகிறதென்கிற சந்தேகம் வரக்கூடும். அதை நிவிர்த்திக்கும்பொருட்டு அவ்வவ் பிராயபாடம் உபயோகப்படலாமே என்பதாய், பிரத்தியுதாஹரணசங்கதி ஏற்படுகிறது.)

நி (சங்கதி நியாய ரக்ஷாமணிப்படி):—

முந்தின அதிகரணத்தில் ஈக்ஷதி என்கிற சப்தத்துக்கு முக்கியார்த்தத்தை ஒப்புக்கொள்ளவேண்டியதாகையால் சத் சப்தத்தால் கூறப்பட்டது சேதனமான பிரம்மம் என்று சித்தாந்தம் செய்யப்பட்டது. இதுபோல், இவ்விடத்திலும் புச்ச சப்தத்துக்கு முக்கியார்த்தத்தை ஒப்புக்கொண்டு ஆநந்தமயனுக்கு பிரம்மம் அவயவமாக இருக்கட்டுமே என்பதாய், மூந்தின உதாஹரணத்தின் பேரில் இந்த அதிகரணம் ஏற்பட்டிருப்பதால், இரண்டு அதிகரணங்களுக்கும் திருஷ்டாந்த சங்கதி ஏற்படுகிறது.) (93)

ஆ இதர சங்கதிகள்:-ஸ்பஷ்டபிரம்மலிங்கங்களுள்ள தைத்திரீய வாக்கியங்கள் சுத்தப்பிரம்மத்தினிடத்தில் தாற்பரியப்படுகிறபடியால் சுருதி முதலிய சங்கதிகள் முன்போலவே ஏற்படுகின்றன. (94)

4. இந்த அதிகரணத்தின் விஷயவாக்கியம்:—

तस्य प्रियमेव शिरः मोदो दक्षिणः पक्षः

प्रमोद उत्तरः पक्षः आनन्द आत्मा

ब्रह्मपुच्छं प्रतिष्ठा (தை II-5)

5. (a) சந்தேகம்:-இவ்விடத்தில் பிரியம், மோதம் முதலிய கற்பிதமான சிரசு, பக்ஷம் முதலிய அவயவங்களுடன் கூடியிருப்பதாக உபாசிக்கப்படவேண்டுமென்று சொல்லப்படும் ஆநந்தமயனென்கிற ஜீவன் முக்கியமாய் பிரதிபாதிக்கப்படுகிறானா, பிரம்மம் அவனுடைய புச்சமாகிற அவயவமாக சொல்லப்படுகிறதா? அல்லது சுத்தப்பிரம்மமே புச்சசப்தத்தால் ஆநந்தமயனுக்கு ஆதாரமாகவும், அது பிரதானமாகவும் ஆநந்தமயன் பிரம்மத்தை அடைவதற்கு அன்னமயாதிகள்போல் உபாயம் என்றும் கூறப்படுகிறதா? இது வே சந்தேகம்.

(b) ஆ சந்தேகபீஜம் :— ब्रह्म-पुच्छं சப்தங்களால் ஏற்படுகிறது. (96)

6. இதிலடங்கிய சூத்திரங்கள் 8

அதாவது 12 முதல் 19 வரையில். ஆநந்தமய வாக்கியத்திலுள்ள ब्रह्मपुच्छं என்பதால் ஸ்வப்பிரதானமான பிரம்மத்தையே அறியவேண்டுமென்பதை முதல் 4 சூத்திரங்களாலும், வேறு ஒன்றையும் அறியக்கூடாதென்பதை இந்தின நான்கு சூத்திரங்களாலும் பாஷ்யகாரர் பிரதிபாதிக்கிறார். (97)

7. பூர்வபக்ஷம் :—ब्रह्मपुच्छं प्रतिष्ठा என்கிற இடத்தில் பிரம்மத்தை ஆநந்தமயனுக்கு அங்கமாக சொல்லப்படுகிறதா, அது ஸ்வபிரதானமாகச் சொல்லப்படுகிறதா, என்கிற சந்தேகம் ஜனித்தவிஷயத்தில் புச்ச சப்தத்தால் அவயவம் என்கிற முக்கிய அர்த்தத்தையே ஒப்புக்கொண்டு ஆநந்தமயனுக்கு பிரம்மம் அவயவம் என்றே சொல்லவேண்டும்.

நி-(பிரதிஷ்டா என்பதால் ஆதார அர்த்தம் சித்திப்பதால் புச்ச சப்தத்துக்கும் ஆதாரம் என்கிற அர்த்தம் செய்யவேண்டியதில்லை. (93)

8. சித்தாந்தம் :—

(1) இதற்கு சூத்திரகாரர்

## आनन्दमयोऽभ्यासात्

என்கிற சூத்திரத்தில் உத்தரம் கூறுகிறார். (98)

பத உரை.

मा :—आनन्दमयः ஆநந்தமய சப்தத்தால் ஆநந்தமய வாக்கியத்திலுள்ள புச்சப்பிரம்மத்தை அறியவேண்டியது. अभ्यासात् அடிக்கடி சொல்லியிருப்பதால். (99)

(2) பொழிப்புரை.

ஆநந்தமய சப்தம் ஆநந்தமயவாக்கியத்திலுள்ள புச்ச பிரம்மத்தையே முக்கியமாய் கூறுகிறது. ஏனெனின் பிரம்மம்தான் அடிக்கடி கூறப்பட்டிருக்கிறது 100

(3) பாஷியம்.

1. आनन्दमयः ஆநந்தமய ஆத்மா என்கிற இடத்தில் ब्रह्मपुच्छंप्रतिष्ठा என்பதிலுள்ள பிரம்மம் பிரதானமாகவே உபதேசிக்கப்பட்டிருக்கிறது. ஏனெனின் 101

2. अभ्यासात् असन्नेव स भवति என்கிற நிகமன (முடிவான) சுலோகத்தில் கேவலம் பிரம்மம்தான் அடிக்கடி கூறப்பட்டிருக்கிறது. (102)

(4) நி. பிரதிஷ்டா (சப்தத்தால் ஆதாரம் என்கிற அர்த்தம் கிடைத்துவிட்டபடியால் புச்ச சப்தத்துக்கு அந்த அர்த்தத்தை எடுத்துக்கொள்ள வேண்டியதில்லை

என்று பூர்வபக்ஷி சொன்னதற்கு உத்தரம் என்னவெனின்,

कान्तिमान् मुखचन्द्रः என்கிற இடத்தில், காந்தி சப்தத்தால் முகத்துக்கு காந்தி சித்தித்தாலும் சந்திரபதத்தை கௌணமாக சொல்லப்பட்டிருக்கிறது. இதுபோல், பிரதிஷ்டா பதத்தால் ஆதாரம் என்கிற அர்த்தம் சித்தித்தாலும், புச்ச சப்தமும் அந்த அர்த்தத்தை கௌணமாக்கூறலாம்). (103)

9 I-1-13-வது சூத்திரம்.

## विकारशब्दान्नेतिचेन्नप्राचुर्यात् १३

(1) முந்தின சூத்திரத்துக்கும் இதற்கும் சம்பந்தம்:- புச்சசப்தத்துக்குமுன் சொன்ன ஆதாரம் என்கிற அர்த்தம் ஆக்ஷேபிக்கப்படுகிறது. சமாதானமும் கூறப்படுகிறது.

அ.சை:—புச்ச சப்தத்துக்கு முக்கியமான அவயவம் என்கிற அர்த்தத்தைச் சொன்னால் தோஷம் என்ன என்கிற ஆக்ஷேபத்துக்கு இந்த சூத்திரத்தில் சமாதானம் சொல்லுகிறார். (104)

(2) பத உரை.

स:—विकारशब्दात् विक्रियते अनेन इति विकारः अवयवः

(புச்சமாகிற) அவயவ சப்தமிருப்பதால்

न इतिचेत् (பிரம்மம் பிரதானமாக ஒப்புக்கொள்ளப்படவில்லை என்று சொன்னால்,

न அது சரியன்று.

प्राचुर्यात् பிராயபாடமிருப்பதினால். (105)

(3) பொழிப்புரை.

புச்சமாகிற அவயவ சப்தமிருப்பதால், பிரம்மத்தைப் பிரதானமாக ஒப்புக்கொள்ளக்கூடாது. இப்படி ஒருவன் சொல்லுவது யுக்தமன்று. ஏனெனின், பிராயபாடம் ஏற்படுகிறது. (106)

(4) பாஷ்யம்.

(1) विकारशब्दात् விகாரசப்தத்தால் அவயவம் என்பதை அறியவேண்டும். புச்சம் என்கிற அவயவம் கூறப்பட்டிருப்பதால். (107)

(2) न इति चेत् பிரம்மம் பிரதானமாக சொல்லப்படவில்லை. என்று சொன்னால் (108)

(3) न இப்படி சொன்னதற்கு பரிஹாரம் சொல்லவேண்டியது என்னவெனின், இது தோஷமன்று. ஏனெனின் (109)

(4) प्राचुर्यात् பிராசுர்யத்தால் அவயவ சப்தத்தை உபயோகிக்கலாம். பிராசுர்யம் என்றால் அவயவங்களைக் கூறும் அநேக பதங்களையுடைய வாக்கியம். அன்னமயம் முதலியவைகளுக்கு சிரசு முதலிய புச்சம் வரையிலுள்ள அவயவங்களைச் சொன்னவிடத்தில், ஆநந்தமயனுக்கு சிரசு முதலிய அவயவங்களைச் சொல்லி, பிரம்மபுச்சம் பிரதிஷ்டா என்று சேர்த்திருக்கிறது. இதின் கருத்து அவ்வவயவத்தைக்கூறும் இன்னும் சில பதங்களைச் சேர்க்கவேண்டியதென்பதேதவிர, அவயவத்தைக் குறிப்பிடவேண்டும் என்பதல்ல. ஏனெனின் முந்தின சூத்திரத்தில் अभ्यासात् என்பதினால் முக்கிய பிரம்மத்தைத்தான் அறியவேண்டியது (அவயவத்தை அறியக்கூடாது) என்று முன்சொல்லப்பட்டிருக்கிறது.

र (அவயவக்கிரமத்தின் ஞாபகமே பிராயபத்தி. பிரகிருத பிரம்மத்தை அறியவேண்டியதற்காக கோசங்கள் பக்ஷிகள் போல் கற்பிக்கப்பட்டன. கோசங்களே பக்ஷிகளென்று. ஆநந்தமயனுக்கும் சில அவயவங்களை குறிப்பிட்டபிறகு, ஏதாவது ஒன்றை புச்சமாக சொல்லவேண்டியதாக நேரிட, இந்த பிரம்மத்தையே புச்சமாகச் சொன்னார். ஏனெனின் பிரம்மம் தான் ஆநந்தமயனுக்கு ஆதாரமாக இருக்கிறது. ஆகையால் அதையே அவசியம் சொல்லவேண்டுமென்கிற கருத்துடன் பிரம்மபுச்சம் என்று சொல்லப்பட்டது). (110)

भा:—(5) ब्रह्माधिकरणम् என்று சொல்லவேண்டியதாக இருக்க ब्रह्मपुच्छं என்று சுருதி சொன்னதற்கு என்ன காரணமெனின் முன் அவயவங்கள் பிரயோகிக்கப்பட்டன. அவைகள் ஞாபகத்திலிருந்தன. புச்சம் என்பதினாலும் அதிகரணம் என்றுலக்ஷணையால் அறியலாம். ஆகையால் இந்த பதம் பிரயோகிக்கப்பட்டது. (111)

I-1-14-வது சூத்திரம்.

## 10 तद्धेतुव्यपदेशात्

आ அ.சை:—புச்ச பதத்துக்கு அவயவார்த்தத்தைக் கிரகிக்கக்கூடாது. ஆதாரம் என்கிற அர்த்தத்தைக் கிரகிக்கவேண்டியதற்கு வேறு காரணத்தைக் கூறுகிறார். (112)

2. रा:—பத உரை.

च மேலும்.

रा :—तद्धेतुव्यपदेशात्

பிரம்மம் ஆநந்தமயாதிவிகாரங்களுக்கு காரணமாக சொல்லியிருப்பதால்; (113)

(3) பொழிப்புரை.

மேலும், பிரம்மம் சகலத்துக்கும் காரணம் என்று சொல்லியிருப்பதால் பிரம்மத்தையே முக்கியமாக கிரகிக்கவேண்டியது. (114)

(4) பாஷ்யம்.

इदं सर्वमसृजत यदिदंकिंच (தை-II-6) என்கிற சுருதியில் பிரம்மமானது சகலவிகார சமூகத்துக்கும் (रा பிரியம் முதலியவைகளுடன்கூடின) ஆநந்தமயனுகிற ஜீவனுக்கும் காரணமாக சொல்லப்பட்டிருக்கிறது. காரணமான சத்ரூப்பிரம்மம் அதின்விகாரமான ஆநந்தமயனுக்கு அவயவமாகமாட்டாது. (रा காரியத்தின் அங்கமாக பிரம்மத்தைச் சொல்லுவது அயுக்தம் என்பது கருத்து). (115)

## 11. I-1-15-வது சூத்திரம்.

## (1) मान्त्रवर्णिकमेव च गीयते

रा அ-கை:—புச்சவாக்கியத்தில் பிரம்மம் பிரதானமாக சொல்லப்பட்டது என்பதை இந்த சூத்திரமும் கூறுகிறது. (116)

(2) பத உரை.

मान्त्रवर्णिकम् एव—

மந்திரபாகத்தில் சொன்னதே

गीयते (பிராம்மணபாகத்திலும்) சொல்லப்பட்டிருக்கிறது. (117)

(3) பொழிப்புரை.

மந்திரபாகத்தில் சொன்னதை பிராம்மணபாகத்திலும் சொல்லியிருப்பதால் புச்சவாக்கியத்தில் பிரம்மத்தையே முக்கியமாய் அறியவேண்டியது.

रा :—ब्रह्मविदाप्नोति परं என்பதாய் எதன் ஞானத்தால்முக்தி கூறப்பட்டதோ, எந்த பிரம்மம் सत्यं ज्ञानं अनन्तं ब्रह्म என்கிறமந்திரபாகத்தில் கூறப்பட்டிருக்கிறதோ அது புச்சவாக்கியமாகிற பிராம்மண பாகத்தில் பிரம்மபதத்தால் கூறப்படுகிறது. ஆநந்தமயவாக்கியத்தில் கூறப்படவில்லை.

आ :—ब्रह्मविदाप्नोति परं என்பதினுல் பிரம்மஞானியானவன் அடைகிறான் என்று சொல்லியிருப்பதால் ஜீவபிரம்ம ஐக்கியம் ஆரம்பத்தில் தெரியவருகிறது.

स यश्चायं पुरुषे यश्चासावादित्ये स एकः

என்கிற II-8-வது அனுவாக்கியத்தால் உபசம்காரத்திலும் (முடிவிலும்) ஐக்கியம் தெரியவருகிறது. மத்தியிலும் விசிஷ்டத்தின்மூலமாக ஸ்வரூப ஐக்கியத்தில் தாற்பரியமிருப்பது யுக்தம்.

सत्यं முதலிய மந்திரவாக்கியத்திலுள்ள பிரம்மமே ஆநந்தமய சப்தத்தால் குறிப்பிடப்பட்ட ஜீவனுடைய ஸ்வரூபம் என்று புச்சவாக்கியத்தில் तत्त्वमसि என்பதுபோல் சொல்லப்படுகிறது. (118)

नि மந்திரமும் பிராம்மண பாகமும் ஒரு அர்த்தத்தைத்தான் சொல்லவேண்டும்.)

## 12. I-1-16-வது சூத்திரம்.

## नेतरोऽनुपपत्तेः

रा அ-கை:—புச்ச வாக்கியத்தில் ஆநந்தமயனே பிரதானமாக ஏன் பிரதிபாதிக்கக்கூடாது எனின் இதில் உத்தரம் கூறுகிறார். (119)

(2) பதஉரை.

रा:—इतरः ஆநந்தமயனை ஜீவன்

न பிரதிபாதிக்கப்படவில்லை.

अनुपपत्तेः உபபத்தியில்லாமையால் (120)

(3) பொழிப்புரை.

புச்சவாக்கியத்தில் ஆனந்தமயன் பிரதானமாக பிரதிபாதிக்கப்படவில்லை. ஏனெனின் பொருத்தமில்லை.

रा சகலத்தையும் சிருஷ்டிக்கும் தன்மை ஜீவனுக்கு ஏற்படாதபடியால் புச்சவாக்கியத்தில் ஆநந்தமயனை ஜீவன் பிரதானமாக கூறப்படவில்லை. (121)

## 13. I-1-17-வது சூத்திரம்.

## (1) भेदव्यपदेशाच्च

रा அ-கை:—இந்த சூத்திரமும் ஆநந்தமயன் கூறப்படவில்லை என்பதையே கூறுகிறது. (122)

(2) பதஉரை.

முன்போலவே. (123)

(3) பொழிப்புரை.

ரா இந்த ஆநந்தமயன் பிரம்மாசத்தை அடைந்து ஆநந்தமுண்டயவனாக ஆகிறான் என்று சொல்லியிருக்கிறது. அடைகிறவனுக்கும் அடையப்பட்டதற்கும் பேதம் சொல்லியிருப்பதால், அடைகிறவனான ஆநந்தமயன் புச்சவாக்கியத்தில் பிரதானமாக கூறப்படவில்லை. (124)

### (14) I-1-18-வது ஸூத்திரம்.

## (1) कामाच्च नानुमानापेक्षा

ஆ அ-கை: பிருகுவல்லியில் आनन्दो ब्रह्म என்கிற இடத்தில் ஆநந்தம் பிரம்மம் என்று சொல்லியிருப்பதால் ஐந்தாவது பரியாயத்திலிருக்கிற ஆநந்தமயமும் பிரம்மம் என்று அனுமானிப்போமே என்னின் உத்தரம் இதில் கூறுகிறார். (125)

(2) பதஉரை.

कामात् காமத்தினால் அதாவது ஆநந்தத்தினால்

अनुमानापेक्षा அனுமானத்தின் அபேக்ஷை

न இல்லை. (126)

(3) ரா பொழிப்புரை.

कामात् काम्यते इति कामः

இச்சிக்கத்தக்கது அதாவது ஆநந்தம். பிருகுவல்லியில் 5-வது பரியாயத்தில் பிரம்மம் ஆநந்தம் என்று சொல்லியிருக்கிறது. இந்த திருஷ்டாந்தத்தின் பேரில், பிரம்மவல்லியில் 5-வது பரியாயத்தில் கூறப்பட்டிருக்கிற ஆநந்தமயனும் (ஆநந்தத்தை உடையவனானதால்) பிரம்மமாக என் பிரதிபாதிக்கக்கூடாதென்னின், (ரா)மயட் என்பதற்கு விகாரமென்று அர்த்தமானதால், விகாரமுள்ளது பிரம்மமாக கூறப்பட மாட்டாது) (நி மேலும் ஆநந்தத்திலிருந்து உண்டாகி ஆநந்தத்தில் சகலமும் லயமடைவதாகச் சொன்ன கடைசியான பாகத்தில் பிரம்மம் தான் கூறப்பட்டிருக்கிறது. ஆநந்தமயன் பிரம்மமாக கூறியிருக்கும் பக்ஷத்தில் ஆநந்தமயத்தில் சகலமும் லயமடைகிறதாக சொல்லியிருக்கலாம். அப்படி சொல்லாததினால் ஆநந்தமயனை பிரம்மமாக அறியக்கூடாது.) (127)

### 15. I-1-19-வது ஸூத்திரம்.

## (1) अस्मिन्नस्य च तद्योगं शास्ति

ரா அ-கை:— இதனாலும் ஆநந்தமயன் பிரம்மமாக கூறப்படவில்லை என்பதை கூறுகிறார். (128)

(2) பத உரை.

अस्मिन् இந்த புச்ச வாக்கியத்திற் சொன்ன பிரம்மத்தை

अस्य அறிந்தவனுக்கு

तद्योगं பிரம்மத்தின் சம்பந்தத்தை

शास्ति வேதம் சொல்லுகிறது.

(3) பொழிப்புரை.

புச்சவாக்கியத்திலுள்ள பிரம்மத்தை அறிந்தவனுக்கு பிரம்ம சம்பந்தம் அதாவது ஐக்கியமுண்டாகிறதென்று வேதம் சொல்லுகிறது. (129)

ரா முந்தின ஸூத்திரத்தில் பேதம் சொல்லியிருப்பதால் சகுண பிரம்மம்தான் அறியத்தக்கதென்று ஒரு சந்தேகம் ஜனிக்கக்கூடும். அதை நிவர்த்திக்கும் பொருட்டு, புச்சவாக்கியத்திற் சொல்லிய ஹிருதய குஹையிலிருக்கிற பிரம்மமே நான் என்று அறிந்த ஆநந்தமயன் यदाहि முதலிய வாக்கியத்தில் (தை ) பிரம்மபாவத்தை அடைகிறான் என்று சொல்லியிருக்கிறது. ஆகவே நிர்குண பிரம்ம ஐக்கிய ஞானமுண்டாகும் பொருட்டு, ஞாதா, ஞேயம் என்கிற பேதத்தை சுருதி அனுவாதம் செய்கிறது என்பது கருத்து.

முடிவு:— இவ்விதமாக ஆநந்தமயன் பிரதிபாதிக்கப்படாமையால் பிரம்மமே பிரதிபாதிக்கப்படுகிறது. தைத்திரீய வாக்கியங்கள் நிர்விசேஷமான பிரமத்தில் தாத்பரியப்படுகின்றன என்பது சித்தம். (130)

16. ரா பூர்வபக்ஷபலன்:— ஜீவனை ஆநந்தமயன் என்று உபாசித்தல் ஸகுணோபாஸ்தி.

சித்தாந்தபலன்:— நிர்குண பிரம்மஞானம். (131

6-வது அதிகரணம் 2-வது வர்ணகம்
முற்றிற்று.

---

VII. வியாசாதிகரணமாலைப்படி அத்வைதச் சுருக்கம்.

A. முதலாவது வர்ணகம்.

(1) संसारी ब्रह्म वाऽऽनन्दमयः, संसार्ययं भवेत् ।
विकारार्थमयट्शब्दात्प्रियाद्यवयवोक्तितः ॥
अभ्यासोपक्रमादिभ्यो ब्रह्मानन्दमयो भवेत् ।
प्राचुर्यार्थो मयट्शब्दः प्रियाद्याः स्युरुपाधिगाः ॥

2. சந்தேகம்:—

தைத்திரீயத்தில் தேகம், பிராணன், மனது, புத்தி, ஆநந்தம், இந்தரூபங்களாயிருக்கிற அன்னமயம், பிராணமயம், மநோமயம், விஞ்ஞானமயம், ஆநந்தமயம் என்று பெயருள்ள ஐந்து பதார்த்தங்கள் கிரமமாக ஒன்றுக்கு ஒன்று அந்தரம் என்பதாய் கூறப்பட்டிருக்கின்றன. இவ்விடத்தில் சகலத்துக்கும் உள்ளேயிருக்கிற ஆநந்தமயன் சம்சாரியா? பரமாத்மாவா? என்பது சந்தேகம். (133)

3. பூர்வபக்ஷம்:—

ஆநந்தமயன் சம்சாரியே. ஏனெனின்

(1) आनन्दस्य विकारः आनन्दमयः

அதாவது ஆநந்தத்தின் விகாரம் ஆநந்தமயன் என்பதாய் பதம் ஏற்படுகிறது. இது சம்சாரிக்கே பொருந்தும், விகாரமடைதல் பரமாத்மாவினிடத்தில் பொருந்தமாட்டாது.

(2) மேலும்,

तस्य प्रियमेवाशिरः, मोदोदक्षिणः पक्षः

प्रमोदः उत्तरः पक्षः, आनन्द आत्मा

ब्रह्मपुच्छं प्रतिष्ठा

என்பதாய் ஆநந்தமயனுக்கு ஐந்து அவயவங்கள் கூறப்பட்டிருக்கின்றன. அபேக்ஷித்த விஷயத்தைப் பார்ப்பதினாலுண்டாகும் சுகம் பிரியம். அதை அடைவதாலுண்டாவது மோதம். அதை அநுபவிப்பதாலுண்டாவது பிரமோதம். சுஷுப்தி முதலியவைகளில் தோன்றும் அஞ்ஞான சகிதமான சுகசாமான்னியம் ஆநந்தம். நிருபாதிகமான சுகம் பிரம்மம். பிரியம்முதலியவைகளை ஐந்து அவயவங்களாக கற்பித்து சிரமாய் அறியவேண்டியதை உத்தேசித்துதான் பக்ஷியாகக் கற்பிக்கப்பட்ட ஆநந்தமயத்துக்கு சிரசும் இரண்டு பக்ஷங்களும், ஆத்ம சப்தத்தால் கூறப்பட்ட மத்தியமபாகமும், புச்சசப்தத்தால் பிரதிஷ்டை (பாதங்களும்) யும் ஆக ஐந்து அவயவங்கள் கூறப்பட்டிருக்கின்றன. அவயவமற்ற பரமாத்மாவுக்கு அவயவங்களைக் கற்பிப்பது யுக்தமன்று.

ஆகையால் ஆநந்தமயன் சம்சாரியே. (134)

4. சித்தாந்தம்:—

ஆநந்தமயம் பரமாத்மாவே ஏனெனின்,

(1) अभ्यासात् என்று சொல்லியிருக்கிறது.

(a) सैषाऽऽनन्दस्य मीमांसा भवति

(b) एतमानन्दमयमात्मानमुपसंक्रामति

முதலிய வாக்கியங்களால் ஆநந்தமயன் அடிக்கடி கூறப்பட்டிருக்கிறான். அப்பியாசம் என்பது தாற்பரியத்தை அறியவேண்டியவிஷயத்தில் ஒரு லிங்கம். தாற்பரியமோ வேதாந்தங்களுக்கு பிரம்மத்திலேயே என்று முன்னமேயே சொல்லியிருக்கிறோம்.

(2) மேலும்

(a) सत्यं ज्ञानमनन्तं ब्रह्म

என்கிற உபக்கிரமவாக்கியத்தாலும்,

(b) इदं सर्वमसृजत

என்பதால் சகலத்துக்கும் சிருஷ்டா என்கிற காரணத்தாலும்,

ஆநந்தமயன் பிரம்மமே.

(3) பிரம்மத்தினிடத்தில் மயட் சப்தம் பொருந்தாமலிருக்கவில்லை. ஏனெனின் அதற்கு பிராசுர்யம் என்கிற அர்த்தமுண்டு.

(4) பிரியம் முதலிய அவயவங்களும் விஷய தர்சனம் முதலிய உபாதிகளால் ஏற்படுகின்றன.

ஆகையால் ஆநந்தமயன் பரமாத்மாவே.

இது ஏகதேசியின் மதம். (135)

B. இரண்டாவதுவர்ணகம்.

1. இனி ஸ்வமதத்தை அநுசரித்து அதிகரணத்தைச் சொல்லுகிறார்.

अन्याङ्गं स्वप्रधानं वा ब्रह्मपुच्छमिति श्रुतम् ।
स्यादानन्दमयस्याङ्गं पुच्छेऽङ्गत्वप्रसिद्धितः ॥
लाङ्गूलासंभवादत्र पुच्छेनाधारलक्षणा ।
आनन्दमय जीवोऽस्मिन्नाश्रितोऽतः प्रधानता ॥

2. சந்தேகம்:—

ब्रह्मपुच्छं प्रतिष्ठा என்பதில் யாதொரு பிரம்மம் கூறப்பட்டிருக்கிறதோ அது

(1) ஆநந்தமயத்துக்கு அங்கமாகக் கூறப்பட்டிருக்கிறதா? அல்லது

(2) ஸ்வயம் பிரதானமென்று பிரதிபாதிக்கப்பட்டிருக்கிறதா?

என்பது சந்தேகம். (137)

3. பூர்வபக்ஷம்:—ஆநந்தமயத்துக்கு அவயவமாகத்தான் பிரம்மம் கூறப்பட்டிருக்கிறது. ஏனெனின் புச்ச சப்தத்துக்கு அவயவார்த்தமே

உலகப்பிரசித்தம். (138)

4. சித்தாந்தம்:—

(1) புச்சசப்தம் அவயவத்தைக் கூறமாட்டாது. பின்னேயோவெனின் வால் என்பதைதான்கூறும். ஆநந்தமயத்துக்கு வால் ஏற்படமாட்டாது. பசுமுதலிய அன்னமயத்துக்கு வால் பொருந்தும், ஆநந்தமயத்துக்கு அவயவமாக பொருந்தமாட்டாது. ஆகவே புச்ச சப்தத்திற்கு முக்கியார்த்தம் சித்திக்கமாட்டாதாகையால் ஆதாரம் என்ற அர்த்தத்தை ஒப்புக்கொள்ளவேண்டும்.

பிரம்மம் ஆநந்தமயனை ஜீவனுக்கு ஆதாரம். ஏனெனின் ஜீவகற்பனைக்கு அதிஷ்டானமாயிருக்கிறது.

(2) பிரசுரார்த்தத்தை ஒப்புக்கொண்டாலும் ஆநந்தமயன் பிரம்மமாகமாட்டான். ஏனெனின் அற்பதுக்கம் இருக்கிறதென்று தோன்றுகிறது.

ஆகையால் ஜீவாதாரமான பிர்ம்மமே பிரதானமாகப் பிரதிபாதிக்கப்பட்டிருக்கிறது. இதற்கு

(1) असन्नेव स भवति असद्ब्रह्मेति वेदचेत् ।
अस्ति ब्रह्मेति चेद्वेद सन्तमेनं ततो विदुः ॥

முதலியவைகளில் பிரம்மவிஷயமான அப்பியாசமும்.

(2) ब्रह्मविदाप्नोति परम्

என்கிற பிரம்மபரமான உபக்கிரமவாக்கியமும், அநுகூலங்களாயிருக்கின்றன. (139)

I-1-6-வது அதிகரணத்துக்கு
விசிஷ்டாத்துவைதமதப்படிச் சுருக்கம்.

I. இதின் கருத்து:—ஆநந்தமயன் பிரம்மம் என்பதாம். (140)

II. இதிலடங்கிய சூத்திரங்கள்—8. (12-19) (41)

III. இதின் விஷய வாக்கியம்:—தைத்திரீயத்திற் [II-(1-5)] சுருதிகள் (ஆத்மவதம் யாக்க). (142)

IV. சங்கதி:—முந்தின அதிகரணத்தில் ஈக்ஷணகர்த்தா பிரம்மம், பிரதானமன்று என்று சொல்லப்பட்டது. ஈக்ஷணத்துக்கு முக்கியார்த்தம் ஏற்படுமானால் அதின் கர்த்தா ஜீவன்தான் இருக்கட்டுமே என்று பூர்வபக்ஷி ஆக்ஷேபிக்கிறபடி ஆக்ஷேபசங்கதி ஏற்படுகிறது. (143)

V. சந்தேகம்:—ஆநந்தமயன்

(1) ஜீவனா? அல்லது

(2) பரமாத்மாவா?

என்பது சந்தேகம். (144)

VI. பூர்வபக்ஷம்:—ஆநந்தமயன் ஜீவன். ஏனெனின் ஆநந்தமயனுக்கு சரீரபந்தம் சொல்லியிருக்கிறது. ஜீவனுக்கு சரீரபந்தமிருக்கிறது. ஜீவன் சங்கற்பம் செய்யமுடியும். ஆகையால் ஈக்ஷணகர்த்தா ஆநந்தமயன் என்கிற ஜீவன். (145)

VII. சித்தாந்தம்:—

आनन्दमयोऽभ्यासात् 12

आनन्दमयः ஆநந்தமயன் ஜீவனைவிட வேறான பரமாத்மாவே.

अभ्यासात्

सैषाऽऽनन्दस्य मीमांसा भवति

என்கிற தைத்திரீய II-8-வது அநுவாகம்முதல்

यतो वाचो निवर्तन्ते अप्राप्य मनसा सह

என்கிற 9-வது அநுவாகம் வரையிலுள்ள வாக்கியங்களால் ஒரு ஆநந்தத்தைவிட ஒரு ஆநந்தம் 100 மடங்கு அதிகம் என்பதாய் பலவித ஆநந்தங்களை அடிக்கடி சொல்லி கடைசியில் நிரதிசயாநந்தம் சொல்லியிருக்கிறது. துக்கத்தை அநுபவிக்கிற ஜீவனை இப்படிப்பட்ட நிரதிசயாநந்தம் ஆசிரயிக்கமாட்டாது. ஆகையால் அது பிரம்மத்தைத்தான் ஆசிரயிக்கவேண்டும். ஆகையால் ஆநந்தமயன் பரமாத்மாவே. (146)

I-1-6ல் 2-(13)-வது சூத்திரம்.

विकारशब्दान्नेति चेन्न प्राचुर्यात्

அ-கை:—முன் ஆநந்தமயன் என்பதால் பரமாத்மாவை அறியவேண்டியது என்று சொன்னதை இப்போது ஆக்ஷேபித்துச் சமாதானம் சொல்லப்படுகிறது. (147)

विकारशब्दवत् सवाऽयंपुरुषोऽन्नरसमयः

என்கிற இடத்தில் மயட் என்பதற்கு விகாரம் என்ற அர்த்தமாகிறதுபோல் ஆநந்தமயத்திலுள்ள மயட்டுக்கும் விகார அர்த்தந்தான் தோன்றுகிறது. ஆகையால்,

न ஆநந்தமயன் அவிகாரியான பரமாத்மாவல்ல.

इति चेत् என்று சொன்னால்

न அது சரியன்று. ஏனெனின் அர்த்தவிரோதம்வரும். எப்படியெனின்,

प्राचुर्यात् மயட் என்பதற்கு பிராசுர்யம் அதாவது மிகுதி என்று அர்த்தம்.

तस्मात् वा एतस्मात् आत्मनः आकाशस्संभूतः

என்பதினால் விகாரமற்ற ஆத்மா பிரகிருதன். விகார அர்த்தம் பிராணமயத்திலேயே முடிந்துபோய்விட்டது. ஆகையால் மேல்வரும் மயட்டுக்கு பிராசுர்யம் என்றுதான் அர்த்தம் செய்யவேண்டியது.

ஆகவே ஆநந்தமயன் ஜீவனாகமாட்டான். (148)

I-1-6ல் 3. (14)

அ-கை:—இதனாலேயும் ஜீவனைவிட வேறானவன் ஆநந்தமயன் என்று ஏற்படுகிறது

एषह्येव आनन्दयाति என்கிற சுருதியானது இந்த ஆநந்தமயனே ஜீவனுடைய ஆநந்தத்துக்கு ஹேதுவாகச்சொல்லுகிறதினால் ஆநந்தமயன் ஜீவனன்று. (149)

I-1-6ல் 4 (15).

அ-கை:—முன்போலவே

सत्यं ज्ञानं अनन्तं ब्रह्म என்கிற மந்திர வர்ணத்தால் கூறப்பட்ட பிரம்மமே ஆநந்தமயன் என்று இந்தவாக்கியத்தில் சொல்லப்படுகிறது. ஆகையால் ஜீவனைவிட ஆநந்தமயன்வேறு. (150)

I-1-6ல் 5 (16).

அ-கை:—மந்திர வர்ணத்தில் சொல்லப்பட்டவன் சுத்தஜீவனாயிருக்கட்டுமே என்கிற ஆக்ஷேபத்துக்கு சமாதானம் கூறப்படுகிறது.

इतरः பரமாத்மாவைவிட வேறான ஜீவன்

न மந்திரவர்ணத்தில் சொல்லப்பட்டவனன்று

अनुपपत्तेः विपश्चिताब्रह्म

என்று மேல் சொல்லியிருக்கிறது. விப: சித்தம் என்றால் விவிதவிஷயங்களை பார்த்தல் அறிதல். இது ஜீவனுக்குப் பொருந்தாது.

ஆகையால் மந்திரவர்ணத்தில் சொல்லப்பட்டவன் பரமாத்மாவே தவிர ஜீவனல்ல. (151)

I-1-6-ல் 6 (17)

அ-கை:—அடியில்வரும் காரணத்தாலும் ஜீவனைவிட வேறானவன் ஆநந்தமயன்

तस्माद्वा एतस्माद्विज्ञानमयादन्योऽन्तर आत्मा आनन्दमयः

என்கிற வாக்கியமானது விஞ்ஞானமயனான ஜீவனைவிட ஆநந்தமயன் வேறு என்று சொல்லுவதால் ஆநந்தமயன் பரமாத்மாவே. (152)

I-1-6-ல் 7 (18)

அ-கை:—அடியில்வரும் காரணத்தாலும் ஆநந்தமயன் பரமாத்மாவே.

कामात् सोकामयत என்று ஆரம்பித்து इदंसर्वं असृजत என்று முடியும் கிரந்தத்தால் இச்சையாலேயே ஜகத்தை சிருஷ்டித்ததாகச் சொல்லியிருப்பதால்

नानुमानापेक्षा அந்த ஆநந்தமயன் ஜகத்தை சிருஷ்டிக்கிற விஷயத்தில் அனுமானத்தால் அறியக்கூடிய பிரகிருதியை அபேக்ஷிக்கிறதில்லை. ஜீவனோ எதை சிருஷ்டித்தாலும் பிரகிருதியின் சாதகத்தை அபேக்ஷிக்கிறான். ஆகையால் ஆநந்தமயன் ஜீவனல்ல. (153)

I-1-6-ல் 8 (19)

அ-கை:—அடியில்வரும் காரணத்தினாலேயும் ஜீவனைவிட வேறானவன் ஆநந்தமயன்

अस्मिन् இந்த ஆநந்தமயனிடத்தில்

अस्य ஜீவனுக்கு

तद्योगं ஆநந்தயோகத்தைச்

शास्ति சொல்லுகிறது.

रसोवै सः रसंह्येवायं लब्ध्वा आनन्दी भवति

என்கிற சுருதியானது ரஸ சப்தத்தால் கூறப்பட்ட ஆநந்தத்தை அடைந்து இந்த ஜீவன் ஆநந்திக்கிறான் என்று சொல்லுகிறது. (154)

த்வைதப்படி சுருக்கம்.

I-1-12-வது சூத்திரம்.

1. கருத்து:— ஆநந்தமயம் பிரம்மம் என்பது. (155)

2. இதின் விஷயம்:— தைத்திரீயத்தில் சொல்லிய அன்னமய, பிராணமய முதலிய குணங்களைச் சொல்லும் சப்தங்கள், அன்னரஸமயமுதலிய குணியைச்சொல்லும் சப்தங்கள். (156)

3. சந்தேகம்:— இந்த சப்தங்கள் விஷ்ணுவை விட வேறான சதுர்முக பிரம்மாதிகளைக் கூறுகின்றனவா அல்லது விஷ்ணுவைக் கூறுகின்றனவா. (157)

4. சங்கதி:— முந்தின அதிகரணத்தில் ஆத்ம சப்த பிரயோகத்தால் கௌணாத்மா (ஜீவன்) நிராகரிக்கப்படுகிறான் என்று சொல்லப்பட்டது.

இது சரியன்று. ஏனெனின் தைத்திரீயத்தில் एवं आनन्दमयमात्मानमुपसंक्रामति முதலிய இடங்களில் ஆத்மசப்தம் கௌணாத்மா விஷயத்திலும் உபயோகிக்கப்பட்டிருக்கிறது. ஆகையால் ஆக்ஷேபசங்கதி ஏற்படுகிறது. (158)

5. பூர்வபக்ஷம்:— அன்னமயாதி சப்தங்களிலிருக்கிற மயட் என்பதற்கு விகாரார்த்தம். பிரம்மம் நிர்விகாரம். ஆகையால் அன்னமயாதி சப்தங்கள் சதுர்முகர் முதலான கௌணாத்மாவைத்தான் கூறும், பிரம்மத்தை (விஷ்ணுவை) கூறமாட்டா. (159)

6. சித்தாந்தம்:— இந்தச்சூத்திரம்.

அர்த்தம்.

आनन्दमयः ஆநந்தமயம் முதலிய சப்தங்களால் கூறப்படுவது பிரம்மமே, சதுர்முகாதிகளன்று ஏனெனின்,

अभ्यासात् ஒவ்வொரு பிரகரணத்திலும் ஆநந்தமயாதிகளிடத்தில் பிரம்ம சப்தம் பிரயோகிக்கப்பட்டிருக்கிறது. (ஆகையால் கௌணாத்மா அன்னமயாதிகளன்று.) (160)

13-வது சூத்திரம்.

சொன்னதை ஆக்ஷேபித்து சமாதானம் சொல்லுகிறார்.

ஆநந்தமயத்திலிருக்கிற மயட் என்பதற்கு விகார அர்த்தத்தை எடுத்துக்கொண்டால், பிரம்மம் நிர்விகாரமாயிருப்பதால்

न ஆநந்தமயம் பிரம்மம் ஆகமாட்டாது.

इति चेत् இப்படிச்சொன்னால்

न அது சரியன்று. ஏனெனின்

प्राचुर्यात्

மயட்சப்தத்துக்குப்பூர்ணம் என்று அர்த்தம் (161)

14-வது சூத்திரம்.

அ-கை:— மயட் என்பதற்கு பூர்ணம் அர்த்தம் என்பதற்கு இன்னும் ஒரு காரணம் சொல்லுகிறார்.

च மேலும்

तद्धेतुव्यपदेशात् कोह्येवान्यात्

என்கிற சுருதியில் ஆநந்தமயன் லோகத்தைப்பிரவிர்த்திக்கச் செய்கிறவன் என்று சொல்லியிருக்கிறது. இப்படி செய்வது விஷ்ணுவுக்குத்தான் பொருந்தும். ஆகையால் ஆநந்தமயன் விஷ்ணுவன்று சொல்லுவதில் முன் சொன்னது காரணமாயிருப்பதால் ஆநந்தமயன் விஷ்ணுவே. (ஆநந்தமயன் விஷ்ணுவாயிராத பக்ஷத்தில் அவன் சேஷ்டைக்குக் கர்த்தாவாகமாட்டான்.) (162)

15-வது சூத்திரம்.

அ-கை:— அன்னமயாதி ஐந்தும் பிரம்மம் என்றுசொல்லுகிறார்.

च மேலும்

मान्त्रवर्णिकम् एव சத்தியம் ஞானம் அநந்தம்பிரம்மம் மந்திரத்திலுள்ள பிரம்மமே.

गीयते ஆநந்தமயாதி சப்தங்களால் வர்ணிக்கப்படுகிறது.

ஆகையால் அன்னமயாதி சப்தங்கள் பிரம்மத்தையே கூறுகின்றன. (163)

16-வது சூத்திரம்.

அ-கை:— அன்னமயாதிகள் ஏன் பிரம்மாதிகளாகமாட்டா வென்னின் சொல்லுகிறார்.

इतरः பிரம்மதேவர், ருத்திரன் முதலானவர்கள்,

न ஆநந்தமயாதிகளன்று. ஏனெனின்

அநுபத்தே: பிரம்மவிதாப்னோதி பரம் அதாவது பிரம்மத்தை அறிந்தவன் மோக்ஷத்தை அடைகிறான் என்று சொல்லியிருக்கிறது. ஆகையால் மோக்ஷத்தைக் கொடுக்கும் ஞானத்துக்கு விஷயம் பிரம்மம் என்று ஏற்படுகிறது. சதுர்முகாதிகள் இப்படிப்பட்ட ஞானத்துக்கு விஷயமாகிறதில்லை. ஆகையால் இவர்கள் ஆநந்தமயாதிகளன்று. (164)

## I-1-6-வது அதிகரணம் 6-வது சூத்திரம்.

ஆசங்கை:—பிரம்மா முதலானவர்களை ஆநந்தமய சப்தம் ஏன் கூறமாட்டாது என்பதற்கு வேறு ஒருகாரணம் சொல்லுகிறார்.

சூத்திரார்த்தம்:—சதுர்முகாதிகளுக்குள் ஒருவரைவிட ஒருவர் 100 மடங்கு ஆநந்தமுள்ளவர் என்பதாய் பேதம் சொல்லப்பட்டிருப்பதால் அவர்கள் ஆநந்தமய அதாவது பூர்ணாநந்தர்களாகமாட்டார்கள். (165)

## I-1-6-ல் 7-வது சூத்திரம்.

அ-கை:—ஆநந்தமயம் முதலியவைகள் பிரம்மமாக இருக்கட்டும். ஆயினும் பிரம்மதேவர், ருத்திரன், முதலானவர்கள் பிரம்மத்தைவிட வேறல்ல. ஏனெனின் இவ்விருவர்களுக்கும் சரீரம், ஆத்மா இவைகளிருக்கின்றன. ஆகையால் பேதமிருக்கிறதாக அநுமானிப்பது விருத்தம். இப்படி ஒரு சங்கை கூடும். அதை நிவர்த்திக்கும்பொருட்டு இப்போது சொல்லுகிறார்.

மேலும் ஆநந்தமயனைவிட பிரம்மதேவர், ருத்திரன் முதலானவர்கள் ஒன்று என்று காணப்படவில்லை. இப்படி காணப்படாத விஷயத்தில் கற்பனையால் அநுமானம் செய்வது யுக்தமன்று. ஏனெனின் அநுமானம் காமாத் இச்சையை அநுசரித்து ஏற்படுகிறது. (166)

## I-1-6-ல் 8-வது சூத்திரம்.

அ-கை:—பிரம்மதேவர் முதலானவர்களுக்கும் ஆநந்தமயனுக்கும் பேதம் பொய் ஆகையால் இவர்கள் ஒன்று என்று சொல்லுவதில் யாதொரு தோஷமுமில்லை. இப்படி சங்கை வரக்கூடும். அதை நிவர்த்திக்க இப்போது சொல்கிறார்.

ச மேலும்

அஸ்மின் பிரம்மவல்லியில் ஆநந்தமயப் பிரகரணத்தில் மோக்ஷ காலத்திலும்

அஸ்ய ஜீவனுக்கு தயோ: சாஸ்தி ஆநந்தமயனுடன் சம்பந்தமிருக்கிறது என்பது சாஸ்தி என்கிற சுருதியில் சொல்லியிருக்கிறது. ஆகையாலும் ஆநந்தமயாதிகள் பிரம்மமே. தேகாதிகளன்று. (167)

தீர்மானம்:—ஆநந்தமயாதி ஐந்தும் அமிருத்தாதி பிரம்மரூபமாக கோசங்களில் இருக்கின்றன. (168)

பிரயோஜனம்:—பிரம்மம் ஆநந்தமய அவயவம். அவயவி அன்றியில் அவயவத்தின் ஜிஞ்ஞாசை ஏற்படமாட்டாது. ஆகையால் பிரம்ம ஜிஞ்ஞாசா விஷயத்தில் ஆக்ஷேபசமாதானங்கள் ஏற்படுகின்றன. (169)

மூன்றுமதங்களின் தீர்மானம்.

அத்வைதப்படி ஆநந்தமயம் ஜீவன்.

விசிஷ்டாத்வைதப்படி ஷை பிரம்மம்.

த்வைதப்படி ஷை அப்படியே.

அன்னமயாதிகளும் பிரம்மம். (170)

---

6-வது அதிகரணம் முற்றிற்று.

## I-1-7-வது அதிகரணத்தின் அநுக்கிரமணிகை.

## I-1-7-வது அதிகரணம்.

I. இதின் பெயர்:— அந்தரதிகரண மென்பதாம். (1)

II. இந்த அதிகரணத்தின் கருத்து:—சூரியமண்டலத்திலிருக்கிற புருஷனும், அக்ஷிபுருஷனும் ஈசுவரன் என்பதாம். (2)

III. இதில் அடங்கிய சூத்திரங்கள்:—20—21.

IV. சங்கதி:— அ-கை:— முந்தின அதிகரணத்தில் நிர்க்குணப்பிரம்மம் பிரதிபாதிக்கப்பட்டது. இதில் சகுணப்பிரம்மம் பிரதிபாதிக்கப்படுகிறது.

(1) முந்தின அதிகரணத்துக்கும் இந்த அதிகரணத்துக்கும்:—

முந்தின அதிகரணத்தில் பிரம்ம பதம், ஆநந்தமயபதம், ஆநந்தபதத்தின் அப்பியாசம், ஆகிய பிரமாணங்களால் நிர்க்குணப் பிரம்மம் நிர்ணயம் செய்யப்பட்டதுபோல்,

இந்த அதிகரணத்தில் ரூபம், ஐசுவரியம், ஆதாரம் முதலிய பிரமாணங்களால் ஹிரண்மய புருஷன் ஜீவனைக் கூறப்படுகிறான் என்கிறதாய் பூர்வபக்ஷி சொல்லுவதால் திருஷ்டாந்த சங்கதி ஏற்படுகிறது.

(2) சுருதி முதலிய சங்கதிகள்:— முன்போலவே.

V. அதிகரணத்தின் விஷயவாக்கியம்:—

சாந்தோக்கியம் முதலாவது அத்தியாயத்தில் உத்கீத உபாசனையில் அமுக்கியமான உபாசிக்கத்தகுந்தவைகளைச்சொல்லி, முக்கியமாக உபாசிக்கத்தக்கதைப்பற்றி சொல்லும்பொருட்டு அடியிற்கண்ட வாக்கியம் கூறப்பட்டிருக்கிறது.

(1) अथ य एषोऽन्तरादित्ये हिरण्मयः पुरुषो दृश्यते
हिरण्यश्मश्रुर्हिरण्यकेश आप्रणखात् सर्व एव सुवर्णः
(छा I-6-6)

तस्य यथा कप्यासं पुण्डरीकमेवमक्षिणी तस्यो
दिति नाम स एष सर्वेभ्यः पाप्मभ्य उदितः उदेति-
ह वै सर्वेभ्यः पाप्मभ्यो य एवं वेद (छा I-6-7)

இது அதிதைவத விஷயமான வாக்கியம்.

(2) अथ य एषोऽन्तरक्षिणि पुरुषो दृश्यते (छा 7-1-5)

இது அத்தியாத்மம் அதாவது சரீரத்தைப்பொருத்த வாக்கியம்.

இவைகளுக்கு அர்த்தம்:—

(1) இனி உபாசனை கூறப்படுகிறது. சூரியமண்டலத்தில் ஜோதிர்மயனான புருஷன் உபாசகர்களால் ஸ்வர்ணமய மீசையுடனும் ஸ்வர்ணமய மயிர்களுடனும் நகசிகைபரியந்தம் ஸ்வர்ணமயமாகவும் பார்க்கப்படுகிறான். அவனுடைய கண்கள் வானரத்தின பிருஷ்டபாகம் போலிருக்கும் தாமரைப்பூ போலிருக்கின்றன. (மலர்ந்த உடன் காணப்படும் தாமரை புஷ்பம்போன்ற கண்ணுடையவன் என்று அர்த்தம்) அந்தப்புருஷனுக்கு உத் என்று பெயர். அவன் சகல பாபத்தினின்றும் வெளிக்கிளம்பினவன் அதாவது சகல பாபமற்றவன் என்பது கருத்து. எவன் இப்படி அறிகிறானோ அவன் சகல பாபங்களினின்றும் வெளிக்கிளம்புகிறான், விடுபடுகிறான். இப்படி உபாசனையின் பொருட்டு தேவதையின் ஸ்தானம், ரூபம் கூறப்பட்டது.

(2) இனி சரீரத்தை உத்தேசித்து அந்த உபாசனை கூறப்படுகிறது.

கண்ணுக்குள் எந்த புருஷன் காணப்படுகிறானோ (அவனும் உபாசிக்கத்தக்கவன்.) (5)

VI. சந்தேகம்:—

(1) சூரியமண்டலத்திலும், கண்ணிலும் உபாசிக்கத் தக்கவனாகக் கூறப்படும் புருஷன்

விசேஷ உபாசனையாலும் கர்மத்தாலும் தேவபாவத்தை அடைந்து, ஜகததிகாரம் பெற்றிருக்கும் ஒரு ஜீவனா?

அல்லது எங்கும் வியாபிக்கிறதினால் சூரியமண்டலத்திலும் கண்ணிலும் இருக்கும் பரமேசுவரனா?

ஆ (2) சந்தேகபீஜம்:—ரூபவத்வாதி அபஹதபாப்மத்வம். (6)

VII. பூர்வபக்ஷம்:—

1. இந்த புருஷன் ஜீவன்தான். எனெனின். (7)

2. அவனுக்கு ரூபம் கூறப்பட்டிருக்கிறது.

(a) ஆதித்திய புருஷனுக்கு ஸ்வர்ணமயமான மீசை, முதலியவை சொல்லப்பட்டிருக்கிறது.

(b) கண்ணிலிருக்கிற புருஷனுக்கும்

तस्यैतस्य तदेव रूपं यदमुष्य रूपं (छा 1-7-5)

என்கிற சுருதிப்படி சூரியமண்டலத்திலிருக்கிற புருஷனுடைய ரூபமே சொல்லியிருக்கிறது.

(3) अशब्दमस्पर्शमरूपमव्ययम् (कौत्रा I-3-15)

என்கிற சுருதிப்படி பரமேசுவரனுக்கு ரூபத்தைச் சொல்லுவது அயுக்தம். (8)

(2) மேலும்:

(a) य एषोऽन्तरादित्ये (छा 1-6-6)

(b) य एषोऽन्तरक्षिणि (छा 1-7-5)

என்கிற சுருதிகளில் ஆதாரம் சொல்லியிருப்பதால் ஜீவனே கூறப்பட்டதாக தெரியவருகிறது.

(c) (1) स भगवः कस्मिन् प्रतिष्ठित इति स्वे महिम्नि (छा VII 24-1)

(2) आकाशवत्सर्वगतश्च नित्यः

அதாவது ஈசுவரன் எவ்விடமிருக்கிறார் என்கிற கேள்விக்கு தன்னுடைய மஹிமையிலிருக்கிறார் என்றும் ஆகாசம்போல் சர்வவியாபியாயும் நித்தியமாயுமிருக்கிறார் என்றும் சொல்லியிருப்பதால், இப்படிப்பட்ட ஆதாரமற்ற, தன் மஹிமையிலிருக்கிற சர்வவியாபியான பரமேசுவரனுக்கு ஆதாரம் உபதேசிக்கப்படவில்லை. (9)

(3) (a) மேலும் ஆதித்தியமண்டலத்திலிருக்கிற புருஷன் விஷயத்தில்

स एष येचामुष्मात् परांचो लोकास्तेषां चेष्टे देवकामानां च (छा I-6-8)

ஆதித்தியமண்டலத்திலிருக்கிற புருஷன் சூரியமண்டலத்துக்கு மேலிருக்கிற லோகங்களுக்கும் தேவலோகங்களுக்கும் ஈசுவரன் என்றும்,

(b) அக்ஷிபுருஷன் விஷயத்தில்

स एष चैतस्मादर्वांचो लोकास्तेषां चेष्टे मनुष्यकामानां च (छा I-7-6)

அவன் கீழ்லோகங்களுக்கும் மனுஷியர்களுடைய லோகங்களுக்கும் ஈசுவரன் என்றும் இப்படி ஆதித்திய புருஷனுக்கும் அக்ஷிபுருஷனுக்கும் ஐசுவரிய மரியாதை கூறப்பட்டிருக்கிறது.

ஆகையால் அந்த புருஷன் சம்சாரி என்பது கருத்து.

(c) பரமேசுவரன் விஷயத்தில

एष सर्वेश्वर एष भूताधिपतिरेष भूतपाल एष सेतुर्विधरण एषां लोकानामसंभेदाय (बृ IV-4-22)

அதாவது இவன் சர்வேசுவரன், பதார்த்தங்களுக்கு அதிபதி (அல்லது யமன்), பதார்த்தங்களை பரிபாலனம் செய்கிறவர் (அல்லது இந்திரன்) லோகத்தில் ஜலங்கள் சேராமலிருக்கும் பொருட்டு கரைகள் இருப்பதுபோல், வர்ணாசிரமங்கள் கலந்து போகாமலிருப்பதற்குக் காரணமாயிருக்கிறார், இப்படி பொதுவாய் சொல்லியிருக்கிறது.

ஆகையால் சூரியனிடத்திலும் கண்ணிலுமிருக்கிற புருஷன் பரமேசுவரன் அல்ல ஜீவன்தான்.

VIII. சித்தாந்தம்.

1. இப்படி பூர்வபக்ஷி சொல்லுவதற்கு

अन्तस्तद्धर्मोपदेशात् ॥ २० ॥

என்கிற சூத்திரத்தில் உத்தரம் கூறப்படுகிறது.

2. பதவுரை.

अन्तः உள்ளிருக்கும் புருஷன்

परमेश्वरः பரமேசுவரனே (ஏனெனின்)

तद्धर्मोपदेशात् ஈசுவரனுடைய தர்மங்கள் கூறப்பட்டிருக்கிறபடியால். (12)

3. பொழிப்புரை.

சூரியமண்டலத்திலும் கண்ணிலுமிருக்கிற புருஷன் பரமேசுவரனே. ஏனெனின் பரமேசுவரனுக்குச் சொல்லிய தர்மங்கள் இந்த புருஷனுக்கும் கூறப்பட்டிருக்கின்றன. (13)

4. பாஷ்யம்.

1. अन्तः य एषोऽन्तरादित्ये य एषोऽन्तरक्षिणि என்கிற சுருதியில் கூறப்பட்ட புருஷன் பரமேசுவரனே, சம்சாரியன்று. ஏனெனின். (14)

(2) (a) तद्धर्मोपदेशात् பரமேசுவரனுடைய தர்மம் இந்த புருஷனிடத்தில் கூறப்பட்டிருக்கின்றன. (15)

(b) எப்படியெனின் तस्य उत् इतिनाम அவனுக்கு (புருஷனுக்கு) உத் என்றுபெயர் என்பதாய்ச்சொல்லி, அந்த ஆதித்திய புருஷனுக்கு அப்பெயர்வந்த காரணத்தை

स एषसर्वेभ्यः पाप्मभ्यः उदितः

அதாவது சகல பாபங்களினின்றும் விடுபடுகிறான் என்பதினால் கூறுகிறது. இப்படி காரணத்தின் பேரில் ஏற்பட்ட பெயரை அக்ஷிபுருஷனுக்கும் य एष मतस्नाम என்பதால் கூறுகிறது. (17)

(c) य आत्मा अपहतपाप्मा (சாந் VIII-7-1)

முதலிய வாக்கியங்களால் சகல பாபங்களுமற்ற தன்மை பரமாத்மாவுக்கே ஒவ்வும்.

மேலும்

(d) सैवऋक्तत् सामतदुक्थं तद्यजुस्तद्ब्रह्म சா-I-7-5

அதாவது

அதுவே உக்தம் (ஸ்தோரபாகம்) அத்துடன் சேர்ந்திருப்பது சாம அதாவது ஸ்தோத்திரவிசேஷம். உக்தத்துக்கு வேறான து ரிக், யஜுர் வேதம் யஜுஸ், பிரம்மம் என்றால் மூன்று வேதங்கள்.

என்கிற சுருதியில் அக்ஷிபுருஷனே ரிக் சாமமுதலிய ஸ்வரூபமாக கூறப்பட்டிருக்கிறது. இது பரமேசுவரன் விஷயத்தில் பொருந்தும். ஏனென்னின் அவர் சகலத்துக்கும் காரணமாக இருப்பதால் சகலத்துக்கும் ஆத்மாவாக இருக்கமுடியும். அதாவது சகலத்துக்கும் ஸ்வரூபமாக இருக்கமுடியும். மேலும் தேவதையை உத்தேசித்து ரிக் பிருதிவி ஸ்வரூபம் என்றும் சாம அக்கினி ஸ்வரூபம் என்றும், சரீரத்தை உத்தேசித்து ரிக் வாக்கு ஸ்வரூபம் என்றும், சாம பிராண ஸ்வரூபமென்றும் சொல்லி, மேல் ஆதித்திய புருஷனுக்கு ரிக் சாமங்கள் கானசாதனங்கள் என்று சொல்லி

பிறகு ஆதித்திய புருஷனுக்கு எவை கானசாதனங்களோ அவைகளே அக்ஷிபுருஷனுக்கும் என்று சொல்லியிருக்கிறது. இதுவும் (அதாவது ரிக் சாமங்கள் கானசாதனங்களாயிருக்கும் தன்மை) ஸர்வ ஸ்வரூபியாயிருக்கிற ஈச்வரன் விஷயத்தில்தான் பொருந்தும். (18)

மேலும்

(e) तद्यइमे वीणायां गायन्त्येतं त्वेव तेगायन्ति
तस्मात्ते धनसनयः (छा 1-7-6)

(எவர்கள் வீணையில் கானம் செய்கிறார்களோ அவர்கள் இவனையே உத்தேசித்து கானம் செய்கிறார்கள். அவனிடமிருந்து அவர்கள் தனலாபமுள்ளவர்களாகிறார்கள்) என்கிற சுருதியானது லௌகிக கானங்களிலும் கூறப்படுகிறவன் இவன்தான் என்பதை காட்டுகிறது. இவன் ஈசுவரனாக இருந்தால்தான் சுருதிபொருந்தும். லோகத்தில் இராஜாக்கள்தான் கானம் பண்ணப்படுகிறார்கள். ஈசுவரனல்லவென்று சொல்லும்பக்ஷத்தில்

यद्यद्विभूतिमत्सत्वं श्रीमदूर्जि तमेववा।
तत्तदेवावगच्छत्वं मम तेजोंऽशसंभवम् (गी X 41)

(பசுதனமுதலியவைகள், காந்தி, பலம் இவைகளுடன்கூடின அரசன் முதலானவர்களும் என்னுடைய அம்சம் என்றே அறி) என்கிற கீதாவாக்கியத்தால் அவர்களைப்பற்றி கானஞ்செய்கிறதும் ஈசுவரனைப்பற்றியே என்று சொல்லியிருப்பதால், லௌகிக கானம் ஈசுவரனையே பொருத்திருக்கிறது. (19)

(f) மேலும் லோககாமங்களுக்கு ஈசுவரனாயிருக்கும் தன்மை பரதந்திரமாயிராத ஸ்வதந்திரமான பரமேஸ்வரனுக்கே பொருந்தும். (20)

B. பரமதகண்டனை.

(1) சுருதியிற்கூறிய ஸ்வர்ணமய மீசைமுதலிய ரூபம் பரமேஸ்வரனுக்கு பொருந்தாது என்று செய்த ஆக்ஷேபத்துக்கு (8-வது பிரிவு பார்க்க) நம்சொல் ஆகிறதாவது:—

தன்னுடைய உபாசகர்களுக்கு அனுக்கிரகம் செய்யும்பொருட்டு பரமேஸ்வரன் தன்னுடைய இச்சையால் மாயாமயரூபத்தை தரிக்கக்கூடும். அப்படியே

माया ह्येषा मयासृष्टायन्मां पश्यसि नारद।
सर्वभूतगुणैर्युक्तं मैवं मां द्रष्टुमर्हसि॥

அதாவது "என்னை பார்க்கிறேன்" என்பதுயாதொன்றுண்டோ அது நாரதரே என்னால் சிருஷ்டிக்கப்பட்ட மாயை. சகல பூதங்களின் குணங்களுடன் நான் கூடியிருப்பதாக நீர் பார்க்கக்கூடாது என்று ஸ்மிருதியில் சொல்லியிருக்கிறது.

மேலும் எந்த இடத்தில் சமஸ்தமான குணவிசேஷங்களற்ற பரமேசுவரனைப்பற்றி உபதேசம் செய்யப்பட்டிருக்கிறதோ அவ்விடத்தில்,

अशब्दमस्पर्शमरूपमव्ययं

(அதாவது) சப்தமற்றது, ஸ்பரிசமற்றது, ரூபமற்றது, நாசமற்றது)

முதலிய வசனங்கள் காணப்படுகின்றன.

**सर्वकर्मा सर्वकामा सर्वगन्ध सर्वरस:** (ஊ III-14-2)

(சர்வ கர்மங்களுடையவர், சர்வ காமங்களுடையவர், சர்வ கந்தங்களுடையவர், சர்வ ரசங்களுடையவர்)

முதலிய வாக்கியங்கள் பரமேசுவரனை உபாசிப்பதை உபதேசிக்கும்பொருட்டு, சகலத்துக்கும் காரணமாகையால் காரியங்களில் சில தர்மங்களுடன்கூடியிருப்பதாக போதிக்கின்றன. அப்படியே ஸ்வர்ண மய மீசைமுதலியவைகளுடன் கூடினவர் என்னும் உபதேசத்தையும் அறியவேண்டியது. (21)

(2) ஆதாரம் சொல்லியிருப்பதால் பரமேசுவரனை கிரகிக்கக்கூடாதென்று சொன்னவிஷயத்தில் (9-வது பார்க்க).

தன் மஹிமையிலிருக்கிறவனுக்கும் உபாசனையின்பொருட்டு ஆதாரவிசேஷத்தைக் கூறக்கூடும். பிரம்மம் ஆகாசம்போல் சர்வ வியாபகமாயிருப்பதால் சகலத்துக்கும் உள்ளேயிருக்கக்கூடும். (22)

(3) மேலும் அத்தியாத்ம உபாசனம், அதிதைவத உபாசனம், ஆகிய உபாசனபேதத்தால் ஐசுவரிய மரியாதைபேதம் ஏற்பட்டதேதவிர வாஸ்தவத்தில் ஐசுவரியத்தில் பேதமிருப்பதைக் காட்டும்பொருட்டு ஏற்படவில்லை. (23)

(4) ஆகையால் ஆதித்திய மண்டலத்திலும் அக்ஷியிடத்திலும் காணப்படும் புருஷன் பரமேசுவரன். (24)

XII. I-1-20-வது சூத்திரத்தின் பாஷ்யத்தின்

தமிழ் மொழிபெயர்ப்பு.

முற்றிற்று.

---

## IX. 1-1-21-வது சூத்திரம்.

(1) **भेदव्यपदेशाच्चान्य: ॥ २१ ॥** (25)

2. அ-கை:—ஆதித்தியனிடத்திலிருக்கிறவன் ஈசுவரன்தான் என்பதற்கு வேறு ஒரு காரணத்தைக் கூறுகிறார். (26)

3. பதவுரை.

च மேலும்

भेदव्यपदेशात् பேதம் சொல்லியிருப்பதால்

अन्य: ஆதித்தியனிடத்திலிருக்கிறவன் ஜீவனைவிட வேறு. (27)

4. மொழிப்புரை:—

மேலும் ஆதித்தியனுக்கும் ஈசுவரனுக்கும் பேதம் கூறியிருப்பதால், ஆதித்தியனிடமிருக்கிறவன் ஜீவனைவிட வேறான ஈசுவரன்தான் (28)

5. பாஷ்யம்:—

ஆதித்தியன் முதலிய சரீராபிமானிகளான ஜீவர்களைவிட அந்தர்யாமியான ஈசுவரன் வேறானவன் என்பது

य आदित्ये तिष्ठन्नादित्यादन्तरो यमादित्यो
न वेद यस्यादित्य: शरीरं य आदित्यमन्त
रो यमयत्येष त आत्माऽन्तर्याम्यमृत:

(बृ III-7-9)

அதாவது:—எவன் ஆதித்தியனிடமிருந்து ஆதித்தியனுக்குளிருக்கிறானோ, எவனை ஆதித்தியன் அறியவில்லையோ, எவனுக்கு ஆதித்தியன் சரீரமோ, எவன் ஆதித்தனை உள்ளே பிரேரணை செய்கிறானோ, அவன் உன்னுடைய ஆத்மா (ஸ்வரூபம்) மரணமற்ற அந்தர்யாமி

என்கிற சுருதியால் தெரியவருகிறது. இவ்விடத்தில் ஆதித்தியனைவிட வேறானவன், அவனை ஆதித்தியன் அறியவில்லை என்று சொல்லியிருப்பதால், அறிகிறவனான ஆதித்தியனாகிற ஜீவனைவிட வேறான அந்தர்யாமி ஒருவன் இருக்கிறான் என்பது ஸ்பஷ்டமாக தெரியவருகிறது. பிரகிருத சுருதியில் சூரியனிடத்திலிருக்கிறதாகச் சொல்லப்படும் புருஷன் அந்த அந்தர்யாமியாகவே யிருக்கவேண்டும். ஏனெனின் இரண்டு சுருதிகளும் சமானமாயிருக்கின்றன. ஆகையால் பரமேசுவரனே இந்த சுருதியில் உபதேசிக்கப்பட்டார் என்பது சித்தம். (29)

X. பூர்வபக்ஷபலன்:—ஜீவ உபாசனை

சித்தாந்தபலன்:— சகுண பிரம்ம உபாசனை (30)

I-1-21-வது சூத்திரத்தின் பாஷ்யத்தின்

(தமிழ்மொழிபெயர்ப்பு)

முற்றிற்று.

XI. வியாஸாதிகரணமாலைப்படி அத்வைதச்சுருக்கம்.

1. சுருக்கமான சுலோகங்கள் :—

हिरण्मयो देवतात्मा किं वाऽसौ परमेश्वरः ।
मर्यादाधाररूपोक्तेर्देवतात्मैव नेश्वरः ॥
सार्वात्म्यात्सर्व दुरितराहित्याच्चेश्वरोमतः ।
मर्यादाद्या उपास्त्यर्थ मीशेऽपि स्युरुमाधिपाः ॥

2. விஷயம் :—

சாந்தோக்கியத்தின்முதலாவது அத்தியாயத்தில் உத்கீத உபாசனையைச் சொல்லுமிடத்தில் சில்லரை உபாசியங்களைச் சொல்லி பிரதான உபாசியத்தைச் சொல்லும்பொருட்டு

अथय एषोऽन्तरादित्ये हिरण्मयः
पुरुषो दृश्यते

என்று சொல்லியிருக்கிறது. (32)

3. சந்தேகம் :—(1) விசேஷமான வித்தை, கர்மம் இவைகளால் ஒரு ஜீவன் தேவபாவத்தை அடைந்து ஜகத்தின் அதிகாரத்தைப்பெற்று சூரியமண்டலத்திலிருக்கிறான் என்று இந்த வாக்கியத்துக்கு அர்த்தமா? அல்லது

(2) ஈசுவரன் சர்வகதனாயிருப்பதால் சூரியமண்டலத்தில் இருக்கிறான்.

என்று அர்த்தமா?

இதுவே சந்தேகம். (33)

4. பூர்வபக்ஷம் :—இந்த புருஷன் தேவபாவத்தை அடைந்த ஜீவனே.

ஏனெனின் மரியாதை, ஆதாரம், ரூபம் இவைகள் கூறப்பட்டிருக்கின்றன.

ये चामुष्मात्पराञ्चेलोकाः
तेषां चेष्टे देवकामानां च

என்பதினால் மரியாதை (எல்லை) விளங்குகிறது.

अन्तरादित्ये என்பதினால் ஆதாரம் விளங்குகிறது.

हिरण्मयः என்பதினால் ரூபம் விளங்குகிறது. சகலத்துக்கும் ஈசுவரனாயும், சகலத்துக்கும் ஆதாரமாயும், ரூபமற்றுமிருக்கிற பரமேசுவரனுக்கு மரியாதை, ஆதாரம், ரூபம் இவைகள் பொருந்தா. ஆகையால் புருஷன் ஜீவனே. (34)

5. சித்தாந்தம் :—

हिरण्मयः ஈசுவரனே ஏனெனின் சகலத்துக்கும் ஆத்மா என்று சொல்லியிருக்கிறது.

सैवर्क्, तत्साम, तदुक्थम्, तद्यजुः, तद्ब्रह्म

என்கிற வாக்கியத்தில் தத் சப்தத்தால் பிரகிருதமான ஹிரண்மய புருஷனைக்கூறி, அவன் ரிக், சாம முதலிய சமஸ்த ஜகத்துக்கும் ஆத்மாவென்று உபதேசிக்கப்பட்டிருக்கிறது. இந்த உபதேசம் அத்விதீயமான பரமேசுவரனிடத்தில்தான் முக்கியமாய் பொருந்தும்; இரண்டாவதுடன்கூடின ஜீவவிசேஷத்தில் பொருந்தாது.

स एषसर्वेभ्यः पाप्मभ्यः उदितः

என்கிற வசனமான்து சகலபாபமற்ற பிரம்மத்துக்கு மட்டும் லிங்கமாகும். தேவபாவத்தை அடைந்த ஜீவனுக்குக் கர்மத்தில் அதிகாரமிராமையால் செய்யும் பாபமும் இனி செய்யப்படும் பாபமுமிராவிடினும், அசுராதிகளால் உண்டான துக்கம் இருந்துகொண்டிருக்குமாகையால், அதினாலுண்டான ஜன்மாந்திர சஞ்சித துக்கம் கூடவேயிருக்கும்.

மரியாதை முதலியவைகளோ உபாதிதர்மங்கள், உபாசியமான சோபாதிக பரமாத்மாவை அவைகள் அடைந்திருப்பதாகச் சொல்லலாம்.

ஆகையால் ஈசுவரனே ஹிரண்மயன். (35)

---

XII. விசிஷ்டாத்வைதப்படி சுருக்கம்:—

1-1-7-ல் 1 (20)

1. இதின் கருத்து:— ஆதித்தியாந்தர் வர்த்தி புருஷனும்அக்ஷிபுருஷனும்பரமபுருஷன்என்பதாம்.36

2. இதிலடங்கிய சூத்திரங்கள்:-2(20 21)(37)

3. இதின் விஷயவாக்கியம்:—சாந்தோக்கியத்தின் I-6-6வது சுருதி (அத்வைதம் பார்க்க.) (38)

4. சந்தேகம்:—கண்ணிலும் சூரியனிடத்திலும் இருக்கிறதாகச் சொல்லிய புருஷன்

(1) ஜீவவிசேஷனா? அல்லது

(2) பரமபுருஷனா?

என்பது சந்தேகம். (39)

5. பூர்வபக்ஷம்:—

அவன் ஜீவவிசேஷன், ஏனெனின் அவனுக்கு சரீரம் சொல்லப்பட்டிருக்கிறது. கர்மவசியனான ஜீவனுக்கு சரீரம் கர்மபலபோகத்தின் பொருட்டு ஏற்படுகிறது. (40)

6. சித்தாந்தம்:—அவன்

सर्वेभ्यःपाप्मभ्यः उदितः

என்கிற சுருதிப்படி சகல பாபசம்பந்தமற்றவனும் சகல லோகங்களுக்கும் அதிபதியாயும் சகல இச்சைகளையும் நிறைவேற்றுகிறவனுமு யிருக்கிறானென்று சொல்லியிருப்பதாலும் இந்த விஷயங்கள் ஜீவனிடத்தில் பொருந்தாதபடியாலும், அக்ஷி ஆதித்தியர்களிடத்திலிருக்கிறவன் பரமபுருஷனாகவே யிருக்கவேண்டும். ஞானம், பலம், ஐசுவரியம் முதலிய ஆசாதாரண குணங்களுள்ள ரூபம் அவருக்கே பொருந்தும்

आदित्यवर्ण तमसःपरस्तात्

என்கிற சுருதியாலும் அவருக்கு அப்பிராகிருதமான ரூபம் சொல்லியிருக்கிறது. ஆகையால் இந்த புருஷன் புருஷோத்தமன் தான். (41)

7. ஸூத்திரார்த்தம்.

अन्तः ஆதித்தியாதிகளுக்குள் இருக்கிறதாகச் சொல்லியபுருஷன் பரமான பிரம்மமே ஏனெனின்

तद्धर्मोपदेशात् अन्यः அவருடைய தர்மங்கள் அதாவது அபஹதபாப்மத்துவாதி அசாதாரணமானவைகள் சொல்லப்பட்டிருக்கின்றன. (42)

I-1-7-ல் 2 (21)

1. அ-கை:— அடியில்வரும் காரணத்தாலும் அக்ஷிபுருஷன் பரமாத்மா. (43)

(2) भेदव्य पदेशात्

आदित्येतिष्ठन् आदित्यात् आन्तरः

என்றும்

आत्मनि तिष्ठन आत्मनोऽन्तरः

என்றும் இப்படி

ஜீவர்களுக்குள்ளிருப்பதாகச் சொல்லியிருப்பதால்

अन्यः அந்தபுருஷன் ஜீவனைவிட வேறு, பரமாத்மாவே. (44)

XIII. துவ்வதப்படி I-1-7வது அதிகரணத்தின் சுருக்கம்.

1. இதின் கருத்து:—தேகத்தில் பிரவேசித்ததாகச் சொல்லியிருக்கிறது, பரமாத்மாவே இந்திராதிகளன்று. (45)

2. இதிலடங்கிய ஸூத்திரங்கள்:—2 (20 21) (46)

3. இதின் விஷயவாக்கியம்:—

अन्तः प्रविष्ट कर्त्तारमेतं

अन्तश्चन्द्रमसि मनसाचरन्तं

सहैवसन्तं नविजानन्ति देवाः

அதாவது:— உள்ளே (ஹிருதயத்துக்குள்ளே) பிரவேசித்தவனும், சந்திரமண்டலத்தில் மனதினால் சஞ்சரிக்கிறவனும், தேவதைகளுடன்கூட இருக்கிறவனுமிருக்கிற இந்த கர்த்தாவை தேவதைகள் அறிகிறதில்லை. என்கிற தைத்திரீய சுருதியில் அதிர்சியத்துவாதி குணங்களுடன்கூடின அந்தஸ்தபுருஷன் கூறப்பட்டிருக்கிறான். அவன் விஷயம். (47)

4. சங்கதி:—அதிர்சியத்தன்மை தைத்ரீயத்தில் ஆநந்தமயனுடைய தர்மம் என்று சொல்லப்பட்டிருக்கிறது.

இந்த தன்மை உள்ளவன் சந்திராதிகளுக்குள்ளிருக்கிறவன். ஏனெனின் தேவதைகள் இவனை அறியவில்லை யென்று சொல்லியிருக்கிறது. இவன் விஷ்ணுவென்பது நிச்சயமாயிராததால் அதிர்சியத்வாதி குணமுள்ள ஆநந்தமயனும் விஷ்ணுவன்று என்று ஆக்ஷேபம் வருவதால் ஆக்ஷேபசங்கதி ஏற்படுகிறது. (48)

5. சந்தேகம்:—இந்த அந்தஸ்தன்

(1) விஷ்ணுவா? அல்லது

(2) இந்திராதிதேவதையா?

என்பது சந்தேகம். (49)

6. பூர்வபக்ஷம்:— இந்திராதி தேவதைதான் அந்தஸ்தன். (50)

7. சித்தாந்தம:— 20-வது ஸூத்திரம்.

அ-கை:—உள்ளேயிருத்தல் என்கிற தர்மசம்பந்தத்தால் இந்திரன் முதலான அதிதைவதங்களுடைய பெயர்கள் பிரம்மத்தினிடத்தில் பொருந்துகின்றனவென்பதைக் காட்டுகிறார். (51)

अतः —अन्तः प्रविष्ट என்கிற சுருதியில் ஹிருதயத்திலிருக்கிறதாக எது சொல்லப்பட்டிருக்கிறதோ

அது பிரம்மமே. இந்திராதி தேவதைகளன்று ஏனெனின்,

तद्धर्मोपदेशात् அதின் தர்மங்களான அதாவது (1) க்ஷீரசமுத்திரத்தில் இருத்தல், (2) பிரளய காலத்தில் சமுத்திரத்தில் இருத்தல் (3) பிரம்மாண்டமே வீரியமாக உடைத்தாயிருத்தல், இவை முதலிய தர்மங்கள் பிரம்மத்தைத்தவிர வேறு ஒருவனிடமும்பொருந்தா. (52)

## I-1-7 ல் 2-வது சூத்திரம் (21)

8. (1) அ-கை:—இந்திராதிகளுக்கும் அந்தஸ்த (உள்ளேயிருத்தல்) தர்மமிருக்கிறபடியால் அவர்களும் பிரம்மமும் ஒன்று என்று இந்திராதிகளே அந்தஸ்தர்களாகட்டுமே என்ற சங்கைக்குச் சமாதானம் கூறுகிறார். (53)

(2) अन्यः च பிரம்மம் உள்ளேயிருக்கிறது என்பது மட்டுமல்ல. பின்னேயோவெனின் இந்திராதிகளை விட வேறாயுமிருக்கிறது. ஏனெனின்

भेदव्यपदेशात् இந்திராதிகளிடத்தில் இருத்தல், அவர்களை பிரேரணை செய்தல் இவை முதலிய பேதத்தைக்கூறும் தர்மங்கள் பிரம்மத்தினிடத்திலிருப்பதாக சுருதியில் தெரியவருகிறது.

ஆகையால் உள்ளேயிருக்கிறவன் இந்திராதிகளை விட வேறான விஷ்ணுவே. (54)

9. பூர்வபக்ஷபலன்:—ஆநந்தமயன் விஷ்ணுவல்லவென்னும் ஆக்ஷேபமே.

சித்தாந்தபலன்:—சமாதானமே. (55)

I-1-5-வது அதிகரணம்,

முற்றிற்று.

---

## I-1-8-வது அதிகரணத்தின்

### அனுக்கிரமணிகை.

## I-1-8-வது அதிகரணம்.

I. இதின்பெயர்:-ஆகாசாதிகரணமென்பதாம். 1

II. இந்த அதிகரணத்தின் கருத்து :—ஆகாச சப்தத்தால் பிரம்மமே கூறப்பட்டிருக்கிறதாக நிரூபணம். 2

III. இதில் அடங்கிய சூத்திரம் 22-வது (3)

IV. சங்கதி :—(1) முந்தின அதிகரணத்துக்கும் இந்த அதிகரணத்துக்கும் :—

ஏ முந்தின அதிகரணத்தில் ஆதித்தியனிடமிருக்கிற புருஷன் ஜீவனா பிரம்மமா என்று சந்தேகம்வந்த சமயத்தில் ரூபாதி ஜீவலிங்கங்களும் அபஹதபாப்மத்துவாதி பிரம்மலிங்கங்களும் காணப்பட பிரம்மலிங்கம் பிரம்மத்தைத்தவிர வேறு இடத்தில் பொருந்தாதபடியாலும், ஜீவலிங்கத்தை பிரம்மத்தினிடத்தில் உபாசனையின்பொருட்டு கற்பிக்கமுடியும்படியிருந்தபடியாலும் புருஷன் ஈசுவரன்தான் என்று நிர்மாணிக்கப்பட்டது. இதில் பிரம்மலிங்கமானது மற்ற லிங்கத்தை பாதித்துவிட்டது. ஆகாசத்தைக்கூறும் சுருதியில் சகலத்தையும் உண்டுபண்ணுதல் என்றும் பிரம்மலிங்கம் காணப்பட்டாலும், சுருதியானது லிங்கத்தைக்காட்டிலும் பிரபலமானதால் முந்தின அதிகரண திருஷ்டாந்தம் பொருந்தவில்லை. ஆகவே இரண்டு அதிகரணங்களுக்கும் பிரத்தியுதாஹரணசங்கதி ஏற்படுகிறது.

(2) இதரசங்கதிகள் :—உபாசிய பிரமத்தினிடத்தில் ஸ்பஷ்ட பிரம்ம லிங்கங்கள் சமன்வய (தாற்பரிய)ப்படுவதால் இந்த பாதம்முடிய சுருதிமுதலிய சங்கதிகளை முன்போலவே அறியவும். (4)

V. இந்த அதிகரணத்தின் விஷயவாக்கியம் :—

अस्य लोकस्य का गतिरित्याकाश इति
होवाच सर्वाणिहवा इमानि भूतान्या
काशादेव समुत्पद्यन्ते आकाशं प्रत्यस्तं
यन्त्याकाशो ह्येवैभ्यो ज्यायानाकाशः परा
यणम् (छा I-9)

ஏ சாலாவத்தியர், தால்பியர், ஜைவலி (என்னும் அரசன்) மூவரும் உத்கீதத்தை கானம் பண்ணுகிறதில் சமர்த்தர்கள். இவர்கள் உத்கீத விஷயமாக பேசிக்கொண்டதாவது :—தால்பியரைப்பார்த்து ஸாமத்துக்குக் காரணமென்னமென்று சாலாவத்தியர் கேட்டார். அதற்கு தால்பியர் ஸ்வரம் காரணம் என்று சொன்னார்.

இதற்குக் காரணம் என்னவென்று சாலாவத்தியர் கேட்க, பிராணன் என்றும், இதற்குக் காரணம் அன்னமென்றும், இதற்குக் காரணம் அப்பு என்றும், இதற்குக் காரணம் ஸ்வர்கமென்றும், சாலாவத்தியர் கேட்க கேட்க, தால்பியரும் உத்தரம் கொடுத்துக்கொண்டுவந்தார். இப்படி ஸாமத்துக்கு முடிவான காரணம் ஸ்வர்க்கம் என்று சொன்னதை ஸாலாவத்தியர் ஒப்புக்கொள்ளவில்லை. பிறகு ஸாலாவத்தியரை பார்த்து தால்பியர் ஸ்வர்க்கலோகத்துக்கு என்ன காரணம் என்று கேட்க, இந்த பிருதிவிலோகம் என்று சொன்னார். ஜைவலி இதையும ஒப்புக்கொள்ளாததால் அவரைப் பார்த்து சாலாவத்தியரும் தால்பியரும் கேட்க ஜைவலியானவர் "ஆகாசம் காரணமென்றும், இந்த பூதங்களெல்லாம் ஆகாசத்தினின்றுமே உண்டாகின்றனவென்றும், ஆகாசத்தில் லயமாகின்றனவென்றும், இவைகளைவிட ஆகாசமே பெரிது என்றும், ஆகாசம் ஸ்தானம் என்றும்" சொன்னார். (5)

VI. சந்தேகம் :—

ஆகாச சப்தத்தால் பிரம்மம் கூறப்படுகிறதா, அல்லது

பூதாகாசம் கூறப்படுகிறதா?

சம்சயத்துக்குக் காரணமென்னவெனின்,

நி (சுருதியில் ஆகாச சப்தமும், ஜகத்தை உற்பத்தி செய்தல் என்னும் பிரம்ம லிங்கமும் காணப்படுகின்றபடியால்)

இரண்டு இடத்திலும் (அதாவது பூதாகாசத்திலும், பிரம்மத்தினிடத்திலும்) ஆகாச சப்தம் உபயோகிக்கப்பட்டிருக்கிறது. லோகத்திலும் வேதத்திலும் ஆகாச சப்தம், பூதாகாசம் என்கிற அர்த்தத்தில் தான் பிரசித்தமாக உபயோகிக்கப்பட்டிருக்கிறது. பிரம்ம விஷயத்திலும் சில இடங்களில் உபயோகிக்கப்பட்டிருக்கிறது. இப்படிப்பட்ட இடங்களில் வாக்கிய சேஷத்தினாலாவது பிரம்மம்தான் என்று நிச்சயம் ஏற்படுகிறது.

(a) இரண்டாவதுக்கு திருஷ்டாந்தம் :—

यदेष आकाश आनन्दो न स्यात् (तै II-7)

"இந்த ஆகாசம் ஆனந்தமாகாவிட்டால்" என்கிற இடத்தில் ஆநந்தம் என்கிற அசாதாரண லக்ஷணம் கூறப்பட்டிருப்பதால் ஆகாசம் பிரம்மமென்றே நிச்சயப்படுகிறது.

(b) முதலாவதற்கு திருஷ்டாந்தம் :—

आकाशोवै नामरूपयो र्निर्वहिता तेयदन्तरा तद्ब्रह्म (छा VIII-14-1)

"ஆகாசம் நாமரூபங்களின் உற்பத்தி ஸ்திதிகளுக்குக்காரணம். இந்த நாமரூபங்கள் எதைவிட வேறோ அல்லது எதினிடத்தில் கற்பிதமாயிருக்கின்றனவோ அது பிரம்மம்."

இவ்விடத்தில் आकाशोवैनाम என்பதற்கு तद्ब्रह्म என்பது வாக்கியசேஷம் அதாவது பூர்த்திசெய்யும் வாக்கியம்.

இவ்வுதலிய வாக்கியங்களில் காணப்படும் பிரயோகத்தால் ஆகாச சப்தம் பூதாகாசத்தைக் கூறுகிறதா பிரம்மத்தைக் கூறுகிறதா என்கிற சம்சயம் ஏற்படுகிறது. (6)

VII. பூர்வபக்ஷம் :— எந்த அர்த்தத்தை கிரகிப்பது யுக்தம்? பூதாகாசத்தைக் கிரகிப்போமே. ஏனெனின், ஆகாசம் என்கிற சப்தம் பெரும்பான்மையாய் பூதாகாசத்திற்கு உபயோகிக்கப்படுவதால், அந்த அர்த்தமே புத்தியில் சீக்கிரத்தில் உதிக்கிறது. இந்த ஆகாச சப்தத்தை இரண்டுவிஷயத்திலும் சாதாரணமாய் அறியமுடியாது. ஏனெனின் ஒரு பதத்துக்கு அநேக அர்த்தங்கள் என்கிற தோஷம் சம்பவிக்கும் (இது யுக்தமன்று). ஆகையால் பிரம்மத்தினிடத்தில் ஆகாச சப்தம் கௌணமாக இருக்கவேண்டும். வியாபித்தல் முதலிய அநேக தர்மங்களால் பிரம்மம் ஆகாசத்துக்குச் சமானமாயிருக்கவேண்டும். முக்கியார்த்தத்தை எடுத்துக்கொள்ளும்படியிருக்க கௌணார்த்தத்தை எடுத்துக்கொள்ளமுடியாது. இவ்விடத்தில் ஆகாச சப்தத்தின் முக்கியார்த்தமே கிரகிக்கும்படியாயிருக்கிறது. (7)

பூதாகாசத்தை கிரகிக்கும்பக்ஷத்தில்

सर्वाणि हवाइमानि भूतानि आकाशादेव समुत्पद्यन्ते (छा I-9-1)

என்கிற வாக்கியசேஷம் பொருந்தாது என்னும் பக்ஷத்தில், இதில் பாதகமில்லை. ஏனெனின் பூதாகாசமும் வாயுமுதலியவைகளுக்குக் கிரமகாரணமாயிருக்கலாம்.

तस्माद्वा एतस्मादात्मन आकाशः सम्भूतः
आकाशाद्वायुः वायोरग्निः (तै II-1)

இந்த ஆத்மாவினின்றும் ஆகாசம் உண்டாயிற்று. ஆகாசத்தினின்றும் வாயுவும், வாயுவிலிருந்து அக்கினியும் இப்படியே மேல்மேல் உண்டாயின என்று தைத்தீய (II-1) சுருதி சொல்லுகிறது. பூதாகாசம் சகலத்துக்கும் இருப்பிடமாகவும் இதர பூதங்களை அபேக்ஷித்து பூதாகாசம் பெரிது என்றும் சொல்லக்கூடும். ஆகையால் ஆகாச சப்தத்தால் பூதாகாசமே கிரகிக்கத்தக்கது. (8)

## VIII. சித்தாந்தம்.

1. இப்படி பூர்வபக்ஷி சொல்ல

## आकाशस्तल्लिङ्गात् ॥ २२ ॥

என்கிற சுருதியில் உத்தரம் கூறுகிறார். (9)

2. பதஉரை.

आकाशः ஆகாச சப்தத்தால் பிரம்மம் கிரகிக்கத்தக்கது. ஏனெனின்

तल्लिङ्गात् பிரம்மலிங்கமிருப்பதால் (10)

3. பொழிப்புரை.

இந்த சுருதியில் ஆகாச சப்தத்தால் பிரம்மத்தைத்தான் கிரகிக்கவேண்டும். ஏனெனின் பிரம்மத்துக்குரிய லிங்கங்கள் காணப்படுகின்றன. (11)

4. பாஷ்யம்.

(1) ஆகாச சப்தத்தால் இந்த சுருதியில் பிரம்மத்தை கிரகிப்பது யுக்தம். ஏனெனின் பிரம்மலிங்கம் கூறப்பட்டிருக்கிறது.

सर्वाणि ह वा इमानि भूतानि आकाशादेव समुत्पद्यन्ते (छा I-9-2)

என்கிற லிங்கம் பரப்பிரம்மத்தினது. பரப்பிரம்மத்தினின்றும் பூதங்கள் உற்பத்தியாகின்றவென்று வேதாந்தங்கள் கூறுகின்றன.

பூதாகாசமும் வாயுமுதலியவைகளுக்குக் கிரமமாக காரணம் என்று நாம் கண்டிருக்கிறோம் என்று பூர்வபக்ஷி சொன்னாலும்,

வாஸ்தவம்தான், காண்பிவிக்கப்பட்டிருக்கிறது. ஆயினும் சகலத்துக்கும் மூலகாரணமான பிரம்மத்தை கிரகிக்காதவரையில் आकाशा देव ஆகாசத்தினின்றும் தான் என்பதும், பூதங்களுக்குக் கொடுக்கப்பட்டிருக்கிற சகல என்னும் விசேஷணமும் பொருந்தாமற் போகும்.

(ரா அக்கினி முதலியவைகள் வாயுமுதலியவைகளினின்றும் உண்டாவதாக சொல்லியிருப்பதால், ஆகாசத்தினின்றும் தான் என்பது பாதிக்கப்பட்டது. மேலும் ஆகாசத்தைவிட்டு மற்ற பூதங்கள் சுருதிக்கு விஷயமாகும் பக்ஷத்தில் சுருதியிலிருக்கிற ஸர்வாணி என்னும் பதம் தாற்பரியத்தில் குறுகிப்போகும். பிரம்மமே ஸர்வஸ்வரூபமாகையால் அதினின்றுமே சகலமும் உண்டாவதாக சுருதி கூறுவது யுக்தமே.) (12)

(2) அப்படியே आकाशंप्रत्यस्तं यान्ति (ஆகாசத்தில் லயமடைகின்ற) என்பது பிரம்மலிங்கம். (13)

(3) அப்படியே आकाशो ह्येवेभ्यो ज्यायान् (ஆகாசம் இவைகளைவிட பெரிது) என்பது ஒரு பிரம்மலிங்கம்.

ज्यायान् पृथिव्या ज्यायानन्तरिक्षात्
ज्यायान्दिवो ज्यायानेभ्यो लोकेभ्यः (छा III-14-3)

"பிருதிவியைவிட பெரிது, அந்தரிக்ஷத்தைவிட பெரிது, ஸ்வர்க்கத்தைவிட பெரிது, இந்த லோகங்களைவிட பெரிது"

என்கிற சுருதி வேறு ஒன்றை அபேக்ஷிக்காமல் ஸ்வயமாய் பெரிதாயிருக்கும் தன்மையானது பிரம்மம் ஒன்றுக்கே பொருந்தும் என்று சொல்லுகிறது. (14)

(4) அப்படியே आकाशः परायणं என்பது ஒரு லிங்கம். பரமான ஸ்தானமாயிருக்கும் தன்மை சகலத்துக்கும் காரணமான பரமாத்மாவினிடத்தில் தான் விசேஷமாய்ப் பொருந்தும்.

विज्ञानमानन्दं ब्रह्म रातेर्दातुः परायणं

என்கிற பிருஹதாரணியக (III-9-28) சுருதியானது விஞ்ஞானமும் ஆநந்தமும் பிரம்மம். அது தனதாதாவின் இருப்பிடம் என்று சொல்லுகிறது.

(ரா ராதி: என்று பதமிருந்தால் பந்து என்று அர்த்தம் செய்து பிரம்மமானது தாதாவின் பந்து என்று அறியவும்.) (15)

(5) ரா மேலும் சாலாவத்தியர், தால்பியர் என்கிற பிராமணர்களும் ஜைவலி என்கிற அரசனும் உத்கீதத்தைப்பற்றி விசாரிக்குமளவில் உத்கீதத்துக்கு ஸ்தானமெதுவென்று கேட்டசமயத்தில், ஸ்வர்க்கத்தினின்றும் (ஆகாசத்தினின்றும்) வருகிற ஜலங்களால் ஜீவிக்கிற பிராணன் உத்கீதகானம் செய்ய சமர்த்தனாகிறபடியால்

உத்கீதத்துக்கு ஸ்வர்க்கம் ஸ்தானம் என்று தால்பியர் சொன்னதை ஒப்புக்கொள்ளாமல் ஸ்வர்க்கத்துக்கும் இந்த லோகமானது கர்மமூலமாக காரணமாக இருப்பதால், இந்தலோகம்தான் காரணம் என்று சாலாவத்தியர் சொல்ல, ஜைவலி யானவர் இந்த லோகமும் முடிவுள்ளதாகையால் இதையும் ஒப்புக்கொள்ளாமல், முடிவில்லாத ஒன்றைச் சொல்லவேண்டும் என்கிற இச்சையின்பேரில் ஆகாசம் காரணம் என்று சொல்லி அந்த ஆகாசத்தையும் உத்கீதமாகச் சொல்லி

स यषपरोवरीयानुद्गीथः सएषोऽनन्तः

என்று உபசம்ஹாரம் செய்திருக்கிறார். இந்த அநந்தம் என்பது பிரம்மலிங்கம், இது பரமாத்மாவினிடத்தில் தான் பொருந்தும்.

(ஸ மேற்கண்ட சுருதியின் அர்த்தம்:—உத்கீதம் ஆகாசம் என்று சொல்லியிருப்பதால் உத்கீதத்துக்கு அநந்தம முதலிய விசேஷணம் பொருந்தும், ஸ்வத: பொருந்தாது என்பது கருத்து. உத்கீதத்தின் அவயவமான ஓங்காரம் ஆகாசஸ்வரூபம். உத்கிருஷ்டம். இதர அக்ஷரங்களைவிட மிகவும் சிரேஷ்டம்) (16)

பூதாகாசம் என்பது பிரசித்தமாயிருப்பதால் ஆகாச சப்தத்தைக் கேட்டவுடன் பூதாகாசம்தான் மனதில் விளங்குகிறது என்று செய்த ஆக்ஷேபத்துக்கு ஸமாதானம் சொல்லுகிறதாவது:—முதலில் அப்படித்தோன்றினாலும் சுருதியிலிருக்கிற (एव சப்தமென்ன, सर्व சப்தம் என்ன, உற்பத்திகாரணம், லயஸ்தானம், பெரிது, இருப்பிடம், அநந்தம் ஆகிய பிரம்ம குணங்களைக்கண்டு, त्यजेदेकं कुलस्यार्थे அதாவது குலத்தின்பொருட்டு ஒருவனை விலக்கிவிடு என்கிற விதூர நியாயப்படி) ஆகாசம் என்கிற (ஒன்றை ரூடி அர்த்தத்)தைத் தள்ளிவிடுவது யுக்தம். (17)

மேலும் आकाशो वै नामरूपयोर्नि र्वहिता முதலிய இடங்களில் பிரம்ம விஷயத்திலும் ஆகாச சப்தம் உபயோகிக்கப்பட்டிருப்பதை காட்டியிருக்கிறோம். (18)

அப்படியே ஆகாசத்தைக்கூறும் பதங்களும் பிரம்மத்தினிடத்தில் உபயோகிக்கப்படுவதாக அடியிற்கண்ட சுருதிகளால் தெரியவருகிறது.

(1) ऋचोऽक्षरे परमे व्योमन् यस्मिन् देवा अधिविश्वे निषेदुः (ऋ सं I-164-39)

(2) सैषा भार्गवी वारुणी विद्या परमे व्योमन् प्रतिष्ठिता (तै III-6)

(3) ॐ कंब्रह्म खं ब्रह्म (छा IV-10-5)

(4) खंपुराणम् (बृ V-1)

அர்த்தம்:—

(1) கூடஸ்தமான ஆகாசத்தினிடத்தில் வேதங்களிருக்கின்றன. சகலதேவதைகளும் இருக்கிறார்கள்.

(2) இந்த பார்க்கவீ வித்தையானது வியோமத்தில் (ஆகாசத்தில்) நிலைபெற்றிருக்கிறது.

(3 & 4) ஓங்காரம் சுகம், பிரம்மம், வியாபகம், அநாதி என்று உபாசிக்கத்தக்கது. (19)

மேலும்,

अग्नि रधीतेऽनुवाकम्

என்கிற வாக்கியத்துக்கு அக்கினியானது அனுவாகத்தை அத்தியயனம் செய்கிறது என்று பதங்களின் அர்த்தத்தால் தெரியவருகிறது. இது அசம்பாவிதம். ஒருபதத்தின் அர்த்தவிஷயத்தில் சந்தேகம் வந்தால் முந்தின வாக்கியங்களைக்கொண்டு நிச்சயிக்கவேண்டும். இது சாத்தியமாகாதபக்ஷத்தில் பிந்திய வாக்கியங்களைக்கொண்டு நிச்சயிக்கவேண்டும். பிரகிருதத்தில் அக்கினி சப்தத்தை முதலில் கேட்டமாத்திரத்தில் சந்தேகம் தெளிவாகாவிட்டாலும், பிந்தின வாக்கியத்தால் மாணாக்கன்தான் என்று தெரியவருகிறது. இதுபோல் வாக்கியத்தின் ஆரம்பத்தில் ஆகாசபதம் இருந்தாலும் பிந்தின வாக்கிய பலத்தால் அதை பிரம்மம் என்று அறிவதே யுக்தம். (20)

ஆகையால் ஆகாசசப்தம் பிரம்மம் என்று நிச்சயிக்கப்பட்டது. (21)

IX. பூர்வபக்ஷபலன்:—உத்கீதத்தை பூதாகாசஸ்வரூபமாக உபாசித்தல்.

சித்தாந்தபலன்:— ஷையை பிரம்மஸ்வரூபமாக உபாசித்தல். (22)

X. வியாஸாதிகரணமேலப்படி அத்வைதசுருக்கம்

சுருக்கமான சுலோகங்கள்.

आकाश इति होवाचेत्यत्र खंब्रह्मवात्रखम् ।
शब्दस्य तत्ररूढत्वाद्व्यवादेः सर्जनादपि ॥
साकाश जगदुत्पत्ति हेतुत्वाच्छ्रौत रूढितः ।
एवकारादिना चात्र ब्रह्मैवाऽऽकाशशब्दितम् ॥ 23

2. விஷயம்.

முன்சொன்ன ஹிரண்மய வாக்கியத்துக்கு மேல் வாக்கியத்தில் மஹார்ஷியான சாலாவத்தியர் சர்வலோகத்துக்கும் ஆதாரமான வஸ்துவைக்கேட்ட சமயத்தில் பிரவாஹணர் என்னும் அரசன்

आकाश इति होवाच सर्वाणि
हवा इमानि भूतान्याकाशादेव समु
त्पद्यन्ते आकाशं प्रत्यस्तं यन्ति
आकाशो ह्येवैभ्यो ज्यायान् आकाशः
परायणम्

என்று சொன்னார். (24)

3. சந்தேகம்:—

இவ்விடத்தில் ஆகாச சப்தத்துக்கு சாதாரண ஆகாசமென்று அர்த்தமா? அல்லது பிரம்மம் என்று அர்த்தமா?

என்பது சந்தேகம். (25)

4. பூர்வபக்ஷம்:—

சாதாரணமான அர்த்தத்தையே எடுத்துக்கொள்ளவேண்டும். சகல பூதங்களின் உற்பத்தி நாசங்களுக்குக் காரணமாயிருக்கும் தன்மை ஆகாசத்தினிடத்தில் பொருந்தும். ஏனெனின்.

आकाशाद्वायुः वायोरग्निः

முதலிய வாக்கியங்களில் வாயுமுதலிய சகலபூதங்களும் ஆகாசகாரியங்கள் என்று சொல்லப்பட்டிருக்கிறது. (26)

5. சித்தாந்தம்:—

ஆகாசசப்தத்துக்கு பிரம்மம் என்றே அர்த்தம். ஏனெனின் सर्वाणि हवै என்பதில் சர்வ சப்தத்தால் மிச்சமன்றியில் ஆகாசமுள்ளபடி சமஸ்தமான பூதங்களின் உற்பத்திகாரணம் கூறப்பட்டிருக்கிறது. ஆகாசமே ஆகாசத்துக்குக் காரணமாகமாட்டாது. வியவஹாரத்தில் ஆகாச சப்தத்துக்கு பிரசித்த ஆகாசமே அர்த்தமாகலாம். சுருதியில் பிரம்மமென்றும் அர்த்தமாகலாம். ஏனெனின்

आकाशो वै नामरूपयोर्निर्वहिता

என்று சுருதியில் சொல்லப்பட்டிருக்கிறது.

மேலும் आकाशादेव என்கிறதில் ஏவ காரணமானது வேறுகாரணத்தை நிராகரிக்கிறது. இது ஆகாசபக்ஷத்தில் சம்பவிக்கமாட்டாது. ஏனெனின் ஆகாசத்தைவிட வேறான மிருத் முதலியவைகள் கடம் முதலியவைகளுக்குக் காரணமாயிருப்பதைக் கண்டிருக்கிறோம்.

பிரம்மபக்ஷத்திலோ, பிரம்மம் சத்ரூபம், எதற்கும் வேறன்று, ஆகையால் வேறு காரணமில்லை என்றுசொல்லுவது பொருந்தும்.

வேறு சுருதிகளிலும் பிரம்மத்தைப்பற்றி

ज्यायान् पृथिव्याः ज्यायानन्तरिक्षात्

என்றும்

विज्ञानानन्दं ब्रह्म रातेर्दातुः परायणं

(கர்மபலத்தைக் கொடுக்க சமர்த்தம்) என்றும் சொல்லியிருக்கிறது. ஆகையால் பிரம்மமே ஆகாச சப்தத்தால் கூறப்பட்டிருக்கிறது. (27)

XI. விசிஷ்டாத்வைதச் சுருக்கம்.

I-1-8-(22)

1. இதின் விஷயவாக்கியம்:—சா I-9-1 (அத்வைதம் பார்க்க). (28)

2. சந்தேகம்:—ஆகாச சப்தத்தால் கூறப்பட்ட ஜகத்காரணம்.

(1) பூதாகாசமா? அல்லது

(2) சகல சித் அசித் வஸ்துக்களைவிட வேறான பிரம்மமா?

என்பது சந்தேகம். (29)

3. பூர்வபக்ஷம்:—ஆகாச சப்தத்தால் பிரசித்தமான ஆகாசத்தை அறியவேண்டியது. ஏனெனின்

यतावा इमानि भूतानि என்று பொதுவாய் சொல்லியிருக்கிறது. आकाशादेव என்றும் விசேஷமாய் சொல்லியிருக்கிறது. ஆகையால் பூதங்களின் உற்பத்தி காரணம் ஆகாசம்தான். சுருதிகளுக்கு முக்கியார்த்தம் செய்யக்கூடாது. கௌணார்த்தம்தான் செய்யவேண்டியது. (30)

4. சித்தாந்தம்:—

सर्वाणिहवा इमानि भूतानि

என்பதாய் பிரசித்தவஸ்து சொல்லப்பட்டிருக்கிறது. அதற்கு சங்கற்பாதிகளும் சொல்லப்பட்டிருக்கின்றன. இவைகள் ஜட ஆகாசத்துக்குப் பொருந்தாதபடியால், சதசத்விலக்ஷணமான பரமாத்மாதான் ஆகாசசப்தத்தால் கூறப்பட்ட ஜகத்காரணமாயிருக்கவேண்டும். (31)

5. சூத்திரார்த்தம்

आकाशः ஆகாச சப்தத்தால் கூறப்பட்டது பிரம்மமே, ஏனெனின்

तल्लिंगात् அதினுடைய ஜகத்காரணத்வம் என்கிற பிரசித்தமான லிங்கம் சொல்லியிருக்கிறது. (32)

## XII. துவைதசுருக்கம்.

### I-1-8-வது அதிகரணம் (22).

1. இதின் கருத்து :—சில சுருதிகளில் காணப்படும் ஆகாச சப்தம் பரமாத்மாவைக் கூறுகிறதென்பதாம். (33)

2. இதின் விஷயவாக்கியம் :—சாந்தோக்கியத்தின் முதலாவது அத்தியாயத்தில்

अस्य लोकस्य कागतिरिति

आकश इति होवाच

என்கிற சாலாவத்தியனுடைய பிரச்னோத்திர வசனம் ஏற்பட்டிருக்கிறது. (34)

3. சங்கதி :—முந்தின அதிகரணத்தால் அந்தஸ்தனான புருஷன் சமுத்திர மத்தியில் வாசம்செய்தல் முதலிய விசேஷ தர்மத்தால் இந்திராதி தேவதைகளன்று என்று ஏற்படுகிறது.

அப்படியே விஷயவாக்கியத்திலுள்ள ஆகாசசப்தம் பூதாகாசம் அல்லவென்பதற்கு விசேஷ தர்மம் சொல்லியிராததால் பிரதியுதாஹரணசங்கதி ஏற்படுகிறது. (35)

4. சந்தேகம் :—இந்த ஆகாச சப்தம்

(1) பூதாகாசத்தைக் கூறுகிறதா? அல்லது

(2) விஷ்ணுவைக் கூறுகிறதா? (36)

5. பூர்வபக்ஷம் :—ஆகாச சப்தத்துக்கு பூதாகாசம் என்றே ரூடி (இடுகுறி)யான அர்த்தமாகையால் அதையே இது கூறவேண்டும். (37)

6. சித்தாந்தம் :—22-வது சூத்திரம்.

(அ-கை) ஆகாசம் வாயுமுதலிய பூதங்களின் பெயர்கள் பிரம்மத்தினிடத்தில் எப்படிப் பொருந்துமென்பதைச் சொல்லுகிறார். (38)

7. आकाशः ஆகாச சப்தத்தால் கூறப்படுவது பிரம்மமே, பிரசித்தாகாசமன்று. ஏனெனின்

तल्लिंगात् சாந்தோக்கிய உபநிஷத்தின் சுருதியில் யாதொரு ஆகாசம் கூறப்பட்டிருக்கிறதோ அதற்கு சர்வோத்க்ருஷ்டத்தன்மை முதலிய பிரம்மதர்மம் இருக்கிறதாகச் சொல்லியிருக்கிறது. ஆகையால் ஆகாசம் பூதாகாசமல்ல. (39)

8. பூர்வபக்ஷபலன் :—ஆக்ஷேபம்தான்.

சித்தாந்தபலன் :—சமாதானமே. (40)

I-1-8-வது அதிகரணம்

முற்றிற்று.

---

## I-1-9-வது அதிகரணத்தின்

அனுக்கிரமணிகை.



## I-1-9-வது அதிகரணம்.

**I.** இதின் பெயர்:-பிராணாதிகரணமென்பதாம். (1)

**II.** இந்த அதிகரணத்தின் கருத்து :—பிராண சப்தவாச்சியம் பிரம்மம் என்னும் நிரூபணம். (2)

**III.** இதில் அடங்கிய சூத்திரம் —: 23-வது (ஒன்று). (3)

**IV.** சங்கதி :—

அ-கை :—ஆகாச வாக்கியத்தில் கூறின நியாயத்தை இந்த அதிகரணத்திலும் கூறுகிறார்.

(1) முந்தின அதிகரணத்துக்கும் இதற்கும்:—

முந்தின அதிகரணத்தில் பிரம்மத்துக்கே உரிய லிங்கங்களால் ஆகாச சப்தம் பிரம்மத்தைத்தான் கூற வேண்டியது என்று சொல்லி ஆகாசசுருதி பாதிக்கப் பட்டது. அப்படி பிராணசுருதி பாதிக்கப்படவில்லை. ஏனெனின் பூதங்கள் அடங்கும் ஸ்தானம் என்கிற லிங்கம் பிராணன் விஷயத்திலும் பொருந்தும். ஆகவே பிராணசுருதி பாதிக்கப்படவில்லை. இப்படி முந்தின அதிகரணத்தின் யுக்தி திர்ஷ்டாந்தம் இந்த அதிகரணத்தில் உபயோகப்படாததால் பிரத்தியுதாஹரண சங்கதி ஏற்படுகிறது.

(2) இதர சங்கதிகள் :—உபாஸிய பிரம்மத்தினிடத்தில் சுருதிகள் சமன்வயப்படுவதால் சுருதிமுதலிய சங்கதிகளை முன்போலவே அறியவும். (4)

**V.** விஷயவாக்கியம் :—சாந்தோக்கியத்தில்

प्रस्तोतर्या देवता प्रस्तावमन्वायत्ता (I-10-9)

என்று ஆரம்பித்து

कतमा सा देवतेति (छा I-11 4)

प्राणइति होवाच सर्वाणि ह्वा इमानि भूतानि प्राणमेवा

भिसं विशान्ति प्राणमभ्युज्जिहते सैषा देवता

प्रस्तावमन्वायत्ता (छा I-11-5)

ரா உத்கீதப்பிரகரணத்தில் சொல்லியிருக்கிறது :- தாரித்திரியத்தைஅடைந்த சாக்கிராயண ரிஷியானவர் தனத்தைச் சம்பாதிக்கும்பொருட்டு ஒரு அரசன் யாகம் செய்துகொண்டிருந்த யாகசாலைக்குச்சென்று அவ்விடத்தில் தன்னுடைய வித்தையைக் காட்டும்பொருட்டு பிரஸ்தோதாவைப் பார்த்துச் சொன்னதாவது :—பிரஸ்தோதாவே ஸாமத்தின் அவயவமான

பிரஸ்தாவத்தின் தேவதையார். (ரா அதை அறியாமல் வித்துவானான என் முன்னிலையில் நீ ஸ்தோத்திரம்செய்தால் உன் தலை வெடித்துப்போகும். இதைக் கேட்ட பிரஸ்தோதா பயமடைந்து) அந்த தேவதை யார் என்று கேட்க, சாக்கிராயணர் பிராணன் என்று சொன்னார். இந்த பூதங்களெல்லாம் பிராணனையே அடைகின்றன, பிராணனிடமிருந்து உண்டாகின்றன. இந்த தேவதை பிரஸ்தாவத்தை அடைந்திருக்கிறது (என்று சொன்னார்). (5)

VI. சந்தேகம் :—

(1) சம்சயநிர்ணயங்களை முந்தின சூத்திரத்திற் சொல்லியபடியே அறியவேண்டியது. அதாவது :—

பிராண சப்தத்தால் பிரம்மம் கூறப்படுகிறதா?

அல்லது பஞ்சவிருத்திப்பிராணன் கூறப்படுகிறதா?

சம்சயத்துக்குக் காரணமென்னவெனின் பிரம்மத்தினிடத்திலும் பஞ்சவிருத்திப் பிராணனிடத்திலும் பிராணசப்தம் உபயோகிக்கப்படுகிறது].

(1) प्राणबन्धनं हिसोम्यमनः (छा VI-8-2)

(2) प्राणस्य प्राणम् (बृ IV-4-18)

முதலிய சுருதிகளில் பிராணசப்தம் பிரம்மவிஷயமாக உபயோகிக்கப்பட்டிருக்கிறது.

(1) முதலாவது சுருதியின் அர்த்தம் :—

மனத்தை உபாதியாக உடைய ஜீவன் பிராணனாகிற பிரம்மத்துடன் சுஷுப்தியில் ஒன்றாகிவிடுகிறான்.

(2) இரண்டின் அர்த்தம் :—

பிராணவாயுவை ப்ரேரணைசெய்கிற அதாவது அதற்குரிய யோக்கியதையை அதற்குக் கொடுக்கிற ஆத்மாவை அறிகிறவன் பிரம்மஞானி.

லோகத்திலும் வேதத்திலும் பிராணசப்தம் வாயு விகாரம் என்கிற அர்த்தத்தில் பிரசித்தமாக உபயோகிக்கப்படுவதாகவும் தெரியவருகிறது.

ஆகவே பிராணசப்தம் வாயு விசேஷத்தையும் பிரம்மத்தையும் கூறுவதால் இவ்விடத்தில் பிராணசப்தத்தால் எதை கிரகிப்பது யுக்தம் என்று சந்தேகம் ஜனிக்கிறது. (6)

VII. பூர்வபக்ஷம் :—

(1) இந்த சுருதியில் எதை கிரகிப்பது யுக்தம்? வாயு விகாரமான பஞ்சவிருத்திகளுடன் கூடின பிராணனைக்கிரகிப்பது யுக்தம். பிராண சப்தத்துக்கு இந்த அர்த்தம்தான் பிரசித்தமாக இருக்கிறது என்று சொல்லியிருக்கிறோம். (7)

(2) முன்போலவே இவ்விடத்திலும் பிரம்மலிங்கமிருப்பதால் அதாவது பின்தின வாக்கியத்தில் பூதங்கள் லயமாகுதல், மறுபடியும் உண்டாகுதல் ஆகிய ஈசுவரகாரியம் காணப்படுவதால், பிரம்மத்தையே கிரகிக்கவேண்டியது. இந்த அர்த்தம் முந்தின சூத்திரத்தில் சித்தித்துவிட்டபடியால் நூதன சூத்திரம் அனாவசியம் என்றும் ஒருவன் சொல்லும் பக்ஷத்தில்,

(ரா முந்தின சூத்திரத்தில் காணப்படாத ஒரு நூதன சங்கை இவ்விடத்தில் காணப்படுகிறது. அவ்விடத்தில் சர்வ சப்தத்தால் பூதங்களின் உற்பத்தி லய காரணத்தன்மை ஆகாசத்தில் பொருந்தாமலிருக்க இவ்விடத்தில் அவைகள் பிராணனிடத்தில் பொருந்துகின்றன. ஆகவே)

முந்தின ஆக்ஷேபம் சரியன்று. ஏனெனின் முக்கிய பிராணனிடத்திலும் பூதங்கள் லயமடைவதாகவும் அதினிடமிருந்து வெளிப்படுவதாகவும் பார்த்திருக்கிறோம். (சுருதிப்பிரமாணம்).

यदा वैपुरुषः स्वपितिप्राणं तर्हि वागप्ये

तिप्राणं चक्षुः प्राणं श्रोत्रं प्राणंमनः सयदा

प्रबुध्यते प्राणा देवाधिपुन र्जायन्ते (शत-ब्रा X-3-3-6)

புருஷன் எப்போது தூங்குகிறானோ அப்போது வாக்கு பிராணனை அடைகிறது, சக்ஷுஸ் பிராணனை அடைகிறது, சுரோத்திரம் பிராணனை அடைகிறது, மனது பிராணனை அடைகிறது. அவன் விழித்துக் கொள்ளும்போது பிராணனிடமிருந்தே அவைகள் மறுபடியும் உண்டாகின்றன என்று சுருதி கூறுகிறது.

தூங்கும்சமயத்தில் பிராணவிருத்தியானது லயமடையாமலிருக்க அதினிடத்தில் இந்திரியவிருத்திகள் அடங்கிப்போவதும் விழித்துக்கொண்ட சமயத்தில் அவைகள்மறுபடியும் உண்டாவதும்பிரத்தியக்ஷம்.

(ரா இந்திரியங்களுக்குப் பிராணனிடத்தில் லயம் முதலியவைகளை சுருதி கூறியிருந்தாலும், மஹாபூதங்களின் லயத்தை மேல்வாக்கியங்களில் சொல்லப்பட்டிருக்கிறதை, அந்த வாக்கியங்கள் எப்படி ஒவ்வும்

எனின்) இந்திரியங்கள் அபஞ்சீகிருத பூதங்களினின்றும் உண்டானவையாதலால் பூதசாரங்கள், இந்திரியங்களின் லயம் முதலியவைகளைக் கூறுவதினால் பூதங்களுக்கும் பிராணனிடத்தில் லயம் முதலியவை சித்தித்துவிடுகின்றன. ஆகையால் பூதங்களில் உற்பத்தி லயங்களைக்கூறும் வாக்கியசேஷமும் முக்கிய பிராணனிடத்தில் விருத்தப்படுகிறதில்லை. (8)

மேலும், பிரஸ்தாவதேவதையானது பிராணன் என்று சொன்னபிறகு உத்கீத, பிரதிஹார, இவைகளின் தேவதைகள் ஆதித்தியன் என்றும், அன்னம் என்றும் சொல்லியிருக்கிறது. இவைகள் பிரம்மமல்ல. ஆகையால் இவைகளுக்குச் சமானமாயிருக்கிற பிராணனும் பிரம்மம் அல்லவென்று பூர்வபக்ஷி சொல்ல. 9

VIII. சித்தாந்தம்.

1. சூத்திரக்காரர்

## अतएवप्राणः ॥ २३ ॥

என்னும் சூத்திரத்தில் உத்தரம் கூறுகிறார். (10)

2. பத உரை.

अतएव ஆகையாலேயே

प्राणः பிராணன். (11)

3. பொழிப்புரை.

முன்சூத்திரத்திற் கூறப்பட்ட யுக்தியான பிரம்மலிங்கமிருப்பதினாலேயே பிராணன் என்கிற சப்தமும் பிரம்மத்தைக்கூறுகிறதென்று அறியவேண்டியது. 12

4. பாஷியம்.

(1) ஸ்வசித்தாந்தம். முந்தின சூத்திரத்தில் பிரம்மலிங்கமிருப்பதால் ஆகாசம் பிரம்மம் என்று நிர்ணயிக்கப்பட்டது. அந்தலிங்கம் (இப்போதும்) இருப்பதினாலேயே பிராண சப்தமும் பரப்பிரம்மத்தைக்கூறுவது யுக்தம். பிராணனுக்கும் பிரம்மலிங்க சம்பந்தம் சுருதியில் கூறப்படுகிறது.

सर्वाणि हवा इमानि भूतानि प्राणमेवा
भिसं विशन्ति प्राणमभ्युज्जिहते (छा I-11-4, 5)

"இந்த பூதங்களெல்லாம் பிராணனிடத்திலேயே லயமாகின்றன; பிராணனிடமிருந்தே உண்டாகின்றன"

என்கிற சுருதியானது சகல பூதங்களின் உற்பத்தி நாசங்களுக்கு பிராணன் காரணம் என்று சொல்லுவதினால் பிராணன் பிரம்மம் என்பது நிச்சயப்படுகிறது. (13)

(2) (இனி ஆக்ஷேபத்துக்கு சமாதானம் கூறப்படுகிறது).

(a) தூக்கத்திலும் விழிப்பிலும் லயமும் உற்பத்தியும் காணப்படுவதினால், முக்கிய பிராணனை கிரகிக்கிற விஷயத்திலும் பூதங்களின் உற்பத்தி லயங்களைக்கூறும் வாக்கியம விருத்தப்படவில்லை என்று சொன்ன பூர்வபக்ஷத்துக்கு,

தூக்கத்திலும் ஜாக்கிரத்திலும் கேவலம் இந்திரியங்கள்தான் பிராணனை ஆசிரயித்துக்கொண்டும், அதினிடத்தில் லயமடைந்தும், மறுபடியும் அதினிடமிருந்தும் உண்டாகியுமிருப்பது காணப்படுகிறது. சகல பூதங்களும் பிராணனை இப்படி ஆசிரயிப்பதாக காணப்படவில்லை. இந்த சுருதியில் सर्वाणिहवा इमानि भूतानि என்பதினால் ஜீவனால் அதிஷ்டிதமான சகலபூதங்கள், சகல இந்திரியங்கள், சகல சரீரங்கள், ஆகிய எல்லாம் கூறப்பட்டிருக்கின்றன. (ஆகையால் பூர்வபக்ஷம் சித்திக்கவில்லை). (14)

रा (भूतानि என்பதற்கு भवन्तीति என்று வ்யுத்பத்திசெய்து உண்டாகிறதெல்லாம் என்கிற அர்த்தத்தில் சகலமும் பிராணனிடத்தில் அடைவதாகச் சொல்லக்கூடாதென்று சொன்னர். இனி பூதசப்தத்துக்கு மகாபூதம் என்கிற அர்த்தத்தை கிரகித்தாலும் அப்படியே என்றுகாட்டுகிறார்).

(b) பூதசுருதியானது மகாபூதங்களைக் கூறினாலும், பிரம்ம லிங்கத்துக்கு விரோதமில்லை (அதாவது சுருதியை பிரம்மபரமாக அர்த்தம்செய்யமுடியும்) (பூதங்களினின்றும் உண்டான பிராணன் பூதங்களுக்குக் காரணமாகமாட்டான் என்பது கருத்து).

தூக்கத்திலும் ஜாக்கிரத்திலும் இந்திரியங்களும் அவைகளின் விஷயங்களும் பிராணனிடத்தில் லயப்படுகின்றனவென்பதும், பிராணனிடமிருந்து உண்டாகின்றனவென்பதும்,

यदासुप्तः स्वप्नं न कञ्चन पश्यत्य
थास्मिन् प्राणएवैकधा भवति तदैनं
वाक् सर्वैर्नामभिः सहाप्येति (कौ III-3)

(தூங்குகிறவன் எப்போது ஸ்வப்னத்தைப் பார்க்கிறதில்லையோ அப்போது அவன் பிராணனுடன் ஒன்றாகிவிடுகிறான், வாக்கு சகல நாமங்களுடனும் அவனை அடைகிறது).

என்கிற சுருதியில் தெரியவருகிறது. (ஆகையால் பிராணசப்தம் முக்கியப் பிராணனையே கூறட்டுமே எனின்) அவ்விடத்திலும் பிரம்மலிங்கமிருப்பதாலும், பிராணன் பௌதிகமாயிருப்பதாலும், பிராண சப்தத்தால் பிரம்மத்தையே கிரகிக்கவேண்டியது.

ரா (சுஷுப்திகாலத்தில் ஜீவன் பிராணனுடன் ஒன்றாகப்போகிறான் என்று சுருதி சொல்லுகிறது. பிராணன் ஜடமானதால் முக்கிய பிராணன் என்கிற அர்த்தம் பொருந்தாது. ஆகையால் பிராண சப்தத்தால் பிரம்மத்தையே அறியவேண்டியது. மேலும் சகலமும் அதில் லயமாவதாகச் சொல்லியிருப்பதால் பிரம்மத்தைத்தான் அறியவேண்டியது. இப்படி ஜீவனைவிட வேறாகாமை என்னும் லிங்கமென்ன, சகல லயாதாரமாயிருக்கும் தன்மையாகிய லிங்கமென்ன, இந்த லிங்கங்களால் மேற்கண்ட சுருதியில் பிராணசப்தம் பிரம்மத்தையே கூறுகிறது). (15)

மேலும் சமீபத்திலிருக்கிற அன்னம், ஆதித்தியன் இவைகள் பிரம்மமாகாததுபோல் பிராணனும் பிரம்மமாகமாட்டாது என்று சொன்னவிஷயத்தில்,

இந்த யுக்தி ஒப்புக்கொள்ளத்தக்கதில்லை. வேறு வாக்கியங்களிலுள்ளதை அபேக்ஷித்து தன் வாக்கியத்திலுள்ள லிங்கம் பலமானதால், தன் வாக்கியத்திலுள்ள இதரபதங்களால் பிராண சப்தத்துக்கு பிரம்மம்தான் அர்த்தம என்பது ஸ்பஷ்டமாய்த் தெரியவர, இதரவாக்கியங்கள் நிஷ்பிரயோஜனங்கள் (16)

பிராணசப்தத்தால் இந்து விருத்திகளுடன்கூடின பிரசித்தமான பிராணன்தான் ஞாபகத்துக்கு வருகிறதென்று சொன்னவிஷயத்தில்,

ரா (பிராணன்தான் என்று சொல்லியிருப்பதாலும், சகல பூதங்களின் உற்பத்திக்குக் காரணமென்று சொல்லியிருப்பதினாலும்) ஆகாச சப்தத்துக்கு பிரம்மம் என்று அர்த்தம் செய்ததுபோல் இவ்விடத்திலும் செய்துகொள்ளவேண்டியது. ஆகையால் பிரஸ்தாபத்தின் தேவதையான பிராணன் பிரம்மம் என்று சித்தித்தது. (17)

IX. பூர்வபக்ஷத்தின் பலன்:—பிராண உபாசனை

சித்தாந்தத்தின் பலன் :—பிரம்மோபாசனை. (18)

ரா சிலர் (விருத்திகாரர்) இந்த சூத்திரத்துக்கு விஷயவாக்கியங்கள்.

(1) प्राणस्य प्राणं (बृ IV-4-18)

என்றும்

(2) प्राणबन्धनं हि सौम्यमनः (छा VI-8-2)

என்றும் சொல்லுகிறார்கள்.

(அர்த்தத்தை பக்கம் பார்க்க).

இது யுக்தமன்று. ஏனெனின் இந்த சுருதிகளில் சப்தபேதமும் பிரகரணபேதமுமிருப்பதால் சம்சயத்துக்கு இடமில்லை.

சப்தபேதம் எப்படி இருக்கிறது எனின் :—தகப்பனுடைய தகப்பனர் என்று சொல்லுகிற இடத்தில் "தகப்பனுடைய" என்கிற ஆறும்வேற்றுமையால் கூறப்பட்ட புருஷனைவிட "தகப்பனுடைய தகப்பனர்" என்கிற முதல்வேற்றுமையால் கூறப்பட்ட புருஷன் வேறு என்று எப்படி அறியப்படுகிறதோ அப்படி "பிராணனுடைய பிராணன்" என்கிற இடத்திலும் இரண்டு சப்தங்கள் பிரயோகிக்கப்பட்டிருப்பதால், பிரசித்தமான பிராணனைவிட அதனுடைய பிராணன் வேறு என்பது நிச்சயிக்கப்படுகிறது. "அவனே அவனுடைய" என்று சொல்லுவதினால் பேதம் விளங்கமாட்டாது.

விருத்திகாருடைய விஷயவாக்கியப்படி "பிராணனுடைய பிராணன்" என்கிற இடத்தில் பிராணன் என்பது பூதபிராணனை கூறுகிறதா அல்லது பிரம்மத்தைக் கூறுகிறதா என்பது சந்தேகம் இருக்கும். பூதபிராணனுடைய பூதபிராணன் என்று சொல்லுவதில் பேதம் ஏற்படவில்லை. ஆகையால் அந்த அர்த்தம் பொருந்தவில்லை.

பிரகரணபேதம் எப்படியெனின் :—எந்தப் பிரகரணத்தில் எது வேறு பெயர்களாலும் கூறப்படுகிறதோ, அதுவே அந்தப் பிரகரணத்தில் அதுதான் உத்தேசிக்கப்பட்டிருக்கிறதென்று அறிகிறோம். எப்படி ஜ்யோதிஷ்டோமாதிகாரணத்தில் (பிரகரணத்தில்)

वसन्ते वसन्ते ज्योतिषा यजेत

(ஒவ்வொரு வசந்தகாலத்திலும் ஜோதியால் யாகம் செய்யவேண்டியது) என்கிற இடத்தில் ஜோதிஸ் சப்தம் ஜோதிஷ்டோமத்தைக் கூறுகிறதோ அப்படி பரப்பிரம்மத்தைப்பற்றிச் சொல்லும் பிரகரணத்திலும் प्राणबन्धनं हि सौम्य मनः என்கிற சுருதியிலிருக்கிற பிராண சப்தம் வாயு விகாரத்தைமட்டும் எப்படிகூறும். ஆகவே சம்சயத்துக்கு இடமிராதபடியால் மேற்கூறிய சுருதிகள் விஷயவாக்கியங்களாகா.

பிரஸ்தாவ தேவதையைப்பற்றிச் சொல்லும் சுருதியில் பிராண சப்தத்தில் சம்சயமும் பூர்வபக்ஷமும் நிர்ணயமும் முன் விவரிக்கப்பட்டிருக்கின்றன. (19)

XI. வியாஸாதிகரணமாலைப்படி அத்வைதச்சுருக்கம்.

1. சுருக்கமான சுலோகங்கள் :—

मुखस्थो वायुरीशोवा प्राणः प्रस्तावदेवता ।
वायुर्भवेत्तत्र सुप्तौ भूतसारेन्द्रियक्षयात् ॥
संकोचोऽक्षपरत्वे स्यात्सर्वं भूतलयश्रुतेः ।
आकाश शब्दवत्प्राण शब्दस्ते नेशवाचकः ॥ (20)

2. விஷயம் :—

ஆகாசவாக்கியத்துக்கு மேல்வாக்கியத்தில் பிரஸ்தோதாவானவன் பிரஸ்தாவமென்ற சாமபாகத்துக்கு தேவதை எது என்று கேட்க உஷஸ்தியானவன்.

प्राणइतिहोवाच सर्वाणिहवा
इमानि भूतानि प्राणमेवाभिसं विशन्ति
प्राणमभ्युज्जिहते, सैषादेवता
प्रस्तावमन्वायत्ता

என்று சொன்னான். (21)

3. சந்தேகம் :-இவ்விடத்தில் பிராண சப்தத்துக்கு அர்த்தம் முகத்துவாரத்திலிருக்கிற வாயுவா ? அல்லது பிரம்மமா ? என்பது சந்தேகம். (22)

4. பூர்வபக்ஷம்:--முகத்துவாரத்திலிருக்கிற வாயுவே அறியத்தக்கது. ஏனெனின் சகல பூதங்களும் வாயுவினிடத்தில் லயமாய்விடுகின்றன. சுஷுப்தி காலத்தில் சகல இந்திரியங்களும் பிராணவாயுவில் லயமாகின்றன. (23)

5. சித்தாந்தம் :—

இந்திரியங்கள்மட்டும் லயமடைவதாக வியாக்கியானம் செய்தால் सर्वाणि என்கிற பதத்தின் அர்த்தம் குறிகிப்போகும். ஆகாசசப்தம்போல் பிராணசப்தமும் சுருதிப்பிரயோகத்தாலும் ஏவகாரப்பிரயோகத்தாலும் பிரம்மத்தையே கூறுவதாகச் சொல்லவேண்டியது. प्राणस्य प्राणः என்கிற சுருதி வசனத்தில் இரண்டாவது பிராணசப்தம் பிரம்மத்தைத்தான் கூறுவதால் சுருதிப்பிரயோகம் வெளியாகிறது.

ஆகையால் பிராணன் ஈசுவரனே. (24)

XII. விசிஷ்டாத்வைதப்படி

I-1-9 (23)-வதின் சுருக்கம்.

1. விஷய வாக்கியம்:- சா-I-10-9, I-11-4 அத்வைதம் பார்க்க. (25)

2. சந்தேகம் :—இந்த வாக்கியத்திலுள்ள பிராணசப்தம்.

(1) பிரசித்த பிராணனைக் கூறுகிறதா ? அல்லது

(2) பிரம்மத்தைக் கூறுகிறதா ?

என்பது சந்தேகம். (26)

3. பூர்வபக்ஷம் :—பிரசித்தப்பிராணனே. ஏனெனின் சகல ஜகத்தும் பிராணாதீனமாயிருக்கிறது. ஆகையால் பிராணன் தான் சகல ஜகத்துக்கும் காரணமென்று சொல்லத்தக்கவன். (27)

4. சித்தாந்தம்:—(1) கந்தமூல பாஷாணாதிகள் பிராணனன்றியிலேயே இருக்கின்றன.

(4) சேதனங்களான ஜீவர்கள் பிராணாதீனமன்றியிலுமிருக்கிறார்கள்.

(3) சகல பிராணிகளும் பிராணனிடமிருந்து உண்டாகிறதாக சொல்லியிருக்கிறது.

अतएवप्राणः ஆகையால் பிராணசப்தத்தால் கூறப்பட்டது ஜடப்பிராணனன்று, பரமாத்மாவே. (28)

XIII. துவைதப்படி I-1-9-வது அதிகரணம்.

1. இதின் கருத்து :—சில சுருதிகளிலுள்ள பிராண சப்தம் பரமாத்மாவைக் கூறுகிறதென்பதாம்.

2. இதிலடங்கிய சூத்திரம் :—1. (23), (29)

3. இதின் விஷயவாக்கியம் :—

तद्वैत्वं प्राणो अभवः

அதாவது:—ஆகையால் நீ பிராணனாக ஆய்விடுகிறாய்.

என்னும் தைத்திரீயத்தின் मतीसन् ம்ரியமாண என்கிற அநுவாகம். (30)

4. சந்தேகம் :—இந்த சுருதியில்வரும் பிராண சப்தம்.

(1) முக்கியவாயுவா ? அல்லது

(2) விஷ்ணுவா ?

என்பது சந்தேகம். (31)

5. சங்கதி :— (1) முந்தின அதிகரணத்தில் சொன்னதுபோல் பிரத்தியுதாஹரணசங்கதி ஏற்படலாம். அல்லது.

(2) முந்தின அதிகரணத்தில் ஆகாசம் இன்னது என்று விசாரிக்கப்பட்டது. आकाशात् वायुः என்று சுருதி சொல்லுகிறது. அந்த வாயு இப்போது விசாரிக்கப்படுவதால் இரண்டு அதிகரணங்களுக்கும் கிரமவிசாரசங்கதி என்று சொல்லலாம். (32)

6. பூர்வபக்ஷம் :—

பிராணசப்தத்துக்கு முக்கியப்பிராணன் என்பதே ரூடி அர்த்தம். அதையே எடுத்துக்கொள்ளவேண்டியது. பிராணசப்தத்துக்கு விஷ்ணு என்கிற அர்த்தம் ஏற்படவில்லை.

7. சித்தாந்தம் :—23-வது சூத்திரம்.

அ-கை:- பிராணன் முதலிய தேகத்திலிருக்கிறவைகளின் பெயர்கள் பிரம்மத்தினிடத்தில் எப்படிப் பொருந்தும் என்பதைச் சொல்லுகிறார். (34)

प्राण: விஷயவாக்கியத்திலுள்ள பிராணன் பிரம்மமே, வேறன்று. ஏனெனின்

अत एवश्रीश्च ते लक्ष्मीश्च पत्न्यौ अहोरात्रेपार्श्वे

என்கிற चित् உபநிஷத்தில் பிராணனுக்கு லக்ஷ்மீபதி என்கிற விஷ்ணுவின் தர்மம் சொல்லியிருக்கிறது. ஆகையால் பிராணன் விஷ்ணுவாகத்தான் இருக்கவேண்டும். (35)

XIV. பூர்வபக்ஷபலன்:—ஆநந்தமயாக்ஷேபம்.

சித்தாந்தபலன் :—சமாதானம்தான். (36)

I-1-9-வது அதிகரணம்.

முற்றிற்று.

---

## I-1-10-வது அதிகரணத்தின்

### அனுக்கிரமணிகை.

I. இதின் பெயர் 1

II. இதின்கருத்து 2

III. சங்கதி 3

IV. விஷயவாக்கியம் 4

V. சந்தேகம் 5

VI. இதிலடங்கிய சூத்திரங்கள் 6

VII. பூர்வபக்ஷம்

1. ஜோதிஸ்சப்தம் சாதாரணமாய் ஆதித்தியாதிகளைத்தான் கூறும். அது ரூபாதியற்ற பிரம்மத்தைக் கூறமாட்டாது. 7

2. ஜோதிஸ்ஸுக்குக் கூறப்பட்ட [எல்லை] பிரம்ம விஷயத்தில் பொருந்தமாட்டாது. 8

3. சாந்தோக்கிய சுருதிப்படி அத்தியாசபலத்தால் ஜோதிஸை சாதாரணமாகத்தான் அறியவேண்டும். 9

4. சாந்தோக்கியத்தில் (III-13-8) கூறப்பட்ட அற்பபலம் பிரம்ம விஷயத்தில் பொருந்தாது 10

5. ஜோதிர் வாக்கியத்தில் பிரம்மலிங்கமேயில்லை 11

VIII. சித்தாந்தம்:—

1. 24-வது சூத்திரம் 12
2. பதஉரை 13
3. பொழிப்புரை 14
4. பாஷ்யம்

1. ஸ்வமதசித்தாந்தம்:—

ஜோதிஸ் சப்தத்தால் பிரம்மத்தை அறியவேண்டியது

(a) முந்தின வாக்கியத்தை அனுசரித்தும் 15

(b) பிந்தின வாக்கியத்தை அனுசரித்தும் 16

2. பரமதகண்டனம்:—

(1) 7-க்கு உத்தரம்:—(a) ஜோதிஸ் சப்தத்துக்குச் சாதாரண அர்த்தத்தை ஒப்புக்கொண்டாலும், பிரகிருதத்தில் அது பிரம்மத்தையே கூறலாம். 17

(b) வேறு அர்த்தத்தை ஒப்புக்கொண்டாலும் அது பிரகிருதத்தில் பிரம்மத்தைக் கூறலாம். 18

(1) நிர்மாணம்—சுருதிப்பிரமாணம் 19

(2) 8-க்கு உத்தரம்:—உபாசனையின்பொருட்டு பிரம்மத்துக்கு பிரதேசத்தைக் கூறலாம் 20

## I-1-10-வது அதிகரணம்

I. இதின் பெயர்:-ஜோதிரதிகரணமென்பதாம். 1

II. இந்த அதிகரணத்தின் கருத்து:—ஜோதிஸ் சப்தத்தால் கூறப்படுவது பிரம்மம் என்னும் நிரூபணம். (2)

III. சங்கதி:—

(1) ஆ அ-கை:—ஆகாச வாக்கியமும் பிராண வாக்கியமும் பிரம்மபரமென்று நிரூபித்து ஜோதிர் வாக்கியமும் பிரம்மபரம் என்று நிரூபிக்கிறார்.

(2) முந்தின அதிகரணத்துக்கும் இதற்கும்:- முந்தின அதிகரணத்தில் பிராணவாக்கியத்தில் பிரம்மலிங்கம் காணப்பட்டபடியால் அவ்வாக்கியம் பிரம்மபரமாக அர்த்தஞ் செய்யப்பட்டது. ஜோதிர் வாக்கியத்தில் பிரம்மலிங்கம் காணப்படாததால், ஜோதிர் வாக்கியம் பிரம்மபரமாக மாட்டாது. ஆகவே முந்தின அதிகரணத்தின் யுக்தி திருஷ்டாந்தம் இந்த அதிகரணத்தில் உபயோகப்படாததால், இரண்டு அதிகரணங்களுக்கும் பிரத்தியுதாஹரண சங்கதி ஏற்படுகிறது.

(3) [ரா இதரசங்கதிகள்:— சாஸ்திர, சுருதி, அத்தியாயம் இந்த சங்கதிகளை முன்போலவே அறியவும். தன்வாக்கியத்தில் ஸ்பஷ்ட பிரம்மலிங்கமில்லாவிடினும், पादोस्य என்னும் முந்தின வாக்கியத்தில் பூதங்களை பாதமாயுடைத்தாயிருக்கும் தன்மையாகிய ஸ்பஷ்ட பிரம்மலிங்கம் காணப்படுவதால் பாதசங்கதி ஏற்படுகிறது. (3)

IV. விஷயவாக்கியம்:—

अथ यदतःपरो दिवो ज्योति र्दीप्यते
विश्वतः पृष्ठेषु सर्वतः पृष्ठेष्वनुत्तमे षूत्तमेषु
लोकेष्विदं वाव तद्यदिदमास्मि-
न्नन्तः पुरुषे ज्योतिः (छा III-13-7)

சாந்தோக்கியத்தில் காயத்திரியை உபாதியாக உடைய பிரம்மத்தின் உபாசனையை சொன்னபிறகு, ஸ்வர்க்கத்துக்கு மேலும், சகலபிராணிவர்க்கத்துக்கு மேலும், பூ:முதலிய சகலலோகங்களுக்கும் மேலும், எவைகளைவிட உத்தமான லோகங்களில்லையோ அப்படிப்பட்ட லோகங்களிலும் எந்த ஜோதிஸ் பிரகாசித்துக்கொண்டிருக்கிறதோ, அதுவே இந்த சரீரத்திற்குள்ளிருக்கிற ஜோதிஸ் என்று சொல்லியிருக்கிறது (தேகத்திலிருக்கிற ஜோதிஸ் தான் சர்வசம்சார மண்டலாதீதமான பரஞ்ஜோதிஸ் என்று அர்த்தம்.) (4)

V. சந்தேகம்:—இவ்விடத்தில் ஜோதிஸ் சப்தம்

(1) ஆதித்தியன் முதலிய ஜோதிஸை கூறுகிறதா?

(2) அல்லது பரமாத்மாவைக் கூறுகிறதா?

முந்தின சூத்திரங்களில் ஆகாசம், பிராணன், இந்த பதங்களுக்கு சாதாரணமான அர்த்தம் ஒன்று இருந்தாலும், பிரம்மலிங்கம் காணப்படுவதினால் பிரம்மம் என்று அர்த்தம் செய்யப்பட்டது. இவ்விடத்தில் அந்த லிங்கம் இருக்கிறதா? இல்லையா வென்பதை விசாரிக்கப்படுகிறது.

சந்தேகபீஜம்:—

ஜோதிஸ் சப்தத்துக்கு உலகத்தில் தேஜஸ் என்பது பிரசித்தார்த்தம். சுருதியில் ஆத்மாவென்று அர்த்தம். ஆகையால் சந்தேகம் ஜனிக்கிறது. (5)

VI. இதிலடங்கிய சூத்திரங்கள் 4 (24-25-26-27)

24-வது சூத்திரத்தில்:—முந்தின வாக்கியத்தில் பிரம்மம் கூறப்பட்டிருப்பதால் இந்த வாக்கியத்திலும் பிரம்மத்தையே அறியவேண்டும் என்பதும்

25-வது சூத்திரத்தில்:—முந்தின வாக்கியத்தில் பிரம்மம் கூறப்படவில்லை. காயத்திரீ கூறப்பட்டிருக்கிறது என்கிற ஆக்ஷேபத்தின்பேரில் காயத்திரீயால் பிரம்மத்தையே அறியவேண்டும் என்பதும்,

26-வது சூத்திரத்தில்:—பிந்தின வாக்கியங்களாலும் பிரம்மத்தையே அறியவேண்டும் என்பதும்,

27-வது சூத்திரத்தில்:—உபதேசத்தில் பேதமிருந்தாலும் பிரம்மம்தான் அறியத்தக்கது என்பதும்

நிரூபிக்கப்படுகிறது. (6)

VII. பூர்வபக்ஷம்:—

ஆதித்தியன் முதலான தேஜஸ் ஜோதிஸ் சப்தத்தால் கிரகிக்கத்தக்கது. ஏனெனின் அதுவே பிரசித்தமான அர்த்தம். தமஸ் ஜோதிஸ் ஆகிய இரண்டு பதங்களும் பரஸ்பரம் விருத்தமான விஷயங்களைக் கூறுகின்றனவென்பது பிரசித்தம். நேத்திரத்தின் வியாபாரத்துக்குத் தடையைச்செய்யும் இரவின் இருள் தமஸ் என்று சொல்லப்படுகிறது. நேத்திரத்தின் வியாபாரத்துக்கு அநுகூலமாயிருக்கிற

ஆதித்தியன் முதலிய தேஜஸ் ஜோதிஸ் என்று சொல்லப்படுகிறது, அப்படியே பிரகிருத சுருதியிலிருக்கிற தீப்யதே என்கிற பதமும் ஆதித்தியன் முதலியவைகளை விஷயமாக்குகிறது என்பது பிரசித்தம். ஆகவே தீப்தியென்பது பிரகாசமான ரூபத்தைக்கூறுகிறது. அப்படியிருக்க ரூபாதிகளற்ற பிரம்மம் தீப்யதே என்று எப்படி சொல்லலாம். (7)

2. மேலும் ஸ்வர்க்கத்துக்குமேல் ஜோதிஸ் இருக்கிற தென்பதாய் சுருதியானது ஒரு எல்லையைக் கூறுகிறது. சராசரங்களுக்குக் காரணமாயும் சர்வ ஸ்வரூபமாயுமிருக்கிற பிரம்மத்துக்கு ஸ்வர்க்கத்தை எல்லையாகக்கூறுவது அயுக்தம். காரியமாயும் பரிச்சின்னமாயுமிருக்கிற ஜோதிஸுக்கு ஸ்வர்க்கம் எல்லையாயிருக்கலாம்.

परोदिवोज्योतिः

(ஸ்வர்க்கத்துக்கு மேலிருக்கிறஜோதிஸ் என்கிற பிரமாணம் தேஜஸுக்கு எல்லையைக் கூறுகிறது.

சி:—ஆக்ஷே:—காரியமான ஜோதிஸ் எங்கும் காணப்படுகிறபடியால், அதின் விஷயத்தில் ஸ்வர்க்கத்தை எல்லையாக எப்படி கூறலாம். (ஆகையால் பிரமாணம் நிஷ்பிரயோசனம்)

பூ:—உத்:—சாந்தோக்கியம் VI-3-3-ல் சொல்லியபடி ஜலத்துடனும் பிருதிவியுடனும் சேராத ஸ்வர்க்கம் முதலியவைகளில் உண்டான, இந்திரியங்களுக்கு விஷயமாகாத ஒரு தேஜஸ் ஆகாசத்துக்கு மேலிருக்கிறதென்பது சுருதியால் தெரியவருகிறது.

சி:—ஆக்ஷே:—ஜலம், பிருதிவி, இவைகளுடன் சேராத தேஜஸ் ஒரு பிரயோஜனத்தையும் கொடுக்க மாட்டாதே? ஆகையால் நீ சொல்லுவது சரியன்று.

பூ:—உத்:—உபாசனைக்கு விஷயமாயிருப்பதே பிரயோசனம் என்று சொல்லுவோமே.

சி:—ஆக்ஷே:—இது சரியன்று, வேறு பிரயோசனத்தையுமுடைய (இருட்டைப்போக்கடித்தல் முதலிய) சூரியாதிகளே உபாஸியங்களாக விதிக்கப்பட்டதை நாம் பார்த்திருக்கிறோம்.

तासां त्रिवृतं त्रिवृतमेकैकां करवाणि (சா VI-3-3)

என்கிற சுருதியானது இவைகளில் (தேஜஸ், ஜலம், பிருதிவி) ஒவ்வொன்றையும் மூன்றுடன் கூடினதாக செய்கிறேன் என்று சொல்லியிருப்பதால், (ஸ்வ அதாவது பிருதிவி, அப்பு, தேஜஸ் இவைகளுக்குள் ஒவ்வொன்றையும் இரண்டாகப்பிரித்து, மறுபடியும் ஒரு பாதியை வேறாகவைத்து மற்ற ஒவ்வொருபாகத்தையும் இரண்டாகப்பிரித்து, தன் பாகத்துடன் இதர பாகங்களையும் சேர்த்து இப்படி ஒவ்வொன்றையும் மூன்றுடன் கூடினதாக செய்கிறேன் என்றுசொல்லியிருப்பதால்)

ஒன்றுடனும் சேராததாக கொஞ்சம் மிச்சம் வைத்திருப்பதாகச் சுருதிசொல்லவில்லை. அப்படி மூன்றாகச் சேர்க்கப்படாத தேஜஸுக்கு ஸ்வர்க்கம் எல்லை என்றும் தெரியவில்லை.

பூ:—உத்:—அப்படியானால் மூன்றாகச் செய்யப்பட்ட தேஜஸே ஜோதிஸ் சப்தத்துக்கு அர்த்தமாக இருக்கட்டுமே.

சி:—ஆக்ஷே:—ஜோதிஸானது அக்கினி முதலிய ரூபமாக ஸ்வர்க்கத்துக்கும் கீழ் காணப்படுகிறதே (மேலிருக்கிறதென்று எப்படிசொல்லலாம், ஏனெனின்

பூ:—உத்:—இதில் தோஷமில்லை, ஜோதிஸானது எங்கும் வியாபித்திருந்தாலும், "ஸ்வர்க்கத்துக்கு மேல்" என்கிற ஸ்தான விசேஷமானது உபாசனையின் பொருட்டு கிரகிக்கப்படுவதில் விரோதமில்லை. ஸ்தானவிசேஷமற்ற பிரம்மத்துக்கு (தியானார்த்தமாகக் கூட) ஒரு விசேஷமான ஸ்தானத்தைக் கற்பிப்பது யுக்தமன்று.

மேலும்,

सर्वतः पृष्टेषु अनुत्तमेषूत्तमेषु लोकेषु

என்கிற சுருதியானது இந்த ஜோதிஸை சகலத்துக்கும் மேலிருக்கிறதென்றும், உத்தமமான லோகங்களிருப்பதாயும் சொல்லியிருப்பதால், இதற்கு அநேக ஆதாரங்கள் தெரியவருகிறது. இது பிரம்மத்தை விட) காரியமான தேஜஸ் விஷயத்தில்தான் செவ்வையாகப் பொருந்தும். (8)

3. மேலும்,

इदं वाव तद्यदिदमस्मिन्नन्तः पुरुषे ज्योतिः

என்கிற சாந்தோக்கிய (III--13--7) சுருதியானது குக்ஷியிலிருக்கிற ஜோதிஸை (ஜாடராக்கினியே) பரஞ்ஜோதிஸ் என்று கூறுகிறது. சமான ரூபமான இரண்டு பதார்த்தங்கள்விஷயத்தில்தான் அத்தியாசம் கூடும். திருஷ்டாந்தம்:—

तस्य भूरितिशिरः एकंहि शिर एवमतदक्षरम्

அதாவது பூ: என்கிற வியாஹிருதிதான் பிரஜாபதியினுடைய சிரசு என்று தியானிக்கவேண்டியது. ஏனெனின் சிரசும் ஒன்று, அக்ஷரமும் ஒன்று.

ஜாடராக்கினி பிரம்மமல்லவென்பது

तस्यैषा दृष्टिस्तस्यैषा श्रुतिः

என்கிற சுருதியால்

(रा தேகத்தைத் தொட்டுப்பார்ப்பதினால் உஷ்ணமிருக்கிறதென்பதும், காதை மூடுவதினால் சப்தம் கேட்கப்படுவதும் ஜாடராக்கினி விஷயத்தில் ஸ்பஷ்டமாயிருப்பதால்)

தெரியவருகிறது. (9)

4. மேலும்,

तदेतत् दृष्टञ्चश्रुतञ्चेत्युपासीत

என்ற சுருதியானது, "இதைப்பார்க்கப்பட்டதாயும், கேட்கப்பட்டதாயும் உபாசி என்று சொல்லுகிறது. இந்த சுருதியால் இப்படி அறிகிறவன் ரூபவானாகவும், பேர்பெற்றவனாகவும் ஆகிறான். இது அற்பபலம், ஆகவே ஜோதிஸ் பிரம்மமல்ல. பெரியபலத்தின் பொருட்டு பிரம்மத்தை உபாசிக்கவேண்டியது. (10)

5. பிராணாகாச வாக்கியங்களில்போல் ஜோதிர் வாக்கியத்தில் பிரம்மலிங்கங்கூட இல்லை.

(रा பூர்வவாக்கியத்தில் சொல்லிய பிரம்மத்தை இவ்விடத்தில் ஜோதிஸ் சப்தத்தால் அறிவோமே எனின்.) முந்தின வாக்கியத்திலும் பிரம்மத்தைப்பற்றிச் சொல்லவில்லை.

गायत्री वा इदं सर्वभूतं (छा III-12)

அதாவது "காயத்திரீதான் இது எல்லாம்" என்கிற சுருதியானது காயத்திரீ சந்தஸைத்தான் கூறுகிறது.

(பிரம்மம் சர்வாத்மாவாயிருப்பதால்) சந்தஸ்மூலமாக முந்தின வாக்கியத்தில் பிரம்மம் கூறப்பட்டிருப்பதாகச் சொன்னாலும்,

பிரகிருதவாக்கியத்தில் அது கூறப்பட்டதாகத் தெரியவில்லை. ஏனெனின்

त्रिपादस्यामृतं दिवि (III-12-1,6)

அதினுடைய மூன்று பாதங்கள் ஸ்வர்க்கத்தில் அமிருதமாயிருக்கின்றன வென்று சொல்லியிருப்பதால், ஸ்வர்க்கமானது ஸ்தானமாக தெரியவருகிறது. இவ்விடத்திலோ परोदिवोज्योतिः என்கிற சுருதியானது ஸ்வர்க்கத்துக்கு மேல் ஜோதிஸ் இருக்கிறதென்று சொல்லியிருப்பதால் ஸ்வர்க்கமானது எல்லையாகக் காணப்படுகிறது.

ஆகையால் ஜோதிஸ் சப்தத்தால் சாதாரணமான ஜோதிஸை அறியவேண்டும். (11)

VIII. சித்தாந்தம்.

I. இப்படி பூர்வபக்ஷிசொல்ல,

## ज्योतिश्चरणाभिधानात् ॥ २४ ॥

என்கிற சூத்திரத்தில் உத்தரங்கூறுகிறார். (12)

2. பதஉரை.

ज्योतिः ஜோதிஸ் (பிரம்மமே)

चरणाभिधानात् பாதம் சொல்லியிருப்பதால். (13)

3. பொழிப்புரை.

ஜோதிஸ் சப்தத்தால் பிரம்மத்தைத்தான் அறியவேண்டியது. ஏனெனின் முந்தின வாக்கியத்தில் பாதம் கூறப்பட்டிருக்கிறது. (14)

4. பாஷ்யம்.

ஸ்வமதசித்தாந்தம்.

ज्योति ஜோதிஸ் சப்தத்தால் பிரம்மத்தைஇந்த சுருதியில் கிரகிக்கவேண்டியது. ஏனெனின்

चरणाभिधानात् பாதங்கள் கூறப்பட்டிருக்கின்றன.

तावानस्य माहिमा अतो ज्यायांश्च पुरुषः ।
पादोऽस्य सर्वाभूतानि त्रिपादस्यामृतं दिवि ॥
(छा 3-12-9)

என்கிற முந்தின மந்திரத்தில் பிரம்மத்துக்கு நான்கு பாதங்கள் கூறப்பட்டிருக்கின்றன.

இந்த மந்திரத்தின் அர்த்தம்:—

(त्र இதனுடைய மஹிமை இவ்வளவு:—இந்த மஹிமையைவிட சிரேஷ்டம் புருஷன். சர்வபூதங்களும் இதின் (ஒரு) பாதம் (அதாவது அம்சம்). சத்தியலோகத்துக்குமேற்பட்ட பிரம்மா, விஷ்ணு, சிவன் என்கிற அமிருதமான ரூபங்கள் மூன்று.

எப்படி லோகத்தில் நான்கு பாதங்களுடன் கூடியதைவிட ஒருபாதமுள்ளது அற்பமோ அப்படியிந்த பிரபஞ்சமும் அற்பம். இதைக்காட்டும் பொருட்டே பாதசப்தம் பிரயோகிக்கப்பட்டிருக்கிறது. முந்தின சுருதியில் நான்குபாதங்களுள்ள பிரம்மத்தின் மூன்றுபாதங்களுக்கு ஸ்வர்க்க சம்பந்தம் கூறியிருக்கிறது. இந்த சுருதியிலும் அந்த ஸ்வர்க்க சம்பந்தமே கூறப்படுகிறது. ஆகையால் அந்தப் பிரம்மமே இவ்விடத்தில் கூறப்பட்டதாகத் தெரியவருகிறது. இதை விட்டுவிட்டு சாதாரணமான ஜோதிஸை அறிவதினால் ஆரப்பித்த விஷயத்தை விட்டு நூதன விஷயத்தை எடுத்துக்கொள்ளல் என்னும் தோஷம் சம்பவிக்கும். (15)

2. ஜோதிர் வாக்கியத்தில்தான் பிரம்மம் அநுவர்த்தித்துக்கொண்டிருக்கிற தென்பதில்லை. மேலிருக்கிற சாண்டில்லிய வித்தையிலும் (சா-III-14) பிரம்மம் அநுவர்த்தித்துக்கொண்டிருக்கிறது.

सर्वं खल्विदं ब्रह्म

என்கிற மேல் வாக்கியமும் பிரம்மத்தைக்கூறுவதால், மத்தியிலிருக்கிற ஜோதிர் வாக்கியமும் பிரம்மபரம்தான் என்று ஏற்படுகிறது. இதற்கு संदंशन्यायं என்றுபெயர்)

ஆகையால் இந்த சுருதியில் ஜோதிஸ் சப்தத்தால் பிரம்மத்தையே அறியவேண்டியது. (16)

(இனிபூர்வபக்ஷியின் ஆக்ஷேபங்களுக்கு உத்தரம் கூறப்படுகிறது.)

(I-ஜோதிஸ் பத விஷயமாய் ஆக்ஷேபம்)

(1) "ஜோதிஸ் பிரகாசிக்கிறது என்கிற இடத்தில் இந்த இரண்டு பதங்களும் காரியமான (உண்டாயிருக்கிற, ஜன்னியமான) ஜோதிஸைப் பிரசித்தமாய்க் கூறுகின்றன என்று செய்த ஆக்ஷேபத்துக்கு இடமில்லை. ஏனெனின் பிரகரணத்தினால் பிரம்மம் அறியப்பட்டவளவில் இந்த இரண்டு பதங்களுக்குரிய சாதாரணமான அர்த்தம் சித்திக்கவேண்டியதில்லை. பிரகாசித்துக்கொண்டும் காரியமாயுமிருக்கிற ஜோதிஸை பிரம்மத்துக்கு உபாதியாகப் பாவித்து, அப்படி ஜோதிருபமுள்ள பிரம்மத்தை ஜோதிஸ் சப்தத்தால்கூறலாம் இப்படி ஜோதிஸ் சப்தம் பிரம்மத்தைக்கூறும் என்பது.

येन सूर्यस्तपति तेजसेद्धः

(அதாவது சைதன்னியத்தால் பிரகாசத்தை அடைகிற சூரியன் பிரகாசிக்கிறான்.)

என்கிற தை-பிரா-III-12-9-7 மந்திரவர்ணத்தால் தெரியவருகிறது. (17)

(2) அல்லது, இந்த ஜோதிஸ் சப்தமானது கண்ணை வியவஹரிக்கும்படிச் செய்யும் தேஜஸ் என்கிற அர்த்தத்தைக்கூற வில்லை என்று சொல்லலாம். ஏனெனின் நேத்திர சம்பந்தமற்ற இடங்களிலும் இந்த பதத்தை உபயோகிப்பதை பார்த்திருக்கிறோம். திருஷ்டாந்தம்.

(1) वाचैवायं ज्योतिषास्ते (बृ IV 3-5)

நல்ல இருட்டில் வாக்காகிற தேஜஸால் ஜனங்கள் உட்காருதல் போகுதல் முதலிய காரியங்களைச்செய்கிறார்கள்.

(2) मनो ज्योतिर्जुषताम् (तैशा I-6-3-3)

நெய்யை சாப்பிடுகிறவர்களுக்கு மனது ஜோதிஸ் அதாவது பிரகாசகம் என்று சொல்லியிருக்கிறது. (18)

(3) ஆகையால் எது எது வேறு ஒன்றைப் பிரகாசிப்பிக்கிறதோ, அது அது ஜோதிஸ் சப்தத்தால் கூறப்படுகிறது. இப்படி இருப்பதால் சைதன்னியரூபமான பிரம்மமும் சகல ஜகத்தையும் பிரகாசிப்பிக்கிறபடியால், அதையும் ஜோதிஸ் சப்தத்தால் கூறுவது பொருந்தும்.

சுருதிபிரமாணங்கள்:—

तमेवभान्तमनुभाति सर्वं तस्य भासा सर्वमिदं विभाति

(कौ II-5 15)

பிரகாசிக்கிற அவனை அநுசரித்து சர்வமும் பிரகாசிக்கிறது. அவனுடைய தேஜஸால் எல்லாம் விளங்குகிறது.

तद्देवाज्योतिषां ज्योतिरायुर्होपासते अमृतम्

(बृ IV-4-16)

ஜோதிஸுக்கெல்லாம் ஜோதிஸ் என்று அதை தேவதைகள் உபாசிக்கிறார்கள். ஆயுஸ் என்றும் அமிருதம் என்றும் உபாசிக்கிறார்கள்.

இவை முதலிய சுருதிகளால் ஜோதிஸ் சப்தம் பிரம்மத்தையே கூறுகிறது என்று தெரியவருகிறது.

(2. எல்லை விஷயமாய் செய்த ஆக்ஷேபத்துக்கு உத்தரம்)

எங்கும் வியாபகமாயிருக்கிற பிரம்மத்துக்கு எல்லையைக் கூறக்கூடாது என்று சொன்ன விஷயத்தில் நாம் சொல்லுகிறதாவது:—

பிரம்மம் எங்கும் வியாபித்துக்கொண்டிருந்தாலும், உபாசனையின்பொருட்டு ஒரு இடத்தைக் குறிப்பிடுவதில் விரோதமில்லை.

பிரதேசமற்ற பிரம்மத்துக்கு இடத்தைக் கற்பிப்பது அயுக்தம் என்று சொன்னவிஷயத்தில்:—

அதில் பாதகமில்லை. பிரம்மம் பிரதேசமற்றதாயிருந்தாலும், உபாதியுடன் சம்பந்தப்படுவதால், அதற்கு ஒரு இடத்தைக் கற்பிப்பதில் பாதகமில்லை. அப்படியே ஆதித்தியன், கண், ஹிருதயம், இந்த இடங்களில் பிரம்மத்தை உபாசிக்கும்படி சுருதி சொல்லுவதினால் பிரம்மத்துக்கு பிரதேச சம்பந்தம் சித்திக்கிறது. இதனால் विश्वतः पृष्ठेषु சர்வத்துக்கும் மேல்முதலிய அநேக ஆகாரங்களைக் கூறினதும் பொருந்தும். (20)

3. (அத்தியாச ஆக்ஷேபம்)

உஷ்ணத்தினாலும், சப்தத்தினாலும், அநுமானிக்கப்படும் காரியமான ஜாடராக்கினியே ஸ்வர்க்கத்துக்கு மேலிருக்கிற ஜோதிஸ் என்று தியானிக்கும்படி சொல்லியிருப்பதால், இதுவும் காரியமான ஜோதிஸாகவே இருக்கவேண்டும் என்று சொன்னதும்

யுக்தமன்று. ஏனெனின் பரமான பிரம்மத்துக்கும் நாமம்முதலியவைகள் பிரதீகமாயிருப்பதுபோல் ஜாடராக்கினியும் பிரதீகமாயிருக்கலாம்.

दृष्टञ्च श्रुतञ्च इत्युपासीत

என்கிற இடத்தில் ஜாடராக்கினியை பார்க்கப்பட்டதாயும், கேட்கப்பட்டதாயும் உபாசி என்று சொன்னவிஷயத்தில், பிரம்மத்துக்குக் கூறப்பட்ட பார்க்கப்படும்தன்மை, கேட்கப்படும் தன்மை, அந்த அக்கினியானது பிரதீகமாயிருக்கிறது என்பது மூலமாக பிரம்மத்தில் பொருந்துகிறது. (21)

4. அற்பபலம் கூறியிருப்பதால், பிரம்மம் குறிப்பிடப் படவில்லையென்று சொன்னதும் அயுக்தம்.

तं यथा यथोपासते तथाफलं भवति

என்கிற சுருதிப்படி இன்னபலத்துக்காக பிரம்மத்தை ஆசிரயிக்கவேண்டியது. இன்னபலத்துக்காக ஆசிரயிக்கிறதில்லை என்கிற நியமமில்லை. எவ்விடத்தில் சர்வவிசேஷ சம்பந்தமற்ற பரபிரம்மமானது ஆத்மாவாக உபதேசிக்கப்பட்டிருக்கிறதோ, அவ்விடத்தில் பலம் ஒன்றுதான் அதாவது மோக்ஷம் என்று அறியப்படுகிறது. (ரூபம் ஒன்றானதால் பலமும் ஒன்று என்பது கருத்து)

எவ்விடத்தில் பிரம்மத்துக்கு குணவிசேஷ சம்பந்தம் அல்லது பிரதீகவிசேஷ சம்பந்தம் கூறப்பட்டிருக்கிறதோ, அவ்விடத்தில் சம்சாரத்துக்குரிய மேன்மையான, தாழ்மையான பலங்கள் காணப்படுகின்றன. சுருதி பிரமாணம்:—

अन्नादो वसुदानो विन्दते वसु य एवं वेद

(छा VI-4-24)

(ஈசுவரன் ஜீவரூபமாக அன்னத்தை புஜிக்கிறான், அல்லது அன்னத்தை எல்லாருக்கும் கொடுப்பதால், அன்னாதர், வஸு என்றால் தங்கம் இதை கொடுப்பதால் வசுதானர், இப்படி ஈசுவரனை குணவிசேஷத்துடன் சம்பந்தப்பட்டதாக எவன் அறிகிறானோ அவன் தனத்தை அடைகிறான். தீக்ஷணமான ஜாடராக்கினி உடையவனாக ஆவான்)

இது குணவிசேஷ சம்பந்தத்தைக் கூறுகிறது.

பிரதீகவிசேஷ சம்பந்தத்தைக் காட்டும் சுருதி:—

नाम्नोवागुत्तमा मनोवा प्रतीकं वाचोभूयः

இந்த சுருதி பிரதீகவிசேஷத்திபானத்தைக் கூறுகிறது. (22)

5. (ஸ்வவாக்கிய ஆக்ஷேபசமாதானம்)

ஜோதிர் வாக்கியத்தில் பிரம்மலிங்கம் கொஞ்சங்கூட காணப்படாவிட்டாலும் முந்தின வாக்கியத்திலிருக்கிற லிங்கத்தை இவ்விடத்திலும் கிரகிக்கவேண்டியது. சூத்திரகாரரும் அந்த லிங்கத்தை ஒப்புக்கொண்டே

ज्योतिश्चरणाभिधानात्

என்று சூத்திரத்தைச் செய்திருக்கிறார்.

முந்தின வாக்கியத்திலுள்ள பிரம்மலிங்கத்தினால் ஜோதி சுருதியானது அதின் விஷயமான ஜோதிஸைக் கூறுமலும் வேறு ஒன்றை கூறும்படியும் முடியும் என்று எப்படி சொல்லலாம் எனின்

(இதில் சுருதி பிரபலம் என்பது சங்கை.)

இதில் தோஷமில்லை.

यदतःपरोदिवोज्योतिः

என்கிற வாக்கியத்திலுள்ள முதல்பதமான यत् என்பது சர்வ நாமசப்தமானதால் வியாகரணப்படி முந்தின வாக்கியத்திலுள்ள பிரம்மத்தையே கூறவேண்டும். இரண்டு வாக்கியங்களிலும் த்யு (ஸ்வர்க்கம்) சம்பந்தம் இருப்பதால் யத் என்பது பிரம்மத்தைத் தான் கூறுகிறது என்று நிச்சயமாகிறது. அந்த யத் சப்தத்துடன் ஜோதிஸ் சப்தம் சம்பந்தப்பட்டிருப்பதால் அதுவும் பிரம்மத்தைத்தான் கூறும் என்று சொல்லக்கூடும். (23)

ஆகையால் இந்த ஜோதி சுருதியில் ஜோதி என்னும் பதம் பிரம்மத்தைத்தான் கூறுகிறது. (24)

(I-1-24-வது சூத்திரத்தின் பாஷ்யமொழிபெயர்ப்பு)

முற்றிற்று.

---

I-1-10 ல் 2 (25) வது சூத்திரம்.

1. சூத்திரம்:—

**छन्दोभिधानान्नेतिचेन्नतथा चेतोर्पण-निगदात्तथाहि दर्शनम् ॥ २५ ॥** (25)

2. முந்தின சூத்திரத்துக்கும் இதற்கும் சம்பந்தம்:—

முந்தின சூத்திரத்தில் எடுக்கப்பட்ட விஷயவாக்கியத்துக்கு முன்னிருக்கும் சுருதி வாக்கியத்தில் பிரம்மம் கூறப்பட்டிருப்பதால் இந்த விஷயவாக்கியத்திலும் பிரம்மமே கூறப்பட்டிருப்பதாக சித்தாந்தம் செய்யப்பட்டது. இப்போது அந்த முந்தினவாக்கியத்திலேயே பிரம்மம் பிரகிருதமாக இல்லையென்று ஆக்ஷேபித்து சமாதானம் சொல்லுகிறார். (26)

3. பதஉரை.

छन्दोभिधानात् சந்தஸை சொல்லியிருப்பதால்

न (பிரம்மம்) பிரகிருதமல்ல

इतिचेत् என்றுசொன்னால்

न அது சரியன்று

तथा அப்படியே (சுத்தஸால்)

चेतोर्पण निगदात् சித்தத்தை சமர்ப்பித்தல் கூறப்படிருக்கிறது.

तथा அப்படியே

दर्शनम् காணப்படுகிறது. (27)

4. பொழிப்புரை.

விஷயவாக்கியத்துக்கு முந்தின வாக்கியத்தில் சந்தஸ் கூறப்பட்டிருப்பதால் பிரம்மம் கூறப்படவில்லை என்று சொல்லும் பக்ஷத்தில், இப்படி சொல்லுவது சரியன்று. ஏனெனின் பிரம்மத்தினிடத்தில் மனதை சந்தஸ் மூலமாக நிலைநிறுத்தும்படி சொல்லியிருக்கிறது. அப்படியே இதரவாக்கியங்களிலும் காணப்படுகிறது. (28)

5. பாஷ்யம்.

(1) छन्दोभिधानात् नेतिचेत् :— गायत्रीवा इदं सर्वं भूतं यदिदं किञ्च (छा III-12-1)

"எது எது இருக்கிறதோ அதெல்லாம் காயத்திரீ" என்கிற சந்தஸ் கூறப்பட்டிருப்பதால், முந்தின வாக்கியத்திலும் பிரம்மம் கூறப்படவில்லை.

என்று பூர்வபக்ஷி சொன்னதை நாம் பரிஹரிக்க வேண்டியது.

तावानस्य महिमा (छा III-12-6)

(அதின் மஹிமை இவ்வளவு இருக்கிறது) என்கிற ரிக்வாக்கியத்தில் நான்கு பாதங்களுள்ள பிரம்மம் கூறப்படிருப்பதால், சந்தஸைச் சொல்லியிருப்பதால் பிரம்மம் கூறப்படவில்லை என்று எப்படி சொல்ல முடியும்?

(பூர்வபக்ஷி) இது இப்படியன்று.

गायत्री वा इदं सर्वं (காயத்திரீயே இது எல்லாம்)

என்று காயத்திரீயை ஆரம்பித்து, அதையே பூதங்களாயும், பிருதிவியாயும், சரீரமாயும், ஹிருதயமாயும், வாக்காயும், பிராணனாயும் கூறி,

सैषा चतुष्पदा षड्विधा गायत्री

காயத்திரீ நான்கு பாதங்களுள்ளவள், ஆறுவிதமானவள்

என்று ரிக்கால் கூறி,

तावानस्य महिमा

(அதின் மஹிமை இவ்வளவு) என்று அந்த காயத்திரீ விஷயமாக ரிக் ஏற்பட்டிருக்க, யாதொரு காரணமன்றியில் இந்த மந்திரம் நான்கு பாதங்களுள்ள பிரமத்தை எப்படி கூறும்?

यद्वैतत् ब्रह्म (छा III-12-6)

என்று பிந்திய வாக்கியத்தில் சொல்லியிருந்தாலும், பிரகிருத கிருந்தம் சந்தஸைப்பற்றியிருப்பதால் பிரம்மசப்தமும் சந்தஸையே கூறுகிறது.

य एतामेवं ब्रह्मोपनिषदं वेद (சா III-11-3)

(அதாவது வேதரஹஸியமான மதுவித்தையை சொன்னபடி எவன் அறிகிறானோ அவன் உதயாஸ்தமனமற்ற பிரம்மத்தை அடைகிறான் என்று சொல்லியிருக்கிறது. இவ்விடத்தில் பிரம்ம சப்தத்துக்கு வேதம் என்று எப்படி அர்த்தமாகிறதோ அப்படி காயத்திரீ பிரகிரணத்திலும் பிரம்மசப்தம் காயத்திரீயை கூறுகிறதே தவிர பிரம்மத்தை கூறவில்லை என்பது யுக்தம்.

(சித்தாந்தி) ந:-இப்படி பூர்வபக்ஷி சொல்லுவதில் நமக்கு தோஷமில்லை. ஏனெனின்

तथा चेतोऽर्पणानिगदात्

என்று சொல்லியிருக்கிறது.

गायत्रीवा इदं सर्वं (காயத்திரீயே இது எல்லாம்) என்கிற பிராமண வாக்கியமானது காயத்திரீ என்கிற பெயருள்ள சந்தஸ் மூலமாக அத்துடன் சம்பந்தப்பட்டிருக்கிற பிரம்மத்தினிடத்தில் மனதை ஸ்திரப்படுத்தவேண்டியது என்று கூறுகிறது. கேவலம் அக்ஷரங்களுடைய சமூகமாகிய காயத்திரீ என்பது சகலத்துக்கும் ஆத்மாவாகமாட்டாது. ஆகையால் காயத்திரீ என்கிற விகாரத்துடன் கூடியிருக்கிற ஜகத்காரணமான பிரம்மம் இந்த வாக்கியத்திலும் கூறப்பட்டிருக்கிறதென்றும் அதுவே सर्वं (எல்லாம்) என்று கூறப்பட்டிருக்கிறதென்றும் அறியவேண்டியது.

सर्वं खल्विदं ब्रह्म (छा 3-14-1)

(இதெல்லாம் பிரம்மம்)

என்கிற வாக்கியமும் பிரம்மத்தைக் கூறுவது போலும்.

तदनन्यत्वमारम्भणशब्दादिभ्यः (II-1-14)

என்கிற பிரம்ம சூத்திரத்தில் காரியமானது காரணத்தைவிட வேறன்று என்பதை சொல்லுவோம் (நிரூபிப்போம்).

இதில் பிரம்மமே சர்வாத்மம் என்பது நிரூபிக்கப்படுகிறது. தியானத்தின்பொருட்டு காயத்திரீயையே சர்வாத்மாவாகச் சொல்லுவோமே எனின், ஸ்வயம் சர்வாத்மாவாக இருக்கிற பிரம்மம் தியானத்துக்கு அர்ஹமாயிருக்க, அதை விட்டுவிட்டு தியானத்துக்காக இன்னும் ஒன்றைக் கற்பிப்பானேன். ஆகையால் காயத்திரீயானது இந்த வாக்கியத்தால் உத்தேசிக்கப்பட்டிருக்கமாட்டாது.) (31)

(4) तथाहि दर्शनम् :- तं एतमेव बह्वृचा महत्युक्थेमीमांसन्ते एतमग्नावध्वर्यव एतं महाव्रते छन्दोगाः
(ஐ-आर III-2-3-12)

இந்த பரமாத்மாவை ரிக்வேதிகள் பெரியதான உக்தத்தில் (கானமன்றியில் செய்யப்படும் ஸ்தோத்திர விசேஷமான சஸ்திரத்தில்) அதற்கு அனுகதமாயிருக்கிறதாக உபாசிக்கிறார்கள். இதையே அக்கினி ரஹஸ்யத்தில் அக்கினி என்று அத்வர்யுக்கள் உபாசிக்கிறார்கள் என்று சொல்லிய சுருதிப்படி, யஜுர்வேதிகள் அக்கினியுடன் உபாசிக்கிறார்கள், சாமவேதிகள் மஹாவிரதயாகத்தில் உபாசிக்கிறார்கள்.

இப்படி சொல்லியிருப்பதால் இதுமுதலிய இதர இடங்களிலும் பிரம்மத்தின் உபாசனை அதின் விகார மூலமாக காணப்படுகின்றது. ஆகையால் முந்தின வாக்கியத்தில் சந்தஸ் சொல்லப்பட்டிருந்தாலும் நான்கு பாதங்களுள்ள பிரம்மமே குறிப்பிடப்பட்டிருக்கிறது. இந்த பிரம்மமே ஜோதிர்வாக்கியத்திலும் கூறப்பட்டிருக்கிறது. உபாசனையை வேறுவிதமாய் விதிப்பதே அந்த வாக்கியத்துக்கும் கருத்து. (32)

( இதுவரையில் காயத்திரீயை உபாதியாகவைத்து அர்த்தம் சொல்லப்பட்டது. இனி காயத்திரீக்கும் பிரம்மத்துக்குமுள்ள குணவிசேஷத்தை எடுத்துக்கொண்டு அர்த்தம் செய்கிறார்.)

சிலர் சொல்லுகிறதாவது —

காயத்திரீயானது பிரம்மத்தைத் (காயத்திரீரூபமாக குறிப்பிடாமல்) சாக்ஷாத்தாகவே (உபாதியன்றியிலேயே) சங்கியா சாமான்னியத்தால் (அதாவது எண்ணிக்கை இரண்டிடங்களிலும் ஒன்றாக இருப்ப

தால்) கூறுகிறது. எப்படியெனின், எப்படி காயத்திரீயானது பாதத்துக்கு ஆறு அக்ஷரங்களாக நான்கு பாதங்களுடன் கூடியிருக்கிறதோ அப்படி பிரம்மமும் நான்கு பாதங்களுள்ளது. அப்படியே இதர இடங்களிலும் சந்தஸைகூறும் சப்தம் வேறு அர்த்தத்தை சமான எண்ணிக்கையால் கூறுவதாக பார்த்திருக்கிறோம். எப்படியெனின்,

तेवा एते पञ्चान्ये दशसन्तः तत्कृतं

என்கிற சுருதியில்

"இந்த ஐந்தும் அந்த ஐந்தும் சேர்ந்து பத்தாகிறது. இது கிருதம்" என்று ஆரம்பித்து

सैषा विराडन्नादिनी (छा IV-3-8)

அதாவது இதுவே அன்னத்தை புஜிக்கும் விராட்டென்று சொல்லியிருக்கிறது. இப்படி அர்த்தம் செய்தால் பிரம்மமே குறிப்பிடப்பட்டதாக ஆகிறது. சந்தஸ் ஆகிறதில்லை. எவ்விதத்திலும் முந்தின வாக்கியத்தில் கூறப்பட்டது பிரம்மமே.

(ரா மேற்சொன்னதின் விவரம்:—

காயத்திரீக்கும் நான்குபாதம், பிரம்மத்துக்கும் நான்குபாதம். எதினால் பிரம்மத்தினிடத்தில் சித்தம் வைக்கப்படுகிறதோ அது காயத்திரீ சப்தம். அந்த சப்தத்தால் பிரம்மம்தான் குறிப்பிடப்படுகிறது, சந்தஸ் குறிப்பிடப்படவில்லை. அப்படியே சில இடங்களிலும் காணப்படுகின்றது. சம்வர்க்க வித்தையில் அதிதைவங்களான அக்கினி, சூரியன், சந்திரன், ஜலம் இவைகள் வாயுவினிடத்தில் லயமடைகின்றன. அத்தியாத்மங்களான வாக்கு, சக்ஷுஸ், சுரோத்திரம், மனசு ஆகிய நான்கும் பிராணனிடத்தில் லயமடைவதாகச் சொல்லப்பட்டிருக்கிறது. முன் சொன்ன ஐந்தும் அதிதைவிகங்கள். பின் சொன்ன ஐந்தும் அத்தியாத்மகங்கள். இவைகள் சேர்ந்து பத்தாகின்றன. அவைகள் கிருதம் என்று சொல்லப்படுகின்றன.)

(இப்படி கிருதம் என்று சொல்லவேண்டிய காரணமென்னவெனின்:—சொக்கட்டான் ஆட்டத்தில் ஒரு காயைவைத்துக்கொண்டு ஆடலாம், அல்லது ஒரு அனேக காய்களைவைத்துக்கொண்டு ஆடலாம். ஒரு காயை வைத்துக்கொள்ளும்போது, அதினுடைய நான்கு பக்கங்களிலும், ஒன்றில் 4 சங்கியை, ஒன்றில் 3 சங்கியை, ஒன்றில் 2 சங்கியை, ஒன்றில் ஒரு சங்கியை இப்படி போட்டுவைத்திருந்து, அதை எறிந்தவுடன் எது மேல் காணப்படுகிறதோ அதையே எடுத்துக்கொள்ளுகிறது வழக்கம். அநேககாய்கள் இருக்கும்போது எண்ணாமல் எடுத்து எறிந்து விழுந்ததை நாலுநாலாகப் பிரித்து, கடைசியில் மிச்சப்பட்டதை எடுத்துக்கொள்ளுகிறது வழக்கம். எவ்விதத்திலும் இந்த ஆட்டத்தில் 4, 3, 2, அல்லது ஒன்றுதான் மிச்சப்படும். இவைகளுக்கு முறையே கிருதம் என்றும், திரேதம் என்றும், துவாபரம் என்றும், கலி என்றும் பெயர். நான்கில் மூன்று அடங்கியிருப்பதாலும், மூன்றில் இரண்டு அடங்கியிருப்பதாலும், இரண்டில் ஒன்று அடங்கியிருப்பதாலும் கிருதத்தை பத்தாகவும் சொல்லலாம்.

அக்கினியாதிகள் பத்தானதால் அவைகளையும் கிருதம் என்று சொல்லலாம். இப்படி சுருதி ஆரம்பித்து இதுவே விராட் என்று முடிக்கிறது. விராட் என்பதே ஒரு சந்தஸின் பெயர். இது 10 அக்ஷரமுள்ளது. பத்து என்கிற அக்ஷரம் வாயு முதலியவைகளுக்கும் சமமாயிருப்பதால் வாயுமுதலியவைகள் விராட் ஆகின்றன. இப்படி 10 என்கிறது மூலமாக வாயு முதலியவைகளை கிருதமாகவும் விராட்டாகவும் தியானிக்கும்படி சொல்லியிருக்கிறது. விராட்டை தியானிக்கிறதினால் எல்லாம் அன்னமாகிறது. கிருதத்தை தியானிக்கிறதினால் இவன் அன்னாதன் (அன்னத்தை பக்ஷிக்கிறவன்) ஆகிறான்.

இப்படி சந்தஸைக் கூறும் விராட் என்னும்பதம் சந்தஸைகூறாமல் வாயு முதலியவைகளைக் கூறுவது போல், காயத்திரீ சந்தஸும் பிரம்மத்தைத்தான் கூறுகிறது. ஆகவே காயத்திரீ பதம் பிரம்மத்தை லக்ஷணையால் கூறினாலும் சரி, குணத்தால் கூறினாலும் சரி எவ்விதத்திலும் முந்தினவாக்கியம் பிரம்மத்தையே கூறுகிறது. (33)

(பாஷ்யகாரர் "கிலர் சொல்லுகிறதாவது" என்றுசொன்னதினால் அந்த மதம் தன்னுடையதன்று என்பதை சூசிப்பிக்கிறார். பாஷ்யகாருடைய மதத்தில் காயத்திரீயின் அர்த்தத்தை விடாமல் பிரம்மமும் கூறப்பட்டிருக்கிறது. எப்படி யெனின், वाग्वैगायत्री என்று சொல்லியிருப்பதால் காயத்திரீயானது வாக்குஸ்வரூபமாயும், இரக்ஷிக்கிறதாயுமிருக்கிறது. பிரம்மமும் சர்வஸ்வரூபமாயும் சகலத்தையும் இரக்ஷிக்கிறதாயுமிருக்கிறது. ஆகவே ஸ்வரூபமாயிருக்கும் தன்மை, இரக்ஷிக்கும் தன்மை இரண்டுக்கும் இருப்பதால், காயத்திரீயை உபாதியாக உடைய பிரம்மத்

தை காயத்திரீ சப்தத்தால் கூறுவதில், காயத்திரீயின் சுருத்து போகாமல் பிரம்மம் கூறப்படுவது மிகவும் உசிதமாக இருக்கிறது.

இரண்டாவது பக்ஷத்தில் காயித்திரீக்கு 4 பாதம், பிரம்மத்துக்கு நான்கு பாதம், ஆகையால் 4 என்கிற குணத்தால் காயத்திரீ சப்தத்தை பிரம்மமாக அறியச் சொல்லியிருக்கிறது. காயத்திரிக்கு 3 பாதம் என்பதே சுருதி பிரசித்தம். ஸ்வார்த்தத்தை விட்டு விட்டு அப்பிசித்த அர்த்தத்தை எடுத்துக்கொள்ளுவது யுக்தமன்று. ஆகையால் பிறருடைய மதம் பாஷ்யகாரருக்கு அசம்மதம் யென்று தெரியவருகிறது.34

I-1-25-வது சூத்திரம்

முற்றிற்று.

---

I-1-10 ல் 3 (26) வது சூத்திரம்.

## भुतादिपादव्यपदेशोपपत्तेश्चैवम् ॥ २६ ॥ (35)

2. रा முந்தின சூத்திரத்துக்கும் இதற்கும் சம்பந்தம்:—

முந்தின சூத்திரத்தில் காயத்திரீ சப்தமானது சந்தஸை கூறவில்லை. பிரம்மத்தைத்தான் கூறுகிறது என்று சித்தாந்தம் செய்யப்பட்டது.

இதைக்கேட்ட பூர்வபக்ஷியானவன் गायत्रीवा इदं सर्वं என்று சொன்னதில் முதலில் காயத்திரீ பதமேசொல்லியிருக்க, அதை விட்டுவிட்டு லக்ஷணையால் பிரம்மத்தை எப்படி அறியலாம் என்று சங்கிக்க

பிந்தியபதங்கள் சர்வஸ்வரூபமாயிருக்கும் தன்மை முதலிய பிரபலமான லிங்கங்களை (பிரமாணங்களைக்) கூறுவதினால் பிரம்மத்திலேயே தாற்பரியம் ஏற்படுகிறதென்று இந்த சூத்திரத்தில் காண்பிக்கிறார். (36)

3. பதஉரை.

भूतादिपादव्यपदेशोपपत्तेः பூதங்கள் முதலியவை பாதங்களாகக் கூறியது (பிரம்மத்துக்கே) பொருந்துமாகையாலும்.

च புருஷ சூக்தத்தில் சொல்லியிருப்பதாலும்

एवम् காயத்திரீ பதம் பிரம்மத்தையே கூறுகிறது. (37)

4. பொழிப்புரை.

பூதங்கள் முதலியவைகளை பாதங்களாகக் கூறுவது பிரம்மத்துக்கே பொருந்துமாகையாலும், புருஷ சூக்தத்தில் சொல்லியிருப்பதாலும் காயத்திரீ சப்தமானது பிரம்மத்தைத்தான் கூறுகிறது. (38)

5. பாஷ்யம்.

भूतादिपादव्यपदेशोपपत्तेः— பூதாதிகளைப் பாதங்களாக சொல்லியிருப்பதால் முந்தின வாக்கியத்தில் கூறப்பட்டது பிரம்மமே என்று அறியவேண்டியது. ஏனெனின் பூதங்கள், பிருதிவி, சரீரம், ஹிருதயம் இவைகளைச்சொல்லி

### सैषा चतुष्पदा षड्विधा गायत्री

காயத்திரீக்கு 4 பாதங்கள் இருக்கின்றன காயத்திரீ ஆறு விதமாயிருக்கிறது

என்று சொல்லியிருக்கிறது. பிரம்மசம்பந்தமன்றியில், கேவலமான சந்தஸுக்கு பூதாதிகள் பாதங்களாக பொருந்தாவாம். (39)

च மேலும் பிரம்ம சம்பந்த மிராதபக்ஷத்தில் तावानस्यमहिमा என்கிற ரிக் பொருந்தாது. ஏனெனின் இந்த ரிக்கானது பிரம்மத்தின் ஸ்வரூபத்தை ஸ்பஷ்டமாய் கூறுகிறது. இல்லாவிடின்

### पादोऽस्य सर्वाभूतानि त्रिपादस्यामृतं दिवि

(छा III-12-5)

என்கிற சாந்தோக்கிய ரிக்கில் இதின் ஒருபாதம் சகல பூதங்களென்றும், மூன்று பாதங்கள் ஸ்வர்க்கத்திலிருக்கிற அமிருதம் என்றும் சொல்லியிருப்பதால், காயித்திரீயை சகலத்துக்கும் ஆத்மாவாக சொல்லமுடியாது. புருஷ சூக்தத்திலும் (ரிக்சம்ஹிதை X--90) இந்த ரிக்கானது பிரம்ம பரமாகவே சொல்லப்பட்டிருக்கிறது.

### विष्टभ्याहं इदं कृत्स्नमेकांशेन स्थितो जगत्

(அதாவது என்னுடைய ஒரு அம்சத்தினால் இந்த சமஸ்த ஜகத்தையும் நான் ஆக்கிரமித்து நிற்கிறேன்)

என்கிற ஸ்மிருதியும் (கீதை X-42) பிரம்மத்துக்கு இப்படிப்பட்ட ரூபத்தையே தெரிவிக்கிறது.

**यद्वैतद्ब्रह्म** छा (III-12-7)

என்று சொல்லியிருக்கிறது.

அதாவது கீழ் வாக்கியத்தில் எது சொல்லப்பட்டிருக்கிறதோ அது பிரம்மம் பூர்வவாக்கியத்தில் பிரம்மத்தை ஒப்புக்கொண்டால் முக்கியார்த்தம் பொருந்துகிறது.

மேலும்,

तेवा एते पञ्चब्रह्मपुरुषाः (छा III-13-6)

हृदयसुषिषुषुब्रह्म पुरुषः

என்று சுருதி சொல்லுகிறது.

அதாவது (ஹிருதயத்துக்கும் நான்கு திக்குகளிலும் மேல் பாகத்திலும் ஐந்து பொத்தல் இருக்கின்றன. பிரம்மத்துக்கு ஸ்தானமாகிற ஹிருதயமென்கிற பக்ஷத்துக்கு ஐந்து வாசலிலும் கிழக்கு முதல் கிரமமாக பிராணன், வியானன், அபானன், சமானன், உதானன் ஆகிய ஐந்து துவாரபாலகர்கள் தியானத்தின்பொருட்டு சுருதியால் கற்பிக்கப்பட்டிருக்கிறார்கள். இவர்களுக்கு பிரம்ம புருஷர்கள் என்றுபெயர். ஹிருதயத்தில் காயத்திரீயை உபாசிக்கச் சொல்லியிருக்கிறது. இந்த காயத்திரீயானது பிரம்மமாக இராத பக்ஷத்தில் துவாரபாலகர்களுக்கு காயத்திரீ புருஷர்கள் என்று பெயர் ஏற்படவேண்டியதே தவிர பிரம்ம புருஷர்கள் என்று பெயர் சித்திக்கமாட்டாது. ஆகையால் காயத்திரீயால் பிரம்மம் என்கிற அர்த்தம் ஏற்பட்டால்தான் பிரம்மபுருஷர்கள் என்கிற பதம் ஒவ்வும்.

ஆகையால் முந்தின வாக்கியத்தில் கூறப்பட்டது பிரம்மம்தான். அதே பிரம்மம் ஜோதிர்வாக்கியத்தில் ஸ்வர்க்கசம்பந்தத்தால் கூறப்பட்டதென்பது நிச்சயமாகிறது.

(இந்த சூத்திரத்தில் भूतादिपादव्यपदेशात्

என்று சொல்லவேண்டியதாயிருக்க

उपपत्तेः என்னும் அதிகபதத்தைப் போடவேண்டிய காரணமென்ன? இதை போடாத வரையில் ஏதாவது அனுபபத்தி நேரிட்டாலல்லவா உபபத்தி பதத்தை உபயோகிப்பது யுக்தமாகும். அப்படி அனுபபத்தி காணப்படவில்லையே எனின்.

அனுபபத்தி காணப்படுவதால்தான் அதை நிவிர்த்திக்கும் பொருட்டே உபபத்தி என்னும் பதம் உபயோகிக்கப்பட்டிருக்கிறது. அந்த அனுபபத்தியாதெனின்.

सैषा चतुष्पदा षड्विधा गायत्री

என்று சொல்லியிருப்பதால் சதுஷ்பதா என்னும் ஸ்திரீலிங்க பிரயோகம் காயத்திரீயைத்தான் பொருந்தும், பிரம்மத்தைப் பொருந்தாது. பிரம்மத்தை பொருந்தும்படியிருந்தால் சதுஷ்பாத் என்று பதம் இருக்கவேண்டும். அப்படியில்லாததால் இந்த சுருதி காயத்திரீயைத்தான் கூறமாட்டாதோ என்கிற சந்தேகம் ஜனிக்கும். இதை நிவிர்த்திக்கும் பொருட்டு உபபத்தி என்னும் பதம் போடப்பட்டிருக்கிறது. இந்த உபபத்தி பிரம்மத்திலேயே ஒட்டும், காயத்திரீ விஷயத்தில் ஒட்டமாட்டாது. (41)

## I-1-10 ல் 4 (27) வது சூத்திரம்

# उपदेशभेदान्नेतिचेन्नोभयस्मिन्नप्यविरोधात् ॥ २७ ॥ (42)

2. முந்தின சூத்திரத்துக்கும் இதற்கும் சம்பந்தம்:—முன் பிரம்மம்தான் கூறப்பட்டிருக்கிறதென்று சொல்லப்பட்டது. அப்படி சொல்லியிருந்தாலும் காயத்திரீ வாக்கியத்தில் दिवि என்கிற ஏழாம் வேற்றுமை உபயோகித்திருப்பதாலும் ஜோதிர்வாக்கியத்தில் दिवः என்னும் ஐந்தாம் வேற்றுமை உபயோகித்திருப்பதாலும் இப்படி வேற்றுமை பேதமிருப்பதால் இந்த ஜோதிர் வாக்கியத்தில் பிரம்மம் கூறப்பட்டதாக சொல்லக்கூடாதென்னும் ஆக்ஷேபத்துக்கு சமாதானத்தை இந்த சூத்திரத்தில் சொல்லுகிறார். (43)

3. பதஉரை.

उपदेशभेदात् உபதேசத்தில் பேதமிருப்பதால்

न इतिचेत् பிரம்மம் கூறப்படவில்லை என்று சொன்னால்

न அது சரியன்று

उभयस्मिन् अपि இரண்டிலும்

अविरोधात् விரோதமிராதபடியால் (44)

4. பொழிப்புரை.

பிரம்மத்தை இரண்டு விதமாக உபதேசித்திருப்பதால் பிரம்மம் கூறப்படவில்லை என்று சொல்லுவது சரியன்று. ஏனெனின் இரண்டு உபதேசங்களுக்கும் விரோதமில்லை. (45)

5. பாஷ்யம்.

उपदेशभेदान्नेतिचेत् :—

त्रिपादस्यामृतं दिवि

என்கிற இடத்தில் திவி என்னும் ஏழாம் வேற்றுமையால் ஸ்வர்க்கமானது ஆதாரமாக உபதேசிக்கப்பட்டது.

ஜோதிர் வாக்கியத்தில் यदतःपरोदिवः என்கிற வாக்கியத்தில் ஸ்வர்க்கத்துக்கு மேல் என்று சொல்லியிருப்பதால், திவ என்னும் ஐந்தாம் வேற்றுமையால் எல்லை கூறப்படுகிறது.

ஆகவே உபதேசம் இரண்டு விதமாக இருப்பதால், முந்தின வாக்கியத்தின் பிரம்மம் இவ்விடத்தில் கூறப்படவில்லை என்று செய்யும் ஆக்ஷேபம் பரிஹரிக்கத்தக்கது. (46)

ந இதில் தோஷமில்லை.

उभयस्मिन्नपि अविरोधात्

ஏழாம் வேற்றுமையிலும் ஐந்தாம் வேற்றுமையிலும் சம்பந்தப்பட்ட பதம் த்யு அதாவது ஸ்வர்க்கம் இது ஒன்றாயிருப்பதால், வேற்றுமைகள் வெவ்வேறாயிருந்தாலும் அவைகள் இதை அறிவதில் பிரதிபந்தங்களாகமாட்டா.

रा (ஆதாரமாயிருக்கிறதும் எல்லையாகவுமிருக்கலாம் எப்படியெனின்)

ஒரு மரத்தின் நுணியில் ஒருபக்ஷி உட்கார்ந்திருக்கும்போது அந்த நுணிபாகம் அந்த பக்ஷிக்கு ஆதாரமாக சொல்லப்படுகிறது. அதையே நுணிமேலிருக்கிறதாகவும் சொல்லுகிறதுண்டு. இப்படி இரண்டு விதமாயும் சொல்லுவதில் விரோதமில்லை. இதுபோல் பிரம்மம் ஸ்வர்க்கத்துடன் எப்போதும் சம்பந்தப்பட்டிருப்பதால் ஸ்வர்க்கத்திலிருக்கிறதென்றும் ஸ்வர்க்கத்துக்கு மேலிருக்கிறதென்றும் சொல்லுவதில் விரோதமில்லை. (48)

சிலர் சொல்லுகிறதாவது:--விருக்ஷத்துடன் பக்ஷி சம்பந்தப்படாவிட்டாலும் விருக்ஷத்தின் நுணியிலிருக்கிறதென்றும், நுணிக்கு மேலிருக்கிறதென்றும் லோகத்தில் சொல்லுகிறதுபோல், பிரம்மம் ஸ்வர்க்கத்துக்கு மேலிருந்தாலும், ஸ்வர்க்கத்திலிருப்பதாக சொல்லப்படுகிறது.

आ ஆகையால் பூதாதிபாத லிங்கத்தாலும், तावानस्य என்கிற மந்திர லிங்கத்தாலும, यद्वैतद्ब्रह्म என்கிற வாக்கியத்தாலும், காயத்திரீ சப்தத்துக்கு பிரம்மம் அர்த்தமாகையாலும், உபதேசத்திலும் அர்த்தம் ஒன்றாயிருப்பதாலும் முன் நிச்சயிக்கப்பட்ட பிரம்மமே இவ்விடத்திலும் (ஜோதிர்வாக்கியத்திலும்) அறியப்படுகிறது. ஆகையால் ஜோதிர் சப்தத்தால் பரப்பிரம்மமே சித்திக்கிறது.

பூர்வபக்ஷபலன்:—ஜாடராக்கினி உபாஸ்தி

சித்தாந்தபலன்:—பிரம்மோபாஸ்தி

XIII. வியாஸாதிகரணமாலைப்படி அத்வைதச்சுருக்கம்.

1. சுலோகங்கள்.

कार्यं ज्योतिरुत ब्रह्म ज्योतिर्दीप्यत इत्यदः ।
ब्रह्मणोऽसंनिधेः कार्यं तेजोलिंगं बलादपि ॥
चतुष्पात्प्रकृतं ब्रह्म यच्छब्देनानुवर्त्यते ।
ज्योतिः स्याद्भासकं ब्रह्म लिङ्गं तूपाधियोगतः ॥ 51

2. விஷயவாக்கியம்:—

சாந்தோக்கியத்தில் மூன்றாவது அத்தியாயத்தில் காயத்திரீ வித்தையில் ஹிருதய சித்திர உபாசனையைச் சொல்லி, பிறகு अथ यदतःपरो दिवो ज्योतिर्दीप्यते என்று சொல்லியிருக்கிறது. (52)

3. சந்தேகம்:—த்யு (ஸ்வர்க்க) லோகத்துக்கு மேல் ஜ்வலித்துக்கொண்டிருக்கிறதாகச் சொல்லப்பட்டவஸ்து

(1) காரியமாகிற நேத்திரத்தால் கிரகிக்கக்கூடிய தேஜஸ்ஸா ?

(2) அல்லது பிரம்மமா ?

என்பது சந்தேகம். (53)

4. பூர்வபக்ஷம்:-அது காரியரூபமே. ஏனெனின் பிரம்மம் சமீபத்திலிராதபடியால் வாக்கியம் பிரம்மபரமாகமாட்டாது. தேஜஸ்ஸாகச் சொல்லுதலோ பொருந்துகிறது. ஏனெனின் அதில் லிங்கம் இருக்கிறது.

इदं वाव तद्यदिदमस्मिन्नन्तः पुरुषे ज्योतिः

என்கிற சுருதியில் ஜாடராக்கினியைவிட வேறாயிராமையானது தேஜோலிங்கம். (54)

5. சித்தாந்தம்:—

பிரம்மம் சமீபத்தில் சொல்லப்படவில்லை என்பது பிசகு. முந்தின காயத்திரீ கண்டத்தில்

पादोऽस्य सर्वा भूतानि त्रिपादस्यामृतं दिवि

என்கிற வாக்கியத்தில் நான்கு பாதங்களுள்ள பிரம்மம் பிருகிருதம். அது யத் சப்தத்தால் கூறப் படுகிறது. ஜோதிஸ் சப்தம் பிரகாசித்தல் அர்த்தத் தைத் தருவதால் பிரம்மத்தை குறிப்பிடமாட்டாது என்பதில்லை. ஏனென்னின் ஜகத்தானது பிரம்மத்தால் பிரகாசிக்கிறது. உபாதி சம்பந்தமான பிரம்மத்தினி டத்தில் தேஜோலிங்கம் கல்பிக்கப்படுகிறது. ஆகை யால் ஜோதிஸ் பிரம்மமே. (55)

XIV. விசிஷ்டாத்வைதப்படி சுருக்கம்.

I-1-10 ல் 1-24.

1. விஷயவாக்கியம்:— III-13 7. (அத்வை)

2. சந்தேகம்:—நிரதிசயமான காந்தியைக் கூறு ம் ஜோதிஸ் சப்தம்

(1) ஆதித்தியாதி ஜோதிஸ்ஸைக் கூறு கிறதா?

(2) பரமாத்மாவைக் கூறுகிறதா? (57)

3. பூர்வபக்ஷம்:—அது பிரசித்த ஜோதிஸ்ஸை யே கூறுகிறது. ஏனெனின் III-13-7-ல் ஜோதிஸ் ஸும் ஜாடராக்கினியும் ஒன்றுயிருக்கிறதாகச் சொல் லியிருப்பதால் ஜோதிஸ் சப்தம் ஆதித்தியாதி ஜோதி ஸ்ஸைத்தான் கூறும். மேலும் இந்த வாக்கியத்தில் பிரம்மத்துக்கே உறிய லிங்கமில்லை. (58)

4. சித்தாந்தம்:—ஜோதிஸ் சப்தம் பிரசித்த ஜோதிஸ்ஸைவிட அன்னியமான பரமாத்மாவைத்தா ன் கூறும். ஏனெனின் முந்தின வாக்கியத்தில் பிரம் மத்துக்கு நான்கு பாதங்களிருக்கின்றன வென்றும் இந்த பூதங்களெல்லாம் ஒரு பாதம் என்றும் சொல் லியிருக்கிறது. ஆகவே ஜோதிஸ் பிரம்மத்தின் பாத த்துக்குள் அகப்பட்டுப்போனபடியால் பிரசித்த ஜோ திஸ் பிரம்மமாகமாட்டாது. (59)

5. ज्योति இந்த சப்தத்தால் கூறப்படுவது பரப் பிரம்மம்தான். ஏனெனின்

चरणाभिधानात् இந்த ஜோதிஸ்ஸுக்கு முந்தின வாக்கியத்தில் சர்வபூதங்களும் பாதகமாகச் சொல்லி யிருக்கிறது.

இது பரமாத்மாவுக்குத்தான் பொருந்தும். (0)

I-I-10 ல் 2 (25)

छन्दोभिधानात् न முந்தின வாக்கியத்தில் காயத்திரி யைப்பற்றிச் சொல்லியிருப்பதால் அது பிரம்மத்தைக் கூறமாட்டாது.

इतिचेत् என்று சொன்னல்

न அது சரியன்று. ஏனெனின்

तथा चेतोर्पणनिगमात् எப்படி காயத்திரிக்கு 4 பா தங்களிருக்கின்றனவோ அப்படி பிரம்மத்துக் கும் 4 பாதங்களிருக்கின்றன. ஆகையால் பிரம்மத் தை காயத்திரிக்கு சமானமாக தியானம் செய்யும்படி சுருதி உபதேசிக்கிறது. காயத்திரி சர்வஸ்வரூபமா காதபடியால் காயத்திரிக்குச் சமானமாக பிரம்மத்தை தியானிக்கவேண்டுமென்பது கருத்து. ஆகையால் காயத்திரீ பரமாத்மா.

तथाहिदर्शनम् சாந்தோக்கியம் IV-3-8-ல் சந்த ஸ்ஸைக்கூறும் விராட் என்பதும் சப்தம் பிரம்மத் தைக் கூறுகிறதாகத் தெரியவருகிறது. அப்படியே இவ்விடத்திலும் காயத்திரீ என்கிற பதமும் பிரம்மத் தைக் கூறுகிறது.

7. I-1-10 ல் 3 (26)

சாந்தோக்கியம் III-12ல் காயத்திரிக்கு பூதங் கள், பிருதிவி, சரீரம், ஹிருதயம் இந்நான்கும் பாதங் களாகச் சொல்லியிருப்பதால் காயத்திரிபரமாத்மாவே.

I-1-10 ல் 4 (27)

பூர்வவாக்கியத்தில் சொல்லப்பட்டது பிரம்ம மாக இருக்கட்டும். இந்த வாக்கியத்தில் दिवि (ஸ்வ ர்க்கத்தில்) என்பதாய் ஏழாம் வேற்றுமை பிரயோகிக் கப்பட்டிருக்கிறது. பிந்தின வாக்கியத்தில் दिवः (ஸ்வர் க்கத்துக்கு பரமாக) என்பதாய் ஐந்தாம் வேற்றுமை பிரயோகிக்கப்பட்டிருக்கிறது. இப்படி உபதேசம் பேதப்படுவதால் காயத்திரீ பிரம்மமாகமாட்டாது யெ ன்று சொன்னல்

न அது சரியன்று

उभयस्मिन् अविरोधात् மரத்தின் நுணியில் பக்ஷி உட்கார்ந்திருக்கிறது என்றும் மரத்தின் நுணிக்குமே ல் உட்கார்ந்திருக்கிறதென்றும் சொல்லுவதில் பேத மிராததுபோல் பிரம்மத்தின் 3 பாதங்கள் ஸ்வர்க்கத் திலிருப்பதாகச் சொன்னதற்கும் दिवःपरः ஸ்வர்க்க த்துக்குமேல் பிரம்மம் இருக்கிறதென்று சொல்லுவ தற்கும் விரோதமில்லை. இரண்டு உபதேசத்திலும் மேல் இருக்கிறது என்பதாகத்தான் தியானம் விதிக்க ப்பட்டிருக்கிறது. (63)

XV. துவைதப்படி சுருக்கம்.

I-1-10-வது அதிகரணம்.

1. இதின் கருத்து:—சில சுருதிகளில் சொல்

ளிய ஜோதிஸ் சப்தம் பரமாத்மாவைக் கூறுகிறது என்பதாம். (64)

2. இதிலடங்கிய சூத்திரம்:— 1 (24-வது) (65

3. இதின் விஷயவாக்கியம்:—

विमेकर्णापतयतो विचक्षुर्वी इदं
ज्योतिर्हृदय आहितं यत्

என்கிற அக்கினி சூக்தம். (66)

4. சங்கதி:—முன்போலவே

(1) பிரத்தியுத்தாஹரண சங்கதியையாவது

(2) கிரம விசார சங்கதியையாவது அறியவும் (67)

5. சந்தேகம்:—விஷயவாக்கியத்திலுள்ள ஜோதி பதம்.

(1) அக்கினியைக் கூறுகிறதா? அல்லது

(2) விஷ்ணுவைக் கூறுகிறதா?

என்பது சந்தேகம். (68)

6. பூர்வபக்ஷம்:—ஜோதிஸ் சப்தத்துக்கு அக்கினி என்பதே ரூடியான அர்த்தமாகையால் அக்கினியையே அறியவேண்டியது (69)

7. சித்தாந்தம்:—இந்த சூத்திரம் அ-கை:-அக்கினி சூக்தத்திலிருக்கிற பதம் எப்படி பிரம்மத்துக்குப் பொருந்துமென்பதைச் சொல்லுகிறுர்.

ज्योतिः இந்த சப்தத்தால் கூறப்படுவது பிரம்மமே வேறல்ல. ஏனெனின்

चरणाभिधानात् இந்திரியங்களுக்கு விஷயமன்று என்று அந்த சுருதியில் சொல்லியிருக்கிறது. எது ஜோதிஸ்ஸோ அதின் பூர்ணஞானம் இந்திரியங்களுக்கு உண்டாகமாட்டாது. ஆகையால் ஜோதிஸ் அக்கினியாக இருக்கமாட்டாது. பலன் முன்போல்வே. (70)

## XVI. துவைதப்படி

### I-1-11-வது அதிகரணச்சுருக்கம்.

1. இதின் கருத்து:—காயத்திரீ சப்தம் பரமாத்மாவைக் கூறுகிறதென்பதாம். (71)

2. இதிலடங்கிய சூத்திரங்கள்:-3 (25-27) (72)

3. இதின் விஷயவாக்கியம்:—சாந்தோக்கியத்தின் 3-வது அத்தியாயத்தில்

गायत्रीवा इदं सर्वं भूतं यदिदं किंच वाग्वै गायत्री

அதாவது:—இதெல்லாம் காயத்திரீ வாக்கே காயத்திரீ என்று சொல்லியிருக்கிறது. (73)

4. சங்கதி:-முன்போலவே ஆக்ஷேபசங்கதி. (74)

5. சந்தேகம்:—விஷயவாக்கியத்திலுள்ள காயத்திரீ சப்தம்

(1) 24 அக்ஷரங்களுள்ள சந்தஸ்ஸைக் கூறுகிறதா? அல்லது

(2) விஷ்ணுவைக் கூறுகிறதா?

என்பது சந்தேகம். (75)

6. பூர்வபக்ஷம்:—

छन्दोभिधानात् சந்தஸ்ஸைக் கூறுவதால்

न காயத்திரீ விஷ்ணுவைக் கூறமாட்டாது. (76)

7. சித்தாந்தம்:—

इतिचेत् என்று சொன்ஞல்

இது சரியன்று (காயத்திரீ முதலிய சந்தஸ்ஸுகளும் பிரம்மத்தையே கூறும்.)

हि ஏனெனின்

तथादर्शनं கானம் செய்தல், இரக்ஷித்தல், இந்ததர்மங்கள் சொல்லப்பட்டிருப்பதால் காயத்திரீ என்கிற சப்தம் பிரம்மத்தைக் கூறும். இவ்விஷயத்தில் சுருதியிருக்கிறது.

तथा கானம் செய்தல் இரக்ஷித்தல் இந்த தர்மங்கள் காயத்திரீயிடத்திலிருப்பதால்,

चेतोर्पणनिगदात् மனதில் அதை உபாசிக்கும்படி சுருதியில் சொல்லியிருக்கிறது.

இந்த தர்மம் அக்ஷரஸமுதாயத்திலிராதபடியால் காயத்திரீ சப்தத்தால் பரமேசுவரனையே அறியவேண்டியது. (77)

பலன்:— முன்போலவே விஷ்ணு விஷயமாக ஆக்ஷேபசமாதானங்கள். (78)

### I-1-11 ல் 2-வது சூத்திரம் (26)

அ-கை:—வேறுகாரணத்தாலும் காயத்திரீ என்கிற பதம் பிரம்மத்தைக் கூறுவதாக சூத்திரத்தை

ஏற்படுத்தி அதில் காணப்படும் சுருதியையே உதாஹரிக்கிறார்.

च மேலும்

एवं இப்படியே

भूतादिपादव्यपदेशोप पत्तेः பூதம் அதாவது சர்வஜகத்தும் அமிருதமென்ற பெயருள்ள பிரம்மத்துக்கு ஒருபாதம் (பாக்கி மூன்று பாதங்கள் ஸ்வர்க்கத்திலிருக்கின்றன) என்று पादोऽस्य विश्वाभूतानि त्रिपादस्यामृतं दिवि என்கிற சுருதியில் சொல்லியிருக்கிறது. (காயத்திரீக்கு நான்கு பாதங்களுண்டு. ஆகையால் காயத்திரீ சப்தம் பிரம்மத்தைக் கூறும். (79)

## I-1-11 ல் 3 (27)

அ-கை:—முன்சொன்னதை ஆக்ஷேபித்துச்சமாதானம் சொல்லுகிறார்.

उपदेशभेदात् காயத்திரீயை ஸ்வர்க்கத்திலிருப்பதாயும் ஜோதிஸ்ஸை ஸ்வர்க்கத்துக்கு மேலிருப்பதாயும் இப்படி வெவ்வேறாய் சொல்லியிருப்பதால்

न காயத்திரீயும் ஜோதிஸ்ஸும் இவ்விரண்டும் பிரம்மமாகிற ஒரு வஸ்துவாகமாட்டா, வெவ்வேறே

इतिचेत् என்று சொன்னால்

न அது சரியன்று. ஏனெனின்

उभयस्मिन् अपि சுருதியில் ஒருவஸ்துவே பிரதிபாதிக்கப்பட்டிருந்தாலும்,

अविरोधात् விரோதம் இல்லை. ஏனெனின் மூன்று லோகங்கள் ஏழுலோகங்கள் இவைகளைச் சொல்லும் இச்சையால் இவைகள் பிரயோகிக்கப்பட்டிருக்கின்றன. ஆகையால் விரோதமில்லை. (80)

பூர்வபக்ஷபலன்:-முந்தின அதிகரணத்தின் ஜோதிஸ் விஷ்ணு என்கிற விஷயமாய் ஆக்ஷேபம்.

சித்தாந்தபலன்:—இதற்குச் சமாதானம் இதினிடத்தில் எல்லாமிருக்கிறது என்று சொல்லியிருப்பதால் ஜன்மாதி சூத்திரத்தின் பேரில் ஆக்ஷேப சமாதானங்கள் பலன்கள். (81)

## I-1-10-வது அதிகரணம் முற்றிற்று.

---

## I-1-11-வது அதிகரணத்தின் அனுக்கிரமணிகை.

## I-1-11-வது அதிகரணம்.

I. இதின் பெயர்:—இந்திர பிராணாதிகரண மென்பதாம். (1)

II. இந்த அதிகரணத்தின் கருத்து:—பிராணசப்தம் நிர்விசேஷ பிரம்மத்தைக் கூறும் என்னும் நிருபணம். (2)

III. சங்கதி:—(1) முந்தின அதிகரணத்துக்கும் இதற்கும் சங்கதி.

(a) [रा முந்தினஜோதிரதிகரணத்தில் எடுக்கப்பட்ட விஷய வாக்கியத்துக்கு முந்தின வாக்கியத்தில் பிரம்மம கூறப்பட்டிருக்கிறது. இந்த விஷய வாக்கியத்திலுள்ள யத் என்னும் பதம் இந்த பிரம்மத்தைக் கூறுகிறது. இந்த யத் என்னும் பதம் ஜோதிஸ் சப்தத்துடன் சம்பந்தப்பட்டிருக்கிறது. ஆகையால் ஜோதிஸ் சப்தமும் பிரம்மத்தையே கூறுகிறது என்று நிரூபிக்கப்பட்டது. இப்படி பிரம்மலிங்க பலத்தால் ஜோதிஸ் சுருதி பாதிக்கப்பட்டதுபோல் பிராணசுருதி பாதிக்கப்படவில்லை. ஏனெனின் விருத்தங்களான அநேக லிங்கங்களிருப்பதால் நிச்சயம் ஏற்படவில்லை. பிரம்மலிங்கத்தால் சுருதியானது பாதிக்கப்படுதல் என்னும் திருஷ்டாந்தம் பிரகிருதத்தில் உபயோகப்படாததால் பிரத்தியுதாஹரண சங்கதி ஏற்பட்டது. (3)

(b) [रा அல்லது திருஷ்டாந்தசங்கதியும் ஏற்படலாம். எப்படியெனின் முந்தின அதிகரணத்தில் த்யு (ஸ்வர்க்க) சப்தபலத்தால் அதின் வேற்றுமைகளை பாதித்து அர்த்தம் செய்ததுபோல் இவ்விடத்திலும் அநேக பதார்த்தங்களின் பலத்தால் வாக்கியத்தின் ஏகார்த்தம் பாதிக்கப்படுகிறது.

ஆகவே திருஷ்டாந்த சங்கதி ஏற்படுகிறது. (4)

(2) இதரசங்கதிகளை முன்போலவே அறியவும்.

அதாவது கௌஷீதகி சுருதியில் பிரம்மலிங்கங்கள் ஸ்பஷ்டமாயிருப்பதால் சுருதிமுதலிய சங்கதிகளை முன்போலவே அறியவும். (5)

IV. விஷயவாக்கியம்:—

கௌஷீதகி பிராம்மணோபநிஷத்தில்

(1) प्रतर्दनोहवो दैवोदासिरिन्द्रस्य प्रियंधामोपजगाम युद्धेन च पौरुषेण च (III-1)

என்று ஆரம்பித்து,

(2) सहोवाच प्राणोऽस्मिप्रज्ञात्मा तमामायुरमृतामित्युपास्व (III-2)

என்று சொல்லி, பிறகு

(3) अथ खलु प्राण एव प्रज्ञात्मा इदं शरीरं परिगृह्योत्थापयति (III-3)

என்றுசொல்லி, அப்படியே

(4) न वाचं विजिज्ञासीत वक्तारं विद्यात् (III-8)

முதலிய வாக்கியங்களைச்சொல்லி கடைசியில்

(5) स एष प्राण एवं प्रज्ञात्मानन्दोऽजरोऽमृतः (III-8)

முதலிய வாக்கியம் சொல்லப்பட்டிருக்கிறது.

அர்த்தம்:—

(1) रा திவோதாசனுடைய புத்திரன் தைவோதாசி என்பவன். இவனுடைய பெயர் பிரதர்தனன். இவன் யுத்தத்தாலும் சரீரபலத்தாலும் இந்திரனுடைய பிரியமான ஸ்தானத்தை அடைந்தான். இந்திரன் இவனைப்பார்த்து வரம் கொடுக்கிறதாகச் சொன்னான். அதற்குப் பிரதர்தனன் இந்திரனைப்பார்த்து, சுவாமி, மனிதனுக்கு ஹிதமாயிருக்கிறதை நீங்களே ஆலோசித்து அதை எனக்குக் கொடுக்கவேண்டும் என்று சொன்னான். அப்போது இந்திரன்

(2) "நான் பிராணன் பிரஞ்ஞாத்மா, என்னை ஆயுளாகவும் அமிருதமாகவும் உபாசி" என்று சொன்னான்.

(रा இவ்விடத்தில் பிராணசப்தம் பஞ்சவிருத்தி பிராணனைக் கூறவில்லை என்பதைக் காட்டும் பொருட்டு பிரஞ்ஞாத்மா என்னும் பதம் போடப்பட்டிருக்கிறது. என்னை என்பதினால் நிர்விசேஷபிரம்மம் கூறப்படவில்லை என்பதும் தெரியவருகிறது.

(3) रा பிறகு வாக்காதிகளுக்கு தேகத்தைத் தரிப்பதில் சக்தியில்லை யென்கிற நிச்சயமானபிறகு, பிராணனுக்கே தேகத்தைத் தரிக்கும் சக்தியும், அதைக்கிளப்பும் சக்தியுமிருக்கிறதென்பதைச் சொல்லும் பொருட்டு, இந்திரன்,

"பிராணனே பிரஞ்ஞாத்மா, இந்த சரீரத்தை கிரஹித்து, அதைகிளப்புகிறது" என்று சொன்னான்.

(4) பிறகு வாக்கை அறிய இச்சிக்கவேண்டாம், வக்தாவை அறியட்டும் என்று இந்திரன் சொன்னான்.

(5) கடைசியில் இந்த பிராணனை ப்ரஞ்ஞாத்மா, ஆநந்தம், ஜரையற்றவன், மரணமற்றவன் என்று இந்திரன் சொன்னான். (6)

V. சந்தேகம்:—இந்த வாக்கியங்களிலிருக்கிற பிராணசப்தம்

(1) பஞ்சவிருத்தியுள்ள பிராணவாயுவைக் கூறுகிறதா?

(2) தேவதையின் ஆத்மாவை அதாவது இந்திரனைக் கூறுகிறதா?

(3) ஜீவனைக்கூறுகிறதா?

(a) அல்லது பரப்பிரம்மத்தைக் கூறுகிறதா?

(b) சந்தேகத்துக்குக் காரணம்:—

ஆக்ஷேபம்:—अत एव प्राणः என்கிற 23-வது சூத்திரத்தில் பிராணசப்தம் பிரம்மத்தைக் கூறுகிறதென்று சொல்லப்பட்டது. இவ்விடத்திலும் आनन्दोऽजरोऽमृत என்கிற பிரமலிங்கமிருக்கிறது. இப்படி இருக்க இவ்விடத்தில் மறுபடியும் சந்தேகம் எப்படி உண்டாகும்?

சமாதானம்:— அநேகலிங்கங்கள் இருப்பதால் என்று சொல்லுகிறோம். இவ்விடத்தில் பிரம்மலிங்கம் மட்டும் காணப்படுகிறதென்பதில்லை. வேறு லிங்களுமிருக்கின்றன. எப்படியெனின்.

(1) मामेव विजानीहि

என்னையே அறி என்னும் III-1-ல் இந்திரனுடைய வசனம் தேவதாத்ம லிங்கத்தைக் கூறுகிறது.

(2) इदं शरीरं परिगृह्योत्थापयति

என்பதில் தேகத்தைத் தரித்தல், கிளப்புதல் இவை பிராணலிங்கத்தைக் காட்டுகின்றன.

(3) न वाचं विजिज्ञासीत वक्तारं विद्यात्

இதில் வசனித்தல் ஜீவலிங்கம்

(4) स एष प्राण एव प्रज्ञात्मानन्दोऽजरोऽमृतः

என்பதில் ஆநந்தம் பிரம்மலிங்கம். (ग இப்படி அநேக லிங்கங்கள் காணப்படுவதால் சம்சயம் உண்டாகிறது யுக்தம். இவைகளின் பலாபலத்தை நிர்ணயிக்கும்பொருட்டு இந்த அதிகரணம் ஏற்பட்டது.) (7)

VI. இதிலடங்கிய சூத்திரங்கள் 4 (28, 29, 30, 31) இவைகளில்

28-ல் பிராணலிங்கமிருந்தாலும் பிராணசப்தத்தால் பிரம்மத்தைத்தான் அறியவேண்டும் என்பதும்

29-ல் அகங்கார லிங்கத்தால் தேவதாத்மா தோன்றினும் பிரம்மத்தைத்தான் அறியவேண்டும் என்பதும்

30-ல் இந்திர லிங்கம் காணப்பட்டாலும் பிரம்மத்தைத்தான் அறியவேண்டியது என்பதும்

31-ல் பிராணசப்தம் ஜீவனையும் கூறமாட்டாது முக்கிய பிராணனையும் கூறமாட்டாது என்பதும்

நிரூபிக்கப்படுகிறது. (8)

VII. பூர்வபக்ஷம்:—பிராணசப்தத்தால் ப்ரசித்தமான பிராணவாயுவை கிரகிக்கவேண்டியது. ஏனெனின்

(न्या நான்குக்கும் நான்கு லிங்கங்கள் இருப்பதால் இன்னதைதான் எடுத்துக்கொள்ளவேண்டியது என்கிறதற்கு இடமில்லை. ஆகையால் லிங்கபலத்தால் ஒரு நிச்சயமும் ஏற்படமாட்டாது. ஆனால் பிராணன் விஷயத்தில் சுருதி பலம் அதாவது வாசகசப்தபலமிருக்கிறது. அது மற்றமூன்று விஷயத்திலும்காணப்படவில்லை. ஏனெனின் அந்த வாசகசப்தங்களே இல்லை. ஆகையால் இந்த பலத்தைக்கொண்டுபிராணசப்தம் முக்கியப் பிராணனைத்தான் கூறும் என்று நிச்சயிக்கலாம்.) (9)

VIII. சித்தாந்தம்.

1. சூத்திரம்:—இப்படி பூர்வபக்ஷி சொல்ல சித்தாந்தத்தை

प्राणस्तथानुगमात् ॥ २८ ॥

என்னும் சூத்திரத்தில் கூறுகிறார். (10)

2. பதஉரை.

प्राणः பிராணன் பிரமம்

तथानुगमात् அப்படியே அறியப்படுவதால் (11)

3. பொழிப்புரை.

பிராணசப்தத்தால் பிரம்மத்தைத் தான் அறியவேண்டியது. ஏனெனின் பிராணனைக்கூறும் வாக்கியங்களை பரியாலோசனை செய்வதால் அந்த அர்த்தம் விளங்குகிறது. (12)

4. பாஷ்யம்.

I. प्राणः பிராணசப்தத்தால் கூறப்படுவது பிரம்மம் என்று அறியத்தக்கது. ஏனெனின் (13)

2. तथानुगमात् முன்பின் வரும் வாக்கியங்களை பரியாலோசனை செய்யுமளவில், அந்த வாக்கியங்களிலுள்ள பதார்த்தங்கள் சேர்ந்து பிரம்மத்தை நிச்சயிப்பதில் பொருந்துகின்றன. எப்படியெனின்:—

(1) ஆரம்பத்தில் இந்திரன் பிரதர்த்தனனைப் பார்த்து வரனைக்கேழ் என்று சொன்னான். அதற்கு பிரதர்த்தனன்

(a) त्वमेवमेवृणीष्व यं त्वं मनुष्याय हिततमं मन्यसे

அதாவது மனிதனுக்கு எது மிகவும் ஹிதமானதாக நீர் நினைக்கிறீரோ அதை நீரே பொருக்கிக்கொடும்

என்பதாய் பரம புருஷார்த்தமான வரத்தை கேட்டு முடித்தான். இவனுக்கு மிகவும் ஹிதமாக சொல்லப்பட்ட பிராணன் எப்படி பரமாத்மாவாக ஆகமாட்டாது.

(b) तमेव विदित्वाऽतिमृत्युमेति नान्यः पन्था विद्यतेऽयनाय (श्वे III-8)

"அதையே அறிந்து மிருத்தியுவை தாண்டுகிறான். அதைத்தவிர வேறு மார்க்கமில்லை"

முதலிய சுருதிகளால் பரமாத்மஞானத்தைவிட வேறு ஒன்றினாலும் மிகவும் ஹிதமானது கிடைக்கமாட்டாது. (15)

(2) அப்படியே

सयोमां वेद नहवै तस्य केन च न कर्मणा लोको मीयते न स्तेन न भ्रूणहत्यया (कौब्रा III-1)

எவன் நானுகிற பிரம்மரூபத்தை அறிகிறானோ அதாவது சாக்ஷாத்தாய் அனுபவிக்கிறானோ அவனுடைய எந்த கர்மத்தாலும் மோக்ஷத்துக்கு ஹானிவருகிறதில்லை, திருடனாலும் ஹானி வருகிறதில்லை, புரூணஹத்தி (கற்பச்சேதம்) யாலும் ஹானி வருகிறதில்லை.

இது முதலிய சுருதிகள் பிரம்மத்தை ஞானத்துக்கு விஷயமாக ஒப்புக்கொண்டால்தான் பொருந்துகின்றன. (16)

(3) பிரம்மஞானத்தால் சர்வகர்மமும் நசித்துப்போகிறதென்பது

क्षीयन्ते चास्य कर्माणि तस्मिन् दृष्टेपरावरे (मु II-2-8)

(பர-அபர- பிரம்மம் பார்க்கப்பட்டவளவில் இவனுடைய சகல கர்மங்களும் க்ஷயித்துப்போகின்றன.)

முதலிய சுருதிகளால் பிரசித்தமாய் தெரியவருகிறது. (17)

प्रज्ञात्मा அதாவது பிரஞ்ஞாஸ்வரூபம் பிரம்மபக்ஷத்திற்தான் பொருந்தும். ஏனெனில் அசேதனமான வாயு பிரஞ்ஞாஸ்வரூபமாகமாட்டாது. (18)

முடிவில் आनन्दोऽजरोऽमृतः என்கிற ஆநந்தம் முதலிய விசேஷணங்கள் பிரம்மத்தைத் தவிர வேறு இடத்தில் செவ்வையாக பொருந்தா.

सन साधुना कर्मणा भूयान्
नोएवासाधुना कनीयान्
एष ह्येव साधुकर्म कारयति
तं यमेभ्यो लोकेभ्ये उन्निनीषते
एष एवासाधुकर्म कारयति
तं यमेभ्यो लोकोभ्यो ऽधोनिनीषते (कौ III-8)

நல்ல கர்மத்தால் அவன் விருத்தி அடைகிறதில்லை, கெட்ட கர்மத்தால் குறைந்து போகிறதில்லை, எவனை இந்த லோகங்களினின்றும் மேல்கொண்டுபோக இச்சிக்கிறானோ அவனை நல்ல கர்மம் செய்யும்படி செய்கிறான். எவனை கீழ்லோகங்களுக்குக் கொண்டுபோக இச்சிக்கிறானோ அவனை கெட்ட கர்மத்தைச் செய்யும்படிச் செய்கிறான்.

एषलोकपाल एष लोकाधिपतिरेष लोकेशः (कौ उ-III-8)

இவன் லோகத்தை பரிபாலனம் செய்கிறவன் இவன் லோகத்துக்கு அதிபதி இவன் லோகத்துக்கு ஈசன் என்று சொல்லியிருக்கிறது.

இவைகளை எல்லாம் (அதாவது) புண்ணியபாவங்களுடன் சம்பந்தப்படாமை, இவைகளைச் செய்யும்படி செய்தல் நிரங்குச ஐசுவரியம்) பரமான பிரம்மத்தை ஒப்புக்கொள்ளும் பக்ஷத்தில் சரியாக அர்த்தம் செய்யமுடியும், முக்கிய பிராணனை ஒப்புக்கொள்ளும் பக்ஷத்தில் முடியாது. (19)

ஆகையால் பிராணன் பிரம்மம்.

(ந்யா இவ்விதமாக எல்லாவாக்கியங்களையும் சேர்த்து ஒன்றாகப் பார்க்கும்போது அவைகளின் அர்த்தம் பிரம்மபரமாகவே முடிய, பிராண சுருதிக்குப் பலமில்லை. காரணமான பிரம்மம் காரிய ரூபமாயுமிருப்பதால், காரியதர்மத்துடனும் சம்பந்தப்படலாம். ஆகையால் அப்பிரம்ம லிங்கங்களையும் பிரம்மத்தினிடத்தில் சேர்க்கமுடியும் பிரம்மலிங்கத்தை அப்பிரம்மத்தில் சேர்க்கமுடியாது. ஏனெனின் காரணமான பிரம்மம் காரியத்துடன் சம்பந்தப்படாமலேயே இருக்க முடியும். ஆகையால் பூர்வபக்ஷி சொல்லுவது போல் சுருதிபலம் ஏற்பட்டு லிங்கபலம் கெட்டுப் போகாமல், சுருதிபலம் கெட்டு, வாக்கியத்தால் பிரம்மலிங்கம் பலவத்தாக ஆகிறபடியால் பிராணன் பிரம்மம்தான் என்று நிச்சயமாகிறது. (20)

I-1-11 ல் 2 (29) வது சூத்திரம்.

(1) **न वक्तुरात्मोपदेशादिति चेदध्यात्मसम्बन्धभूमा ह्यस्मिन् ॥ २९ ॥** (21)

2. முந்தின சூத்திரத்துக்கும் இதற்கும் சம்பந்தம்:—முந்தின சூத்திரத்தில் பிராணலிங்கமிருந்தாலும் பிராணசப்தம் பஞ்சவிருத்திப் பிராணனைக் கூறமாட்டாது. பிரம்மத்தைத்தான் கூறும் என்று நிரூபிக்கப்பட்டது. இப்போது “ अस्मि இருக்கிறேன் என்கிற அகங்கார லிங்கத்தினால் தேவதாத்மா தோன்றினாலும் பிராணசப்தம் பிரம்மத்தைத்தான் கூறும் என்பது நிரூபிக்கப்படுகிறது. (22

3. பதஉரை.

वक्तुः வக்தாவான இந்திரனுடைய

आत्मोपदेशात् ஆத்மா உபாசிக்கப்பட்டிருப்பதால்

न (பிராணன் பிரம்மமல்ல)

इतिचेत् என்று சொன்னால் (அது கூடாது)

हि ஏனெனின்

अस्मिन् (இந்த) அத்தியாயத்தில்

अध्यात्म सम्बन्दभूमा அத்தியாத்ம சம்பந்தம் அதிகமாக இருக்கிறது. (23)

4. பொழிப்புரை.

இந்திரன் தன்னையே அறி என்று சொல்லியிருப்பதால், பிராணசப்தத்தால் கூறப்பட்டது பிரம்மமல்ல, இப்படி சொல்லுவது சரியன்று. ஏனெனின் இந்த அத்தியாயத்தில் பிரத்தியகாத்மங்களைக் கூறும் வாக்கியங்கள் அநேகமிருக்கின்றன. (24)

5. பாஷ்யம்.

1. ந பிராணசப்தத்தால் கூறப்படுவது பிரம்மம் என்று சொன்னதானது ஆக்ஷேபிக்கப்படுகிறது. பிராணசப்தம் பரமான பிரம்மத்தைக் கூறமாட்டாது. ஏனெனின். (25)

2. (1) वक्तुरात्मोपदेशात् இவ்விடத்தில் வசனிக்கிறவன் இந்திரன் என்று பெயருள்ள ஒரு சரீரமுள்ளதேவன். இவன்

मामेवविजानीहि (என்னையே அறி) என்று ஆரம்பித்து

प्राणोस्मि प्रज्ञात्मा (நான் பிராணன் பிரஞ்ஞாத்மா) என்றுசொல்லி

பிரதர்த்தனனுக்கு தன் ஸ்வரூபத்தைபற்றிச் சொன்னான். வசனிக்கிறவனுடைய ஸ்வரூபமாகச் சொல்லப்பட்ட பிராணன் எப்படி பிரம்மமாகும்.

अवागमनाः (பிர-III-8-8) (பிரம்மம் வாக்கற்றது மனதற்றது) முதலிய சுருதிகளால் பிரம்மமானது வக்தாவாகமாட்டாது. (26)

(2) (வாக்கியம் இந்திரனுடைய உபாசனையைத்தான் சொல்லுகிறதென்பதற்கு வேறு யுக்தியைச்சொல்லுகிறார்)

மேலும்,

त्रिशीर्षाणं त्वाष्ट्रमहनम रुन्मुखान् यतीन् शालावृकेभ्यः प्रायच्छम् (कौ III-1)

முதலிய வாக்கியங்களால் சரீரசம்பந்தம்மட்டுமுள்ளதும், பிரம்மசம்பந்த மில்லாததுமான தர்மங்களால் தன்னை ஸ்துதிக்கிறான்.

மேற்படி சுருதியின் அர்த்தம்:—

மூன்று சிரசுகளை உடையவன் த்வஷ்டாவினுடைய பிள்ளையாகிய விசுவரூபன் என்னும் பிராணன். இவனை நான் கொன்றேன். யதார்த்தத்தைச் சொல்லுவது ருத் இது வேதாந்தவாக்கியம். இதை எவர்கள் வசனிக்கிறார்களோ அவர்கள் ருங்முகர்கள். இவர்களை விட வேறான புத்திராதிகளில் ஆசக்தியுள்ள சன்னியாசிகளை நான் செந்நாய்களுக்குக் கொடுத்தேன்

இந்த வாக்கியம் இந்திரன் விஷத்தில் தான் பொருந்தும், பிரம்ம விஷயத்தில் பொருந்தாது.) (27)

(3) இந்திரன் பலவானுயிருப்பதால் பிராணன் என்று சொல்லலாம். பலத்தைக்கூறும் பிராணசப்தத்தால் பலதேவதையை குறிப்பிடலாம் என்பதுகருத்து.

प्राणोवैबलम् பிராணனே பலம் என்று சுருதி கூறுகிறது. இந்திரன் பலத்தின் தேவதை என்பது பிரசித்தம். எது பலிஷ்டமான செய்கையோ அது இந்திரனுல் செய்யப்பட்டது என்று ஜனங்கள் சொல்லுகிறார்கள். (28)

(4) பிரஞ்ஞாஸ்வரூபம் தடையற்ற ஞானமுள்ள தேவதை விஷயத்தில் சம்பவிக்கும். இவன் பிரஞ்ஞாஸ்வரூபம் என்று சொன்னது சரியே. ஏனெனின் தேவதைகளுடைய ஞானத்துக்கு தடைகிடையாது என்று ஜனங்கள் சொல்லுகிறார்கள்.

இப்படி தேவதாத்மா என்பதுதான் உபதேசிக்கப்பட்டதாக நிச்சயிக்கப்பட்டவளவில், இந்திரன் ஹிதத்தைக்கொடுப்பதால் ஹிததமன் என்பதையும் கர்மத்தில் அதிகாரமில்லாததால் பாவமற்றவன் என்பதையும் (29)

(5) இப்படியே மற்றபதங்களையும் அவன் விஷயமாகவே அறியத்தக்கது. (30)

(6) ஆகையால் வக்தாவான இந்திரனுடைய ஸ்வரூபம் சொல்லியிருப்பதால் பிராணசப்தத்தால் கூறப்படுவது பிரம்மமல்ல. (31)

இப்படி ஆக்ஷேபித்தால் இனி அதற்கு

अध्यात्मसम्बन्ध भूमाह्यस्मिन् என்பதினுல் சமாதானம் கூறுகிறார். (அத்தியாத்ம மென்றால் ஆத்மனி தேகத்தில் அதிகதம் அதாவது அடைந்திருப்பதான பிரத்தியகாத்மா. இந்த அத்தியாயத்தில் (இந்திரனுடைய சரீரத்தைம் பொருந்தாமல்) பொதுவாய் சரீரஸ்திதிமுதலிய பிரத்தியகாத்மாவின் தர்மங்கள் விசேஷமாய் சொல்லப்பட்டிருக்கின்றன. எப்படி யெனின்

यावद्ध्यस्मिन् शरीरे प्राणो वसतितावदायुः (कौ III-2)

(எதுவரையில் இந்த சரீரத்தில் பிராணன் வசிக்கிறானே அதுவரையில் ஆயுளிருக்கிறது.)

என்கிற சுருதியானது பிராண சஞ்சாரமிருக்கிற வரையில் ஆயுஸ் இருக்கிறதென்று சொல்லுவதினுல்

(1) பிரத்தியகாத்மாவாயும், பிரஞ்ஞாஸ்வரூபமாயிருக்கிற பிராணனுக்கே ஆயுளைக் கொடுக்கவும், எடுத்துக்கொள்ளவும் ஸ்வதந்திரம் இருக்கிறதென்பதையும்,

(2) வெளியிலுள்ள தேவதைக்கு அந்த ஸ்வதந்திரமில்லை என்பதையும்

காட்டுகிறது. அப்படியே "பிராணனிருக்கும்போது இதர பிராணன்களிருக்கின்றன" என்னும் சுருதியானது இந்திரயங்களின் ஆசிரயமான பிராணன் அத்தியாத்மந்தான் என்பதைக் காட்டுகிறது. அப்படியே

(1) प्राण एवप्रज्ञात्मा इदं शरीरं परिगृह्योत्थापयति (कौ III-3)

என்கிற சுருதியானது சரீர உத்தாபகத்துவத்தைக் காட்டுகிறது.

(2) न वाचं विजिज्ञासीतवक्तारं विद्यात्

என்கிற சுருதி வக்திருத்வத்தைக் காட்டுகிறது (அர்த்தத்தை 160-வது பக்கம் பார்க்க)

இப்படி ஆரம்பித்து

तद्यथारथस्यारेषु नेमिरर्पिता नाभावरा

अर्पिताः एवमेवैता भूतमात्राः प्रज्ञामात्रा

स्वर्पिताः प्रज्ञामात्राः प्राणे ऽर्पिताः

स एषप्राण एव प्रज्ञात्माऽऽनन्दोऽजरोऽमृतः (कै III-8)

என்று சொல்லியிருக்கிறது. எப்படி சக்கிரத்தின் வட்டைகள் ஆரக்கால்களில் கோர்க்கப்பட்டு ஆரக்கால்கள் குடத்தில் கோர்க்கப்பட்டிருக்கின்றனவோ அப்படி இந்தப் பிருதிவி முதலான ஐந்து பூதங்களும் சப்தாதி போக்கியங்களும் ஆகிய இந்த பத்தும் இந்திரியங்களிலும் பிரஞ்ஞையிலும் சம்பந்தப்பட்டிருக்கின்றன. அதாவது விஷயஞானம் இந்திரியங்களால் சித்திக்கிறது என்பது கருத்து) ஐந்து ஞானேந்திரியங்கள் பிராணனிடத்தில் சம்பந்தப் பட்டிருக்கின்றன. (எல்லாம் பிராணனிடத்தில் கற்பிக்கப்பட்டிருக்கின்றன என்பது கருத்து.) (32)

सएषप्राण एवप्रज्ञात्मानन्दोऽजरोमृतः இந்த பிராணனே பிரஞ்ஞாத்மா, ஆநந்தம் அஜரம், அமிருதம். இப்படி விஷய இந்திரியங்களின் வியவஹாரங்களுக்கு ஆதாரமாயிருப்பது பிரத்தியகாத்மா என்றுசொல்லி சுருதி முடிந்துவிடுகிறது. (33)

(3) सम आत्मेति विद्यात् இந்த பிராணன் என்னுடைய ஆத்மா (ஸ்வரூபம்) என்று அறியப்படட்டும் என்னும் முடிவான வாக்கியமும் பிராணன் பிரத்தியகாத்மாவை கூறுகிறது என்று ஒப்புக்கொள்ளுகிற விஷயத்தில் பொருந்தும், வெளியிலுள்ளதை கூறும் என்கிற விஷயத்தில் பொருந்தாது.

(இந்த பிராணன் பிரத்தியகாத்மாவாக இருந்தாலும் பிரம்மமாகமாட்டாது என்னும் பக்ஷத்தில்) अयमात्मा ब्रह्मसर्वानुभूः என்கிற வேறு (II-5-19) சுருதியும் இந்த ஆத்மா சர்வஞ்ஞமான பிரம்மம் என்று கூறுகிறது. (34)

(4) ஆகையால் பிரத்தியகாத்ம விஷயமாகவே வெகு வாக்கியங்கள் காணப்படுவதால் இந்த அத்தியாயம் பிரம்மத்தைப்பற்றியே உபதேசிக்கிறதென்றும் தேவதையைப்பற்றி உபதேசிக்கவில்லை என்றும் சித்திக்கிறது. (35)

I-1-I1 ல் 3 (30) வது சூத்திரம்.

## शास्त्रदृष्ट्या तूपदेशो वामदेववत् ॥ ३० ॥ (36)

2. முந்தின சூத்திரத்துக்கும் இதற்கும் சம்பந்தம்:—முந்தின சூத்திரத்தில் சுருதிகளின் கருத்தினுலும் பிரமலிங்கத்தாலும் பிராண சப்தத்தால் கூறப்படுவது பிரம்மம்தான் என்று சொல்லப்பட்டது. ஆனுல் मामेवविजानीहि (என்னைத்தான் அறி) என்று இந்திரன் சொல்லுவதால் இந்திர (தேவதா) லிங்கம் காணப்படுகிறதே இதற்கு என்னவழி என்னும் கேள்விக்கு இந்தசூத்திரத்தில் உத்தரம் கூறப்படுகிறது. 37

3. பதவுரை.

उपदेशः तु உபதேசமோ

शास्त्रदृष्ट्या சாஸ்திர ஜன்னிய ஞானத்தால் (ஏற்படுகிறது)

वामदेववत् வாமதேவர் விஷயத்தில் போல் (38)

4. பொழிப்புரை.

தான் பிரம்மம் என்று தன்னைப்பற்றியே இந்திரன் சொன்ன வசனமானது சாஸ்திரஜன்னியஞானத்தால் பொருந்தும். வாமதேவருடைய வசனம் போலும். (39)

5. பாஷியம்.

இந்திரன் என்று பெயருள்ள ஒரு தேவன்தான் பிரம்மம் என்பதை (ஆ:—ஜன்மாந்திரத்தில் செய்த சிரவணாதிகளால் இந்த ஜன்மத்தில் பிரயத்தினமன்றியில்) சாஸ்திரத்திற் சொல்லியபடி அறிந்து "मामेवविजानीहि" என்னேயே அறி என்பதாய் தன் ஸ்வரூபத்தையே பரமாத்மாவாக உபதேசிக்கிறான். எப்படி

तद्धैतत् पश्यन् ऋषिर्वामदेवः प्रतिपेदे अहं मनुरभवं सूर्यश्चेति (बृ I-4-10)

(இந்த சுருதியில் வாமதேவர் எப்படி அறிந்ததாகச் சொல்லியிருக்கிறதோ அப்படி இந்திரனும் அறிந்தான் என்பது கருத்து)

यो यो देवानां प्रत्यबुध्यत सएवतदभवत् बृ I-4-10

(தேவதைகளுக்குள் எவன் பிரம்மத்தை சாக்ஷாத்தாய் அறிகிருனோ அவன் அதாகவே ஆய்விடுகிறான்)

என்று சுருதி சொல்லுகிறது. (40)

मामेवविजानीहि என்னேயே அறி என்று சொல்லி, இந்திரன் த்வஷ்டாவின் பிள்ளையைக்கொன்றல் முதலியசரீரதர்மங்களால் தன்னேஸ்துதித்துக்கொண்டான் என்று பூர்வபக்ஷி சொன்னதற்கு பரிஹாரம் செய்யத்தக்கது. த்வஷ்டாவின் பிள்ளையைக்கொன்றல் முதலியவைகள் "நான் இப்படிப்பட்ட கர்மங்களைச் செய்தேன். ஆகையால் என்னை அறி" இப்படி இந்திரன் ஞானத்துக்கு விஷயம் என்பதாய் ஸ்துதிக்கும்பொருட்டு சொல்லப்படவில்லை. ஆனுல் பிரம்மம் ஞானத்துக்கு விஷயம் என்று ஸ்துதிக்கும்பொருட்டு அம்மாதிரியாகச் சொல்லப்பட்டிருக்கிறது. இது எப்படி தெரியவருகிறதெனின், சுருதியானது த்வஷ்டாவின் பிள்ளையின் வதம் முதலிய கர்மங்களைச்சொல்லி

तस्यमे तत्रलोम च नमीयते सयोमां वेद न तत्यकेन च कर्मणालोको मीयते (कौ III-1)

"பிரம்மஞானத்திலிருக்கிற என்னுடைய ஒருமயிர்கூட கெட்டுப்போகிறதில்லை. எவன் என்னை இப்படி அறிகிருனே அவனுடைய எந்தகர்மத்தாலும் மோக்ஷத்துக்கு ஹானியில்லை. "என்கிற மேல் கிரந்தத்தில் விஞ்ஞானஸ்துதியைக் கூறுகிறது. இப்படிப்பட்ட கடோரமான கர்மங்களைச்செய்த பிரம்ம ஸ்வரூபமான என்னுடைய மயிருக்குக்கூட ஹானிவராமையால், என்னை

அறிந்த எவனுக்கும் எந்த கர்மத்தாலும் மோக்ஷம்கெட்டுப்போகமாட்டாது என்று சொன்னதினால் வித்தை ஸ்துதிக்கப்பட்டதாக தெரியவருகிறது. (ஆகையால் ஞானம் சிரேஷ்டம்.) (41)

அறியவேண்டியதோ பிரம்மமே என்பது प्राणोस्मि-प्रज्ञात्मा (நான் பிராணன், பிரஞ்ஞாத்மா) என்கிற இனி சொல்லபோகிற வாக்கியத்தால் சித்தமாகிறது. ஆகையால் இந்த அத்தியாயம் பிரம்மபரமே. (42)

XI. I-1-11-ல் 4 (31) வது சூத்திரம்.

# जीवमुख्यप्राणलिङ्गान्नेति चेन्नोपासात्रैविध्यादाश्रितत्वादिह तद्योगात् ॥ ३१ ॥ (43)

2. முந்தின சூத்திரத்துக்கும் இதற்கும் சம்பந்தம்.—முந்தின சூத்திரத்தில் பிராணசப்தம் தேவதையைக்கூறவில்லை, பிரம்மத்தைத்தான் கூறுகிறது என்று நிரூபிக்கப்பட்டது. இப்போது அந்தசப்தம் ஜீவனையும் கூறமாட்டாது, முக்கிய பிராணனையும் கூறமாட்டாது என்று நிரூபிக்கிறார். (44)

3. பதஉரை.

जीवमुख्यप्राणलिङ्गात् ஜீவனுடையவும் முக்கியப் பிராணனுடையவும் லிங்கமிருப்பதால்

न பிராணசப்தம் பிரம்மத்தைக் கூறமாட்டாது.

इतिचेत् என்றுசொன்னால்

उपासात्रैविध्यात् மூன்று உபாசனைகள் ஏற்படுவதாலும்

आश्रितत्वात् (நம்முடைய அர்த்தம்) ஒப்புக்கொள்ளப் பட்டிருப்பதினாலும்

इहतद्योगात् இந்த பிரகிரணத்திலும் பிரம்மலிங்கம் சம்பந்தப்பட்டிருப்பதாலும்

न (நீ சொல்லுகிறபடி) இல்லை. (45)

4. பொழிப்புரை.

ஜீவனுடைய லிங்கமும் முக்கிய பிராணனுடைய லிங்கமும் காணப்படுவதால் பிரம்மம் கூறப்படவில்லை என்று சொல்லும்பக்ஷத்தில் அதை நாம் ஒப்புக்கொள்ளவில்லை. ஏனென்னின் உன்னுடைய அர்த்தப்படி மூன்று உபாசனைகள் ஏற்படும். நாம் சொல்லுகிற அர்த்தம் வேறு இடத்திலும் ஒப்புக்கொள்ளப்பட்டிருக்கிறது. பிரகிருத அத்தியாயத்தில் பிரம்மத்தின் லக்ஷணம் காணப்படுகிறது. ஆகையால் இந்த வாக்கியம் பிரம்மபரம். (46)

5. பாஷியம்.

जीवमुख्य प्राणलिङ्गान्नेति चेत्

இந்த அத்தியாயம் பிரத்தியகாத்ம விஷயமான அநேக வாக்கியங்களைக் கூறுவதினால் வெளியிலுள்ள தேவதாத்மாவைப்பற்றி உபதேசிக்காவிட்டாலும், பிரம்மபரம் என்று சொல்லக்கூடாது. ஏனெனின் ஜீவலிங்கமும் முக்கிய பிராணலிங்கமும் இருக்கின்றன.

न वाचं विजिज्ञासीत वक्तारं विद्यात् (कौ III-8)

(வாக்கை அறியவேண்டாம் வகதாவை அறியட்டும்)

என்கிற வாக்கியத்தில் இந்த ஜீவனுடைய லிங்கம் தெளிவாய்க்காணப்படுகின்றது. இதில் வாக்கு முதலிய இந்திரியங்களால் வியவஹரிக்கிறவனையும், இந்திரியங்களையும் சரீரத்தையும் நியமனம் செய்கிறவனுமிருக்கிற ஜீவன்தான் அறியத்தகுந்தவன்என்று கூறப்படுகிறான். (47)

அப்படியே

अथखलुप्राण एव प्रज्ञात्मेदं शरीरं परिगृह्योत्थापयति (कौ III-८)

(அர்த்தம் 160-வது பக்கம்பார்க்க)

இதில் முக்கிப்பிராணலிங்கம் காணப்படுகிறது. எப்படியெனின் சரீரத்தைத்தரித்தல் முக்கியப்பிராணனுடைய தர்மம். பிராணசம்வாதத்தில், வாக்கு முதலிய பிராணன்களைப்பற்றி

तान्वरिष्ठः प्राणउवाच मामोहमापद्यथाऽहमेवैतत् पञ्चधात्मानं प्रविभज्यैतद् बाणमवष्ट भ्यविधारयामि (प्र II-3)

என்று சொல்லியிருக்கிறது.

(அதாவது சகலமான வாகாதிபிராணன்கள் தான்தான் சிரேஷ்டன்என்று ஒவ்வொருவரும் சொல்லிக்கொண்டு பிரஜாபதியிடம் சென்றார்கள். அவர்களைப்பார்த்து பிரஜாபதியானவர், எவன் கிளம்பிப் போவதினால் இந்தசரீரம் விழுந்துவிடுகிறதோ அவன்

உங்களுக்குள் சிரேஷ்டன் என்று சொன்னார். அப்படியே வாக்கு முதலியவைகள் ஒவ்வொருவராக வெளியே போனபின்னும் சரீரம் ஊமைபோல் சுமமாயிருந்தது, முக்கியபிராணன் வெளியே போனபோது சகலமானவர்களும் துக்கமடைந்ததைப் பார்த்து முக்கியபிராணன் வாகாதிகளுக்கு மோஹமடைய வேண்டாம், நான்தான் இந்தசரீரத்தை தரிக்கிறேன் என்னை பிராணாதி ஐந்துவிதமாக பிரித்துக்கொண்டு இந்த சரீரத்தை அவலம்பித்து அதை தரிக்கிறேன் என்று முக்கியப்பிராணன் சொன்னான்.

(ஆகையால் பிராணலிங்கம் ஸ்பஷ்டம் (48)

इदं शरीरंपरिगृह्य என்று முன்வாக்கியம் கூறப்பட்டிருக்கிறது. இந்த வாக்கியத்தையே इमंशरीरं परिगृह्य என்றுசிலர் படிக்கிறார்கள். அப்போது इमं शरीरं என்பதற்கு இந்தஜீவனை அல்லது இந்திரியசமூகத்தை பிராணன் அவலம்பித்து சரீரத்தைக் கிளப்புகிறான் என்று அர்த்தம் செய்யவேண்டும். (49)

பிரஞ்ஞாஸ்வரூபம் என்பதும் ஜீவன் சேதனனாகையால் அவனிடத்தில் பொருந்தும். ஞானசாதனமான இந்திரியங்கள் பிராணனை ஆசிரயித்துக்கொண்டிருக்கிறபடியால் முக்கிய பிராணனிடத்திலும் பிரஞ்ஞாஸ்வரூபம் பொருந்தும். (50)

ஜீவனையும் முக்கியபிராணனையும் ஒப்புக்கொள்ளும் விஷயத்தில்

योवैप्राणःसाप्रज्ञा यावै प्रज्ञा सप्राणः

அதாவது எதுபிராணனோ அதுவே பிரஞ்ஞை எது பிரஞ்ஞையோ அதுவே பிராணன்

என்று சொன்னதில் பிராணனும் பிரஞ்ஞையும் சேர்ந்திருப்பதால் பேதமற்றதாக சொல்லியிருக்கிறது

सहह्येतावस्मिन् शरीरेवसतः सहोत्क्रामतः

இவர்கள் இந்த சரீரத்தில் சேர்ந்து வசிக்கிறார்கள், சேர்ந்து வெளியேபோகிறார்கள் என்று சொன்னதினால் ஸ்வரூபத்தில் இருவர்களும் வெவ்வேறு என்று தெரியவருகிறது. இப்படி இரண்டு விதமாயும் அவர்களைப்பற்றிச் சொல்லியிருக்கிறது. பிரம்மத்தை அறியுர்பக்ஷத்தில் எது எதைவிட வேறாக இருக்கும். ஆகையால் இந்தவாக்கியத்தில் பிராணசப்தமானது ஜீவ முக்கியப் பிராணன்களில் ஒன்றையாவது அல்லது இரண்டையாவது கூறுமேதவிர பிரம்மத்தைக் கூறமாட்டாது. (51)

2. इतिचेत् இப்படி பூர்வபக்ஷி சொன்னால். (52)

3. न இது இப்படியன்று ஏனெனின். (53)

4. उपासात्रैविध्यात् இப்படியிருந்தால் ஜீவோபாசனை, முக்கிய பிராணோபாசனை, பிரம்மோபாசனை என்கிற மூன்று உபாசனைகள் ஏற்படும். ஒரே வாக்கியத்தில் மூன்றையும் ஒப்புக்கொள்வது உசிதமல்ல. ஆரம்பத்தாலும் முடிவாலும் வாக்கியம் ஒன்று என்று தெரிய வருகிறது எப்படியெனின்

मामेवविजानीहि

என்று ஆரம்பித்து

प्राणोऽस्मिप्रज्ञात्मा तं मामायुरमृतमित्युपास्व

என்றுசொல்லி கடைசியில்

स एषप्राणएव प्रज्ञात्माऽऽनन्दोऽजरोऽमृतः

என்று சொல்லியிருப்பதால்,

உபக்கிரமமும் உபசம்ஹாரமும் ஒரு ரூபமாய்க் காணப்படுகின்றது. ஆகையால் இவைகள் ஒரு அர்த்தத்தைத்தான் சொல்லுகின்றனவென்று ஒப்புக்கொள்ளுவது உசிதம். (54)

மேலும் பிரம்மலிங்கத்தை வேறு இடத்தில் உபயோகப்படுத்துவதற்கும் முடியாது. ஏனெனின் பூதங்கள், விஷயங்கள், பிரஞ்ஞை, இந்திரியங்கள் இவைகள் பிரம்மத்தைத்தவிர வேறு இடத்தில் ஆசிரயித்துக்கொண்டிருக்கமாட்டா. (55)

5. आश्रितत्वात् - மேலும், अतएवप्राण 23-வது சூத்திரம்) முதலியவைகளில்போல் பிராணசப்தமானது பிரம்மலிங்கத்தால் பிரம்மத்தையே கூறுகிறது. இவ்விடத்தில் அத்தியந்தம் ஹிதமானதைச் சொல்லல்முதலிய பிரம்மலிங்கத்தால் பிரம்மமே கூறப்பட்டிருக்கிறதென்று அறியத்தக்கது. (56)

इदं शरीरं परिगृह्योत्थापयति

என்பதில் முக்கிய பிராணலிங்கம் காணப்படுகிறதென்பது பொய். ஏனெனின் பிராணவியாபாரமும் பரமாத்மாவின் சுவாதீனமாக இருப்பதால் பரமாத்மாவினிடத்தில் இருக்கிறதாகச் சொல்லமுடியும். அப்படியே.

न प्राणेन नापानेन मर्त्यो जीवतिकश्चन ।
इतरेणतु जीवन्ति यस्मिन्नेतावुपाश्रितौ ॥

(क II-5-5)

எந்தமனிதனும் பிராணனாலும் ஜீவிக்கிறதில்லை அபானனாலும் ஜீவிக்கிறதில்லை எதில் இவைகள் ஆசிரயித்துக் கொண்டிருக்கின்றனவோ அதினால் மனிதர்கள் ஜீவிக்கிறார்கள். (57)

न वाचं विजिज्ञासीत वक्तारं विद्यात

என்பதில் காணப்படும் ஜீவலிங்கமும் பிரம்மபக்ஷத்தை விலக்கவில்லை. तत्वमसि अहंब्रह्मास्मि (நீ பிரம்மமாயிருக்கிறாய் நான் பிரம்மம்) முதலிய சுருதிகளால் ஜீவன் பிரம்மத்தைவிட வேறன்று. புத்தி முதலிய உபாதிகளால் பிரம்மமே ஜீவனென்றும், கர்த்தாவென்றும், போக்தாவென்றும் சொல்லப்படுகிறது.

न वाचं विजिज्ञासीत वक्तारं विद्यात्

முதலிய சுருதிகள் உபாதியால் ஏற்பட்ட வித்தியாசங்களை விலக்கி பிரம்மத்தின் ஸ்வரூபத்தைக் காட்டும்பொருட்டு மனதை பிரத்தியகாத்மாவினிடத்தில் செலுத்தவேண்டியதற்காக ஏற்பட்டபடியால் விரோதப்படவில்லை.

यद्वाचाऽनभ्युदितं येनवागभ्युद्यते तदेव

ब्रह्मत्वं विद्धिनेदं यदिदमुपासते (केन I-5)

முதலிய சுருதிகளும் வசனித்தல் முதலிய காரியங்களில் வியாபித்திருக்கிற (சம்பந்தப்பட்டிருக்கிற) ஆத்மாவே பிரம்மம் என்று காட்டுகின்றன.

सहह्येतावस्मिन् शरीरे वसतः सहोत्क्रामतः

என்பதில் பிராணனும் பிரஞ்ஞாத்மாவும் வெவ்வேறாக சொல்லியிருப்பதால் இரண்டும ஒன்றாகமாட்டாது என்று சொன்னது சரியன்று. ஏனெனின் பிரத்தியகாத்மாவின் உபாதிகளான ஞானசக்தியின் ஆசிரயமான புத்தியும், கிரியாசக்தியின் ஆசிரயமான பிராணனும் வெவ்வேறு. இரண்டு உபாதிகளினும் உபஹிதமான பிரத்தியகாத்மா ஸ்வரூபத்தில் ஒன்றானதால், பிராணனே பிரஞ்ஞாத்மா என்று சொன்னதால் விரோதமில்லை. (ஏனெனின் பிராணனே பிரஞ்ஞாத்மா என்பதற்கு பிராண உபாதியுடன் கூடின பிரத்தியகாத்மாவும் பிரஞ்ஞை அதாவது புத்தியாகிற உபாதியுடன் கூடின பிரத்தியகாத்மாவும் ஒன்று என்பது கருத்து.) (58)

விருத்திகாரருடையமதம்.

रा-ब्र (முந்தின வியாக்கியானத்தில் பிராணசப்தத்தால் கூறப்பட்டது நிர்விசேஷ பிரம்மம் என்றும் அப்படி யில்லாதபக்ஷத்தில் ஒரே வாக்கியத்தால் மூன்றுவித உபாசனைகள் ஏற்படும் என்றும் இது அசங்கதமானதால் ஞேயமான நிர்விசேஷ பிரம்மத்தையே கிரகிக்கவேண்டுமென்றும் சொல்லப்பட்டது

விருத்திகாரர் இந்த வாக்கியத்தில் உபாசியமான சவிசேஷ பிரம்மமே கூறப்பட்டிருக்கிறதென்றும் அந்த உபாசனையானது மூன்று ரூபமாய் அதாவது ஜீவலிங்கத்தால் ஜீவரூபமாயும், பிராணலிங்கத்தால் பிராணரூபமாயும், பிரம்மலிங்கத்தால் பிரம்மரூபமாயும் இருக்கலாம் என்றும் சொல்லுகிறார். ஆகவே முதல் வியாக்கியானத்தில் பிரம்மம் ஞேயம் இரண்டில் உபாசியம் என்று ஏற்படுகிறது.)

அல்லது नोपासा त्रैविध्यादाश्रितत्वा दिहतद्योगात् என்பதற்கு வேறு ஒரு அர்த்தமும் செய்யப்பட்டிருக்கிறது.

வாக்கியம் பிரம்மபரமாயிருந்தாலும் ஜீவனுடைய லிங்கமும் முக்கிய பிராணனுடைய லிங்கமும் விருத்தப்படமாட்டா. எப்படியெனின்

इहतद्योगात् பிராண தர்மத்தாலும், பிரஞ்ஞா தர்மத்தாலும், ஸ்வதர்மத்தாலும் மூன்று விதமாய் பிரம்மோபாசனம் கூறப்பட்டிருக்கிறது. இவைகளில்

(1) (a) आयुरमृतमित्युपास्वायुः प्राणः

என்னை ஆயுளாயும் அமிருதமாயும் உபாசி. ஆயுளே பிராணன்

(b) इदं शरीरं परिगृह्यो त्थापयति

இந்த சரீரத்தை கிரகித்து அது கிளம்பும்படி செய்கிறது.

(c) तस्मादेतदेवो क्थ मुपासीत

ஆகையால் உக்தமாக இதையே உபாசிக்கட்டும்.

என்று சொல்லியிருப்பதில் பிராணதர்மம் காணப்படுகிறது. (எப்படியெனின் தேகத்தில் சேஷ்டிக்கிறதினால் பிராணன் ஆயுஸ் என்றும், தேகத்தை உத்தேசித்து நீடித்திருப்பதினால் அமிருதமென்றும், தேகத்தை கிளப்புகிறதினால் உக்தமென்றும் சொல்லியிருக்கிறது.)

रा (2) புத்தியும் பிராணனும் சேர்ந்து சரீரத்தில் இருக்கிறதும் சேர்ந்து சரீரத்தை விட்டுவிடுவதும் சொன்ன) பிறகு

यथास्यैप्रज्ञायै सर्वाणिभूतानि एकीभवन्ति तत्

அதாவது "எப்படி சிதாபாசத்துடன் (அதாவது ஜீவன், புத்தி) சம்பந்தப்பட்ட சகல பூதங்களும் அதிஷ்டான சித்ஸ்வரூபங்களோ அப்படி வியாக்கியானம் செய்கிறேன்" என்று ஆரம்பித்து

वागेवास्या एकमङ्गमदूदुहत्
तस्यैनामपरस्तात् प्रति विहिता
भूमात्राप्रज्ञया वाचं समारुह्यवाचा
सर्वाणि नामान्याप्नोति

அதாவது வாக்கிந்திரியமூலமாக புத்தியானது நாமபிரபஞ்சத்தை விஷயமாக்குகிறது, சக்ஷுராதிகள் மூலமாக ரூபம் முதலிய விஷயங்களை விஷயமாக்குகிறது. இப்படி சகல நாமரூப பிரபஞ்சத்தையும் விஷயமாக்குகிற புத்தியானது சிதாபாசரூபமாகையால் அதிலிருக்கிற சித்து இதின் மூலமாக சகலத்துக்கும் சாக்ஷியாக இருக்கிறது. புத்திமூலமாக சிதாத்மா வாக்கிந்திரியத்திலிருந்துகொண்டு, அதைப்பிரேரணைசெய்து, வாக்கு என்கிற இந்திரியமூலமாக நாமங்களிலும் தான் அதிஷ்டானமாக இருந்து கண்மூலமாய் சகலரூபங்களையும் பார்க்கிறது

என்று சொல்லியிருப்பதில் பிரஞ்ஞையின் தர்ம்மம் (ஜீவதர்மம்) காணப்படுகிறது.

(3) तावा एतादशैव भूतमात्रा
अधिप्रज्ञं दशप्रज्ञामात्रा अधिभूतम् ।
यद्धिभूतमात्रा न स्युर्न प्रज्ञामात्राः स्युः ।
न ह्यन्यतरतो रूपं किंचनासिध्येत् ।
नो एतन्नाना । तद्यथारथस्यारेषु
नेमिरर्पिता नाभावरा अर्पिता एवमेव
एता भूतमात्राः प्रज्ञामात्रास्वर्पिताः
प्रज्ञामात्राः प्राणेऽर्पिताः सएष प्राण एव प्रज्ञात्मा

ஆகாசாதி பூதங்களும் சப்தாதி விஷயங்களும் இந்திரியங்களையும் இந்திரியங்களாலுண்டாகும் ஞானத்தையும் உத்தேசித்து இருக்கின்றன. இந்திரியங்களும் இவைகளாலுண்டாகும் ஞானமும் ஆகாசாதி பூதங்களையும் சப்தாதி விஷயங்களையும் உத்தேசித்திருக்கின்றன. பூதாதிகளில்லாவிடின் இந்திரியாதிகளில்லை. இந்திரியாதிகளில்லாவிடின் பூதாதிகளில்லை. இரண்டில் ஒன்று இராவிடின் ஒன்றின் ரூபமும் சித்திக்கமாட்டாது. (रा விஷயத்தால் விஷயம் சித்திக்கமாட்டாது, இந்திரியத்தால்தான் சித்திக்கவேண்டும். அப்படியே இந்திரியமும் விஷயமன்றியில் சித்திக்கமாட்டாது.) ஆகையால் ஒன்றையொன்று அபேக்ஷிக்கிறபடியால் வாஸ்தவத்தில் இரண்டும் வெவ்வேறன்று. எல்லாம் சிதாத்மாவில் ஆரோபிக்கப்பட்டிருக்கிறது. எப்படி வண்டிசக்கிரத்தின் ஆரக்கால்களில் வட்டைகள் கோர்க்கப்பட்டிருக்கின்றனவோ, குடத்தில் ஆரக்கால்கள் கோர்க்கப்பட்டிருக்கின்றனவோ, அப்படி பூதங்களும் விஷயங்களும் இந்திரியங்களிலும் இந்திரிய ஞானங்களிலும், இவைகள் பிராணனிடத்திலும் சேர்ந்திருக்கின்றன. இந்த பிராணனே பிரஞ்ஞாத்மா.

ஷை சுருதியில் பிராணனே பிரஞ்ஞாத்மா, ஆநந்தம், அமரம், அஜரம், என்று சொல்லியிருப்பதால் பிரம்ம தர்மும் ஏற்படுகிறது. (சுருதியின் அர்த்த முடிவு.)

ஆகையால் இரண்டு உபாதிகளின் தர்மங்களாலும் ஸ்வதர்மத்தாலும் பிரம்மத்தின் உபாசனையே மூன்று விதமாகச் சொல்லப்பட்டிருக்கிறது.

आश्रितत्वात् :— मनोमयः प्राणशरीरः (छा III-14-2)

முதலிய இடங்களில் மனதை உபாதியாக உடையவன் என்றும் பிராணனை சரீரமாயுடையவன் என்றும் சொல்லியிருக்கிறது. இந்த ஜீவதர்மங்களுடன் கூடினவனாக பிரம்மத்தை உபாசிக்கும்படி சொல்லியிருக்கிறது.

इहतद्योगात् வாக்கியத்தின் உபக்கிரம உபசம்ஹாரத்தால் ஒரே அர்த்தம் அறியப்படுவதாலும் பிராண ஜீவ பிரம்மலிங்கங்கள் அறியப்படுவதாலும் இந்த பிரகரணத்தில் அன்னிய தர்மத்தால் அன்னியத்தை உபாசித்தல் பொருந்துகிறது. ஆகையால் இந்த வாக்கியம் பிரம்மபரம் என்று சித்திக்கிறது. (59)

रा இந்த விருத்திகாரருடைய வியாக்கியானம் ஸ்லாக்கியமன்று. ஏனெனின் உபக்கிரமத்திலும் உபசம்ஹாரத்திலும் நிர்விசேஷ பிரம்மம் கூறப்பட்டிருக்கிறது. மத்தியில்மட்டும் சவிசேஷ பிரம்மத்தைச் சொல்லுவதற்கு நியாயமில்லை. மேலும் பிரம்மத்தின் உபாசனை மூன்றுவிதமாக ஏற்பட்டிருக்கிறதென்று சொல்லும்பக்ஷத்தில் மூன்றுவிதிகள் ஏற்படவேண்டும்.

பூர்வமீமாம்சா நியாயப்படி மூன்றுவிதிகளுக்கும் மூன்று வாக்கியங்கள் இருக்கவேண்டும் அப்போது ஏக வாக்கியத்துக்கு பங்கம்வரும். இந்த பங்கம் வராமலிருக்கும்பொருட்டு அதாவது ஏகவாக்கிய விதியின் பொருட்டும் மேற்சொன்ன காரணத்தாலும் ஞேய பிரம்மத்தையே அறியவேண்டியதேதவிர உபாசிய பிரம்மத்தை அறியத்தக்கதல்ல. (60)

XII. பூர்வபக்ஷ பலன்:-பிராணாதிகளின் உபாசனை.

சித்தாந்த பலன்:—பிரத்தியக் பிரம்மஞானம்(61

XIII. வியாஸாதிகரண மாலைப்படி அத்வைதச்சுருக்கம்.

1. சுலோகம்:—

प्राणोऽस्मीत्यत्र वाग्विन्द्र जीवब्रह्मसु संशयः ।
चतुर्णांलिङ्गसद्भवात्पूर्वपक्षस्त्वनिर्णयः ॥
ब्रह्मणोऽनेकलिङ्गानि तानिसिद्धान्यनन्यथा ।
अन्येषामन्यथासिद्धेर्व्युत्पाद्यं ब्रह्मनेतरत् ॥ (62)

2. விஷயவாக்கியம்:--கௌஷீதகீ உபநிஷத்தில் இந்திரபிரதர்தன கதையில் பிரதர்த்தனனை நோக்கி இந்திரன்

प्राणोस्मिप्रज्ञात्मा तं माम्--आयुरमृतं-इत्युपास्व

என்று சொல்லுகிறான். (63)

3. சந்தேகம்:-நான்குவித லிங்கங்களால் நான்குவித சந்தேகம். (64)

4. பூர்வபக்ஷம்:—

(1) इदंशरीरं परिगृह्यो त्थापयति

என்பது பிராணவாவுவின் லிங்கம்.

(2) अस्मि

என்று இந்திரன் அகங்காரத்தைக் காட்டினதால் அது இந்திரலிங்கம்.

(3) वक्तारं विद्यात्

என்பது வசனிக்கிறதைச் சொல்லுவதினால் ஜீவலிங்கம்.

(4) आनन्दोऽमरोऽजरः

என்பது பிரமலிங்கம். இவைகளில் இன்னது பிரபலமென்றும் இன்னது துர்பலமென்றும் சொல்ல முடியாத படியால் நிச்சயம் ஏற்படவில்லை. (65)

5. சித்தாந்தம்:—பிரமத்துக்கு அநேகலிங்கங்களுண்டு. எப்படியெனின்.

(1) त्वमेवमेवृणीष्व यं त्वं मनुष्याय हिततमं मन्यसे

என்பதில்ஹிததமத்வம் என்பது ஒரு லிங்கம்.

(2) योमां विजानीयात् नान्यस्य केन च नकर्मणा
लोको मीयते नमातृ वधेन नपितृवधेन

என்பதில் ஞானத்தால் மஹாபாதகங்களின் நாசமாகுதல் ஒரு லிங்கம். இப்படியே இதர லிங்கங்களுமிருக்கின்றன. பிராண, இந்திர, ஜீவபக்ஷங்களில் இவைகள் பொருந்தும்படி சொல்லமுடியாது. பிராணாதி லிங்கங்களோ பிரமத்தினிடத்தில் பொருந்தும், ஏனெனின் பிராணாதிகள் பிரம்மத்தை அறியதுவாரங்கள். இப்படியிருப்பதால் பிரம்மலிங்கங்கள் அநேகமாயிருப்பதாலும், வேறு இடங்களில் இவைகள் சேராதபடியாலும் அவைகள் பிரபலம். ஆகையால் பிரம்மத்தையே இவ்விடத்தில் அறியவேண்டியது

பிராணாதிகளை அறியக்கூடாது. (66)

XIV. விசிஷ்டாத்வைதப்படி I-1-11-வது அதிகரணச் சுருக்கம்.

1. இதின் விஷயவாக்கியம்:--கௌஷீதகி உபநிஷத்தில் III-1-வது வாக்கியம் (அத்வைதம் பார்க்க) (67)

2. சம்சயம்:—இந்த வாக்கியத்திலுள்ள இந்திர பிராணசப்தங்கள்.

(1) ஜீவனைக் கூறுகின்றனவா? அல்லது (2) பரமாத்மாவை கூறுகின்றனவா? (68)

3. பூர்வபக்ஷம்:-இந்த சப்தங்களால் கூறப்பட்டவன் ஜீவன்தான். ஏனெனின் இந்திரசப்தம் ஜீவர்களுக்குள் ஒருவருன தேவராஜாவைக்குறிப்பிடுகிறது. பிராணசப்தம் அத்துடன் சேர்ந்திருப்பதால் அவனையே கூறுகிறது.

तंमामायुरमृतं उपास्व

அதாவது:—இந்திரன் தன்னையே ஆயுஸாகவும் அமிருதமாகவும் உபாசிக்கும்படிசொல்லியிருக்கிறான். ஆகையால் இந்திர பிராணசப்தங்கள் இந்திரனைத்தான் கூறவேண்டும். (69)

4. சித்தாந்தம்:—இந்த சப்தங்களால் கூறப்பட்ட தானது ஜீவனைவிட வேறான பரமாத்மாவே. ஏனெனின் ஜீவர்களுக்குப் பொருந்தாத அமிருதத்வாதிகள் (III-8) இந்திரனுக்குச் சொல்லியிருப்பதால் இந்திர சப்தத்தால் கூறப்பட்டது பரமாத்மாவே. (70)

சூத்திரார்த்தம் 28.

प्राण: :-உபாசிக்கத் தக்கதாகச்சொல்லிய இந்திர பிராண சப்தங்களால் கூறப்பட்டது பரமாத்மாவே. तथा अनुगमात् பரமாத்மாவுக்குறிய அமிருதத்துவாதிகளுடன் பிராணனை சொல்லியிருப்பதால் இந்திரபிராணன்கள் பரமாத்மாவே. (அதாவது பிராணனுக்கும் இந்த விசேஷணங்கள் சொல்லியிருப்பதால் பிராணன் பரமாத்மாவே. (71)

I—1—11—ல் 2 (29)

न वक्तुरात्मोपदेशात् इतिचेत्:—

III—1 ஆகிற ஆரம்பவாக்கியத்தில் இந்திரன் தன்னையே உபாசிக்கும்படி சொல்லுவதால் உபசம்கார வாக்கியத்தையும் ஜீவபரமாகவே அர்த்தம் செய்ய வேண்டியது, பரமாத்மபரமாக அர்த்தம் செய்யக்கூடாது என்று சொன்னால்.

न அது சரியன்று ஏனெனின்.

अस्मिन् இந்திர சப்தத்தைக் கூறும் வாக்கியத்தில்

अध्यात्मसंवन्धभूमा பரமாத்ம சம்பந்தமான தர்மங்கள் வெகுவாய் சொல்லப்பட்டிருக்கின்றன. (72)

I—1—11—ல் 3 (30)

அ-கை:—பரமாத்மாவே உபாசியமானால் எப்படி இந்திரன் தன்னை உபாசிக்கும்படி சொல்லுவான் என்கிற சந்தேகத்துக்கு பரிஹாரம் கூறப்படுகிறது.

शास्त्रात् பரமாத்மாவுக்கு சித் அசித்துக்கள் சரீரங்கள். பரமாத்மாவே சரீரீ. சரீரத்திற்குச் சொல்லுவதை சரீரிக்கும் உபயோகப்படுத்தலாம். ஆகையால் சாஸ்திரத்தை அனுசரித்து தன்னை உபாசி என்று சொன்னதினால் தன்னை சரீரமாயுடைய பரமாத்மா உபாசிக்கத்தக்கவர் என்பதை இந்திரன் உபதேசித்தான்.

वामदेववत् வாமதேவர் நான் மனு, நான் சூரியன் என்று சொன்னபோது தனக்குள்ளும் மனுவுக்குள்ளும் சூரியனுக்குள்ளும் அந்தர்யாமியாயிருக்கிறவர் ஒருவர் என்கிற பாவத்தை மனதில் வைத்துக்கொண்டு தான் மனு, சூரியன் என்று சொன்னது போலும்(73).

I—1—11—ல் 4 (31)

जीवमुख्यप्राणलिंगात् न:— இந்திரன் த்வஷ்டாவின் பிள்ளையான விசுவரூபனைக் கொன்றதாகச் சொல்லியிருக்கிறது. இது ஜீவலிங்கம். பிராணன் சரீரத்திலிருக்கும்வரையில் ஆயுளிருக்கிறது. இது முக்கியப் பிராணலிங்கம். இந்த லிங்கங்களால் அத்தியாதம சம்பந்தம் வெகுவாய் காணப்படுவதால் பரமாத்ம நிச்சயமாகவில்லை.

इति चेत् என்று சொன்னால்

न அது சரியன்று.

उपासा त्रैविध्यात्:-அவரை ஸ்வாகார ரூபராயும் ஜீவ சரீரமுடையவராயும் பிராண சரீரமுடையவராயும் இப்படி மூன்றுவிதமாய் உபாசிக்கும்படி சொல்லியிருப்பதாலும்(அதாவது:-ஸ்வரூபானு சந்தானம், போக்திரு வர்க்க சரீரகராக அனுசந்தானம், போக்கிய வர்க்க சரீரகராக அனுசந்தானம் செய்யும்படி சொல்லியிருப்பதாலும்)

आश्रितत्वात्:—सत्यंज्ञानं अनन्तं ब्रह्म आनन्दं ब्रह्म முதலிய இடங்களில் பிரம்மத்தை மூன்றுவிதமாக உபாசிக்கச்சொல்லியிருப்பதாலும்.

इह तद्योगात् இந்த பிரதர்தன வித்தையிலும் 3-வித உபாசனைகள் ஏற்படுவதால் இந்திரபிராண சப்தங்களால் கூறப்பட்டவர் பரமாத்மாவே. (74)

XV. த்வைதப்படி I-1-12-வது அதிகரணச்சுருக்கம்.

1. இதின்கருத்து:-ஐதரேயத்தில் சொல்லிய பிராண சப்தம் பரமாத்மாவைக் கூறுகிறதென்பதாம். (75)

2. இதிலடங்கிய சூத்திரங்கள்:-4 (28-31) (76)

3. இதின் விஷயவாக்கியம்:—ஐதரேயத்தின்

ता वा एताः शीर्षे श्रियः श्रिताश्चक्षुः श्रोत्रं मनोवाक् प्राणः

என்கிற வாக்கியம். (77)

4. சங்கதி:—முந்தின அதிகரணத்தில் அநேக லிங்கங்களைக்கொண்டு காயத்திரீ சப்தம் விஷ்ணுவை கூறுகிறது என்று சொல்லப்பட்டது. இவ்விடத்திலும் அநேக சுருதி லிங்கங்களைக்கொண்டு பிராணசப்தத்தால் கூறப்படுவது முக்கியப் பிராணன்தான் என்

று பூர்வபக்ஷி ஆக்ஷேபிக்கிறபடியால் திருஷ்டாந்த சங்கதி ஏற்படுகிறது. (78)

5. சந்தேகம்:—ஐதரேய முதலிய சுருதிகளில் கூறப்படும் பிராணன்.

(1) முக்கிய வாயு முதலியதா? அல்லது

(2) விஷ்ணுவா? (79)

6. பூர்வபக்ஷம்:—பிராண சப்தத்தால் கூறப்பட்டது முக்கியவாயு, இந்திரன், ஜீவன். இப்படி சொல்லுவதற்கு சுருதி லிங்கங்களிருக்கின்றன. (80)

7. சித்தாந்தம்:—பிராண சப்தத்தால் விஷ்ணுவையே அறியவேண்டியது.

तथा முன் 23-வது சூத்திரத்தில்

तद्वैत என்கிற சுருதியில் பிராணசப்தம் பிரம்மத்தைக் கூறுகிறது என்று சொன்னதுபோல்

प्राण: விஷயவாக்கியத்திலுள்ள பிராணசப்தமும் பிரம்மமே. ஏனெனின்

अनुगमात् ப்ரம்மசப்தம்போல் பிராணசப்த விஷயமாயும் சுருதி லிங்கங்கள் அடிக்கடி சொல்லப்பட்டிருக்கின்றன. (81)

8. I-1-12 ல் 2 (29)

அ-கை:—முன் சொன்னது ஆக்ஷேபிக்கப்பட்டு சமாதானம் சொல்லப்படுகிறது.

वक्तुः वृहतीसहस्र:—யென்கிற கிரந்தத்தைச் செய்த விசுவாமித்திரருக்கு

आत्मोपदेशात् இந்திரன் தன்னையே பிராணனாக உபதேசிக்கிறபடியால் இந்திரனே பிராணன்

इतिचेत् என்றுசொன்னால்

न அது சரியன்று

हि ஏனெனின்

अस्मिन् இந்த பிரகரணத்தில்

अध्यात्मसंबन्दभूमा இந்திரன் விசுவாமித்திரன்முதலானவர்களின் தேகங்களில் பரமாத்மாவின் சம்பந்தம் பூராவாக இருக்கிறது. ஆகையால் பிராணன் பரமாத்மாதான். (82)

9. I-1-12 ல் 3 (30)

அ-கை:—அப்படியானால் प्राणोवा अहमस्मि ऋषे

அதாவது:—ரிஷியே, நான் பிராணனாயிருக்கிறேன்

என்கிற சுருதியில் प्राणोवा मयि

அதாவது:—பிராணன் என்னிடத்தில் இருக்கிறது என்று இருக்கவேண்டுமே எனின், அந்த சங்கைக்கு சமாதானம் கூறுகிறார்.

वामदेववत् எப்படி வாமதேவரிஷியானவர் அந்தர்யாமியைச் சொல்ல இச்சையுடன் अहं मनुरभवम् என்பதாய் தானும் மனுவும் சூரியனும் எல்லாரும் ஒன்று என்று சொன்னாரோ, அப்படி

शास्त्रदृष्ट्यातु இந்திரன் அந்தர்யாமியைச் சொல்ல இச்சித்து தானே பிராணன் என்று

उपदेश: சொன்னார். பிராணனே தான் என்பதாய் ஐக்கியத்தை அவர் உபதேசிக்கவில்லை. (83)

10. I-1-12 ல் 4 (31)

அ-கை:—மறுபடியும் சொன்னதையே ஆக்ஷேபித்து சமாதானம் கூறுகிறார்.

जीवमुख्यप्राणलिंगात् நூறு-(100) ஆயுஸ் இருக்கிறதானது ஜீவலிங்கம். இந்திரியங்களுக்கு தேவதைகளுடன் சம்பாஷணை ஏற்படுதல் முக்கிய பிராணலிங்கம். இந்த லிங்கங்களால் பிராணன் பிரம்மமல்ல

इतिचेत् என்றுசொன்னால்

न அது சரியன்று. ஏனெனின்

उपासा त्रैविध्यात् உள்ளே, வெளியில், எங்கும் இப்படி பிரம்மத்தின் உபாசனை மூன்று விதமாகச் சொல்லியிருக்கிறது.

इह இந்த பிரகரணத்தில்

आश्रितत्वात् அந்த 3 பிரகாரமும் சொல்லியிருக்கிறது.

तद्योगात् உபாசனைசெய்யும் அதிகாரிகளுக்குள் 3 வித உபாசகர்களுமிருப்பதால், உபாசனையின்பொருட்டு அந்தர்யாமியைப்பற்றிச் சொன்னது யுக்தம் என்பது கருத்து.

பலன்கள்:—अत एव प्राण: என்கிறதிலுள்ள பிராண விஷயமான ஆக்ஷேபசமாதானங்களே. (84)

11-வது அதிகரணம் முற்றிற்று.

பிரம்மசூத்திரார்த்த தீபிகையின்
முதலாவது அத்தியாயத்தின்
முதல்பாதம் முற்றிற்று.

## முதலாவது அத்தியாயம்.

### இரண்டாவது பாதம்

I. இந்த பாதத்தின் பெயர்.
II. அவதாரிகை.
III. முதலாவது பாதத்துக்கும் இரண்டாவது பாதத்துக்கும் சங்கதி.
IV. இந்த பாதத்தில் அடங்கிய அதிகரணங்களும் சூத்திரங்களும்.

### I-2-1-வது அதிகரணத்தின் அனுக்கிரமணிகை.

# முதலாவது அத்தியாயம்

## இரண்டாவது பாதம்.

I. இதின் பெயர்:—உபாஸ்ய பிரம்மத்தைப் பிரதிபாதிக்கும் அஸ்பஷ்ட சுருதி சமன்வயம் என்பதாம்.

II. அ-கை:—முதலாவது பாதத்தில் जन्माद्यस्य यतः என்கிற இரண்டாவது சூத்திரத்தில் ஆகாசம் முதலிய சமஸ்த ஜகத்தின் ஜன்மாதிகளுக்கும் காரணம் பிரம்மமென்று நிரூபிக்கப்பட்டது. சகலஜகத்துக்கும் காரணமான இந்த பிரம்மத்தின் வியாபிக்குந்தன்மை நித்தியமாயிருத்தல், சர்வஞ்ஞதர்மம், சர்வசக்தியுடையதாயிருத்தல் சர்வத்துக்கும் ஆத்மா (அதவாது ஸ்வரூபம்) வாயிருத்தல், இப்படிப்பட்ட தர்மங்கள் சொன்னதாகவே ஆகின்றன. மேலும் இதரவிஷயங்களைக்கூறும் பிரசித்தமான ஆகாசாதி சில பதங்கள் பிரம்மத்தையே கூறுகின்றன வென்பதற்குக் காரணத்தைக் கூறுவதினால் சந்தேகிக்கக்கூடிய (அப்பதங்களடங்கிய) சில வாக்கியங்களும் ஸ்பஷ்டப் பிரம்மலிங்கங்களைக் கூறுவதினால் பிரம்மபரமாகவே அர்த்தம் செய்யப்பட்டன. வேறு சிலவாக்கியங்கள் அஸ்பஷ்டப் பிரம்மலிங்கங்களைக் கூறுவதினால் பிரம்மத்தையே கூறுகின்றனவா? அல்லது வேறு விஷயத்தைக் கூறுகின்றனவா என்று சந்தேகம் உண்டாகிறது. (ஆ பூதாகாசாதி சில வாக்கியங்களில் ஆகாசாதி பதங்களுக்கு பிரம்மத்தின் லிங்கம் ஸ்பஷ்டமாய்க் காணப்படுகிறதினால் பிரம்மபரமாய் அர்த்தம் செய்யப்பட்டது. சிலதில் அது அஸ்பஷ்டமாய்க் காணப்படுகிறது. அப்போது அந்த வாக்கியத்தைப் பிரம்மபரமாய் அர்த்தம் செய்கிறதா, அல்லது வேறுவிதமாய் அர்த்தம் செய்கிறதா என்பது சந்தேகம்.) இப்படிப்பட்ட வாக்கியங்களும் பிரம்மத்தையே கூறுகின்றன வென்பதை நிச்சயிக்கும்பொருட்டு இரண்டாவது மூன்றாவது பாதங்கள் ஆரம்பிக்கப்படுகின்றன. இரண்டாவது பாதம் விசேஷமாய் உபாஸ்யப் பிரம்மத்தையும் மூன்றாவது பாதம் விசேஷமாய் ஞேயப் பிரம்மத்தையும் கூறுகின்றன.

III. ஆ முதலாவது பாதத்துக்கும் இண்டாவது பாதத்துக்கும் சங்கதி:—

முதலாவது பாதத்தில் சித்தித்த பிரம்ம லக்ஷணங்களை ஆதாரமாய் வைத்துக்கொண்டு இரண்டாவது பாதம் பிரவிர்த்திக்கிறபடியால் காரணகாரிய சம்பந்தம் சித்திக்கிறது.

IV. இந்த இரண்டாவது பாதத்தில் அடங்கிய அதிகரணங்கள் ஏழு. சூத்திரங்கள் முப்பத்திரண்டு.

இவைகளில் முதலாவது அதிகரணத்தில் மனோமயத்வம் பிரம்மத்துக்கே பொருந்தும் என்பது விஷயம்.

2-ல் அத்திருத்வம் ஷை.

3-ல் குஹாபிரவேசம் ஜீவபிரம்மங்களுக்கே ஷை.

4-ல் அக்ஷிகதத்வம் பிரம்மத்துக்கே ஷை.

5-ல் அந்தர்யாமித்வம் ஷை.

6-ல் பூதயோனித்வம் ஷை.

7-ல் வைசுவாநரத்வம் ஷை.

## I-2-1-வது அதிகரணம்.

I. இதின் பெயர்:— सर्वत्र प्रसिद्ध அதிகரணமென்பதாம். (1)

II. இதின் கருத்து:-பிரம்மம் மனோமயத்வாதி தர்மங்களுடன் கூடினதாக உபாசிக்கத் தக்கதென்பதாம். (2)

III. இதின் விஷயவாக்கியம்:—

(1) सर्वं खल्विदं ब्रह्म तज्जलानिति शान्त उपासीत। अथ खलु क्रतुमयः पुरुषो यथा क्रतुरस्मिन् लोके पुरुषो भवति तथेतः प्रेत्य भवति स क्रतुं कुर्वीत
(छा III-14-1)

(2) मनोमयः प्राणशरीरो भारूपः सत्यसङ्कल्प आकाशात्मा सर्वकर्मा सर्वकामः सर्वगन्धः सर्वरसः
(छा III-14-2)

இதின் அர்த்தம்:—

(ரா சகலஜகத்தும் பிரம்மத்தினிடத்திலிருந்து உண்டாகி, பிரம்மத்தினிடத்திலிருந்து, பிரம்மத்திலேயே லயமாய் விடுவதால் பிரம்மமே. பிரம்மத்தினிடத்தில் சத்துரு மித்திர பாவங்களில்லாதபடியால் இராகாதிகளற்றவனுக ஆகவேண்டியது. இப்படி அதிகாரமடைந்த புருஷன் சங்கற்பத்தையே பிரதானமாக உடையவன், ஆனதால் சங்கற்பவிகாரம் அதாவது சங்கற்பத்தால் உண்டாகிறவன். எப்படியெனின் இந்

த்புருஷன் இந்த லோகத்தில் எப்படி சங்கற்பிக்கி
ருனே அதாவது தியானிக்கிருனே அப்படி இவ்விட
த்தில் மரித்தபிறகு லோகாந்திரம்போய் தியானமஹி
மையால் தியானித்த ரூபமாகப் பிறக்கிருன். இந்த
அதிகாரீ சங்கற்பத்தை (அதாவது உபாசனையை)ச்
செய்யவேண்டும். இந்த சங்கற்பத்துக்கு விஷயம்
யாதெனின்:—

மனதைப் பிரதானமாக உடையவன், பிராணனைச்
சரீரமாக உடையவன், தேஜோமயன், சத்தியகாமன்
சத்திய சங்கற்பன், இப்படிப்பட்டவன் அந்தர்ஹிருத
யத்தில் தியானிக்கத்தக்கவன்.

(நி மேற்படி சுருதியில் शान्त उपासीत என்றும் सक्रतुं-
कुर्वीत என்றும் சொல்லியிருக்கிறது. சாந்தஉபாசீத
என்பதற்கு சாந்தகுணத்துடன் கூடினவனுய் உபாசி
என்று அர்த்தம் செய்தால் மேல் सक्रतुं कुर्वीत உபாச
னைசெய் என்று விதிக்கவேண்டியதில்லை. ஆகையால்
இந்த விதிக்கு அங்கமாக சாந்தகுணத்தைச் சொல்லி
யிருப்பதாக அர்த்தம் செய்யவேண்டியது. மேலும்

சாந்த உபாசீத என்பதினுலேயே சாந்தகுணமும்
உபாசனையும் விதிக்கப்பட்டதாகச் சொல்லும்பக்ஷத்
தில் மேல்வாக்கியம் வியர்த்தமாகப் போவதுமன்றி
யில் ஒரே வாக்கியத்தில் இரண்டுவிதிகளைக் கூறுவது
கௌரவமாகும். முதல் வாக்கியத்தில் குணத்தையும்
இரண்டாவது வாக்கியத்தில் உபாசனையையும் விதிப்
பதில் லாகவம் இருக்கிறது. ஆகையால் நாம் செய்த
படியே அர்த்தத்தை கிரகிக்கவேண்டியது. (3)

IV. சங்கதி:—

रा:—(1) முந்தின அதிகரணத்துக்கும் இதற்
கும்:—முந்தின அதிகரணத்தில் பிரம்மலிங்கத்தால்
அப்பிரம்மலிங்கங்கள் பாதிக்கப்பட்டனவென்று சொ
ல்லப்பட்டது.

இந்த அதிகரணத்தின் விஷயவாக்கியத்தின் ஆர
ம்பத்தில் பிரம்மலிங்கம் இல்லை. ஆனல் பிரகரணம்
இருக்கிறது. அந்தப் பிரகரணமும் சாந்தகுணத்தை
விதிப்பதால் பிரம்மத்தைத் தவிர வேருனஜீவன் கூற
ப்பட்டதாக ஏற்படுகிறது. இப்படிப் பிரதானமான
ஜீவலிங்கம் வேறு ஒன்றினுலும் பாதிக்கப்படாதபடி
யால், முந்தின அதிகரணத்தின் யுக்தி திருஷ்டாந்
தம் உபயோகப்படவில்லை. ஆகையால் இரண்டு அதி
கரணங்களுக்கும் பிரத்தியுதாஹரண சங்கதி ஏற்படு
கிறது. (4)

(2) சுருதிசங்கதி:—சுருதியின் தாற்பரியத்தை
இந்த அதிகரணம் நிர்ணயம் செய்வதினுல் சுருதிசங்
கதி ஏற்படுகிறது.

(3) சாஸ்திரசங்கதி.—நிர்குண பிரம்ம விசாரத்
துக்கு சகுண பிரம்ம உபாசனை சீாதகமாயிருப்பதால்
சாஸ்திர சங்கதி ஏற்படுகிறது.

(4) அத்தியாயசங்கதி:—சகுண பிரம்மத்தினி
டத்தில் சில வாக்கியங்கள் தாற்பரியப்படுவதால் சம
ன்வயாத்தியாய சங்கதி ஏற்படுகிறது.

(5) பாதசங்கதி:—விஷய வாக்கியத்தில் சத்
திய சங்கற்பத்துவம் சத்தியகாமத்வம் முதலியவை
களும் பெரிது என்பதும் ஆகிய பிரம்மலிங்கங்கள்,
உபக்கிரமத்திலிருக்கிற பிராணசரீரத்வம், மனேமயத்
வம் முதலியவைகளால் மறைபடுகிறபடியால், பிரம்ம
லிங்கம் அஸ்பஷ்டமாயிருக்கிறது. இப்படி அஸ்பஷ்
டமான பிரம்மலிங்கங்களைக்கூறும் சில வாக்கியங்கள்
சகுணபிரம்மத்தில் தாற்பரியப்படுவதால் பாதசங்கதி
ஏற்படுகிறது. (5)

V. சந்தேகம்.

(1) सक्रतुं कुर्वीत என்பதினுல் உபாசனை செய்
என்று பொதுவாய் சொல்லியிருக்கிறது. இன்னத்
தைப்பற்றி உபாசிக்கிறது என்று விதிக்கப்படவில்லை.

மனேமயத்வம் முதலிய லிங்கங்களால் ஜீவன்
உபாசிக்கத்தக்கவன் என்று விதிக்கப்படுகிறதா
அல்லது

सर्वं खल्विदं ब्रह्म என்று வாக்கிய ஆரம்பத்தில் பிரம்ம
சப்தமிருப்பதால், பிரம்மம் உபாசிக்கத்தக்கது என்று
விதிக்கப்பட்டிருக்கிறதா ?

என்பது சந்தேகம்.

(2) பிரம்மசப்தத்தாலும் ஜீவலிங்கத்தாலும்
சந்தேகம் ஏற்படுகிறது. (6)

VI. இதிலடங்கிய சூத்திரங்கள் 8. இவைகளில்

(1) 1, 2, 3, 4, 5, 6-சித்தாந்த சூத்திரங்கள்.

7-ம் 8-ம் பூர்வபக்ஷ சித்தாந்த சூத்திரங்கள்
மனேமயத்வ சத்திய சங்கற்பத்வ அணுத்வமுதலிய
தர்மங்களால் ஜீவன் உபாஸியன் என்று சொன்ன
தற்கு

(2) 1-ல் பிரம்மம்தான் உபாஸ்யம் என்பதும்,

2-ல் மனோமயத்வாதி ஜீவலிங்கங்கள் பிரம்மத்தினிடத்தில் பொருந்தும் என்பதும்,

3-ல் சத்தியகாமாதி பிரம்மலிங்கங்கள் ஜீவனிடத்தில் பொருந்தாவென்பதும்,

4-ல் உபாஸ்ய உபாஸக பேதவசனம் ஏற்பட்டிருக்கிறதென்பதும்,

5-ல் இதற்கு சுருதிபலமும்

6-ல் இதற்கு ஸ்மிருதிபலமும்

7-ல் அணுத்வாதி ஜீவதர்மங்கள் பிரம்மத்தினிடத்தில் பொருந்தும் என்பதும்

8-ல் பிரம்மம் சர்வவியாபியாயிருந்தாலும் அதினிடத்தில் ஜீவனுடைய சுகாதிகள் ஒட்டாவென்பதும் நிரூபிக்கப்படுகின்றன. (7)

VII. பூர்வபக்ஷம்.

1. உபாசனைக்கு விஷயம் ஜீவனே. ஏனெனின் சரீரேந்திரியங்களுக்கு அதிபதியான ஜீவனுக்கு மனது முதலியவைகளுடன் சம்பந்தம் பிரசித்தம். ஏனெனின் மனதை பிரதானமாக உடையவன் மனோமயன், பிராணனை சரீரமாக உடையவன் பிராணசரீரன். இப்படி சொல்லியிருக்கிறது.

இந்த சம்பந்தம் பரப்பிரம்மத்துக்குச் சொல்லப்படவில்லை என்பது

अप्राणो ह्यमनाः शुभ्रः (मु-II-1-2)

அதாவது பிராணனற்றது, மனதற்றது, சுத்தம்.

என்றுசொல்லிய சுருதிகளால் தெரியவருகிறது.

(2) सर्वं खल्विदं ब्रह्म என்கிற வாக்கியமானது பிரம்மத்தை நேரில் சொல்லியிருக்க ஜீவன் உபாசிக்கத்தக்கவன் என்று எப்படி சொல்லலாம் என்று சொன்னால்

அதில் தோஷமில்லை. ஏனெனின் இந்த வாக்கியமானது பிரம்மோபாசனையை விதிக்கும்பொருட்டு ஏற்படவில்லை. ஆனால், சாந்தியை விதிக்கும்பொருட்டு ஏற்பட்டிருக்கிறது. ஏனெனின்.

सर्वं खल्विदं ब्रह्म तज्जलानिति शान्त उपासीत.

என்று சொல்லியிருக்கிறது. அதாவது இந்தக் காரிய சமூகமெல்லாம் பிரம்மத்தினிடமிருந்து உண்டாகி, அதிலேயே இருந்து, அதினிடத்திலேயே லயமடைவதால் பிரம்மமே; எல்லாம் பிரம்மமாயிருக்கும்போது இராகாதிகளுக்கு இடமில்லை. ஆகையால் ஒருவன் சாந்தகுணத்துடன் உபாசிக்கவேண்டியது என்று சொல்லியிருக்கிறது.

இப்படி வாக்கியம் சாந்தியை விதிக்கிறதாயிருக்க, இந்தவாக்கியம் பிரம்மோபாசனையை விதிக்குமாட்டாது. (9)

3. உபாசனையோ सक्रतुं कुर्वीत என்கிறதினால் விதிக்கப்பட்டிருக்கிறது. (கிரது என்றால் சங்கற்பம் தியானம் என்று அர்த்தம்.)

இந்த உபாசனைக்கு मनोमयः प्राणशरीरः என்பது விஷயமாக சுருதி சொல்லுகிறது. இவைகளோ ஜீவலிங்கங்கள்.

ஆகையால் ஜீவவிஷயமாக உபாசனை ஏற்பட்டிருக்கிறது என்று சொல்லுகிறோம். (10)

4 சுருதியிற் சொல்லிய सर्वकर्मा सर्वकामः (சகலகர்மங்களையுமுடையவன், சகல காமங்களையுமுடையவன்) முதலியவிசேஷணங்கள் பலபல ஜன்மக்கிரமமாக ஜீவனைப் பொருந்துகின்றன (ஏனெனின் அநேக ஜன்மங்களில் ஜீவன் சகலகர்மங்களையும் செய்துவிட முடியும், சகலபோகிக்கைகளையும் அடையவும் முடியும்.11

5. एषम आत्माऽन्तर्हृदयेऽणीयान् व्रीहेर्वायवाद्वा.

என்கிற வாக்கியத்தில் சொல்லிய ஹிருதயத்தில் ஸ்தானம், அதி சூட்சுமமாக இருத்தல், இவைகள் தார்கழியின் நுனிக்கு ஒப்பான ஜீவனுக்கு பொருந்தும். அபரிச் சின்னமான பிரம்மத்துக்குப் பொருந்தா. (12)

6. ज्यायान् पृथिव्याः பிருதிவியைவிட பெரிது முதலியவைகள் பரிச்சின்னமான ஜீவன்விஷயத்தில் சம்பவிக்கமுடியாதே எனின் அதற்கு நாம் சமாதானம் சொல்லுகிறதாவது:—அணுவாயிருக்கும் தன்மையும் பெரியதாயிருக்கும் தன்மையும் பரஸ்பரம் விருத்தமாகையால் ஒரு இடத்திலிருக்கிறதாகச் சொல்லமுடியாது. இரண்டில் ஒன்றைச்சொல்லவேண்டும். அப்போது அணுத்வம் முதலில்சொல்லியிருப்பதால் அதையே கிரகிப்பது யுக்தம். பெரியதாயிருக்கும் தன்மையோ ஜீவன் பிரம்மஸ்வரூபம் என்கிற கருத்தை அபேக்ஷித்து ஏற்படலாம். (13)

7. பிரகரணம் ஜீவவிஷயம் என்று நிச்சயிக்கப் பட்டவளவில் கடைசியில் एतद्ब्रह्म (இது பிரம்மம்) என்று சொல்லியதும் பிரகிருதவிஷயத்தையே சொல்லுவதினால் ஜீவனையே கூறுகிறது. (14)

8. தீர்மானம்:—ஆகையால் மனோமயம் முதலிய தர்மங்களால் ஜீவனே உபாசியன் என்று ஏற்படுகிறது. (15)

VIII. சித்தாந்தம்.

1. இப்படி பூர்வபக்ஷி சொல்ல

# सर्वत्रप्रसिद्धोपदेशात् ॥ 1 ॥

என்கிற சூத்திரத்தில் சூத்திரகாரர் உத்தரம் கூறுகிறார். (16)

2. பதவுரை.

सर्वत्र சர்வவேதங்களிலும்

प्रसिद्धोपदेशात् பிரசித்தமான பிரம்மம் உபதேசிக்கப் பட்டிருப்பதால். (17)

3. பொழிப்புரை.

சகல வேதாந்தங்களிலும் பிரசித்தமான பிரம்மம் உபாசியமாக உபதேசிக்கப்பட்டிருப்பதால், மனோமயன் பிரம்மம், ஜீவன் உபாசியனன்று. (18)

4. பாஷ்யம்.

1. ஸ்வமதசித்தாந்தம்:—பூர்வபக்ஷியைப்பார்த்து நாம் சொல்லுகிறதாவது:—பிரப்பிரம்மமே மனோமயத்துவாதி தர்மங்களுடன் கூடினதாக உபாசிக்கத்தக்கது, ஏனெனின்.

सर्वत्रप्रसिद्धोपदेशात् சகல வேதாந்தங்களிலும் எந்த சித்தமான பிரம்மம் ஜகத்காரணமாகச் சொல்லப்பட்டிருக்கிறதோ, இந்த வாக்கிய ஆரம்பத்திலும் सर्वं खल्विदं ब्रह्म என்பதாய் யாதொரு பிரம்மம் சொல்லப்பட்டிருக்கிறதோ, அதுவே மனோமயத்துவாதி தர்மங்களுடன் கூடினதாக உபதேசிக்கப் பட்டிருப்பதாக பாவிப்பது யுக்தம். இப்படி அர்த்தம் செய்வதால் ஆரம்பித்த விஷயத்தை விட்டுவிடல், ஆரம்பிக்காத நூதன விஷயத்தை கிரகித்தல் என்னும் தோஷம்சம்பவிக்கவில்லை. (19)

2. (இனி பூர்வபக்ஷியின் மதநிராகரணம்.)

1. 9-க்கு உத்தரம்:—சாந்தி விதியைச்சொல்லும் பொருட்டு வாக்கியாரம்பத்தில் பிரம்மம் கூறப்பட்டிருக்கிறதேதவிர, பிரம்மத்தைக் கூறவேண்டுமென்பது கருத்தன்று என்று சொன்னதற்கு நாம் சொல்லுகிறதாவது.

சாந்திவிதியைச் சொல்லும்பொருட்டு பிரம்மத்தைக் கூறியிருந்தாலும், மனோமயத்துவாதிகளை உபதேசித்த இடத்தில் அந்த பிரம்மமே சமீபத்திலிருக்கிறது; ஜீவனோ சமீபத்திலுமில்லை, தனது சப்தத்தால் கூறப்படவுமில்லை. (20)

2. 10-க்கு உத்தரம்.

(மனோமயம், பிராணசரீரம் இந்த லிங்கங்கள் ஜீவனைப் பிரசித்தமாய் கூறினாலும் பிரகிருதத்தில் ஜீவனைக் கூறுவதாகச் சொல்லக்கூடாது. ஏனெனின் ஜீவன் துக்கி, அவன் உபாசிக்கத் தக்கவனாகமாட்டான், மேலும் அவனை உபாசிப்பதில் பலமுமில்லை. ஆகையால் சகலர்களாலும் இச்சிக்கக்கூடிய ஆனந்தரூப பிரம்மமே இவ்விடத்தில் உபாசனாவிதிக்கு விஷயமாக அறியத்தக்கது. மேலும் பிரம்மபதமே யிருப்பதால் ஜீவலிங்கம் பாதிக்கப்படுகிறது. (21)

3. இந்த பிரகரணத்தில்

பிரம்மம் கூறப்பட்டிருப்பதாலும், பிரம்மம்வேறு ஒன்றையும் அபேக்ஷிக்காதபடியாலும் பலவத்தாயிருக்கிறபடியாலும்,

மனோமயாதிலிங்கம் விசேஷ்யத்தை அபேக்ஷிக்கிறபடியாலும், பலவத்தா யிராதபடியாலும்

பலவத்தான பிரகரணம் லிங்கத்தைவிட பலமானது. ஆகையால் இரண்டும் அதாவது ஜீவனும் பிரம்மமும் சமமன்று. (22)

IX. I-2-1-ல் 2-வது சூத்திரம்.

# विवक्षितगुणोपपत्तेश्च ॥ 2 ॥

2. முந்தின சூத்திரத்துக்கும் இதற்கும் சம்பந்தம்:—முந்தின சூத்திரத்திற் குறிப்பிடப்பட்ட பிரம்மத்துக்கே இனி சொல்லப்போகிற குணங்கள் பொருந்தும் என்று சொல்லுகிறார். (24)

3. பதஉரை.

च மேலும்,

विवक्षितगुणोपपत्तेः சொல்ல இச்சிக்கப்படும் குணங்கள் பிரம்மத்தில் பொருந்தும். (25)

4. பொழிப்புரை.

மேலும், சொல்லவேண்டும் என்று இச்சிக்கப்பட்ட சில குணங்கள் பிரம்மத்தினிடத்தில்தான் பொருந்துமாகையால் வாக்கியம் பிரம்மத்தையே கூறுகிறது. (26)

5. பாஷ்யம்

1. 11-க்கு உத்தரம்:—சொல்லுவதற்காக இச்சிக்கப்பட்டவைகள் விவக்ஷிதங்கள். புருஷனால் ஏற்படாத வேதத்தில் வக்தா இராதபடியால், இச்சையே சம்பவிக்கமாட்டாது. ஆயினும் இச்சையின் பலமாகிற கிரஹணத்தை விவக்ஷிதம் என்று கௌணமாகச் சொல்லலாம். லோகத்தில் எது சப்தத்தால் கூறப்பட்டும் கிரகிக்கப்பட்டுமிருக்கிறதோ அது விவக்ஷிதம் என்று சொல்லப்படுகிறது. எது கிரகிக்கத்தக்கதாயில்லையோ அது அவிவக்ஷிதம் என்று சொல்லப்படுகிறது. அப்படியே வேதத்திலும் எது கிரகிக்கத்தக்கதாக சொல்லப்படுகிறதோ அது விவக்ஷிதமாகிறது; மற்றது அவிவக்ஷிதமாகிறது. வேத வாக்கியத்துக்குத் தாற்பரியமாயிருக்கும் பக்ஷத்தில் கிரகிக்கத்தக்கதென்றும், தாற்பரியமில்லாவிடின் கிரகிக்கத்தக்கதல்லவென்றும் அறியவேண்டியது. இவ்விடத்தில் சொல்ல இச்சிக்கப்பட்ட அதாவது உபாசனையின் பொருட்டுக் கூறப்பட்ட சத்திய சங்கற்பாதிகள் பரப்பிரம்மத்தினிடத்திலேயே பொருந்தும். சிருஷ்டிஸ்திதி சம்ஹாரங்களில் தடையற்ற சக்தி பரமாத்மாவுக்கே இருப்பதால் சத்தியசங்கற்பத்வம் அவருக்கே பொருந்தும். அப்படியே சாந்தோக்கியம் VIII-7-1ல் य आत्मा अपहतपाप्मा (பாபமற்ற ஆத்மா) என்கிற சுருதியில் சத்தியகாமம், சத்தியசங்கற்பம் சொல்லியிருக்கிறது. (27)

आकाशात्मा முதலிய பதங்களால் எவருடைய ஆத்மா அதாவது ஸ்வரூபம் ஆகாசம்போல் இருக்கிறதோ அவர் என்று அர்த்தம். எங்கும் வியாபித்தல் முதலிய தர்மங்களால் பிரம்மம் ஆகாசம்போலிருக்கிறது.

ஆகாசாத்மா என்பதற்கு ஆகாச: + ஆத்மா + அஸ்ய அதாவது எவருடைய ஸ்வரூபம் ஆகாசமோ அவர் என்று அர்த்தம் செய்வதும் பொருந்தும். ஏனெனின் சர்வஜகத்காரணமாயும் சர்வஸ்வரூபமாயுமிருக்கிற பிரம்மம் ஆகாசஸ்வரூபமாயிருக்கும். ஆகையால்தான் அவர் सर्वकर्मा சகலகர்மங்களையும் செய்கிறவர் என்று சொல்லியிருக்கிறது. இப்படியே மேல் மேலும் சொல்லியிருக்கிறது. (28)

13-க்கு உத்தரம்:—

3. ज्यायान् पृथिव्याः முதலிய வசனங்களாலும் சுருதி இதையே கூறுகிறது.

இந்தப்பிரகாரம் உபாசிக்கும்படி சொல்லப்பட்ட குணங்கள் பிரம்மத்தினிடத்தில் பொருந்துகின்றன. (29)

10-க்கு உத்தரம்:—

4. मनोमयप्राण शरीर என்பது ஜீவலிங்கம். அது பிரம்மத்துக்கு பொருந்தாது என்று பூர்வபக்ஷி சொன்னவிஷயத்தில் பொருந்துமென்றும் நாம் சொல்லுகிறோம். பிரம்மம் சர்வத்துக்கும் ஆத்மாவாயிருப்பதால் ஜீவசம்பந்தமான மனோமயத்துவாதிகள் பிரம்மசம்பந்தமாகக்கூடும். பிரம்மம் சர்வாத்மா என்கிற விஷயத்தில் அடியிற்கண்ட சுருதிஸ்மிருதிகள் பிரமாணங்கள்.

(1) त्वं स्त्री त्वं पुमानसि त्वं कुमार उत वा कुमारी त्वं जीर्णो दण्डेन वञ्चसि त्वं जातो भवसि विश्वतोमुखः (श्वे-VI-3)

நீ ஸ்திரீ, நீ புருஷன், நீ குமாரன், நீ குமாரி, நீ கிழவன், தடிக்கம்புடன் நடக்கிறாய் எங்கும் முகமுள்ளவனாய் நீ பிறக்கிறாய்.

(2) सर्वतः पाणिपादं तत्सर्वतोऽक्षिशिरोमुखं,
सर्वतः श्रुतिमल्लोके सर्वमावृत्य तिष्ठति भ-गी-III-33

அதின் கைகால்கள் எங்குமிருக்கின்றன. கண்களும் சிரசும் முகமும் எங்கும் இருக்கின்றன. சகலத்தையும் வியாபித்துக்கொண்டிருக்கிறது. (30)

8-க்கு உத்தரம்:—

5. अप्राणोह्यमनाः शुभ्रः என்கிற சுருதியானது சுத்தப் பிரம்மத்தைப் பொருத்தது. இந்த मनोमयप्राण शरीर என்கிற சுருதி சகுணபிரம்மத்தைப் பொருத்தது. இதுவே வித்தியாசம்.

ஆகையால் சொல்லிய குணங்கள் பிரம்மத்தில் பொருந்துவதால் பரப்பிரம்மமே உபாசிக்கத்தக்கதென்று உபதேசிக்கப்பட்டதாய் அறியத்தக்கது. (31)

X. I-2-1 ல் 3 வது சூத்திரம்.

## अनुपपत्तेस्तु न शारीरः ॥३॥

2. முந்தின சூத்திரத்துக்கும் இதற்கும் சம்பந்தம்:—முந்தின சூத்திரத்தில் ஜீவதர்மம் பிரம்மத்தில் பொருந்துகிறது என்று சொல்லப்பட்டது. அப்போது பிரம்மதர்மம் ஜீவனிடத்தில் பொருந்தாது என்பதற்குக்காரணம் இதில் சொல்லுகிறார். (33)

3. பதஉரை.

तु ஆனால்

अनुपपत्तेः உபபத்தியில்லாதபடியால்

शारीरः ஜீவன்

न கூறப்படவில்லை. (34)

4. பொழிப்புரை.

ஆனால் அந்த குணங்கள் ஜீவனிடத்தில் பொருந்தாதபடியால், ஜீவன் மனோமயாதிகளால் கூறப்படவில்லை. (35)

5. பாஷ்யம்.

(1) अनुपपत्तेः கூறப்பட்ட குணங்கள் பிரம்மத்தினிடத்தில் பொருந்தும் என்று முந்தின சூத்திரத்தில் சொல்லப்பட்டது. ஜீவனிடத்தில் அவைகள் பொருந்தா என்று இந்த சூத்திரத்தால் சொல்லப்படுகிறது. (36)

(2) तु இந்த சப்தம் நிச்சயத்தைக்கூறுகிறது. 37

(3) न शारीरः முன் சொன்னப்பிரகாரம் பிரம்மமே மனோமயத்வாதி குணமுள்ளது. சரீரசம்பந்தமுள்ள ஜீவன் மனோமயத்துவாதி குணமுள்ளவனன்று. ஏனெனின்

सत्यसङ्कल्प आकाशात्माऽवाक्यानादरो ज्यायान्-पृथिव्याः (छा III-14-2)

(அதாவது சத்தியசங்கற்பன் ஆகாசாத்மா இந்திரியமற்றவன் ஆசையற்றவன் நித்தியதிருப்தன், பிருதிவியைவிட பெரியவன்)

இப்படிப்பட்ட குணங்கள் சரீரனிடத்தில் பொருந்தவில்லை. சாரீரமென்பதால் சரீரத்திலிருக்கிற ஜீவன் என்று அறியத்தக்கது.

ஈசுவரனும் சரீரத்திலிருக்கிறான் என்று சொல்லும்பக்ஷத்தில், வாஸ்தவம்தான், ஈசுவரன் சரீரத்திலிருக்கிறான், சரீரத்திலேயே இருக்கிறதில்லை. ஏனெனின்.

ज्यायान् पृथिव्याः ज्यायानन्तरिक्षादाकाशवत् सर्वगतश्च नित्यः (छा III-14-3)

(பிருதிவியைவிட பெரிது, அந்தரிக்ஷத்தைவிட பெரிது, ஆகாசம்போல் எங்கும் வியாபி நித்தியம்)

என்கிற சுருதியால் வியாபிக்கும் தன்மை தெரியவருகிறது. ஜீவனோ சரீரத்திலேயே இருக்கிறான். போகத்துக்கு ஸ்தானமான சரீரத்தைவிட வேறு இடத்தில் சாரீரன் இருக்கமாட்டான். (38)

XI. I-2-1 ல் 4 வது சூத்திரம்.

## कर्मकर्तृव्यपदेशाच्च ॥४॥

2. முந்தின சூத்திரத்துக்கும் இதற்கும் சம்பந்தம்:—முன் சொல்லியபடி சாரீரன் கூறப்படவில்லை என்பதற்கு வேறுகாரணத்தையும் இதில் சொல்லுகிறார். (40)

3. பதஉரை.

च மேலும்,

कर्मकर्तृव्यपदेशात् கர்மமும் கர்த்தாவும் சொல்லியிருப்பதால். 41)

4. பொழிப்புரை.

இந்த சுருதியில் கர்மமும் கர்த்தாவும் கூறப்பட்டிருப்பதால் மனோமயத்வாதி குணமுள்ளவன் ஜீவனாகமாட்டான். (42)

5. பாஷ்யம்.

(1) च மேலும் அதாவது இப்போது சொல்லப்போகிற காரணத்தாலும் சாரீரன் மனோமயத்வாதி குணமுள்ளவனாகமாட்டான். ஏனெனின் (43)

(2) कर्मकर्तृव्यपदेशात्

एतमितःप्रेत्याभिसंभवितास्मि (छा-III-14-4

என்று சொல்லியிருக்கிறது. एतं என்கிற சப்தம் பிரகிருதமான மனோமயத்துவாதி குணமுள்ள உபாசியமான பரமாத்மாவை அடையத்தகுந்ததாகச் சொ

ல்லுகிறது. अभिसंभवितास्मि (அடைகிறேன்) என்பது சாரீரனை உபாசகனை கர்த்தாவாக அதாவது அடைகிறவனாகச் சொல்லியிருக்கிறது.

(பஞ்சாக்கினி வித்தையில் ஜீவனையே உபாசிய குணத்தால் உபாசியன் என்றும் ஸ்வரூபத்தால் உபாசகன் என்றும் சொல்லியிருப்பதால் ஒரே ஜீவன் உபாசியனும் உபாசகனும் ஏற்படுவதுபோல் பிரகிருதத்திலும் சத்தியசங்கற்பத்துவாதி குணவிசேஷங்களால் ஜீவனை உபாசியன் என்றும், ஸ்வரூபத்தில் உபாசகன் என்றும் சொல்லுவோமேயெனின் அவ்விடத்தில் நிர்வாஹமில்லாமல் சிரமத்தின் பேரிலாவது ஜீவனை உபாசியனாகவும் உபாசகனும் சொல்லும்படி நேரிட்டது. வேறுவிதம் சாத்தியமில்லை. இவ்விடத்திலேயோ உபாசியனையும் உபாசகனையும் வெவ்வேறாகச்சொல்ல மார்க்கமிருக்கிறது.)

வழியிருக்கும்போது ஒன்றே கர்த்தாவென்றும் கர்மம் என்றும் சொல்லுவது யுக்தமன்று. அப்படி உபாசிக்கிறவனும் உபாசிக்கத்தக்கதும் வெவ்வேறு. ஆகையாலும் சாரீரன் மனோமயத்வாதி குணவிசிஷ்டனல்ல. (44)

## XII. I—2—1ல் 5-வது சூத்திரம்.

# शब्दविशेषात् ॥ ५ ॥

2. முந்தின சூத்திரத்துக்கும் இதற்கும் சம்பந்தம்:-உபாசிய உபாசகர்கள் வெவ்வேறு என்பதற்கு வேறு ஒரு உதாரணத்தைச் சொல்லுகிறார். (46)

3. பதவுரை.

शब्दविशेषात् சப்தங்களின் வித்தியாசத்தாலும்.(47)

4. பொழிப்புரை.—ஜீவனையும் பிரம்மத்தையும் கூறும் பதங்களுடைய வேற்றுமையால் வித்தியாசமிருப்பதால் சாரீரன் இவ்விடத்தில் கூறப்படவில்லை.

5. பாஷ்யம்:—

இப்போது சொல்லப்போகிற காரணத்தினாலும் சாரீரனைவிட வேறானவன் மனோமயத்துவாதி குணமுள்ளவன். ஏனெனின்.

शब्दविशेषात् சப்தங்களில் வித்தியாசமிருக்கிறது. எப்படியெனின்.

பிரகிருதிசுருதியில் एष मे आत्मा(சா-III-14-3)என்னுடைய இந்த ஆத்மாவே என்றுசொல்லியிருக்கிறது. என்னுடைய என்கிற ஆறும்வேற்றுமையால் உபாசகனை ஜீவன் கூறப்படுகிறான். ஆத்மா என்கிற முதல் வேற்றுமையால் உபாசிய பிரம்மம் குறிப்பிடப்படுகிறது.

சமான பிரகரணமாகிற அதாவது ஜீவபிரம்மங்களின் உபாசக உபாசிய பாவங்களைக் கூறும் சதபதப் பிராமண(X-6-3-2)சுருதியில்

यथा व्रीहिर्वा यवोवा श्यामकोवा श्यामाकतंडुलोवै वमयम न्तरात्मन् पुरुषो हिरण्मयः

அதாவது நெல்லுபோலும், அல்லது யவைபோலும், அல்லது சாமைபோலும் அல்லது சாமை அரிசிபோலும், இந்த ஹிரண்மய புருஷன் ஆத்மாவுக்குள் இருக்கிறான்.

என்கிற இடத்தில் ஏழாம்வேற்றுமையிலிருக்கிற अन्तरात्मन् என்கிற சப்தமானது சாரீரஆத்மா (ஜீவாத்மா)வைக் கூறுகிறது அதைவிட வேறான முதல்வேற்றுமையிலிருக்கிற புருஷசப்தம் மனோமயத்துவாதி குணங்களுடன் கூடின ஆத்மாவைக் கூறுகிறது.

अन्तरात्मनि என்பதற்குப்பதிலாக अन्तरात्मन् என்று இருப்பது வேதசம்மதம். பிரகிருத சுருதியில் ஆறும் வேற்றுமையால் உபாசகனையும் முதல்வேற்றுமையால் உபாசியத்தையும் கூறியிருப்பதுபோல் வேறு சுருதியிலும் ஏழாம் வேற்றுமையால் உபாசகனையும் முதல் வேற்றுமையால் உபாசியனையும் கூறியிருக்கிறது.

இரண்டு சுருதிகளிலும் வேற்றுமை வித்தியாசத்தால் உபாசிய உபாசகபேதம் ஏற்படுகிறது.

ஆகையால் இருவர்களும் வேறு என்று தெரியவருகிறது. मे आत्मा என்னுடைய ஆத்மா என்பது இராகுவினுடைய சிரசு என்று சொல்லுவதில் ஆறும்வேற்றுமையும் முதல் வேற்றுமையும் இருப்பதுபோலும்.

अन्तरात्मनि पुरुषः என்பது स्वेमाहिम्नि प्रतिष्टित தன்னுடைய மஹிமையில் இருக்கிறவன் என்று சொல்லுவதில் ஏழாம் வேற்றுமையும் முதல் வேற்றுமையும் இருப்பதுபோலும்.

மேற்படி இரண்டு திருஷ்டாந்தங்களிலும் வேற்றுமைகள் வித்தியாசப்பட்டாலும் அவைகளால் குறிப்பிடப்பட்ட பொருள் ஒன்றாகவே இருப்பதுபோல் பிரகிருத சுருதியிலும் ஆறும் வேற்றுமையாலும்

மூதல்வேற்றுமையாலும் கூறப்பட்ட பொருள் ஒன்று கர்த்தாவிருக்கட்டுமே என்று ஒருவன் ஆக்ஷேபிக்கும் பக்ஷத்தில்,

முந்தின சுருதியில் நிர்வாஹமில்லாவிட்டால் ஒரு விதமாக அர்த்தம் செய்யவேண்டுமென்றும், நிர்வாஹமிருந்தால் ஒருவிதமாக அர்த்தம் செய்யவேண்டுமென்றும் சொன்ன யுக்தியையே இவ்விடத்திலும் எடுத்துக்கொள்ளவும். (49)

## XIII. I-2-1ல் 6-வது சூத்திரம்.

## स्मृतेश्च ।६। (50)

2. முந்தின சூத்திரத்துக்கும் இதற்கும் சம்பந்தம்:—முந்தின சூத்திரத்தில் வேற்றுமை வித்தியாசத்தால் மனோமயன் சாரீரன் அல்லவென்று சொல்லப்பட்டது. இந்த சூத்திரத்தில் ஸ்மிருதிபலத்தாலும் அதையே காட்டுகிறார். (51)

3. பதவுரை:

च மேலும்

स्मृतेः ஸ்மிருதியாலும். (52)

4. பொழிப்புரை.

ஸ்மிருதியாலும் மனோமயன் சாரீரன் அல்லவென்று தெரியவருகிறது. (53)

5. பாஷ்யம்.

ईश्वरः सर्वभूतानां हृद्देशेऽर्जुन तिष्ठति ।
भ्रामयन् सर्वभूतानि यन्त्रारूढानि मायया

முதலிய ஸ்மிருதி (கீதை VIII-6)களில் சகல பூதங்களின் ஹிருதயத்திலும் ஈசுவரன் இருக்கிறதா கச் சொல்லியிருக்கிறது. இந்த சுருதிகள் சாரீரனுக்கும் பரமாத்மாவுக்கும் பேதம் கூறுகின்றன.

एष मे आत्मा अन्तर्हृदये என்கிறபிரகிருதசுருதியின் அர்த்தத்தையே हृद्देशः என்கிற ஸ்மிருதிபததானது ஞாபகப் படுத்துகிறது.

(1) ஸ்மிருதியில் ஈசுவரபதம் பிரயோகம் செய்திருக்கிறது.

तमेव शरणं गच्छ सर्वभावेन भारत ।
तत्प्रसादात्परांशान्तिंस्थानं प्राप्स्यसि शाश्वतं ॥

அதாவது சர்வவிதத்திலும் அவரையே சரணமாய் அடை. அவருடைய பிரசாதத்தால் உத்கிருஷ்டமான நித்தியமான சாந்தியாகிய ஸ்தானத்தை அடைவாய்.

என்று சொல்லியிருக்கிறது. இந்த வசனத்தினால் முமுக்ஷுவானவன் சரணாகதி அடையக்கூடியதாயும், பரமசாந்தியைக் கொடுக்கக்கூடியதாயும் இருக்கிற ஒரு பொருள் நிச்சயிக்கப்படுகிறது. இந்த இரண்டு காரணங்களாலும் ஸ்மிருதிபிரம்மத்தையே கூறுகிறதென்பது நிச்சயமாகிறது. இதனால் இதற்கு மூலபூதமான சுருதியும் பிரம்மத்தையே கூறவேண்டும் என்பது நிச்சயம். (54)

2. अनुपपत्तेस्तु न शारीरः முதலிய முந்தின சூத்திரங்களால் பரமாத்மாவைவிட வேறான சாரீரகன் நிஷேதிக்கப்பட்டிருக்கிறானே அந்த சாரீரகன் யார்?

नान्योऽतोऽस्ति द्रष्टा नान्योऽतोऽस्ति श्रोता (III-7-23)

இப்படிப்பட்ட சுருதிகளோ பரமாத்மாவைவிட வேறாக ஆத்மா இல்லை என்று சொல்லுகின்றன.

क्षेत्रज्ञं चापि मां विद्धि सर्वक्षेत्रेषु भारत (गी-XIII-2)

நான் சகல க்ஷேத்திரங்களிலுமிருக்கிற க்ஷேத்திரஞ்ஞன் என்றும் பாரதா அறி

இப்படிப்பட்ட ஸ்மிருதிகளும் அப்படியேசொல்லுகின்றன.

மேற்படிக்கு உத்தரம்:—நீ சொல்லுகிறது வாஸ்தவம்தான். வாஸ்தவத்தில் பரமாத்மா ஒன்றுதானிருக்கிறது. தேகம், இந்திரியம், மனது, புத்தி இவைகளால் பரிச்சின்னமடைந்த பரமாத்மாவே அஞ்ஞானிகளால் சாரீரகன் என்று உபசாரமாக சொல்லப்படுகிறான். ஆகாசமானது பரிச்சேதமற்றதாயினும் கடம் முதலிய பாத்திரங்களாகிற உபாதிகளால் பரிச்சேதமடைவதுபோலதோன்றுகிறதுபோலும்

तत्त्वमसि (நீ அதுவாக இருக்கிறாய்) என்கிற வாக்கியத்தால் ஆத்மா ஒன்று என்பதை நாம் தெரிந்துகொள்ளுவதற்கு முன், உபாதிகளை அபேக்ஷித்து கர்டங்களின் பேதம் கர்த்தாவின் பேதம் முதலியவை விருத்தப்படமாட்டா. ஆத்மா ஒன்று என்று அறியப்பட்டவளவில் பந்த, மோக்ஷம் முதலிய சர்வவியவஹாரங்களும் ஒழிந்துவிடுகின்றன.

ஜீவனுக்கும் பிரம்மத்துக்கும் பேதமிருக்கிறதென்கிற பிராந்தியை சூத்திரகாரர் ஈக்ஷதி அதிகரணத்திலும் நிவர்த்திசெய்திருந்தாலும், மறுபடியும் இவ்விடத்திலும் அதையே சொல்லுகிறார். (55)

XIV. I-2-1ல் 7 வது சூத்திரம்.

# अर्भकौकस्त्वात्तद्व्यपदेशाच्च नेति चेन्न निचाय्यत्वादेवं व्योमवच्च ॥७ (56)

2. முந்தின சூத்திரத்துக்கும் இதற்கும் சம்பந்தம்:—முந்தின சூத்திரத்தில் பிரம்மம் உபாசியம் என்று சொல்லப்பட்டது. இந்த பிரம்மத்தைப்பற்றி விஷயவாக்கியத்தில் ஹிருதயத்திலிருப்பதாயும் அணுவாயிருப்பதாயும் சொல்லியிருக்கிறது. ஸ்வல்ப இடத்திலிருக்குந் தன்மையும் அணுவாயிருக்குந் தன்மையும் ஜீவனை யல்லவா பொருந்தும், பிரம்மத்தை மாட்டாதே என்னும் சங்கைக்கு இதில் உத்தரம் சொல்லுகிறார். (57)

3. பதஉரை.

अर्भकौकस्त्वात् ஸ்வல்ப ஸ்தானம் சொல்லியிருப்பதாலும்

तद्व्यपदेशाच्च அணுவாயிருக்கிறதென்று சொல்லியிருப்பதாலும்

न வாக்கியம் பிரம்மத்தைக் கூறவில்லை.

इति चेत् என்று சொன்னால்

न அப்படியல்ல

एवं இப்படி

निचाय्यत्वात् உபாசிக்கவேண்டியதாக இருப்பதாலும்

व्योमवत् च ஆகாசம்போலிருப்பதாலும். (58)

4. பொழிப்புரை.

உபாசியவஸ்துவுக்காக குறிப்பிடப்பட்ட ஸ்தானம் அற்பமாக இருப்பதாயும், அது அணுவாகயிருப்பதாயும் விஷயவாக்கியம் சொல்லியிருப்பதால் பிரம்மம் கூறப்படவில்லை என்று சொல்லுவது சரியன்று. ஏனெனின் பிரம்மம் இப்படியே உபாசிக்கத்தக்கதாயிருக்கிறது, ஆகாசம் போலுமிருக்கிறது. (59)

5. பாஷ்யம்.

1 अर्भकौकस्त्वात्:-- एष मे आत्मा अन्तर्हृदये III-14-3)

(இந்த என்னுடைய ஆத்மா ஹிருதயத்தில் இருக்கிறது)

என்பதாய் உபாசியமான ஆத்மாவின் ஸ்தானம் ஸ்வல்பம் என்று தெரியவருகிறது (60)

(2) तद्व्यपदेशात् च சுருதியே

अणीयान् व्रीहेर्वायवाद्वा

(நெல்லைவிட அணு யவையைவிட அணு)

என்பதினால் அணுவாயிருக்கும் தன்மையைக் கூறுகிறது. (61)

(3) न ஆகையால் தார்கழியின் நுனிமேலிருக்கிற சரீரசம்பந்தமான ஜீவனே உபதேசிக்கப்படுகிறான். எங்கும் வியாபகமான பரமாத்மா உபதேசிக்கப்படவில்லை. (62)

(4) इति चेत् न இப்படி பூர்வபக்ஷம் சொன்னதைப்பரிஹரிக்கவேண்டியது. (63)

(5) निचाय्यत्वात् (அற்ப இடத்தைக் கூறினதிலும், அணுவென்று சொன்னதிலும்) தோஷமில்லை. பரிச்சின்னமான இடத்திலிருக்கிற வஸ்து அங்குமிங்கும் என்று எப்படி சொல்லமுடியும். ஆனால் எது எங்கும் வியாபித்திருக்கிறதோ அது எல்லா இடங்களிலுமிருக்கிறபடியால் எதையாவது ஒன்றை (அதாவது உபாதியை) அபேக்ஷித்து பரிச்சின்னமான இடத்திலிருக்கிறதாகச் சொல்லமுடியும். சமஸ்தபூமண்டலத்துக்கும் அதிபதியாக இருந்துங்கூட அவனை அயோத்தியாதிபதி என்று சொல்லக்கூடும் போலும், எவ்விதத்தையாவது அபேக்ஷித்து சர்வவியாபியான ஈசுவரன் அற்பஸ்தானமுள்ளவன் என்றும், அணுவென்றும் சொல்லப்படுகிறான். निचाय्यत्वादेवं என்று சொல்லுகிறோம். அதாவது அணுமுதலிய குணங்களுடன் கூடின ஈசுவரன் ஹிருதயபுண்டரீகத்தில் தியானிக்கத்தக்கவர் என்று சுருதி உபதேசிக்கிறது. சாளீக்கிராமத்தில் ஹரியானவர் தியானிக்கப்படுவது போலும். அந்தக்கரணவிருத்தியை ஹிருதயத்தில் செலுத்துவதினால் பரமாத்மஞானம் சித்திக்கிறது. ஆகையால் ஹிருதயம் பரமாத்மாவின் ஸ்தானம் என்று சொல்லப்படுகிறது. ஈசுவரன் எங்கும் வியாபித்திருந்தாலும் அவ்விடத்தில் உபாசிக்கப்பட்டால் சந்தோஷப்படுகிறார். (64)

(6) व्योमवच्च ஆகாசம்போல் இதை அறியவேண்டியது. ஆகாசம் எங்கும் வியாபித்திருந்தாலும் ஊசியின்காதை அபேக்ஷித்து ஸ்வல்ப இடத்திலிருக்

கிறதாயும், அணுவாயிருக்கிறதாயும் சொல்லப்படுகிறதுபோல் பிரம்மமும் சொல்லப்படுகிறது. இப்படி தியானிக்கவேண்டியதை அபேக்ஷித்து பிரம்மம் அற்ப இடத்திலிருக்கிறதென்றும் அணுவென்றும் சொல்லியிருக்கிறதேதவிர, வாஸ்தவத்தில் அப்படி இருக்கிறதாகச் சொல்லப்படவில்லை.

பிரம்மத்துக்கு ஹிருதயத்தை ஸ்தானமாகச் சொல்லும்பக்ஷத்தில், சரீரத்துக்குச் சரீரம் ஹிருதயம் வெவ்வேறாக இருப்பதால் பிரம்மத்தின் ஸ்தானமும் வெவ்வேறாகும். அப்போது வெவ்வேறு ஸ்தானங்களில் (கூடுகளில்) இருக்கிற கிளி முதலியவைகள் அநேகமாயும், அவயவங்களுடன் கூடியும், அநித்திய மாயுமிருப்பதுபோல் பிரம்மமும் அநேகமாயும் அவயவசகிதமாயும், அநித்தியமாயும் இருக்கவேண்டும். இப்படி உண்டாகக்கூடிய சங்கையும் ஆகாச திருஷ்டாந்தத்தால் பரிஹரிக்கப்படுகிறது. (ஆகாசம் வெவ்வேறு இடங்களிலிருந்தாலும், ஆகாசத்தில் பேதமில்லை என்பது கருத்து.) (65)

XV. I-2-8-வது சூத்திரம்.

**सम्भोगप्राप्तिरितिचेन्न वैशेष्यात् ।८** (66)

2. முந்தின சூத்திரத்துக்கும் இதற்கும் சம்பந்தம்:—முந்தின சூத்திரத்தில் சர்வகதமான பிரம்ம விஷயத்தில் அற்ப இடத்தில் இருப்பதும் அணுவாயிருப்பதும் பொருந்தும் என்று கூறப்பட்டது. இந்த சூத்திரத்தில் பிரம்மம் சர்வகதமானால் வேறு தோஷம் வருமே என்கிற சங்கைக்குச் சமாதானம் சொல்லுகிறார். (67)

3. பதஉரை.

सम्भोगप्राप्तिः इति चेत् சுகதுக்கானுபவம் வந்து சேருமே எனின்

न அப்படியல்ல

वैशेष्यात् வித்தியாசமிருப்பதால். (68)

4. பொழிப்புரை.

பிரம்மமும் ஜீவனும் ஒன்றானதால் பிரம்மத்துக்கும் சுகதுக்கானுபவம் சம்பவிக்குமே எனின், அது அப்படியல்ல. ஏனெனின் இருவர்களுடைய ஸ்வரூபமும் வெவ்வேறுயிருக்கிறது. (69)

5. பாஷ்யம்.

(1) सम्भोगप्राप्तिः ஆகாசம்போல் எங்கும் வியாபகமான பிரம்மம் சகலபிராணிகளின் ஹிருதய சம்பந்தமடைந்திருப்பதாலும், சித்ரூபமாயிருப்பதினால் ஜீவனைப்போலிருப்பதினாலும், சுகதுக்கம் முதலிய போகமும் ஜீவனுக்குப்போலவே பிரம்மத்துக்கும் சம்பவிக்கும். ஜீவனும் பிரம்மமும் ஒன்றாயிருப்பதாலும் இதுவே சம்பவிக்கும். ஏனெனின் नान्योऽतोऽस्ति विज्ञाता (बृ-III 7-21) (அறிகிறவன் இவனைவிடவேறு இல்லை) முதலிய சுருதிகளால் பரமாத்மாவைவிட வேறான சம்சாரி ஒருவனுமில்லை என்று தெரியவருகிறது. ஆகையால் பரமாத்மாவுக்கே சம்சாரத்தின் சுகதுக்காதிகள் சம்பவிக்கும்.

(2) इति चेत् न वैशेष्यात् சகல பிராணிகளின் ஹிருதயங்களுடன் சம்பந்தப்பட்டிருப்பதாலும் சித்ரூபமாயிருப்பதாலும் பிரம்மத்துக்கு ஜீவனுக்குப் போல் சுகதுக்காதிபோகம் ஏற்படமாட்டாது. ஏனெனின் ஜீவனுக்கும் பரமேசுவரனுக்கும் வித்தியாசமிருக்கிறது.

(a) ஒருவன் கர்த்தா போக்தாவாயும், தர்மத்தையும் அதர்மத்தையும் சாதனமாயுடையவனாயும், சுகதுக்கமுடையவனாயுமிருக்கிறான்.

(b) மற்றொருவன் விபரீதஸ்வபாவமுள்ளவனாயும், பாபமற்ற தன்மை முதலியகுணங்களுடன் கூடினவனாயுமிருக்கிறான்.

ஆகையால் இருவர்களுக்கும் வித்தியாசமிருப்பதால் ஒருவனுடைய போகம் மற்றொருவனுக்குச் சேரமாட்டாது.

रा (தர்மாதர்மங்கள் எவ்விடத்தில் ஆசிரயித்துக்கொண்டிருக்கின்றனவோ அவ்விடத்தில் சுகதுக்கங்களைக் கொடுக்குமேதவிர மற்ற இடத்தில் கொடுக்கமாட்டா. ஆகவே இவைகள் ஜீவனை ஆசிரயித்துக்கொண்டிருப்பதாலும் ஈசுவரனை ஆசிரயிக்காதபடியாலும், ஈசுவரன் ஜீவர்களின் ஹிருதயங்களில் சம்பந்தப்பட்டிருந்தாலும், சுகதுக்காதிகளால் பாதிக்கப்படுகிறதில்லை)

பிரம்மத்தினுடைய சன்னிதானத்தால் பிரம்மத்துடன் சம்பந்தப்பட்ட ஜீவர்களின் சுகதுக்கங்கள் பிரம்மத்தின் ஸ்வரூபத்தை கவனிக்காமல் பிரம்மத்தையும் சேரும் என்று சொல்லும்பக்ஷத்தில் ஆகாசத்தின் சன்னிதானத்தில் ஆகாசத்துடன் சம்பந்தப்பட்ட கட்டை தஹிக்கப்படும்போது ஆகாசமும் தஹிக்கப்படுகிறது என்று சொல்லும்படி நேரிடும். ஆத்மா அநேகம் என்றும் எங்கும் வியாபி என்றும் சொல்லுகிறவர்களின் மதத்திலும் இந்த ஆக்ஷேப சமாதானங்களே ஏற்படுகின்றன.

(எப்படியெனின் ஆத்மா வியாபி என்றும் ஒவ்வொரு சரீரத்திலும் வெவ்வேறு என்றும் சொல்லும் பக்ஷத்தில் ஒரு ஆத்மா மற்ற சரீரங்களுடன் சம்பந்தப்படுவதால் அச்சரீரத்தின் சுகதுக்கங்களையும் அடையவேண்டுமே என்று ஏற்பட, தன்கர்மத்தால் சம்பாதிக்கப்பட்ட சரீரத்தில் சுகதுக்கானுபவம் சம்பவிக்குமேதவிர வேறுஜீவனால் சம்பாதிக்கப்பட்ட சரீரத்தில் இவனுக்கு சுகாதிகளின் அனுபவம் உண்டாகமாட்டாது.)

பிரம்மம் ஏகமாயிருப்பதாலும், வேறு ஆத்மாவில்லாதபடியாலும், ஜீவனுடைய போகத்தால் பிரம்மத்துக்கும் போகம் உண்டாகுமே என்பதற்கு நாம் சொல்லுவதாவது:—நீ மிகவும் தெரிந்தவனாய் இருக்கிறாயே, பிரம்மத்தைத்தவிர வேறு ஆத்மா இல்லை என்கிற நிச்சயஞானம் உனக்கு எப்படி உண்டாயிற்று.

तत्त्वमसि
अहं ब्रह्मास्मि
नान्योऽतोऽस्ति विज्ञाता

முதலிய சுருதிகளால் தெரிந்துகொண்டேன் என்று சொல்லும்பக்ஷத்தில், சாஸ்திரத்திற் சொல்லியபடி சாஸ்திரார்த்தத்தைக் கிரகிக்கவேண்டும். இவ்விடத்தில் அர்த்தஜரதீய நியாயத்தை ஒப்புக்கொள்ளக்கூடாது.

ரா (வயது சென்றவனுடைய முகம்மட்டும் பிரியமாயிருக்கிறது. மற்ற அங்கங்களில்லை என்று சொல்லுவது அர்த்தஜரதீய நியாயம் அது இவ்விடத்தில் ஒவ்வாது.)

ரா (ஜீவனும் பிரம்மமும் ஒன்று என்று ஒப்புக்கொண்டு, பிரம்மம் போக்தாவன்று என்பதைமட்டும் ஒப்புக் கொள்ளாமலிருப்பானேன்) தத்துவமஸி என்கிற சுருதியானது பாபமற்ற தன்மை முதலியவையுள்ள பிரம்மத்தை சாரீரனுடைய ஆத்மாவாக உபதேசித்து "சாரீரனுக்கே போகமில்லை என்று சொல்லுகிறது." ஜீவனுடைய போகத்தால் பிரம்மத்துக்கு எப்படி போகம் வரும். ஜீவனும் பிரம்மமும் ஒன்று என்று தெரிந்துகொள்ளவில்லை என்று சொல்லுவாயோ, அப்போது எந்த ஆதாரத்தின்பேரில் ஜீவனுடைய சுகதுக்கம் பிரம்மத்துக்கும் வரும் என்று நீ சொல்லலாம். என் வார்த்தையால் ஐக்கியத்தைத் தெரிந்து கொண்டு போகத்தையும் ஊஹித்தேன் என்கிறபக்ஷத்தில் நான் சொல்லுகிறதைக்கேள்) ஜீவனுடைய ரூபகம் மித்தியா ஞானத்தால் ஏற்படுகிறது. பாரமார்த்திகமான பிரம்மத்தை அது ஒட்டமாட்டாது. அஞ்ஞானிகள் ஆகாசத்தை கட்டிபோலும், கருப்புவர்ணமுள்ளதுபோலும் இருப்பதாக சொல்லுவதினால் ஆகாசம் வாஸ்தவத்தில் அப்படியே ஆய்விடுகிறதா?

(இதுவரையில் वैशेष्यात् என்பதால் ஜீவஸ்வரூபத்துக்கும் பிரம்மஸ்வரூபத்துக்கும் வித்தியாசமிருப்பதால் ஜீவனுடைய சம்போகம் பிரம்மத்தினிடத்தில் சேரமாட்டாது என்று நிரூபிக்கப்பட்டது. இப்போது கற்பிதமான அதிஷ்டானத்தை ஒட்டாது என்பதாயும் वैशेष्यात् என்பதால் சொல்லுகிறார். ஜீவனும் பிரம்மமும் ஒன்றாயிருந்தாலும் ஜீவனுடைய போகத்தால் பிரம்மத்துக்கு போகம் ஏற்படமாட்டாது. ஏனெனின் விசேஷமிருக்கிறது. அதாவது மித்தியா ஞானத்துக்கும் நல்லஞானத்துக்கும் வித்தியாசமிருக்கிறது. மித்தியாஞானத்தால் போகம் கற்பிக்கப்படுகிறது. நல்லஞானத்தால் ஜீவபிரம்ம ஐக்கியம் தெரியவருகிறது. மித்தியஞானத்தால் ஏற்படும் போகத்தால் நல்லஞானத்தால் அறியப்படும் பிரம்மம் பாதிக்கப்படமாட்டாது. ஆகையால் போகத்தின் வாசனையைக்கூட ஈசுவரனிடத்தில் கற்பிக்கமுடியாது. (71)

6. (இவ்விதமாக பிரம்மத்தை ஹிருதயத்தில் இருப்பதாகச் சொல்லுவதினாலும் பாதகமில்லாதபடியால்சாண்டில்லிய வித்தியாவாக்கியமானது உபாசிய பிரம்மவிஷயத்தில் பொருந்தும் என்று சித்திக்கிறது. (72)

XVI. பூர்வபக்ஷபலன்:—ஜீவஉபாசனை. சித்தாந்தபலன்:—பிரம்மோபாசனை. பூர்வபக்ஷியின் ஆதாரயுக்தி:—உபக்கிரமவாக்கியம். சித்தாந்தியின் ஆதாரயுக்தி:—பின்வரும் பிரம்மலிங்கமும், உபக்கிரமத்தின் பிரம்மத்தில் பொருத்தமும். (73)

XVII. வியாசாதிகரணமாலைப்படி அத்வைதச்சுருக்கம்.

1. சுலோகங்கள்:—

मनोमयोयं शारीर ईशोवा प्राणमानसे ।
हृदयस्थित्यणीयस्त्वे जीवे स्युस्तेन जीवगाः ॥
शमवाक्यगतं ब्रह्म तद्धितादिरपेक्षते ।
प्राणादियोगश्चिन्तार्थश्चिन्त्यं ब्रह्म प्रसिद्धितः ॥

2. விஷயம்.

சாந்தோக்கியத்தின் மூன்றுவது அத்தியாயத்தில் சாண்டில்லிய வித்தையில்

मनोमयः प्राणशरीरो भारूपः

என்று சொல்லப்பட்டிருக்கிறது (75)

3. சந்தேகம்:—ஜீவனு? ஈசுவரனு ? என்பது சந்தேகம். (76)

4. பூர்வபக்ஷம்:-ஜீவன்தான். ஏனெனின் மனதின் சம்பந்தம் முதலியவைகள் ஜீவவிஷயத்தில் செவ்வையாகப் பொருந்துகின்றன. மனதின் விகாரம் மனோமயம் என்பதாய் மனதின் சம்பந்தம் (मनसो विकारः मनोमयः प्राणः शरीर मस्य அதாவது இவனுக்குப்பிராணன்சரீரம் என்பதாய்பிராணசம்பந்தம். இவ்விரண்டும் ஈசுவரவிஷயத்தில் செவ்வையாகப் பொருந்தவில்லை. ஏனெனின் अप्राणो ह्यमनाः शुभ्रः என்று இவைகள் நிஷேதிக்கப்பட்டன. அப்படியே एष मे आत्माऽन्तर्हृदयेऽणीयान् என்பதால் தெரியவருகிற ஹிருதயத்திலிருத்தல், அணுவாயிருத்தல் இவைகள் நிராதாரமாயும் சர்வகதனாயுமிருக்கிற ஈசுவரனிடத்தில் சுத்தமாய் பொருந்தவில்லை. ஆகையால் ஜீவன்தான் கூறப்பட்டிருக்கிறுன். (77)

5. சித்தாந்தம்:—

सर्वं खल्विदं ब्रह्म तज्जलान्— इति शान्त उपासीत

என்கிற சமத்தைவிதிக்கும் இந்த பூர்வவாக்கியத்தில் எந்த பிரம்மம் கூறப்பட்டிருக்கிறதோ அதுவே

मनोमयः प्राणशरीरः

என்பதால் கூறப்பட்டிருக்கிறது. சமவாக்கியத்திற்கு அர்த்தம் யாதெனின்:—பிரம்மமானது சகலத்தையும் சிருஷ்டிக்கிறதாயும், பாலனம் செய்கிறதாயும் சம்ஹரிக்கிறதாயும் ஆகையால் எல்லாம் பிரம்மஸ்வரூபமாயுமிருப்பதால் அப்படிப்பட்ட பிரம்மத்தினிடத்தில் இராகத்துவேஷங்களில்லை. ஆகையால் உபாசனகாலத்தில் சாந்தனுகயிருக்கவேண்டும்—என்பதாம். இந்த வாக்கியத்திலிருக்கிற பிரம்மத்துக்கு விசேஷணங்கள் கூறியிருப்பதினல், மனோமய வாக்கியமும் பிரம்மபரமாகிறது. பிரம்மவிஷயத்தில் மனது பிராணன் இவைகளின் சம்பந்தம் பொருந்தவில்லை என்று சொல்லக்கூடாது. நிருபாதிகத்தில் அவைகள் பொருந்தாவிட்டாலும் சோபாதிக உபாசியபிரம்மத்தை சிந்தனை செய்யும்விஷயத்தில் அவைகள் பொருந்துகின்றன. ஆகையால் சகல வேதாந்த வாக்கியங்களிலும் எந்த பிரம்மம் உபாசியமாக பிரசித்தமாயிருக்கிறதோ அதுவே இவ்விடத்திலும் உபாசியம். ஜீவன் உபாசியன் என்பதாய் எந்த இடத்திலும் தெரியவில்லை. ஆகையால் பிரம்மமே உபாசியம் என்பது சித்தாந்தம். (78)

## XVIII. விசிஷ்டாதுவைதப்படிச் சுருக்கம்.

### I—2—வது பாதம்.

1. அவதாரிகை:—முதலாவது பாதத்தில் தன்னைவிட வேறான சமஸ்தவஸ்துக்களுக்கும் விலக்ஷணமாயிருக்கிற புருஷோத்தமரான நாராயணரே வேதாந்தங்களால் அறியத்தக்கவர் என்று சொல்லப்பட்டது.

இனி 2—3—4-வது பாதங்களில் சில வேதாந்த வாக்கியங்கள் பிரதான ஜீவபரங்களாகக் காணப்பட்டாலும் அவைகளில் சொல்லிய கலியாணகுணங்களைக்கொண்டு அவைகள் பிரதானாதிகளைப் பொருந்தாதபடியால் அந்த வாக்கியங்கள் பரமாத்மாவையே கூறும் என்று நிரூபிக்கிறுர்.

இரண்டாவதுபாதத்தில் அஸ்பஷ்ட ஜீவாதிலிங்கங்களையுடைய வாக்கியங்களை விசாரிக்கிறுர்.

3-வது பாதத்தில் ஸ்பஷ்ட ஜீவாதி லிங்கங்களையுடைய வாக்கியங்களை விசாரிக்கிறுர்.

4-வது பாதத்தில் பிரமலிங்கத்தைக் கூறுமல் ஜீவாதிகளின் லிங்கங்களை வெகு ஸ்பஷ்டமாய்க் கூறும் வாக்கியங்களை விசாரிக்கிறுர். பூர்வபக்ஷத்துக்கு ஹேதுக்களாயிருக்கிற (1) அஸ்பஷ்ட (2) ஸ்பஷ்ட (3)விசேஷமாய் ஸ்பஷ்ட ஜீவாதிலிங்கங்களால் 3-பாதங்கள் ஏற்பட்டன. (79)

### I—2—1-வது அதிகரணம்.

1. இதிலடங்கிய சூத்திரங்கள்:—8(1—8).(80)
2. விஷயவாக்கியம்:—சா III-14-12(அத்)(81)
3. சந்தேகம்:—இதில் சொல்லிய பிரம்மம்
   (1) பிரத்தியகாத்மாவா?
   (2) பரமாத்மாவா? (82)

5. பூர்வபக்ஷம்:—பிரத்தியகாத்மாவே. ஏனெனின் அவனுக்குத்தான் சர்வசம்பந்தம் அதாவது கர்மவசத்தால் பிரம்மாதிஸ்தம்ப பரியந்தமுள்ள சகலபாவமும் ஏற்படும். பரமாத்மா சர்வ கல்லியாண குணங்களுக்கு ஸ்தானமாயிருப்பதால் முன் சொன்ன சர்வசம்பந்தம் அவருக்கு ஏற்படமாட்டாது. சிருஷ்டி முதலியவைகள் அந்த அந்த கர்மத்தால் உண்டாவதால் ஜீவனே இவைகளுக்குக் காரணமென்று சொல்லிவிடலாம்.

பிரம்ம சப்தமும் பிரஹத்வ (பெரிது) என்கிற குண சம்பந்தத்தால் ஜீவனுக்குப் பொருந்தும். ஆகையால் விஷயவாக்கியத்திலுள்ள பிரம்ம சப்தம் பிரத்தியகாத்மாவைத்தான் கூறுகிறது. (83)

6. சித்தாந்தம்:—

(1) तज्जलानि என்கிறதினால் ஜன்மஸ்திதிலயங்களுக்குக் காரணமாயிருக்கும் தன்மையும்,

(2) सर्वं खल्विदं ब्रह्म என்கிறதினால் சர்வாத்மகத்வமும் பிரம்மத்துக்கே பொருந்துமாகையால் பிரம்மசப்தம் ஜீவனை கூறமாட்டாது. மேலும் அவருக்கு சர்வமும் சரீரமாயிருப்பதால் சர்வசம்பந்தமும் பொருந்தும். (84)

7. சூத்திரார்த்தம்.

सर्वत्र சர்வவேதங்களிலும் மனோமயத்வாதி குணங்களுடன் கூடினவன் பரமாத்மாவே. ஏனெனின்

प्रसिद्धोपदेशात् பரமாத்மாவுக்கே பிரசித்தமாக்ச் சொல்லிய விசேஷணங்கள் கூறப்பட்டிருக்கின்றன.

मनोमयः प्राणशरीर नेता முதலிய வாக்கியங்களில் இது பிரசித்தம். (85)

1-2-1-ல் 2-வது சூத்திரம்.

8. மனோமயத்வாதி குணங்கள் சத்தியசங்கற்பாதிகுணங்கள் முதலியவை பரமாத்மாவையே பொருந்தும். (86)

1-2-1-ல் 3.

9. இந்த குணங்கள் சுகதுக்கானுபவியாயும் அஞ்ஞனையும், கர்மவசங்கதனுயுமிருக்கிற ஜீவனுக்கு பொருந்தாவாகையால் மனோமயத்வாதி குணங்கள் ஜீவனல்ல. (87)

I-2-1-ல் 4.

10. அத்வைதத்தில்போலவே (88)

1-2-1-ல் 5.

एष मे आत्मा अन्तर्हृदये

11. இந்த வாக்கியத்தில் मे என்னுடைய என்னும் ஆறும் வேற்றுமையால் ஜீவனும் एषः இவன்என்னும் முதல் வேற்றுமையால் பரமாத்மாவும் கூறப்படுவதால் மனோமயாத்மகன் பரமாத்மாதான். (89)

12. 1-2-1-ல் 6.

सर्वस्य चाहं हृदिसन्निविष्टो मत्तस्स्मृतिर्ज्ञानमपोहनञ्च

என்கிற ஸ்மிருதி கீதைவசனத்தாலும் பரமாத்மா தான் கூறப்படுகிறான். (90)

1-2-1-ல் 7.

13. அத்வைதத்தில் போலவே. (91)

1-2-1-ல் 8.

सम्भोगप्राप्ति ஜீவனுடைய சரீரத்துக்குள் இருக்கிறதினால் இவனுடைய சுகதுக்கமும் பரமாத்மாவுக்கு சம்பவிக்கும் என்று சொல்லுவது சரியன்று. சுகதுக்கானுபவம் கர்மாதீனம். பரமாத்மா அபஹதபாப்மத்வாதி குணங்களுள்ளவர். ஆகையால் இருவருக்கும் வித்தியாசமுண்டு. ஆகையால் மனோமயத்வாதி குணங்கள் பரமாத்மாவே. (92)

## XIX. துவைதச்சுருக்கம்.

### I-2-1-வது அதிகரணம்.

1. அவதாரிகை:—முந்தின பாதத்துக்கும் இதற்கும் சம்பந்தம்:—முதல்பாதத்தில் அநந்த வேதங்களிலுள்ள சகல பதங்களும் பிரம்மத்தைத்தவிர மற்றவைகளுக்கு உபயோகித்திருந்தாலும் பிரம்மத்தையும் கூறும் என்று நிரூபிக்கப்பட்டது.

இந்த பாதத்தில் மற்றதிற்கு உபயோகித்திருக்கிற லிங்கங்களும் அதாவது விசேஷணங்களும் பிரம்மத்துக்கும் பொருந்தும் என்று சொல்லுகிறார். (93)

2. சங்கதி:—முதல்பாதத்தின் அந்தியத்துக்கும் இரண்டாம பாதத்தின் ஆதிக்கும் சங்கதி அவசியமிருக்கவேண்டுமென்பது அபேக்ஷையில்லை. அப்படி அபேக்ஷித்தாலும் ஆக்ஷேபசங்கதி ஏற்படுகிறது.

இந்த முதல் அதிகரணத்தில் வேறு ஒன்றுக்குப்பொருந்தும் சர்வவியாபகம் என்கிற லிங்கம் (விசேஷணம்) பிரம்மத்துக்கும் பொருந்துமென்கிறார். (94)

3. சந்தேகம்:— ஐதரேயத்தில் चत्वारः पुरुषाः என்கிற बाष्वा என்கிற கண்டத்தில் तस्यै तस्या सावादित्योरस என்பதுமுதல்

एतं ह्येव बह्वृचा महत्युक्थे मीमांसते

முதலான வசனங்களால் அக்கினி சந்திர நக்ஷத்

திராதி சகலபூதங்களில் ஏதோ ஒருவன் இருக்கிறதாக சொல்லப்படுகிறான். அவன்

(1) சூரியனா? அல்லது
(2) ஜீவனா? அல்லது
(3) விஷ்ணுவா?

என்பது சந்தேகம்.

4. பூர்வபக்ஷம்:—அவன்

(1) சூரியன் அல்லது
(2 ஜீவன்

ஏனெனின் एतं என்கிற பதம் முன் வந்திருக்கும் ஆதித்தியனைத்தான் கூறும். அவனைத்தான் சம்வத்சரத்தின் रस மாகச் சொல்லியிருக்கிறது. இன்னும் பல லிங்கங்களு முண்டு. அல்லது चक्षुर्मयः प्राणमयः முதலியதால் சக்ஷுராதி ஞானத்தை உண்டு பண்ணுகிறதினால் சக்ஷுராதிகளுடன் சம்பந்தப்பட்ட ஜீவனுமிருக்கலாம்.

அவன் ஒருக்காலும் விஷ்ணுவாகமாட்டான். ஏனெனின் சுருதிலிங்கங்கள் பொருந்தவில்லை. மேலும் சர்வபூதங்களுமிருக்கிறதாகச் சொன்னால் அந்த பூதங்களின் சுகதுக்கங்களும் அவனைச்சேரும். ஆகையால் அவன் விஷ்ணுவாயிருக்கமாட்டான். (96)

5. சித்தாந்தம்:— एतमेव ब्रह्म आचक्षते என்று விஷயவாக்கியத்தில் சொல்லியிருக்கிறது. இந்த பிரம்ம சப்தம் விஷ்ணுவைத்தான் கூறவேண்டும். ஏனெனின் तदेव ब्रह्म परमं कवीनां முதலிய இடங்களில் விஷ்ணுதான் பிரசித்தம். ஜாதிமுதலிய அர்த்தங்கள் இருந்தாலும் விஷ்ணு என்கிற அர்த்தம்தான் முக்கியம். ஆகையால் அதைத்தான் கிரகிக்கவேண்டும்.

अहमात्मा गुडाकेश सर्वभूताशयस्थितः

என்கிற கீதா வசனத்தில் சமான அர்த்தமே சொல்லப்பட்டிருக்கிறது.

संवत्सरो वै प्रजापतिः என்கிற வசனத்தில் சம்வத்சர சப்தம் விரிஞ்சனைக் கூறுவதால் அதின் रस மென்பதினால் அந்தர்யாமி என்கிறநியாயத்தால் ஆதித்தியன் என்கிற பதம் பிரயோகிக்கப்பட்டிருக்கிறது. இன்னும் பலகாரணங்களாலும் பிரம்மசப்தம் ஆதித்தியனைக் கூறமாட்டாது.

அப்படியே அது ஜீவனையும் கூறமாட்டாது. भूत பதம் உபாசனையின் பொருட்டு பிரயோகிக்கப்பட்டிருக்கிறது. சம்போகம் கிடைத்தாலும் சாமர்த்திய விசேஷத்தால் அதை பரிஹரிக்கமுடியும். ஆகையால் அவர் சகலத்திலும் இருக்கலாம். சக்ஷுராதிகளுக்கு ஸ்வாமியாயிருப்பதால் சக்ஷுர்மயன் என்றும் சொல்லப்படலாம் பாதகமில்லை. அணுவான ஜீவனையாவது ஆதித்தியனையாவது சர்வகதன் என்று சொல்லுவது பொருந்தமாட்டாது. ஆகையால் பிருதிவியாதிகளில் இருக்கிறதாகச் சொல்லப்பட்டவன் விஷ்ணுவே. (97)

6. சூத்திரார்த்தம்:—

सर्वत्र பிருதிவிமுதலியவைகளில் எந்தவஸ்து இருக்கிறதாகச் சொல்லப்பட்டிருக்கிறதோ அது நாராயணன் என்று பெயருள்ள பிரம்மமே வேறல்ல. ஏனெனின்.

प्रसिद्धोपदेशात्—एतमेव ब्रह्म आचक्षते

என்கிற ஐதரேயசுருதியில் சர்வவியாபக நாராயணனை பிரம்மசப்தம் கூறுகிறது. (98)

7. I-2-1-ல் 2.

(1) அ-கை:—ஜீவன் ஆதித்தியன் இவைகளை கிரகித்தால் பிரசித்தார்த்தத்துக்கு பாதகம் வருகிறது என்பதைக் காட்டும் பொருட்டுபிரம்மசப்தம் நாராயணனைத்தான் எப்படி கூறுகிறது என்பதைச் சொல்லுகிறார். (99)

(2) அர்த்தம்:— च அப்படியே

विवक्षितगुणोपपत्तेः சர்வத்திலும் வியாபிக்கும் குணம் கேட்பதற்கு விஷயமாகாத குணம் முதலியவைகள் விஷ்ணுவுக்கே பொருந்துமாகையாலும் இவைகள் மற்றவர்களுக்குப் பொருந்தாதவைகளாயிருப்பதாலும் விஷ்ணுவே சர்வவியாபி. (100)

8. I-2-1 ல் 3.

(1) அ-கை:—ஆதித்திய சுருதியால் ஆதித்தியன் என்றும், சக்ஷுர்மய முதலிய ஜீவலிங்கங்களால் ஜீவன் என்றும் ஏன் இருக்கக்கூடாதென்பதற்குக் காரணம் சொல்லுகிறார். (101)

(2) शारीरः ஜீவன் அல்லது ஆதித்தியன். न சர்வகதனன்று. ஏனெனின்

अनुपपत्तेः तु ஒரே ஜீவன் சர்வசரீரத்திலும் இருக்கச் சமர்த்தனாகமாட்டான். तु சப்தம் நிச்சயத்தைக் காட்டுகிறது. (102)

9. I-1-1 ல் 4.

(1) அ-கை.—அடியில்வரும் காரணத்தா லும் ஜீவன் சர்வ வியாபகன் அன்று என்று சொல்லு கிறான். (103)

(2) च மேலும் ஜீவன் சர்வகதனன்று. ஏனெனின் कर्मकर्तृव्यपदेशात् आत्मानं என்கிற சுருதியில் ச ர்வகதவஸ்துவை கர்மமாகவும் शंसति என்கிறசுருதியி ல் ஜீவனை கர்த்தாவாகவும் இப்படி பிரம்மத்தை கர்ம மாகவும் ஜீவனை கர்த்தாவாகவும் பிரித்துச் சொல்லியி ருப்பதாலும் சர்வகதன் ஜீவனாகமாட்டான். (104)

10. I-2-1ல் 5.

(1) அ-கை:—சக்ஷுர்மய முதலிய ஜீவலிங்கங் களிருப்பதால் முன் சொல்லிய பிரம்மசப்தம் முதலிய வைகளை வேறுவிதமாய் அர்த்தம் செய்யவேண்டியது என்ற சங்கைக்கு உத்தரம் கூறுகிறார். (105)

(2) பிரம்மசப்தம் ஜீவனைக் கூறமாட்டாது. ஏனெனின்

शब्दविशेषात् एतमेव ब्रह्मेति என்கிற சுருதியில் एव சப்தம் பிரம்மத்தையே நிச்சயிக்கும்பொருட்டு உபயோகிக்கப்பட்டிருக்கிறது. (106)

11. I-2-1 ல் 6.

(1) அ-கை:—அடியில்வரும் காரணத்தா லும் எங்கும் கூறியிருப்பது பிரம்மமே என்று சொல் லுகிறார். (107)

(2) च மேலும்

स्मृतेः=अहमात्मा गुडाकेश सर्वभूताशयस्थितः

என்கிற கீதா வசனத்தாலும் சர்வ இடத்திலுமிரு ப்பது பிரம்மமே. (108)

12. I-2-1 ல் 7.

(1) அ-கை:—முன் சொன்னதை ஆக்ஷே பித்துச் சமாதானம் சொல்லுகிறார். (109)

अर्भकौकस्त्वात्

सर्वेषु भूतेषु என்கிற சுருதியில் சர்வகதவஸ் துவானது சகல பிராணிகளின் ஹிருதயாகாசமாகிய அல்பஸ்தானத்திலிருக்கிறதாகச் சொல்லியிருக்கிறது.

तद्व्यपदेशात् ஜீவசம்பந்தமான சுருதியும் லிங்கமும் (அசாதாரண தர்மமும்) சொல்லப்பட்டிரு க்கின்றன.

च இந்த இரண்டுகாரணங்களாலேயும்

न பிரமம் சர்வவியாபி என்று சொன்னது சரி யன்று.

इति चेत् என்றுசொன்னால்

न இது சரியன்று. ஏனெனின் அவைகள் விஷ் ணுவுக்கும் பொருந்தும்.

एवं அல்ப இடத்திலிருக்கிறவர் என்கிற ரூப மாக

निचाय्यत्वात् விஷ்ணுவே உபாசிக்கத்தக்கவர்.

व्योमवच्च எப்படி வியாபகமான ஆகாசம் வீடு என் கிற சின்னவிடத்திலிருக்கிறதோ அப்படி விஷ்ணுவும் உபாசனையின்பொருட்டு ஹ்ருதயமாகிற சின்ன இடத் திலிருக்கிறார். (110)

(13) I-2-1 ல் 8.

(1) அ-கை:—மறுபடியும் சொன்னதை ஆக்ஷேபித்துச் சமாதானம் சொல்லுகிறார். (111)

(2) सम्भोगप्राप्तिः ஜீவனும் ஈசுவரனும் ஒரு சரீரத்திலிருக்கிறதாயிருந்தால் ஈசுவரனுக்கும் ஜீவனுடன் சமானபோகம் கிடைக்கும்.

इति चेत् என்றுசொன்னால்

न அது சரியன்று.

वैशेष्यात् ஜீவனைவிட ஈசுவரனிடத்தில் சர்வஞ் ஞத்துவாதி விசேஷசாமர்த்தியம் இருப்பதால் ஜீவ னுடன் ஈசுவரனுக்கும் சுகதுக்கானுபவம் ஏற்படமாட் டாது.

14. பூர்வபக்ஷபலன்:— भूतेषु एतमेव आदित्यादि என்கிற சுருதியில் एवं சப்தம் ஆதித்தியனையே கூறு வதால் விஷ்ணு அன்று என்றும் ஆக்ஷேபம்.

சித்தாந்தபலன்:—சமாதானமே. (113)

15:—தீர்மானம்:—இந்த அதிகரணத்தால் விஷ் ணு சர்வவியாபியாக இருந்தும் அல்ப இடத்திலுமிரு க்கிறார் என்று ஏற்படுகிறது. (114)

(முதலாவது அத்தியாயம் இரண்டாவது பாதம்)
முதலாவது அதிகரணம்
முற்றிற்று.

## I—2—2வது அதிகரணத்தின்

### அனுக்கிரமணிகை.

## I-2-2-வது அதிகரணம்.

I. இதின் பெயர்:-அத்திருத்வாதிகரண மென்பதாம். (1)

II. இந்த அதிகரணத்தின் கருத்து:—பிரம்மம் சம்ஹாரகர்த்தா வென்பதாம். (2)

III. விஷயவாக்கியம்.

கடவல்லி I-2-25 ல்

**यस्य ब्रह्म च क्षत्रं चोभे भवत ओदनः**
**मृत्युर्यस्योपसेचनं क इत्था वेद यत्र सः॥**

என்று சொல்லியிருக்கிறது.

रा (இதின் அர்த்தம்:—எதற்கு பிரம்மக்ஷத்திராதி ஜகத்தானது அன்னமோ, மிருத்தியுவானவன் சகலப்பிராணிகளை சம்ஹரித்தாலும் எதற்கு நெய்போல் சாப்பாட்டுக்குச் சாதகமோ, அப்படிப்பட்ட அத்தா (பக்ஷிக்கிறவன்) எந்த சுத்தமான சித்ஸ்வரூபமாத்திரத்தில் அதற்கு வேறாகததாயிருக்கிறதோ அப்படிப்பட்ட, ஈசுவரனுக்கும் அதிஷ்டானமான சுத்தப்பிரம்மத்தை எவன் அறிவான். சித்தசுத்தியாகிற உபாயமன்றியில் ஒருவனும் அறியமாட்டான் என்பது கருத்து.

இவ்விடத்தில் அன்னத்தாலும், அதற்குச் சாதகமான திரவியத்தாலும் பக்ஷிக்கிறவன் ஒருவன் இருக்கிறான் என்று தோன்றுகிறது. (3)

IV. சங்கதி.

(1) முந்தின அதிகரணத்துக்கும் இதற்கும்:-முந்தின அதிகரணத்தில் பிரம்மம் போக்தா வன்று என்று சொல்லப்பட்டது. அப்படியானால் பிரபஞ்சத்தின் சம்ஹார கர்த்தாவும் அன்று என்று பூர்வபக்ஷி ஆக்ஷேபிக்கிறபடியால் ஆக்ஷேபசங்கதி ஏற்படுகிறது. முந்தின அதிகரணத்தில் பிரம்மலிங்கம் அஸ்பஷ்டம். அதில் பிரம்மலிங்கம் ஸ்பஷ்டம் (4)

(2) பாதசங்கதி:—இனி கொடுக்கப்படும் விஷயவாக்கியத்தில் முதலிலிருக்கிற ஓதனசப்தத்தால் போக்தா ஒருவன் இருக்கவேண்டும். போக்தாவோ ஜீவன். ஏனெனின் போக்திருத்வம் ஜீவலிங்கம்.

பின்தின வாக்கியத்தில் மிருத்யு உபசேசனம் என்பதினால் சகலத்தையும் சம்ஹரிக்கும் தன்மை ஊகிக்கப்படுகிறது, இதுவோ பிரம்மலிங்கம். இந்த லிங்கம் வியக்தமாய்க் காணப்படாமல் ஊஹிக்கும்படியாக இருப்பதாலும், முதலில் கூறப்பட்ட பிரபலமான ஜீவலிங்கத்தால் மறைபட்டிருப்பதாலும், இந்த அதிகரணத்தை இந்த அஸ்பஷ்ட பிரம்மலிங்கத்தைக் கூறும் இரண்டாம்பாதத்தில் பிரஸ்தாபித்தது யுக்தமே (5)

आ (3) இதர சங்கதிகள்:--விஷயவாக்கியமாகிற சுருதிவசனம் நிர்விசேஷ பிரம்மத்தினிடத்தில் சமன்வயப்படுவதினால் சுருதிமுதலிய சங்கதிகளை முன்போலவே அறியும். (6)

V. சந்தேகம். அந்த அத்தாவானவன்

रा (1) त्वमग्निं प्रब्रूहि என்பதினால். அக்கினியா?

(2) येयं प्रेते विचिकित्सा என்பதால், ஜீவனா?

(3) अन्यत्रधर्मात् என்பதினால், பிரம்மமா?

என்பது சந்தேகம்.

रा (1) लोकादिमग्निं तमुवाच (கட-I-1-15) என்பதினால் அக்கினி விஷயமாயும்

(2) हन्तत इदं प्रवक्ष्यामि (II-2-6) என்பதினால் ஜீவ பிரம்மவிஷயமாயும் பிரத்த்யுத்தரம் சித்தித்திருப்பதாலும், இப்படி அக்கினி, ஜீவன், பரமாத்மா ஆகிய மூவர்கள் விஷயமாய் இந்த கிரந்தத்தில் கேள்வியும் மறுமொழியும் ஏற்பட்டிருப்பதால் இன்னதுதான் அத்தா பதத்தால் கூறப்பட்டிருக்கிறது என்று தெரியவில்லை. (7)

VI. இதிலடங்கிய சூத்திரங்கள்:—2 (9-10)

பிரம்மம்தான் சம்ஹார கர்த்தாவென்பது

9-ல் லிங்கத்தாலும்

10-ல் பிரகரணத்தாலும்

நிரூபிக்கப்படுகிறது. (8)

VII. பூர்வபக்ஷம்:—

(1) அக்கினிதான் அத்தா. ஏனெனின்

अग्निरन्नादः (बृ I-4-6)

என்கிற சுருதியாலும் உலகப்பிரசித்தியாலும் அக்கினிதான் அன்னத்தை பக்ஷிக்கிறவன் என்று தெரியவருகிறது. (9)

(2) அல்லது ஜீவனும் அத்தாவாயிருக்கலாம். ஏனெனின்.

तयोरन्यःपिप्पलं स्वाद्वत्ति (मु 3-1-1)

என்பதில் ஜீவன் ருசிகரமான பழத்தைச் சாப்பிடுகிறுன் என்று சொல்லியிருக்கிறது. (10)

(3) பரமாத்மா அத்தாவாகமாட்டான். ஏனெனின்.

अनश्नन्यो अभिचाकशीति (मु III-1-1)

என்கிறதில் மற்றொருவன் சாப்பிடாமல் பார்த்துக்கொண்டிருக்கிறுன் என்றுசொல்லியிருக்கிறது 11

VIII. சித்தாந்தம்:—இந்த பூர்வபக்ஷத்துக்கு

## अत्ता चराचरग्रहणात् ।९।

என்கிற சூத்திரத்தில் உத்தரம் சொல்லுகிறுர் 12

(2) பதவுரை.

चराचर ग्रहणात् ஸ்தாவர ஜங்கமங்கள் இரண்டும் சொல்லியிருப்பதால்

अत्ता பக்ஷிக்கிறவன் பிரம்மந்தான். 13

(3) பொழிப்புரை.

ஸ்தாவரமும் ஜங்கமமும் அன்னமாக சொல்லப்பட்டிருப்பதால், பக்ஷிக்கிறவன் பரமாத்மாவே. (14)

(4) பாஷ்யம்.

(1) अत्ता பக்ஷிக்கிறவன் பரமாத்மாவாகவே இருக்கவேண்டும். (15)

ஏனெனின்.

(2) चराचर ग्रहणात् ஸ்தாவரஜங்கமம் பக்ஷிக்கப்படும்படியான அன்னமாயும் மிருத்தியு சாதகதிரவியமாயும் காணப்படுகிறது. அப்படிப்பட்ட பக்ஷியத்தை பரமாத்மாவைத்தவிர வேறு ஒன்றும் முழுமையும் பக்ஷிக்கமாட்டாது. பரமாத்மாவோ சகலகாரியத்தையும் தன்னிடத்தில் லயப்படுத்துவதினுல் பக்ஷிக்கிறவனுக சொல்லப்படலாம்.

சராசரங்களை சுருதியில் சொல்லவில்லையே. அவைகளைச் சொன்னதுபோல் வைத்துக்கொண்டு, அப்படி சொல்லியிருப்பதால் என்பதாய் எப்படிச் சொல்லலாம்.

இதில் பாதகமில்லை. மிருத்தியுவானவன் அன்னத்துக்குச் சாதனமான திரவியம் என்று சொன்னதினுல் சகல பிராணிகளும் கூறப்பட்டதாக தெரியவருகிறது. மேலும் பிராமணர்களும் க்ஷத்திரியர்களும் பிரதானமாயிருப்பதால் அவர்களை உபலக்ஷணமாக கிரகிக்கலாம். இந்த இரண்டு காரணங்களாலும் சராசரங்கள் கூறப்பட்டதாகத் தெரியவருகிறது. (16)

(3) अनश्नन्यो अभिचाकशीति என்கிற சுருதியால் பரமாத்மா அத்தாவென்று சொல்லக்கூடாதென்கிற ஆக்ஷேபத்துக்கு நாம் சொல்லுகிறதாவது. சமீபத்திற் சொல்லிய கர்மபலத்தை பரமாத்மா புஜிக்கவில்லை என்று சுருதி சொல்லுகிறதேதவிர சகல விகாரங்களையும் தன்னிடத்தில் லயம் செய்துகொள்ளவில்லை என்று சுருதி சொல்லவில்லை. சகலவேதாந்தங்களிலும் சிருஷ்டிஸ்திதி சம்ஹாரங்களுக்குக்காரணம் பிரம்மமென்றே பிரசித்தமாகத் தெரியவருகிறது. ஆகையால் பரமாத்மாவே அத்தா. (17)

IX. I-2-2ல்-2-10-வது சூத்திரம்.

## प्रकरणाच्च ।१०।

2. முந்தின சூத்திரத்துக்கும் இதற்கும் சம்பந்தம்:—முன் சூத்திரத்தில் லிங்கத்தால் பிரம்மம் அத்தாவென்று சொல்லப்பட்டது. இப்போது பிரகரணத்தாலும் பிரம்மமே அத்தா என்று சொல்லுகிறுர். (19)

3. பதஉரை.

प्रकरणात् च பிரகரணத்தாலும். (20)

4. பொழிப்புரை.

பிரகரணத்தாலும் அத்தா பிரம்மந்தான். (21)

5. பாஷியம்.

இனிசொல்லும் காரணத்தாலும் பரமாத்மாவே அத்தாவாக இருக்கவேண்டும். ஏனெனின்

न जायते म्रियते वा विपश्चित्

(கடவல்லி I-2-18)

என்கிற சுருதியில் ஞானஸ்வரூபமான ஆத்மா ஜனிக்கிறதில்லை மரிக்கிறதில்லை என்று சொல்லுவதினுலும் மற்ற சுருதிவசனங்களாலும் இந்த பிரகரணம் பரமாத்ம விஷயம் என்று தெரியவருகிறது. பிரகிருதத்தை அனுசரிப்பதே யுக்தம்.

क इत्था वेद यत्र सः

என்பதினுல் பிரம்மம் கஷ்டத்தின்பேரில் அறியத்தக்கது என்று தெரியவருகிறது. இது பரமாத்ம லிங்கம் இக்காரணங்களால் அத்தா பரமாத்மாவே 22

X. ஆ பூர்வபக்ஷபலன்:—ஜீவோபாஸ்தி.

ग्र பூர்வபக்ஷபலன்:—அத்தா ஜீவனானதால் அவனுக்கு அதிஷ்டானம் ஈசுரவன்:

आ சித்தாந்தபலன்:—நிர்விசேஷ பிரம்ம ஞானம்.

ग्र சித்தாந்தபலன்:-அத்தா ஈசுவரன் அதனால்தான் அவனுக்கு அதிஷ்டானம் வேறுஒன்று இருக்கிறது (23)

XI. வியாஸாதிகரணமாலைப்படி அத்வைதச்சுருக்கம்

1. சுலோகங்கள்:—

जीवोऽग्निरीशोवाऽत्ता स्यादोदने जीव इष्यताम् ।
स्वाद्वत्तीति श्रुतेर्वह्निर्वाऽग्निरन्नाद इत्यतः ॥
ब्रह्मक्षत्रादि जगतो भोज्यत्वात्स्यादिहेश्वरः ।
ईशप्रश्नोत्तरत्वाच्च संहारस्तस्यचात्तृता ॥ 24 ॥

2. விஷய:—

கடவல்லியில் இரண்டாவது வல்லியின் முடிவில்

यस्य ब्रह्म च क्षत्रं च उभे भवत ओदनः ।
मृत्युर्यस्योपसेचनं क इत्था वेद यत्र सः ॥

என்று சொல்லியிருக்கிறது.

அர்த்தம்:—பிராமணக்ஷத்திரிய ஜாதிகள் எவனுக்கு அன்னமாயிருக்கின்றனவோ, மிருத்யு போஜன சாதகமோ, அந்த புருஷன் எவ்விடத்திலிருக்கிறானோ அந்த ஸ்தானம "இது இப்படிப்பட்டது" என்று எவன் அறிகிறான். ஒருவனும் அறிகிறதில்லை என்பதாம். (25)

3. சந்தேகம்:—

இவ்விடத்தில் அன்னம், சாதகம் இவைகளால் சாப்பிடுகிறவன் ஒருவன் உத்தேசிக்கப்பட்டிருக்கிறான். அவன் ஜீவனா? அக்கினியா? ஈசுவரனா? என்பதாய் மூன்றுவித சந்தேகம் ஏற்படுகிறது. (26)

4 பூர்வபக்ஷம்:—ஜீவன்தான். ஏனெனின்

तयोरन्यः पिप्पलं स्वाद्वत्ति (मु III-1-1)

என்கிற வாக்கியத்தில் ஜீவன் அத்தா (பக்ஷிக்கிறவன்) என்று சொல்லியிருக்கிறது. அல்லது, அக்கினியாயிருக்கவேண்டும். ஏனெனின்,

अग्निरन्नादः (वृ I-4-6)

என்பதில் அக்கினி அத்தாவென்று சொல்லியிருக்கிறது. (27)

5. சித்தாந்தம்:—

பிரம்மசூத்திரங்கள் உபலக்ஷணங்களானதால் சகல ஜகத்தும் இவ்விடத்தில் போஜ்யமாக தெரிய வருகிறது. அப்படிப்பட்ட போஜ்யத்துக்கு ஈசுவரனைத்தவிர வேறு அத்தா போக்தா ஏற்படமாட்டான் மேலும்.

अन्यत्र धर्मादन्यत्रा धर्मादन्यत्रा स्मात्कृता कृतात् ।
अन्यत्र भूताच्च भव्याच्च यत्तत्पश्यसि तद्वद ॥ (कठ II-14)

என்பதாய், தர்மம், அதர்மம், காரியம், காரணம், காலத்திரயம், இவைகளை அதிக்கிரமித்த பரமேசுவரனைப்பற்றி நசிகேதஸன் கேட்டவாவில் यस्य ब्रह्म च என்கிற வாக்கியத்தால் யமன் உத்தரம் கொடுத்தார். ஆகையால் இவ்விடத்தில் ஈசுவரன்தான் பிரதிபாத்தியன். अनश्नन्नन्योऽभिचाकशीति (मु) என்பதில் ஈசுவரன் போக்தாவன்று என்று சொல்லியிருக்கிறதே எனின், இவ்விடத்தில் போக்தாவென்பதால் சம்ஹாரம் செய்கிறவர் என்று அர்த்தம் செய்துகொள்ளவேண்டும். இதுவே ஈசுவரனுடைய தர்மம் என்பது சகல வேதாந்தங்களிலும் பிரசித்தம் (28)

XII. விசிஷ்டாத்வைதப்படி I-2-2 வது அதிகரணச் சுருக்கம்.

1. விஷயவாக்கியம்:—கட I-2-25 (29)

2. இதிலடங்கிய சூத்திரங்கள்:-(9—10) (30)

3. சந்தேகம்:—இதில் அத்தா பரமாத்மாவா? ஜீவனா? (31)

4. பூர்வபக்ஷம்:-ஜீவன்தான் ஏனெனின் போகம் கர்மத்தால் ஏற்படும். கர்மம் ஜீவனுக்குத்தான் உண்டு ஆகையால் அத்தா ஜீவனே. (32)

5. சித்தாந்தம்:-பரமாத்மாதான். சர்வசப்தத்தையும் பக்ஷித்தல் அதாவது சம்ஹரித்தல் என்னும்குணம் அவருக்குத்தான் பொருந்தும். இது கர்மாதீனமன்று. சிருஷ்டிஸ்திதிசம்ஹாரங்கள் அவரிடத்தில் ஏற்கனவே இருக்கின்றன. ஆகையால் அத்தா பரமாத்மாவே. (33)

6. चराचरग्रहणात् ஸ்தாவர ஜங்கமமான சகல ஜகத்தும் அவருக்கு அன்னம் என்று சொல்லியிருப்பதால் அவர்பரமாத்மாவே. (34)

I-2-2ல் (2—10)

7. प्रकरणाच्च :—महान्तं विभुमात्मानं मत्वा धीरेन शोचति முதலியவாக்கியங்கள் இந்த பிரகரணத்தில் பிரம்மத்தையே கூறுகின்றன. (35)

XIII. துவைதப்படி:-I-2-2-வது அதிகரணச்சுருக்கம்.

1. இதின் கருத்து:-சகலத்தையும் ஸம்ஹரிக்குந்தன்மை பரமாத்மாவினுடையதே. (36)

2. இதிலடங்கிய சூத்திரங்கள்:—2-(9-10)(37)

3. இதின் விஷயவாக்கியம்:—

स यद्यदेवासृजत तत्तदत्तुमधीयत
सर्वं वा अत्तीति तददितेरदितित्वं

என்கிற வாஜஸநேயத்தின் 3-வது அத்தியாயத்தில் சர்வத்தையும் பக்ஷிக்கிறவனைப்பற்றிச் சொல்லியிருக்கிறது. (38)

4. சங்கதி:—பூர்வபக்ஷியின் ஆக்ஷேபத்தின்பேரில் இதில் தீர்மானம் ஏற்படுவதால் ஆக்ஷேபசங்கதி ஏற்படுகிறது. (39)

5. சந்தேகம்:—விஷயவாக்கியத்தில் சொல்லிய அத்தா பக்ஷகன்.

(1) தேவமாதாவான அதிதியா? அல்லது,

(2) விஷ்ணுவா? (40)

6. பூர்வபக்ஷம்-அத்தா தேவமாதாவான அதிதிதான். ஏனெனின்.

(1) अदितेः என்று சுருதியில்சொல்லியிருக்கிறது.

(2) பக்ஷிக்கிற லிங்கம் விஷ்ணுவுக்குப் பொருந்தாது ஏனெனின். अनश्नन् (பக்ஷிக்காமல்) என்று வேறு சுருதி சொல்லுகிறது. (4)

7. சித்தாந்தம்:-9-வது சூத்தரம் அவதாரிகை:- இந்த அதிகரணத்தில் சம்ஹாரம் செய்தல் என்னும் அசாதாரணதர்மம் பிரம்மத்தி லிருக்கிறது என்று சொல்லுகிறார். (42)

8. अत्ता (பக்ஷிக்கிறவர், சம்ஹாரம் செய்கிறவர் விஷ்ணுவே.

ஏனெனின்.

चराचरग्रहणात् – सर्वं वा अत्ति என்கிற சுருதியில் ஸ்தாவரஜங்கமமான சகலத்தை பக்ஷிக்கிறதாகச் சொல்லியிருக்கிறது. (43)

I-2-2ல்-2 (10)

1. அவதாரிகை:—இப்படி அர்த்தம் செய்யாமல் எதையாவது பக்ஷிக்கிறவன் அத்தா என்பதாய் அர்த்தத்தைக் குறைத்தால் அது பொருந்தவில்லையென்பதைக் காட்டுகிறார். (44)

2. प्रकरणाच्च–नैवेह किंचनाग्र आसीत् என்கிற சுருதியால் உதகத்தையும் பிரம்மதேவரையும் சிருஷ்டிசெய்ததாகச் சொல்லியிருக்கிறது. ஆகையால் இந்த பிரகரணம் விஷ்ணுவைப்பற்றியது. ஆகையால் அவர்தான் அத்தாவாக இருக்கவேண்டும். பிரளயகாலத்தில் சர்வத்தையும் பக்ஷிக்கிறபடியால் அதிதி பதம் அவருக்குப் பொருந்தும். அனசன சுருதிக்கு அர்த்தம் வேறு இது இனி சொல்லப்படும். (45)

3. பூர்வபக்ஷபலன்:—ஜன்மாதி சூத்திரத்தின் ஆக்ஷேபம்.

சித்தாந்தபலன்:—அதின் பரிஹாரம். (46)

I-2-2-வது அதிகரணம்.

முற்றிற்று.

## I-2-3-வது அதிகரணத்தின் அனுக்கிரமணிகை.

XIII. துவைதப்படி:-I-2-2-வது அதிகரணச்சுருக்கம்.

1. இதின் கருத்து:-சகலத்தையும் ஸம்ஹரிக்குந்தன்மை பரமாத்மாவினுடையதே. (36)

2. இதிலடங்கிய சூத்திரங்கள்:—2-(9-10)(37)

3. இதின் விஷயவாக்கியம்:—

स यद्यद्वासृजत तत्तदत्तुमधीयत
सर्वं वा अत्तीति तददितेरदितित्वं

என்கிற வாஜஸநேயத்தின் 3-வது அத்தியாயத்தில் சர்வத்தையும் பக்ஷிக்கிறவனைப்பற்றிச் சொல்லியிருக்கிறது. (38)

4. சங்கதி:—பூர்வபக்ஷியின் ஆக்ஷேபத்தின்பேரில் இதில் தீர்மானம் ஏற்படுவதால் ஆக்ஷேபசங்கதி ஏற்படுகிறது. (39)

5. சந்தேகம்:—விஷயவாக்கியத்தில் சொல்லிய அத்தா பக்ஷகன்.

(1) தேவமாதாவான அதிதியா? அல்லது,

(2) விஷ்ணுவா? (40)

6. பூர்வபக்ஷம்:-அத்தா தேவமாதாவான அதிதிதான். ஏனெனின்.

(1) अदिते: என்று சுருதியில்சொல்லியிருக்கிறது.

(2) பக்ஷிக்கிற லிங்கம் விஷ்ணுவுக்குப் பொருந்தாது ஏனெனின். अनश्नन् (பக்ஷிக்காமல்) என்று வேறு சுருதி சொல்லுகிறது. (4)

7. சித்தாந்தம்:-9-வது சூத்ரம் அவதாரிகை:-இந்த அதிகரணத்தில் சம்ஹாரம் செய்தல் என்னும் அசாதாரணதர்மம் பிரம்மத்திலிருக்கிறது என்று சொல்லுகிறார். (42)

8. अत्ता (பக்ஷிக்கிறவர், சம்ஹாரம் செய்கிறவர் விஷ்ணுவே.

ஏனெனின்.

चराचरग्रहणात् – सर्वं वा अत्ति என்கிற சுருதியில் 'ஸ்தாவரஜங்கமமான சகலத்தை பக்ஷிக்கிறதாகச் சொல்லியிருக்கிறது. (43)

I-2-2ல்-2 (10)

1. அவதாரிகை:—இப்படி அர்த்தம் செய்யாமல் எதையாவது பக்ஷிக்கிறவன் அத்தா என்பதாய் அர்த்தத்தைக் குறைத்தால் அது பொருந்தவில்லையென்பதைக் காட்டுகிறார். (44)

2. प्रकरणात्च–नैवेह किंचनाग्र आसीत् என்கிற சுருதியால் உதகத்தையும் பிரம்மதேவரையும் சிருஷ்டிசெய்ததாகச் சொல்லியிருக்கிறது. ஆகையால் இந்த பிரகரணம் விஷ்ணுவைப்பற்றியது. ஆகையால் அவர்தான் அத்தாவாக இருக்கவேணடும். பிரளயகாலத்தில் சர்வத்தையும் பக்ஷிக்கிறபடியால் அதிதி பதம் அவருக்குப் பொருந்தும். अनशन சுருதிக்கு அர்த்தம் வேறு இது இனி சொல்லப்படும். (45)

3. பூர்வபக்ஷபலன்:—ஜன்மாதி சூத்திரத்தின் ஆக்ஷேபம்.

சித்தாந்தபலன்:—அதின் பரிஹாரம். (46)

I-2-2-வது அதிகரணம்.

முற்றிற்று.

---

# I-2-3-வது அதிகரணத்தின் அனுக்கிரமணிகை.

## I-2-3 வது அதிகரணம்.

I. இதின்பெயர் :—குஹாப்பிரவிஷ்டாதிகரண மென்பதாம்.

II. இதின் கருத்து:— ஜீவப்பிரம்மங்களுக்கே ஹிருதயகுஹாப்பிரவேசம் என்பதாம். (2)

III. விஷயவாக்கியம்:—

ऋतं पिबन्तौ सुकृतस्य लोके गुहां प्रविष्टौ परमे परार्ध्ये ।
छायातपौ ब्रह्मविदो वदन्ति पञ्चाग्नयो ये च त्रिणाचिकेताः
(கட-I-3-1)

சரீரத்தில் பிரம்மத்துக்கு ஸ்தானமாயிருக்கக் கூடிய ஹிருதயத்திலிருக்கிற குஹையில் பிரவேசித்த வர்களாயும் அவசியம் உண்டாகவேண்டிய கர்மபலத் தை அனுபவிக்கிறவர்களாயுமிருக்கிறவர்களை வெய்யி லும் நிழலும்போல் பரஸ்பரம் விருத்தர்களாயுமிருக் கிறவர்களாக பிரம்மவித்துக்களும், பஞ்சாக்கினிகளை அனுஷ்டிக்கிற கிரஹஸ்தர்களும் திருநாசிகேதர்களும் சொல்லுகிறார்கள். (மூன்று ஆவர்த்தி அக்கினி செய னம் செய்தவர்கள் திருநாசிகேதர்கள். கார்ஹபத்தி யாதி அக்கினிகளை ஸ்வீகரிக்கிறவர்கள் பஞ்சாக்கினி கள்.)

III. சங்கதி:—

(1) இந்த அதிகரணத்துக்கும் முந்தின தற்கும்:—முந்தின அதிகரணத்தின் விஷயவாக்கியத் திலுள்ள பிரம்மக்ஷத்திரபதங்கள் மிருத்யுபதத்துடன் சேர்ந்திருப்பதால் அநித்தியவஸ்துக்களைக் கூறுகின் றன என்று சொல்லப்பட்டது. இதுபோல் இந்த அதிகரணத்தின் விஷயவாக்கியத்திலுள்ள பிரம்மசப்த மும் சமீபத்திலிருக்கிற குஹாப்பிரவேசம் முதலிய தால் புத்தியையும் ஜீவனையும் கூறட்டுமென்னும் இர ண்டு அதிகரணங்களுக்கும் திருஷ்டாந்த சங்கதி ஏற் படுகிறது. (3)

(2) இதரசங்கதிகள்:-(a) பாதசங்கதி:— அத்திரு வாக்கியம்போல் இந்த அதிகரணத்தின் வா க்கியமும் ஞேயப்பிரம்மத்தைக்கூறுவதால் பாதசங்க தி முந்தின அதிகரணத்திற்போல் அறியவும்.

पिबन्तौ என்கிற விஷயவாக்கியபதத்தால் இரண்டு சேதனங்கள் என்று ஏற்படுகிறது. சேதனம் ஜீவ னுக்கும் ஈசுவரனுக்கும் சமானமானதால் அது அஸ் பஷ்ட பிரம்மலிங்கம். குஹாப்பிரவேசம் என்கிற ஜீவலிங்கம் ஸ்பஷ்டமாயிருக்கிறது.

அஸ்பஷ்டலிங்கம் ஸ்பஷ்டலிங்கத்தால் மறைபடு கிறபடியால் இந்த அஸ்பஷ்ட பிரம்மலிங்கத்தைக் கூறும் பாதத்தில் இந்த அதிகரணத்தை எடுத்தது யுக்தமே.

இதர சங்கதிகள் முன்போலவே. (4)

V. சந்தேகம்:—இவ்விடத்தில் கூறப்பட்டவர்கள்

(1) புத்தி ஜீவர்களா? அல்லது
(2) ஜீவனும் பரமாத்மாவுமா?

(1) புத்தி ஜீவர்கள் கூறப்பட்டால், புத்தி யைப் பிரதானமாயுடைய இந்திரியங்களின் சமூகமா னதேகத்தைவிட ஜீவன்வேறு என்று சொன்னதாக ஆகிறது. அதுவும் சொல்லவேண்டியதுதான் ஏனெ னின்,

ये यं प्रेते विचिकित्सा मनुष्येऽस्तीत्येकेनायमस्ती चैके ।
एतद्विद्या मनुशिष्यस्त्वयाहं वराणामेषवरस्तृतीयः ॥
(கட-I-1-20)

அர்த்தம்:—மனிதன் இறந்தபிறகு அவன் இருக் கிறான் என்று சிலரும் இல்லை என்று சிலரும் சொல் லுகிறார்கள். இந்த சந்தேகத்தை உம்மால் நான்சிக்ஷிக் கப்பட்டு அறிய நான் இச்சிக்கிறேன். இதுதான் மூன்றுவதுவரம்

என்று நசிகேதசன் கேள்வி கேட்டிருக்கிறான்.

(2) அல்லது ஜீவனையும் பரமாத்மாவை யும் கூறுவதாகச்சொன்னால் அப்போது ஜீவனைவிட வேறான பரமாத்மா கூறப்பட்டதாக ஆகிறது. அது இவ்விடத்தில் சொல்லவேண்டியதுதான். ஏனெனின்,

अन्यत्र धर्मात् अन्यत्राधर्मादन्यत्रास्मात् कृताकृतादन्यत्र
भूताच्च भव्याच्च यत्तत् पश्यसि तद्वद (கட-I-2-14)

அர்த்தம்:— தர்மத்தைவிட வேறாயும், அதர்மத் தைவிட வேறாயும், காரியத்தைவிட வேறாயும், காரண த்தைவிட வேறாயும், பூதபவ்வியங்களைவிட வேறாயும் எதை பார்க்கிறீரோ அதை எனக்குச்சொல்லும்.

என்று நசிகேதசன் கேள்வி கேட்டிருக்கிறான்.

இந்த சந்தேகத்தைக்கேட்ட ஒரு ஆக்ஷேபகா ரன் இந்த இரண்டுபக்ஷங்களும் சம்பவிக்கமாட்டா என்று சொல்லுகிறான். ஏனெனின்

(1) சரீரத்தில் கர்மபலபோகத்தைச் சொல்லியிருக்கிறது. இது சேதனனை ஜீவனுக்கு சம்பவிக்குமேதவிர அசேதனமான புத்திக்குச் சம்பவிக்க மாட்டாது.

(2) மேலும் पिबन्तौ (கர்மபலத்தை அனுபவிக்கிறார்கள்) என்கிற பண்மைப் பிரயோகத்தாலும் இரண்டுபேர்கள் குடிக்கிறதாக சுருதிகூறுகிறது. ஆகையால் புத்தியும் ஜீவனும் கூறப்பட்டிருக்கிறார்கள் என்னும் பக்ஷமும் பொருந்தாது.

ஆகையாலேயே ஜீவபரமாத்ம பக்ஷமும் சம்பவிக்கமாட்டாது. ஏனெனின் சேதனமான பரமாத்மாவினிடத்தில் கர்மபலபோகம் பொருந்தாது. अनश्नन्यो अभिचाकशीति (மு-III-1-1) (மற்றொன்று புஜிக்காமல்பார்த்துக்கொண்டிருக்கிறது என்று மந்திரம் சொல்லுகிறது.

இந்த ஆக்ஷேபம் சரியன்று. ஒருவன் குடையைப்பிடித்துக்கொண்டுபோனாலும், குடைபிடித்துக் கொண்டவர்கள் போகிறார்கள் என்றும் உபசாரமாகச் சொல்லுவதுபோல், ஒருவன் பலத்தை அனுபவித்தாலும், இருவர்கள் அனுபவிக்கிறார்கள் என்று சொல்லப்படலாம்.

அல்லது ஜீவன்தான் பலத்தை அனுபவிக்கிறான் ஈசுவரன் அனுபவிக்கும்படி செய்கிறான். ஆகையால் அனுபவிக்கிறான் என்று சொல்லப்படுகிறான். சமயல் செய்விக்கிறவன் சமயல் செய்கிறான் என்று சொல்லுவது போலும்.

புத்தியையும் ஜீவனையும் கிரகிக்கலாம். ஏனெனின் சாதகத்தையும் கர்த்தாவென்று உபசாரமாகச் சொல்லலாம். கட்டைகள் சமைக்கின்றன என்று சொல்லுவதுபோலும்.

(பானம் செய்கிறவர்கள் இரண்டு பக்ஷிகள் என்றுசொல்லுவோமே எனின்) ஆத்மாவைப்பற்றிச்சொல்லும் பிரகரணத்தில் பானம் செய்கிறவர்களாக வேறு இருவர்களைச் சொல்லக்கூடாது.

ஆகையால் புத்தி ஜீவர்கள் அல்லது ஜீவனும் பரமாத்மாவும் இருக்கவேண்டும் என்பது சந்தேகம்.

VI. இதிலடங்கிய சூத்திரங்கள்:—2 (11—12) இவ்விரண்டும் சித்தாந்த சூத்திரங்கள்:—

1-ல் சேதனஸ்வரூபமான ஜீவஈசுவரர்களுக்கே குஹாப்பிரவேசம் ஏற்படும் என்றும்

2-ல் சுருதியிற்சொல்லிய விசேஷணங்கள் அவர்களைத்தான் பொருந்தும் என்றும் நிரூபிக்கப்படுகிறது.

VII. பூர்வபக்ஷம்:—

இவர்கள் புத்தியும் ஜீவனுமே. ஏனெனின் गुहांप्रविष्टौ என்று குஹையில் பிரவேசித்திருப்பதாகச் சொல்லியிருக்கிறது. சரீரம் குஹையாயிருந்தாலும் சரி, ஹிருதயம் குஹையாயிருந்தாலும் சரி, இரண்டு பக்ஷங்களிலும் புத்தியும் ஜீவனும் குஹையில் பிரவேசித்திருக்கிறதாகச் சொல்லமுடியும். இப்படி அர்த்தம் செய்ய சாத்தியமாக இருக்கும்போது, எங்கும் வியாபகமான பிரம்மத்துக்கு ஒருயிடம் குறிப்பிடப்பட்டதாகச் சொல்லுவது யுக்தமன்று. (8)

மேலும் सुकृतस्य लोके என்பதினால் கர்மபலம் அதிக்கிரமிக்கப்படவில்லை என்று தெரியவருகிறது. பரமாத்மாவே நல்ல கர்மபலத்துக்கும் உட்படுகிறதில்லை, கெட்ட கர்மபலத்துக்கும் உட்படுகிறதில்லை. न कर्मणा वर्धते न कनीयान् கர்மத்தால் அதிகமாகிறதுமில்லை குறைந்துவிடுகிறதுமில்லை என்று சுருதிசொல்லுகிறது. (9)

छाया तपौ என்பதும் சேதனத்தையும் அசேதனத்தையும் கூறுவதில் பொருந்துகின்றன.

ஏனெனின் வெய்யிலும் நிழலும்போலும் புத்தியும் ஜீவனும் பரஸ்பரம் விலக்ஷணமாயிருக்கிறார்கள். (10)

ஆகையால் இவ்விடத்தில் புத்தியையும் ஜீவனையும் தான் கிரகிக்கவேண்டியது. (11)

VIII. சித்தாந்தம்:—

1. இப்படிக்கு பூர்வபக்ஷி சொல்ல.

## गुहांप्रविष्टावात्मानौ हितद्दर्शनात्

என்கிற சூத்திரத்தில் சித்தாந்தம் கூறுகிறார்.

2. பதவுரை.

गुहांप्रविष्टौ குஹையில் பிரவேசித்தவர்கள்.

आत्मानौ ஜீவாத்மாவும் பரமாத்மாவுந் தான்.

हि ஏனெனின்.

तद्दर्शनात् அப்படி பார்க்கப்பட்டிருப்பதால். (13)

3. பொழிப்புரை.

ஹிருதயகுஹையில் பிரவேசித்தவர்கள் ஜீவாத்ம பரமாத்மாக்களே. இவர்கள் சேதனஸ்வரூபம் ஆகை

யால் இவர்கள் ஒரே சுவபாவமுள்ளவர்கள். பிரபஞ்சத்தில் எண்ணிக்கையானது சஜாதீயத்தையே கூறுவதைக் கண்டிருக்கிறோம். (14)

4. பாஷ்யம்.

(1) गुहांप्रविष्टौ ஹிருதய குகையில் பிரவேசித்தவர்கள் விஞ்ஞானாத்மாவும் (ஜீவனும்) பரமாத்மாவும் என்று சொல்லவேண்டும். (15)

ஏனெனின்.

(2) आत्मानौ இவர்களிருவர்களும், சேதனங்கள், சமானசுவபாவமுள்ளவர்கள். உலக வியவஹாரத்திலும் ஒரு எண்ணிக்கையை கேட்டமாத்திரத்தில் சமான ஸ்வபாவமுள்ள விஷயங்களே ஞாபகத்தில் வருகின்றன. இந்த பசுவுக்கு இரண்டாவதைத் தேடவேண்டியது என்று சொன்னவளவில் இரண்டாவது பசுவே தேடத்தக்கது, குதிரை தேடத்தக்கதன்று, மனிதன் அன்று என்று தெரியவருகிறது. இவ்விடத்தில் கர்மபலபோகம் என்கிற அடையாளத்தால் விஞ்ஞானாத்மா (ஜீவன்) நிச்சயிக்கப்பட்டவளவில் இரண்டாவது யார் என்று பார்க்கும்போது சமானஸ்வபாவமுள்ள சேதனனாகிய பரமாத்மாவே காணப்படுகிறான். (16)

ஜீவன் காரகனாய் (கர்த்தாவாய்) இருப்பதாலும் புத்தியும் காரகமாய் (கிரியைக்குச்சாதகமாய்) இருப்பதாலும் இப்படி இருவரும் காரகபாவத்தால் சமான ஸ்வபாவமுள்ளவர்களாயிருப்பதால் இவர்களே இவ்விடத்தில் கூறப்பட்டிருக்கிறார்கள் என்று சொல்லுவது யுக்தமன்று. ஏனெனின் ஜீவனுடைய காரகஸ்வபாவத்தைவிட சேதன ஸ்வபாவம் அந்தரங்கமாயிருக்கிறது. சித்தமான ஸ்வபாவத்தை விட்டுவிட காரணமில்லாதபடியால் சேதனத் தன்மையைத்தான் எடுத்துக்கொள்ளவேண்டும். இது ஜீவனுக்கும் பரமாத்மாவுக்குந்தான் இருக்கிறது. ஆகையால் இவர்களையே கிரகிக்கவேண்டியது. (17)

பரமதகண்டனம்.

(1) 8-க்கு உத்தரம்:—குகையில் இருக்கிறான் என்று சொன்னதினால் பரமாத்மாவை அறியக்கூடாது என்றுசெய்த ஆக்ஷேப விஷயத்தில், குகையிலிருக்கிறான் என்று சொன்னதினாலேயே பரமாத்மாவை அறியவேண்டியது என்று சொல்லுகிறோம். சுருதி ஸ்மிருதிகளில் பரமாத்மா குகையிலிருப்பதாக பலதடவை சொல்லியிருக்கிறது. எப்படியெனின்.

(1) गुहाहितंगह्वरेष्ठं पुराणं (कठ-I-2-12)

(அர்த்தம் புத்தியிலிருக்கிறவன்; அநேக அனர்த்தங்களுடன் கூடின தேகத்திலிருக்கிறான். அனாதி புருஷன்.)

(2) योवेद निहितं गुहायां परमेव्योमन् (तै-II-1)

ஹிருதயாகாசத்திலிருக்கிற புத்தியாகிற குகையிலிருக்கிற பிரம்மத்தை எவன் அறிகிறானோ அவன் சகல காமங்களையும் அடைகிறான்.

(3) आत्मानमन्विच्छ गुहांप्रविष्टं

குகையில்பிரவேசித்திருக்கிற ஆத்மாவை விசாரி.

முதலிய சுருதிகளால் பரமாத்மா குகையிலிருக்கிறதாகத் தெரியவருகிறது. பிரம்மம் எங்கும் வியாபித்திருந்தாலும் அதைச் செவ்வையாய் அறியும்பொருட்டு அதற்குஒரு இடத்தைக் குறிப்பிடுவதில் விரோதமில்லை என்று முன்னமேயே சொல்லியேயிருக்கிறோம்.

ஜ 4 (எங்கும் வியாபகமான பிரம்மத்துக்காவது, பிரம்ம ரூபமான ஜீவனுக்காவது குகைப்பிரவேசம் எப்படிச் சொல்லலாமெனின், சரீரத்துக்குள்ளிருக்கிற அந்தக்கரணத்தை ஜீவன் உபாதியாக உடைத்தாயிருப்பதால் ஜீவனுக்கும், அப்படிப்பட்ட ஜீவனுக்கு நியந்தாவாக இருப்பதால் பிரம்மத்துக்கும் குஹாப்பிரவேசம் சொல்லலாம்.) (18)

(2) 9-க்கு உத்தரம்:—சுகிருதலோகத்தில் இருக்கிறதாகச் சொன்னதானது சத்திரி நியாயப்படி ஒருவன் விஷயத்தில் ஏற்பட்டாலும் இரண்டுபேர்கள் விஷயத்திலும் பொருந்துவதில் விரோதமில்லை.

(ஜ வாஸ்தவத்தில் ஜீவனுடைய போகத்தின் பொருட்டு சரீரம் ஏற்பட்டாலும் ஜீவனை பிரம்மம் நியமனம் செய்கிறதினால் பிரம்மமும் சரீரத்திலிருக்கிறதாகச் சொல்லலாம்.) (19)

(3) 10-க்கு உத்தரம்:—வெய்யில் நிழல் போல் ஜீவனும் பிரம்மமும் இருக்கிறார்கள் என்று சொன்னதிலும் விரோதமில்லை. ஏனெனின் சம்சாரி அசம்சாரி என்கிற ரூபமாய் இருவர்களும் விலக்ஷணங்களாயிருக்கிறார்கள். சம்சாரம் அவித்தையால் சித்திக்கிறது. அசம்சாரம் பாரமார்த்திகம். இக்காரணத்தால் அவர்கள் வெய்யில் நிழல் போலிருக்கிறார்கள் என்று சொல்லப்பட்டதே தவிர (ஜ ஜடமாயும் சேதனமாயுமிருப்பதால் அப்படியிருக்கிறார்கள் என்று சொல்லப்படவில்லை.) (20)

(4) ஈ 6-க்கு உத்தரம்:-(இருவர்களும் சேதனர்மானதால், ஜீவன் போக்தாவாயிருக்கிறான் என்றும் ஈசுவரன் போஜயிதா அனுபவிக்கும்படிச் செய்கிறவனாய் இருக்கிறான் என்றும் சொல்லலாம் என்று சந்தேகத்துக்குக் காரணத்தைச் சொன்னவிடத்தில் சொல்லியிருக்கிறதே. அப்படிச்சொல்லுவானேன், இருவர்களும் போக்தாவா யிருக்கட்டுமே அல்லது ஈசுவரன் போக்தாவாயும் ஜீவன் போஜயிதாவாயு மிருக்கட்டுமே எனின்

ஜீவன் அவித்தைமுதலிய தோஷங்களுக்குட்பட்டிருப்பதாலும், ஈசுவரன் உட்படாததினாலும் ஜீவனைமட்டும்தான் போக்தாஎன்று சொல்லவேண்டியது.) (21)

(5) தீர்மானம்:-ஆகையால் குஹையில் பிரவேசித்தவர்கள் என்பதால் விஞ்ஞானாத்மாவையும் பரமாத்மாவையும் அறியவேண்டியது. (22)

X. 1-2-12-வது சூத்திரம்.

## विशेषणाच्च ।१२।

2. முந்தின சூத்திரத்துக்கும் இதற்கும் சம்பந்தம்:— (24)

விஞ்ஞானாத்மா பரமாத்மாக்களை அறியவேண்டியதற்கு வேறு ஒருகாரணமும் சொல்லப்படுகிறது.

3. பதவுரை:—

विशेषणात् च விசேஷணத்தாலும். (25)

4. பொழிப்புரை:—

விசேஷகுணங்களைச்சொல்லி யிருப்பதாலும் ஜீவனையும் பரமாத்மாவையும் அறியவேண்டியது. (26)

5. பாஷ்யம்:—

(1) சுருதியிற்சொல்லிய விசேஷணம் ஜீவாத்ம பரமாத்மாக்களைத்தான் பொருந்தும். எப்படியெனின்

(1) आत्मानं रथिनं विद्धि शरीरं रथमेवतु

முதலிய மேல்கிரந்தத்தில் இரததிருஷ்டாந்தத்தில் ஜீவாத்மா சாரதி என்றும், சம்சாரமோக்ஷங்களை அடைகிறவனென்றும் சொல்லியிருக்கிறது. (இது ஜீவலிங்கம்.) (27)

(2) सोऽध्वनः परमाप्नोति तद्विष्णोः परमं पदम्
(கட-1-3-9)

என்கிற சுருதியானது ஜீவன் சம்சாரமார்க்கத்தின் கரையை அடைகிறான். அது பரமாத்மாவின் பதம் அதாவது ஸ்தானம் என்று சொல்லுவதினால் பரமாத்மாவை அடையத்தகுந்த ஸ்தானமாகச்சொல்லியிருக்கிறது. (இது பிரம்மலிங்கம்). (28)

(3) அப்படியே

तं दुर्दर्शं गूढमनुप्रविष्टं गुहाहितं गह्वरेष्ठं पुराणम् ।
अध्यात्मयोगाधिगमेन देवं मत्वा धीरो हर्षशोकौ जहाति ॥
(கட 1-2-12)

(கஷ்டத்தின்பேரில் பார்க்கக்கூடியவராயும், (ஏனெனின்) மாயையால் மூடப்பட்டவராயும், பிறகு ஹிருதய குஹையிலிருக்கிறவராயும், அதின்மூலமாக அனர்த்தங்களில் அகப்பட்டவராயும், புராதனராயும், தேஜோரூபமாயுமிருக்கிற பரமாத்மாவை அத்தியாத்மயோகத்தினால் (ஆத்மதியானத்தினால் அறிந்து, ஞானி சந்தோஷத்தையும், துக்கத்தையும் விட்டுவிடுகிறான்.)

என்கிற முந்தின கிரந்தத்திலும் ஜீவன் மனனம் செய்கிறவனாயும் பிரம்மம் மனனம் செய்யத்தக்கதாயும் சொல்லியிருப்பதால் இருவர்களுக்கும் மந்திருமந்தவ்யவிசேஷணங்கள் ஏற்பட்டிருக்கின்றன. (29)

(4) பிரகரணமும் பரமாத்மாவைப்பற்றியே ब्रह्मविदो वदन्ति அதாவது பிரம்மஞானிகள் சொல்லுகிறார்கள் என்பதினால் சொல்லுகிறவர்கள் பிரம்மத்தை அறிந்தவர்கள் என்று தெரியவருகிறது. இந்த வசனம் பிரகிருதத்தில் பிரம்மத்தை ஒப்புக்கொண்டால்தான் பொருந்துகிறது. (இல்லாவிடின் அதாவது ரிதபானம் புத்தியையும் ஜீவனையும் கூறுகிறதாயிருந்தால் பிரம்மவாதிகள் சொல்லுகிறார்கள் என்று சொல்லவேண்டியதில்லை.)

ஆகையால் இவ்விடத்தில் ஜீவபரமாத்மாக்களை அறியவேண்டியது. (30)

இந்த யுக்தியே द्वासुपर्णा सयुजासखाया (மு-III-1-1) முதலிய இடங்களிலும் பொருந்துகின்றது. அவ்விடத்திலும் ஆத்மாவைப்பற்றி பிரஸ்தாபம் ஏற்பட்டிருப்பதால் சாதாரண பக்ஷிகளை அறியக்கூடாது.

तयोरन्यः पिप्पलं स्वाद्वत्ति

(இவர்களில் ஒருவன் நல்லபழத்தை சாப்பிடுகிறான்) என்கிற சுருதியானது சாப்பிடுகிறான் என்கிற லிங்கத்தால் ஜீவாத்மாவைக்கூறுகிறது.

अनश्नन्नन्यो अभिचाकशीति

(மற்றொருவன் சாப்பிடாமல் பார்த்துக்கொண்டிருக்கிறான்) என்கிற சுருதியானது (1) சாப்பிடாமை 2) சேதனம் என்கிற இரண்டு லிங்கங்களால் பரமாத்மாவைக் கூறுகிறது.

समाने वृक्षे पुरुषो निमग्नोऽनीशया शोचति मुह्यमानः ।
जुष्टं यदा पश्यत्यन्यमीशमस्य महिमानमिति वीतशोकः ॥

என்கிற அடுத்த மந்திரமும் இவர்களையே பார்க்கிறவனையும் பார்க்கப்பட்டதாயும் கூறுகின்றது.

ஷ சுருதியின் அர்த்தம்:—சமானமான விருக்ஷத்தில் (ஜலத்தில்போல்) தான் ஈசுவரனல்ல என்கிற ஞானத்தால் முழுகியிருக்கிற ஜீவன் தான் மனிதன் என்கிற பிராந்தியால் துக்கிக்கிறான். தியானாதிகளால் ஈசுவரனை கேவலம் சின்மாத்திரம் என்றும் ரூபாதிகளற்றவரென்றும் தான்தான் என்றும் எப்போது பார்க்கிறானோ அப்போது அவருடைய ஸ்வரூபத்தையே அடைகிறான், ஆதினால் துக்கமற்றவனாகிறான். (31)

द्वासुपर्णा என்கிற சுருதிக்கு சிலர் வேறுவிதமாக அர்த்தம் செய்கிறார்கள். அதாவது இந்த ரிக்கானது இந்த அதிகரணத்தின் சித்தாந்தத்தை (அதாவது पिबन्तौ என்பதினால் கூறப்பட்டவர்கள் ஜீவபரமாத்மாக்கள் என்கிற தீர்மானத்தை) அடையவில்லை. ஏனெனின் பைங்கிரகஸ்ய பிராமணமானது இந்த ரிக்குக்கு வேறுவிதமாக அர்த்தத்தைச் சொல்லுகிறது.

तयोरन्यः पिप्पलं स्वाद्वत्ति

என்பதில் பழத்தைச் சாப்பிடுகிறது சத்வம்.

अनश्नन्नन्यो अभिचाकशीति

என்பதில் சாப்பிடாமல் பார்த்துக்கொண்டிருக்கிறவன் க்ஷேத்திரஞ்ஞன் (ஜீவன்)

ஆகவே இருவர்களும் சத்வமும் க்ஷேத்திரஞ்ஞனுமாம். சத்வசப்தம் ஜீவனையும், க்ஷேத்திரஞ்ஞசப்தம் பரமாத்மாவையும் கூறுவதாகச் சொல்லுவது யுக்தமன்று. ஏனெனின்,

तदेतत् सत्वं येन स्वप्नं पश्यत्यथ योऽयं शारीर उपद्रष्टा स क्षेत्रज्ञस्तावेतौ सत्व क्षेत्रज्ञौ

என்கிற சுருதியானது எதினால் ஸ்வப்னம் பார்க்கப்படுகிறதோ அது சத்வம் என்றும், எவன் பார்க்கிறானோ அவன் க்ஷேத்திரஞ்ஞன் என்றும் சொல்லுகிறதினால் சத்வ க்ஷேத்திரஞ்ஞ சப்தங்களுக்கு அந்தக்கரணம் ஜீவன் என்கிற அர்த்தமே பிரசித்தம்.

இந்த அதிகரணத்தின் பூர்வபக்ஷமும் பொருந்தவில்லை. ஏனெனின் இந்த சுருதியானது கர்த்திருத்வபோக்திருத்வாதி சம்சார தர்மத்துடன் கூடின ஜீவனைக்கூறவில்லை, ஆனால் சர்வசம்சார தர்மங்களற்றதாயும் பிரம்ம ஸ்வபாவமுள்ளதாயும், சைதன்னியமாத்திர ஸ்வரூபமாயுமிருக்கிறதைக் கூறுகிறதென்பது

अनश्नन्नन्यो अभिचाकशीतीत्यनश्नन्नन्योऽभिपश्यतिज्ञः

என்கிற வசனத்தால் தெரியவருகிறது.

तत्वमसि क्षेत्रज्ञंचापिमां विद्धि

என்கிற சுருதிஸ்மிருதிகளாலும் இந்த அர்த்தம் விளங்குகிறது. இப்படி மந்திரத்துக்கு அர்த்தம் செய்தால்தான்

तावेतौ सत्व क्षेत्रज्ञौ
नहवाएवं विदिकिञ्चन रज आध्वंसते

இவர்கள் சத்வமும் க்ஷேத்திரஞ்ஞனுமாம். இப்படி அறிந்தவனுக்கு அசுத்தம் அதாவது அவித்தை கொஞ்சங்கூட ஒட்டுகிறதில்லை

என்கிற முடிவான சுருதிகள் பொருந்தும். ஜீவன்புத்தியைவிட வேறு என்றுசொல்லி உபசம்ஹாரம் செய்வது யுக்தமன்று. ஏனெனின் பேதஞ்ஞானம் பிராந்திரூபமானதால் பலத்தைக்கொடுக்கமாட்டாது என்பது கருத்து.) (32)

இந்த பக்ஷத்தில் சத்வமானது பழத்தைச் சாப்பிடுகிறதென்று எப்படிச் சொல்லலாம். சத்வமென்பது அசேதனமாயிற்றே எனின்

இந்த சுருதியானது சத்வம்போக்தா என்று சொல்லுவதற்காக ஏற்படவில்லை; பின்னையோவெனின் சேதனமான க்ஷேத்திரஞ்ஞன் அபோக்தாவென்றும் பிரம்மஸ்வபாவமுள்ளவனென்றும் சொல்லும் பொருட்டு ஏற்பட்டது. அதற்காக (ஜீவன் பிரம்மம் என்று அறிவதற்காக) சுகாதி விகாரத்துடன்கூடிய சத்வத்தினிடத்தில்தான் போக்தா என்னும் தன்மையை ஆரோபிக்கவேண்டியது. இந்த கருத்திருத்வமும் போக்திருத்வமும் சத்வத்தினுடையவும் க்ஷேத்திரஞ்ஞனுடையவும் ஸ்வபாவத்தை அறியாமையாலேயே கற்பிக்கப்படுகிறது. வாஸ்தவத்தில் இவை இருவர்களிடத்திலுமில்லை. ஏனெனின் சத்வம் அசே

தனம், க்ஷேத்திரஞ்ஞன் விகாரத்தை அடையமாட்டான். சத்வம் அவித்தியா கற்பிதமானதால் அதின் விஷயத்தில் சுத்தமாக பொருந்தாது.

यत्रवान्य दिवस्यात्तत्रान्योऽन्यत् पश्येत् (बृ–IV-5-15)

எவ்விடத்தில் ஒருவஸ்து வேறு வஸ்துபோல் ஆய்விடுகிறதோ, அவ்விடத்தில் வேறு வஸ்துவைப் பார்க்கிறான்

முதலிய சுருதிகளால் ஸ்வப்பனத்தில் பார்க்கப்பட்ட யானை முதலியவைகள்போல், கர்த்திருத்துவாதி வியவஹாரமும் அவித்தியா விஷயமென்றே தெரியவருகிறது.

यत्रत्वस्य सर्वमात्मै वमूत्

तत् केन कंपश्येत्

எவ்விடத்தில் எல்லாம் ஆத்மாவாகவே ஆகிறதோ, அப்போது எதினால் எதை பார்ப்பான்

முதலிய சுருதிகள் ஞானியானவனுக்கு கருத்திருத்வாதி வியஹாரம் இல்லை என்று சொல்லுகிறது. (33)

XI. பூர்வபக்ஷபலன்:—புத்தி விலக்ஷண ஆத்ம ஞானம்.

சித்தாந்தபலன்:—ஜீவவிலக்ஷண பிரம்ம ஞானம். (34)

XII. வியாசாதிகரணமாலைப்படி

அத்வைதச் சுருக்கம்.

1. சுலோகங்கள்:—

गुहां प्रविष्टौ धीजौवौ जीवेशौ वाहृदिस्थितैः ।

छायातपाभ्यां दृष्टान्ताद्धीजीवौ स्तोविलक्षणौ ॥

पिबन्ताविति चैतन्यं द्वयोजीर्वेश्वरौ ततः ।

हृत्स्थानमुपलब्ध्यै स्याद्वै लक्षण्य मुपाधितः ॥

2. விஷயம்:

கட்வல்லியின் மூன்றாவது வல்லியில்

ऋतं पिबन्तौ सुकृतस्य लोके गुहांप्रविष्टौ परमे परार्धे ।

छायातपौ ब्रह्मविदो वदन्ति पञ्चाग्नयो येच त्रिणाचिकेताः ॥

என்று சொல்லியிருக்கிறது.

அர்த்தம்:—நல்லகர்மத்தின் பலனைக்குடிக்கிறதாகு பிராமணாதி சரீரமுண்டோ அது ... அறியஸ்தானம் அது சிரேஷ்டமான ... ஞானதிகாரத்துக்குக் காரணமான சமதமாதிகளுடன் கூடியிருக்கிறது, அப்படிப்பட்ட சரீரத்துக்கு மத்தியில் இருப்பது ஹிருதய புண்டரீகம், அதை இருவர்கள் பிரவேசித்திருக்கிறார்கள். அல்லது, ரிதசப்தத்தால் கூறப்பட்ட கர்மபலத்தை அனுபவிக்கிற, நிழல் வெய்யில்போல் பரஸ்பரம் விலக்ஷணமானவர்களை வேதஞ்ஞானிகள் சொல்லுகிறார்கள் (36)

3. சந்தேகம்:—அவ்விரண்டும் புத்திஜீவர்களா அல்லது ஜீவனும் ஈசுவரனுமா? என்பது சந்தேகம் (37)

4. பூர்வபக்ஷம்:-புத்திஜீவர்களே, பரிச்சின்னங்களான அவர்களுக்கே குஹாப்பிரவேசம் ஏற்படும். மேலும் ஜடம், அஜடம், இப்படியிருப்பதால் நிழல் வெய்யில்போல் விலக்ஷணமாயும் அவர்கள் இருக்கிறார்கள். (38)

5 சித்தாந்தம்:-पिबन्तौ என்கிற பண்மைப்பிரயோகத்தினால் இரண்டும் சேதனம் என்று தெரியவருகிறது. ஆகையால் இவ்விடத்தில் சேதனங்களான ஜீவ ஈசுவரர்களை அறியவேண்டியது. ஈசுவரன் சர்வவியாபியானாலும், அவரை அறியும்பொருட்டு ஹிருதயத்திலிருப்பதாக கூறப்படுகிறார். இருவரும் சேதன ரூபமாயிருந்தாலும் ஒருவனுக்கு உபாதியிருப்பதாலும் மற்றொருவனுக்கு உபாதியில்லாதபடியாலும் வைலக்ஷணியம ஏற்படுகிறது. (39)

XIV. விசிஷ்டாதுவைதப்படி

I-2-3வது அதிகரணத்தின் சுருக்கம்.

ऋतंपिबन्तौ என்கிற சுருதியில் கர்மபலத்தை அனுபவிக்கிறவர்கள் இரண்டு பெயர்கள் என்று சொல்லியிருக்கிறது. கர்மபலபோகம் பரமாத்மாவுக்கு ஏற்படமாட்டாது. ஆகையால் ஜீவனும் அந்தக்கரணமும் போக்தாக்கள் என்று சொல்லவேண்டும். ஆகையால் அத்தா ஜீவனாகத்தானிருக்கவேண்டும் என்கிற ஆக்ஷேபத்துக்குச் சமாதானம் சொல்லுகிறார். இந்த அதிகரணமும் இரண்டாகவே ஏற்பட்டிருக்கிறது. (40)

गुहांप्रविष्टौ ஹிருதயகுஹையில் பிரவேசித்தவர்கள்

आत्मानौ ஜீவனுடன்கூடின பரமாத்மா இது எப்படி தெரியவருகிறதெனின்.



தத்தனாத் அவர்கள்தான் குஹையில் பிரவே சித்திருக்கிறார்கள் என்பது இந்த பிரகரணத்தில் I-2-12, II-1-7 இவைகளால் தெரியவருகிறது. (41)

I-2-2 ல் 4 (12) வது சூத்திரம்.

विशेषणात् च இந்த பிரகரணத்தில் உபக்கிர மம்முதல் உபசம்ஹாரம்வரையில் ஜீவனையும் பரமாத் மாவையும் உபாசகனையும் உபாசியனையும் பிரித்துச் சொல்லியிருக்கிறது. (42)

(I-2-22, I-3-9 (பார்க்க)

XIV. துவைதப்படி

I-2-3-வது அதிகரணத்தின் சுருக்கம்.

1. இதின்கருத்து:—ஆத்மா அந்தராத்மாவா யிருந்து போக்தாவாயிருக்கிறவர் பரமாத்மாவே. (43)

2. இதிலடங்கியசூத்திரங்கள்:-2 (11-12) (44)

3. இதின் விஷயவாக்கியம்:—

ऋतं पिबन्तौ सुकृतस्यलोके गुहांप्रविष्टौ

என்கிற கடவல்லி வாக்கியம். (45)

4. சங்கதி:—முன்சொன்ன கர்த்தாவை பற்றி யும், கர்மபலபோக்தாவைபற்றியும் விசாரிப்பதால், அல்லது பூர்வபக்ஷியின் ஆக்ஷேபத்தால் சங்கதி ஏற்ப டுகிறது. (46)

5. சந்தேகம்:— விஷயவாக்கியத்திலுள்ள ऋतंपिबन्तौ (கர்மபலபோக்தர்கள்)

(1) ஜீவ ஈசுவரர்களா? அல்லது

(2) ஈசுவரனுடைய ரூபவிசேஷங்களா?

6. பூர்வபக்ஷம்:—அவர்கள் ஜீவனும் ஈசுவர னும்தான். ஏனெனின்

पिबन्तौ என்னும் பன்மை பிரயோகம் ஏற்பட் டிருக்கிறது. ஒருவன் விஷயத்தில் இது பொருந்தமாட் டாது. (48)

7. சித்தாந்தம்:— गुहांप्रविष्टौ என்று சொல் லியிருக்கிறது. ஒரே ஹரியானவர் ஆத்மாவாயும் அந்தராத்மாவாயும் இருக்கிறார் என்று ஸ்மிருதிசொ ல்லுகிறது. ஆகையால் ஒன்றுக்கே இரண்டுரூபங் களிருக்கக்கூடும். சுபபலத்தையே எப்போதும் அவ ர்புஜிக்கிறார். அசுபபலத்தை புஜிக்கிறதில்லை. ஆகை யால் ऋतंपिबन्तौ என்பது ஈசுவரனுடைய ரூபவிசே ஷங்களையே கூறுகிறது. (49)

8. சூத்திரார்த்தம்:—அ-கை:-இந்த அதிகரண த்தில் கர்மபலபோகலிங்கம் பிரம்மத்தினிடத்தில் பொ ருந்துகிறது என்பதாய் சமன்வயம் ஏற்படுகிறது. (50)

गुहां—ऋतंपिबन्तौ என்கிற சுருதியில் சொல் லியிருக்கிற குஹையில்

प्रविष्टौ நல்லகர்மத்தின் பலத்தை புஜிக்கிற வர்கள் விஷ்ணுரூபங்கள்தான்

हि ஏனெனின்

तद्दर्शनात् விஷ்ணு இரண்டுரூபங்களுடன் ஹிருதயத்திலிருக்கிறார் என்பது சுருதியிற் தெரிய வருகிறது. (50)

I-2-3 ல் 2 (12)

9. அ-கை:—அடியிற்கண்ட காரணத்தாலும் முன் சொன்னதையே சொல்லுகிறார்.

च மேலும்

विशेषणात् – यःसेतुरीजानानां என்கிற சுருதி யில் புஜிக்கிற இருவர்களுக்கு ब्रह्म என்பதாய் ஒருமை விசேஷணம் கொடுக்கப்பட்டிருக்கிறது.

ஆகையால் அவ்விருவர்களும் விஷ்ணுவே. (51)

பூர்வபக்ஷபலன்:—முன்சொன்ன சர்வஅத்தா என்பதின் ஆக்ஷேபம்.

சித்தாந்தபலன்:—சமாதானமே. (52)

I-2-3-வது அதிகரணம்

முற்றிற்று.

---

## I—2—4-வது அதிகரணத்தின்

### அனுக்கிரமணிகை.

## I—2—4-வது அதிகரணம்.

I. இதின் பெயர்:—அந்தராதிகரண மென்பதாம். (1)

II. இதின் கருத்து:—கண்ணில் காணப்படும் புருஷன் பிரம்மமென்பதாம். (2)

III. விஷயவாக்கியம்.

य एषोऽक्षिणि पुरुषो दृश्यते एष आत्मेतिहोवा चैतदमृतमभय मेतद् ब्रह्मेति तद्यद्यप्यस्मिन सर्पिर्वोदकंवासिञ्चतिवर्त्मनी एव गच्छति (छा-IV-15-1)

சாந்தோக்கியம் நான்காவது அத்தியாயத்தில் உபகோசல வித்தையில் உபகோசலன் என்கிற சிஷ்யனுக்கு சத்தியாகாமர் என்கிற குருவானவர் சொன்னதாவது:-கண்ணில் காணப்படுகிறபுருஷன் ஆத்மா இவன் மரணமற்றவன், பயமற்றவன், பிரம்மம். அதில் நெய்யையாவது ஜலத்தையாவது விட்டாலும், அது கங்குகளில் ஓடிப்போகிறது.

रा (கண்ணானது நெய் ஜலம் இவைகளுடன் சம்பந்தப்படாததுபோல், பிரம்மமும் ஒன்றுடனும் சம்பந்தப்படாமையால் கண் பிரம்மத்துக்குத்தகுந்த ஸ்தானமாக வர்ணிக்கப்படுகிறது.)

IV. சங்கதி:—

रा (1) முந்தின அதிகரணத்துக்கும் இதற்கும்:-முந்தின அதிகரணத்தில் पिबन्तौ என்கிற முதலில் கூறிய சேதனத்வத்தை அனுசரித்து கடைசியில்வரும் குஹாப்பிரவேசாதிகள் சேதனபரமாக அர்த்தம் செய்யப்பட்டன. இதுபோல் இந்த அதிகரணத்திலும் இனிவரும் விஷயவாக்கியத்திலுள்ள दृश्यते என்கிறதினால் ஏற்படும் கண்ணுக்கு விஷயமாகும் தன்மையை அனுசரித்து பிரதிபிம்பத்தினிடத்தில் அமிருதத்வம் முதலியவை தியானத்தின்பொருட்டு ஏற்பட்டிருக்கின்றன என்று பூர்வபக்ஷி சொல்ல, திருஷ்டாந்த சங்கதி ஏற்படுகிறது. (3)

(2) பாதசங்கதி:—இந்தப்பாதம் அஸ்பஷ்ட பிரம்மலிங்க வாக்கியத்தைக் கூறுகிறது. இந்த அதிகரணமும் அஸ்பஷ்ட பிரம்மலிங்கவாக்கியத்தைக் கூறுகிறது, எப்படியெனின்:- இனிவரும் விஷயவாக்கியத்தில் முதலில் கண்ணில் புருஷன் காணப்படுகிறான் என்று சொல்லியிருக்கிறது. இப்படி காணப்படுவது பிரதிபிம்பம். இதுவே ஆத்மா, அமிருதம், அபயம், பிரம்மம் என்று சொல்லப்பட்டிருக்கிறது. முதற்கூறிய பிரதிபிம்ப லிங்கமானது பின்வருகிற பிரம்மலிங்கத்தை மறைப்பதால் இந்தப்பாதத்தில் இந்த அதிகரணத்தை எடுத்தது யுக்தமே. (4)

(3) இதர சங்கதிகள்:-விஷயவாக்கிய சுருதி சவிசேஷபிரம்மத்தில் தாற்பரியப்படுவதால் இதர சங்கதிகளை முன்போலவே அறியவும். (6)

V. சந்தேகம்:—

1. இந்த வாக்கியத்தால் கூறப்படுவது

(1) கண்ணில் காணப்படும் பிரதிபிம்பம் புருஷனா.

(2) ஜீவனா.

(3) இந்திரியத்தின் அதிஷ்டாதாவான தேவதையா.

(4) அல்லது ஈசுவரனா.

2. சந்தேகபீஜம்:—

रा (பிரத்தியக்ஷப் பார்வையாலும் சாஸ்திரீயப் பார்வையாலும் அதாவது திபானுதிகளாலும் இந்த சந்தேகம் ஏற்படுகிறது.) (7)

ब 3. முந்தின முதலாவது பாதத்தில் 7-வது அதிகரணத்தில் य एषोऽन्तरक्षिणि पुरुषो दृश्यते என்கிற விஷயவாக்கியத்தை எடுத்துக்கொண்டு இந்த அக்ஷிபுருஷன் பரமேசுவரன்தான் என்று சித்தாந்தம் செய்யப்பட்டிருக்கிறதே. இதே வாக்கியத்தை மறுபடியும் இவ்விடத்தில் எடுத்துக்கொண்டு அக்ஷிபுருஷன் பரமேசுவரனே என்று சொல்லவேண்டிய காரணமென்ன?

முதலிற்கூறிய அக்ஷிபுருஷவாக்கியம் சாந்தோக்கியத்தில் முதலாவது அத்தியாயத்தில் (I-6-7) ஏற்பட்டிருக்கிறது. அவ்விடத்திலுள்ள வாக்கியங்களால் சந்தேகிக்கக்கூடியது ஜீவனா, பரமேசுவரனா, என்பதுமட்டும்தான். வேறு சந்தேகத்துக்கு இடமில்லை.

இந்த அதிகரணத்திற் கூறப்பட்ட அக்ஷிபுருஷவாக்கியம் 4 வது அத்தியாயத்தில் (IV-15-5) ஏற்பட்டிருக்கிறது. இந்த அத்தியாயத்திலுள்ள வாக்கியங்களால் அக்ஷிபுருஷன் ஜீவனா, பரமேசுவரனா தேவதாவிசேஷமா அல்லது பிரதிபிம்பமா என்பதாய் அதிகமாக சந்தேகிக்கக்கூடியதாக இருக்கிறது. ஆகையால் இந்த அதிகரணத்தில் இந்த அக்ஷிபுருஷனைப் பற்றியே மறுபடியும் விசாரிக்கும்படி நேரிட்டது. (8)

IV. இதிலடங்கிய சூத்திரங்கள் 5 (13-14-15-16 17) இவைகளில் 13—16-ல் சித்தாந்தமும்

17-ல் பூர்வபக்ஷ நிராகரணமும் கூறப்படுகின்றன. மேலும்

13-ல் குணவிசேஷங்கள் பிரம்மத்துக்குத் தான் பொருந்துமென்றும்.

14-ல் ஸ்தானவிசேஷம் பொருந்துமென்றும்

15-ல் விஷயவாக்கியமே பிரப்மபரமென்றும்

16-ல் லிங்கத்தாலும் பிரம்மம்தான் ஏற்படுகிறதென்றும்

17-ல் பூர்வபக்ஷ நிராகரணமும் கூறப்படுகின்றன. (9)

VII. பூர்வபக்ஷங்களில் மூன்றில்:—

(1) முதலாவது:—இந்த வாக்கியத்தால் கூறப்படுவது புருஷனுடைய பிரதிபிம்பம், ஏனெனின் (1) அது பிரசித்தமாகக் காணப்படுகிறது.

மேலும்

य एषोऽक्षिणि पुरुषो दृश्यते

என்னும் சுருதியானது பிரசித்தம்போல் உபதேசிக்கிறது. (10)

(2) இரண்டாவது:—இப்படி காணப்படுவதானது விஞ்ஞானாத்மா ஜீவன் என்று கூறுவதும் யுக்தம். ஏனெனின் அவன் கண்ணால் ரூபத்தைப்பார்க்கிறவனாய் கண்ணிலிருக்கிறான். (புருஷ பிரதிபிம்பமும் ஜீவனும் இருவர்களும் கண்ணிலிருந்து கண்ணால் பார்க்கப்பட்டால் இரண்டு பூர்வபக்ஷங்களுக்கும் பேதமென்னவெனின், விஷயவாக்கியத்திலுள்ள) ஆத்மசப்தம் இந்த (இரண்டாவது) பக்ஷத்தில் அனுகூலமாயிருக்கிறது. (11)

(3) மூன்றாவது:—

रश्मिभिरेषोऽस्मिन् प्रतिष्ठितः

என்கிற (V-5-2) பிருஹதாரணியக சுருதியில் ஆதித்திய புருஷன் அக்ஷிபுருஷனிடத்தில் தன்னுடைய கிரணங்களோடு இருக்கிறான் என்று சொல்லியபடி கண்ணில் காணப்படுகிறவன் கண்ணுக்கு அனுக்கிரகம் செய்கிற ஆதித்திய புருஷனாக இருக்கலாம். அமிருதத்வம் முதலியனவைகளும் தேவதாத்மாவினிடத்திலும் எப்படியாவது பொருந்தும். (எப்படியாவது என்றால் பிரளயம் வரையில் தேவதைகள் மரணமற்றவர்கள் என்று சொல்லலாம்.) (12)

(4) இந்த அக்ஷிபுருஷன் ஈசுவரன் என்று சொல்லக்கூடாது. ஏனெனின் ஸ்தானவிசேஷம் கூறப்பட்டிருக்கிறது. அதாவது கண்ணிலிருக்கிறதாக சொல்லப்பட்டிருக்கிறது. (மேலும் பார்க்கப்படுவதாக சொல்லப்பட்டிருக்கிறது: இவ்விரண்டும் பரமாத்மாவினிடத்தில் பொருந்தா. (13)

(5) एतद्ब्रह्मेति என்று சொல்லியிருப்பதால் பிரம்மம்தான் கூறப்பட்டிருப்பதாகச் சொல்லக்கூடாது. ஏனெனின் मनोब्रह्मेति என்கிற இடத்தில் மனதே பிரம்மம் என்று எப்படி அர்த்தம் ஏற்படவில்லையோ அப்படி एतद्ब्रह्मेति என்கிற வாக்கியத்திலும் இதி பதம் கடைசியில் வருவதால் பிரம்மம் கூறப்படவில்லை. (வி:- ஆகையால் பிரதிபிம்பம், ஜீவன், தேவதை இவர்களுக்குள் ஏதாவது கூறப்பட்டிருக்கட்டும். ஈசுவரன் ஒருக்காலத்திலும் கூறப்படவில்லை.

VIII. சித்தாந்தம்.

1. இப்படி பூர்வபக்ஷி சொல்ல

अन्तरउपपत्तेः ।१३।

முதலிய சூத்திரங்களால் வியாசர் சித்தாந்தத்தைக் கூறுகிறார். (15)

2. பதஉரை:— अन्तर उपपत्तेः

अन्तरः உள்ளே இருக்கிற புருஷன்.

उपपत्तेः உபபத்தியிருப்பதினால் (16)

3. பொழிப்புரை.

பிரம்மஸ்வபாவத்துக்கும் அக்ஷிபுருஷனுடைய குணங்களுக்கும் பொருத்தமிருப்பதால் கண்ணிலிருக்கிற புருஷன் பிரம்மம்தான். (17)

4. பாஷ்யம்.—

1. अन्तरः கண்ணுக்குள்ளிருக்கும் புருஷன் பரமேசுவரன் என்று உபதேசம் பண்ணப்பட்டதாக தெரியவருகிறது. ஏனெனின் (18)

2. उपपत्तेः இவ்விடத்தில் உபதேசிக்கப்பட்ட குணசமூகம் பரமேசுவரனிடத்தில் பொருந்துகிறது. (எப்படி யெனின்)

(1) स आत्मा तत्वमसि (அது ஆத்மா, அது நீ) என்கிற சுருதியிற் சொல்லியபடி ஆத்மா என்பது பரமேசுவரனிடத்தில் முக்கியமாய் பொருந்தும்.

(2) अमृतत्वं अभयत्वं (மரணமற்றதன்மை, பயமற்றதன்மை) இவ்விரண்டும் பிரம்மத்துக்கே சுருதிகளில் பலதடவை கூறப்பட்டிருக்கின்றன. (19)

(3) அப்படியே இந்த அக்ஷிஸ்தானமும் பரமேசுவரனுக்கு ஒத்திருக்கிறது. अपहतपाप्मादि

சுருதிகளால் எப்படி பரமேசுவரன் சகல தோஷங்களினின்றும் விலகினவரோ, அப்படி கண்ணும் யாதொரு சம்பந்தமுமில்லாதது.

சுருதிப்பிரமாணம்:—

तद्यद्यप्यस्मिन् सर्पिर्वोदकंवासिञ्चति वर्त्मनी एव गच्छति (छा-IV-15-1)

அதாவது கண்ணில் நெய்யையாவது ஜலத்தையாவது விட்டாலும் அது கங்குகளில் சென்றுவிடுகிறது.

(4) சாந்தோக்கியம் IV-15-2, 3, 4, ல் சொல்லியிருக்கிறதாவது:—

(a) एतं संयद्वामइत्याचक्षते

இந்த அக்ஷிபுருஷனை சம்யத்வாம என்று சொல்லியிருக்கிறார்கள்.

(b) एतं हिसर्वाणि वामानि अभिसंयन्ति

சகல கர்மபலன்களும் இந்த அக்ஷிபுருஷனை ஹேதுவாய் வைத்துக்கொண்டு உண்டாகின்றன அதாவது இவன் கர்மபலதாதா என்பது கருத்து.

(c) एषउएव वामनीरेषहि सर्वाणि वामानि नयति एषउ एवभामनीरेषहि सर्वेषु लोकेषुभाति (छा-IV-15 3)

இவனே வாமனீ:-எனப்படுகிறான். ஏனெனின் இவன் கர்மிகளை கர்மபலன்களான லோகங்களை அடையும்படி செய்கிறான். இவன் சகலலோகங்களையும் பிரகாசிப்பித்துக் கொண்டிருக்கிறதினால் இவன் பாமனீ எனப்படுகிறான்.

இவ்விதமாய் ஈசுவரனுக்குரிய வாமனீத்வ பாமனீத்வ குணங்கள் அக்ஷிபுருஷனுக்குச் சொல்லியிருப்பதால் கண்ணுக்குள் காணப்படும் புருஷன் பரமேசுவரனே. (21)

IX. I-2-4-ல் 2 (14) வது சூத்திரம்

(1) **स्थानादिव्यपदेशाच्च । १४ ।**

2. முந்தின சூத்திரத்துக்கும் இதற்கும் சம்பந்தம்:- விஷயவாக்கியத்தால் கூறப்பட்ட புருஷன் பரமேசுவரனே என்பதற்கு காரணாந்தரம் கூறப்படுகின்றது. (23)

3. பதவுரை.

स्थानादिव्यपदेशात् च ஸ்தானம் முதலியவைகளைக்கூறியிருப்பதாலும் (24)

4. ரா பொழிப்புரை:-(பரமாத்மாவைத் தியானிக்கும் பொருட்டு ஸ்தானம் நாமம் ரூபம் இவைகளை இதரசுருதிகளால் கூறியிருப்பதாலும் (ரா பரமேசுவரனுக்கு கண்ணை ஸ்தானமாய் கூறுவதில் தோஷமில்லை. (25)

5. பாஷ்யம்:—ஆகாசம்போல் எங்கும் வியாபிக்கும் பிரம்மத்துக்கு கண்ணாகிற அற்பஸ்தானம் எப்படி பொருந்தும். பரமேசுவரனுக்கு இந்த ஒரு ஸ்தானமட்டும் கூறப்பட்டிருந்தால் பொருத்தமில்லாமலிருக்கும்.

यः पृथिव्यां तिष्ठन् (बृ-III-7-3)

முதலிய சுருதிகளில் பூமி முதலிய வேறு ஸ்தானங்களும் இதற்குக்கூறப்பட்டிருக்கின்றன.

यः चक्षुषितिष्ठत्

என்பதினால் அந்த ஸ்தானங்களில் கண்ணும் கூறப்பட்டிருக்கிறது.

ஆதி சப்தத்தால் அனுசிதமான ஸ்தானமட்டுமே பிரம்மத்துக்குக் கூறப்பட்டிருக்கிறதென்பதில்லை. பின்னையோவெனின் அனுசிதமான நாமம், ரூபம், முதலியவைகள் நாமரூபங்களற்ற பிரம்மத்துக்குக் கூறப்பட்டதாகத் தெரியவருகிறது.

तस्योदिति नामहिरण्यश्मश्रुः

(அதாவது) அதற்கு உத் என்று பெயர். அவனுடைய மீசை ஸ்வர்ணமயம்.)

முதலிய சுருதிகளில் பிரஹ்மம் நிர்குணமாயிருந்தாலும் நாம ரூபங்களைப் பொருந்தின குணங்களுடன் கூடினதாக உபாசனையின் பொருட்டு சகுணமாகச் சொல்லியிருப்பதாக முன்னமேயே (I-2-7)

சொல்லியிருக்கிறது. பிரம்மம் எங்கும் வியாபித்திருந்தாலும் அதை அறியும்பொருட்டு, ஒரு இடத்தைக் குறிப்பிடுவதில் விரோதமில்லை. சாலிக்கிராமத்தில் விஷ்ணுபோலும். இதுவும் முன்னமேயே சொல்லப்பட்டிருக்கிறது. (ஈ முன் சொன்ன அர்த்தத்தையே ஸ்திரப்படுத்துகிறதினால் இப்போது சொன்னதானது வியர்த்தம் என்று சொல்லக்கூடாது.) (26)

## X. I-2-4ல் 3 (15) வது சூத்திரம்.

## सुखविशिष्टाभिधानादेव च ।१५।

ஈ 2. முந்தினசூத்திரங்களுக்கும் இதற்கும் சம்பந்தம்:—விஷயவாக்கியம் பிரம்மபரமல்லவென்று பூர்வபக்ஷிசொல்லுவதை ஒப்புக்கொண்டே யுக்தியால் அக்ஷிபுருஷன் பிரம்மந்தான் என்று முன் சித்தாந்தம் செய்தார். இப்போது விஷயவாக்கியம் பிரம்மபரம் என்பதையே காட்டுகிறார். (28)

3. பதவுரை.

सुखविशिष्टाभिधानादेव च சுகத்தோடு கூடினதாக சொல்லியிருப்பதாலும். (29)

ரா 4. பொழிப்புரை:—விஷயவாக்கியத்துக்கு முந்தின வாக்கியங்களில் சுககுணத்துடன்கூடின பிரம்மமானது தியானத்தின்பொருட்டு பிரஸ்தாபிக்கப்பட்டிருக்கிறது. இந்த பிரம்மம் இந்த விஷயவாக்கியத்திலுள்ள ஏஷ: என்னும் பதத்தால் கூறப்பட்டிருப்பதால், அக்ஷிபுருஷன் பிரம்மமே. (30)

5. பாஷ்யம்:—

மேலும், இந்த வாக்கியத்தில் பிரம்மம் கூறப்பட்டிருக்கிறதா, இல்லையா என்று சந்தேகிக்கவேண்டியதில்லை. சுகத்துடன் கூடினது என்று சொன்னதினாலேயே பிரம்மம் சித்தமாகிறது. சுகத்துடன்கூடின பிரம்மம் வாக்கியத்தின் ஆரம்பத்தில்

प्राणो ब्रह्म कं ब्रह्म खं ब्रह्म (சா-IV-10-5)

என்பதினால் தெரியவருகிறது. அந்த பிரம்மமே இவ்விடத்தில் கூறப்பட்டிருக்கிறது. ஏனெனின் பிரகிருதத்தை கிரகிப்பதே யுக்தம்.

மேலும் आचार्यस्तु ते गतिं वक्ता (IV-14-1)

அதாவது ஆசாரியர் உனக்கு மார்க்கத்தைச் சொல்லுவார் என்று மார்க்கம் மட்டும் பிரதிஞ்ஞை செய்யப்பட்டிருக்கிறது.

ரா (இதின் விவரம்:—உபகோசலன் என்கிற ஒரு பிரம்மசாரி ஜாவாலர் என்கிற ஆசாரியருடைய அக்கினிகளை பன்னிரண்டு வருஷங்கள் ஆராதித்தான். அவனுக்கு உபதேசம் செய்யாமல் ஜாவாலர் தேசாந்திரம் போய்விட்டார். அப்போது கார்ஹபத்தியாதி அக்கினிகள் தயவுடன் "பிராணன் பிரம்மம்" முதலிய வசனங்களால் ஆத்மவித்தையை உபதேசித்து ஆத்மவித்தையின் பலத்தை நீ அடையும்பொருட்டு, ஆசாரியர் மார்க்கத்தை சொல்லுவார் என்று சொன்னார்கள். பிறகு ஆசாரியர்வந்து य एषोऽक्षिणि (IV-15-1) முதலிய வசனங்களால் மார்க்கத்தை உபதேசித்தார்.

ஆகவே அக்கினிகளால் கூறப்பட்ட ஆத்மவித்தியாவாக்கியமும் கதிவாக்கியமும் சேர்ந்து ஒரு வாக்கியம் என்று சொல்லவேண்டும். ஏஷ: என்கிற பதமானது பிரகிருத ஆத்மாவைக் கூறினால்தான் ஏகவாக்கியம் ஏற்படும். இந்த ஏகவாக்கியத்தை உண்டுபண்ணுகிற பிரகரணமானது, வாக்கியபேதத்தால் ஏற்படும் द्वयत्वादि லிங்கத்தைவிட பிரபலமானது. ஆகையால் பிரகரணத்தைவிட லிங்கம் பலமானதென்றும், ஆகையால் அக்ஷிபுருஷன் பிரதிபிம்பம்தான் என்றும் சொல்லக்கூடாது.

வாக்கியாரம்பத்தில் சுகவிசிஷ்ட பிரம்மம்தான் கூறப்பட்டதாக எப்படி தெரியவருகிறது. உத்தரம்:- प्राणो ब्रह्म कं ब्रह्म खं ब्रह्म என்கிற வசனத்தை அக்கினிகளிடமிருந்து கேட்டு உபகோசலன் சொல்லுகிறதாவது:— பிராணன் பிரம்மம் என்பதை அறிகிறேன். ஆனால் கம் कं பிரம்மம் என்பதையும் खं பிரம்மமென்பதையும் நான் அறியவில்லை. ரா எப்படியெனின்.

அதற்கு அக்கினிகள் உத்தரம் சொல்லுகிறதாவது:—

यद्वाव कं तदेव खं यदेव खं तदेव कं (IV-10-5)

அதாவது எது कं மோ அதுவே खं எது खंமோ அதுவே (ரா இப்படி क சப்தத்துக்கு ख சப்தம் விசேஷணமாயும், ख சப்தத்துக்கு क சப்தம் விசேஷணமாயும் கூறப்பட்டிருக்கிறது.) இவ்விடத்தில் ख சப்தம் பிரசித்தமாய் பூதாகாசத்தைக் கூறுகிறது. சுகத்தைக்கூறும் क சப்தம் क சப்தார்த்தத்துக்கு விசேஷணமாக ஏற்படாதபக்ஷத்தில் நாமாதிகள் பிரமத்துக்குப் பிரதீகங்களாக சொல்லப்படுவதுபோல், கேவலமான பூதாகாசமும் பிரம்மத்துக்குப் பிரதீகமாக உபயோகிக்கப்பட்டிருக்கிறது.

(1) स आत्मा तत्त्वमसि (அது ஆத்மா, அது நீ) என்கிற சுருதியிற் சொல்லியபடி ஆத்மா என்பது பரமேசுவரனிடத்தில் முக்கியமாய் பொருந்தும்.

(2) अमृतत्वं अभयत्वं (மரணமற்றதன்மை, பயமற்றதன்மை) இவ்விரண்டும் பிரம்மத்துக்கே சுருதிகளில் பலதடவை கூறப்பட்டிருக்கின்றன. (19)

(3) அப்படியே இந்த அக்ஷிஸ்தானமும் பரமேசுவரனுக்கு ஒத்திருக்கிறது. अपहतपाप्मादि

சுருதிகளால் எப்படி பரமேசுவரன் சகல தோஷங்களினின்றும் விலகினவரோ, அப்படி கண்ணும் யாதொரு சம்பந்தமுமில்லாதது.

சுருதிப்பிரமாணம்:—

तद्यद्यप्यस्मिन् सर्पिर्वोदकंवासिञ्चति वर्त्मनी एव गच्छति (छा-IV-15-1)

அதாவது கண்ணில் நெய்யையாவது ஜலத்தையாவது விட்டாலும் அது கங்குகளில் சென்றுவிடுகிறது.

(4) சாந்தோக்யம் IV-15-2, 3, 4, ல் சொல்லியிருக்கிறதாவது:—

(a) एतं संयद्वामइत्याचक्षते

இந்த அக்ஷிபுருஷனை சம்யத்வாம என்று சொல்லியிருக்கிறார்கள்.

(b) एतं हिसर्वाणि वामानि अभिसंयन्ति

சகல கர்மபலன்களும் இந்த அக்ஷிபுருஷனை ஹேதுவாய் வைத்துக்கொண்டு உண்டாகின்றன அதாவது இவன் கர்மபலதாதா என்பது கருத்து.

(c) एषउएव वामनीरेषहि सर्वाणि वामानि नयति एषउ एवभामनीरेषहि सर्वेषु लोकेषुभाति (छा-IV-15-3)

இவனே வாமனீ:-எனப்படுகிறான். ஏனெனின் இவன் கர்மிகளை கர்மபலன்களான லோகங்களை அடையும்படி செய்கிறான். இவன் சகலலோகங்களையும் பிரகாசிப்பித்துக் கொண்டிருக்கிறதினால் இவன் பாமனீ எனப்படுகிறான்.

இவ்விதமாய் ஈசுவரனுக்குரிய வாமனீத்வ பாமனீத்வ குணங்கள் அக்ஷிபுருஷனுக்குச் சொல்லியிருப்பதால் கண்ணுக்குள் காணப்படும் புருஷன் பரமேசுவரனே. (21)

IX. I-2-4-ல் 2 (14) வது சூத்திரம்

(1) **स्थानादिव्यपदेशाच्च ।१४।**

2. முந்தின சூத்திரத்துக்கும் இதற்கும் சம்பந்தம்:- விஷயவாக்கியத்தால் கூறப்பட்ட புருஷன் பரமேசுவரனே என்பதற்கு காரணாந்தரம் கூறப்படுகின்றது. (23)

3. பதவுரை.

स्थानादिव्यपदेशात् च ஸ்தானம் முதலியவைகளைக்கூறியிருப்பதாலும் (24)

4. ரா பொழிப்புரை:-(பரமாத்மாவைத் தியானிக்கும் பொருட்டு ஸ்தானம் நாமம் ரூபம் இவைகளை இதரசுருதிகளால் கூறியிருப்பதாலும் (ரா பரமேசுவரனுக்கு கண்ணை ஸ்தானமாய் கூறுவதில் தோஷமில்லை. (25)

5. பாஷ்யம்:—ஆகாசம்போல் எங்கும் வியாபிக்கும் பிரம்மத்துக்கு கண்ணாகிற அற்பஸ்தானம் எப்படி பொருந்தும். பரமேசுவரனுக்கு இந்த ஒரு ஸ்தானமட்டும் கூறப்பட்டிருந்தால் பொருத்தமில்லாமலிருக்கும்.

य: पृथिव्यां तिष्ठन् (बृ-III-7-3)

முதலிய சுருதிகளில் பூமி முதலிய வேறு ஸ்தானங்களும் இதற்குக்கூறப்பட்டிருக்கின்றன.

य: चक्षुषितिष्ठत्

என்பதினால் அந்த ஸ்தானங்களில் கண்ணும் கூறப்பட்டிருக்கிறது.

ஆதி சப்தத்தால் அனுசிதமான ஸ்தானமட்டுமே பிரம்மத்துக்குக் கூறப்பட்டிருக்கிறதென்பதில்லை, பின்னையோவெனின் அனுசிதமான நாமம், ரூபம், முதலியவைகள் நாமரூபங்களற்ற பிரம்மத்துக்குக் கூறப்பட்டதாகத் தெரியவருகிறது.

तस्योदिति नामहिरण्यश्मश्रु:

(அதாவது) அதற்கு உத் என்று பெயர். அவனுடைய மீசை ஸ்வர்ணமயம்.)

முதலிய சுருதிகளில் பிரஹ்மம் நிர்குணமாயிருந்தாலும் நாம ரூபங்களைப் பொருந்தின குணங்களுடன் கூடினதாக உபாசனையின் பொருட்டு சகுணமாகச் சொல்லியிருப்பதாக முன்னமேயே (I-2-7)

சொல்லியிருக்கிறது. பிரம்மம் எங்கும் வியாபித்திருந்தாலும் அதை அறியும்பொருட்டு, ஒரு இடத்தைக் குறிப்பிடுவதில் விரோதமில்லை. சாலிக்கிராமத்தில் விஷ்ணுபோலும். இதுவும் முன்னமேயே சொல்லப்பட்டிருக்கிறது. (ர முன் சொன்ன அர்த்தத்தையே ஸ்திரப்படுத்துகிறதினால் இப்போது சொன்னதானது வியர்த்தம் என்று சொல்லக்கூடாது.) (26)

## X. I-2-4ல் 3 (15) வது சூத்திரம்.

# सुखविशिष्टाभिधानादेव च ।१५।

ர 2. முந்தினசூத்திரங்களுக்கும் இதற்கும் சம்பந்தம்:—விஷயவாக்கியம் பிரம்மபரமல்லவென்று பூர்வபக்ஷிசொல்லுவதை ஒப்புக்கொண்டே யுக்தியால் அக்ஷிபுருஷன் பிரம்மம்தான் என்று முன் சித்தாந்தம் செய்தார். இப்போது விஷயவாக்கியம் பிரம்மபரம் என்பதையே காட்டுகிறார். (28)

3. பதவுரை.

सुखविशिष्टाभिधानादेव च சுகத்தோடு கூடினதாக சொல்லியிருப்பதாலும். (29)

ர 4. பொழிப்புரை:—விஷயவாக்கியத்துக்கு முந்தின வாக்கியங்களில் சுககுணத்துடன்கூடின பிரம்மமானது தியானத்தின்பொருட்டு பிரஸ்தாபிக்கப்பட்டிருக்கிறது. இந்த பிரம்மம் இந்த விஷயவாக்கியத்திலுள்ள एषः என்னும் பதத்தால் கூறப்பட்டிருப்பதால், அக்ஷிபுருஷன் பிரம்மமே. (30)

5. பாஷ்யம்:—

மேலும், இந்த வாக்கியத்தில் பிரம்மம் கூறப்பட்டிருக்கிறதா, இல்லையா என்று சந்தேகிக்கவேண்டியதில்லை. சுகத்துடன் கூடினது என்று சொன்னதினாலேயே பிரம்மம் சித்தமாகிறது. சுகத்துடன்கூடின பிரம்மம் வாக்கியத்தின் ஆரம்பத்தில்

प्राणो ब्रह्म कं ब्रह्म खं ब्रह्म (சா-IV-10-5)

என்பதினால் தெரியவருகிறது. அந்த பிரம்மமே இவ்விடத்தில் கூறப்பட்டிருக்கிறது. ஏனெனின் பிரகிருதத்தை கிரகிப்பதே யுக்தம்.

மேலும் आचार्यस्तु ते गतिं वक्ता (IV-14-1)

அதாவது ஆசாரியர் உனக்கு மார்க்கத்தைச் சொல்லுவார் என்று மார்க்கம் மட்டும் பிரதிஜ்ஞை செய்யப்பட்டிருக்கிறது.

ர (இதின் விவரம்:—உபகோசலன் என்கிற ஒரு பிரம்மசாரீ ஜாவாலர் என்கிற ஆசாரியருடைய அக்கினிகளை பன்னிரண்டு வருஷங்கள் ஆராதித்தான். அவனுக்கு உபதேசம் செய்யாமல் ஜாவாலர் தேசாந்திரம் போய்விட்டார். அப்போது கார்ஹபத்தியாதி அக்கினிகள் தயவுடன் "பிராணன் பிரம்மம்" முதலிய வசனங்களால் ஆத்மவித்தையை உபதேசித்து ஆத்மவித்தையின் பலத்தை நீ அடையும்பொருட்டு, ஆசாரியர் மார்க்கத்தை சொல்லுவார் என்று சொன்னார்கள். பிறகு ஆசாரியர்வந்து य एषोऽक्षिणि (IV-15-1) முதலிய வசனங்களால் மார்க்கத்தை உபதேசித்தார்.

ஆகவே அக்கினிகளால் கூறப்பட்ட ஆத்மவித்தியாவாக்கியமும் கதிவாக்கியமும் சேர்ந்து ஒரு வாக்கியம் என்று சொல்லவேண்டும். एषः என்கிற பதமானது பிரகிருத ஆத்மாவைக் கூறினால்தான் ஏகவாக்கியம் ஏற்படும். இந்த ஏகவாக்கியத்தை உண்டுபண்ணுகிற பிரகரணமானது, வாக்கியபேதத்தால் ஏற்படும் दृश्यत्वादि லிங்கத்தைவிட பிரபலமானது. ஆகையால் பிரகரணத்தைவிட லிங்கம் பலமானதென்றும், ஆகையால் அக்ஷிபுருஷன் பிரதிபிம்பம்தான் என்றும் சொல்லக் கூடாது.

வாக்கியாரம்பத்தில் சுகவிசிஷ்ட பிரம்மம்தான் கூறப்பட்டதாக எப்படி தெரியவருகிறது. உத்தரம்:— प्राणो ब्रह्म कं ब्रह्म खं ब्रह्म என்கிற வசனத்தை அக்கினிகளிடமிருந்து கேட்டு உபகோசலன் சொல்லுகிறதாவது:— பிராணன் பிரம்மம் என்பதை அறிகிறேன். ஆனால் கம் कं பிரம்மம் என்பதையும் खं பிரம்மமென்பதையும் நான் அறியவில்லை. ர எப்படியெனின்,

அதற்கு அக்கினிகள் உத்தரம் சொல்லுகிறதாவது:—

यद्वाव कं तदेव खं यदेव खं तदेव कं (IV-10-5)

அதாவது எது कं மோ அதுவே खं எது खंமோ அதுவே (ர இப்படி क சப்தத்துக்கு ख சப்தம் விசேஷணமாயும், ख சப்தத்துக்கு क சப்தம் விசேஷணமாயும் கூறப்பட்டிருக்கிறது.) இவ்விடத்தில் ख சப்தம் பிரசித்தமாய் பூதாகாசத்தைக் கூறுகிறது. சுகத்தைக்கூறும் क சப்தம் क சப்தார்த்தத்துக்கு விசேஷணமாக ஏற்படாதபக்ஷத்தில் நாமாதிகள் பிரமத்துக்குப் பிரதீகங்களாக சொல்லப்படுவதுபோல், கேவலமான பூதாகாசமும் பிரம்மத்துக்குப் பிரதீகமாக உபயோகிக்கப்பட்டிருக்கிறது.

(பிராணனே சூத்திராத்மா பிரகத்வாத் பிரம்மம் அதாவது பெரியதாக இருப்பதால் பிரம்மம். ஆகை யால் சூத்திராத்மாவான பிராணன் பிரம்மமாயிருக்கு ம் என்பதை நான் அறிந்திருக்கிறேன். ख (கம்) என்றால் விஷயசுகம், क என்றால் பூதாகாசம் இவைகள் பிரம்மம் என்பதை அறிய எனக்கு முடியவில்லை) என்று நினைக்கும்படியிருக்கும்.

क சப்தம் விஷயத்துக்கும் இந்திரியத்துக்கும் சம்பந்தமுண்டாவதால் ஜனிக்கக்கூடியதாயும், (रा அநித்தியமுதலிய) தோஷசகிதமாயுமிருக்கிற சுகத்தை பிரசித்தமாய் கூறுகிறது.

ख சப்தம், क சப்தத்துக்கு விசேஷணமாகாதபக்ஷத்தில், சாதாரணமான சுகம்தான் பிரம்மம் என்று தோன்றும்.

(रा இப்படி क சப்தத்தை ख சப்தத்துடன் சேர்ப்பதினால், பூதாகாசம் என்கிற அர்த்தம் தள்ளப்பட்டதாகிறது. ख சப்தத்தை क சப்தத்துடன் சேர்ப்பதினால் வியாபகமான சுகம் என்று ஆத்மாகுமேதவிர விஷயத்தால் உண்டாகக்கூடிய சுகம் என்று அர்த்தம் ஆகமாட்டாது.) कं खं இரண்டு சப்தங்களையும் பரஸ்பரம் ஒன்றோடொன்று சேர்த்துப் பார்ப்பதினால் சுகஸ்வரூபம் பிரம்மம் என்று அறியப்படுகிறது.

இந்த வாக்கியத்தில் இரண்டாவது பிரம்மசப்த பிரயோகமிருந்து कं खं பிரம்ம என்றே வாக்கியம் ஏற்பட்டிருந்தால், क சப்தம் விசேஷணமகவே ஏற்படுமாதலால், சுகமாகிற குணம் தியானிக்கத்தக்கது என்று ஏற்படமாட்டாது. இப்படி அர்த்தமாகாமலிருக்கும் பொருட்டுக் खं இவைகளில் ஒவ்வொன்றுடனும் பிரம்மசப்தம் சேர்க்கப்பட்டிருக்கிறது. சுகமென்ற குணத்தையும் குணத்துடன் கூடியதைப்போல் தியானிப்பது இஷ்டம் (சுருதியின் கருத்து.)

அத்தியாயாரம்பத்தில் சுகவிசிஷ்டமான பிரம்மம் உபதேசிக்கப்பட்டது. பிறகு கார்ஹபத்திய முதலிய அக்கினிகள் தங்கள் தங்களுடைய மஹிமையை பிரத்தியேக பிரத்தியேகமாய்க் கூறி.

**एषा सोम्य ते अस्मद्विद्याऽऽत्मविद्या च**

(எங்களுடைய வித்தையும் ஆத்மவித்தையும் இது) என்று முடிவில் முடிக்கிறார்கள். இதனால் முன் பிரஸ்தாபிக்கப்பட்ட பிரம்மம்தான் கூறப்பட்டதாக அவர்கள் ஞாபகப்படுத்துகிறார்கள்.

आचार्यस्तु ते गतिं वक्ता என்கிற வாக்கியம் மார்க்கத்தைமட்டும் ஆசாரியர் சொல்லுவார் என்றுபிரதிஞ்ஞை செய்து பிரம்மத்தைத்தவிர வேறு விஷயத்தையும் நிவர்த்திக்கிறது.

**यथा पुष्करपलाशे आपो नश्लिष्यन्ते एवमेवं विदि पापं कर्म न श्लिष्यते (छा IV-13-3)**

என்று சுருதிசொல்லுகிறது. அதாவது தாமரை இலையில் ஜலங்கள் ஒட்டாததுபோல் அக்ஷிபுருஷனை அறிந்தவனுக்கு பாபம் சம்பவிக்கவில்லை என்று சுருதி சொல்லுகிறதாய் அக்ஷிபுருஷனை பிரம்மம் என்று காட்டுகிறது. குருவானவர் பிரகிருத பிரம்மத்துக்கு அக்ஷிஸ்தானத்தையும் சம்யத்வாம முதலிய குணங்களையும் சொல்லி, இதை அறிந்தவனுக்கு அர்ச்சிராதி மார்க்கத்தை சொல்லுகிறேன் என்பதாய்

**य एषोऽक्षिणि पुरुषो दृश्यते एष आत्मेति होवाच (छा. IV-15-1)**

என்று ஆரம்பிக்கிறார். (31)

XI. I-2-4ல்-4 (16) வது சூத்திரம்.

# 1. श्रुतोपनिषत्कगत्यभिधानाच्च। १६ ।

2. முந்தின சூத்திரத்துக்கும் இதற்கும் சம்பந்தம்:—முந்தின சூத்திரத்தில் பிரகரணம் பிரம்மபரமானதால் அக்ஷிபுருஷன் பிரம்மம்தான் என்று சொல்லப்பட்டது. இப்போது லிங்கத்தாலும் அக்ஷிபுருஷன் பிரம்மம்தான் என்று சொல்லுகிறார். (33)

3. பதவுரை:—& பொழிப்புரை:—

रा சகுண பிரம்மோபாசனத்தை அனுஷ்டித்தவனுக்கு சுருதிஸ்மிருதிகளில் எந்தமார்க்கம் சொல்லப்பட்டிருக்கிறதோ, அதுவே அக்ஷிபுருஷனை அறிந்தவனுக்கும் சொல்லியிருப்பதாலும், அக்ஷிபுருஷன் பிரம்மம் என்று அறியவேண்டியது. (34)

4.—பாஷ்யம்:—அடியிற் சொல்லிய காரணத்தாலும் அக்ஷிஸ்தானத்திலிருக்கிறபுருஷன் பரமேசுவரன். ஏனெனின், உபநிஷத்தாகிற இரஹஸியத்தை அறிந்தவனுக்கு அதாவது சகுண பிரம்மோபாசகனுக்கு எந்த தேவயானமார்க்கம் அடியிற்கண்ட (1) சுருதியிலும் (2) ஸ்மிருதியிலும் பிரசித்தமாய் கூறப்பட்டிருக்கிறதோ, அதுவே இந்த அக்ஷிபுருஷனை அறிந்தவனுக்கு (3) அடியிற்கண்ட சுருதியில் சொல்லப்பட்டதாகத் தெரியவருகிறது.

(1) अथोत्तरेण तपसा ब्रह्मचर्येण श्रद्धया
विद्ययात्मानमन्विष्यादित्यमभिजायन्त
एतद्वै प्राणानामायतनमेतदमृतमभय-
मेतत्परायणे तस्मान्न पुनरावर्तन्ते ॥ (प्रश्न 1-10.)

(2) अग्निर्ज्योतिरहः शुक्लः षण्मासा उत्तरायणम् ।
तत्र प्रयाता गच्छन्ति ब्रह्म ब्रह्मविदोजनाः ॥ (गी. VIII.24.

(3) अथ यदि चैवास्मिञ्शव्यं कुर्वन्ति यदि च नार्चिषमेवा मिसंभवन्ति ।

என்று ஆரம்பித்து

अदित्याचन्द्रमसं चन्द्रमसो विद्युतं तत्पुरुषोऽमानवः स एनान्ब्रह्म गमदत्येष देवपथो ब्रह्मपथ एतेन प्रतिपद्यमाना इमं मानवमावर्तं नावर्तन्ते ।

என்பது வரையிலுள்ள சா IV-15-5-வது சுருதி.

பிரம்மவித்துக்குப் பிரசித்தமாகச் சொன்னமார்க்கமே அக்ஷிபுருஷனை அறிந்தவனுக்கும் சொல்லியிருப்பதால் அக்ஷிபுருஷன் பிரம்மம் என்று நிச்சயிக்கப்படுகிறது. (35)

XII. I-2-4-ல்-5 (17) வது சூத்திரம். (36)

**अनवस्थितेरसम्भवाच्च नेतरः । १७ ।**

2. முந்தின சூத்திரங்களுக்கும் இதற்கும் சம்பந்தம்:—முந்தின சூத்திரங்களில் சித்தாந்தத்தைச் சொல்லி, இப்போது பூர்வபக்ஷி சொன்னதற்கு உத்தரம் சொல்லுகிறார். (37)

3. பதவுரை:—

अनवस्थितेः அஸ்திரத்தன்மையாலும்

असम्भवात् च சம்பவிக்கமாட்டாவாகையாலும்

इतरः பிரம்மத்தைத்தவிர வேறான பிரதிபிம்பம் முதலியது (38)

न அக்ஷிபுருஷனல்ல.

4. பொழிப்புரை:—

அக்ஷிபுருஷன் பரமேசுவரனே, பிரதிபிம்பாதிகளன்று. ஏனெனின் இவைகள் அஸ்திரங்களாயிருக்கின்றன. மேலும் அக்ஷிபுருஷனுடைய குணங்கள் இவைகளுக்குப் பொருந்தா. (39)

5. பாஷ்யம்:—

B. பரமதகண்டனம்.

1. அக்ஷிபுருஷன் பிரதிபிம்பாத்மாவாகவாவது, ஜீவாத்மாவாகவாவது, தேவதாத்மாவாகவாவது இருக்கக்கூடும் என்று பூர்வபக்ஷிசொன்னவிஷயத்தில் நாம் சொல்லுகிறதாவது.

नेतरः பிரதிபிம்பாத்மா முதலியவைகளை இவ்விடத்தில் கிரகிக்கக்கூடாது. ஏனெனின். (40)

2. अनवस्थितेः பிரதிபிம்பம் கண்ணில் எப்போதும் இருக்கமாட்டாது. எப்போது ஒருபுருஷன் கண்ணுக்கு சமீபத்திலிருக்கிறானோ அப்போது கண்ணில் புருஷனுடைய பிரதிபிம்பம் காணப்படுகின்றது. அவன் போனவளவில் அது காணப்படுகிறதில்லை.

य एषोऽक्षिपुरुषः

என்னும் சுருதியானது தன்கண்ணில் காணப்படும் புருஷன் உபாசிக்கத்தக்கவன் என்று உபாசகனுக்கு உபதேசிக்கிறது. உபாசனாகாலத்தில் வேறு ஒரு புருஷனை சமீபத்தில் வைத்துக்கொண்டு உபாசிக்கிறான் என்று கற்பிக்கமுடியாது.

अस्यैव शरीरस्य नाशमन्वेषनश्यति

(அதாவது இந்த சரீரநாசத்தை அனுசரித்து பிரதிபிம்பமும் நாசமாகிறது என்று சொல்லியபடி) பிரதிபிம்பாத்மாவும் அஸ்திரமாயிருக்கிறதென்பதை சுருதி காட்டுகிறது. (41)

3. असम्भवाच्च பிரதிபிம்ப புருஷனிடத்தில் அமிருதத்வாதிகுணங்கள் பொருந்தவில்லை. (42)

4. விஞ்ஞானத்மாவும்(ஜீவனும்)சமஸ்தசரீரம், இந்திரியங்கள் இவைகளுடன் சம்பந்தப்பட்டிருக்கும்போது கண்ணில்மட்டு மிருக்கிறான் என்று எப்படி சொல்லமுடியும், சொல்லமுடியாது.

பிரம்மம் சர்வவியாபியாயிருந்தபோதிலும், அதை அறியும்பொருட்டு ஹிருதயமுதலிய தேகவிசேஷசம்பந்தம் சுருதியிற் கூறப்பட்டிருக்கிறது. விஞ்ஞானத்மாவினிடத்திலும் பிரதிபிம்ப புருஷனிடத்திற்போல், அமிருதத்வாதி குணங்கள் சம்பவிக்கவில்லை. ஜீவன் பரமாத்வை விட வேறாகாவிட்டாலும் அவனிடத்தில் அவித்தியா காமம் கர்மம் இவைகளால் மரணதர்மமும் பயமும் ஆரோபிக்கப்பட்டிருக்கின்றன. ஆகையால் அமிருதத்வம், அபயத்வம் அவனிடத்தில்

பொருந்தவில்லை. ஸம்யத்வாமத்வாதிகளும் ஜீவன் ஈசுவரனுகாதபடியால் ஜீவனிடத்தில் பொருந்தவேயில்லை. (43)

5. रश्मिभिः एषोऽस्मि प्रतिष्ठितः என்கிற சுருதிப்படி தேவாத்மா கண்ணிலிருக்கிறதாகச் சொல்லியிருந்தாலும், அதை ஆத்மாவாக சொல்லக்கூடாது. ஏனெனின் அந்ததேவதை (பராக்ரூபமாக இருக்கிறது.) स्व (அதாவது வெளியேயிருக்கிறது. ஆத்மாவென்றால் உள்ளே இருக்கவேண்டும்) இவர்களுக்கு உற்பத்தி பிரளயங்கள் சொல்லியிருப்பதால் அமிருதத்வாதி குணங்களும் அவைகளுக்குப் பொருந்தா. தேவதைகள் அமரர்கள் என்று சொல்லியிருக்கிறதே எனின், வெகுகாலம் அவர்கள் இருக்கிறதை உத்தேசித்து அப்படி சொல்லியிருக்கிறது. தேவதைகளுக்கு ஐசுவரியம் கூறப்பட்டிருக்கிறதே எனின் அது ஈசுவரனுல் கொடுக்கப்பட்டது, சுபாவிகமன்று.

भीषास्माद्वातः पवते भीषोदेति सूर्यः भीषास्मादग्निश्चेन्द्रश्च मृत्युर्धावति पञ्चमः (तै II-8.)

என்கிற மந்திரம் வாயுமுதலியவர்களின் சாமர்த்தியத்தைக் காட்டுகிறது. (44)

6. ஆகையால் அக்ஷிபுருஷன் பரமேசுவரன் என்றே அறியவேண்டியது. இந்தப்பக்ஷத்தில் दृश्यते (காணப்படுகிறது) என்று பிரசித்தம்போல் சொன்னதானது ஞானிகளுடைய அனுபவத்தை உத்தேசித்தேயாம். அந்த அனுபவம் சாஸ்திரத்தால் உண்டாகிறது. ஜனங்களை பிரேரணை செய்யும்பொருட்டு "காணப்படுகிறது" என்று சொல்லியிருக்கிறது. (45)

7. एतत् ब्रह्मेति என்கிற இடத்தில் பிரம்மத்துடன் இதிபதம் சேர்ந்திருப்பதால், மனேபிரம்மேதி என்கிற இடத்தில் எப்படி பிரம்மம் கூறப்படவில்லையோ அப்படி இவ்விடத்திலும் பிரம்மம் கூறப்படவில்லை என்று பூர்வபக்ஷி செய்த ஆக்ஷேபத்துக்கு உத்தரம் என்னவெனின்

मनो ब्रह्मेति उपासीत என்பதாய் இதிபதம் உபாசனையுடன் அன்வயிக்கிறது. இவ்விடத்தில் இதிபதம் உவாச उवाच (சொன்னான்) என்கிற பதத்துடன் அன்வயிக்கிறது.

ஆகையால் திருஷ்டாந்தம் பொருந்தவில்லை. (46)

XII. ग पூர்வபக்ஷபலன்:—பிரதிபிம்போபாஸ்தி.

சித்தாந்தபலன:—பிரம்மோபாஸ்தி. (47)

வியாஸாதிகரணமாலைப்படி அத்வைதச்சுருக்கம்.

1. சுலோகங்கள்:—

छायाजीवौ देवतेशौ वासौ योऽक्षिणि दृश्यते ।
आधारदृश्यतोक्तयेशादन्येषु त्रिषु कश्चन ॥
कं खं ब्रह्म यदुक्तं प्राक्तदेवाक्षण्युपास्यते ।
वामनीत्वादिनान्येषु ।नामृतत्वादिसंभवः (48)

2. விஷயவாக்கியம்:—

சாந்தோக்கியத்தில நான்காவது அத்தியாயத்தில் உபகோசல வித்தையில் உபகோசலனென்கிற சிஷ்யனைக் குறித்து சத்தியகாமர் என்கிற குருவானவர்

य एषोऽक्षिणि पुरुषो दृश्यते
एष आत्मेति होवाच । एतदमृतं,
एतद्ब्रह्म

என்று சொன்னார். (49)

3. பூர்வபக்ஷம்:—இவ்விடத்தில் நான்குவிதமாய் சந்தேகம் ஏற்பட, கண்ணில் சகலர்களாலும் பார்க்கப்படுவது சாயை என்று அறியத்தக்கது. ஏனெனின் கண் ஆதாரமாயிருக்கிறது. சாயை பார்க்கக்கூடியதாயுமிருக்கிறது.

(2) அல்லது அப்படிப் பார்க்கப்படுவது ஜீவனுயிருக்கலாம். ரூபத்தைப்பார்க்கிற சமயத்தில் அந்த பிம்பம் கண்ணிலிருக்கிறது காணப்படுகிறது, மற்ற காலத்தில் காணப்படுகிறதில்லை.

(3) அல்லது அது தேவதையா யிருக்கலாம். ஏனெனின் आदित्यश्चक्षुर्भूत्वाऽक्षिणी प्राविशत् என்று ஐதரேயத்தில் சொல்லியிருக்கிறது.

(4) ஒருக்காலும் அது பரமாத்மாவாக மாட்டாது. ஏனெனின் அதற்கு ஆதாரமில்லை, அது பார்க்கப்படாதது. ஆகையால், சாயை, ஜீவன், தேவதை இவர்களில் எவனுவது ஒருவன் இருக்கவேண்டும். (50)

4. சித்தாந்தம்:—

कं ब्रह्म खं ब्रह्म

என்பதாய் சுகரூபமாயும் ஆகாசம்போல் பரிபூரணமாயுமிருக்கிற யாதொரு பிரம்மம் முன்வாக்கியத்தால் கூறப்பட்டதோ அதையே य एषोऽक्षिणि என்பதிலுள்ள பிரகிருதத்தைக்கூறும் एतत् சப்தத்தால்கூறி கண்ணில் உபாசிக்கத்தக்கதாய் உபதேசித்து, வாமனீத்வாதி குணங்களை உபாசிக்கத்தக்கவைகளாகச் சுருதி உபதேசிக்கிறது. இந்த குணங்களால் பிரம்மம் ஸோபா

திகமாகிறதினால், கண்ணை ஆதாரமாக உடைத்தாயிருக்கலாம், பார்க்கப்படலாம், இதில் யாதொருவிரோதமுமில்லை, சாயை, ஜீவன், தேவதை இவர்கள் விஷயத்தில் அமிருதத்வம், அபயத்வம் இவைகள் பொருந்தமாட்டா. ஆகையால் ஈசுவரன் இவ்விடத்தில் உபாஸியன். (51)

விசிஷ்டாத்துவைதப்படிச் சுருக்கம்

I—2—4-ல் 1—(13)

1. இதிலடங்கிய சூத்திரங்கள் 6. (13, 14, 15, 15 (a), 16, 17)

15a என்பது அத்வைத பாடத்திலில்லை. (52)

2. விஷயவாக்கியம்:— (ச-IV-15-1 (அத்)

சந்தேகம்:—(அத்வைதம்போலவே.)

பூர்வபக்ஷம்:— ஷை

சித்தாந்தம்:— ஷை (53)

I-2-4-ல் 2 (14)

3. அத்வைதம்போலவே. (54)

I-2-4-ல் 3 (15)

4. அத்வைதத்தில்போலவே. (55)

I-2-4-ல் 4 (15a)

5. अत एव च ब्रह्म । १५ (a)।

अत एव च:—இந்த பிரகரணத்தில் சம்சாரபயத்தினால் பிரம்மத்தை அறியவேண்டுமென்று இச்சித்த உபகோசலனுருக்கு कं ब्रह्म खं ब्रह्म என்று உபதேசம் செய்யப்பட்டிருக்கிறது. எது कं ம்மோ அதுவே खं என்று சொல்லியிருக்கிறது. ख என்பதை பிரம்மமாக உபாஸி என்று அர்த்தம் செய்யக்கூடாதோ என்று சங்கைவர முன் சுகவிசிஷ்டம் பிரம்மம் என்று சொல்லியிருப்பதால் खं சப்தத்தால் கூறப்படுவதும் பிரம்மமே. (56)

I-2-4-ல் 3 (16)

6. அத்வைதத்தில் சொல்லியஅர்த்தமே. (57)

I-2-4-ல் 6 (17)

7. அத்வைதத்தில்போலவே அர்த்தம் (58)

துவைதப்படி சுருக்கம்.

I-2-4-வது அதிகரணம்.

1. இதின் கருத்து:—சுருதியில் கண்ணுக்குள்ளிருக்கிறதாகச் சொன்னது பரமாத்மாவே. (59)

2. இதிலடங்கிய சூத்திரங்கள்:-5(13-17) (60)

3. இதின் விஷயவாக்கியம்:-சாந்தோக்கிய (IV 15-1) வாக்கியம் (அத்வைதம் பார்க்க.) (61)

4. சங்கதி:—முன் உள்ளேயிருந்து சுகத்தை அனுபவிக்கிறவர் விஷ்ணு என்று சொல்லப்பட்டது. கண்ணிலிருக்கிறவர் அவர் அல்லவென்பதாய் பூர்வபக்ஷி ஆக்ஷேபிக்கிறபடியால் ஆக்ஷேபசங்கதி ஏற்படுகிறது. (62)

5. சந்தேகம்:—அக்ஷியில் (கண்ணில்)இருக்கிற ஆத்மா?

(1) அக்கினியா? அல்லது

(2) விஷ்ணுவா? (63)

6. பூர்வபக்ஷம்:—அக்கினிதான்.

ஏனெனின்.

य एष आदित्यः पुरुषः —என்கிற சுருதியில் சூரியனிடத்திலிருக்கிற புருஷன் கார்ஹபத்தியன் என்று சொல்லியிருக்கிறது.

आदित्यः चक्षुर्भूत्वा என்கிற சுருதியால் ஆதித்தியனும் என்று தெரியவருகிறது. ஆகையால் அக்ஷிபுருஷன் அக்கினியே.

7. சித்தாந்தம்:—13-வது சூத்திரம்:—அ-கை:— இந்த அதிகரணத்தில் கண்ணுக்குள்ளிருந்து சுகானுபவத்தை அடைகிறான் என்கிற லிங்கம் பிரம்மத்துக்குப் பொருந்தும் என்று சொல்லுகிறார். (65)

अन्तर: —கண்ணுக்குள்ளிருந்து எவன் சுகத்தை அனுபவிக்கிறானோ அவன் விஷ்ணுவே. ஏனெனின்,

उपपत्ते: -:एतदमृत--मेतद्ब्रह्म என்கிற சுருதியில் சொல்லிய அமிருதத்துவம் விஷ்ணுவுக்கே பொருந்தும் (66)

8. I-2-4-ல் 2 (14)

அ-கை:—இதற்கே வேறு காரணம்.

च மேலும் சக்ஷுஸ்ஸுக்குள்ளிருக்கிறவர் விஷ்ணுவே.

ஏனெனின், स्थानादिव्यपदेशात् तद्यद्यस्मिन्

चक्षुषि என்கிற சுருதியில் கண்ணில் ஜலத்தை விட்டால் அது உள் தங்குகிறதில்லை, வெளியே வந்துவிடுகிறது என்று சொல்லியிருக்கிறது. இது ஸ்தானத்தின் சக்தி விசேஷம்.

आदि சப்தத்தால் एतं संयद्वाम इत्याचक्षते என்கிற சுருதியில் அவனிடத்தில் சகல செளந்தரிய மிருக்கிறது என்று சொல்லியிருக்கிறது, இது கண்ணிலிருக்கிறது

இது ஸ்வரூபசக்தி; இப்படிப்பட்ட சக்திகளிருப்பதாகச் சொல்லியிருப்பதால் உள்ளிருக்கிறவர் விஷ்ணுவே. (67)

9. I-2-4-ல் 3 (15)

அ-கை:—பிரகரண பலத்தாலும் இதுவே தெரியவருகிறது.

च மேலும்.

सुखविशिष्टाभिधानात् एव कं ब्रह्म खं ब्रह्म என்கிற சுருதியில் பூரணசுகம் சொல்லப்பட்டிருக்கிறது. ஆகையால் சக்ஷுவில் இருக்கிறவர் விஷ்ணுவே. (68)

10. I-2-4-ல் 4 (16)

அ-கை:—कं ब्रह्म என்கிற சுருதியில் சொன்னது பிரம்மமாயிருக்கட்டும். அக்ஷியிலிருப்பது ஏன் அக்கினியாயிருக்கக்கூடாதென்பதற்கு உத்தரம் கூறுகிறார்.

च மேலும்.

श्रुतोपनिषत्कगत्यभिधानात् — स एतान् ब्रह्म गमयति என்கிற சுருதியில் எவனுக்கு உபநிஷத்தில் சொல்லிய வித்தையானது சம்மதமாயிருக்கிறதோ அவனுக்கு च அதாவது பிரம்மபிராப்தி உண்டு என்று சொல்லியிருக்கிறது. ஆகையால் கண்ணிலிருக்கிறவன் விஷ்ணுவே. (69)

11. I-2-4-ல் 5 (17)

அ-கை:—வேறுவிதமாய் சொல்லும்பக்ஷத்தில் அதாவது கண்ணிலிருக்கிறவன் ஜீவன் என்று சொல்லும்பக்ஷத்தில் பாதகமிருப்பதால் விஷ்ணுவே அக்ஷிபுருஷன் என்கிறார்.

च மேலும்.

इतर: அக்கினிமுதலிய ஜீவன்.

न சக்ஷுஸ்ஸுக்குள்ளிருக்கவில்லை.

ஏனெனின்,

अनवस्थिते: :—ஒரு ஜீவன் வேறுஜீவனை நியமனம் செய்தால் இவனை இன்னும் வேறு ஜீவன் நியமனம் செய்யவேண்டும். அப்போது அனவஸ்தாதோஷம் வரும்.

असंभवात् :-ஒருஜீவன் மற்றஜீவர்களை நியமனம் செய்கிறான் என்பதும் அசம்பாவிதம். ஆகையால் அக்ஷிபுருஷன் ஜீவனாகமாட்டான். (70)

XVII. பூர்வபக்ஷபலன்:—ஆக்ஷேபம்

சித்தாந்தபலன்:—சமாதானம். (71)

I-2-4-வது அதிகரணம்

முற்றிற்று.

—

## 1-2-5-வது அதிகரணத்தின்
### அனுக்கிரமணிகை.

## 1-2-5-வது அதிகரணம்.

I. இதின் பெயர்:—அந்தர்யாமி அதிகரணமென்பதாம். (1)

II. இந்த அதிகரணத்தின் கருத்து:—பரமேசுவரனே அந்தர்யாமி என்பதாம். (2)

III. விஷயவாக்கியம்:—

(a) य इमं च लोकं परं च लोकं सर्वाणि च भूतान्यन्तरा यमयति (बृ-III-7-1)

(b) यः पृथिव्यां तिष्ठन् पृथिव्या अन्तरोयं पृथिवी न वेद यस्य पृथिवी शरीरं यं पृथिवीमन्तरो यमयत्येष त आत्मान्तर्याम्यमृतः (बृ-III-7-2)

இது அந்தர்யாமிபிராமணவாக்கியம். இது காண்வசாகையிலும் மாத்தியந்தின சாகையிலும் வருகிறது. இரண்டிலும் வாசகங்கள் விசேஷமாய் ஒன்றாயிருக்கின்றன. சில பதங்கள் மட்டும் வித்தியாசப்படுகின்றன.

ஒரு இடத்தில் உத்தாலகர் முதலானவர்கள் அத்தியயனம் செய்துகொண்டிருந்தார்கள். அப்போது ஒரு கந்தர்வன் பதஞ்சலி மஹாரிஷியின் பாரியையின் சரீரத்தில் பிரவேசித்து அவள் ரூபமாகவந்து இவர்களை கேட்டதாவது:—எவனால் இந்தலோகம் முதலியவை கோர்க்கப்பட்டிருக்கின்றன. எவன் இந்த லோகம் முதலியவைகளை நியமனம் பண்ணுகிறான். அந்த அந்தர் யாமியார் நீங்கள் சொல்லவேண்டுமென்றான். அதற்கு அவர்கள் தெரியவில்லை என்று சொல்ல கந்தர்வன், எவன் அந்தர்யாமியை அறிகிறானோ அவன் ஆத்மவித், சர்வவித், பிரம்மவித், லோகவித், வேதவித் என்று பொதுவாய்ச் சொன்னான். அதைக் கேட்டு உத்தாலகன் யாஞ்ஞவல்கியரிடம் சென்று அந்தர்யாமி யார் என்று கேட்க यः पृथिव्यां तिष्ठन् முதலிய வசனங்களால் உத்தரம் சொன்னார்.

விஷயவாக்கியத்தின் அர்த்தம்:—

(a) இந்த லோகத்தையும் பரலோகத்தையும் சகல பூதங்களையும் எவன் உள்ளேயிருந்துகொண்டு நியமனம் செய்கிறான்.

(b) எவன் பிருதிவியிலிருந்துகொண்டு பிருதிவிக்குள்ளிருக்கிறானோ, எவனை பிருதிவி அறியவில்லையோ, எவனுக்கு பிருதிவி சரீரமோ, எவன் உள்ளிருந்துகொண்டு பிருதிவியை நியமனம் செய்கிறானோ, அவனே உன்னுடைய ஆத்மா, அந்தர்யாமி, அமிருதன்.

இந்த அந்தர்யாமிபிராமணத்தில்.—

எவன் பிருதிவிமுதலிய தேவதைகளுக்குள்ளும் சகலவேதங்களுக்குள்ளும், சகல யஞ்ஞியங்களுக்குள்ளும், சகலபூதங்களுக்குள்ளும், சரீரம் பிராணன் முதலியவைகளுக்குள்ளும் இருந்துகொண்டு இவைகளை நியமனம் செய்கிறானோ அவன் அந்தர்யாமி

என்று தெரியவருகிறது. அந்த அந்தர்யாமி யார். (3)

சங்கதி:—

ஜ IV. முந்தின அதிகரணத்துக்கும் இதற்கும் சங்கதி:—முன் यः चक्षुषि तिष्ठन् என்கிற வாக்கியத்தில் கூறப்பட்டவன் ஈசுவரன் என்று வைத்துக்கொண்டு இந்த நிஸ்ஸந்தேகமான வாக்கியத்தின் ஆதாரத்தால், முந்தின அதிகரணத்தில் அக்ஷிபுருஷன்பரமேசுவரன்தான் என்று தீர்மானிக்கப்பட்டது. இப்போது அந்த வாக்கியத்தில் கூறப்பட்டவன் ஈசுவரன்தானா என்பதை ஆக்ஷேபிக்கிறபடியால் இரண்டு அதிகரணங்களுக்கும் ஆக்ஷேபசங்கதி ஏற்படுகிறது. (4)

பாதசங்கதி:—இந்த அந்தர்யாமி திர்ஷ்டா என்று சுருதிசொல்லுகிறது. திர்ஷ்ட்ருத்வம் ஜீவலிங்கம் இந்த லிங்கத்தால் பிரம்மலிங்கம் மறைபட்டுப்போவதால் பாதசங்கதி ஏற்படுகிறது. இதரசங்கதிகள் முன்போலவே:—அந்தர்யாமி பிராமணம் சுவிசேஷ பிரம்மத்தில் தாற்பரியப்படுவதால் பாதாதிசங்கதிகள் ஏற்படுகின்றன. (5)

V. சந்தேகம்:—

இந்த அந்தர்யாமி,

(1) தேவதை முதலான சரீரத்துக்கு அபிமானியான (சரீரமேதான் என்று பாவிக்கிற) தேவதாத்மாவா?

(2) அல்லது, அணிமாதி ஐசுவரியமடைந்த யோகியா?

(3) அல்லது, பரமாத்மாவா?

(4) அல்லது வேறொன்றா? (பிரதானமா?)

என்பது சந்தேகம்.

இதற்குக்காரணம் இந்தப்பெயர் அபூர்வம் அதாவது சாதாரணமாய் வழங்கவில்லை. சரீரமில்லாதவனுக்கு நியமிக்குந்தன்மை சம்பவிக்குமென்று சிலர் சொல்வதாலும் சந்தேகம். (6)

இதிலடங்கிய சூத்திரங்கள்:—3 (18-19-20) இவைகளில்,

18ல் அந்தர்யாமி தேவதை அல்லவென்பதும்
19ல் அந்தர்யாமி பிரதானமல்ல வென்பதும்
20ல் அந்தர்யாமி ஜீவனல்லவென்பதும்
நிரூபிக்கப்படுகின்றது. (7)

VII. பூர்வபக்ஷம்:—

(1) பெயரே அப்பிரசித்தமாயிருப்பதினால் அதினால் கூறப்படும் பொருளும் அப்பிரசித்தமாயிருக்கவேண்டுமென்று நமக்குத் தோன்றுகிறது. அல்லது, நிரூபிக்கப்படாத பதார்த்தம் இருக்கிறதாக ஒப்புக்கொள்ள முடியாது.

அந்தர்யாமி சப்தமோ அந்த் என்கிற சப்தமும் யமநம் என்கிற சப்தமும் சேர்ந்து உண்டாகிறபடியால் அத்தியந்தம் அப்பிரசித்தமென்று சொல்லக்கூடாது. ஆகையால் பிருதிவி முதலியவைகளுக்கு அபிமானியான ஒருதேவதை அந்தர்யாமியாக இருக்கவேண்டும். இதற்குச் சுருதிப்பிரமாணம்:—

पृथिव्येव यस्यायतनमग्निर्लोको मनोज्योतिः (बृ-III 9-16)

அர்த்தம்:—எந்ததேவதைக்கு பூமியே சரீரமோ எவனுக்கு கண்ணே அக்கினியோ, எவனுக்கு மனதே ஜோதிஸ்ஸோ, அவன், சரீரம் இந்திரியம் இவைகளுடன் கூடியிருப்பதால் பிருதிவி முதலியவைகளுக்குள்ளிருந்துகொண்டு நியமனம் செய்கிறான்.

ஆகையால் நியமனம் செய்யுந்தன்மை தேவதைக்கு பொருந்துவதாகச் சொல்லுவது யுக்தம். (8)

ர (2) உபக்கிரமாதி வாக்கியங்களால் அந்தர்யாமி ஒருவன் என்று நிச்சயமாகிறது. அவன் தேவதையாக இருக்கட்டுமேயென்னின், தேவதைகள் அநேகர்களானதால் அந்தர்யாமிகளும் அநேகர்களாகவேண்டும். இது விருத்தமானதால் சகல வஸ்துக்களிலும் பிரவேசிக்கும் அணிமாதிசித்திபெற்ற ஒரு யோகி நியமனம் செய்கிறவனாயிருக்கவேண்டும். (9)

(3) பரமாத்மா அந்தர்யாமியாக ஆகமாட்டார். ஏனெனின் அவருக்குச் சரீரம் இந்திரியம் இவைகளில்லை.

ஜன்மாதி சூத்திரத்தில் சர்வஞ்ஞனை பரமாத்மாவே உற்பத்தி ஸ்திதி லயங்களுக்குக் காரணமென்று சொல்லப்பட்டது. இனிவரும் विकरणत्वान्नेतिचेत्तदुक्तं என்கிற சூத்திரத்தில் (II-1-31) சரீரமற்ற பரமாத்மாவுக்கும் இவைகள் கூடும் என்றுசொல்லப்படும். சிருஷ்டி ஆரம்பிக்கும் முன் பரமாத்மா உபாதானமாயும் அதிஷ்டாதா வாயுமிருக்கலாம். ஏனென்னின் அப்போது சரீரியான ஜீவனில்லை. எவன் சர்வகர்மபலனையுங் கொடுக்கிறானோ அவனே ஸ்திதிக்குக்காரணம். இது சிருஷ்டிக்குப் பிறகு இருக்கும் அவஸ்தை. இதலிருக்கிறவன் சரீரத்தை உடையஜீவனே. எவன் நியந்தாவோ அவன் சரீரி என்று கண்டிருக்கிறோம். ஆகையால் ஜீவனே அந்தர்யாமியாக இருக்கவேண்டும். (10)

VIII. சித்தாந்தம்.

1. இப்படி பூர்வபக்ஷிசொல்ல பகவான் வியாசர்

अन्तर्याम्यधिदैवादिषु तद्धर्मव्यपदेशात्
(I-2-18)

என்னும் சூத்திரத்தில் சித்தாந்தத்தைக் கூறுகிறார். (11)

2. பதஉரை.

अधिदैवादिषु தேவதை முதலியவைகளுக்குள்ளே अन्तर्यामि அந்தர்யாமியாக இருக்கிறவன்

(परमात्मा பரமாத்மாவே) ஏனெனின்

तद्धर्मव्यपदेशात् பரமாத்மாவினுடைய தர்மங்கள் சொல்லியிருக்கின்றன. (12)

3. பொழிப்புரை:—

தேவதை முதலியவர்களுக்குள்ளிருந்து நியமனம் செய்யும் அந்தர்யாமி பரமாத்மாதான். ஏனெனின் பரமாத்மதர்மம் அவனுக்குக் கூறப்பட்டிருக்கிறது. (13)

4. பாஷ்யம்:— A. ஸ்வசித்தாந்தம்:—

(1) अन्तर्याम्यधिदैवादिषु

தெய்வாதிகளில் எவனே அந்தர்யாமியாக சுருதியில் சொல்லியிருக்கிறதோ அவன் பரமாத்மாவே, வேறு ஒருவனுமல்ல. ஏனெனின். (14)

तद्धर्मोपदेशात् அந்த பரமாத்மாவின் தர்மங்கள் இவ்விடத்தில் கூறப்பட்டிருக்கின்றன. பிருதிவி

முதலிய சகல விகாரங்களுக்குள் இருந்துகொண்டு நியமனம் செய்கிறபடியால், நியமனம் செய்யும் தர்மம் பரமாத்மாவுக்குப் பொருந்தும். ஏனெனின் சகலத்துக்கும் காரணமாயிருப்பதால் சகல சக்தியும் அதற்குப் பொருந்தும், (15)

(2) एष त आत्मान्तर्य्याम्यमृतः

"இது உன்னுடைய ஆத்மா, அந்தர்யாமி அமிருதம்" என்கிற சுருதிப்படி ஆத்மாவாயிருக்கும் தன்மையும் அமிருதமாயிருக்கும் தன்மையும் முக்கியமாய் பரமாத்மாவுக்குப் பொருந்தும். (16)

(3) மேலும் यं पृथिवी न वेद என்கிற சுருதியானது பிருதிவிதேவதை அந்தர்யாமியை அறியமாட்டாது என்று சொல்லி, அந்த தேவதையைவிட வேருன அந்தர்யாமியை காட்டுகிறது.

आ (ஒருவனே அறிகிறவனும், அறியப்பட்ட வஸ்துவாயுமிருக்க மாட்டானுகையால் பிருகிருதத்தில் பிருதிவி தேவதை அந்தர்யாமியாகிய தன்னையே அறியவில்லை என்று சொல்லுவோமே, அந்தர்யாமியான வேறு ஒன்றை ஒப்புக்கொள்ளுவானேன் எனின், பிருதிவி தேவதை தான் பிருதிவியாயிருக்கிறேன் என்று தன்னை அறிகிறது. (அப்படியே எல்லாரும் தங்களை அறிகிருர்கள். ஆகையால் அறியப்பட்டாத அந்தர்யாமி தன்னைவிட வேருக இருக்கவேண்டும்.) (17)

(4) அப்படியே अदृष्टः अश्रुतः முதலிய குணவிசேஷங்களும் ரூபாதிகளற்றதாயிருப்பதால் பரமாத்மாவுக்குப் பொருந்தும். (18)

B. பரமதகண்டனம் 10-க்கு உத்தரம்.

சரீர, இந்திரியங்களற்ற பரமாதமாவுக்கு நியமனம் செய்யும் தர்மத்தைக் கூறக்கூடாதென்று சொல்லப்பட்டது. இதில் தோஷமில்லை. எவைகளை இது நியமனம் செய்கிறதோ அவைகளின் சரீர இந்திரியங்களாலேயே இதற்கும் சரீர இந்திரியங்கள் ஏற்படுகின்றன. (ஏனெனின் तस्य पृथिवी शरीरं என்று சொல்லியிருப்பதால் வேறுசரீரம் வேண்டியதில்லை.

रा (தேகத்தை நியமனம் செய்கிறவன் ஜீவன். இவனைவிட வேருக நியமனம் செய்கிறவன் ஒருவனிருந்தால், இவனையும்விட வேறு ஒரு நியந்தா இருக்கவேண்டுமே, இப்படி அநவஸ்தாதோஷம் சம்பவிக்குமே யெனின், இந்ததோஷம் சம்பவிக்கவில்லை. ஏனெனின் (பரமாத்மாவைத்தவிர) வேறு ஒரு நியந்தாவுமில்லை. அப்படியிருந்தால் அநவஸ்தாதோஷம் சம்பவிக்கும். ஆகையால் பரமாத்மாவே அந்தர்யாமி. (19)

I-2-5ல் (19) வது சூத்திரம்.

## न च स्मार्तमतद्धर्माभिलापात् ।१९। (20)

2. முந்தின சூத்திரத்துக்கும் இதற்கும் சம்பந்தம்:—முந்தின சூத்திரத்தில் தேவதாத்மா அந்தர்யாமி அல்லவென்று சொல்லப்பட்டது. இப்போது பிரதானமும் அந்தர்யாமியன்று என்று நிரூபிக்கிருர். (21)

3. பதவுரை:—

स्मार्त्तं சாங்கியஸ்மிருதியிற் கூறிய பிரதானம்.

नच अந்தர்யாமி ஆகமாட்டாது. (ஏனெனின்.)

अतद्धर्माभिलापात् பிரதானத்துக்குப் பொருந்தாத தர்மங்கள் சொல்லப்பட்டிருப்பதால். (22)

4. பொழிப்புரை.

சாங்கியஸ்மிருதியிற் சொல்லிய பிரதானம் அந்தர்யாமி ஆகமாட்டாது. ஏனெனின் அதற்குப்பொருந்தாத தர்மங்கள் கூறப்பட்டிருக்கின்றன. (23)

5. பாஷ்யம்.

இது இப்படி இருக்கட்டும். பார்க்கப்படாமை முதலிய தர்மங்கள் சாங்கியஸ்மிருதிகள் கூறிய பிரதானத்துக்கும் பொருந்துகின்றன. ஏனெனின் அதற்கு ரூபம் முதலியவைகளில்லை என்று அவர்கள் ஒப்புக்கொண்டிருக்கிருர்கள். அவர்களுடைய ஸ்மிருதி வசனம் யாதெனின்:—

अप्रतर्क्यमविज्ञेयं प्रसुप्तमिव सर्वतः (மனு-I-5)

रा அர்த்தம்:-பிரதானமானது மஹத்முதலிய கிரமமாக எப்படி பிரவிர்த்திக்கிறது என்று சொல்லமுடியாது. (பிரமாணத்துக்கு விஷயமாகிறதால்) அறியப்படாதது; எப்போதும் தூக்கத்திலிருப்பதுபோலிருக்கிறது. (ஜாட்டியம் என்பது கருத்து) இது சகல விகாரங்களுக்கும் காரணமாயிருப்பதால் இதுவும் நியந்தா. अ பிரதானம் ஜகத்தின் ஸ்திதிக்குக் காரணம் ஆகையால் நியந்தா என்று சொல்லப்படுகிறது என்று சொல்லக்கூடும். ஆகையால் பிரதானம் அந்தர்யாமி சப்தத்தால் கூறப்படலாம்.

अ. (a) यस्य पृथिवी शरीरं என்கிற வாக்கியத்தில் சரீர சப்தத்துக்கு இரண்டுவிதமாக அர்த்தம் செய்யலாம்.

(1) தேவதத்தனுடைய சரீரம்போல் போகஸ்தானம் என்றுவது;

(2) பூர்வபக்ஷியின் சரீரம், சித்தாந்தியின் சரீரம் என்பதுபோல ஸ்வரூபம் என்றுவது,

அர்த்தம் செய்யலாம். இவ்விரண்டு அர்த்தங்களும் பரமாத்மவிஷயத்திற் பொருந்தவில்லை. ஏனெனின்,

(1) பரமாத்மாவுக்கு பிருதிவீ போகஸ்தானமன்று.

(2) பரமாத்மா சேதனம். பிருதிவீ ஜடம்.

சேதனத்துக்கு ஜடம் ஸ்வரூபமாக இருக்கமாட்டாது. பிரதானமோ ஜடமாகையால், ஜடத்தை சரீரமாக உடைத்தாயிருக்கலாம்.

(b) एषत आत्मा என்பதையும் பிரதானவிஷயத்தில் பொருந்தச் செய்யலாம். "பத்திரசேனன் என்னுடைய ஆத்மா" என்கிறவிடத்தில் ஆத்மபதம் எப்படி கௌணமாக உபயோகிக்கப்பட்டிருக்கிறதோ, அப்படி "பிரதானம் உன்னுடைய ஆத்மா" என்கிற இடமும் கௌணமாக உபயோகப்படலாம்.

(c) அமிருதத்தன்மையும் மோக்ஷசாதகமாக இருப்பதால் பொருந்தும்.

(d) द्रष्टा (பார்க்கிறான்) முதலிய சப்தங்களும் சாக்ஷுஷஞானத்தின் ஆசிரயத்தைக் கூறுகின்றன. பிரம்மத்துக்கோ சக்ஷுஸ் இல்லாததால் ஆசிரயம் கௌணமே. அப்படியே பிரதான பக்ஷத்திலும் கௌணமாயிருக்கட்டுமே.

இவ்விதமாக பூர்வபக்ஷியானவன் பிரதானமே அந்தர்யாமியாக இருக்கலாம் என்று சொல்ல சித்தாந்தி சொல்லுகிறதாவது பிரதானம் அந்தர்யாமி யன்று.

ईक्षतेर्नाशब्द (I-1-5)

என்கிற அதிகரணத்தில் பிரதானத்தை நிராகரித்திருந்தாலும், अदृष्टत्वादि குணவிசேஷங்கள் சொல்லியிருப்பதால், அதைப்பற்றி சங்கை மறுபடியும் உண்டாகிறது. ஆகையால் உத்தரம் சொல்லப்படுகிறது. (24)

3. न च स्मार्त्तं பிரதானமானது அந்தர்யாமி சப்தத்தால் கூறப்படமாட்டாது. ஏனெனின். (25)

4. अतद्धर्माभिलापात् பிரதானத்துக்கு அதிர்ஷ்டம் (பார்க்கப்படாதது) முதலிய குணங்களைச் சொல்லியிருந்தாலும் அது பார்க்கிறது என்பதாய் பார்க்கும் தன்மை முதலியவைகள் அதற்குக் கூறப்படவில்லை. ஏனெனின் பிரதானம் அசேதனமென்று அவர்கள் ஒப்புக்கொண்டிருக்கிறார்கள்.

अदृष्टो द्रष्टा अश्रुतः श्रोता अमतो मन्ता अविज्ञातो विज्ञाता (बृ. III I-7-23)

என்பதாய் வாக்கியம் முடிவு பெறுகிறது. பிரதானமே ஆத்மாவென்றும் சொல்லக்கூடாது.

அ. பரமாத்மாவும் ஜீவனும் ஒன்றானதால், பார்த்தல்முதலிய வியவஹாரங்கள் பரமாத்மாவுக்கே முக்கியமாய் சம்பவிக்கலாம்.

ஆ. பத்திரசேன திருஷ்டாந்தப்படி பிரதானவிஷயத்தில் ஆத்மத்வத்தை கௌணமாக அறியலாம் என்று பூர்வபக்ஷி சொன்னான். பரமாத்மவிஷயத்தில் ஆத்மத்வத்தை முக்கியமாக அறியும்படியிருக்க கௌணமாக அறியவேண்டியதில்லை.

இ. "எதற்கு பிருதிவீசரீரமோ" என்கிற குணவிசேஷமும் பிரதானவிஷயத்தில் பொருந்தவில்லை.

(1) பிரபஞ்சத்தில் போக்தா போக்கியம் இருந்தால்தான் போகஸ்தானம் ஏற்படும். பிரதானம் ஜடமானதால் போக்தா அன்று. ஆகையால் சரீரசப்தத்துக்கு போகஸ்தானம என்று அர்த்தம்செய்து பிரதானத்துக்குப் பொருந்துமென்று சொன்னதானது ஒவ்வவில்லை. ஸ்வரூபம் என்கிற அர்த்தமும் ஒவ்வவில்லை. போக்தாவை உத்தேசித்து பிராந்தியால் போக்தாவே சரீரம் என்று சொல்லலாம். பிரதானமோ போக்தாவே யன்று. ஆகையால் ஸ்வரூபார்த்தமும் பொருந்தவில்லை. இவ்விதமாக எவ்விதத்திலும் பிரதானவிஷயத்தில் விஷயவாக்கியம் பொருந்தாமையால் இந்த வாக்கியத்தால் கூறப்பட்ட அந்தர்யாமி பரமாத்மாவே.) (26)

X. I-2-5 ல் 3 (20) வது சூத்திரம்.

शारीरश्चोभयेपिहि भेदेनैनमधीयते ॥ (27

2. முந்தின சூத்திரத்துக்கும் இதற்கும் சம்பந்தம்:—முன் அந்தர்யாமி பிரதானமல்லவென்று நிரூபிக்கப்பட்டது. இப்போது ஜீவனும் அந்தர்யாமி அல்லவென்பது நிரூபிக்கப்படுகிறது. (28)

3. பூர்வபக்ஷம்:—பிரதான விஷயத்தில் ஆத்மத்வம் திர்ஷ்டிருத்வம் முதலியவைகள் பொருந்தாதபடியால் பிரதானம் அந்தர்யாமியாகாவிட்டாலும், சாரீர

கனை ஜீவன் அந்தர்யாமியாக இருக்கட்டுமே.

(1) ஜீவன் சேதனனுனதால் द्रष्टा, श्रोता, मन्ता विज्ञाता வாக இருக்கலாம்;

(2) பிரத்தியக்காயிருப்பதால் (ஆந்தரமாயிருப்பதால்) ஆத்மாவாகலாம்;

(3) தர்மாதர்மபலன்களை அனுபவிப்பதினுல் அமிருதமாயிருக்கலாம்.

(4) பார்க்கிறவனே பார்க்கும் செயலுக்கு விஷயமாகாதபடியால் अदृष्टत्वादि தர்மங்களும் ஜீவனிடத்தில் பொருந்தும்.

न दृष्टेर्द्रष्टारं पश्येत् (बृ-III-4-2)

முதலிய சுருதிகளும ஜீவனை பார்க்கமுடியாது என்றே சொல்லுகின்றன.

(5) ஜீவன் போக்தாவாயிருப்பதால் சரீரம் இந்திரியம் முதலியவைகளை நியமனம் செய்யமுடியும்.

ஆகையால் ஜீவனே அந்தர்யாமி.

இப்படி பூர்வபக்ஷிசொல்ல வியாசர் இந்த சூத்திரத்தில் உத்தரம் சொல்லுகிறார். (29)

4. பதஉரை:—

शारीरः च ஜீவனும

(न அந்தர்யாமி ஆகமாட்டான.)

उभयेपि காண்வசாகிகளும் மாத்தியந்தின சாகிகளும்

एनं இவனை (ஜீவனை)

भेदेन வேறாக

अधीयते சொல்லுகிறார்கள். (30)

5. பொழிப்புரை:—

ஜீவனும் அந்தர்யாமி ஆகமாட்டான். ஏனெனின் காண்வசாகிகளும் மாத்தியந்தின சாகிகளும் ஜீவனை அந்தர்யாமியைவிட வேறாக சொல்லுகிறார்கள். (31)

6—பாஷ்யம்.

शारीरः च न என்கிற வார்த்தையையும் :—ன (अतद्धर्माभिलापात् என்கிற வார்த்தையையும் முந்தின) சூத்திரத்தினின்றும் சேர்த்துக்கொள்ள வேண்டியது. ஜீவனும் அந்தர்யாமி என்று சொல்லக்கூடாது. ஏனெனின் अतद्धर्माभिलापात् அதாவது ஜீவனைவிட வேறான பிரம்மத்தின் தர்மங்கள் சொல்லப்பட்டிருக்கின்றன, அதாவது दृष्टत्व (பார்த்தல்) முதலிய தர்மங்கள் ஜீவனுக்கும் இருந்தாலும் கடாகாசம் முதலியதுபோல் உபாதியால் வளைபட்டிருப்பதால் ஜீவன் பிருதிவி முதலியவைகளுக்குள் இருக்கவும் அவைகளை நியமனம்செய்யவும் சமர்த்தனுகமாட்டான்.

(விஷயவாக்கியத்தில पृथिव्यां तिष्ठन् पृथिव्या अन्तरः என்று சொல்லியிருப்பதால் பிருதிவிக்கு உள்ளும் பிருதிவிக்கு வெளியிலும் இருக்கிறதாக தெரியவருகிறது. அப்படியே சகல பிரபஞ்சத்துக்கும் உள்ளும் வெளியிலும் இருந்துகொண்டு சகலத்தையும் நியமனம் செய்யும் சாமர்த்தியம் உபாதானமாகாத ஜீவனுக்கு பொருந்தாது; சகல பிரபஞ்சத்துக்கும் உபாதானமான தன்மை பிரம்மத்துக்கே பொருந்தும்.) (32)

उभयेपि மேலும் காண்வசாகிகளும் மாத்தியந்தின சாகிகளும் ஆக இருண்டுசாகிகளும இந்த சாரீரனை (ஜீவனை) அந்தர்யாமிக்கு வேறுஎன்றும் பிருதிவி முதலியவைகள்போல் இவனும் அவனுக்கு அதிஷ்டானம் என்றும் அவனுல் நியமனம் செய்யப்படுகிறுன் என்றும் சொல்லுகிறுர்கள்.

காண்வர்கள் योविज्ञाने तिष्ठन् (बृ III-7-22, என்றும்

மாத்தியந்தினர்கள் यो आत्मनि तिष्ठन् என்றும்

சொல்லுகிறுர்கள்.

ஆத்மசப்தம் ஜீவனைக் கூறுகிறது.

விஞ்ஞானசப்தமும் विज्ञानमयो हि शारीरः என்கிற சுருதிப்படி ஜீவனே, ஆகையால் ஜீவனைவிட வேறான ஈசுவரனே அந்தர்யாமி என்று சித்தமாகிறது. (33)

ன (பிரஹதாரணியகத்தில் பிருதிவி முதலியவைகளுக்குள்ளும் ஜீவர்களுக்குள்ளும் இருந்து என்று சொல்லி ஆத்மாவுக்குள்ளு மிருக்கிறதாக சொல்லியிருக்கிறது. ஆத்ம சப்தத்துக்கு ஜீவன் என்று அர்த்தமானதால் மறுபடியும் சொல்லவேண்டியயுக்தியாதெனின், பிராமணர்கள் வந்தார்கள் வசிஷ்டரும் வந்தார் என்கிற இடத்தில் வசிஷ்டர் பிராமணவர்க்கத்தில் சேர்ந்திருந்தாலும், அவர் சிரேஷ்டர் என்பதைக் காட்டும்பொருட்டு அவரைக் குறிப்பிட்டுச் சொல்லியிருப்பதுபோல் ஜீவர்களுக்குள் சிரேஷ்டஜீவன் அதாவது அணிமாதி சித்தியடைந்த யோகியிடத்திலும் அந்தர்யாமி இருக்கிறுன் என்பதை விளக்கிவைக்கும்பொருட்டு यः आत्मनि तिष्ठन् என்றுசொல்லி யிருக்கிறது. இதனுல் பூர்வபக்ஷியின் யோகி அந்தர்யாமியாக இருக்கலாம் என்னும் பக்ஷி நிராகரிக்கப்பட்டது.) (34)

ரா இந்த சூத்திரத்தில் भेदेन என்கிற பதம் இருக்கிறது இதனுல் வாஸ்தவத்தில் ஜீவனுக்கும் பிரம்மத்துக்கும் பேதம் இருக்கிறதாக ஒருபிராந்தி உண்டாகலாம். அதை நிவர்த்திக்கும்பொருட்டு பாஷ்யகாரர் ஆக்ஷேப சமாதானங்களை எழுதுகிறார்.

ஆக்ஷேபம்:—ஒரு சரீரத்தில் அந்தர்யாமியான ஈசுவரன், இவரைவிட வேறான ஜீவன் ஆக பார்க்கிறவர்கள் இருவர்கள் எப்படி இருக்கக்கூடும்.

இதில் என்ன அனுபபத்தி இருக்கிறது? விரோதமென்ன?

नान्योतोस्ति द्रष्टा (बृ III-7-23)

இவனைவிட வேறான திரஷ்டா இல்லையே

முதலிய சுருதிகள் விருத்தப்படுகின்றன. இந்த சுருதியானது பிரகிருத அந்தர்யாமியைவிட வேறான

द्रष्टा, श्रोता, मन्ता, विज्ञाता

(பார்க்கிறவன், கேட்கிறவன், மனனம் செய்கிறவன், அறிகிறவன்.)

இல்லை என்று சொல்லுகிறது.

(b) இந்த சுருதியானது வேறு நியந்தா இல்லை என்பதைச் சொல்லும்பொருட்டு ஏற்பட்டிருக்கிறது என்று சொன்னுல், அது யுக்தமன்று. வேறுநியந்தா எந்த பிரஸ்தாபத்திலும் ஏற்படவேயில்லை. स्व (ஆகையால் அவன் இல்லையென்று சொல்லவேண்டிய பிரசக்தி யில்லை.) மேலும் சுருதியானது திர்ஷ்டா இல்லை என்று பொதுவாய் சொல்லியிருக்கிறதேதவிர வேறு நியந்தா இருக்கிறதாக தெரியவே இல்லை. स्व (ஆகையால்அவனை நிஷேதிக்க வேண்டியதில்லை.)

स्वा (இவ்விதமாக நியந்தாவைவிட வேறு ஒருவன் இல்லை என்று ஏற்படுகிறதே, சூத்திரத்தில் பேதபதம் வந்திருக்கிறதே என்று ஆக்ஷேபம் சம்பவிக்க

உத்தரம் சொல்லப்படுகிறது. ஜீவனுக்கும் நியந்தாவுக்கும் பேதம் அவத்தையாலுண்டாகிற சரீரம் இந்திரியங்கள், ஆகிற உபாதிகளால் ஏற்படுகிறதே தவிர வாஸ்தவமன்று. உள்ளிருக்கிற ஆத்மா ஒருவனேதவிர இரண்டு ஆத்மாக்களில்லை. (ரா நான் என்கிற ஞானத்துக்கு ஒருவனே விஷயமாவானேதவிர இருவர்கள் ஆகமாட்டார்கள். விஷயமாகாதது கடம்போல் அனாத்மா, ஆகையால் ஆத்மாவில் பேதமில்லை.) ஒருவனுக்கே உபாதியால் பேதவியவஹாரம் சித்திக்கிறது. கடாகாசம் மகாகாசம்போலும், அப்படியே அறிகிறவன் அறியப்பட்டவஸ்து முதலிய பேதத்தைக் கூறும் சுருதிகளும், பிரத்தியக்ஷம் முதலிய பிரமாணங்களும், சம்சாரானுபவமும், விதிநிஷேத சாஸ்திரங்களும் இவை யெல்லாம் கல்பிதபேதத்தை நாம் ஒப்புக்கொண்டிருப்பதால் பொருந்துகின்றன.

यत्रहि द्वैतमिव भवति तदितर इतरं पश्यति (बृ II-2-14)

அதாவது

(1) எந்தகாலத்தில் துவைதம்போல் ஆகிறதோ அப்போது ஒருவன் வேறு ஒன்றைப்பார்க்கிறான் என்கிற சுருதியானது சர்வ வியவஹாரமும் அவித்தியா விஷயம் என்று காட்டுகிறது.

यत्रत्वस्य सर्वमात्मैवाभूत् तत् केन कं पश्येत् (बृ II-4-14)

ரா (2) எந்தகாலத்தில் எல்லாம் ஆத்மாவாகிறதோ அப்போது எதினுல் எதை எவன் பார்ப்பான் என்கிற சுருதியானது ஞானத்தால் சகல வியவஹாரமும் நிவர்த்தியாய்விடுகிறதாக சொல்லுகிறது. (35)

ரா (ஆகையால் அந்தர்யாமி பிராமணம் ஞேயப் பிரம்மத்தில் தாற்பரியப்படுகிறது என்பது சித்தம் (36)

XI. ரா பூர்வபக்ஷபலன்:—ஜீவாதி உபாஸ்தி ரா சித்தாந்தபலன்:-பிரத்தியக். பிரம்மஞானம் (ஆ) பிரம் மோபாஸ்தி. (37)

XII. வியாசாதிகரண மாலைப்படி

அத்வைதச் சுருக்கம்.

1. சுலோகங்கள்:—

प्रधानं जीव ईशो वा कोन्तर्यामी जगत्प्रति ।
कारणत्वात्प्रधानं स्याज्जीवो वा कर्मणो मुखात् ॥
जीवैकत्वामृतत्वादेरन्तर्यामी परमेश्वरः ।
द्रष्टृत्वादेर्नप्रधानं न जीवोऽपि नियम्यतः ॥ (38)

2. விஷயவாக்கியம்:—

பிருஹதாரணியகத்தில் 5-வது அத்தியாயத்தில் யாஞ்ஞவல்கியர் உத்தாலகரைப்பார்த்து.

यः पृथिवीमन्तरो यमयत्येष त आत्माऽन्तर्याम्यमृतः ॥ (39)

3. பூர்வபக்ஷம்:—பிருதிவி முதலியவைகளுக்கு அந்தர்யாமி விஷயத்தில் சந்தேகம் மூன்று விதமாய் ஏற்பட, பிரதானம்தான் என்று நிச்சயம் ஏற்பட்டது. ஏனெனின் அது சகலஜகலத்துக்கும் உபாதானமா

யிருப்பதால், அதின் காரியத்தை உத்தேசித்து அது நியாமகமாயிருக்க முடியும்.

அல்லது, ஜீவன் அந்தர்யாமியா யிருக்கலாம். அவன் தர்மாதர்மரூப கர்மத்தைச் செய்கிறவன். அந்த கர்மந்தான் பலத்தைக் கொடுக்கும்பொருட்டு போகசாதனமான ஜகத்தை உண்டாக்குகிறது. ஆகையால் கர்மமூலமாக ஜகத்தை உண்டுபண்ணுகிறதினால் ஜீவன் அந்தர்யாமி. (40)

4. சித்தாந்தம்:—

एष त आत्माऽन्तर्याम्यमृतः

என்பதாய் அந்தர்யாமிக்கு ஜீவதாதாத்மியமும் அமிருதத்வமும் கூறப்படுகின்றன. அப்படியே பிருதிவிமுதலிய சகலவஸ்துக்களிலும் அந்தர்யாமி என்பதினால் சர்வவியாபித்வம் உபதேசிக்கப்படுகின்றது. இக்காரணங்களால் அந்தர்யாமி பரமேசுவரனே. பிரதானம் அந்தர்யாமியாகமாட்டாது. ஏனெனில் अदृष्टो द्रष्टा अश्रुतः श्रोता என்று சொல்லியிருக்கிறது. அசேதன பிரதானத்துக்கு இவைகள் பொருந்தா. ஜீவனும் அந்தர்யாமியாகமாட்டான். ஏனெனின் य आत्मानमन्तरो यमयति என்பதில் ஜீவன் நியமனம் செய்யப்படுவதாக சுருதி சொல்லுகிறது. ஆகையால் அந்தர்யாமி பரமேசுவரனே. (41)

XIV. விசிஷ்டாத்வைதப்படி

I-2-5-வது அதிகரணம். (18)

1. இதில் அடங்கிய சூத்திரங்கள் 3(18-20) 42

2. விஷயவாக்கியம் बृ -III-7-1. (அத்வை) 43

3. சந்தேகம்:—அந்தர்யாமி

(1) பிரத்தியகாத்மாவா ?

(2) பரமாத்மாவா ? (44)

4. பூர்வபக்ஷம்:—பிரத்தியகாத்மாதான். ஏனெனின் வாக்கியசேஷத்தில் திரஷ்டா, சுரோதா, மந்தா என்று சொல்லியிருக்கிறது. இவனைவிட வேறு திரஷ்டாவும் இல்லை என்றும் சொல்லியிருக்கிறது. (45)

5. சித்தாந்தம்:—பிருதிவிமுதல் அத்தியாத்மம் வரையிலுள்ளவைகளிலிருக்கும் அந்தர்யாமி பரமாத்மாவே. ஏனெனின் சர்வாந்தரத்வம் சகலராலும் அறியப்படாததன்மை, சர்வசரீரத்வம், சர்வநியந்திருத்வம் இவைகள் அவருக்கே பொருந்தும். (46)

6. 18-வது சூத்திரம்.

अन्तर्याम्यधिदैवाधिलोकादिषु तद्धर्मव्यपदेशात्

அதிதைவ அதிலோக முதலிய பதங்களுடன் கூடின வாக்கியங்களில் சொல்லப்பட்ட அந்தர்யாமி பரமாத்மாவே. காரணம் முன் சொல்லப்பட்டிருக்கிறது. (47)

7. 1-2-5-ல் 2 (19)

न च स्मार्तमतद्धर्माभिलापात् शारीरश्च

இந்த அந்தர்யாமி பிரதானமல்ல, ஜீவனுமல்ல ஏனெனின் இவர்களிடத்தில் சம்பவிக்காத தர்மங்கள் சொல்லப்பட்டிருக்கின்றன. (48)

8. 1-2-5-ல் 3 (20)

उभयेपि हि भेदेनैनमधीयते ।२०

காண்வாள், மாத்தியந்தினாள் இருவரும் (அத்வைதத்தில்போலவே அர்த்தம்)

ஆகையால் அந்தர்யாமி பரமாத்மா. (49)

XIV. துவைதப்படி

I-2-5வது அதிகரணம்.

1. இதின் கருத்து:— விஷ்ணு சர்வாந்தர்யாமி என்பதாம். (50)

2. இதிலடங்கிய சூத்திரங்கள் 3 (18-20) (51)

3. இதின் விஷயவாக்கியம்:—

एषत आत्मा अन्तर्याम्यमृतः

என்னும் बृ-V-7-3வது வாக்கியம். (52)

4. சங்கதி:—முந்தின அதிகரணத்தில் கூறிய அமிருதத்வம் ஆக்ஷேபிக்கப்படுவதால் ஆக்ஷேபசங்கதி. (53)

5. சந்தேகம்:—அந்தர்யாமி

(1) பிரகிருதி ஜீவர்களா ? அல்லது

(2) விஷ்ணுவா ? (54)

6. பூர்வபக்ஷம்:—

1. அந்தர்யாமி பிரகிருதி. ஏனெனின் यस्य पृथिवी शरीरं முதலியதால் பிருதிவி முதலியவைகளை சரீரமாயுடையது பிரகிருதி என்று தெரியவருகிறது. பூர்வபக்ஷத்தின் சரீரம் என்கிற இடத்தில் சரீர சப்தம் ஸ்வரூபத்தைக் கூறுவதுபோல் இவ்விடத்திலும் சரீரசப்தம் ஸ்வரூபத்தைக் கூறுகிறது.

2-வது பூர்வபக்ஷம்:—

பிருதிவியாதிகளின் அபிமானியான ஜீவர்கள் அந்தர்யாமியாக இருக்கலாம். அவர்கள் விஷயத்தில் பிருதிவி முதலியவைகள் ஸ்தூலசரீரமாக இருக்கலாம். ஆகவே பிரகிருதியானது ஜீவனுவது அமிருதமாயிருக்கலாம். இதனுல் முந்தின அதிகரணத்தில் சொல்லிய அமிருதத்வம் அகஷிஸ்தபுருஷனை விஷ்ணுவென்று நிச்சயிக்க சாதகமாகமாட்டாது. (55)

7 சித்தாந்தம்:—உள்ளிருந்துகொண்டு நியமனம்செய்யும் லிங்கம் பிரம்மத்தினிடத்தில் சமன்வயப்படுகிறது.

18-வது சூத்திரம்:—

अन्तर्यामि அந்தர்யாமி விஷ்ணுவே. பிரதானம் முதலியது அன்று. ஏனெனின்

अधिदैवादिषु ஆதிதைவாதி பிரகரணங்களில்

तद्धर्मोपदेशात् அந்தர்யாமியின் தர்மங்கள் (அதாவது பிருதிவிமுதலியதால் அறியப்படாமை, இவைகளுக்குள்ளிருத்தல் இவைகள்) சொல்லப்பட்டிருக்கின்றன. (56)

I-2-19-வது சூத்திரம்.

பிருதிவிமுதலியதை சரீரமாயுடைய பிரகிருதி ஜீவர்கள் அந்தர்யாமியாகமாட்டார்கள் என்பதற்குக் காரணம் சொல்லுகிறார்.

स्मार्तं கபிலஸ்மிருதியில் பிருதிவிபாதிஸ்வரூபமாகச் சொல்லப்பட்ட பிரதானம்.

न च அந்தர்யாமி அல்ல. च சப்தம் நிச்சயத்தைக் கூறுகிறது.

अतद्धर्माभिलापात् அறியப்படாமை முதலியவை விஷ்ணுவைத்தவிர மற்றவிடங்களில் பொருந்துகிறதில்லை. அதுபோல் விஷ்ணுவைவிட வேறான பிரதான ஜீவர்களின் தர்மங்களாகிய திரிகுணத்வம். சம்சாரித்வம் முதலியவைகள் சொல்லப்படவில்லை. ஆகையால் அந்தர்யாமி விஷ்ணுவே. (57)

I-2 20-வது சூத்திரம்.

ஜீவபக்ஷத்தில் சாதகமில்லை என்பதைச்சொல்லி பாதகமிருக்கிறதென்றும் சொல்லுகிறார்.

हि ஏக்காரணத்தால்

उभये अपि = आत्मोन्तरः என்பதாய் மாத்தியந்தினர்களும்

विज्ञानादन्तरः என்று காண்வர்களும் ஆகிய இரண்டு சாகைக்காரர்களும்

एनं ஜீவனை

भेदेन அந்தர்யாமியைவிட வேறாக

अधीयते படிக்கிறார்களோ அக்காரணத்தினால்

शारीरः ஜீவன்

च அந்தர்யாமி அன்று. (58)

பூர்வபக்ஷபலன்:—பூர்வாதிகரணத்தின் ஆக்ஷேபம்.

சித்தாந்தபலன்:—சமாதானம். (59)

I-2-5-வது அதிகரணம்

முற்றிற்று.

## 1-2-6-வது அதிகரணத்தின்
### அனுக்கிரமணிகை.

## 1-2-6-வது அதிகரணம்.

I. இதின் பெயர்:— அதிர்ஸ்யத்வாதி கரணமென்பதாம். (1)

II. இதின் கருத்து:—பூதயோனி என்பது பரமேசுவரனுக்கே பொருந்து மென்பதாம். (2)

III. இதின் விஷயவாக்கியம்:—

अथ परा यया तदक्षरमधिगम्यते यत्तदद्रेश्यमग्राह्यमगोत्रम वर्णमचक्षुःश्रोत्रं तदपाणिपादं नित्यं विभुं सर्वगतं सुसूक्ष्मं तदव्ययं यद्भूतयोनिं परिपश्यन्ति धीराः (मु-I-1-5, 6)

श्रोत्रं तदपाणिपादं नित्यं विभुं सवर्गतं सुसूक्ष्मं
तदव्ययं यद्भूतयोनिं परिपश्यन्ति धीराः (मु I-1-5-6)

அர்த்தம்:-கர்பவித்தியாரூபமான அபரவித்தையை (ரிக்வேதாதிகளை) சொன்னபிறகு, நிர்க்குணபிரம்மம் எந்த வித்தையால் அறியப்படுமோ அந்த வித்தையானது பரவித்தை என்று சொல்லப்படுகிறது.

அது ஞானேந்திரியங்களால் அறியப்படாதது கர்மேந்திரியங்களால் கிரகிக்கப்படாதது; குலமற்றது பிராமணஜாதி முதலியவையற்றது; கண்காது அற்றது கால்கையற்றது; வியாபகம்; அதிசூட்சுமம்; நாசமற்றது; குறைவற்றது, பூதங்களுக்கு யோனி அதாவது காரணம். இப்படி எதை ஞானிகள் பார்க்கிறார்களோ அது அக்ஷரம். அதின்வித்தை பரவித்தை எனப்படும். (3)

IV. சங்கதி:—

ா (a) முந்தின அதிகரணத்துக்கும் இந்த அதிகரணத்துக்கும்:-முந்தின அதிகரணத்தில் பார்த்தல் முதலிய தர்மங்கள் பிரதானத்துக்குப் பொருந்தவில்லை என்று நிரூபித்திருந்தாலும், அதிர்ச்யத்வம் (பார்க்கப்படாமை) முதலிய தர்மங்கள் பிரதானத்துக்கும் பொருந்துமாகையால் இந்த விஷயவாக்கியம் பிரதானத்தையே கூறட்டுமே என்பதாய் பிரத்தியுதாஹரண சங்கதி ஏற்படுகிறது. (4)

ஆ (b) பாதசங்கதி:— பிரகிருதம் பூதயோனிப் பிரகரணம். சிலந்திப்பூச்சி திருஷ்டாந்தத்தினுல் இந்த பூதயோனி பிரதானமாயுமிருக்கலாம். அப்போது சர்வஞ்ஞத்வாதி பிரம்மலிங்கம் பொருந்தமாட்டாது. முடிவில் பூதயோனியானது பிரம்மம்தான் என்று தீர்மானமாகப்போகிறது. ஆகவே பூதயோனி சப்தத்தைக் கேட்டமாத்திரத்தில் பிரம்மலிங்கம் பொருந்துவதாக ஸ்பஷ்டமாகத் தெரியவராதபடியால் இந்த அதிகரணத்தை இந்த பாதத்திற் சேர்க்கப்பட்டது.

(3) இதரசங்கதிகள்:—முன்போலவே (5)

V. சந்தேகம்:—பார்க்கப்படாமை முதலிய தர்மங்களுடன்கூடிய பூதயோனியானது

(a) பிரதானமா? அல்லது
(b) ஜீவனு? அல்லது
(c) பரமேசுவரனு?

சந்தேகபீஜம்:—ஷை தர்மங்கள் பிரம்மத்துக்கும் பிரதானத்துக்கும் பொதுவாயிருப்பதே காரணம். (6)

VI. இதிலடங்கிய சூத்திரங்கள்— 3(21-22-23) இரங்கனுதர் என்னும் விருத்திகாரர்: प्रकरणत्वात् என்னும் ஒரு அதிக சூத்திரத்தையும் இந்த அதிகரணத்தில் சேர்த்திருக்கிறூர். பாஷ்யத்திலும் இது விளங்குகிறது. பாஷியத்தை வியாக்கியானம் செய்த பாமதிகாரர் முதலானவர்கள் இதை பாஷ்யவசனமாகவே அறிகிறூர்கள். பூதயோனி ஈசுவரன்என்பதற்கு மூன்று சூத்திரங்களிலும் வெவ்வேறு காரணங்கள் கூறப்படுகின்றன. (7)

VII. பூர்வபக்ஷம்:—

1. இவ்விடத்தில் அசேதனமான பிரதானத்தை பூதயோனி என்று சொல்லுவது யுக்தம். ஏனெனின் அசேதனங்களையே திருஷ்டாந்தமாகக் கூறியிருக்கிறது. எப்படியெனின்

यथोर्णनाभिः सृजते गृण्हते च यथा
पृथिव्यामोषधयः संभवन्ति यथा सतः पुरुषात्
केशलोमानि तथाऽक्षरात् संभवतीह विश्वं (मु-I-I-7)

அர்த்தம்:—

எப்படி சிலந்திப்பூச்சியானது நூலை வெளியில் விட்டு மறுபடியும் உள்ளே இழுத்துக்கொள்ளுகிறதோ எப்படி பூமியினின்றும் ஒஷதிகள்உண்டாகின்றனவோ எப்படி ஜீவிக்கும் புருஷனிடமிருந்து மயிர்கள் நகங்கள் உண்டாகின்றனவோ, அப்படி அக்ஷரத்தினின்றும் ஜகத்து உண்டாகிறது.

சிலந்திப்பூச்சியும் புருஷனும் திருஷ்டாந்தத்தில் சேதனங்களே. ஏ (எப்படிஅசேதனமே திருஷ்டாந்தமாக சொல்லியிருக்கிறதென்று சொல்லலாமெனின்

அப்படியல்ல, கேவலம் சேதனத்தினின்றும் நூல் உண்டாகவில்லை, மயிர் உண்டாகவில்லை. பின் என்னவெனின் சேதனத்தால் அதிஷ்டிதமான அசேதனமாகிய சிலந்திப்பூச்சிசரீரத்தினின்றும் நூலும் புருஷசரீரத்தினின்றும் மயிரும் உண்டாகிறதென்பது பிரசித்தம். (8)

2. மேலும் முன் பிரதானம் பார்க்கப்படாவிட்டாலும், ஸ்வபம் பார்க்கும் குணமுள்ளதாக இராதபடியால் பிரதானம் கூறப்படவில்லை என்று சொல்லப்பட்டது. இப்போது பார்க்கப்படாமை முதலிய தர்மங்கள் பிரதான விஷயத்திலும் பொருந்துகின்றன. விருத்ததர்மம் யாதொன்றும் சொல்லப்படவில்லை. ஸ (ஆகையால் பிரதானம்தான் உத்தேசிக்கப்பட்டதாக இருக்கட்டுமே).

ஆக்ஷேபம்:—

यः सर्वज्ञः सर्ववित् ( मु-I-1-9)

என்கிற வாக்கியம் அசேதனமான பிரதானத்தினிடத்தில் பொருந்தமாட்டாது. ஆகவே பிரதானத்தை பூதயோனியாக எப்படிச்சொல்லலாம்?

சமாதானம்:—(இந்த பிரகரணம் முழுமையும் பிரதானபரம்தான் என்று நான் சொல்லவில்லை. பின் என்னவெனின், பூதயோனிசம்பந்தம் பிரதானபரம்; மற்றது பிரம்மபரம். இந்த பிரகரணத்தில் எந்தஎந்த இடத்தில் பிரம்மலிங்கம் காணப்படுகிறதோ அதை பிரம்மபரமாக அறியவேண்டியது. ஆகையால் விரோதமில்லை. இப்படியிருக்க)

यया तदक्षरमाधिगम्यते यत्तदद्रेश्यम् ( मु.1-1-5)

(அதாவது எதினால் அந்த அக்ஷரம் அறியப்படுகிறதோ எது பார்வைக்கு விஷயமாகாமலிருக்கிறதோ)

என்கிற வாக்கியத்தில் அக்ஷரசப்தத்தால் அதிர்சியத்வம் முதலிய குணங்களுடன் கூடின பூதயோனியைக் குறிப்பிட்டு,

மறுபடியும்

अक्षरात् परतः परः [मु-II-1-2)

(அதாவது சிரேஷ்டமான அக்ஷரத்தைவிட பரம்)

என்று சுருதி கூறுகிறது. இவ்விடத்தில் அக்ஷரத்தைவிட பரமாக எதை சுருதி சொல்லுகிறதோ அது சர்வஞ்ஞம், சர்வவித்தாக இருக்கவேண்டும். பிரதானம்தான் அக்ஷரசப்தத்தால் கூறப்பட்ட பூதயோனி. (9)

3. யோனிசப்தம் நிமித்தகாரணத்தைக் கூறுகிறதாயிருந்தால் அப்போது சாரீரனும் (ஜீவனும்) பூதயோனியாகலாம். ஏனெனின் ஜீவன் தர்மாதர்மங்களால் பூதசமுதாயத்தின் உற்பத்திக்குக் காரணமாயிருக்கிறான். (10)

VIII. சித்தாந்தம்:—

1. இப்படி பூர்வபக்ஷி சொல்ல

# अदृश्यत्वादिगुणकोधर्मोक्तेः ।२१।

என்கிற சூத்திரத்தில் வியாசர் சமாதானம் சொல்லுகிறார். (11)

2. பதவுரை:—

अदृश्यत्वादिगुणकः பார்க்கப்படாமை முதலியகுணங்களுடையது

( परमेश्वरः பரமேசுவரன்)

धर्मोक्तेः தர்மம் சொல்லப்பட்டிருப்பதால். (12)

3. பொழிப்புரை:—

பார்க்கப்படாமை முதலிய குணங்களுடன் கூடினது பிரம்மமே. ஏனெனின் (அதின் தர்மம் சொல்லப்பட்டிருக்கிறது.) (13)

4. பாஷ்யம்:—

1. अदृश्यत्वादिगुणकः எவன் பார்க்கப்படாமை முதலிய குணங்களுடைய பூதயோனியோ அவன் பரமேசுவரனாகவே இருக்கவேண்டும். மற்றவனாக இருக்கமாட்டான். இது எப்படி தெரியவருகிறது?

2. धर्मोक्तेः—यः सर्वज्ञः सर्ववित् என்பதால் பரமேசுவரனுடையதே தர்மம் இவ்விடத்தில் சொல்லியிருக்கிறதாகக் காணப்படுகிறது. அசேதனமான பிரதானத்திற்காவது உபாதியால் மறைபட்ட திருஷ்டி(ஞானம்) யுடைய ஜீவனுக்காவது சர்வத்தையும் அறியும் தன்மை ஏற்படமாட்டாது. (15)

பரமதகண்டனம்.

அக்ஷரசப்தத்தால் குறிப்பிடப்பட்ட பூதயோனியைவிட பரமானது எதுவோ அதற்கே சர்வஞ்ஞத்தன்மை ஏற்படும்; பூதயோனிக்கு ஏற்படமாட்டாது என்று பூர்வபக்ஷி சொன்ன விஷயத்தில் நாம் சொல்லுவதாவது:—

நீ சொல்லுவது யுக்தமன்று. ஏனெனின்,

अक्षरात् संभवतीह विश्वं ।

என்பதினுல் பூதயோனியை உண்டாகப்போகிற பிரபஞ்சத்துக்கு பிரகிருதியாகச் சொல்லி, பிறகு

यः सर्वज्ञः सर्वविद् यस्य ज्ञानमयं तपः
तस्मादेतद्ब्रह्म नामरूपमन्नं च जायते ।

என்கிற வசனத்தினுல் சர்வஞ்ஞனையும் உண்டாகப்போகிற பிரபஞ்சத்துக்கு ப்ரகிருதியாக சுருதி சொல்லுகிறது. இரண்டிடத்திலும் ஒரேவிதமாக குறிப்பு ஏற்பட்டிருப்பதால், பிரகிருத அக்ஷரமான பூதயோனிக்கே சர்வஞ்ஞத்வம் முதலிய தர்மம் கூறப்பட்டிருக்கிறதென்று தெரியவருகிறது.

(அக்ஷராத் பரத: பர: என்கிற இடத்தில் அக்ஷராத் என்கிற ஐந்தாம் வேற்றுமைபிரயோகத்தால் பூதயோனியானது அசேதனமாக இருக்கவேண்டுமென்றும் அதைவிட பரமானது சேதனம் (புருஷன்) என்றும் பூர்வபக்ஷி சொன்ன விஷயத்தில் நாம் சொல்லுவது யாதெனின்)

अक्षरात् परतः परः என்பதினுலும் பிரகிருத அக்ஷரமான பூதயோனியைவிட வேறானது ஒன்று இருக்கிறதாக சொல்லப்படவில்லை. இது எப்படி தெரியவருகிறது என்னின்:—

येनाक्षरं पुरुषं वेद सत्यं प्रोवाच तां तत्त्वतो ब्रह्मविद्यां (मु-I-2-13)

என்கிற (ம மந்திரத்தில் எந்தஞானத்தால் அக்ஷரமாயும், பூதயோனியாயும், சர்வஞ்ஞனையும் இருக்கிற புருஷனை அறிவானே அப்படிப்பட்ட பிரம்மவித்தையை தகுந்த சிஷ்யனுக்கு குரு சொன்னார் என்று ஆரம்பித்து அடுத்தகண்டத்தில்

अप्राणो ह्यमनाः शुभ्रो ह्यक्षरात् परतः परः (II-1-2)

என்று சொல்லியிருக்கிறது. இந்த அக்ஷரத்தை வேத்தியம் அதாவது அறியத்தக்கதாக சுருதி சொல்லுவதால் இந்த அக்ஷரம் பிரம்மம் என்று முதல் முண்டகவசனத்தால் தெரியவருகிறது. அக்ஷரமே பூதயோனி என்பது விஷயவாக்கியத்தாலேயே தெரியவருகிறது.) ஆகையால் பிரகிருத அக்ஷரமான பூதயோனியை பார்க்கப்படாமை முதலிய குணங்களுடன் கூடினதாகச் சொல்லவேண்டும். ஸ்ரீ (இதனுல் அக்ஷரசப்தம் சேதனபரம் என்று ஸ்தாபிக்கப்பட்டது. இனி வேற்றுமையைப்பற்றிச் சொல்லவேண்டும்.)

அப்படியானுல் ஐந்தாம்வேற்றுமையிற் உபயோகிக்கப்பட்டிருக்கிற அக்ஷரசப்தத்துக்கு அர்த்தமென்னவென்னின் அடுத்த சூத்திரத்தில் உத்தரம் சொல்லுகிறோம். (16

(இனி சமாக்கியையாலும் பூதயோனி பிரம்மம் என்று நிரூபிக்கிறார்.)

மேலும்

परा चैवापरा च (मु-I-1-4)

என்பதினுல் அறியவேண்டிய வித்தைகள் இரண்டு என்று சொல்லப்பட்டிருக்கிறது. இவ்விடத்தில் ரிக்வேதம் முதலிய அபரவித்தையைச் சொல்லி,

अथ परा यया तदक्षरमधिगम्यते ।

என்று சுருதிசொல்லுகிறது. இவ்விடத்தில் அக்ஷரமானது பரவித்தைக்கு விஷயமாக சுருதி சொல்லுகிறது. பார்க்கப்படாமை முதலிய தர்மங்களுடன் கூடின அக்ஷரம் பரமேசுவரனைவிட வேறாக இருக்கும் பக்ஷத்தில், இதைப்பற்றிய வித்தையானது பரவித்தையாகமாட்டாது. விஷயாதிகளாலுண்டாக்கக்கூடிய சுவர்க்காதி பலன், மோக்ஷபலன் ஆகிய பலவித்தியாசத்தினுல் வித்தைகளும் பரமென்றும் அபரமென்றும் இரண்டுவிதமா யிருக்கின்றன. பிரதானத்தைப்பற்றிய வித்தை மோக்ஷபலத்தைக் கொடுக்கும் என்பதாக ஒருவனும் ஒப்புக்கொள்ளவில்லை. உன் பக்ஷத்தில் அக்ஷரமான பூதயோனியைவிட பரமான பரமாத்மா ஒன்று இருப்பதால், மூன்று வித்தைகள் இருப்பதாக அறியவேண்டும். ஆனுல் இரண்டு வித்தைகளைத்தான் அறியவேண்டியது என்று இவ்விடத்தில் சொல்லியிருக்கிறது.

மேலும்,

कस्मिन्नु भगवो विज्ञाते सर्वमिदं विज्ञातं भवति ।

அதாவது எதை அறிந்தமாத்திரத்தில் எல்லாம் அறியப்பட்டதாக ஆகிறது என்று சுருதி கேட்கிறது. சர்வாத்மகமான பிரம்மத்தை அறிந்தால்தான், ஏகவிஞ்ஞானத்தால் சர்வவிஞ்ஞானம் ஏற்படும். அசேதனங்களுக்கு உபாதானமான பிரதானத்தை அறிந்ததினுலும் சர்வமும் அறியப்பட்டதாக ஆகமாட்டாது. அப்படியே போக்யத்தைவிட வேறான போக்தாவான ஜீவனை அறிந்ததினுலும் சர்வமும் அறியப்பட்டதாக ஆகமாட்டாது. (பிரதான ஞானத்தால் ஆத்மஞானம் சித்திக்கமாட்டாது. ஜீவஞானத்தால் போக்

கிய ஞானம் சித்திக்கமாட்டாது.) ஆகையால் ஏக விஞ்ஞானத்தால் சர்வவிஞ்ஞானமென்பது ஏற்படமாட்டாது. (17)

(ரா பிரம்மவித்தியா சப்தத்தாலும் பூதயோனி பிரம்ம மென்பதை இனி கூறுகிறார்)

மேலும்,

स ब्रह्मविद्यां सर्वविद्याप्रतिष्ठामथर्वाय ज्येष्ठाय पुत्राय प्राह (मु-I-1-1)

அதாவது பிரம்மாவானவர் சகல வித்தைகளுக்கும் முடிவான ஸ்தானமாகிய பிரம்மவித்தையைச் சொன்னார் என்று சொல்லியிருக்கிறது. இப்படி சுருதியானது பிரம்மவித்தையை பிரதானமாக ஆரம்பத்திலேயே சொல்லி, பிறகு வித்தைகள் பரமென்றும் அபரமென்றும் இரண்டுவிதமாகச் சொல்லி, அவைகளில் அக்ஷரத்தை அறியக்கூடியது பரவித்தை என்றும் சொல்லி, அந்த பரவித்தையே பிரம்மவித்தை என்பதைக் காண்பிவிக்கிறது. பிரம்மவித்தை என்று பெயருள்ள பரவித்தையால் அறியக்கூடிய அக்ஷரமானது பிரம்மமாகாதபக்ஷத்தில் பிரம்மவித்தை என்னும் பெயர் பாதிக்கப்படுகிறது. (18)

(ரா பிரம்மத்தினிடத்தில் சகலவித்தைகளின் பலன்களும் அடங்கிப்போவதால், பிரம்மவித்தை சகலத்துக்கும் ஸ்தானம் என்று சொல்லப்பட்டது.)

(ரா பரபிரகரணத்தில் அபரவித்தையைச் சொல்லுவானேன் எனின்) பிரம்ம வித்தையின் பிரசம்சையின்பொருட்டு பிரம்மவித்தையை சொல்லுமுன் ரிக்வேதாதிஸ்வரூபமான கர்மவித்தையாகிற அபரவித்தையானது சொல்லப்பட்டது. எப்படியெனின்

प्लवा ह्येते अदृढा यज्ञरूपा अष्टादशोक्तमवरं येषु कर्म ।
एतत् श्रेयो येऽभिनन्दन्ति मूढा जरां मृत्युं ते पुनरेवापि यन्ति॥

என்கிற வசனத்தால் அபரவித்தை நிந்திக்கப்பட்டதாகத் தெரியவருகிறது.

ஷ சுருதியின் கருத்து:—

யஞ்ஞாதிகர்மம் அநித்தியபலத்தைக் கொடுக்கிறது. இதை சிரேயஸாக எவர்கள் சந்தோஷப்படுகிறார்களோ அந்த மூடர்கள் மறுபடியும் ஜரையையும் மரணத்தையும் அடைகிறார்கள்.

அபரவித்தையை நிந்தித்து எவன் விரக்தனாயிருக்கிறானோ அவன் பரவித்தைக்கு அதிகாரி என்று

परीक्ष्य लोकान् कर्मचितान् ब्राह्मणो
निर्वेदमायान्नास्त्यकृतः कृते । तद्विज्ञानार्थं
स गुरुमेवाभिगच्छेत् समित्पाणिः
श्रोत्रियं ब्रह्मनिष्ठम् (I-2-12)

சுருதி சொல்லுகிறது. (19)

அசேதனங்களான பிருதிவிமுதலியவைகளை திருஷ்டாந்தங்களாகச் சொல்லியிருப்பதால், தார்ஷ்டாந்திகத்திலும் பூதயோனியானது அசேதனமாக இருக்கவேணும் என்று பூர்வபக்ஷி சொன்னது அயுக்தம். திருஷ்டாந்தமும் தார்ஷ்டாந்தமும் பூராவாக ஒத்திருக்கவேணும் என்பது நியமமில்லை. திருஷ்டாந்தங்களாகச் சொல்லப்பட்ட பிருதிவிமுதலியவைகள் ஸ்தூலமாயிருப்பதினால் தார்ஷ்டாந்தத்திற் கூறிய பூதயோனியும் ஸ்தூலமாகவே இருக்கவேணும் என்று ஒருவனும் ஒப்புக்கொள்ளவில்லை. (20)

ஆகையால் பார்க்கப்படாமைமுதலிய குணங்களுடன்கூடின பூதயோனி பரமேசுவரனே. (21)

## IX. I-2ல் 2 (22)வது சூத்திரம்.

# विशेषणभेदव्यपदेशाभ्यां च नेतरौ।२२

ஆ 2. முந்தின சூத்திரத்துக்கும் இதற்கும் சம்பந்தம்:—முந்தின சூத்திரத்தில் பூதயோனி ஈசுவரன் என்று நிரூபிக்கப்பட்டது. இதற்கே இந்த சூத்திரத்தில் வேறு காரணத்தைக் கூறுகிறார். (23)

3. பூர்வபக்ஷம்:-यथा सुदीप्तात् என்னும்(मु-II-1-1) மந்திரம் பூதயோனியைக் கூறுகிறதென்பதில் விவாதமில்லை. இந்த பூதயோனியானது பிரம்மமென்று சித்தாந்திகள் சொல்லுகிறார்கள். ஏனெனின் இதற்கு அநுசரணையான ஜீவர்கள் இதினின்றும் உண்டானதாகச் சொல்லியிருக்கிறது. பூர்வபக்ஷிகள் இந்த பூதயோனியைப் பிரதானமென்று சொல்லுகிறார்கள். ஏனெனின் அடுத்த மந்திரத்தில் அக்ஷரத்தைவிட பரமானது ஒன்று இருக்கிறதாகத் தெரியவருகிறது.

(பா பாவங்களுக்கு உற்பத்திஸ்தானம் அக்ஷரம்; அக்ஷரத்துக்கு மேற்பட்டது புருஷன். ஆகவே அக்ஷரமான பூதயோனி புருஷனாகமாட்டாது.)

4. சித்தாந்தம்:—

இந்தசூத்திரத்தில் சித்தாந்தம் கூறப்படுகின்றது.

பதவுரை:— च மேலும்.

विशेषणभेदव्यपदेशाभ्यां விசேஷணம் பேதம் இவை கள் கூறப்பட்டிருப்பதால்

इतरौ மற்றவைகள் (25)

न பூதயோனியன்று.

5. பொழிப்புரை:—

மேலும் விசேஷணம் கூறப்பட்டிருப்பதால் ஜீவன் பூதயோனியன்று, அப்படியே பேதம் கூறப்பட்டிருப்பதால் பிரதானமும் பூதயோனியன்று. (26)

ப. பாஷியம்:—

1. च:—அடியிற்கண்ட காரணத்தாலும் பரமேசுவரனே பூதயோனி.

2. नेतरौ ஜீவனுமன்று, பிரதானமுமன்று.

ஏனெனின்

3. विशेषणभेदव्यपदेशाभ्यां :—दिव्योह्यमूर्तः पुरुषः स बाह्यान्तरोह्यजोऽप्राणोह्यमनाः शुभ्रः (II-1-2)

(அர்த்தம்:—ஸ்வயம் ஜோதியாயும், பூர்ணனுயும், பிரத்தியகாத்மாவாயும், ஸ்தூல சூட்சுமங்களிலிருக்கிறதாயும், பிறப்பற்றதாயும், பிராணன் மனது இவைகளற்றதாயும், சுத்தமாயுமிருக்கிறவன் பரமேசுவரன்.)

.. முதலியவைகள் பிரகிருத பூதயோனியை ஜீவனை விட வேருகக் காட்டுகின்றன. இந்த ஸ்வயம் ஜோதிஸ் முதலிய விசேஷணங்கள் அவித்தையா லுண்டாகிற நாமரூபாத்மகமான அற்பமாயிருக்கிற சரீரத்தின் ஜாட்டியம் முதலிய தர்மங்களை தன்னிடத்தில் கற்பிக்கிற ஜீவனிடத்தில் பொருந்தாவாம். ஆகையால் உபநிஷத்பிரதிபாத்தியமான புருஷனே (பரமாத்மாவே) இவ்விடத்தில் கூறப்படுகிறுன். (29)

அப்படியே अक्षरात् परतः परः என்கிற வாக்கியம் பிரதானத்தையும்விட பிரகிருதமான பூதயோனியானது வேறு என்று காட்டுகிறது. இந்த அக்ஷரமானது

रा (अश्नोति व्याप्नोति स्वविकारजातं அதாவது தன்னுடைய விகாரங்களையெல்லாம் வியாபிக்கிறது. ஆதலால்)

அவ்வியாகிருதம் அதாவது அவ்வியக்தம், அஞ்ஞியான மாயை நாமரூபங்களுக்குக் காரணமான ஈசுவரனுடைய சக்திரூபமா யிருக்கிறது; பூதங்களுடைய சம்ஸ்காரங்களை அடக்கிக் கொண்டிருக்கிறது. ஈசுவரனுகிற சின்மாத்திரத்தை ஆசிரயித்துக்கொண்டிருக்கிறது. அந்த சின்மாத்திரத்துக்கே ஜீவேசுவர பேதத்தைக்காட்டும் உபாதியாயிருக்கிறது. சகல விகாரங்களையும் உத்தேசித்து இது அவிகாரமானதால் இது பரம், இதைவிட பரம் என்பதாய் பேதம் கூறப்பட்டிருப்பதால் பரமாத்மாவே இவ்விடத்தில் கூறப்பட்டதாய் தெரிய வருகிறது. (30)

रा (சூத்திரகாரர் பிரதானத்தைவிட வேறு என்பதாய் பேதத்தைச் சொல்லியிருக்க அஞ்ஞானத்தை விட வேறு என்று நீர் எப்படி அர்த்தம் செய்யலாம் எனின்)

பிரதானம் என்கிற ஒரு சுவதந்திரமான தத்துவம் இருக்கிறது; அதைவிட வேறு என்பதாய் பேதத்தை சூத்திரகாரர் சொல்லவில்லை.

रा (பிரதானமானது कार्यात्मना प्रथ्यिते इति அதாவது காரியரூபமாய் விளங்குகிறபடியால் அப்பெயரடைகிறது. இது அஞ்ஞானமே.) சுருதிக்கு விரோதமன்றியில் அவ்வியாகிருதமென்று பெயருள்ள பூதசூட்சுமமான பிரதானத்தைக் கற்பிக்கிறபட்சத்தில் கற்பிக்கலாம். அதைவிட வேருக சொல்லியிருப்பதால் பூதயோனி பரமேசுவரன்என்று ஏற்படுகிறது31

रा (அஞ்ஞானமே பூதயோனியாக இருக்கட்டுமே எனின் அஞ்ஞானத்தைவிட பரமென்பதினுல் அஞ்ஞானம் பூதயோனியன்று என்று சித்திக்கிறது. இதனுல் சாங்கியத்தில் கற்பிக்கப்பட்ட பிரதானமும் தள்ளப்பட்டதாய்விட்டது.

अ (பாஷ்யத்தில் திவ்யத்வம் முதலிய விசேஷணம் ஜீவனை விலக்குகிறதென்றும், பேதம் பிரதானத்தை விலக்குகிறதென்றும் வியாக்கியானம் செய்யப்பட்டது. இதை உபலக்ஷணமாக வைத்துக்கொள்ளவேண்டியது. ஏனெனின் திவ்யத்வாதிகள் அசேதனமான பிரதானத்துக்கும் பொருந்தாவாகையால் அதை விலக்குகின்றன. அப்படியே பேதமும் ஜீவனை விலக்குகிறது. எப்படியெனின்,

येनाक्षरं पुरुषं वेद सत्यं प्रोवाच तां तत्वतोब्रह्मविद्यां

என்பதினுல் பிரகிருத பூதயோனியானது வேத்தியம்அதாவது அறியத்தக்கதென்றும் முமுக்ஷுவான ஜீவன் அறிகிறவன் என்றும் பேதம் கூறப்பட்டிருக்கிறது. ஆகையால் விசேஷணத்தாலும் பேதத்தாலும் ஜீவனும் பூதயோனியன்று.) (32)

X. I-26ல்-3 (23) வது சூத்திரம்.

**रूपोपन्यासाच्च ॥ २३ ॥** (33)

2. முந்தின சூத்திரத்துக்கும் இதற்கும் சம்பந்தம்:—பரமேசுவரன் பூதயோனி என்று முன் கூறப்பட்டது. இந்த சூத்திரத்தில் இதற்கு வேறு காரணத்தையும் கூறுகிறார். (34)

3. பதவுரை:—

च மேலும்.

रूपोपन्यासात् ரூபத்தைக் கூறியிருப்பதால். (35)

4. பொழிப்புரை.

பரமேசுவரனுடைய ரூபம் கூறப்பட்டிருப்பதாலும் பரமேசுவரனே பூதயோனி. (36)

5. பாஷியம்.

மேலும் अक्षरात् परतः परः என்று சொன்ன பிறகு एतस्माज्जायते प्राणः என்பதால் பிராணன்முதல் பிருதிவிமுடிய தத்துவங்களின் உற்பத்தியைக் கூறி அதே பூதயோனிக்கு அடியிற்கண்ட சுருதியானது, சகல விகாரஸ்வரூபம் என்னும் ரூபத்தைக் கூறுகிறது.

अग्निर्मूर्धा चक्षुषी चन्द्रसूर्यौ
दिशः श्रोत्रे वाग्विवृताश्च वेदाः ।
वायुः प्राणो हृदयं विश्वमस्य पद्भ्यां
पृथिवी ह्येष सर्वभूतान्तरात्मा (मु-II-1-4)

அர்த்தம்:—

அக்கினியே சிரசு, சூரியசந்திரர்கள் கண்கள், திக்குகள் காதுகள், வாக்கு வெளியிடப்பட்ட வேதங்கள், வாயு பிராணன், ஹிருதயம் ஜகத்து, இவனுடைய கால்களினின்றும் பிருதிவி உண்டாயிற்று. இவன் சகலத்துக்கும் அந்தராத்மா.

இந்தவசனம் சகல காரியங்களுக்கும் காரணமான பரமேசுவரனுக்கே பொருந்தும். அற்பசக்தியுள்ள ஜீவனுக்காவது சகல பூதங்களுக்கும் அந்தராத்மாவாகமாட்டாதபடியால் பிரதானத்துக்காவது இது பொருந்தமாட்டாது.

ஆகையால் பரமேசுவரனே பூதயோனியே தவிர மற்றவைகளன்று என்று தெரியவருகிறது. (37)

XI. I 2-23 (a) வது சூத்திரம்.

**प्रकरणात् ॥** (38)

स्व 2. (முந்தின சூத்திரத்துக்கும் இதற்கும் சம்பந்தம்:—முந்தின சூத்திரத்தில் ரூபம் சொல்லியிருப்பதால் பூதயோனி பரமேசுவரனே என்று நிச்சயிக்கப்பட்டது. இந்த ரூபவிவரம் பூதயோனியைப்பற்றியே என்று எப்படி அறியப்படுகின்றது. (39)

உத்தரம்:—प्रकरणात् பிரகரணத்தால் தெரியவருகிறது.

உபாத்தியாயருடைய பிரசங்கத்தில் "இவரிடத்தில் அத்தியயனம்செய். இவர் வேதம் வேதாங்கம் இவைகளின் கரைகண்டவர்." இப்படி வசனங்கள் உபாத்தியாயரையே விஷயமாக்குவதுபோல்,

एतस्माज्जायते प्राणः एष सर्वभूतान्तरात्मा ।

முதலியவைகளிலுள்ள एष என்னும் பதமும் பிரகிருதத்தையே கூறுமானதால், இந்த வசனங்களும் பிரகிருத பூதயோனியையே விஷயமாக்குகின்றன.

பார்க்கப்படாமை முதலிய குணங்களுடன்கூடின பூதயோனிக்கு விக்கிரகம்போல் ரூபம் எப்படிக்கூடும்?

பூதயோனியானது சகலத்துக்கும் ஆத்மா சர்வஸ்வரூபம் என்று சொல்லுவதற்காக அதற்கு ரூபம் சொல்லப்பட்டதேதவிர அதற்கு ரூபம் இருக்கிறதென்பதாய்ச் சொல்ல வசனம் பிறக்கவில்லை. ஆகையால் தோஷமில்லை. நான் அன்னம், நான் அன்னத்தை புஜிக்கிறவன்.

என்கிற (तै III-10-6) வசனம்போலும் (रा ஒரு பிரம்மஞானி தான் சகலத்துக்கும் ஆத்மா என்பதை பிரகடனம் செய்யும்பொருட்டு தான் அன்னம் என்பதாய் பாடுகிறான், தானே அன்னஸ்வரூபம் என்பது அவன் கருத்தல்ல. இதுபோல் இங்கும் அறியவும். (40)

விருத்திகாரர் (உபவர்ஷாசாரியர்) சொல்லுகிறதாவது:—பூதயோனி விஷயத்தில் இந்த ரூபவிவரம் கூறப்படவில்லை. ஏனெனின் சிருஷ்டிக்கப்பட்டவைகளை பற்றி ரூபம் சொல்லப்பட்டிருக்கிறது.

एतस्माज्जायते प्राणोमनः सर्वेन्द्रियाणिच
खं वायुर्ज्योतिरापः पृथिवी विस्वस्य धारिणी

रा அடுத்த மந்திரத்தில் एष सर्वभूतान्तरात्मा என்று சொல்லியிருக்கிறது. அப்பதங்களை இந்த சுருதியிற் சேர்த்துக்கொண்டு இந்த சூத்திராத்மா (ஹிரணியகர்ப்பன்) இந்த பூதயோனியினிடமிருந்து உண்டாகிறான்.

அப்படியே பிராணாதிகளும் உண்டாகிறார்கள். இப்படி பிராணன்முதல் பிருதிவி வரையிலுள்ள தத்துவங்களின் சிருஷ்டியை முதலில் சுருதி சொல்லுகிறது. பிறகு,

तस्मादग्निः समिधो यस्य सूर्यः ।

(அதினின்றும் திபுலோகம் முதலியவை உண்டாயின.)

இந்த சுருதிமுதல்

अतश्च सर्वा ओषधयो रसश्च ।

வரையில் சிருஷ்டிக்கப்பட்டவைகளே சொல்லப்பட்டிருக்கின்றன. ர ஆகையால்மத்தியிலும்சிருஷ்டியைத்தான் சொல்லியிருக்கவேண்டுமென்பது கருத்து. அப்படியிருக்க மத்தியில் பூதயோனியைப்பற்றி சொன்னதாக எப்படி சொல்லலாம். ர (அக்கினி சிரசு என்பதாய் பூதயோனியே சர்வஸ்வரூபம் என்று சொல்லியிருக்கிறதே எனின்) அது அப்படியல்ல. சிருஷ்டியை முடித்து पुरुष एवेदं विश्वं कर्म முதலியதால் சர்வசுத்வரூபத்தை சுருதி உபதேசிக்கிறது.

(रा) ஹிரணியகர்ப்பனுடைய உற்பத்தி மற்ற இடங்களில் சொல்லப்படவில்லையே, இவ்விடத்தில் சொல்லியிருப்பதாக எப்படி சொல்லலாமெனின்.)

மூன்று லோகங்களையும் சரீரமாயுடைய பிரஜாபதி (ஹிரணியகர்ப்பன்) உண்டானவனாக சுருதிஸ்மிருதிகளினின்றும் தெரியவருகிறது. சுருதி பிரமாணம்.

हिरण्यगर्भः समवर्त्तताग्रे भूतस्य जातः पतिरेक आसीत् ॥
सदा धार पृथिवीं धामुते मां कस्मै देवाय हविषा विधेम ॥
(रि-वेद X-121-1)

அர்த்தம்:—பூதங்களின் பதியான ஹிரணியகர்ப்பன் ஈசுவர பிரசாதத்தால் முதலில் உண்டானார். இந்த சூத்திராத்மா சுவர்க்கலோகத்தையும் பூலோகமான பிருதிவியையும் தரிக்கிறார். பிராணஸ்வரூபமான தேவதைக்கு ஹவிஸால் சுசுரூஷை செய்கிறோம். அப்படியே (ஸ்மிருதியாலும்)

स वै शरीरी प्रथमः स वै पुरुष उच्यते
आदिकर्त्ता स भूतानां ब्रह्माग्रे समवर्त्तत

அவனே முதலாவது ஜீவன், அவனே புருஷன் எனப்படுகிறான். பூதங்களின் ஆதிகர்த்தா, அப்படிப்பட்ட பிரம்மா முதலில் உண்டானார்.

(ர விகார புருஷன் சர்வபூதங்களுக்கு அந்தராத்மாவாக எப்படி ஆவான் எனின்.) விகாரபுருஷன் சர்வபூதங்களில் பிராணஸ்வரூபமாயிருப்பதால் சர்வபூதங்களிலும் அந்தராத்மாவாக இருக்கலாம். (பரமதம் முடிந்தது.)

இந்த பக்ஷத்தில் पुरुष एवेदं विश्वं कर्म முதலிய சர்வரூப உபந்யாசமானது பரமேசுவரனை அறிய சாதகமாயிருக்கிறது என்று வியாக்கியானம் செய்யத்தக்கது.

விருத்திகாரர் சொன்னமதம் நியாயவிருத்தமாயிருக்கிறது. அடுத்த வைசுவாநராதிகரணத்தில் அக்கினி சிரசுமுதலிய விவரம் சர்வத்துக்கும் ஆத்மாவான பரமாத்மாவுக்கே சொல்லுவது யுக்தமென்று சொல்லப்போகிறார். சுருதியிலும் இந்த அக்கினி சிரசுமுதலிய கற்பனை பரமாத்மபரமாகவே தெரியவருகிறது. அந்தர்யாமி அதிகரணத்தில் சர்வபூதாந்தராத்மா பரமாத்மாதான் என்று நிரூபிக்கப்பட்டிருக்கிறது. சுருதியும் (வாசகபதமும்) பரமாத்மபரமாயிருக்க ஹிரணியகர்ப்பன் உத்தேசிக்கப்பட்டதாக சொல்லக்கூடாது. ஆகையால் ரூபோபந்யாசம் பரமாத்மாவை உத்தேசித்தே ஏற்பட்டிருக்கிறது. (42)

XII. பூர்வபக்ஷத்தின் பலன்:-அதிரிசியத்துவாதி பதங்கள் பிரதானத்தை விஷயமாக்குவதினால் இந்த பிரகரணத்தில் கூறிய பரமாத்மாவுக்கு நிர்விசேஷத்தன்மை சித்திக்கவில்லை. பிரதானாதி உபாஸ்தி,

சித்தாந்தபலன்:—(ஈ) சித்தாந்தத்தில் இவைகள் பரமாத்ம விஷயமாயிருப்பதால் நிர்விசேஷத்தன்மை சித்திக்கிறது. நிர்குணபிரமஞானம். (43)

XIII. வியாஸாதிகரணமாலைப்படி அத்வைதச்சுருக்கம்.

1. சுலோகங்கள்:—

भूतयोनिः प्रधानं वा जीवो वा यदिवेश्वरः ।
आद्यौ पक्षावुपादाननिमित्तत्वाभिधानतः ॥
ईश्वरो भूतयोनिः स्यात्सर्वज्ञत्वादिकीर्त्तनात् ।
दिव्याद्युक्तेर्न जीवः स्यान्न प्रधानं भिदोक्तितः ॥ (44)

2. விஷயவாக்கியம்:—

முண்டகோபநிஷத்தில்

तदव्ययं यद्भूतयोनिं परिपश्यन्ति धीराः

என்று சொல்லியிருக்கிறது. (45)

3. பூர்வபக்ஷம்:—இவ்விடத்தில் சம்சயம் மூன்றுவிதமாய் ஜனிக்க பிரதானம் அல்லது ஜீவன் என்று நிச்சயம் ஏற்பட்டது. ஏனெனின் யோனி சப்தத்துக்கு உபாதானம் நிமித்தம் இரண்டும் பொருந்தும். பிரதானம் ஜகத்காரணமாக பரிணமிக்கிறதினால் உபாதானமாகலாம். ஜீவன் தர்மாதர்மமூலமாக நிமித்தமாகலாம். (46)

4. சித்தாந்தம்:—

**यः सर्वज्ञः सर्ववित् यस्य ज्ञानमयं तपः**

என்பதில் சாமானியமாய் சர்வஞ்ஞத்வம், விசேஷமாய் சர்வவித்த்வம், பரியாலோசனையால் தபஸ் இப்படிப்பட்ட பிரம்ம லிங்கங்கள் கூறப்பட்டிருப்பதால் பூதயோனி பரமேசுவரன். ஜீவன் பூதயோனியாகமாட்டான். ஏனெனின்,

**दिव्योह्यमूर्तः पुरुषः सबाह्याभ्यन्तरोह्यजः**

என்று சொல்லியிருக்கிறது. உள்ளும் வெளியும் வியாபித்தல், ஜன்மமில்லாமை இவைகள் ஜன்மாதிகளுடன்கூடின ஜீவனுக்குப் பொருந்தா.

பிரதானமும் பூதயோனியாகமாட்டாது. ஏனெனின்,

**अक्षरात् परतः परः** என்று சொல்லியிருக்கிறது அக்ஷர சப்தத்தால் கூறப்படும் பிரதானத்தைவிட பூதயோனி பரம் என்று சொல்லியிருக்கிறது.

ஆகையால் ஈசுவரன் பூதயோனி. (47)

விசிஷ்டாத்வைதப்படி.

## XIV. I-2-6-வது அதிகரணம்.

1. இதிலடங்கிய சூத்திரங்கள்:—3 (20—21—22.) (48)

2. விஷயவாக்கியம்:—முண்டகம் I—1—5, 6 (அத்) (49)

3. சந்தேகம்:—அசத் போலவே. (50)

இந்த வாக்கியங்களால் கூறப்பட்டவர்கள்.

(1) பிரதான புருஷர்களா? அல்லது,

(2) பரமாத்மாவா?

4. பூர்வபக்ஷம்:—பிரதானமும், புருஷனுமாம்.

(1) பூதங்கள் திருசியங்கள் பூதயோனி, அதாவது பூதகாரணம் அதிர்சியம் என்று சொல்லியிருக்கிறது. பூதங்களுக்குக் காரணம் சஜாதீயமானதாக இருக்கவேண்டுமே தவிர விஜாதீயமானதாக இருக்கமாட்டாது. ஆகையால் பூதயோனியானது சூட்சுமமான பிரதானமாகத்தான் இருக்கவேண்டும்.

அப்பிராமண:—என்கிற பதம் அதற்கு ஆசிரயமாக விஜாதீயமான பசுவாதிகளைக் கூறுவதுபோல் அதிர்சியத்வாதி குணங்களும் அவைகளுக்கு ஆசிரயமாகவிஜாதீயமான சேதனரூப பிரம்மத்தைக் கூறாமல் சஜாதீயமான ஜடப்பிரபஞ்சத்தைத்தான் கூறும். அப்படியே

**अक्षरात् परतः परः** என்று சொல்லியிருப்பதால் இதற்கு அதிஷ்டாதா புருஷன். (51)

5. சித்தாந்தம்:—பிரதான புருஷர்களுக்கு சம்பவிக்காத சர்வஞ்ஞத்வாதிகளை சொல்லியிருப்பதால் இந்த வாக்கியங்களால் கூறப்பட்டது பரமாத்மாவே 52

6. சூத்திரார்த்தம்:—

அதிர்சியத்வாதி குணமுடையவர் பரமாத்மா. ஏனெனின் சர்வஞ்ஞத்வாதி தர்மங்கள் சொல்லப்பட்டிருக்கின்றன. (53)

### I-2-6ல் 2 (22)

ஏகவிஞ்ஞானத்தால் சர்வ விஞ்ஞானம் என்கிற விசேஷணம் கூறப்பட்டிருப்பதால் பிரதானம் உத்தேசிக்கப்படவில்லை.

**अक्षरात् परतः परः** அதாவது பிரதானத்தைவிட வேறு என்று பேதம் சொல்லியிருப்பதால் ஜீவனும் உத்தேசிக்கப்படவில்லை. (அத்வைதம்போல) (54)

### I-2-6ல் 3 (23)

**अग्निमूर्धा** முதலிய வாக்கியத்தில் மூன்று லோகங்களையும் சரீரமாய் உடையது என்று சொல்லியிருப்பதால் பரமாத்மாவே கூறப்படுகிறார். (அத்—போலவே.) (55)

## XV. துவைதப்படி I-2-6-வது அதிகரணம்.

I. இதின் கருத்து:—அதிர்சியத்வ முதலிய தர்மங்கள் பரமாத்மாவினுடையவை என்பதாம். (56)

II. இதிலடங்கிய சூத்திரங்கள் 3 (21-23) (57)

III. இதின் விஷயம்:-பிரச்னோபநிஷத்தின்

**द्वे विद्ये वेदितव्ये** என்பது முதல்

**अथ परा यया** வரையிலுள்ள வாக்கியத்திலுள்ள அதிர்சியத்வாதிகள். (58)

IV. சங்கதி:—முந்தின அதிகரணத்தில்,

यं पृथिवी न वेद முதலியவாக்கியங்களால் அறியப்படாமை என்கிற ஹேதுவைக்கொண்டு விஷ்ணுவை நிச்சயம் செய்யப்பட்டது. இந்த அறியப்படாமையே அதிர்வியத்வம் (பார்க்கப்படாமை). இது விஷ்ணுவைத்தவிர வேறிடத்திலும் காணப்படுவதால் விஷ்ணு தர்மம் என்று சொன்னதை ஆக்ஷேபிக்கிறபடியால் ஆக்ஷேபசங்கதி ஏற்படுகிறது.

V. சந்தேகம்:-இந்த சுருதியில் சொல்லிய அக்ஷரம்

(1) சித், அசித், பிரகிருதி, பிரம்மா, ருத்திரன் இவர்களா? அல்லது விஷ்ணுவா? (60)

VI. பூர்வபக்ஷம்:—(1) இந்த அக்ஷரத்தால் கூறப்பட்டது பிரதானம். ஏனெனின் பிருதிவியினின்றும் ஓஷதி உண்டானதுபோல் இந்த அக்ஷரத்தினின்றும் ஜடப்பிரபஞ்சம் உண்டாவதாகச் சொல்லியிருக்கிறது.

(2) कूटस्थोऽक्षर उच्यते

என்கிற ஸ்மிருதிப்படி அக்ஷரபதத்துக்கு லெட்சுமி என்று அர்த்தம். இவன் பிரகிருதியின் அபிமானி தேவதை. ஆகையால் இவனுக்கும் உபாதானகாரணத்தன்மை சம்பவிக்கலாம். ஆகையால் லெட்சுமியாகிய சித்பிரகிருதியும் அக்ஷரசப்தத்தால் கூறப்படலாம்.

(3) स ब्रह्मविद्यां என்கிற ஆரம்பத்தில் பிரம்மசப்தம் இருப்பதால் சதுர்முகனுவது இந்த அக்ஷரசப்தத்தால் கூறப்படலாம்.

(4) कर्त्तारमीशं என்று கடைசியில் ஈசபதம் உபயோகித்திருப்பதால் ருத்திரன் அக்ஷரபதத்தால் கூறப்படலாம். (61)

VII. சித்தாந்தம்:—

21-வது சூத்திரம்:—

अदृश्यत्वादिगुणकः = यत्तदद्रेश्यं

என்கிற சுருதியில் சொல்லிய அதிர்சியத்வாதி குணமுள்ளவன் விஷ்ணுவே. பிரகிருதி முதலியவையன்று. ஏனெனின், धर्मोक्तेः ரிகாதிபரவித்தைக்கு விஷயமாயிருத்தல் முதலிய விஷ்ணுதர்மங்கள்

ययासह हरिर्वेदितव्यः असावदृश्यो निर्गुणः

முதலியசுருதிகளில் சொல்லப்பட்டிருக்கின்றன.

I-2-22-வது சூத்திரம்.

विशेषणभेदव्यपदेशाभ्यां = तपसा चीयते ब्रह्म

என்கிற சுருதியில் சர்வஞ்ஞன் சர்வவித் என்கிற விசேஷணங்களிருப்பதாலும், तस्मादेतद्ब्रह्म என்கிற சுருதியில் அதினின்றும் பிரம்மதேவர் உண்டானர் என்பதாய்ப் பேதம் சொல்லியிருப்பதாலும்,ஆக இந்தகாரணங்களால்

इतरौ சித் அசித் பிரகிருதி பிரம்மா ருத்திரர்கள்

न அதிர்சியத்வம் முதலிய குணமுள்ளவைகளன்று. (63)

I-2-23-வது சூத்திரம்.

அடியிற்கண்ட காரணங்களாலும் அதிர்சியத்வாதி குணகம் விஷ்ணுவே.

रूपोपन्यासात् = यया पश्यः पश्यते रुक्मवर्णे

என்கிற சுருதியில் பரமாத்மாவைப் பொன்வர்ணமுள்ளவனுக்ச் சொல்லியிருப்பதால் அதிர்சியத்வாதி குணகன் விஷ்ணுவே. (64)

பூர்வபக்ஷபலன்:- முந்தின அதிகரணத்தின் ஆக்ஷேபம்.

சித்தாந்தபலன்:—சமாதானம். (65)

1-2-6-வது அதிகரணம்

முற்றிற்று.

## 1-2-7வது அதிகரணத்தின்
### அனுக்கிரமணிகை.

## 1-2-7-வது அதிகரணம்.

I. இதின் பெயர்:—வைசுவாநராதிகரணமென்பதாம். (1)

II. இந்த அதிகரணத்தின் கருத்து:—வைசுவாநர சப்தத்தால் பரமாத்மாவை அறியவேண்டியதென்பதாம். (2)

III. இந்த அதிகரணத்தின் விஷயவாக்கியம்:—

சாந்தோக்கியம் V-11-1-ல் को न आत्मा किं ब्रह्मेति V-11-6-ல் आत्मानमेवेमं वैश्वानरं संप्रत्यध्येषि तमेव नो ब्रूहि இவை முதல் V-18-(1-1-5) ல்

यस्त्वेतमवं प्रादेशमात्रमभिविमानमात्मानं
वैश्वानरमुपास्ते स सर्वेषु लोकेषु सर्वेषु
भूतेषु सर्वेष्वात्मस्वन्नमत्ति ॥ (V-18-1)

तस्य ह वा एतस्यात्मनो वैश्वानरस्य मूर्द्धैव सुतेजाश्चक्षुर्विश्वरूपः प्राणः पृथग्वर्त्मात्मा सन्देहो बहुलो बस्तिरेव रयिः पृथिव्येव पादावुर एव वेदिर्लोमानि बर्हिर्हृदयं गार्हपत्यो मनोऽन्वाहार्यपचन आस्यमाहवनीयः ॥ (V-18-2)

அர்த்தம்:—

रा பிராசீனசாலர், சத்தியயஞ்ஞர், இந்திரத்யும்னர், ஜநகர், புடிலர் ஆகிய ஐந்து ரிஷிகளும் சேர்ந்து

को न आत्मा किं ब्रह्म

எங்களுடைய ஆத்மா யார், பிரம்மம் எது என்று விசாரித்தார்கள். (ஆத்மாவே பிரம்மம் என்பதை ஞாபகப்படுத்தும்பொருட்டு இரண்டு பதங்களின் பிரயோகம்) இந்த ஐந்து பேர்களும் ஆத்மாவை நிச்சயமாய் அறியும்பொருட்டு உத்தாலகரிடம் சென்றார்கள். இவரும் தான் வைசுவாநர ஆத்மாவை செவ்வையாக அறியவில்லை என்று சொன்னதின்பேரில் இவருள்பட ஆறு ரிஷிகளும் கேகயராஜாவான அசுவபதி என்பவர் இதை அறிவார் என்று நினைத்து அவரிடம் சென்று, வைசுவாநர ஆத்மாவை தெரிந்துகொண்டிருக்கிறீர், நீரே எங்களுக்குச் சொல்லவேண்டுமென்றார்கள். அரசன் இவர்களுடைய அஞ்ஞானத்தைப் பார்த்து, இவர்களால் தெரிந்துகொள்ளப்படாதவிஷயம் நம்மால் சொல்லத்தக்கதென்று மனதில் நிச்சயித்து, வைசுவாநர விஷயத்தில் நீங்கள் தெரிந்துகொண்டது என்ன வென்பதாய் ஒவ்வொருவரையும் தனித்தனியாகக் கேட்டார். பிராசீனசாலர் முதலான பேர்கள் தனித்தனியே, சுவர்க்கம், சூரியன், வாயு, ஆகாசம், ஜலம், பிருதிவி இவைகளை முறையே வைசுவாநரனாக அறிவதாகச் சொன்னார்கள். பிறகு இராசாவானவர் சுவர்க்கம் நல்லதேஜோரூபம் சூரியன் அநேகரூபமுள்ளவன் வாயு பலவிதமாய் போகப்பட்டவன், ஆகாசம் எங்கும் வியாபித்திருக்கிறது, ஜலம் தனத்தைக்கொடுக்கிறது, பிருதிவி சகலத்துக்கும் ஆதாரமானதுஎன்று இப்படி சுவர்க்காதிகளின் தனித்தனி குணத்தைச்சொல்லி, தன்னைக்கேட்காமல் சுவர்க்கம் முதலியவைகளே தனித்தனி வைசுவாநரரூபம் என்று நினைத்து வைசுவாநரனுடைய அங்கத்தை வைசுவாநரனாக உபாசித்தீர்களானால் அப்போது முறையே உங்களுடைய சிரசு போய்விடும் கண் போய்விடும், பிராணன் போய்விடும், தேசம் சிதிலமாய்விடும், மூத்திரஸ்தானம் பேதித்துப் போய்விடும், பாதம் சோஷித்துப் போய்விடும், என்று சொல்லியிப்படி தனித்தனி உபாசனையை நிந்தித்து, தேஜோமயமான சுவர்க்கம் இந்த வைசுவாநரனுக்கு சிரசு என்றும், விசுவரூபமான சூரியன் கண் என்றும், இப்படி சிரசு முதலியவைகளை உபதேசித்து சமஸ்த வைசுவாநரனுடைய தியானவிதியை यस्त्वेतमेवं (V-18-1) முதல் கூறுகிறார். அதாவது ஒட்ட அளவு உள்ளவனையும், ஜகத்தை பிரத்தியக்ஷமாய் அறிகிறவனுமிருக்கிற வைசுவாநரனை எவன் உபாசிக்கிறானோ, அவன் சகலலோகங்களிலும், சகல சரீரங்களிலும், சகல ஜீவர்களிடத்திலும் அன்னத்தை புஜிக்கிறான். रा (அதாவது எங்கும் போகத்தை அநுபவிக்கிறான்.) இந்த வைசுவாநர ஆத்மாவுக்கு தேஜோமயமானசுவர்க்கம் சிரசு, கண் விசுவரூபனான சூரியன், பலவிதகதியுள்ள வாயு பிராணன்; எங்கும் வியாபிக்கும் தன்மையுள்ள ஆகாசமே மத்தியபாகம்; தனத்தைக் கொடுக்கும் தன்மையுள்ள ஜலமே மூத்திரஸ்தானம், ஸ்திரத்தன்மையுள்ள பிருதிவியே பாதங்கள்; யஞ்ஞபூமியே மார்பு, மயிர்கள் தர்பம்முதலியவை, ஹிருதயம் கார்ஹபத்தியாக்கினி, மனது அன்வாஹார்ய அக்கினி, வாய் ஆஹவனீயாக்கினி. (3)

IV. சங்கதி:—

(a) முந்தின அதிகரணத்துக்கும் இதற்கும்:—திருஷ்டாந்த சங்கதி:—

रा (1) முந்தின அதிகரணத்தின் விஷயவாக்கியத்தின் ஆரம்பத்திலுள்ள பார்க்கப்படாமை முதலிய தர்

மும், பிந்திய வாக்கியத்திலுள்ள சர்வஞ்ஞதன்மை முதலிய லிங்கத்தால் பிரம்மத்தையே பொருந்தும் என்று நிரூபிக்கப்பட்டது.

இதுபோல் இந்த அதிகரணத்திலும் விஷயவாக்கியத்தில் ஆரம்பத்திலிருக்கிற வைசுவாநர சப்தம் பிந்திய வாக்கியத்திலுள்ள ஹோமசாதக லிங்கத்தால் ஜாடராக்கினியை கூறுகிறபடியால் திருஷ்டாந்தசங்கதி ஏற்படுகிறதென்று பூர்வபக்ஷி சொல்லுகிறான். (4)

ர (2) ஆக்ஷேபசங்கதி:-முந்தின அதிகரணத்தில் சுவர்க்கம் சிரசு என்பதாயுள்ள ரூபம் பரமாத்மாவை பொருந்தும் என்று சொல்லப்பட்டது. அந்த ரூபம் இதர இடங்களிலும் காணப்படுவதால் ஆக்ஷேபசங்கதி ஏற்படுகிறது. (5)

ஆ (3) பிராசங்கிகசங்கதி:— रूपोपन्यासात् என்கிற சூத்திரத்தில் பூதயோனியின் ரூபம் பிரஸ்தாபிக்கப்பட்டது. அதை கேட்டமாத்திரத்தில் மூன்று லோகத்தை சரீரமாயுடைய வைசுவாநரனுடைய ஞாபகம்வர இந்த அதிகரணம் ஏற்பட்டது. ஆகையால் இந்த அதிகரணம் பிரசங்கத்தால் ஏற்பட்டபடியால் பிராசங்கிகசங்கதி ஏற்படுகிறது. (6)

ர (b) பாதசங்கதி:—சுவர்க்கம் சிரசு என்பதாயுள்ள லிங்கம் வேதி (யஞ்ஞபூமி) முதலிய அக்கினி லிங்கத்தால் மறைபட்டிருப்பதால், பிரம்மலிங்கம் அஸ்பஷ்டம் ஆகையால் இந்த அதிகரணம் இந்த பாதத்தில் ஏற்பட்டது. (7)

(c) மற்ற சங்கதிகளை முன்போலவே அறியவும். அதாவது வைசுவாநர வித்தையைக் கூறும் சுருதி சவிசேஷ பிரம்மத்தினிடத்தில் சமன்வயப்படுவதால் இதர சங்கதிகளை முன்போலவே அறியவும். (8)

V. சந்தேகம்:—வைசுவாநர சப்தத்தால் உபதேசிக்கப்படுவது.

(1) ஜாடராக்கினியா?

(2) அல்லது, பூதாக்கினியா?

(3) அல்லது இவைகளின் அபிமானிதேவதையா?

(4) அல்லது ஜீவனா?

(5) அல்லது பரமேசுவரனா?

இவ்விடத்தில் சந்தேககாரணமென்ன.

(a) வைசுவாநரசப்தம் ஜாடராக்கினி பூதாக்கினி, தேவதை, இவர்களுக்கு சாதாரணமாய் உபயோகப்படுகிறது.

(b) ஆத்மபதம் ஜீவனுக்கும் பிரம்மத்துக்கும் உபயோகப்படுகிறது.

இவ்விடத்தில் எதை எடுத்துக்கொள்ளுவது யுக்தம்; எதைத்தள்ளுவது யுக்தம் என்று சந்தேகம் ஏற்படுகின்றது. (9)

VI. இதிலடங்கிய சூத்திரங்கள்:—9 (24 முதல் 32 முடிய) இவைகளில்

24-ல் வைசுவாநரன் ஈசுவரன் என்பது வேதத்தால் தெரியவருகிறதென்பதும்,

25-ல் இந்த அர்த்தமே ஸ்மிருதியாலும் ஊகிக்கும்படியிருக்கிறதென்பதும்,

26-ல் ஜாடராக்கினி அர்த்தமும் பிரம்மவிஷயத்தில் பொருந்துமென்றும், ஜாடராக்கினியே வைசுவாநரனல்லவென்பதும்,

27-ல் வைசுவாநரன் தேவதையுமல்ல, பூதாக்கினியுமல்லவென்பதும்,

28-ல் ஜைமினி ஆசாரியருடைய அபிப்பிராயமும்,

29-ல் ஆஸ்மரத்தியருடைய அபிப்பிராயமும்,

30-ல் பாதரி ஆசாரியருடைய அபிப்பிராயமும்,

31-ல் ஜைமினிஆசாரியருடைய அபிப்பிராயமும்,

32-ல் உபாசனையின்பொருட்டு பரமாத்மாவுக்கு இடம் குறிப்பிடப்படலாமென்பதும விவரிக்கப்படுகிறது. (10)

VII. பூர்வபக்ஷம்:—

(1) இவைகளில் எதை எடுத்துக்கொள்ளுகிறதென்றால், ஜாடராக்கினியை அறியவேண்டியது. எனெனின்,

अयमग्निर्वैश्वानरो योयमन्तः पुरुषे
येनेदमन्नं पच्यते यदिदमद्यते (बृ-V-9)

முதலிய இடங்களில், சரீரத்தில் எவன் இருக்கிறானோ, எவனால் இந்த அன்னம் பக்குவமாகிறதோ, எது இதை புஜிக்கிறதோ, அந்த அக்கினியே வைசுவாநரன் என்று விசேஷமாய் சொல்லியிருப்பதால் இந்த வைசுவாநரன் ஜாடராக்கினியே என்று தெரியவருகிறது. (11)

(2) विश्वस्मा अग्निं भुवनाय देवा वैश्वानरं
केतुमह्नामकृण्वन् (रि-सं X-88-12)

ர அதாவது சகல லோகத்துக்கும் வைசுவாநர அக்கினியை பகலுக்கு அடையாளமாக தேவதைகள்

செய்தார்கள். அதாவது சூரியன் உதயமானவளவில் தினவியவஹாரம் ஏற்படுகிறது.

மேற்படி வேதவசனம் முதலியவைகளில் வைசுவாநர சப்தம் சாதாரணமான அக்கினியை மட்டும் கூறுகிறதாகப் பார்க்கிறோம். (12)

(3) வைசுவாநர சப்தம் அக்கினியை சரீரமாயுடைய தேவதையை கூறலாம். ஏனெனின்,

वैश्वानरस्य सुमतौ स्याम राजा हि
कं भुवनानामभिश्रीः (रि-सं I-8-1)

முதலிய சுருதிகளில் ஐசுவரியம் முதலியவைகளுடன் கூடின தேவதை வைசுவாநர சப்தத்தின் அர்த்தம் என்பதாய் பார்த்திருக்கிறோம். சுருதியின் அர்த்தம்:—

ரா சுகத்தைக்கொடுக்கிற, உலகத்தின் ராஜாவான வைசுவாநரன் ஈசுவரனாயிருப்பதால் அவர் நம்முடைய விஷயத்தில் நல்லமனதுள்ளவராக இருக்கட்டும். (13)

(4) அல்லது ஆத்ம சப்தமும் வைசுவாநர சப்தமும் ஓரேவேற்றுமையில் உபயோகிக்கப்பட்டிருப்பதாலும், ஆரம்பத்தில் को न आत्मा किं तद् ब्रह्म என்பதாய் கேவலம் ஆத்மசப்தம் உபயோகிக்கப்பட்டிருப்பதாலும், ஆத்மசப்த அர்த்தத்தை அனுசரித்திருக்கும்படி வைசுவாநர சப்தத்துக்கும் அர்த்தம்செய்யலாம். அப்படி செய்தாலும் சாரீரஆத்மா அதாவது ஜீவனுகத்தான் இருக்கவேண்டும். ஏனெனின் இவன் போக்தாவாயிருப்பதால் வைசுவாநரன்என்றும் ஜாடராக்கினி சம்பந்தத்தை அடைந்திருக்கிறான். (கங்கையில் இடைத்தெரு, என்பதில் கங்கைக்கரை அர்த்தமாவதுபோல் ஜாடராக்கினி சம்பந்தத்தால் ஜீவனே வைசுவாநரன் என்பபடுகிறான்.) பிராதேசமாத்திரம் (ஒட்ட அளவு) என்பதும் உபாதிபரிச்சின்னமான ஜீவனிடத்தில் பொருந்துகிறது. இப்படி நான்கில் ஏது வைசுவாநர ஞயிருந்தாலும் இருக்கலாம். ஈவரன் வைசுவாநரனல்ல (பூர்வபக்ஷப்படி இன்னதுதான் வைசுவாநரன் என்பது நிச்சயமாகவிட்டாலும் வைசுவாநரன் பரமாத்மா அல்லவென்கிற விஷயத்தில் நிச்சயம் ஏற்பட்டிருக்கிறது.) (14)

ரா இந்த நான்கு பூர்வபக்ஷங்களுக்குள் வைசுவாநரன் ஜாடராக்கினி என்னும் பக்ஷம் முக்கியமானது. ஏனெனின் பிராணாக்கினிஹோத்திர (பிராணஹூதி) ஹோமத்துக்குச் சாதகமான வாய் முதலியவைகள் சொல்லப்பட்டிருக்கிறன. இந்த ஜாடராக்கினி தேகத்தில் வியாபித்திருப்பதால் ஆத்மா சுருதியானது இதற்கு சுவர்க்கம் சிரசு என்றும் இப்படி அவயவங்களை கற்பிப்பதால் இது பிரஹத் பெரியதாயிருக்கிறது. ஆகையால் பிரம்மம் என்று சொல்லப்பட்டிருக்கிறது. (15)

VIII. சித்தாந்தம்:—

1. இப்படி பூர்வபக்ஷிசொல்ல வியாசர் சித்தாந்தத்தை

## वैश्वानरस्साधारणशब्दविशेषात् । २४

என்னும் ஸூத்திரத்தில் கூறுகிறார். (16)

2. பதவுரை:—

वैश्वानरः வைசுவாநரன் (பரமாத்மாவே. ஏனெனின் साधारणशब्दविशेषात् சாதாரண சப்தங்களிருந்தாலும் விசேஷமிருக்கிறது. (17)

3. பொழிப்புரை.

வைசுவாநரன் பரமாத்மாவே. ஏனெனின் வைசுவாநர சப்தம் ஜாடராக்கினி பூதாக்கினி தேவதை இவைகளுக்கு சாதாரணமாயிருந்தாலும், ஆத்மசப்தம் ஜீவனுக்கும் பரமாத்மாவுக்கும் சாதாரணமாயிருந்தாலும், வைசுவாநரசப்தம் பரமாத்மாவையே சொல்லும் என்பதில் விசேஷமிருக்கிறது. (18)

4. பாஷ்யம்.

1. वैश्वानरः வைசுவாநரன் பரமாத்மாவாக இருக்கவேண்டும். ஏனெனின். (19)

2. साधारण शब्दविशेषात् வைசுவாநரசப்தம் (ஜாடராக்கினி, பூதாக்கினி, தேவதை ஆகிய) மூன்றுக்கும் சாதாரணமாயிருந்தாலும், ஆத்மசப்தம் (ஜீவனுக்கும் பிரம்மத்துக்கும் ஆகிய) இரண்டுக்கும் சாதாரணமாயிருந்தாலும்.

तस्य ह वा एतस्यात्मनो वैश्वानरस्य मूर्धैव सुतेजाः (छा V-18-2)

முதலிய சுருதிவசனத்தால், இவைகள் பரமேசுவரனையே கூறுகின்றன வென்று சொல்லும்படியான விசேஷம் காணப்படுகிறது. (20)

ரா (நிர்விசேஷமான பிரம்மத்துக்கு விசேஷம் எப்படி கூடுமெனின்) இவ்விடத்தில் தியானத்தின் பொருட்டு பரமேசுவரனை சுவர்க்கம் சிரசு என்பதாயுள்ள விசேஷண முள்ளவனாயும், மூன்று லோகங்க

ளினுமிருக்கிறவனும், பிரத்தியகாத்மாவாயுமிருக்கிறான் என்றும் அறியத்தக்கது. (21)

(ரா தியானத்தின்பொருட்டு ஜாடராக்கினிக்கும் விசேஷத்தைக் கற்பிக்கலாமே என்று சொன்னால், அந்தகற்பனை பொருந்தாது. ஏனெனின் ஈசுவரன் உபாதானகாரணமாயிருக்கிறான். சகலகாரியங்களின் அவஸ்தைகளையும் காரணத்தில் இருக்கிறதாகச் சொல்லலாமாதலால், சுவர்க்கம் சிரசு என்பதாயுள்ள அவயவ வியவஹாரம் (தியானத்தின்பொருட்டு) பொருந்தும்.

(இதன்கருத்து யாதெனின்:—பரமாத்மா விஷயத்தில் சுவர்க்காதிகள் சிரசுமுதலியவை வாஸ்தவமான அவயவங்கள் என்று சொல்லமுடியாவிட்டாலும், கற்பனையால் சொல்லலாம். இந்த கற்பனை ஜாடராக்கினி முதலியவைகள் விஷயத்திலும் ஏற்படட்டுமேயெனின் லோகத்தில் "இவனுடைய சிரசு" என்கிற இடத்தில் சிரசு எத்துடன் சம்பந்தப்பட்டிருக்கிறதோ அது சேதனரூபமாயும், அந்த சேதனம் உள்ளிருந்து நியமனம் செய்கிறதாயும் தெரியவருகிறது. அப்படியே சர்வத்துக்கும் உபாதானமான பரமாத்மா சகலத்தையும் நியமனம் செய்வதால் பரமாத்மா விஷயத்தில் சிரசுமுதலிய கற்பனை பொருந்தும். ஜாடராக்கினி முதலியவை சகலத்துக்கும் நியந்தாவாக இராதபடியால் அவைகள் விஷயத்தில் கற்பனை பொருந்தமாட்டாது. (22)

ரா (இதர காரணத்தையும் சொல்லுகிறார்.)

(a) स सैव लोकेषु सर्वेषु भूतेषु
सर्वेष्वात्मस्वन्नमत्ति (V-18-1)

என்கிற சுருதியில் சகலலோகம் முதலியவைகளிலுள்ள பலத்தை அனுபவிக்கிறதாக சொல்லியிருக்கிறது. அது பரமகாரணமான பரமாத்மா விஷயத்தில் தான் பொருந்தும். (23)

சாந்தோக்கியத்தில் (6) 24-3ல்:

यथा इषीकातूलं अग्नौ प्रोतं प्रदूयेत
एवं हास्य सर्वे पाप्मानः प्रदूयन्ते

என்று சொல்லியிருக்கிறது. அதாவது வைசுவாநரனை அறிந்தவனுடைய சகல பாபங்களும் நெருப்பில் போடப்பட்ட பஞ்சுபோல் தஹிக்கப்பட்டுபோகின்றன. வைசுவாநரன் பரமாத்மாவாக இருந்தால்தான் இது பொருந்தும். (24)

(b) को न आत्मा किं तद्ब्रह्म என்கிற ஆரம்பவாக்கியத்தில் ஆத்மா, பிரம்மம் என்கிற சப்தங்கள் வந்திருக்கின்றன. இவைகள்முதிப (அதாவது முன்சொன்னவைகள் முதல்) காணப்படும் பிரம்மலிங்கங்கள் பரமேசுவரனையே தெரிவிக்கின்றன. ஆகையால் பரமேசுவரனே வைசுவாநரன். (25)

IX. I-2-7-ல் (25) வது சூத்திரம்.

## स्मर्यमाणमनुमानं स्यादिति।२५ (26)

ரா 2. முந்தின சூத்திரத்துக்கும் இதற்கும் சம்பந்தம்:—சுவர்க்கம் சிரசு என்கிற வசனம் பரமேசுவரனுக்கே பொருந்தும் என்று முன் சொல்லப்பட்டது இது பிசகு. புராணாதிகளில் ஹிரணியகர்ப்பனுக்கும் இப்படி சொல்லிருக்கிற தென்கிற ஆக்ஷேபனையின் பேரில் இந்த சூத்திரம் ஏற்பட்டிருக்கிறது. (27)

3. பதவுரை.

स्मर्यमाणं ஸ்மிருதியிற் சொல்லிய ரூபம்
अनुमानं स्यात् அனுமானமாக இருக்கலாம்.
इति இந்த சப்தம் காரணத்தைக் கூறுகிறது. (28)

4. பொழிப்புரை.

ஸ்மிருதியிற்சொல்லிய ரூபம் சுருதி அர்த்தத்தை ஊஹித்தால் நிச்சயிக்க காரணமாயிருக்கிறது. (29)

5. பாஷ்யம்.

இன்னும் ஒரு காரணத்தாலும் பரமேசுவரனே வைசுவாநரன். ஏனெனின்

यस्याग्निरास्यं द्यौर्मूर्द्धा खं नाभिश्चरणौ क्षितिः
सूर्यश्चक्षुर्दिशः श्रोत्रे तस्मै लोकात्मने नमः

என்கிற பரமாத்மப் பிரகரணத்தில் படிக்கப்பட்ட ஸ்மிருதி வசனத்தில் பரமேசுவரனுக்கே அக்கினி முகம் என்றும், சுவர்க்கம் சிரசு என்றும், இப்படிப்பட்ட மூன்று லோகங்களையும் ஸ்வரூபமாயுடைய ரூபம் சொல்லியிருக்கிறது.

ரா இந்த ஸ்மிருதி வசனம் மூலசுருதிவசன ஆதாரத்தை அபேக்ஷிக்கிறது. இந்த ஆதாரம் சமான அர்த்தத்தைக்கூறும் இந்த வைசுவாநரத்தைப்பற்றிச் சொல்லிய சுருதியில்தான் காணப்படுகிறது. ஸ்மிருதி வசனம் பரமேசுவரனை வியக்தமாய் சொல்லுவதால் அதற்கு ஆதாரமான மூலசுருதியிலுள்ள வைசுவாநரசப்தமும்

பரமாத்மாவையே கூறவேண்டும் என்று அனுமானிக்கும் பொருட்டு ஸ்மிருதி வசனம் கமகமா (சாதகமா) யிருக்கிறது.

इति :—இந்த சப்தம் காரணத்தைக் கூறுகிறது. மேற்சொன்ன ஹேதுவாலேயும் வைசுவாநரன் பரமாத்மாவே. மேற்படி ஸ்மிருதி வசனத்தில் तस्मै लोकात्मने नमः என்பதினால் ஸ்மிருதி ஸ்தோத்திரரூபம் என்று சொன்னாலும் மூலவேதவாக்கியமில்லாவிடின் சுவர்க்கம் சிரசு என்பதாய் நிரூபணம் செய்யப்பட்ட ஸ்தோத்திரங்கூட கேவலம் மனுஷிரால் செய்யமுடியாது.

द्यां मूर्द्धानं यस्य विप्रा वदन्ति
खं वै नाभिं चन्द्रसूर्यौ च नेत्रे ॥
दिशः श्रोत्रे विद्धि पादौ क्षितिं च
सोऽचिन्त्यात्मा सर्वभूतप्रणेता ॥

இப்படிப்பட்ட ஸ்மிருதிகளையும் இந்த சுருதிக்கு உதாகரணமாகச் சொல்லலாம். (30)

I-2-7-ல்-3 (26) வது சூத்திரம்.

**शब्दादिभ्योऽन्तः प्रतिष्ठानाच्च नेति-चेन्न तथा दृष्ट्युपदेशादसम्भवात् पुरुषमपि चैनमधीयते ।२६।** (31)

2. முந்தின சூத்திரத்துக்கும் இதற்கும் சம்பந்தம் :—முந்தின சூத்திரத்தில் வைசுவாநரன் பரமேசுவரனே என்று நிச்சயம் செய்வதை இந்த சூத்திரத்தில் ஆக்ஷேபித்து முந்தின நிச்சயத்தையே ஸ்திரப்படுத்துகிறார். (32)

3. பதஉரை.

शब्दादिभ्यः சப்தம் முதலியவைகளாலும்.
अन्तः प्रतिष्ठानात् च உள்ளே இருப்பதாலும்
न வைசுவாநரன் பரமேசுவரனல்ல
इति चेत् என்று சொன்னால்.
न அது அப்படியன்று.
तथा दृष्ट्युपदेशात् அந்த திருஷ்டியுடன் உபதேசிக்கும்படி சொல்லியிருப்பதாலும்.
असंभवात् பொருத்தம் ஏற்படாமையாலும் (வைசுவாநரன் பரமேசுவரனே.)
एनं இவனை.
पुरुषमपि च புருஷன் என்றும்.
अधीयते படிக்கிறார்கள். (33)

பொழிப்புரை.

4. வைசுவாநர சப்தத்துக்கு ஜாடராக்கினி என்கிற வேறு அர்த்தம் ஏற்பட்டிருப்பதாலும், சரீரத்துக்குள் இருக்கிறான் என்று சொல்லியிருப்பதாலும் (இது ஜடராக்கினிக்கும் பொருந்தும்). வைசுவாநரன் பரமேசுவரனல்லவென்று சொல்லும்பக்ஷத்தில், அது சரியன்று என்று நாம் சொல்லுகிறோம். ஏனெனின் பரமாத்மாவை ஜாடராக்கினி ரூபமாய் தியானிக்கும்படி உபதேசம் ஏற்பட்டிருக்கிறது. சுவர்க்கம் சிரசு என்பதாயுள்ள விவரம் ஜாடராக்கினிக்குப் பொருந்தமாட்டாது. வாஜஸனேயிகளும் வைசுவாநரனை புருஷனாக அறிகிறார்கள். (ஜாடராக்கினியை புருஷனாக அறியவில்லை) (34)

1. न :—இவ்விடத்தில் ஒரு ஆக்ஷேபம் :—பரமேசுவரன் வைசுவாநரனாகமாட்டான். ஏனெனின் शब्दादिभ्योऽन्तः प्रतिष्ठानात् என்று சொல்லியிருக்கிறது.

(1) சப்தமானது வைசுவாநர சப்தம் இது பரமேசுவரனை கூறமாட்டாது. ஏனெனின் வேறு அர்த்தத்தில் அது உபயோகப்படுகிறது.

(2) அப்படியே அக்கினி சப்தமும் स एषोऽग्निर्वैश्वानरः என்பதாய் ர அக்கினி இரஹஸ்யத்தில் வைசுவாநர வித்தையில் ஈசுவரனை கூறவில்லை என்று சொல்லியிருக்கிறது.

(3) ஆதி சப்தத்தால் வைசுவாநராக்கினிக்கு கார்ஹபத்தியாக்கினி ஹிருதயம் என்றும், அன்வாஹார்யாக்கினி மனது என்றும், ஆஹவநீயாக்கினி முகம் என்றும் சொல்லிய கற்பனையை (சாந் V-18-2) அறியவேண்டியது.

மேலும்,

तद्यद्भक्तं प्रथममागच्छेत् तद्धोमीयम् (சா-V-19-1)

அதாவது முதலில் சாப்பிடப்பட்ட அன்னம் ஹோமசாதனமாயிருக்கிறது. அதினால் பிராணாக்கினி ஹோத்திரம் செய்யப்படத்தக்கது. இந்த பிராணஹூதிக்கு ஜாடராக்கினி ஸ்தானமாக சொல்லப்பட்டிருக்கிறது.

இந்த காரணங்களால் ஜாடராக்கினியே வைசுவாநரன் என்று அறியத்தக்கது. (36)

अन्तः प्रतिष्ठानात् :— पुरुषेऽन्तः प्रतिष्ठितं वेद

அதாவது புருஷனுக்குள் வைக்கப்பட்டிருப்பதை அறி என்று சொல்லியிருப்பதால், உள்ளிருப்பதும் ஜாடராக்கினியையே பொருந்துகிறது. (37)

3. मूर्द्धैव सुतेजाः முதலிய விசேஷகாரணத்தால் பரமாத்மா வைசுவாநரன் என்று சொன்ன விஷயத்தில் நாம் (பூர்வபக்ஷி) சொல்லுகிறதாவது:—

இந்த விசேஷணம் இரண்டுபேர்கள் விஷயத்திலும் விளங்கும்போது, பரமேசுவரன் விஷயத்திலேயே இது பொருந்தும் என்றும் ஜாடரவிஷயத்தில் பொருந்தமாட்டாதென்றும் இந்த நிச்சயம் எப்படி ஏற்பட்டது.

रा (சுவர்க்கம் சிரசு என்பதாயுள்ள விசேஷம் ஈசுவரனுக்கே பொருந்தும் என்றும், ஹோமாதார விசேஷம் ஜாடராக்கினிக்குப் பொருந்தும் என்றும், ஆகையால் இரண்டு விஷயங்களிலும் பலம் சமமாயிருக்கிறதென்றும் சொன்னாலும் பரமேசுவரனுடைய விசேஷம் ஜாடராக்கினியினிடத்தில் பொருந்தமாட்டாதாகையாலும், ஜாடரனுடைய விசேஷம் பரமேசுவரனிடத்தில் பொருந்தும்படி கற்பிக்க முடியுமாதலாலும் பரமேசுவரபக்ஷமே பலமானது என்று சித்தாந்தி சொல்லும்பக்ஷத்தில் பூர்வபக்ஷியானவன், ஜாடரனை விட்டுவிட்டு வேறு ஒன்றை எடுத்துக் கொள்ளுவதாகச் சொல்லுகிறான். அதாவது) பூதாக்கினிதான் இவ்விடத்தில் உத்தேசிக்கப்பட்டது. அது உள்ளும் வெளியிலுமிருக்கிறது.

यो भानुना पृथिवीं द्यामुतेमामाततान रोदसी अन्तरिक्षम् ( रि-सं-X-88-3)

रा அதாவது பிருதிவியையும் சுவர்க்கத்தையும் இவைகளுக்கு மத்தியிலிருக்கிற அந்தரிக்ஷத்தையும் எந்த பூதாக்கினி காந்தியால் வியாபிக்கிறதோ அது தியானிக்கத்தக்கது என்று சொல்லியபடி பூதாக்கினிக்கு பூலோகம் முதலியவைகளுடன் சம்பந்தம் தெரியவருகிறது. (38)

4. रा (கேவலம் ஜடரூபமாயிருக்கிறதானது தியானிக்கத் தக்கதல்லவென்று சொன்னால் அக்கினியை சரீரமாயுடைய தேவதைக்கு சாமர்த்தியபலத்தால், சுவர்க்கம் சிரசு என்பதாயுள்ள விசேஷம் ஏற்படக் கூடும்.) (39)

इति चेत् ஆகையால் பரமேசுவரன் வைசுவாநரனல்லவென்கிற பூர்வபக்ஷத்துக்கு சித்தாந்தி சொல்லுகிறதாவது. (40)

3 न சப்தாதிகாரணங்களால் பரமேசுவரனல்லவென்று சொன்னது அயுக்தம். ஏனெனின், (41)

तथा दृष्ट्युपदेशात् :— मनो ब्रह्मेति उपासीत

மனதை பிரம்மமாக உபாசி என்று சொல்லியது போல் ஜாடராக்கினியையும் பரமேசுவரரூபமாக உபாசிக்கும்படி உபதேசம் ஏற்பட்டிருக்கிறது, (42)

रा இதில் அக்கினிபதமும் வைசுவாநர பதமும் பரமேசுவரனுக்கு பிரதீக வாசகங்கள். இவைகளை பரமேசுவரனை உபாசிக்கும்படி முன் சொல்லப்பட்டது. இப்போது இவைகளை உபாதியாக உடைய பரமேசுவரனை உபாசிக்கும்படி சொல்லுகிறார், அதாவது

मनोमयः प्राणशरीरः भारूपः

முதலியவைகளில் மனோபாதியுடையவன் உபாசிக்கத்தக்கவன் என்று சொல்லியதுபோல் இவ்விடத்திலும் ஜாடராக்கினியை உபாதியாயுடைய பரமேசுவரன் உபாசிக்கத்தக்கவன் என்று உபதேசம் ஏற்படுகிறது. (43)

असंभवात्:—பரமேசுவரன் இவ்விடத்தில் கூறப்படவில்லை, கேவலம் ஜாடராக்கினி கூறப்பட்டிருக்கிறது என்று சொன்னால் मूर्द्धैव सुतेजाः முதலிய விசேஷம் பொருந்தமாட்டாது. இந்த விசேஷம் தேவதை பூதாக்கினிகளுக்கும் பொருந்தமாட்டாதென்பதை அடுத்த சூத்திரத்தில் சொல்லுகிறோம். (44)

पुरुषमपि चैनमधीयते கேவலம் ஜாடராக்கினியைச் சொல்லியிருக்கும்பக்ஷத்தில் புருஷனுக்குள் இருக்கிறதாக சொன்னதானது பொருந்தும். அதையே புருஷனைச் சொன்னதானது பொருந்தமாட்டாது. வாஜஸநேயிகள்

स एषोऽग्निर्वैश्वानरो यत् पुरुषः स योहैतमेवमग्निं वैश्वानरं पुरुषविधं पुरुषेन्तःप्रतिष्ठितं वेद

(அதாவது இந்த அக்கினி வைசுவாநரன் புருஷன். புருஷனை இந்த அக்கினி வைசுவாநரனை எவன் அறிகிறானோ அவன் எங்கும் போகங்களை புஜிக்கிறான்.)

என்பதாய் சதபதபிராமணம் X-6-1-11-ல் சொல்லியபடி வைசுவாநரனை புருஷனைச் சொல்லுகிறார்

கள். பரமேசுவரன் சர்வஸ்வரூபமாயிருப்பதால் புருஷனாக இருக்கலாம் புருஷனுக்குள் இருக்கிறதாகவும் சொல்லலாம். (45)

சிலர் சூத்திரத்திலேயே पुरुषविधमपि என்கிற வார்த்தைகளை चेन् என்பதற்குமுன் படிக்கிறார்கள். அப்போது அர்த்தமென்ன வெனின்:—வைசுவாநரனை கேவலம் ஜாடராக்கினியாக அறிந்தால் புருஷனுக்குள் இருக்கிறதாகமட்டும் சொல்லலாம். புருஷவிதம் என்று சொல்லமுடியாது. ஆனால் வாஜஸநேயிகள்

पुरुषविधं पुरुषेन्तः प्रतिष्ठितं वेद

என்கிற வசனத்தால் இந்த வைசுவாநரனை புருஷவிதம் என்றும் அறிகிறார்கள் (சொல்லுகிறார்கள்).

ர (ஜாடரனுக்கும் புருஷவிதத்வம் வரட்டுமேயெனின் பிரகரணம் பிரம்ம பரமானதால், ஜாடரனை புருஷவிதம் என்று சொல்லமுடியாது.) பிரகரணத்தினால் புருஷவிதம் என்பதற்கு என்ன அர்த்தமெனின் சுவர்க்கத்தை சிரசாக உடையவனும், (மற்ற அவயவங்களையும் அப்படியே அறியவேண்டியது) பூமியை காலாக உடையவனுமிருக்கிற விராட்தேஹம் பரமேசுவரனுக்கு அதிதைவதமான புருஷாகாரம் உபாசகனுடைய சிரசு முதல் மோவாய்கட்டை வரையிலுள்ள அங்கங்களில் இருக்கிறதாகச் சொல்லப்பட்ட தேகாகாரம் ஈசுவரனுக்கு அத்தியாத்மகமான புருஷாகாரம். (46)

XI. I-2-7-ல்-4 (27) வது சூத்திரம்.

1. **अत एव न देवता भूतं च।२७** (47)

2. முந்தின சூத்திரத்துக்கும் இதற்கும் சம்பந்தம்:-சுவர்க்கம் சிரசு என்பதாயுள்ள விசேஷம் ஜாடராக்கினிக்கு பொருந்தமாட்டாதென்று சொல்லி இப்போது தேவதைக்கும் பூதாக்கினிக்கும் பொருந்தமாட்டாதென்று நிரூபிக்கிறார். (48)

3. பத உரை.

अत एव ஆகையாலேயே

देवता தேவதையும்

भूतं च பூதாக்கினியும்

न வைசுவாநரனாக மாட்டாது. (49)

4. பொழிப்புரை.

மேற்சொன்ன ஹேதுக்களினால் வைசுவாநரன் தேவதையுமல்ல, பூதாக்கினியுமல்ல. (50)

5. பாஷ்யம்.

அ-கை:— முற்கூறிய மந்திர வர்ணத்தில் பூதாக்கினிக்கும் சுவர்க்கலோகம் முதலியதின் சம்பந்தம் தெரியவருவதால் मूर्द्धैव सुतेजाः முதலிய அவயவகற்பனை பூதாக்கினிக்கே பொருந்தும், அப்படியே அக்கினியை சரீரமாயுடைய தேவதைக்கும் சாமார்த்திய பலத்தால் பொருந்தும் என்று யாதொன்றை பூர்வபக்ஷி சொன்னாரோ அது பரிஹரிக்கத்தக்கது.

अतएव மேற்சொன்ன ஹேதுக்களால் அதாவது,

ர (1) சுவர்க்கம் சிரசு என்னும் விவரம்.

(2) சர்வலோக பலத்தை புஜித்தல்.

(3) சகலபாபத்தையும் போக்கடித்தல். 51

न देवता வைசுவாநரன் தேவதையல்ல. (52)

भूतं च அப்படியே பூதாக்கினியும் வைசுவாநரனல்ல. உஷ்ணமாயும் பிரகாசமாயும் மட்டுமிருக்கிற பூதாக்கினிக்கு சுவர்க்கம் சிரசு என்பதாய் கற்பிக்கமுடியாது. ஏனெனின் ஒரு விகாரம் மற்றொரு விகாரத்துக்கு ஆத்மாவாயி (ஸ்வரூபமாயி) ருக்கமாட்டாது. (53)

அப்படியே தேவதைக்கு சாமார்த்தியபலமிருந்தாலும், சுவர்க்கம் சிரசு என்பதாய் கற்பிக்கமுடியாது.

ஏனெனில் தேவதை அவைகளுக்குக் காரணமன்று. சாமார்த்தியமும் பரமேசுவராதீனம்.

ஆத்மசப்தம் பொருந்ாது என்பது எல்லாபக்ஷங்களிலும் இருக்கவேயிருக்கிறது. (54)

XII. I 2-7-ல்-5 (28) வது சூத்திரம்.

**साक्षादप्यविरोधं जैमिनिः।२८** (55)

2. முந்தின சூத்திரத்துக்கும் இதற்கும் சம்பந்தம்:-अन्तः प्रतिष्ठितत्वं முதலியதை அனுசரித்து பரமேசுவரனை ஜாடராக்கினியை பிரதீகமாகவுடையவனாகவாவது ஜாடராக்கினியை உபாதியாயுடையவனாகவாவது உபாசிக்கவேண்டியது என்று முந்தினசூத்திரத்தில் சொல்லப்பட்டது. இப்போது பிரதீக உபாதிகற்பனைகளன்றியிலேயே சாக்ஷாத் பரமேசுவரனை உபாசிக்கவேண்டியதாக ஒப்புக்கொள்ளுவதில் சப்தாதிகளுக்கு யாதொரு விரோதமுமில்லை என்று ஜைமினி ஆசாரியர் எண்ணங்கொள்ளுகிறார் என்று இந்த சூத்திரத்தில் சொல்லப்படுகின்றது. (56)

3. பதஉரை:—

साक्षात् अपि சாக்ஷாத்தாயும் கூட

अविरोधं விரோதமில்லை என்று

जैमिनिः ஜைமினி (எண்ணுகிறார்). (57)

4. பொழிப்புரை:—

பிரதிகம், உபாதி, இவைகளன்றியில் கேவலம் ஈசுவரனையே உபாசிக்கவேண்டியது என்று சொல்லும் பக்ஷத்திலும் வைசுவாநரசப்தாதிகளால் யாதொரு விரோதமும் ஏற்படவில்லைஎன்று ஜைமினி ஆசாரியர் சொல்லுகிறார். (58)

5. பாஷ்யம்:—

ஜாடராக்கினியை கிரகிக்காதபக்ஷத்தில் அந்தப்பிரதிஷ்டித:-என்கிற வசனம், வைசுவாநர சப்தம்முதலிய காரணங்கள் விரோதப்படுமேயெனின் அந்தப்பிரதிஷ்டித என்கிற வசனத்தால் விரோதம் ஏற்படவில்லை.

## पुरुषविधं पुरुषेन्तः प्रतिष्ठितं वेद

(புருஷாகாரமாயும் புருஷனுக்குள் இருக்கிறதாயும்) சொன்னதானது ஜாடராக்கினி அபிப்பிராயத்தால் அல்ல. ஏனெனின் ஜாடராக்கினி பிரகிருதமன்று. அதின் பெயரேசொல்லப்படவில்லை. பின்னேயோவெனின் சிரசுமுதல் மோவாய்கட்டைவரையிலுள்ள புருஷனுடைய அவயவங்களுக்குள் ஈசுவரனுக்கு புருஷாகாரம் கற்பிக்கப்பட்டிருக்கிறது. அந்த அபிப்பிராயத்தால்

## पुरुषविधं पुरुषेन्तः प्रतिष्ठितं

என்று சொல்லப்பட்டது. விருக்ஷத்தால் பிரதிஷ்டிதமான கிளையைப் பார்க்கிறான் என்பது போலும். (நகசிகபரியந்தமுள்ள புருஷசரீரத்தில் சிரசுமுதல் மோவாய்க்கட்டை வரையிலுள்ள அங்கங்கள், விருக்ஷத்தில் சாகைகள்போல், வைக்கப்பட்டிருக்கின்றன. அவைகளிலிருக்கிற வைசுவாநரன் पुरुषेन्तः प्रतिष्ठितं என்று சொல்லப்படுகிறான். கிளைகளிலிருக்கிற பக்ஷிகள் விருக்ஷத்திலிருக்கிறதாக சொல்லப்படுவதுபோல வைசுவாநரன் புருஷனுக்குள்ளிருக்கிறதாக சொல்லப்படுகிறான்.)

அல்லது இதற்கே வேறுவிதமாயும் அர்த்தம் செய்யலாம். புருஷவிதம் என்பதற்கு அத்தியாத்ம அதிதைவதமான உபாதியுடைய புருஷாகாரம் என்று அர்த்தம் சொல்லப்பட்டது. இந்த உபாதியுள்ள பரமாத்மா சாக்ஷிரூபமாக புருஷனுக்குள் இருக்கிறான் என்று சொல்லலாம். (59)

முன்பின் ஆலோசனைசெய்து பார்க்கும் அளவில் பரமாத்மாவையே கிரகிக்கவேண்டியதாக இருக்கிறது என்று நிச்சயமாகிறது. அப்போது வைசுவாநரசப்தமும் பரமாத்ம விஷயமாகவே யிருக்கவேண்டும். ஆகையால் எப்படியாவது பரமாத்மாவை வைசுவாநர சப்தம் கூறும்படி அர்த்தம் செய்யவேண்டும்.

वैश्वानरः = (1) विश्वः + च + अयं + नरः च

அதாவது இவன் விசுவனும் (சர்வஸ்வரூபனும் நரனும்) ஜீவனுமிருக்கிறான்.

(2) विश्वेषां नरः சகல விகாரங்களுக்கும் கர்த்தா.

विश्वे नराः अस्य इति विश्वानरः

அதாவது சகலஜீவர்களும் இவனால் நியமனம் செய்யப்படுவதால் பரமாத்மா விசுவாநரன். விசுவாநரனே வைசுவாநரன், ரக்ஷனே ராக்ஷசன் என்பதுபோலும், வய: என்பதே வாயஸம் என்பது போலும். (60)

அக்கினிசப்தம் அகி (கமனம்) என்னும் பகுதியிலிருந்து வருகிறது. நி என்னும் பிரத்தியயம் சேர்ந்த உடன் அக்கினி என்று பதம் சித்திக்கிறது. கர்மபலத்தை அடையும்படி செய்வதால் அக்கினி, அக்கிரணீ என்று சொல்லப்படுகின்றது. ஆகையால் அக்கினி சப்தம் பரமாத்மா விஷயமாகவே ஏற்படுகிறது.

கார்ஹபத்தியாதி கற்பனை ஏற்பட்டிருக்கிறதே எனின், கார்ஹபத்தியம் முதலிய கற்பனையும் பிராணாஹுதிஸ்தானமும், சர்வஸ்வரூபமான பரமாத்மாவினிடத்திலேயும் பொருந்தும். (61)

### XIII. I-2-7 ல் 6 (29) வது சூத்திரம்.

## अभिव्यक्तेरित्याश्मरथ्यः ॥२९ (62)

2. முந்தின சூத்திரத்துக்கும் இதற்கும் சம்பந்தம்:—வைசுவாநர சப்தத்தால் பரமேசுவரனை அறியும் பக்ஷத்தில், பிராதேசமாத்திர சுருதி எப்படிபொருந்தும் என்பதை விவரித்துச்சொல்லும் பொருட்டு இந்த சூத்திரம் ஏற்பட்டது. (63)

3. பதவுரை:—

अभिव्यक्तेः அபிவ்யக்தியின்பொருட்டு

इति என்று

आश्मरथ्यः ஆஸ்மரத்தியர் (எண்ணுகிறார்) (64)

4. பொழிப்புரை:— பரமேசுவரன் வியக்தமாய் காணப்படும்பொருட்டு ஸ்வல்ப இடத்தில் விளங்கலாம் என்று ஆஸ்மரத்தியர் எண்ணங்கொள்ளுகிறார்.

5. பாஷ்யம்:—

अभिव्यक्तेः அளவில் அகப்படாத பரமேசுவரனுக்கு ஒட்டையிடமானது வியக்தமாகும்பொருட்டு ஏற்படலாம். உபாசகர்களுடைய அனுக்கிரகத்தின் பொருட்டு பரமேசுவரன் ஒட்டைப்பரிமாணமாக வியக்தமாகிறான். அவரை அறிய சாதகமான ஹிருதயம் முதலிய விசேஷ ஸ்தானங்களில் விசேஷமாய் அவர் பிரகாசிக்கிறார். ஆகையால் பரமேசுவரனிடத்திலும் பிராதேசமாத்திர சுருதியானது உபாசகர்களுக்கு வியக்தமாய் விளங்கும்பொருட்டுப் பொருந்தும் என்று ஆஸ்மரத்திய ஆசாரியர் எண்ணங்கொள்ளுகிறார்.

XIV. I-2-7 ல் 7 (30) வது சூத்திரம்.

अनुस्मृतेर्बादरिः ॥३० (67)

2. முந்தின சூத்திரத்துக்கும் இதற்கும் சம்பந்தம்:—முன் ஆஸ்மரத்தியருடைய அபிப்பிராயம் சொல்லப்பட்டது. இப்போது பாதரி என்பவரின் அபிப்பிராயம் கூறப்படுகின்றது. (68)

3. பதஉரை:—

अनुस्मृतेः ஸ்மரணையினால்

(इति என்று)

बादरिः பாதரி: என்பவர் சொல்லுகிறார். (69)

4. பொழிப்புரை:—

ஒட்டச்சாண் ஹிருதயத்திலிருக்கிற மனதினால் பரமேசுவரன் ஸ்மரிக்கப்படுவதினால் பரமேசுவரனுக்கு ஒட்டச்சாணிடம் கற்பிக்கலாமென்று பாதரி என்பவர் எண்ணங்கொள்ளுகிறார். (70)

5. பாஷியம்:—

அல்லது ஒட்டச்சாண் அளவுள்ள ஹிருதயத்தில் இருக்கிற மனதினால் இந்த ஈசுவரன் ஸ்மரிக்கப்படுகிறான். அதினால் பிராதேசமாத்திரன் என்று சொல்லப்படுகிறான். படியால் அளக்கப்பட்ட யவை என்னும் தான்னியம் படி என்று சொல்லப்படுவதுபோலும். யவைக்கு ஸ்வத: அளவு உண்டு. இது படியுடன் சம்பந்தப்பட்டதினால் வியக்தமாகிறது. அப்படி இவ்விடத்தில் பரமேசுவரனுக்கு ஹிருதய சம்பந்தத்தால் வியக்தமாகும்படியான எவ்வளவு பரிமாணமுமில்லை. ஆயினும், ஹிருதயம் பிராதேசமாத்திரமாயிருக்கிறது. அதில் மனது இருக்கிறதால் மனதும் பிராதேசமாத்திரம் என்று சொல்லப்படுகிறது. இந்த மனதால் பரமாத்மா ஸ்மரிக்கப்படுவதால் பரமாத்மாவும் பிராதேசமாத்திரம் எனப்படுகிறான். இந்த அர்த்தத்தைத்தான் வைத்துக்கொண்டு பிராதேசமாத்திர சுருதி ஏற்பட்டிருக்கிறது அல்லது பிராதேசமாத்திர சுருதிக்கு அர்த்தம் ஏற்படும்பொருட்டு பரமாத்மா அப்பிராதேசமாத்திரனாயிருந்தாலும் பிராதேசமாத்திரம் என்று ஸ்மரிக்கத்தக்கவன். இவ்விதமாய் பரமேசுவர விஷயமாய் ஏற்பட்ட பிராதேசமாத்திர சுருதியானது (அவருடைய) ஸ்மரணையை நிமித்தமாய் வைத்துக்கொண்டு பிரவிருத்திக்கிறது என்று பாதரி என்கிற ஆசாரியர் எண்ணங்கொள்ளுகிறார். (71)

XV. I-2-7 ல் 8 (31) வது சூத்திரம்.

संपत्तेरिति जैमिनिस्तथा हि दर्शयति॥

2. முந்தின சூத்திரத்துக்கும் இதற்கும் சம்பந்தம்:-முந்தின இரண்டு சூத்திரங்களும் பிராதேசமாத்திர சுருதிக்கு முக்கியார்த்தத்தைச் சொல்லாமலும் வேறு சுருதியை அனுசரித்து இராமலும், எப்படியாவது ஒரு அர்த்தத்தைகற்பிக்கவேண்டுமென்கிற கருத்துடன் கிரமத்தின்பேரில் ஒரு அர்த்தத்தைச் சொல்லியிருக்கின்றன. ஆகையால் இந்த தோஷங்களற்ற அர்த்தத்தைச் சொல்லும்பொருட்டு பிரகிருத சூத்திரம் பிரவிர்த்தித்திருக்கின்றது. (72)

3. பதஉரை:—

संपत्तेः சம்பத்தியினால்

इति என்று

जैमिनिः ஜைமினி ஆசாரியர்

(मन्यते எண்ணுகிறார்)

तथाहि அப்படியே

दर्शयति (சுருதி) காண்பிவிக்கிறது. (73)

4. பொழிப்புரை:—

பிராதேசமாத்திர சுருதிக்கு அர்த்தத்தை சம்பத்தியால் அறியவேண்டியது என்று ஜைமினி எண்ணங்கொள்ளுகிறார். அப்படி சுருதியும் காண்பிவிக்கிறது.

5. பாஷியம்:—

அல்லது, சம்பத்தி ஆதாரத்தின்பேரில் பிராதேச மாத்திர சுருதி ஏற்பட்டிருக்கலாம். எப்படி எனின், வாஜஸநேய பிராமணத்தில் அடியிற்கண்ட சுருதியில் மூன்றுலோகங்களையும் சரீரமாயுடைய வைசுவாநரனுடைய சுவர்க்கம் முதல் பிருதிவி பரியந்தமுள்ள அவயவங்கள் புருஷசரீரத்தில் சிரசுமுதல் மோவாய்கட்டை வரையிலுள்ள அவயவங்களில் காட்டப்பட்டிருக்கின்றன. இப்படி சமான அர்த்தத்தைக்கூறும் வாஜஸநேய பிராமணம் பரமேசுவரனுடைய பிராதேசமாத்திரத்தை விளக்கிவைக்கிறது.

प्रादेशमात्रमिव ह वै देवाः सुविदिताः अभिसंपन्नाः तथा नु व एतान् वक्ष्याामि यथा प्रादेशमात्रमभिसंपादयिष्यामीतिसहोवाच मूर्धानमुपदिशन्नुवाच । एष वा अतिष्ठा वैश्वानरः। इति चक्षुषी उपदिशन्नु वाच । एष वै सुतेजा वैश्वानरः इति नासिके उपदिशन्नुवाच । एष वै पृथग्वर्त्मात्मा वैश्वानरः इति । मुख्यमाकाशमुपदिशन्नुवाच । एष वै बहुलोवैश्वानरः इति । मुख्या अप उपदिशन्नुवाच । एष वै रयिर्वैश्वानरः इति ॥

ர இதின்கருத்து:—முந்தினகாலத்தில் தேவதைகள் ஈசுவரனை அபரிச்சின்னனாயிருந்தும் பிராதேசமாத்திரம்போல அறிந்தார்கள். அவர்கள் அறிந்தபடி நான் உங்களுக்குச் சொல்லுகிறேன் என்று அரசன் பிராசீனசாலர் முதலான பேர்களுக்குச் சொல்லுகிறதாக பிரதிஞ்ஞைசெய்து, தன்னுடைய சிரசைக் கையால் தொட்டு இந்த சிரசானது வைசுவாநரனுக்கு சிரசாகிற சுவர்க்கலோகம்; தன்னுடைய கண்ணைத்தொட்டு காண்பிவித்து இது வைசுவாநரனுடைய கண்ணாகிற சூரியன், மூக்கைத்தொட்டு காண்பிவித்து இதிலிருக்கிற வாயு வைசுவாநரனுடைய பிராணன், முகத்திலுள்ள ஆகாசத்தை குறிப்பிட்டு இது வைசுவாநரனுடைய மத்தியபாகம்; முகத்திலிருக்கிற உமிழ்நீரைக் குறிப்பிட்டு இது வைசுவாநரனுடைய மூத்திரஸ்தானம், மோவாய்க்கட்டையை குறிப்பிட்டு இது வைசுவாநரனுடைய பாதமாகிற பிருதிவி என்றும் இவ்விதமாய் உபதேசித்தான். வாஜஸநேயத்தில் ஸ்வர்க்கலோகம் பூமுதலிய லோகங்களுக்கும் மேலிருப்பதாயும் சூரியன் நல்லதேஜஸுள்ளவனென்றும் சொல்லியிருக்கிறது. சாந்தோக்கியத்தில் சுவர்க்கம் நல்ல தேஜஸுள்ளதென்றும், சூரியன் அநேகரூபமுள்ளவனென்றும் சொல்லியிருக்கிறது. ஆயினும் இந்த விசேஷணங்களால் ஒன்றும் குறைந்துபோகவில்லை. பிராதேசமாத்திர சுருதி ஒரேவிதமாயிருக்கிறது. சாகைகள் பேதப்பட்டாலும், சர்வசாகைகளிலும் காணப்படும் வைசுவாநராதிகளின் உபாசனையும் ஒன்றுதானிருக்கின்றது.

சம்பத்தியால் அறியக்கூடிய பிராதேச மாத்திர சுருதியின் அர்த்தம் மிகவும் யுக்தமானது என்று ஜைமினி ஆசாரியர் எண்ணங்கொள்ளுகிறார். (76)

## XVI. I-2 7ல் 9 (32)வது சூத்திரம்.

## आमनन्ति चैनमस्मिन् । ३२ (77)

2. முந்தின சூத்திரத்துக்கும் இதற்கும் சம்பந்தம்:—

ஏ அளவுக்குட்படாத பரமாத்மாவை சிரசுமுதல் மோவாய்க்கட்டைவரையிலுள்ள ஸ்தானத்திலிருப்பதாயும், அப்படி இருப்பவரை தியானம்செய்ய வேண்டியதென்றும் எப்படி சொல்லலாம் எனின், இதைவிட சூட்சுமமான இடத்தில் பரமாத்மாவை தியானிக்கும்படி சொல்லியிருக்கிறது என்று இப்போது சொல்லுகிறார்.

3. பதஉரை:—

एनं பரமாத்மாவை

अस्मिन् சிரசுக்கும் மோவாய்க்கட்டைக்கும் மத்தியில்

आमनन्ति சொல்லுகிறார்கள்.

(4) பொழிப்புரையும் பாஷ்யமும்.

ஜாபாலர்கள் பரமாத்மாவை சிரசுமுதல் மோவாய்க்கட்டைவரையிலுள்ள இடத்தின் மத்தியிலிருக்கிறதாக சொல்லுகிறார்கள்.

(5) பாஷ்யம்:—

य एषोऽनन्तोऽव्यक्त आत्मा सोऽविमुक्ते प्रतिष्ठित इति सोविमुक्तः कस्मिन् प्रतिष्ठित इति वरणायां नस्यां च मध्ये प्रतिष्ठित इति का वै वरणा, का च नासीति

அர்த்தம்:—எவன் அநந்தனாயும், அபரிச்சின்னனாயும், ஆகையால் அவ்வியக்தமாயும் இருக்கிறானோ அவனை எப்படி நான் அறிவேன் என்று அத்திரி மஹரிஷி கேட்க யாஞ்ஞியவல்கியர் அந்த ஈசுவரன் காமாதிகளால் பத்தமான ஜீவனிடத்தில் பேதகல்பனையால் உபாசிக்கத்தக்கவராக இருக்கிறார் என்று சொன்னார்.

மறுபடியும் அத்திரி அந்தகாமர்தி பத்தினன ஜீவன் எவ்விடத்திலிருக்கிறான் என்று கேட்க யாஞ்ஞியவல்கியர் வரணையிலும் நாசியிலும் மத்தியிலும் இருக்கிறதாகச் சொன்னார். வரணை எது நாசி எது என்று அத்திரி கேட்டார். அதற்கு யாஞ்ஞியவல்கியர் சகல இந்திரியங்களாலும் சம்பவிக்கும் தோஷங்களை நிவாரணம்செய்வது வரணு (புருவம்) என்றும், சகல இந்திரியங்களால் சம்பவிக்கும் பாபங்களை நாசம்செய்வது நாஸீ என்றும் சொன்னார். புருவங்களுக்கும் நாசிகைக்கும் மத்தியிலிருக்கிற ஸ்தானம் ஜீவன் மூலமாக ஈசுவரனை தியானிக்கும்படியான ஸ்தானமாதலால் அது பாபத்தை நிவர்த்திக்கும் என்று அறியத்தக்கது.

மறுபடியும் ஜாபாலர் கேட்டார்கள் :—அவைகள் மத்தியிலும் குறிப்பாய் எந்த இடம் ஜீவனுடையது? புருவங்களும் நாசிகையும் சேருமிடம் என்று உத்தரம் சொன்னார். இதுவே சுவர்க்கலோகமும் மற்ற லோகமும் (அதாவது மோவாய்க்கட்டையால் கூறப்பட்ட பூலோகமும்) சேரும் சந்திஸ்தானம். (இவ்விடத்தில் பர என்கிற பதத்துக்கு பிரம்மலோகம் என்று ஆநந்தகிரி, ராமானந்தர், பிரம்மவித்தியாபரணகாரர் அர்த்தம் செய்கிறார்கள். அப்படியானால் பிரம்மலோகம் சுவர்க்கத்துக்கும் மேலிருப்பதால் சந்திஸ்தானமும் சிரசுமேலிருக்கவேண்டும். அப்போது புருவங்களின் மத்தியில் சந்தி ஏற்படமாட்டாது. முன் சுவர்க்கலோகத்தையும் பூலோகத்தையும் தான் மூலத்தில் குறிப்பிட்டிருக்கிறது. ஆகவே இவைகளின் சந்தி என்று சொல்லுவது யுக்திக்குச் சரியாகத்தோன்றுகிறது.)

இவ்விதமாக பரமேசுவரனுக்குச் சொல்லப்பட்ட பிராதேசமாத்திர சுருதியானது சயுக்தம் என்று தெரியவருகிறது.

ஈசுவரனை அபிவிமானமென்று சொன்னதானது சகலத்துக்கும் பிரத்தியகாத்மாவாயிருப்பதால் பொருந்தும். பிரத்தியக்ஸ்வரூபமாய் சகல பிராணிகளாலும் अभिविमीयते அளக்கப்படுகிறான் அதாவது அறியப்படுகிறான். அல்லது பிரத்தியகாத்மாவாயிருப்பதால் अभि = अभिगतः எங்கும் வியாபித்திருக்கிறான். विमानश्च = அளவற்றவனுயிருக்கிறான். அல்லது சகல ஜகத்துக்கும் காரணமாயிருப்பதால் अभिविमीते இதை நிர்மாணம்செய்கிறான். ஆகையால் பரமேசுவரனுக்கு அபிவிமானம் என்னும் பெயர் சித்தித்தது. ஆகையால் பரமேசுவரனே வைசுவாநரன் என்று சித்தித்தது. ரா இந்த வாக்கியம் உபாசியப்பிரம்மத்தில் தாற்பரியப்படுகிறது. (80)

XVII. பூர்வபக்ஷி பலன் :— ஜாடராதி உபாஸ்தி.

சித்தாந்தபலன் :—பிரம்மோபாஸ்தி. (81)

XVIII. வியாஸாதிகரணமாலைப்படி அத்வைதச் சுருக்கம்.—

1. சுலோகங்கள் :—

वैश्वानरः कौक्षभूतदेव जीवेश्वरेषु कः ।
वैश्वानरात्मशब्दाभ्यामीश्वरान्येषु कश्चन ॥
द्युमूर्धत्वादितो ब्रह्मशब्दाच्चेश्वर इष्यते ।
वैश्वानरात्मशब्दौ तावीश्वरस्यापि वाचकौ ॥ (82)

2. விஷயவாக்கியம் :—

சாந்தோக்கியத்தின் ஐந்தாவது அத்தியாயத்தில்

आत्मानं वैश्वानरमुपास्ते

என்று சொல்லியிருக்கிறது. (83)

3. சந்தேகம் :—இந்த வைசுவாநரன் குக்ஷியிலிருக்கிற அக்கினியா? பூதாக்கினியா? ஆதித்திய தேவதையா? ஜீவாத்மாவா? அல்லது பரமாத்மாவா? (84)

4. பூர்வபக்ஷம்.—வைசுவாநர சப்தம் வந்திருப்பதால் முதல் மூன்று பக்ஷமும் பொருந்தும்.

(1) अयमग्निर्वैश्वानरोऽयमन्तः पुरुषे येनेदमन्नं पच्यते

என்கிற சுருதியில் வைசுவாநர சப்தம் ஜாடராக்கினியைக் கூறுகிறது.

(2) विश्वात्मा अग्निं भुवनाय देवा वैश्वानरम्

என்பதில் வைசுவாநரன் பாஹிய அக்கினியைக் கூறுகிறது.

(3) वैश्वानरस्य सुमतौ स्याम

என்கிற இடத்தில் வைசுவாநர சப்தம் தேவதையைக் கூறுகிறது. ஆகையால் மூன்று பக்ஷமும் கூடும். ஆத்மசப்தம் ஜீவனிடத்தில் ரூடியாயிருப்பதால் ஜீவன் வைசுவாநரனுகலாம். ஈசுவரன் ஆகமாட்டான். ஏனெனின் அதற்கு ககமகமில்லை. (85)

5. சித்தாந்தம் :—

வைசுவாநரன் பிரம்மமாகத்தானிருக்கவேண்டும். ஏனெனின் சுவர்க்கம் சிரஸ் என்பதாகச் சொல்லியிருக்கிறது.

तस्य ह वा एतस्यात्मनो वैश्वानरस्य मूर्धैव सुतेजाः

என்பதில் சுவர்க்கம் முதலிய சகல ஜகத்தும் வைசுவாநரனுக்கு அவயவமாகச் சொல்லியிருக்கிறது.

ஈசுவரனைத் தவிர வேறு ஒன்றுக்கும் இது பொருந்தமாட்டாது.

மேலும், को न आत्मा किं ब्रह्म என்கிற இடத்தில் பிரம்ம சப்தம் முக்கியமாய் ஈசுவரனைக் கூறும் வைசுவாநரசப்தம்

( विश्वश्चासौ नरश्च विश्वा नरः = सर्वात्मकपुरुषः )

என்கிற வித்பத்தியால் பிரம்மத்தைக் கூறும். விசுவாநரனே வைசுவாநரன். ஆத்மசப்தம் ஜீவனிடத்தில் போல் பிரம்மத்தினிடத்திலும் பொருந்தும். ஆகையால் வைசுவாநரன் பரமேசுவரன். (86)

XIX விசிஷ்டாத்வைதப்படி

I-2-7-வது அதிகரணம்.

1. முன் திரைலோக்கியசரீரம் உடையவர் பரமாத்மாவென்று சொல்லப்பட்டது.

இது அன்னியத்துக்கும் ஏற்படும் என்று ஆக்ஷேபிக்கிறபடியால் ஆக்ஷேபசங்கதி. (87)

2. இதில் அடங்கிய சூத்திரங்கள் 9. (88)

3. விஷயவாக்கியம் :— छा V-11. (அத்-போலவே) (8)9

4. சந்தேகம் :—வைசுவாநரன்-பரமாத்மாவா? அல்லவா ? (90)

5. பூர்வபக்ஷம் :-பரமாத்மாவல்ல. ஏனெனின் வைசுவாநர சப்தத்துக்கு ஜாடராக்கினி, அல்லது பூதாக்கினி, அல்லது இவைகளின் அபிமானதேவதை என்றுதான் அர்த்தம். மேலும் இந்த பிரகரணத்தில் எல்லாருக்குமுரிய லிங்கங்கள் காணப்படுகின்றன. ஆகையால் பரமாத்மா கூறப்படவில்லை. (91)

6. சித்தாந்தம் :— को न आत्मा किं ब्रह्म அதாவது எங்களுடைய ஆத்மா யார் ? பிரம்மம் யாது ?

என்கிறதாய் பிரகரணம் ஆரம்பித்து உத்தரம் கொடுக்கையில் आत्मनं वैश्वानरं என்பதாய் பிரம்மசப்தத்துக்குப் பதிலாக வைசுவாநர சப்தம் உபயோகிக்கப்பட்டிருக்கிறது. இந்த வைசுவாநர ஆத்மா சகல ஜீவர்களுக்கும் ஆத்மாவான பரமாத்மாவென்று தெரியவருகிறது. (92)

சூத்திரார்த்தம் :—(24)

वैश्वानरः = வைசுவாநரன் பரமாத்மா. ஏனெனின் साधारणशब्दविशेषात् = ஜாடராக்கினி முதலியவைகளுக்கு இந்த பதம் சாதாரணமாய் உபயோகிக்கப்பட்டாலும், பரமாத்மாவுக்குரிய தர்மங்கள் விசேஷமாய் சொல்லப்பட்டிருக்கின்றன. (93)

I-2-7ல் 2 (25)

அத்வைதார்த்தம் போலவே. (94)

I-2-7-ல் 3 (26)

அக்கினி சப்த பிரயோகத்தினாலும் உள்ளேயிருக்கிறதாகச் சொல்லியிருப்பதினாலேயும் வைசுவாநரன் பரமாத்மாவல்லவென்று சொன்னால்

அது சரியன்று. ஏனெனின் ஜாடராக்கினியை சரீரமாக உடையவனை உபாசிக்கும்படி சொல்லியிருப்பதாலும், சிரசு முதலிய விவரங்கள் அக்கினிக்குபொருந்தாதபடியாலும், பரமாத்மாவை அக்கினியாகவும் வைசுவாநரனாகவும் வாஜஸநேயிகள் சொல்லியிருப்பதாலும் வைசுவாநரன் பரமாத்மாவே. (95)

I-2-7-ல் 4 (27)

अत एव = அத்வைதத்தில் போல். (96)

I-2-7-ல் 5 (28)

அக்னி சப்தமும் வைசுவாநரசப்தமும் அக்கினியை சரீரமாயுடைய பரமாத்மாவைக் கூறுகிறதாக முன் சொல்லப்பட்டது. அக்கினி சப்தத்துக்கு अग्रे-नयति (மேல் கொண்டுபோகிறது) என்கிற வியுத்பத்தியாலும் वैश्वानर சப்தத்துக்கும் विश्वेषां नराणां नेता (எல்லா ஜனங்களையும் கொண்டுபோகிறவர்) என்கிற வியுத்பத்தியாலும் அர்த்தம் செய்யலாமாகையால் இந்த காரணங்களைக்கொண்டு இந்த பதங்களால் பிரம்மத்தையே சாக்ஷாத்தாய் அறியலாம் என்று ஜைமினி ஆசாரியர் சொல்லுகிறார். ஆகையால் விரோதமில்லை. (97)

I-2-7-ல் 6 (29)

இந்த சுருதியில் வைசுவாநரனை प्रादेशमात्रं என்று சொல்லியிருக்கிறது. प्रादेश மென்றால் பிரதேசசம்பந்தமுள்ளது என்று அர்த்தம் அதாவது பூமிக்கும் ஸ்வர்க்கத்துக்கும் மத்தியிலிருக்கிற தேசசம்பந்தம். இது அக்கினிக்காவது தேவதைக்காவது பொருந்தாதபடியால் பரமாத்மாவைத்தான் கிரகிக்கவேண்டியது. அபரிச்சின்னனான பரமாத்மாவை இப்படி பரிச்சின்னனாகச் சொல்லலாமாவெனின் உபாசனையின்பொருட்டு அவர் அப்படி விளங்குகிறார் என்று சொல்லலாம். (98)

I-2-7-ல் 7 (30)

பிராதேசமாத்திரமாய் விளங்குவதாகச் சொல்லப்பட்ட பரமாத்மாவுக்கு சிரசு நேத்திரம் முதலியவைகளைச் சொல்லுவதில் பிரயோஜனமென்னவெனின், अनुस्मृतेः— அவரை உபாசிக்கும் பொருட்டு சிரசுமுதல் பாதம்வரையில் அவயவங்கள் கற்பிக்கப்படுகின்றன வென்று,

बादरिः பாதரி ஆசாரியர் சொல்லுகிறார். (99)

I-2-7-ல் 8 (31)

வைசுவாநரனை பரமாத்மாவாக உபாசிக்கும்படி சொல்லியிருக்க, உபாசகனுடைய மார்பை வேதியாகவும், மயிர்களை தர்ப்பையாகவும், முகத்தை ஆஹவனீயமாகவும் இப்படி உபாசகனுடையசரீரத்தில் கற்பிக்கவேண்டிய காரணமென்ன எனின், உத்தரம் கூறுகிறார்.

வைசுவாநர உபாசகனுக்குபிராணாக்கினிஹோத்திரம் அங்கமாகச் சொல்லியிருக்கிறது.

பிராணாஹுதியே பிராணாக்கினிஹோத்திரம். அப்படிப்பட்ட பிராணாஹுதியை அக்கினிஹோத்திரமாய் கற்பிக்கும்போது அக்கினிஹோத்திர சம்பந்தமான தர்ப்பை முதலியவைகளும் கற்பிக்கப்படுகின்றன. இப்படி ஜைமினி ஆசாரியர் சொல்லுகிறார்.

तथाहि दर्शयति :— (சா-V-24-3வது)

சுருதியானது பிராணாஹுதியை அக்கினிஹோத்திரமாக கற்பித்திருக்கிறது. (100)

I-2-7-ல் 9 (32)

एनं = இந்த பரமபுருஷனை வைசுவாநரனை

अस्मिन् = இந்த உபாசகனுடைய சரீரத்தில் பிராணாஹுதிவேளையில் தியானிக்கும்பொருட்டு

तस्य ह वा एतस्य वैश्वानरस्य मूर्द्धैव सुतेजाः

முதலிய சுருதிகள் சிரசுமுதலியவைகளை சொல்லுகின்றன. உபாசகன் பிராணாக்கினிஹோத்திர வேளையில் தன்னுடைய சிரசுமுதல் பாதம்வரையிலுள்ள அவயவங்களை வைசுவாநர பரமாத்மாவின் சுவர்க்கம் முதல் பூமிவரையிலுள்ள அவயவங்களாக தியானிக்கவேண்டியது என்பது கருத்து.

ஆகையால் வைசுவாநரன் பரமாத்மா என்று சித்தித்தது. (101)

2-வது பாதம் முற்றிற்று.

---

XX. துவைதப்படி I-2-7-வது அதிகரணச்சுருக்கம்.

I. இதின் கருத்து:— வைசுவாநரவாச்சியன் விஷ்ணுவே என்பதாம். (102)

II. இதிலடங்கிய சூத்திரங்கள்:- 9 (24-32) 103

III. இதின் விஷயம்:—

(1) சாந்தோக்கியம் 5-வது அத்தியாயத்தில்

अग्निंविमानात्मानं वैश्वानरमुपास्ते

என்றும்,

(2) பிரஹதாரணியகத்தில் ஏழாவது அத்தியாயத்தில்.

अयमग्निर्वैश्वानरो योऽयमन्तः पुरुषे येनेदमन्नं पच्यते

என்றும்,

(3) அக்கினி சூக்தத்தில்

वैश्वानरमृत आजातमग्निं

என்றும் சொல்லியிருக்கிறது.

இவைகளில் சொல்லிய வைசுவாநரன்விஷயம்.(104)

IV. சங்கதி:—முந்தின அதிகரணத்தில் அதிர்சியத்வாதிகளுள்ளவன் விஷ்ணுவென்று சொல்லப்பட்டது. அந்த பிரகரணத்தில் சர்வகதன் என்ற விசேஷணம் விஷ்ணுவுக்குக் கொடுத்திருக்கிறது இது சரியன்று என்பதாய் பூர்வபக்ஷி ஆக்ஷேபிக்கிறபடியால் ஆக்ஷேபசங்கதி ஏற்படுகிறது. (105)

V. சந்தேகம்.

இந்த வைசுவாநரன்

(1) பூதாக்கினியா? அல்லது

(2) அதின் அபிமானி தேவதையா? அல்லது

(3) விஷ்ணுவா? (106)

VI. பூர்வபக்ஷம்:—

(1) வைசுவாநர, அக்கினி முதலிய சப்தங்கள் அக்கினியையே உலகத்தில் பிரசித்தமாய் கூறுவதாலும்,

(2) वैश्वानरे तद्भुतं भवति हृदयं गार्हपत्यं

முதலிய சாந்தோக்கிய சுருதிகளில் அக்கினியை ஹோமாதாரமாயும், காண்வசுருதியில் (பிரஹதாரணியத்தில்) சமயனுக்குச் சாதகமாயும் சொல்லியிருப்பதாலும்,

(3) அவைகள் உலகவியவஹாரத்தில் விஷ்ணுவைக் கூறுததினாலும்,

(4) சகலமும் விஷ்ணுவானால் அக்கினிவித்தை என்றும் விஷ்ணுவித்தையென்றும் பேதம் இல்லாமற் போவதாலும் வைசுவாநரன் பூதாக்கினி, அல்லது அக்கினிஅபிமானிதேவதையாக இருக்கவேண்டும் 107

VII. சித்தாந்தம் :—

(1) ஆத்மானம்:—என்று சுருதியிருப்பதாலும்,

(2) அபிவிமானம் என்பதால் எங்கும் வியாபித்தல் என்னும் லிங்கமிருப்பதாலும்,

(3) अहं वैश्वानरोभूत्वा प्राणिनां देहमाश्रितः

என்கிற ஸ்மிருதியில் வைசுவாநரன் என்கிற பெயர் கொடுத்திருப்பதாலும்,

(4) को न आत्मा किं ब्रह्म

என்பதாய் ஆரம்பித்து இந்த வித்தையை படித்திருப்பதால் இது பிரம்மபிரகரணம் என்று ஏற்படுவதாலும்,

(5) இன்னும் சூத்திரார்த்தத்தில் சொல்லிய காரணங்களாலும் வைசுவாநரன் விஷ்ணுவே. (108)

24-வது சூத்திரத்தின் அர்த்தம்.

वैश्वानरः = வைசுவாநராதி சப்தங்களால் கூறப்பட்டவர் விஷ்ணுவே, அக்கினியன்று. ஏனெனின்;

साधारणशब्दविशेषात् = அக்கினிக்கும் விஷ்ணுவுக்கும் பொதுவாயிருக்கும் வைசுவாநர சப்தத்துடன் ஆத்ம சப்தத்தைப் பிரயோகித்திருக்கிறது. (109)

25-வது சூத்திரம்.

அ-கை :—ஆத்மசப்தம் பரமேசுவரனையே முக்கியமாய் கூறும், அக்கினியை கௌணமாய் கூறும் என்பதற்கு ஸ்மிருதி பிரமாணமிருக்கிறது.

स्मर्यमाणं = अहं वैश्वानरो भूत्वा प्राणिनां देहमाश्रितः

என்கிற ஸ்மிருதியில்(பகவத்கீதைXV. 14)சொல்லிய வைசுவாநர சப்தம்

अनुमानं स्यात् = விஷ்ணுவைத்தான் கூறும் என்று அநுமானிக்க சாதகமாயிருக்கிறது.

इति = ஸ்மிருதியில் கொடுத்திருக்கும் சப்தமே சுருதியிலும் கொடுக்கப்பட்டிருப்பதால் ஸ்மிருதியில் கூறப்பட்டவரே சுருதியில் கூறப்பட்டிருக்கிறார் என்று அநுமானம் ஏற்படுகிறது. (110)

I-2-26-வது சூத்திரம்.

च = இந்த சப்தம் விசேஷ யுக்தியைக் காட்டுகிறது. புருஷசூக்தத்தில் விஷ்ணு கூறப்பட்டது போல் வேத புராணாதிகளிலும் கூறப்படுகிறார்.

शब्दादिभ्यः = அக்கினி வைசுவாநர சப்தங்களாலும், கார்ஹபத்தியம் முதலிய ஹோமாதார லிங்கங்களாலும்,

अन्तः प्रतिष्ठानात् = येनेदमन्नं पच्यते

என்கிற சுருதியில் பக்குவம் செய்கிறவன் உள்ளேயிருக்கிறான் என்று சொல்லியிருப்பதாலும்,

அக்கினியே வைசுவாநரன்.

न = விஷ்ணுவல்ல

इति चेत् = என்று சொன்னால்.

न = அது சரியன்று.

तथा = அக்கினிமுதலிய பேர் உள்ளவனாகவும் அக்கினிக்குரிய பாசகத்வாதி குணமுள்ளவனாகவும்

दृष्ट्युपदेशात् = உபாசிக்கும்படி உபதேசித்திருக்கிறது.

இந்த பெயர் லிங்கம் முதலியவைகள் விஷ்ணுவினிடத்தில் பொருந்துமாகையால் யாதொரு விரோதமுமில்லை என்பது கருத்து.

असंभवात् = ஆத்ம பிரம்ம சப்தங்கள் பிரம்மத்தைத்தவிர வேறு ஒன்றைக் கூறாததால் விஷ்ணுவே வைசுவாநரன்.

पुरुषविधं = चन्द्रमा मनसो जातः

என்கிற புருஷசூக்தத்தில் இவனை புருஷரூபமாக எப்படி வர்ணித்திருக்கிறதோ அப்படியே இவனை

अपि एनं = சாந்தோக்கியத்தில்

मूर्द्धैव सुतेजाश्चक्षुर्विश्वरूपं

(சிரசே அக்கினி, சக்ஷு சூரியன்)என்பதாய்

अधीयते = சந்தோகர்கள் படித்திருக்கிறார்கள்.

இப்படி ஒரேவிதமாய் சொல்லியிருப்பதாலும் விஷ்ணுவே வைசுவாநரன். (111)

I-2-27-வது சூத்திரம்.

பிரசித்த தேவதையுமல்ல, அக்கினியுமல்லவென்று சொல்லுகிறார்.

अत एव = மற்றதற்கு உபயோகப்படாமல் விஷ்ணுவுக்கே உபயோகப்படும் ஆத்மசப்தம், ரூபம் முதலிய ஹேதுக்களால்

देवता, भूतं च न = வைசுவாநரவித்தையில் கூறப்பட்டவன் பூதாக்கினியும் அன்று, அக்கினி அபிமானிதேவதையு மன்று.

விஷ்ணுதான் வைசுவாநர சப்தத்தால் கூறப்படுகிறார். (112)

## I-2-28-வது சூத்திரம்.

அக்கினி முதலிய சப்தங்கள் பிரம்மத்தையே கூறுகிறதாயிருந்தால் அக்கினிமுதலியவைகளினின்றும் வியவஹாரத்தில் எந்தபலன் சித்திக்கிறதோ அது சித்திக்காமல் போய்விடும். இந்த சங்கைக்குச் சமாதானம் கூறுகிறார்:—

साक्षात् अपि = அக்கினி முதலிய சப்தங்களுக்கு முக்கிய அர்த்தத்தை கிரகித்தாலும் கூட

अविरोधं = விரோதமில்லை:— பிரம்மவாசகமான அக்கினிமுதலிய சப்தங்களுக்கு பூதாக்கினி என்றாவது தேவதை என்றாவது ஞானிகள் அர்த்தம் செய்கிறதில்லை. ஆனால் ஞானமற்றவர்கள், அஞ்ஞானத்தால் அந்த அந்த சப்தம் லோகப்பிரசித்தமான அக்கினி முதலியதையே கூறுகிறது என்று சொல்லுகிறார்கள், ஆகையால் விரோதமில்லை என்று

जैमिनिः = ஜைமினி ஆசாரியர் சொல்லுகிறார். (113)

## I-2-29-வது சூத்திரம்.

அக்கினி முதலிய சப்தங்களுக்கு முக்கியமான அர்த்தம் பிரம்மம் என்று சொன்னால் அக்கினி முதலிய சூக்தவியவஸ்தை இல்லாமற்போய்விடுமே என்கிற சங்கைக்குச் சமாதானம் சொல்லுகிறார்.

अभिव्यक्तेः = அக்கினி முதலிய சூக்தத்தில் சொல்லியபடி பிரம்மத்தை உபாசித்தால் பிரம்மமே ஸ்வேச்சையாய் விளங்கும்.

इति = இந்தபிரகாரம் சூக்தங்களின் பிரயோசனம் சித்திக்கிறபடியால் அவைகள் வேண்டியவை என்று

आश्मरथ्यः = ஆஸ்மரத்தியாசாரியர் சொல்லுகிறார். (114)

## I-2-30-வது சூத்திரம்.

வேறுவிதமாயும் வியவஸ்தையை சொல்லுகிறார்.

अनुस्मृतेः = அக்கினி முதலிய சூக்தங்களில் விஷ்ணுவே பிரதிபாதிக்கப்பட்டிருந்தாலும், அந்த அந்த சூக்தங்களை உபாசிக்கிறவர்கள் (படிக்கிறவர்கள்) அக்கினி முதலியவைகளிடத்தில் விஷ்ணுவையே தியானிக்கிறார்கள். ஆகையால் அந்த அந்த சூக்தங்களும் வேண்டியவை என்று

बादरिः பாதரி ஆசாரியர் சொல்லுகிறார். (115)

## I-2-31-வது சூத்திரம்.

விரோதமில்லை என்பதற்கு வேறு காரணம் கூறுகிறார்.

संपत्तेः = முன் 28-வது சூத்திரத்தில் அக்கினி சப்தத்தின் பிரசித்தார்த்தத்துக்கு விரோதம் வரவில்லை என்று ஜைமினி சொல்லியிருந்தார். இப்போது அக்கினி முதலிய சூக்தங்களால் அக்கினி முதலியவைகளில் பகவானை உபாசிப்பதினால் அக்கினிமுதலான தேவதைகள் அடையப்படுகிறார்கள் இப்படி தேவதைகள் அடையப்படுவதால் சூக்தாதிகள் விரோதப்படவில்லை என்று ஜைமினி சொல்லுகிறார்.

हि = ஏனெனின்

तथा = तं यथा यथोपासते என்கிற சுருதியில் எப்படி உபாசனையோ அப்படி தேவதாபிராப்தி கிடைக்கிறது என்று சொல்லியிருக்கிறது. (116)

## I-2-32-வது சூத்திரம்.

பிரம்மத்தின் உபாசனையால் அக்கினி முதலானவர்களின் பிராப்தி எப்படி ஏற்படும் எனின் சொல்லுகிறார்.

एनं = இந்த விஷ்ணுவை

अस्मिन् = அக்கினிமுதலிய இடங்களில் இருக்கிறதாக

आमनन्ति = योऽग्नौ तिष्ठन् முதலிய சுருதிகள் சொல்லுகின்றன.

च = சங்கையை நிவிர்த்திக்கிறது.

பூர்வபக்ஷபலன் :—ஆக்ஷேபம்.

சித்தாந்தபலன் :—சமாதானம். (117)

I-2-7-வது அதிகரணம் இரண்டாவதுபாதம் முற்றிற்று.

---

# I-3-1-அதிகரணத்தின்

## அனுக்கிரமணிகை.

## முதல் அத்தியாயம் மூன்றாவது பாதம்.

பரமாத்மாவுக்கு நமஸ்காரம்.

1. இதின் பெயர்:— ஜ்ஞேயபிரம்மவிஷய அஸ்பஷ்ட சுருதிசமன்வயம் என்பதாம்.

रा 2. முந்தின பாதத்துக்கும் இந்த பாதத்துக்கும் சம்பந்தம்:—முந்தின பாதத்தில் அநேகரூடி பதங்களுள்ள சவிசேஷவாக்கியங்கள் பிரம்மத்தில் தாற்பரியப்படுகின்றன என்று சொல்லப்பட்டது. இந்த பாதத்தில் அநேக யௌகிகபதங்களுள்ள நிர்விசேஷவாக்கியங்களும் பிரம்மத்தால் தாற்பரியப்படுகின்றனவென்பது சொல்லப்படுகின்றது. முன் உபாசியப்பிரம்மத்தைபற்றிச் சொல்லப்பட்டது. இப்போது ஜ்ஞேயப் பிரம்மத்தைப்பற்றிச் சொல்லப்படுகின்றது.

रा 3. சுருதி முதலிய சங்கதிகள்:—

यस्मिन् द्यौः முதலிய சுருதிகளின் அர்த்தத்தை விசாரிப்பதால் சுருதிசங்கதியும், பிரம்மத்தை விசாரிப்பதால் சாஸ்திர சங்கதியும், சுருதிகளுக்குத் தாற்பரியம் பிரம்மமென்பதினால் அத்தியாய சங்கதியும் ஏற்படுகின்றன.

4. பாதசங்கதி— இரண்டாவது பாதத்தின் ஆரம்பத்தைப் பார்த்துக்கொள்க.

5. இந்த மூன்றாவது பாதத்தில் அடங்கிய அதிகரணங்கள் பதினான்கு, சூத்திரங்கள் நாற்பத்து மூன்று.

### I-3-1-வது அதிகரணம்.

I. இந்த அதிகரணத்தின் விஷயம்:—சுவர்க்கம் பூமி முதலியவைகளுக்கு ஸ்தானமானது பிரம்மமென்பதாம்.

II. இதில் அடங்கிய சூத்திரங்கள்:—1-2-3-4-5-6-7.

III. இதின் விஷயவாக்கியம்:—

यस्मिन्द्यौः पृथिवी चान्तारिक्षमोतं

இவைகளில்,

1-வது அதிகரணத்தில் ஆகாசாதிகளுக்கு ஸ்தானம் பிரம்மம்தான் என்பதும்.

2-ல் பூமா வென்பது பிரம்மம் என்பதும்.
3-ல் அக்ஷரமென்பது ஷை
4-ல் தேயம் ध्येयम् ஷை
5-ல் தஹராகாசம் ஷை
6-ல் அக்ஷிபுருஷன் ஷை
7-ல் சகல ஜகத்தையும் பிரகாசிப்பிக்கிறது. } ஷை
8-ல் அங்குஷ்டமாத்திரம் ஷை
9-ல் தேவாதிகளுக்கும் அதிகார மிருக்கிறது என்பதும்.
10-ல் சூத்திரனுக்கு பிரம்மவித்தையில் அதிகாரமில்லை என்பதும்.
11-ல் கம்பன (நடுங்கச்செய்தல்) காரணம் ஈசுவரன் தான் என்பதும்.
12-ல் ஜோதிஸ் சப்தத்தால் அறியத்தக்கது பிரம்மம்தான் என்பதும்.
13-ல் நாமரூப நிர்வாஹகம் ஷை
14-ல் விஞ்ஞானமயம் ஷை

விவரிக்கப்பட்டிருக்கிறது.

### I-3-1-வது அதிகரணம்.

I. இதின் பெயர்:—द्युभ्वाद्यधि அதிகரணமென்பதாம். (1)

II. இதின் கருத்து:—ஈசுவரனே சர்வத்திற்கும் அதிஷ்டானமென்பதாம். (2)

III. இதின் விஷயவாக்கியம்:—

यस्मिन्द्यौः पृथिवीचान्तारिक्षमोतं
मनःसह प्राणैश्च सर्वैस्तमेवैकं जानथ आत्मानमन्या
वाचोविमुञ्चथामृतस्यैष सेतुः (मुंडक II-2-5)

रा அர்த்தம்:—எதினிடத்தில் ஸ்வர்க்கம், பூமி அந்தரிக்ஷம் (ஆகிய விராடாத்மா), சமஷ்டி அந்தக்கரணமான சூத்திராத்மா, இந்திரியாபிமானிகளான தேவதைகள், அவ்வியாகிருதமான காரணம் (மாயை) இவைகள் கற்பிதங்களோ, ஒன்றான அந்த அதிஷ்டானத்தை ஆத்மாவாக அறி. சிரவணாதிகளைத்தவிர இதர அனாத்மவாக்குகளை விட்டுவிடு. இந்த அறிவாகிற பிரம்மசாக்ஷாத்காரம் (அசாரமாயும், அபாரமாயும், சிரமத்தின் பேரில் தாண்டக்கூடியதாயும் இருக்கிற சம்சாரமென்கிற சமுத்திரத்தின் அக்கரையாயிருக்கிற) மோக்ஷத்தை அடைய அணைபோலிருக்கிறது. (3)

IV. சங்கதி.—

रा (a) முந்தின அதிகரணத்துக்கும் இந்த அதிகரணத்துக்கும்:—முந்தின அதிகரணத்தில் ஆரம்பத்திலிருக்கிற சாதாரண சப்தத்துக்கு, கடைசியிலிருக்கிற சுவர்க்கம் சிரசு என்பதாயுள்ள விசேஷணத்தால் பிரம்ம பரமாக அர்த்தம் செய்யப்பட்டது. அப்படியே இந்த அதிகரணத்திலும் ஆரம்பத்திலிருக்கிற

சாதாரண ஆயதனம் என்பதற்கு கடைசியிலிருக்கிற சேது பதத்தால் பரிச்சின்னமான பிரதானாதிகளில் தாற்பரியம் ஆனதால் திருஷ்டாந்தசங்கதி என்று பூர்வபக்ஷி சொல்லுகிறான். (4)

ஜ (b) பாதசங்கதி.—இந்தபாதம் அஸ்பஷ்ட பிரம்மலிங்க வாக்கியங்களைப்பற்றியது. விஷயவாக்கியத்தில் "இதரவார்த்தைகளை விட்டுவிட்டு அறியத்தக்கது" என்பது பிரம்மலிங்கம்; அமிருதத்துக்கு சேது என்பது அப்பிரம்மலிங்கம். இந்த அப்பிரம்மலிங்கத்தால் பிரம்மலிங்கம் மறைபட்டுபோய்விட்டபடியால் பிரம்மலிங்கம் அஸ்பஷ்டமாய்விட்டது. ஆகையால் இந்த அதிகரணத்தை இந்த பாதத்தில் சேர்த்தது யுக்தமே. மேல் மறைபட்டதாகச் சொன்னதற்கு தாற்பரியம் என்னவெனின் ஞேயம் என்பது பிரம்மலிங்கமாகச் சொல்லியிருக்கிறது. ஞேயம் இன்னதுதான் என்று நிச்சயப்படாததினால் அந்த லிங்கம் துர்பலம். சேது என்னும் லிங்கம் பிரதானாதிகளுக்கே பொருந்துமாகையால் இந்த லிங்கம் ஸ்பஷ்டம். ஆகையால் பலமானது. ஒன்று துர்பலமாயும் மற்றொன்று நிச்சந்தேகமாயுமிருப்பதால் பிந்தினதால் முந்தினது மறைபட்டதாகச் சொல்லப்படுகின்றது. (5)

(c) மற்றசங்கதிகள்.—முன்போலவே. (6)

சந்தேகம்:—சுவர்க்கம் முதலியவைகள் கோர்க்கப்பட்டிருக்கின்றன என்று சொல்லியிருப்பதால் எதாவது ஒரு ஸ்தானம் இருக்கவேண்டுமென்று தெரியவருகிறது. அது

(1) பரம் பிரம்மமா? அல்லது
(2) வேறு எதாவதா? அதாவது
  (a) சூத்திராத்மாவா? அல்லது
  (b) பிரதானமா? அல்லது
  (c) ஜீவாத்மாவா?

VI. இதிலடங்கிய சூத்திரங்கள்:—1-7-இவைகளில்

1-உம், 2உம் சுவர்க்காதிகளுக்கு ஸ்தானம் பிரம்மம் என்பதும்
3-ல் அந்தஸ்தானம் பிரதானமல்லவென்பதும்
4-ல் ஜீவனுமல்லவென்பதும்
5, 6, 7-ல் இதற்கு விசேஷகாரணங்களிருக்கின்றனவென்பதும்

நிரூபிக்கப்படுகின்றது.

இந்த அதிகரணத்தில் எல்லாம் சித்தாந்தசூத்திரங்களே.

VII. பூர்வபக்ஷம்:—

(a) இந்த ஸ்தானமானது பிரம்மத்தைத்தவிர வேறு ஒன்றாக இருக்கவேண்டும். ஏனெனின் अमृतस्यैष सेतुः என்று சுருதி சொல்லியிருக்கிறது. ர (அமிருதமென்றால் பிரம்மம். அதினுடைய சேது என்று சொன்னதினால், பிரம்மத்தைவிட சேதுவேறானது என்று ஏற்படுகிறது. ஆகையால் एषः என்கிற சப்தத்தால் கூறப்பட்ட சுவர்க்க முதலியவைகளின் ஸ்தானம் அப்பிரம்மமாகவே யிருக்கவேண்டும்.) (9)

ர (இப்படி பேதம் கூறப்பட்டது. இனி சேதுவின் அர்த்தத்தை பாஷ்யகாரரேசொல்லுகிறார்.)

(b) सेतुः சேது என்பது கரையுடன் சம்பந்தப்பட்டது என்பதாய் உலகவியவஹாரம். பரமான பிரம்மத்துக்கு கரை இருக்கிறதாக அறிய முடியாது. ஏனெனின் அது அநந்தம் என்றும் அபாரம் என்றும் अनन्तमपारम् (बृ II-4-12) சுருதி சொல்லுகிறது.

ர (அநந்தம் என்பது காலத்தாலும் அபாரம் என்பது தேசத்தாலும் ஏற்படுகின்றது. சேது சப்தத்திற்கு ஜலத்தைத்தடைசெய்கிற அணை என்பது சாதாரண அர்த்தம். இந்த அர்த்தம் இவ்விடத்தில் பொருந்தாதபடியால் இதை கௌணமாக அதாவது பாரத்துடன் கூடினது என்பதாக அறியவேண்டியது. ஈசுவரனே காலத்தாலும் அநந்தம்; தேசத்தால் அபாரம். ஆகையால் ஈசுவரவிஷயத்தில் "பாரத்துடன் கூடினது" என்னும் அர்த்தம் பொருந்தமாட்டாது. ஆகையால் வேறு ஒன்றைத்தான் கிரகிக்கவேண்டுமென்பது கருத்து.)

2. வேறு ஒன்றை ஸ்தானமாக எடுத்துக்கொள்ளவேண்டிய விஷயத்தில் ஸ்மிருதி பிரசித்தமான பிரதானத்தை கிரகிக்கவேண்டியது. அது காரணமாகையால் ஸ்தானமாக இருக்கலாம்.

ஜ இந்த அர்த்தத்தில் சுருதிக்கு தாற்பரியம் என்னவெனின்:—

பிரதானத்தினின்றும் சுவர்க்கம் முதலியவைகள் உண்டாகிறபடியால் அதில் கோர்க்கப்பட்டிருக்கின்றன. இதையே பிரம்மம் உபாதானமாக இருக்கிறதற்குச் சாதகமாக அறியவேண்டியது, மற்றதை அறியக்கூடாது. இந்த சுவர்க்காதிகளின் ஆதாரமானது பிரம்மத்துடன் அதற்கு உபாதானத்தன்மையை கொடுக்கிறது மூலமாக சம்பந்தப்பட்டிருக்கிறது. ஆதலால் சேதுபோல் இருக்கிறது. ஆத்மசப்தம் பாவத்தைத்தான் கூறுகிறது. (பாவம் என்பது அபாவத்தின் எதிரடை). (11)

அல்லது சுருதி பிரசித்தமான வாயு ஸ்தானமாக இருக்கலாம்.

वायुर्वै गौतम तत्सूत्रं वायुना वै गौतम सूत्रेणायं च लोकः परश्च लोकः सर्वाणि च भूतानि सन्दृब्धानि भवन्ति (बृ III-7-2)

रा அர்த்தம்:—கௌதமரே, வாயுவே சூத்திராத்மா. லோகத்தில் மணிகள் சூத்திரத்தில் கோர்க்கப்படுவதுபோல், சமஷ்டி லிங்கசரீர அபிமானியான சூத்திராத்மாவால் ஸ்தூலமான இந்த லோகம், பரலோகம், சகல பூதங்கள் இவைகளெல்லாம் கோர்க்கப்பட்டிருக்கின்றன. இதனால் வாயுவும் தரிக்கிறவனாகிறான். (11)

त्र இதின் அர்த்தம்:—

வாயு ஹிரண்யகர்ப்பரானதால் அவர் விஷயத்தில் ஆத்மபதம் பொருந்தும். அமிருதம் என்பது ஆபேக்ஷிக அமிருதம். ஹிரண்யகர்ப்போபாஸனை பிரம்மலோகாதியை அடைய சாதகமாயிருப்பதால் அமிருதஸ்ய ஸேது என்று சொன்னது சரியே. வேறு வார்த்தையை விட்டுவிடு என்பதினால் ஹிரண்யகர்ப்போபாஸனையைத்தவிர வேறு ஒன்றையும் தரிக்கக்கூடாது என்று அர்த்தம். (12)

4. (பிரதானத்தினிடத்திலும், வாயுவினிடத்திலும் ஆத்மசப்தம் பொருந்தாதபடியால் அவ்விரண்டையும் ஒப்புக்கொள்ளக்கூடாவிட்டாலும்)ஸ்தானம் சாரீரன் அதாவது ஜீவனாக இருக்கலாம், ஜீவன் போக்தாவானதால் போக்கியமான பிரபஞ்சத்துக்கு அவன் ஸ்தானமாயிருக்கலாம்.

இதின் அர்த்தம்:—சுருதியின் கருத்து:—மனது பிராணன் இவைகளெல்லாவற்றிற்கும் ஜீவன் ஆதாரம். நான் என்கிற ஞானத்துக்கு விஷயமான சரீராதிகளுக்குள் மனம் முதலியவைகளைத் தரிக்கிற ஜீவனையே ஆத்மாவாக அறி. அவித்தியாநிவிர்த்திரூபமான மோக்ஷத்தை இவன் தரிக்கிறான். (13)

VIII. சித்தாந்தம்.

இப்படி பூர்வபக்ஷிசொல்ல வியாசர் சித்தாந்தத்தை

1 द्युभ्वाद्यायतनं स्वशब्दात् । १ ।

என்கிற சூத்திரத்தில் கூறுகிறார். (14)

2. பத உரை.

द्युभ्वाद्यायतनं = சுவர்க்கம் பூமி இவைகள் முதலியவைகளுக்கு ஸ்தானம்,

(ब्रह्म= பிரம்மமே).

स्वशब्दात् = ஆத்மசப்தத்தால். (15)

3. பொழிப்புரை.

ஸ்வர்க்கம் பூமி முதலியவைகளுக்கு ஸ்தானம் பிரம்மம். ஏனெனின்,

ஸ்வ அதாவது ஆத்மா என்னும் பதம் உபயோகிக்கப்பட்டிருக்கிறது. (16)

4. பாஷ்யம்.

1. द्युभ्वाद्यायतनं ।

இந்த (விஷய)வாக்கியத்தில் ஸ்வர்க்கம், பிருதிவீ, அந்தரிக்ஷம், மனது, பிராணன் இவைகளாகிற ஜகத்தானது கோர்க்கப்பட்டதாகச் சொல்லியிருக்கிறது. இந்த கோர்வைக்கு ஸ்தானம் பரமான பிரம்மமாகத்தானிருக்கவேண்டும். (17)

ஏனெனின்,

2. स्वशब्दात् தன்னுடைய சப்தம் அதாவது ஆத்மசப்தம் உபயோகிக்கப்பட்டிருக்கிறது.

तमेवैकं जानथ आत्मानं (मु II 2-5)

என்கிற வாக்கியத்தில் ஆத்மசப்தம் பிரயோகிக்கப்பட்டிருக்கிறது. ஆத்மசப்தம் பரமாத்மாவைக் கிரகிக்கிறவிஷயத்தில் செவ்வையாக பொருந்தியிருக்கிறது. மற்ற அர்த்தங்களில் செவ்வையாக பொருந்தவில்லை.

रा (ஜீவனிடத்தில் பொருந்தமாட்டாதோ எனின் உபாதிபரிச்சின்னனான ஜீவன் சகல வஸ்துவுக்கும் ஆத்மாவாகமாட்டான். மேலும் முதலிலிருக்கிற ஆயதனத்துக்கு கௌணசேது லிங்கமாயிருப்பதாலும், இந்த லிங்கத்துக்குமுன் ஆத்மபதம் உபயோகிக்கப்பட்டிருப்பதாலும், லிங்கத்தைவிட சுருதிபிரபலமானதாலும் பிரம்மமே நிச்சயிக்கப்படுகின்றது.) (18)

रा 3. (ஸ்வசப்தத்திற்கு வேறு அர்த்தம்).

சில இடங்களில் பிரம்மம் ஆயதனம் என்பது பிரம்மத்தைக்கூறும் சப்தங்களால் தெரியவருகிறது. சுருதிப்பிரமாணம்:—

सन्मूलाः सोम्येमाः सर्वाः प्रजाः सदायतनाः सत्प्रतिष्ठाः (छा VI-8-4)

रा இந்த சகல பிரஜைகளும் சத்தாகிற மூலத்தினின்றும் உற்பத்தியாகி, சத்தையே ஆயதனமாகவைத்துக்கொண்டு சத்திலேயே லயமடைகிறார்கள். இப்படி சாந்தோக்கியத்தில் பிரம்மத்தைக்கூறும் சத்பதத்

தால் பிரம்மம் ஆயதனம் என்று சொல்லப்பட்டது போல் இவ்விடத்திலும் அறியவேண்டியது என்பது கருத்து.) (19)

रा 4. (இன்னும் ஒரு அர்த்தம் சொல்லுகிறூர்) यस्मिन् द्यौः என்கிற வாக்கியத்துக்கு முந்தினவாக்கியம்.—

पुरुष एवेदं विश्वं कर्म तपो ब्रह्म परामृतं (मु-II-1-10)

என்பது.

பிந்தின வாக்கியம்.—

ब्रह्मैवेदममृतं पुरस्तात् ब्रह्म पश्चात् ब्रह्म दक्षिणतश्चोत्तरेण (मु-II-1-11)

என்பது.

रा (முந்தினவாக்கியத்தால் புருஷசப்தமும், பிந்தினவாக்கியத்தில் பிரம்மசப்தமும் உபயோகித்திருப்பதினல் மத்தியிலும் பிரம்மம் தான் கூறப்பட்டிருக்க வேண்டும்.) இப்படி தன்னுடைய சப்தத்தாலேயே முன்னும் பின்னும் பிரம்மம் கூறப்படுகிறது. (20)

5. (ஏகசப்தத்தின் பிரயோசனம்).

மேற்படி முதல் சுருதியில் பிரம்மம் புருஷன் என்றும், ஜகத்தென்றும், கர்மம் என்றும், தபஸு என்றும் இப்படி சாமாநாதிகரணியத்தால் பிரம்மம் பலவிதமாக தெரியவருகிறது. இரண்டாவதில் பிரம்மம் சகலதிக்குகளிலுமிருப்பதால் ஆதார ஆதேய பாவம் தெரியவருகிறது. இக்காரணங்களால் பிரம்மம் சவிசேஷமோ என்று சந்தேகம் உண்டாகும். எப்படி வேர், அடிமரம், கிளை முதலியவைகளாகிற அநேகரூபமாய் மரமிருக்கிறதோ அப்படி ஆத்மாவும் அநேகமாயிருக்கலா மென்னும் சந்தேகத்தை நிவிர்த்திக்கும் பொருட்டு

तमेवैकं जानथ आत्मानं அதாவது அவனையே ஒன்றான ஆத்மாவாக அறி என்று சுருதிசொல்லுகிறது.

இதின் கருத்து என்னவெனின்:— ஆத்மா காரியபிரபஞ்சத்துடன் கூடினவனென்றும், அநேக மென்றும் அறியத்தக்கவனல்ல. பின்னையோவெனின், அவித்தையாலுண்டான காரிய பிரபஞ்சத்தை வித்தையால் நாசம்செய்து, ஆயதனமான ஆத்மாவைமட்டும் ஏகரஸமாக அறியவேண்டியது. தேவதத்தன் எதில் உட்கார்ந்திருக்கிறானே அதைக்கொண்டுவா என்று சொன்னபோது ஆசனத்தைமட்டும் கொண்டு வருகிறான். தேவதத்தனைக் கொண்டு வருகிறதில்லை. அதுபோல் ஆயதனமாயிருக்கிற ஏகரஸமான ஆத்மாவை அறியவேண்டியது என்பதாய் உபதேசிக்கப் படுகின்றது. (21)

6. रा (ஏவ சப்தத்தாலும் ஏக சப்தத்தாலும் நிர்விசேஷம் தான் ஞேயம் என்று தெரியவருகிறது.(12)

7. मृत्योः संमृत्युमाप्नोति य इह नानेव पश्यति (कठ-II-4-11)

என்கிற சுருதியால் விகாரங்களாகிற அநிருதத்தால் அபிமானமுள்ளவன் நிந்திக்கப்படுகிறான்.

रा (இந்த நிந்தனையாலும் கூடஸ்தனே ஞேயம் என்று தெரியவருகிறது). (23)

சர்வம் பிரம்மம் என்பதாய் காணப்படும் ஸாமாநாதிகரணியமோ பிரபஞ்சத்தின் லயத்தின் பொருட்டேதவிர பிரம்மம் அநேகரசம் என்று நிரூபிக்கும் பொருட்டல்ல. பிரஹதாரணியம் IV-5-13ல்,

स यथा सैन्धवघनोऽनन्तरोऽबाह्यः कृत्स्नोरसघन एवैवं वा अरेऽयमात्माऽनन्तरोऽबाह्यः कृत्स्नः प्रज्ञानघन एव

அதாவது உப்புக்கட்டிக்குள் வேறு ரசமில்லை, வெளியிலும் வேறு ரசமில்லை. முழுமையும் ஒரே ரஸமாயிருக்கிறதுபோல், இந்த ஆத்மாவும் உள்ளும் வெளியிலும் எங்கும் ஒரே ஞானஸ்வரூபமாக இருக்கிறது.

என்கிற சுருதியில் ஆத்மாவின் ஏகரசம் தெரிய வருகிறது. (24)

ஆகையால் சுவர்க்கம் முதலியவைகளுக்கு ஆயதனம் பரப்பிரம்மம் தான். (25)

பரமதகண்டனம்.

1. 10-க்கு உத்தரம் பூர்வபக்ஷியானவன் சேது சப்தத்தால் பாரத்தோடு கூடினதென்றும் ஆகையால் சுவர்க்காதிகளுக்கு ஆயதனம் பிரம்மத்தைத்தவிர வேறு ஒன்று இருக்கவேண்டுமென்று சொன்னதற்கு நாம் சொல்லுகிறதாவது:—

சேது சப்தத்தால் கட்டுதல் என்று அர்த்தமே தவிர பாரத்துடன் கூடியிருத்தல் என்று அர்த்தமல்ல. லோகத்தில் சேதுவானது மண் மரம் முதலியவைகளால் ஏற்படுவதுபோல் இவ்விடத்திலும் சேது சப்தம் மண் மரம் இவைகளாலுண்டானதே என்று அறியவேண்டியதில்லை. சேது சப்தத்தின் பகுதியின் அர்த்தம் கட்டுதல் ஆனபடியால் இவ்விடத்தில் சேது சப்தத்திற்கு கட்டுதல் என்கிற அர்த்தமேதவிர, பாரத்துடன் சேர்ந்திருத்தலல்ல.

रा (அமிருதஸ்ய சேது என்பதற்கு அமிருதத்வத்தை தரிக்கிறது எதுவோ அது என்று அர்த்தம். அது பிரம்மமே, வேறு ஒன்றல்ல. (26)

2. சிலர் சொல்லுகிறதாவது:—

तमेवैकं जानथ आत्मानं என்பதால் யாதொரு ஆத்மஞானம் கூறப்பட்டதோ,

अन्या वाचो विमुञ्चथ என்பதாய் யாதொரு வாக்விமோசனம் சொல்லப்பட்டதோ, அது இவ்விடத்தில் மோக்ஷத்துக்குச் சாதகமாக இருப்பதால், அமிருதஸ்ய ஏஷ சேது என்று சொல்லப்பட்டது. சுவர்க்காதிகளின் ஆயதனம் சேது சப்தத்தின் அர்த்தமல்ல. சேது சப்தத்திற்கு பிரம்மஞானம் என்று அர்த்தமாவதால் சேது சுருதியைக்கொண்டு சுவர்க்காதிகளுக்கு ஆயதனம் பிரம்மத்தைவிட வேறாக இருக்கவேண்டும் என்று சொன்னது அயுக்தம். (27)

## IX. I-3-1ல் 2 (2)-வது சூத்திரம்.

## मुक्तोपसृप्यव्यपदेशात् ।२ (28)

2. முந்தின சூத்திரத்துக்கும் இதற்கும் சம்பந்தம்:—சுவர்க்காதிகளின் ஆயதனம் பிரம்மம் என்று முன் கூறப்பட்டது. இப்போது இதற்கே வேறு காரணத்தைக் கூறுகிறார். (29)

3. பத உரை.

मुक्त — முக்தர்களால் அடையத்தக்கதென்று சொல்லியிருப்பதால். (30)

4. பொழிப்புரை.

சுவர்க்காதிகளின் ஆயதனம் பிரம்மம். ஏனெனின் முக்தர்களால் அடையக்கூடியது இதுதான் என்று கூறப்பட்டிருக்கிறது. (31)

5. பாஷ்யம்.

1. இப்போது சொல்லப்போகிற காரணத்தாலும் பரப்பிரம்மமே சுவர்க்காதிகளுக்கு ஆயதனம், ஏனெனின் இந்த ஆயதனமானது முக்தர்களால் அடையத்தகுந்ததாக சொல்லப்பட்டதாக காணப்படுகிறது. அனாத்மாவான தேகாதிகளே நான் என்னும் புத்தி அவித்தை. இதனால் சரீரத்துக்கு அனுகூலமான விஷயத்தில் ராகமும், பிரதிகூலமான விஷயத்தில் துவேஷமும், அதற்கு நாசம் சம்பவிக்கும் என்று பார்க்குமளவில் பயமும், பிரமையும் உண்டாகின்றன. இந்த அநந்தபேதத்துடன் கூடின அநர்த்தக்கூட்டம் தாரையாய் எங்களெல்லாருக்கும் பிரத்தியக்ஷமாயிருக்கிறது. அவித்தை ராகம் துவேஷம் முதலிய தோஷங்களினின்றும் விடுபட்டவர்களைப்பற்றி அவர்கள் எதை அடைகிறார்கள் எனின், பிரகிருத பிரஸ்தாபத்திலிருக்கிற சுவர்க்காதிகளின் ஆயதனத்தை அடைகிறார்கள் என்று சொல்லியிருக்கிறது. அப்படியே மேலும்,

भिद्यते हृदयग्रान्थिश्छिचन्ते सर्वसंशयाः क्षीयन्ते चास्य कर्माणि तस्मिन् दृष्टे परावरे (मु-II-2-8)

அதாவது பரமாயும் அபரமாயுமிருக்கிற பிரம்மம் பார்க்கப்பட்டவளவில், ஹிருதயகிரந்தி சேதிக்கிறது, சகல சம்சயங்களும் நீங்குகின்றன, கர்மங்கள் நாசமாகின்றன என்று சொல்லி,

तथा विद्वान्नामरूपाद्विमुक्तः परात् परं पुरुषमुपैति दिव्यम् (III-2-8)

அதாவது

ரா எப்படி கங்கை முதலிய நதிகள் தங்களுடைய நாமங்களையும் ரூபங்களையும் விட்டு சமுத்திரரூபமாயிருக்கின்றனவோ, அப்படி பிரம்மஞானியும் சம்சாரத்தைவிட்டு அவ்வியக்தத்தைவிட மேலானதும் பூர்ணமாயும் ஸ்வயம் ஜோதியாயும் ஆநந்தமாயுமிருக்கிறதைத் தான் தான் என்று அறிகிறான்,

என்று சொல்லியிருக்கிறது.

यथा सर्वे प्रमुच्यन्ते कामा येऽस्य हृदिस्थिताः अथ मर्त्योऽमृतो भवति अत्र ब्रह्म समश्नुते (बृ-IV-4-7)

அதாவது எப்போது ஹிருதயத்திலிருக்கிற இச்சைகள் நிவிர்த்தியாய் விடுகின்றனவோ அப்போது மனிதன் மரணமற்றவனாகிறான், இந்த தேகத்திலிருக்கும்போதே பிரம்மாநந்தத்தை அனுபவிக்கிறான்.

முதலியவைகளில் பிரம்மம் முக்தர்களால் அடையத்தகுந்தது என்று பிரசித்தமாக இருக்கிறது. (32)

2. பிரதானாதிகளோ முக்தர்களால் அடையத்தகுந்தவை என்று ஒரு இடத்திலும் சொல்லப்படவில்லை. (33)

3. மேலும்

तमेवैकं जानथ आत्मानमन्या वाचो विमुञ्चथ

என்பதினால் சுவர்க்காதிகளின் ஆயதனமானது இதரவாக்குகளைவிட்டு அறியத்தக்கது என்று சொல்லியிருக்கிறது.

तमेव धीरो विज्ञाय प्रज्ञां कुर्वीत ब्राह्मणाः नानुध्यायाद्बहूंश्छब्दान् वाचो विग्लापनं हि तत् (बृ-IV-4-21)

என்கிற வேறு சுருதியாலும் பிரம்மம் வாக்விமோக பூர்வகமாக அறியத்தக்கது என்று சொல்லியிருக்கிறது.

ஆகையாலும் சுவர்க்காதிகளின் ஆயதனம் பரப்பிரம்மமே.

ர ஸ்ருதியின் அர்த்தம்:— விவேகியானவன் ஆத்மாவை அதாவது லக்ஷியபதார்த்தத்தை அறிந்து வாக்கியார்த்தஞானத்தை சம்பாதிக்கவேண்டும். அனாத்மசம்பந்தமான வெகுவசனங்களை உச்சரிக்க வேண்டாம். அதினால் வாக்குக்கு சிரமம்தான் உண்டாகும். (34

## X. I-3 ல்-3-வது சூத்திரம்.

## नानुमानमतच्छब्दात् । ३ (35)

2. முந்தின சூத்திரத்துக்கும் இதற்கும் சம்பந்தம்:—முன் பிரம்மம்தான் சுவர்க்காதிகளுக்கு ஆயதனம் என்று நிரூபிக்கப்பட்டது. இப்போது பிரதானம் ஆயதனமாகமாட்டாது என்றுநிரூபிக்கிறார். (36)

3. பத உரை.

अतच्छब्दात् = அந்த சப்தம் உபயோகிக்கப் படாததினால்.

अनुमानं = அனுமானம்

न = உதவாது. (37)

4. பொழிப்புரை.

சுவர்க்காதிகளுக்கு ஆயதனம் பிரதானம் என்று அனுமானிக்கமுடியாது. ஏனெனின் அதைக்கூறும் சப்தம் உபயோகிக்கப்படவில்லை. (38)

5. பாஷ்யம்.

1. அ-கை:—பிரம்மம்தான் கூறப்பட்டிருக்கிறதென்பதற்கு விசேஷகாரணம் ர (ஆத்மசப்த முதலியவை) சொல்லியிருப்பதுபோல், வேறு ஒன்று கூறப்பட்டிருப்பதாக சொல்லுவதற்கு விசேஷகாரணம் இல்லை என்று சொல்லுகிறார். (39)

2. नानुमान=சாங்கியஸ்மிருதியிற் சொல்லிய பிரதானமானது சுவர்க்காதிகளுக்கு ஆயதனமாக எடுத்துக்கொள்ளத்தக்கதல்ல. (40)

ஏனெனின்,

3. अतच्छब्दात्=அசேதனமான பிரதானத்தைக் கூறும் சப்தம் தச்சப்தம். ந + தச்சப்தம் = அதச்சப்தம் அசேதனமான பிரதானம் காரணமென்றாவது ஆயதனமென்றாவது அறியும்படி, அசேதனமான பிரதானத்தைக் கூறும் சப்தம் யாதொன்றும் இல்லை. அதற்கு எதிரிடையான சேதனத்தைக் கூறும் यः सर्वज्ञः सर्ववित् முதலிய பதங்களிருக்கின்றன. (41)

ஆகையாலேயே வாயுவும் இவ்விடத்தில் சுவர்க்காதிகளுக்கு ஆயதனமாகமாட்டாது. (42)

## XI. I-3-ல் 4-வது சூத்திரம்

## प्राणभृच्च । ४ (43)

2. முந்தின சூத்திரத்துக்கும் இதற்கும் சம்பந்தம்:—முன் பிரதானமும் வாயுவும் ஆயதனமாகமாட்டாது என்று சொல்லப்பட்டது. இப்போது ஜீவனும் ஆகமாட்டான் என்கிறார். (44)

3. பதவுரை:—

प्राणभृत् च= ஜீவனும்

( न= ஆயதனமாகமாட்டான்.) (45)

4. பொழிப்புரை.

ஜீவனும் சுவர்க்காதிக்கு ஆயதனமாகமாட்டான். 46

5. பாஷ்யம்.

1. விஞ்ஞானாத்மாவான ஜீவனுக்கு ஆத்மா சேதனம் இவைகளின் குணங்கள் இருந்தாலும் உபாதியால் வளைபட்ட ஞானமுடைய அதற்கு சர்வஞ்ஞத்தன்மைமுதலிய குணங்கள் பொருந்தமாட்டா. (முன் சொன்ன காரணத்தால்) அதாவது ஜீவனைக்கூறும் சப்தம் பிரயோகிக்கப்படாமையால் ஜீவனும் சுவர்க்காதிகளுக்கு ஆயதனமாகமாட்டான். மேலும் உபாதியால் வளைபட்டவனும், வியாபகமாயிராமலுமிருக்கிற ஜீவன் சுவர்க்காதிகளுக்கு ஆயதனமாகமாட்டான். (47)

2. ர ஆத்மசப்தம் ஜீவனைக் கூறமாட்டாதாவெனின், சர்வஞ்ஞ பதத்துக்குச் சமானமான அர்த்தத்தைக்கொடுக்கிற ஆத்மசப்தம் ஜீவனைக் கூறமாட்டாது (48)

3. ர (பிரதானம், ஜீவன் இவ்விரண்டும் ஆயதனமாகமாட்டாது என்று சொல்லுவதற்கு ஒரே காரணம் ஏற்பட்டபடியால் नानुमानं प्राणभृतावतच्छब्दात् என்று ஒரே சூத்திரத்தைச் செய்யாமல், ஜீவன் விஷயமாக தனி சூத்திரத்தை செய்யவேண்டிய காரணமென்னவெனின்) மேல்சூத்திரத்தின் பொருட்டாம். அதாவது ர மேல்சூத்திரத்தில் சொல்லிய காரணம் ஜீவவிஷயத்தில்மட்டும் பொருந்துகிறது. மேலும் தனி சூத்திரத்தினால் விஷயமும் செவ்வையாகத் தெரிய வரும், ஆகையால் இந்த சூத்திரம் தனியாக ஏற்பட்டது.) (49)

## XII. 1-3-1ல் 5. (5)-வது சூத்திரம்.

## 1 भेदव्यपदेशात् । ५ (50)

2. (முந்தின சூத்திரத்துக்கும் இதற்கும் சம்பந்தம்:—முன் ஜீவன் சுவர்க்காதிகளுக்கு ஆயதனமாக

மாட்டான் என்று சொல்லப்பட்டது. இதற்கு வேறு காரணத்தை இப்போது சொல்லுகிறார்.)

ஜீவன் ஏன் சுவர்க்காதிகளுக்கு ஆயதனமாக மாட்டான் எனின் भेदव्यपदेशात् எனகிறார். (51)

3. பதஉரை பேதம் சொல்லியிருப்பதால். (52

4. பொழிப்புரை :-ஞாதா-ஞேய பேதம் சொல்லியிருப்பதால் ஜீவன் சுவர்க்காதிகளுக்கு ஆயதனமாக மாட்டான். (53)

5. பாஷ்யம்.

तमेवैकं जानथ आत्मानं(அவனையே ஆத்மாவாக அறி.

என்கிற வாக்கியத்தால் ஞாதா ஞேய பேதங்கள் தெரியவருகின்றன. ஜீவன் மோக்ஷ இச்சையுள்ளவனகையால் ஞாதா. மிச்சமான ஆத்ம சப்தத்தால் கூறப்படும் பிரம்மம் ஞேயம். அது சுவர்க்காதிகளுக்கு ஆயதனமாக அறியப்படுகின்றது. ஜீவன் அறியப்படவில்லை.

र (சுத்தமான பிரத்தியகாத்மா ஞேயனுயிருந்தாலும் ஜீவன் என்கிற ஸ்வரூபத்தால் ஞாதாவும் ஞேயமும் வெவ்வேறனதால் ஜீவனுக்கு ஞேயரூபம் சம்பவிக்கமாட்டாது.)

ஆகவே அசுத்தஜீவன் ஆயதனமாகமாட்டானே தவிர சுத்தரூபம் ஆகும் என்பது கருத்து. (54)

XIII. I-3-1ல்-6 (6)வது சூத்திரம்.

1. प्रकरणात् । ६ (55)

2. அ-கை :—இன்னும் என்ன காரணத்தால் ஜீவன் சுவர்க்காதிகளுக்கு ஆயதனமாகமாட்டான்.56

3. பதஉரை::—பிரகரணத்தினால் (57)

4. பொழிப்புரை :—பிரகரணத்தினும் ஜீவன் சுவர்க்காதிகளுக்கு ஆயதனமாகமாட்டான். (58)

5. பாஷ்யம் :—

कसिन्नु भगवो विज्ञाते सर्वमिदं विज्ञातं भवति (मु-I-1-3)

என்கிற சுருதியில் எந்த ஒன்றை அறிந்தமாத்திரத்தில் சர்வமும் அறிந்ததாக ஆய்விடும் என்கிற கேள்வியால் இந்தப்பிரகரணம் பரமாத்மபரம் என்று ஏற்படுகிறது. சர்வஸ்வரூபமான பரமாத்மா அறியப்பட்டவளவில், இதெல்லாம் அறியப்பட்டதாக ஆகிறது. கேவலம் ஜீவனை அறிந்தமாத்திரத்தில், எல்லாம் அறிந்ததாக ஆகிறதில்லை. (59)

प्रणवोधनुः शरोह्यात्मा ब्रह्म तल्लक्ष्यमुच्यते (मुII-2-4)

என்கிற முந்தின சுருதியில் ஆத்மசப்தம் ஜீவனைக் கூறுகிறது.

अरा इव रथनाभौ संहता यत्र नाड्यः स एषोऽन्तश्चरिते बहुधा जायमानः

என்கிற (II-2-6) பிந்தின மந்திரத்திலும் ஜீவனே நாடிகளுக்கு ஹிருதயதுவாரா ஆசிரயம் என்று தெரியவருகிறது. ஆகவே இந்த பிரகரணம் ஜீவபரம் என்று ஏற்படுவதால் மத்தியிலிருக்கிற यस्मिन् द्यौः என்கிற மந்திரமும் ஜீவபரமாகவே யிருக்கவேண்டும். ஆகையால் சுவர்க்காதிகளுக்கு ஆயதனம் ஜீவன் தான் என்று ஒருவன் சொல்ல

அது யுக்தமன்று என்று प्रकरणात् என்கிற சூத்திரத்தில் சொல்லுகிறார். முந்தின மந்திரத்தில் ஆத்மசப்தம் ஜீவனைக் கூறினும், यस्मिन् द्यौः என்கிற மந்திரத்திலுள்ள ஆத்மசப்தம் பிரம்மத்தைத்தான் கூறுகிறது.

ஏனெனில் சுவர்க்காதிகளுக்கு ஆயதனம் என்னும் லிங்கம் பிரம்மத்துக்கே பொருந்தும். மேலும் பிரகரண முழுமையும் முக்கியமான பிரம்ம பரமாயிருப்பதால், அமுக்கியமான ஜீவபரம் என்று சொல்லுவதற்குக் காரணமில்லை.

ओमित्येवं ध्यायथ आत्मानं

என்கிற மேல்மந்திரத்தில் ஆத்மசப்தம் பரமாத்மாவுக்கே உபயோகிக்கப்பட்டிருக்கிறது. ஜீவனும் பிரம்மமும் ஒன்றானதால் अरा इव என்கிற மந்திரத்திலுள்ள ஜீவலிங்கமும் பரமாத்மாவினிடத்திலும் உபயோகப்படலாம். (60)

XIV. I-3-7-வது சூத்திரம்.

स्थित्यदनाभ्यां च ॥ ७ (61)

2. முந்தின மந்திரத்துக்கும் இதற்கும் சம்பந்தம்:—இன்னும் என்னகாரணத்தால் ஜீவன் சுவர்க்காதிகளுக்கு ஆயதனமாகமாட்டான் என்பதைச் சொல்லுகிறார்.

अ (முந்தின சுருதியில் ஜீவன் பிரகிருதனுகாமையால் அவன் கூறப்படவில்லையென்றுசொல்லப்பட்டது.

द्वासुपर्णौ என்கிற (III-1-1) சுருதியில் அப்பிரகிருதனை ஜீவன்கூறப்பட்டிருப்பதால் இவ்விடத்திலும் ஏன் கூறப்பட்டிருக்கக்கூடாதெனின், இந்த சூத்திரத்தால் உத்தரம் சொல்லுகிறார்.) (62)

3. பதவுரை:—ஸ்திதியும் சாப்பாடும் சொல்லியிருப்பதாலும். (63)

4. பொழிப்புரை:—ஈசுவரனுக்குப் பொருந்தும் உதாசீனஸ்திதியும், ஜீவனுக்குப்பொருந்தும் கர்மபலானுபவமும் கூறியிருப்பதால் ஜீவன் ஆயதனமாக மாட்டான். (64)

5. பாஷ்யம்:— சுவர்க்காதிகளுக்கு ஆயதனம் என்பதை உத்தேசித்து

द्वासुपर्णा सयुजा सखाया (मु-III-1-1)

என்று சுருதிசொல்லுகிறது. இவ்விடத்தில் ஸ்திதியும் சாப்பிடுதலும் கூறப்பட்டிருக்கின்றன.

तयोरन्यः पिप्पलं स्वाद्वत्ति

என்பது கர்மபலானுபவத்தைக் காட்டுகிறது.

अनश्नन्नन्योऽभिचाकशीति

என்பது உதாசீனமாயிருப்பதை காட்டுகிறது

இந்த ஸ்திதியாலும் அதனத்தாலும் (சாப்பிடுதலாலும்) ஈசுவரனும் க்ஷேத்திரஞ்ஞனும் இவ்விடத்தில் கிரகிக்கப்படுகிறார்கள்.

ர (ஸ்திதியால் ஈசுவரனும், அதனத்தால் ஜீவனும் द्वासुपर्ण என்கிற மந்திரத்தில் சொல்லப்பட்டிருந்தால், ஆயதனவாக்கியத்தால் ஈசுவரனையே கிரகிக்க வேண்டிய காரணமென்னவெனின்) சுவர்க்காதிகளுக்கு ஈசுவரன் ஆயதனமாகச் சொல்லப்பட்டிருந்தால் தான், இந்தப் பிரகிருத ஈசுவரனை க்ஷேத்திரஞ்ஞனுக்கு வேறாகச்சொன்னது பொருந்தும். அப்படியன்றியில் ஜீவன் சுவர்க்காதிகளுக்கு ஆயதனமாக இருந்தால், ஈசுவரனைப்பற்றிச் சொல்லவேண்டிய நிமித்தமில்லை. அப்படி சொன்னதானது ஒன்றுடனும் சேராமல் போய்விடும்.

நீ சொல்லுகிறபடி ஈசுவரனே ஆயதனமாக இருக்கும்பக்ஷத்தில் ஈசுவரனை ஜீவனைவிட வேறு என்று வேறுபடுத்திக்காண்பிக்கவேண்டிய நிமித்தமில்லாதபடியால் நிஷ்காரணமாய்ச்சொன்னதோஷம் சம்பவிக்கும். ஏனெனின் (ர பிரம்மஸ்வரூபத்தைக் காட்டும் பொருட்டு, பிரகிருதமாயிராத ஜீவனை சுருதி எடுத்துக்கொண்டிருப்பதால்) நீ சொல்லுவது யுக்தமன்று. ஏனெனின் ஜீவனைப்பற்றிச் சொல்லவேண்டுமென்பது சுருதியின் கருத்தல்ல. ஜீவன் கர்த்தாவென்பதும் போக்தாவென்பதும், ஒவ்வொரு சரீரத்திலும் புத்தி முதலிய உபாதிகளுடன்கூடினவன் என்பதும் உலகத்தில் பிரசித்தம். அவனைப்பற்றி சுருதி சொல்லவேண்டியதில்லை. ஈசுவரனோ லோகத்தில் அப்பிரசித்தனாகையால் சுருதிசொல்லவேண்டியது யுக்தம். ஆகையால் ஈசுவரவிஷயத்தில் நிஷ்காரணமான வசனம் ஏற்பட்டதாகச் சொன்னது அயுக்தம்.

ர ( द्वा सुपर्णौ என்கிற சுருதியில் புத்தியும் ஜீவனும் கூறப்பட்டிருப்பதால், பிரகிருதசூத்திரம் எப்படி பொருந்தும். ) எனின் गुहां प्रविष्टावात्मानौ हि என்கிற (I-2-11-3-வது சூத்திரத்தில் द्वा सुपर्णा என்கிற ரிக்கில் ஸ்திதியால் ஈசுவரனும் அதனத்தால் ஜீவனும் தான் கூறப்பட்டிருக்கிறார்கள் என்று சொல்லியாய்விட்டது.

பைங்கிய உபநிஷத்தில்செய்த வியாக்கியானத்தால் இந்த ரிக்கில் அந்தக்கரணமும் ஜீவனும்தான் கூறப்பட்டிருக்கின்றன என்னும்பக்ஷத்தாலும் விரோதமில்லை. எப்படியெனின், அந்தக்கரணம்முதலிய உபாதிகளையேதான் என்றுபாவிக்கும் ஜீவன் கடாதிகளின் ஆகாசம்போல் ஒவ்வொருசரீரத்திலும் வெவ்வேறாக பாவிக்கப்படுகிறான். அவன் சுவர்க்காதிகளுக்கு ஆயதனமாகமாட்டான் என்று சொல்லியிருக்கிறது. எவன் சர்வசரீரங்களிலும் உபாதியன்றியில் காணப்படுகிறானோ அவன் பரமாத்மாவாகிறான். கடாகாசத்தை கடஉபாதியன்றியில் பார்த்தால் மகாகாசமாகவேயிருக்கிறது. இதுபோல் ஜீவனும் பரமாத்மாவைத்தவிர வேறாகாதபடியால், அவன் ஆயதனமாகமாட்டான் என்று சொல்லக்கூடாது. ஆகையால் அந்தக்கரணம் முதலிய உபாதிகளேதான் என்று நினைக்கிற ஜீவன்தான் ஆயதனமாகமாட்டான் என்று சொல்லியிருக்கிறது. ஆகையால் பரபிரம்மமே சுவர்க்காதிகளின் ஆயதனம்.

பூதயோனிவாக்கியத்துக்கு மத்தியில் यस्मिन् द्यौः पृथिवीचान्तरिक्षं என்கிற வாக்கியம் படித்திருப்பதால், अदृश्यत्वादि गुणकोधर्मोक्तेः என்கிற சூத்திரத்தாலேயே சுவர்க்காதிகளுக்கு ஆயதனம் பிரம்மம் என்று சித்தமாயிருந்தாலும், அதையே விரிவாய்ச்சொல்லும்பொருட்டு இந்த அதிகரணம் ஏற்பட்டது. ர (ஆகையால் முண்டகோபனிஷத்து பிரம்மத்தில் தாற்பரியப்படுகிறது என்பது சித்தம்.)

रा परमतस्सेतून्मानसंबन्धभेद व्यपदेशेभ्यः (III-2-31)

என்கிற சூத்திரத்தில் சேதுசப்தம் பிரம்மத்துக்கு கௌணமாக உபயோகிக்கப்பட்டிருக்கிறபடியால் மறுபடியும் அதை இவ்விடத்தில் சொல்லவேண்டியது அனுவசியமே எனின்.

இவ்விடத்தில் பிரம்மத்தை கௌணமாகக்கூட சேதுசப்தம் கூறவில்லை. பிராதானுதிகளை கௌணமாக்கூறுகிறது என்று பூர்வபக்ஷி ஆக்ஷேபிக்கிறான். 65

रा XV. பூர்வபக்ஷபலன்:—பிராதானுதி உபாஸ்தி

சித்தாந்தபலன்:—நிற்குணபிரம்மஞானம். (66)

XVI. வியாஸாதிகரணமாகிப்படி அத்வைதச்சுருக்கம்.

1. சுலோகங்கள்:—

सूत्रं प्रधानं भोक्तेशौद्युम्वाद्यायतनं भवे त् ।
श्रुतिस्मृति प्रसिद्धिभ्यां भोक्तृत्वाच्चेश्वरेतरः ॥
नाऽऽद्यौ पक्षावात्मशब्दान्नभोक्तामुक्तगम्यतः ॥
ब्रह्मप्रकरणादीशः सर्वज्ञत्वादितस्तथा ॥ (67)

2. விஷயவாக்கியம்:— முண்டகோபநிஷத்தில்

यस्मिन् द्यौः ———....———...—सेतुः

என்று சொல்லியிருக்கிறது. இதின் அர்த்தம்:—

சுவர்க்கலோகம், பூலோகம் முதலிய சமஸ்த ஜகத்தும் எந்த ஆதாரத்தை ஆசிரயித்திருக்கிறதோ அந்த ஆதாரமொன்றையே ஆத்மாவாக அறி. ஆசிரயித்துக்கொண்டிருக்கிற ஸ்வர்க்காதிகளை அறியவேண்டாம். இதற்குவேறான அனுத்மாவைக்கூறும் வார்த்தைகளைவிட்டுவிடு. அவைகளால் புருஷார்த்தம் கிடைக்கமாட்டாது. (68)

3. சந்தேகம் :—இதில் சந்தேகம்யாதெனின் ஸ்வர்க்காதிகளுக்கு ஆயதனம்.

(1) சூத்திராத்மாவா? அல்லது
(2) பிரதானமா? அல்லது
(3) போக்தாவா? அல்லது
(4) ஈசுவரனு? (69)

4:—பூர்வபக்ஷம்:—சூத்திராத்மாவாயிருக்கலாம். ஏனெனின்

वायुनावै गौतम सूत्रेणायं च लोकः परश्च लोकः सर्वाणिच भूतानि संदृब्धानि भवन्ति

என்கிற சுருதியால் சூத்திராத்மாவான வாயு ஸ்வர்க்காதிகளுக்குஆயதனம் என்றுதெரியவருகிறது.

அல்லது பிரதானமாயிருக்கலாம். சாங்கிய ஸ்மிருதியில் பிரதானமே சகலத்துக்கும் ஆதாரமென்பது தெரியவருகிறது.

அல்லது போக்தாவாயிருக்கலாம். ஏனெனின் तमेवैकं जानथ आत्मानं என்பதில் ஆத்மசப்தம்உபயோகிக்கப்பட்டிருக்கிறது. (70)

5. சித்தாந்தம்:—

முதலிரண்டுபக்ஷங்களும் பொருந்தா. ஏனெனின் ஆத்மசப்தம் அவைகள் விஷயத்தில் பொருந்தாது.

போக்தாவும் ஆயதனமாகமாட்டான். ஏனெனின்,

यदा पश्यः पश्यते रुक्मवर्णं कर्तारमीशं पुरुषं ब्रह्मयोनिम् ।
तया विद्वान् पुण्य पापे विधूय निरञ्जनःपरं साम्यमुपैति॥

என்றுசொல்லியிருக்கிறது. ஸ்வர்க்காதிகளுக்கு ஆதாரமாயிருப்பதானது முக்த புருஷனால் அடையக்கூடியது என்று சொல்லியிருப்பதால் போக்தாவான ஜீவன் அந்த ஆதாரமாகமாட்டான்.

कस्मिन्नु भगवो विज्ञाते सर्वमिदं विज्ञातं भवति

என்பதாய் ஒன்றை அறிவதினுல் எல்லாம் அறியப்பட்டதாக ஆகிறது என்று சுருதி ஆரம்பிக்கிறது.

ब्रह्म वेद ब्रह्मैव भवति என்று சுருதி முடிவுபெறுகிறது. ஆகையால் பிரகரணம் பிரம்மபரமென்று ஏற்படுகிறது.

ஆகையால் பிரம்மமே ஸ்வர்க்காதிகளுக்கு ஆயதனம் என்று ஏற்படுகிறது. (71)

XVII. விசிஷ்டாதுவைதப்படி

1-3-1-வது அதிகரணத்தின் சுருக்கம்.

1. இதிலடங்கிய சூத்திரங்கள்:—6. அத்வைதத்தில் 3-வது 4-வது சூத்திரங்கள் இதில் ஒரு சூத்திரமாக படிக்கப்பட்டிருக்கின்றன. (72)

2. இதின் விஷயவாக்கியம் मु-II-2-5, (73)

3. இதில் பிருதிவியாதிகளுக்கு ஆதாரமாக ஒரு ஸ்தானம் சொல்லியிருக்கிறது. அது

(1) ஜீவனு? அல்லது
(2) பரமாத்மாவா?

என்பது சந்தேகம். (74)

4. பூர்வபக்ஷம்.—ஜீவன்தான். ஏனெனின்,

(1) மனது, இந்திரியம், இவைகளுக்கு ஆதாரம் என்று சொல்லியிருக்கிறது.

(2) உத்தர வாக்கியத்தில் நாடி சம்பந்தத்துடன் ஜனிக்கிறுன் என்றும் சொல்லியிருக்கிறது. (75)

5. சித்தாந்தம்:-பரமாத்மாதான் ஜீவனல்ல.ஏனெனின் இவனே

(1) ஆத்மா அதாவது சகலத்தையும் அடக்கி நியமனம் செய்கிறதினுல் அடைகிறுன் ஆகையால் ஆத்மாவென்றும்.

(2) அமிருதத்திற்கு ஸேது அதாவது மோக்ஷத்துக்குச் சாதகமென்றும் சொல்லியிருக்கிறது. (76)

6. பதவுரை. द्युभ्वाद्यायतनं = ஸ்வர்க்கம் முதலியவைகளுக்கு ஸ்தானமாகச் சொல்லப்பட்டவர் பரமாத்மாவே.

स्व शब्दात् ஆத்மசப்தமிருப்பதால், ஸ்வர்க்கம் முதலிய ஸ்தானங்களுக்கு ஆதாரம் பரமாத்மாவே. ஏனெனின் பரமாத்மாவைக்கூறும் ஆத்மசப்தம் பிரயோகிக்கப்பட்டிருக்கிறது. (77)

I-3-1-ல்-2 (2)

நாமரூப பந்தத்தினின்றும் விடுபடும் ஜீவனுல் அடையத்தகுந்தவர் என்று சொல்லியிருப்பதால் பரமாத்மாவே கூறப்படுகிறுர். (78)

I-3-1 ல் 3 (3&4)

अनुमानं ஊஹிக்கக்கூடிய பிரதானமும் प्राणभृत् च ஜீவனும்.

न = ஆகாசாதிகளுக்கு ஸ்தானமல்ல, ஏனெனின் अतच्छब्दात् இவைகளைக் கூறும் சப்தமில்லை. (79,

I-3-1-ல்4-(5)

अनीशयाशोचतिमुह्यमानः

जुष्टम् यदा पश्य त्यन्यमीशम्

என்பதாய் தன்னைவிட வேருன ஈசுவரனைப்பார்த்துதுக்கமற்றவனுகிறுன் என்று சொல்லியிருப்பதால் ஜீவன் பிரம்மத்தைவிட வேறு. (80)

I.3-1-ல்-5 (6)

अथ परा यया तदक्षरमधिगम्यते

என்பதால் பிரகரணம் பரமாத்மபரம் என்று தெரியவருகிறது. (81)

I-3-1-ல்- 6 (7)

तयोरन्यं என்கிற முண்டகம் III-1-1 சுருதியானது கர்மபலத்தை புஜிக்காத பரமாத்மா பிரகாசித்துக் கொண்டிருக்கிறுர் என்று சொல்லுகிறது. ஜீவன் கர்மவசங்கதனுதால் பலபோக்தா, இப்படி பேதமிருப்பதால் அமிருதத்திற்கு ஹேதுவான ஆகாசாதிகளின் ஸ்தானம் பரமாத்மாவே ஜீவனல்ல. (82)

XVIII. துவைதப்படி சுருக்கம்.

1. பாதசங்கதி:-இந்த பாதத்தில் விஷ்ணுவுக்கும் ருத்திரன், பிரகிருதி முதலானவர்களுக்கும் பொதுவாய் உபயோகிக்கப்படும் பதங்கள், லிங்கங்கள் இவைகள் முக்கியமாய் விஷ்ணுவினிடத்திலேயே பொருந்துகின்றனவென்பது நிரூபிக்கப்படுகின்றது 83

2. முதலாவது அதிகரணத்தின் விஷயவாக்கியம்:—

यस्मिन् द्यौः ... तमेवैकं जानथ

என்றும் சுருதிவசனம். (84)

3. சந்தேகம்:—இந்த வாக்கியத்தில் ஸ்வர்க்காதிகளுக்கு ஸ்தானமாகச் சொன்னது விஷ்ணுவா? அல்லது ருத்திராதிகளா? (85)

பூர்வபக்ஷம்:—

(1) स द्रो वा व लोकाधारः

என்கிற வசனப்படி ருத்திரன் ஸ்தானமாயிருக்கலாம்.

(2) आकाश एव तदो तं च प्रोतं च

என்கிற வசனப்படி பிரதானம் ஸ்தானமாயிருக்கலாம்.

(3) वायुना वै गौतम सूत्रेणायं च लोकः परश्च लोकः सर्वाणि च लोकानि भूतानि सन्दब्धानि

என்கிற வசனப்படி வாயு ஸ்தானமாயிருக்கலாம்

(4) स एषामन्तश्चरते बहुधा जायमानः

என்கிற சுருதிப்படி ஜீவன் ஸ்தானமாயிருக்கலாம்.

இந்த சுருதிகளால் இவர்கள் ஆதாரம் என்று தெரியவருகிறது. (86)

5. சித்தாந்தம்:—

द्यु- आयतनं:-விஷயவாக்கியத்திலுள்ள ஸ்வர்க்காதிகளுக்கு ஸ்தானம் விஷ்ணுவே; வேறல்ல, ஏனெனின்,

स्वशब्दात् தன்னை அதாவது விஷ்ணுவையே கூறும் ஆத்மசப்தம் இந்த சுருதியிலிருக்கிறது. (87)

I-3-1-ல்-2-வது சூத்திரம்.

ஆத்மசப்தத்துக்கு அமுக்கியார்த்தத்தை ஏன் எடுத்துக்கொள்ளக் கூடாதெனின் சொல்லுகிறார்.

சூத்திரார்த்தம்:—

अमृतस्यैष सेतुः என்கிற சுருதியில் முக்தனால் அடையக்கூடினவர் விஷ்ணுவே என்று சொல்லியிருக்கிறபடியால் ஆகாசாதிகளின் ஆசிரயம் விஷ்ணுவேயன்றி வேறுஒருவருமல்ல. 88

I-3-1-ல்-3-வது சூத்திரம்.

ருத்திராதிகள் ஏன் ஆகாசாதிகளுக்கு ஆசிரயங்களாகமாட்டார்கள் எனின் சொல்லுகிறார்,

आनुमानं அனுமானத்தால் சித்தமான பாசுபதாதி ஆகமங்களில் ருத்திராதிகள் ஆசிரயங்கள் என்று சொல்லியிருக்கிறது.

न = அந்த ருத்திராதிகள் சகலத்துக்கும் ஆசிரயங்களல்ல. ஏனெனின்,

अतच्छब्दात् = यस्मिन् द्यौः என்கிற சுருதியில் ருத்திராதிவாசக சப்தமுமில்லை, அவர்களுக்குரிய பஸ்மதாரணை உக்கிரரூபம் முதலிய லிங்கங்களுமில்லை. (89)

I-3-1-ல்-4-வது சூத்திரம்.

ஜீவனும் வாயுவும் ஏன் ஆசிரயங்களாகாவெனின் சொல்லுகிறார்.

சுருதியில் ஆத்மசப்தம் இருக்கிறது என்கிற காரணத்தாலும், முக்தர்களால் அடையக்கூடியவர் என்கிற காரணத்தாலும் प्राणभृत् ஜீவனும் பிராணனும் ஆகாசாதிகளுக்கு ஆசிரயமல்ல. விஷ்ணுவானவர் பிறப்பற்றவராயிருந்தாலும், அவருக்கு வெகு அவதாரங்களிருப்பதால் அவரையும் ஜாயமானராகச் சொல்லலாம். (90)

I-3-1-ல்-5-வது சூத்திரம்.

ஜீவனுக்கும் பிரம்மத்துக்கும் சாதாரணமாயிருக்கிற சுருதிகளுக்குப் பாதகமன்றியில் ஜீவபிரம்ம அபேதமிருக்கட்டுமே என்ற சங்கைக்குச் சமாதானம் கூறப்படுகின்றது

भेदव्यपदेशात् = जुष्टं यदा पश्यत्यन्यमीशं என்கிற சுருதியில் ஜீவ ஈசுவரபேதம் சொல்லியிருப்பதால் இருவரும் ஒன்று என்று சொல்லமுடியாது. (91)

I-3-1-ல்-6-வது சூத்திரம்.

ஜீவபிரம்மபேதத்தைச் சொல்லும்படி ஈசசப்தத்துக்கு பிரம்மம் என்று அர்த்தம் எப்படி செய்யலாம் எனின் சொல்லுகிறார்.

प्रकरणात्द्वे विद्ये वेदितव्ये என்கிற சுருதியில் சிரேஷ்ட வித்தைக்கு விஷயமாகச் சொல்லப்பட்ட விஷ்ணுவே अन्यमीशं என்கிற சுருதியில் ஈசசப்தத்தால் கூறப்பட்டிருப்பதால் இந்த பிரகரணம் விஷ்ணுபரம், ஆகையால் ஈசசப்தத்தால் கூறப்பட்டவர் ஜீவனன்று பிரம்மமே. (92)

I-3-1-ல்-7-வது சூத்திரம்.

கேவலம் சுருதிமுதலிய பலத்தால்மட்டும் ஜீவனுக்கும் ஈசுவரனுக்கும் பேதம் இருக்கிறது என்பதில்லை, பின்னேயோவெனின் லிங்கம் அதாவது விசேஷதர்மத்தாலுமிருக்கிறது स्थित्यदनाभ्यां = द्वा सुपर्णा என்கிற சுருதியில் ஈசுவரன் கர்மபல யோகமன்றியில் தேகத்திலிருக்கிறதாகச் சொல்லியிருக்கிறது. ஜீவன் தேகத்தில் இருந்து கர்மபலத்தை அனுபவிக்கிறதாகச் சொல்லியிருக்கிறது. இந்த இரண்டு காரணங்களால் ஜீவனும் ஈசுவரனும் ஒன்றல்ல. (93)

பூர்வபக்ஷபலன்:—அதிர்சியத்வாதி அதிகரணத்தின் ஆக்ஷேபம்.

சித்தாந்தபலன்:—சமாதானம். (94)

## I-3-2-வது அதிகரணத்தின்

### அனுக்கிரமணிகை.

I-3-2-வது அதிகரணம்.

1. இதின் பெயர்:-பூமாதிகரணமென்பதாம்(1)

II. இந்த அதிகரணத்தின் கருத்து:— பூமா என்பது பரமாத்மாவென்பதாம். (2)

III. இதின் விஷயவாக்கியம்:—

(1) भूमात्वेव विजिज्ञासितव्यः

(2) भूमानं भगवो विजिज्ञासे

(3) यत्र नान्यत् पश्यति नान्यच्छृणोति नान्यत् विजानाति तदल्पम् ( छा VII-23-24)

அர்த்தம்:—(1-க்கு)

ஐ பிரம்மவித்தையை அடையும்பொருட்டு சனத்குமாரரை நாரதர் அடைந்த சமயத்தில் நீர் எதை அறிந்திருக்கிறீர் என்று சனத்குமாரர் நாரதரைக் கேட்க,

ஆத்மவித்தையைத்தவிர சகல வித்தைகளையும் அறிந்திருக்கிறேன் என்றும், ஆத்மவித்தை யில்லாததினால் துக்கிக்கிறேன் என்றும், துக்கத்தைத் தாண்ட சாதகமான ஆத்மவித்தையை உபதேசிக்க வேண்டுமென்றும், உங்களைப் போன்றவர்களிடம் ஆத்மவித்தையைக் கிரகிக்கிறவன்தான் சோகத்தைத் தாண்டுகிறான் என்றும், துக்கிக்கிற என்னைத் தாங்கள் தாண்டும்படி செய்ய வேண்டுமென்றும், தான் ரிக்வேதம் முதலிய நாமங்களை மட்டும் அறிவதாயும் நாரதர் சொன்னார்.

அதற்கு சனத்குமாரர் சொன்னதாவது:— நீர் நாமத்தைத் தெரிந்து கொண்டிருக்கிறீரே, அதையே பிரம்மமாக உபாசியும், நாமத்தை பிரம்மமாக அறிந்தவன் இஷ்டப்படி சஞ்சரிக்க சமர்த்தனாகிறான்.

பிறகு நாரதர் நாமத்தைவிட பெரிது ஏதாவது இருக்கிறதா என்று கேட்க, வாக்கு நாமத்தைவிட பெரிது, அதை பிரம்மமாக உபாசியும் என்று சநத்குமாரர் சொன்னார். இதற்குமேல் அதாவது இதைவிடப் பெரிது ஏதாவதுண்டோ என்று நாரதர் மேல்மேல் கேட்க, மனது, சங்கற்பம், சித்தம், தியானம், விஞ்ஞானம், பலம், அன்னம், அப்பு, தேஜஸ், ஆகாசம், ஸ்மரணை, ஆசை இவைகளில் முன்றையே முன்னால் இருக்கிறதைவிட பின்னாலிருப்பது பெரிது என்று சநத்குமாரர் சொன்னார். மறுபடியும் நாரதர் ஆசையை விடப்பெரிது ஏதாவதுண்டோ என்று கேட்க, பிராணனிருக்கிறதாக சநத்குமாரர் சொன்னார். இதற்குமேல் நாரதர் ஒன்றும் கேட்கவில்லை. ஆயினும் பிராணனைவிட சத்தியம் பெரிதென்று சநத்குமாரர் சொன்னார். இந்த சத்தியத்தைத் தெரிந்துகொள்ள வேண்டுமென்று நாரதர் கேட்க அதற்குச் சாதகமான விஞ்ஞானம், மனனம், சிரத்தை, நிஷ்டை, வியவசாயம் முயற்சி, சுகம் இவைகளை அடைய வேண்டுமென்று சநத்குமாரர் சொல்ல அவைகளை அடைந்தேன் என்று நாரதர் சொல்ல, சுகம் என்பது என்ன வென்று கேட்க

यो वै भूमा तत्सुखं नाल्पे सुखमस्ति

भूमैव सुखं भूमात्वेव विजिज्ञासितव्यः

எது பூமாவோ அது சுகம், அற்பத்தில் சுகமில்லை பூமாவே சுகம், பூமாவே அறியத்தக்கது என்று சநத்குமாரர் சொன்னார்.

2-க்கு அர்த்தம்:-சுவாமின் பூமாவை அறிகிறீரா.

3-க்கு அர்த்தம்:-எந்த இடத்தில் வேறு ஒன்றை பார்க்கிறதில்லையோ, கேட்கிறதில்லையோ, அறிகிறதில்லையோ அது பூமா. எந்தவிடத்தில் வேறொன்றை பார்க்கிறானோ கேட்கிறானோ அறிகிறானோ அது அல்பம்(3)

IV. சங்கதி:—

(a) முந்தின அதிகரணத்துக்கும் இதற்கும்:— முந்தின அதிகரணத்தில் ஆத்மசப்தத்தால் சுவர்க்காதிகளின் ஆயதனம் பிரம்மம் என்று சொல்லப்பட்டது. இது அயுக்தம். ஏனெனின் तरति शोकं आत्मवित् என்கிற இடத்தில் ஆத்மசப்தம் பிரம்மத்தைவிட வேறானதைக் கூறுகிறது. ஆகவே இரண்டுக்கும் ஆக்ஷேபசங்கதி ஏற்படுகின்றது. (4)

நி (b) பாதசங்கதி:—यत्र नान्यत् पश्यति என்பதினால் சர்வ வியவஹாரமற்ற தென்பதாகிய பிரம்மலிங்கம் காணப்படுகிறது. பிராணனுக்குமேல் கேள்வியில்லாதபடியால் பிரசினபாவம் பிராணலிங்கம், एषतु वा अतिवदति यः सत्येन अतिवदति என்கிற இடத்திலிருக்கிற அதிவாதியும் முன் சொன்ன அதிவாதியே. இந்த பிராணலிங்கங்களால் பிரம்மலிங்கம் மறைபட்டுப்போவதால் பிரம்மலிங்கம் அஸ்பஷ்டம் ஆகையால் இந்த அதிகரணத்தில் இந்த அதிகரணம் படிக்கப்பட்டது. (5)

(c) மற்றசங்கதிகள்:—முன்போலவே. (6)

V. (1) சந்தேகம்:—பூமாவென்பது

(1) பிராணனா அல்லது

(2) பரமாத்மாவா?

(2) இந்த சந்தேகத்துக்குக் காரணமென்ன? बहोर्लोपो भूच बहो: என்கிற பாணினி VI--4--158 சூத்திரப்படி बहु என்கிற பதம் भूमन् என்று பரிணமிக்கிறது. அந்த பூமன் என்கிற பதத்துக்கு வெகு வாயிருக்கும் தன்மை என்று அர்த்தம். ஆகையால் பூமா என்றால் வெகுவாயிருக்கும் தன்மை என்று அர்த்தம்.

அப்படி வெகுவாயிருக்கும் தன்மை எதிலுடையது என்று கேட்குமளவில் प्राणो वा आशाया भूयान् என்கிற வசனம் சமீபத்திலிருப்பதால் பிராணன் பூமா வென்று விளங்குகிறது.

அப்படியே

श्रुतं ह्येव मे भगवद्दृशेभ्यस्तरतिशोकमात्मवित् सोहं भगवः शोचामि तं मा भगवन् शोकस्य परं पारं तारयतु

அதாவது ஆத்மாவை அறிந்தவன் துக்கத்தைத் தாண்டுகிறான் என்று உங்களைப் போன்றவர்களிடமிருந்து நான் கேட்டிருக்கிறேன். நான் துக்கிக்கிறேன். சுவாமின் நான் சோகத்தைத் தாண்டும்படி நீர் செய்யவேண்டும்

என்கிற பிரகரணத்திலிருக்கிற ஆத்மசப்தத்தால் பரமாத்மாவும் பூமாவாயிருக்கலாம் என்று தோன்றுகிறது.

இவ்விடத்தில் எதை எடுத்துக்கொள்ளுகிறது எதைத் தள்ளுகிறது என்று சந்தேகம் ஜனிக்கிறது (7

VI. இதிலடங்கிய சூத்திரங்கள் 1-2-(8ம்-9ம்)-8.

VII. பூர்வபக்ஷம்:—பிராணன்தான் பூமா என்று ஏற்படுகிறது. ஏனெனின்,

ரா இந்த அத்தியாயத்தில், பெரிதாயிருக்கிறதைப்பற்றிக் கேள்வியும் உத்தரமும் அநேகம் ஏற்பட்டிருப்பதால், பதார்த்தத்திலும் பேதம் காணப்படுகிறது. எப்படியெனின்.

(1) अस्ति भगवो नाम्नो भूयः

நாமத்தைவிட பெரிது இருக்கிறதா என்கிற கேள்விக்கு

वाग्वाव नाम्नो भूयसी

அதாவது நாமத்தைவிட வாக்கு பெரிது என்று உத்தரம் கூறப்பட்டது.

(2) அப்படியே,

अस्ति भगवो वाचो भूयः

அதாவது சுவாமியின் வாக்கைவிட பெரிது இருக்கிறதா என்ற கேள்விக்கு,

मनो वा व वाचो भूयः

அதாவது மனது வாக்கைவிட பெரிது என்று உத்தரம் கூறப்பட்டது.

(3) இப்படி பிராணன்வரையில் நாமாதிகளைவிட எது பெரிது என்கிற விஷயமாய்க் கேள்வி மறுமொழிகளின் பிரவாஹம் ஏற்பட்டிருக்கிறது.

अस्ति भगवः प्राणात् भूयः

பிராணனைவிட பெரிது இருக்கிறதா என்னும் கேள்வியுமில்லை.

अदो वाव प्राणाद्भूयः

பிராணனைவிட இது பெரிது என்பதாய் மறுமொழியுமில்லை.

(ரா பிரகரணம் பிராணனைப்பற்றி ஏற்படவில்லையே அப்படியிருக்க பிராணன்தான் பெரிது என்று எப்படிச் சொல்லலாம் என்று ஒருவன் ஆக்ஷேபிக்கும்பக்ஷத்தில்)

நாமம்முதல் ஆசைவரையிலுள்ளவைகளைவிட பிராணன்தான் பெரிது என்று சுருதிவிவரமாய்ச் சொல்லி பிறகு பிராணனை அறிந்தவனை அதிவாதி என்றும் சொல்லுகிறது.

ரா அதாவது நாமம்முதல் ஆசைவரையிலுள்ள உபாசிக்கத் தக்கவைகளைவிட பிராணன் சிரேஷ்டம் என்று சொல்லுகிறவன் அதிவாதி.

பிராணனை அறிந்தவனைப்பார்த்து நீ அதிவாதியா என்று ஒருவன் கேட்டால் ஆம் என்று சொல்லவேண்டும். நான் அதிவாதியல்லவென்று மறைக்கக்கூடாது என்று சுருதி சொல்லுகிறது.

பிறகு

एषतु वा आतिवदति यः सत्येनातिवदति

என்பதாய் இந்த பிராணவித்தை உத்தேசித்து ஏஷ: இவன் என்று குறிப்பிட்டு, சத்தியவசனம், தியானம், மனனம், சிரத்தைமுதலிய தர்மங்களையும் விதித்து பூமாவையே சுருதி உபதேசிக்கிறபடியால் பிராணனையே பூமா என்று சுருதி அபிப்பிராயங்கொள்வதாகத் தெரியவருகிறது.

ரா து சப்தத்தால் பிராணனைவிட மற்றது உபாசிக்கத் தக்கதல்லவென்று தெரியவருகிறது. (9)

பிராணன் பூமாவென்று சொன்னால்,

यत्र नान्यत् पश्यति

(எவ்விடத்தில் வேறு ஒன்றை பார்க்கவில்லையோ என்னும் பூமாவின் லக்ஷணத்தைக் கூறும் வசனம் எப்படி அர்த்தவத்தாகும்.?

உத்தரம்.—சுஷுப்தி அவஸ்தையில் இந்திரியங்கள் பிராணனிடத்தில் லயமானவளவில் பார்த்தல்முதலிய வியவஹாரங்கள் இராததாகக் காணப்படுவதால் பிராணனிடத்திலும் यत्र नान्यत् पश्यति என்னும் லக்ஷணம் பொருந்தும். அப்படியே

न शृणोति न पश्यति (बृ IV-2-3)

(கேட்கிறதில்லை, பார்க்கிறதில்லை,)

முதலியவைகளால் சகல இந்திரிய வியாபாரமற்ற சுஷுப்தி அவஸ்தையைக்கூறி,

प्राणाग्नय एवैतस्मिन् पुरे जायति

பிராணாக்கினிகளே இந்த சரீரத்தில் விழித்துக் கொண்டிருக்கின்றன.

என்பதாய் அந்த அவஸ்தையிலேயே பஞ்சப் பிராணன்களுடைய விழிப்பைக்கூறும் சுருதியானது சுஷுப்தி அவஸ்தையில் பிராணன்தான் பிரதானம் என்று காட்டுகிறது. (10)

यो वै भूमा तत् सुखं

என்பதாய் பூமா சுகம் என்று சொன்னதிலும் விரோதமில்லை.

यत्रैष देवः स्वप्नान्न पश्यत्यथ यदेतस्मिञ्छरीरे सुखं भवति

அதாவது எவ்விடத்தில் ஜீவன் ஸ்வப்னம் காணவில்லையோ அப்போது அந்தசரீரத்தில் சுகம் உண்டாகிறது

என்று சொல்லியிருப்பதால், சுஷுப்தி அவஸ்தையிலே சுகம் ஏற்படுகிறது.

ரா ஆகையால் பிராணன் சுகம் என்று சொல்லப்படலாம் விரோதமில்லை. (11)

4 यो वै भूमा तदमृतं

என்பதும் பிராணனுக்கு விரோதமில்லை. ஏனெனின்,

प्राणो वा अमृतं

என்று சுருதி (कौ 3-2) சொல்லுகிறது. (12)

5. பிராணனை பூமாவாக பாவித்தால்,

तरति शोकमात्मवित्

என்பதாய் பிரகரணத்தின் ஆரம்பத்தில் ஆத்மாவை அறியவேண்டியதாகச் சொல்லியது எப்படி பொருந்தும்?

பிராணனே இவ்விடத்தில் ஆத்மாவாகச் சொல்லப்பட்டதாகச் சொல்லுகிறோம். அப்படியே,

प्राणोह पिता प्राणो माता प्राणो भ्राता
प्राणः स्वसा प्राण आचार्यः प्राणो ब्राह्मणः

என்கிற (छा-VII-15-1) சுருதியானது பிராணனையே சகலத்துக்கும் ஆத்மாவாக கூறுகிறது. (13)

यथा वा अरा रथनाभौ समर्पिता एवमस्मिन् प्राणे सर्वं समर्पितम्

(அதாவது வண்டிக்குடத்தில் ஆரக்கால்கள் கோர்க்கப்பட்டதுபோல் பிராணனிடத்தில் சகலமும் சமர்ப்பிக்கப்பட்டிருக்கிறது)

என்று சுருதி சொல்லுகிறது. சகலத்துக்கும் ஆத்மாவாயிருக்கும் தன்மையாலும் வண்டிக்குடதிருஷ்டாந்தத்தால் சர்வாதிஷ்டானத்தன்மையாலும் பிராணன் பூமா என்று சொல்லுவது மிகவும் உசிதமாயிருக்கிறது.

ஆகையால் பிராணனே பூமா என்று ஏற்பட்டது

VIII. சித்தாந்தம்:—

1. இப்படி பூர்வபக்ஷி சொல்ல வியாசர்

भूमा संप्रसादादध्युपदेशात् ।८

என்கிற சூத்திரத்தில் சித்தாந்தம் கூறுகிறார். 15

2. பதவுரை:—

भूमा பூமாவென்பது

संप्रसादात् பிராணனுக்கு

अधि மேலாக

उपदेशात् உபதேசிக்கப்பட்டிருப்பதால்

(परमात्मा பரமாத்மா) (16)

3. பொழிப்புரை:—

பூமாவென்பது பரமாத்மாதான். ஏனெனின், பிராணனுடைய உபதேசத்துக்குப் பிறகு பூமாவென்பது (சத்திப்பதத்தால்) உபதேசிக்கப்பட்டிருக்கிறது. (17)

4. பாஷ்யம்:—

A. ஸ்வஸித்தாந்தம்:—

1. भूमा இவ்விடத்தில் பரமாத்மாவே பூமாவாக இருக்கத்தக்கது. பிராணன் பூமாவாகமாட்டாது. ஏனெனின், (18)

2. संप्रसादात् अध्युपदेशात्

சம்பிரசாதம் என்றால் சுஷுப்திஸ்தானம் (அவஸ்தை)

सम्यक् प्रसीदति अस्मिन् इति = संप्रसादः

அதாவது இதில் ஒருவன் முற்றிலும் சுகமாக இருக்கிறான். ஆகையால் சம்பிரசாதசப்தத்திற்கு சுஷுப்தி அவஸ்தை என்று அர்த்தம்.

மேலும் பிருஹதாரணியகத்தில் ஸ்வப்நஜாக்கிராவஸ்தைகளுடன் இது படிக்கப்பட்டிருக்கிறது.

இந்த சம்பிரசாத அவஸ்தையில் பிராணன் ஜாகிருதனுயிருக்கிறபடியால், பிராணன் இவ்விடத்தில் (சூத்திரத்தில்) रा சம்பிரசாதசப்தத்தால் கூறப்படுகிறான். பிராணனுக்கு பிறகு பூமா உபதேசிக்கப்பட்டிருப்பதால், பிராணனைவிட வேறானது (रा நாமாதிகளுக்கு பிறகு உபதேசிக்கப்பட்ட வாக்காதிகள் போலும்.) 19

(B. பரமதகண்டனம்)

1. 9-க்கு உத்தரம்:— பிராணனே பூமாவாக இருந்தால் பிராணனே பிராணனுக்குப்பிறகு உபதேசிக்கப்படுவது அசங்கதமாகும். நாமத்துக்குப்பிறகு நாமம் பெரிது என்பதாக உபதேசம் ஏற்படவில்லை. பின்னையோவெனில் நாமத்தைவிட வேறான்வாக்கு

वाग्वाव नाम्नो भूयसी

என்பதால் உபதேசிக்கப்பட்டிருக்கிறது. அப்படியே பிராணன்வரையில் வாகாதிகளுக்குப்பிறகு வெவ்வேறு விஷயமே ஆங்காங்கு உபதேசிக்கப்பட்டிருக்கிறது. அப்படியே பிராணனுக்குப் பிறகு உபதேசிக்கப்பட்ட பூமாவும் பிராணனைவிட வேறானதாகவிருக்கவேண்டும். (20)

2. பூர்வபக்ஷிசொல்லியிருக்கிறான் - பிராணனுக்குப் பெரிதாக எதாவது உண்டாவென்று கேள்வி ஏற்படவில்லை. பிராணனுக்குமேல் இதுதான்பெரிது என்று மறுமொழியும் ஏற்படவில்லை. அப்படியிருக்க பிராணனுடைய உபதேசத்துக்குப் பிறகு பூமா உபதேசிக்கப்பட்டதாக எப்படி சொல்லலாம். பிராணவிஷயமாகச்சொன்ன அதிவாதித்வமே மேலினும் அதாவது

एषतु वा अतिवदति यः सत्येनातिवदति

என்கிற இடத்திலும் இழுத்துக்கொள்ளப்பட்டிருக்கிறது. ஆகையால் பிராணனுக்குப்பிறகு உபதேசம் ஏற்படவில்லை. இதற்கு நாம் உத்தரம் கொடுக்கிறதாவது:—

सत्येन अतिवदति

என்பதாய் விசேஷவசனம் ஏற்பட்டிருப்பதால், பிராணவிஷயமான அதிவாதித்வமே இழுத்துக்கொள்ளப்பட்டிருக்கிறதென்று சொல்லமுடியாது.

रा (ஆகையால் பிராணப்பிரகரணம் முடிந்தது என்று ஏற்படுகிறது.) (21)

3. ஆக்ஷேபம்:—இந்த விசேஷவசனமும் பிராணவிஷயமாகவே ஏற்பட்டிருக்கிறது. எப்படியெனின் இந்த அக்கினிஹோத்திரீ சத்தியத்தை சொல்லுகிறான் என்கிறவிடத்தில், நிஜம்பேசுகிறதினால் அக்கினிஹோத்திரித்தன்மை ஏற்படவில்லை. பின்னையோவெனின், அக்கினிஹோத்திரக்கிரியையால்தான் ஏற்படுகிறது. சத்தியம் பேசுதல் அக்கினிஹோத்திரியின் விசேஷம். அப்படி

एषतु वा अतिवदति यः सत्येनातिवदति

என்று சொன்னவிடத்தில் சத்தியவசனத்தால் அதிவாதித்வம் சித்திக்கவில்லை, பின்னையோவெனின் பிரகிருதப் பிராணனுடைய ஞானத்தால்தான் சத்தியவசனம் பிராணவித்துக்கு விசேஷம் என்று சொல்லுகிறோம். (22)

4. சித்தாந்தம்:—இது சரியன்று என்று சொல்லுகிறோம். ஏனெனின் சுருதியின் அர்த்தத்தைவிட்டுவிடும்படி நேரிடும்.

यः सत्येनातिवदति सोऽतिवदति

என்கிற சுருதியினால் இவ்விடத்தில் சத்தியத்தைச் சொல்லுகிறதினால் அதிவாதித்வம் காணப்படுகி

றது. இவ்விடத்தில் பிராணனை அறியவேண்டும் என்று சொல்லப்படவில்லை. பிரகரணத்தினுல் பிராணஉபாசனையை சம்பந்தப்படுத்தலாம். அப்படி பிரகரணத்தை அநுசரித்து அர்த்தம்செய்தால் சுருதியைத் தள்ளுபடி செய்ததாகும். ஸ்வ (இது மீமாம்சா சாஸ்திரத்துக்கு விரோதம். எப்படியெனின் சுருதி (வாசகம்) லிங்கம், வாக்கியம், பிரகரணம், ஸ்தானம், சமாக்கியம் என்கிற பிரமாணங்களுக்குள் முந்தினது பிந்தினதை விட பிரபலம் என்று சாஸ்திரத்தில் சொல்லியிருப்பதால், இவ்விடத்தில் சுருதிப்பிரமாணம் இருந்தும் அதைவிட்டு பிரகரணத்தை ஒப்புக்கொண்டு அந்தப் பிரமாணத்தால் அர்த்தம் செய்வது அயுக்தம்.) (23)

5. து சப்தம் முன் சொன்னதினின்றும் பின் சொல்லுவதைப்பிரித்துக்காண்பிக்கவேண்டியது. முந்தின பிரகரணமும் பிந்தின பிரகரணமும் பிராணபரமாயிருந்தால், பிரித்துக்காண்பிவிக்கவேண்டிய அவசியமில்லை. ஆகையால் அந்த சப்தம் அர்த்தமற்றதாகும்

सत्यं त्वेव विजिज्ञासितव्यं சத்தியமே அறியத்தக்கது என்று வேறு பிரயத்தினம் செய்யவேண்டியதாகசொல்லியிருப்பதால் இது பிராணனைவிட வேறான விஷயத்தையே கூறுகிறது.

ஆகையால் ஒருவேதத்தை அத்தியயனம் செய்தவனை சிலாகிக்கவேண்டிய பிரசக்தியில், இந்த பிராமணன் நான்கு வேதங்களை அத்தியயனம் செய்திருக்கிறான் என்றசொன்னால், ஒருவேதத்தை அறிந்தவனைவிட வேறான நான்கு வேதங்களை அறிந்தவன் எப்படி சிலாகிக்கப்படுகிறானோ அப்படியே இவ்விடத்திலும் என்று அறியவேண்டியது. (ஸ சுருதியினுலும் அறியத்தக்கது என்னும் லிங்கத்தாலும் இந்த சத்தியம் பிரகிருதப்பிராணனைவிட வேறு என்றும் சிலாக்கியம் என்றும் அறியத்தக்கது.) (24)

(ஸ இவ்விதமாக அதிவாதி என்பதற்கு பிரம்ம சம்பந்தம் ஏற்படுவதால் பிராணலிங்கம் ஏற்படவில்லை என்று கூறப்பட்டது இனி கேள்வியற்றது என்னும் லிங்கத்தால் பிராணன்தான் பூமா என்று சொன்ன பக்ஷியை ஆக்ஷேபிக்கிறார்.)

கேள்வி மறுமொழி ரூபமாகத்தான் வேறு விஷயத்தைச் சொல்லவேண்டுமென்கிற நியமமில்லை. வேறு விஷயத்தைச்சொன்னால் அது முன்சொன்னதைதவிலக்கிவிடுகிறது. பிராணன்வரையில் உபதேசத்தைக்கேட்டு சும்மாயிருந்த நாரதரைச் சனத்குமாரர் தானாகவே உபதேசிக்கிறார்.

விகாரமாயும் அநிருதமாயுமிருக்கிற பிராணனை அறிந்ததினுல் யாதொரு அதிவாதித்வம் சொல்லப்படுகிறதோ அது அதிவாதித்வம் அல்ல. எவன் சத்தியத்தால் அதிவாதியாகிறானோ அவன் தான் அதிவாதி. சத்தியம் என்றால் பரப்பிரம்மம். ஏனெனின் அது பரமார்த்தரூபம், "சத்தியம் ஞானம் அனந்தம் பிரம்ம" என்கிற சுருதியாலும் சொல்லியிருக்கிறது.

இப்படி உபதேசம்பெற்ற நாரதர்

सोऽहं भगवः सत्येनातिवदानि

நான் சத்தியத்தினுல் அதிவாதியாவேனு என்று கேட்க,

விஞ்ஞானதிசாதன பரம்பரையைச்சொல்லிபூமாவை சனத்குமாரர் உபதேசித்தார்.

(ஸ விஞ்ஞானம் நிதித்தியாசனம் முதலியபதத்தால் மனனம், சிரவணம், சிரத்தை, மனதின்சுத்தி, நிஷ்டை, அதற்குச் சாதகமான கர்மங்கள் இவைகளை கிரகிக்கவேண்டும். சிரவணமனனுதிகளாகிய பிரம்மலிங்கங்கள் சத்தியத்துக்கும் சொல்லியிருப்பதால் சத்தியம் பிரம்மம் என்று ஏற்படுகிறது. (25)

(ஸ இவ்விதமாக சுருதியிலும் லிங்கத்தாலும் பிராணன் விஷயமாகப் பிரகரணம் ஏற்படவில்லை என்று நிரூபித்து பிரகிருத சத்தியமாகிற பிரம்மம் பூமா பதத்தால் கூறப்படும் வெகுவாயிருக்கும் தன்மையுள்ளது என்று நிரூபிக்கிறார்.)

இவ்விடத்தில் எது பிராணனுக்கு பிறகு சத்தியம் என்பதாய் சொல்லவேண்டும் என்று பிரதிஞ்ஞை செய்யப்பட்டதோ அதுவே இவ்விடத்தில் பூமா என்று சொன்னதாகத் தெரியவருகிறது. ஆகையால் பிராணனுக்குப்பிறகு பூமா உபதேசிக்கப்பட்டதாக ஏற்படுகிறது. ஆகையால் பிராணனைவிட வேறான பரமாத்மா பூமாவாக இருக்கவேண்டும். இந்த அர்த்தத்தில், இந்தப் பிரகரணம் ஆத்மவிசாரத்துக்காக ஏற்பட்டது என்பது பொருந்துகிறது. பிராணனே இவ்விடத்தில் ஆத்மாவாக சொல்லப்பட்டான் என்பது பொருந்தவில்லை. ஆத்ம சப்தத்துக்கு முக்கிய விருத்தியால் பிராணன் ஆகமாட்டாது. பரமாத்ம ஞானத்தைத்தவிர வேறு ஞானத்தால் சோகநிவர்த்தி ஆகிறதில்லை என்பது

नान्यः पन्था विद्यतेऽयनाय (श्वे-VI-15)

என்கிற சுருதியால் தெரியவருகிறது. மேலும் ஆரம்பத்தில்

तं मां भगवन् शोकस्य परं पारं तारयतु

என்று சொல்லியிருக்கிறது. முடிவில்

तस्मै मृदितकषायाय तमसः पारं दर्शयति भगवान् सनत्कुमारः

என்றுசொல்லியிருக்கிறது. தமஸ் என்றால் சோகாதிகளுக்குக் காரணமான மூலாவித்தை. இதை நாசம்செய்யாமல் துக்கத்தைத் தாண்டமுடியாது. இதை நிவர்த்திப்பது பிரம்மஞானம்தான். ஆகையால் இந்த உபக்கிரம உபசம்கார வாக்கியங்களாலும்பிரம்மம்தான் உபதேசிக்கப்பட்டதாக தெரியவருகிறது.

பிராணனோடு உபதேசம் முடிகிறதாயிருந்தால் பிராணன் பராதீனன் என்று சொல்லக்கூடாது. ஆனால் आत्मनः प्राणः என்கிற சாந்தோக்கிய (VII-2-6-1) சுருதி பிராணனை ஆத்மாவினிடத்திலிருந்து உண்டானதாக சொல்லுகிறது. ஸ (ஆகையால் பிராணனோடு உபதேசம் முடியவில்லை. பூமா உபதேசம் பாக்கியிருக்கிறது. (26)

8. பிரகரணத்துக்கு முடிவில் பரமாத்மா சொல்லப்பட்டிருக்கட்டும், முன்சொன்ன பூமா பிராணனே என்று சொன்னால் அது சரியன்று. ஏனெனின்,

स भगवः कस्मिन् प्रतिष्ठित इति स्वमहिम्नि (छा VII-24-1)

இந்த சுருதியில் அந்தபூமா எவ்விடத்தில் இருக்கிறது என்கிற கேள்விக்கு தன்னுடைய மஹிமையிலிருக்கிறதென்று சொல்லியிருப்பதால், பூமா பிராணத்தின் ஆரம்பம்முதல் முடியும்வரையில் கொண்டுபோகப்பட்டிருக்கிறது.

பூமாவென்றால் மிகவும் பெரிது என்று அர்த்தம்

ஆகையால் சகலத்துக்கும் காரணமான பிரம்மத்தினிடத்தில்தான் அது பொருந்தும். (27)

I-3 ல் 2 (9) வது சூத்திரம்.

1. சூத்திரம் :—

धर्मोपपत्तेश्च । ९ (28)

2. முந்தின சூத்திரத்துக்கும் இதற்கும் சம்பந்தம்—பூமா பிரம்மமென்பதற்கு முன் ஒரு லிங்கம் கூறப்பட்டது. இப்போது வேறு லிங்கத்தைக் கூறுகிறார். (29)

3. பதஉரை:—தர்மங்கள் பொருந்துகிறபடியாலும். (30)

4. பொழிப்புரை:— பூமாவுக்குச்சொல்லிய தர்மங்கள் பிரம்மத்துக்கும் பொருந்துகிறபடியால் பூமா பிரம்மமே. (31)

5. பாஷ்யம்:—

1. மேலும் பூமாவுக்குச் சொல்லிய தர்மங்கள் பரமாத்மாவினிடத்திலும் பொருந்துகின்றன.

यत्र नान्यत् पश्यति नान्यच्छृणोति नान्यद्विजानाति स भूमा (छा-VII 24-1)

என்கிற சுருதியானது தர்சனாதிவியவஹாரம் பூமாவினிடத்திலில்லை என்று தெரிவிக்கிறது.

यत्र त्वस्य सर्वमात्मैवाभूत् तत् केन कं पश्येत्

என்கிற சுருதியால் பரமாத்மாவினிடத்திலும் தர்சனாதி வியவஹாரமில்லை என்று தெரியவருகிறது.

(சுஷுப்தி அவஸ்தையில் தர்சனாதி வியாபாரமில்லாதபடியால் பூமாவே பிராணன் என்று பூர்வபக்ஷிசொன்ன விஷயத்தில்) சுஷுப்தி அவஸ்தையில் தர்சனாதி வியவஹாரமில்லை என்று சொன்னதானது ஆத்மா அசங்கம் என்று சொல்லுமிச்சையுடன் சொல்லப்பட்டதேதவிர, பிராணனுடைய ஸ்வபாவத்தைச் சொல்லவேண்டும் என்கிற இச்சையுடன் சொல்லப்படவில்லை ஏனெனின் பிரகரணம் பரமாத்மபரம்.

(ரா புத்ராமுதலிய உபாதிகளிருக்கும்போது தர்சனாதி வியவஹாரம் ஏற்படுகின்றது. இந்த உபாதிகளற்ற சமயமாகிற சுஷுப்தியில் தர்சனாதியுமில்லை. இப்படி ஆத்மா அசங்கன் என்ற ஞானத்தின்பொருட்டு பிரசனோபநிஷத்தில் (VI-2) பரமாத்மா கேட்கிறதில்லை, பார்க்கிறதில்லையென்றுசொல்லியிருக்கிறது·32

2 அந்த அவஸ்தையிலேயே யாதொரு சுகத்வம் சொல்லப்பட்டதோ அதுவும் ஆத்மா சுகரூபம் என்று சொல்லுமிச்சையால்தான் ஏற்பட்டது. ரா (அந்தபிரச்னோபநிஷத்திலேயே ஆத்மா சுகம் என்று சொல்லப்பட்டிருக்கிறதேதவிர பிராணன் சுகம் என்று சொல்லப்படவில்லை.)

एषोऽस्य परमानन्द एतस्यैवानन्दस्यान्यानि भूतानि मात्रामुपजीवन्ती

என்கிற பிரஹதாரணிய (VI-32) சுருதியானது "இது இவனுடைய பரமமான ஆநந்தம் இந்த ஆநந்தத்தின் அம்சத்தை இதரபிராணிகள் எடுத்துக்கொண்டு ஜீவிக்கிறார்கள்" என்று சொல்லுகிறதினால் ர (ஆத்மாவே சுகம் என்று ஏற்படுகின்றது.)

இவ்விடத்திலும் योवै भूमा तत्सुखं नाल्पे सुखमस्ति भूमैव सुखं என்கிற சுருதியானது "எது பூமாவோ அது சுகம், அற்பத்தில் சுகமில்லை. பூமாவே சுகம்" என்று சொல்லுவதினால் எது நாசாதிதோஷத்துடன் கூடியிருக்கிறதோ அது சுகமன்று" என்று சொல்லுவது மூலமாக பிரம்மமே சுகம், பூமா என்று காட்டுகிறது.

3. यो वै भूमा तदमृतं என்பதில் சொல்லிய அமிருதத்வமும் பிரகரணத்தையே தெரிவிக்கிறது. ஏனெனின் விகாரங்களின் அமிருதத்வம் ஆபேக்ஷிகம்.

अतोऽन्यत् आर्तं என்கிற பிரஹதாரணியக (III-4-2) சுருதியும் பிரம்மத்தைவிட வேறானது நசுவரம் என்று சொல்லுகிறது.

அப்படியே சத்தியத்தன்மை, தன்மஹிமையிலிருத்தல் स एव अधस्तात् स उपरिष्टात् என்பதினால் சர்வ வியாபித்துவம், स एवेदं सर्वं என்பதினால் சர்வத்துக்கும்ஆத்மாவாயிருக்கும் தன்மை ஆகிய சுருதியிற் சொல்லிய பூமாவின் தர்மங்கள் பரமாத்மாவுக்கே பொருந்துகின்றன. மற்ற இடத்தில் பொருந்தவில்லை. ஆகையால் பூமாவென்பது பரமாத்மா என்று சித்தித்தது.

ர (இந்த அத்தியாயம் நிர்குண பிரம்மத்தினிடத்தில் தான் தாற்பரியட்படுகிறது என்று சித்தித்தது. (34)

IX. பூர்வபக்ஷத்தின் பலன்:—பிராணோபாஸ்தி
சித்தாந்தபலன்:—பிரம்மஞானம். (35)

X. வியாஸாதிகரணமாலைப்படி அத்வைதச்சுருக்கம்.

1. சுலோகங்கள்:—

भूमा प्राणः परेशो वा प्रश्नप्रत्युक्ति वर्जनात् ।
अनुवर्त्यातिवादित्वं भूमोक्तेश्चासुरेव सः ॥
विच्छिद्यैषत्विति प्राणं सत्यस्योपक्रमात्तथा ।
महोपक्रम आत्मोक्तेरीशोयं द्वैतवारणात् ॥ (36)

2. விஷயம்:—

சாந்தோக்கியத்தில் 7-வது அத்தியாயத்தில் நாரதரை உத்தேசித்து சநத்குமாரர் நாமம் முதலியவைகளில் ஒன்றைவிட ஒன்று பெரிதாயிருப்பதுமுதலிய அநேக தத்துவங்களை உபதேசித்து கடைசியில் நிரதிசயமான பூமாவை

यत्र नान्यत्पश्यति नान्यच्छृणोति नान्यद्विजानाति स भूमा

என்பதாய் உபதேசம் செய்கிறார். (37)

3. சந்தேகம்:-இவ்விடத்தில் பூமா சப்தத்துக்கு இரண்டுவிதமான அர்த்தம் செய்யும்படியிருக்க. (38)

4. பூர்வபக்ஷம்:—பிராணன்தான் என்று ஏற்படுகிறது. ஏனெனின் கேள்வியுமில்லை பிரத்யுத்தரமுமில்லை. முந்தின நாமாதி தத்துவங்கள் விஷயத்தில் நாரதர் "இதைவிட பெரிது இருக்கிறதா" என்று அடிக்கடி கேட்கிறார். சநத்குமாரரும் "இருக்கிறது" என்று பதில் சொல்லுகிறார். இப்படி கேள்வி மறுமொழி மூலமாக நாமம் முதல் பிராணன்வரையில் தத்துவங்களை உபதேசித்து பிராணனுக்குப்பிறகு கேள்வி மறுமொழி யன்றியிலேயே பூமா என்றுசொல்லுகிறார். பிராணனுக்கும் பூமாவுக்கும் மத்தியில் விச்சேதமில்லாதபடியால் பிராணனே பூமாவென்று ஏற்படுகிறது.

மேலும் பிராணதத்துவத்தை உபதேசித்தும் பிராண உபாசனை மூலமாக அதிவாதித்துவம் என்னும் மேன்மையைச் சொல்லி, பிரகரணம் விட்டுப்போய் விட்டது என்கிற சங்கையை நிவிர்த்திக்கும்பொருட்டு அந்த அதிவாதித்துவத்தை அனுசரித்தே பூமாவை உபதேசிக்கிறபடியாலும் பிராணனும் பூமாவும் வேறல்லவென்பது தெரியவருகிறது. ஆகையால் பிராணன் பூமா. (39)

5. சித்தாந்தம்:—இப்படி பூர்வபக்ஷி சொல்லுவதற்கு நாம் சொல்லுகிறதாவது:—

இந்த பூமா பரமேசுவரனே. ஏனெனின்,

एषतु वा अतिवदति यः सत्येनातिवदति என்கிற விடத்தில் து சப்தம் அதிவாதித்தன்மைக்கு பிராணோபாசனம் காரணமல்ல வென்பதைக் காட்டி முக்கிய அதிவாதித்தன்மைக்குக் காரணம் பிரம்மம் என்பதை சத்ய சப்தத்தால் சுருதி காட்டுகிறது. அப்படியே உபக்கிரமத்தில் तरति शोकमात्मवित् என்பதில் பரமாத்மா வேத்தியம் அதாவது அறியத்தக்கது என்பதாய்ச் சொல்லப்பட்டிருக்கிறது. यत्र नान्यत्पश्यति

என்பதாய்த் துவைதத்தை நிஷேதிக்கிறதினுல பூமாவின் இலக்ஷணம் கூறப்பட்டிருக்கிறது. ஆகையால் அத்வைத பரமாத்மாவே பூமா. (40)

XI. விசிஷ்டாத்வைதப்படிச் சுருக்கம்.

I-3-2 ல் 1 (8)

1. இதிலடங்கிய சூத்திரங்கள்:—2 (8-9) (41)

2. விஷயவாக்கியம்:—சா VII-23 & 24 (அத்) (42)

3. இதில்சொல்லிய பூமா (பிரதிசய விஸ்தாரசுகரூபம்) ஜீவனு? பரமாத்வா? (43)

4. பூர்வபக்ஷம்:

तरति शोकमात्मवित्

என்பதாய் ஆரம்பித்து நாமம்முதலியவைகளை ஒன்றைவிட ஒன்று பெரிதாகச்சொல்லி கடைசியில் பிராணசப்தத்தால் கூறப்படும் பிரத்தியகாத்மாவில் சுருதி முடிவுபெறுகிறது. ஆகையால் பூமா ஜீவனே 44

5. சித்தாந்தம்:—பிராணனுடன் முடிவு ஏற்படவில்லை. பிராணஉபாசகனைச் சொல்லி மேல் சத்திய உபாசகனையும் வேறுப்ச் சொல்லியிருக்கிறது. ஆகையால் சத்தியசப்தத்தால் கூறப்பட்ட பரமாத்மாதான் பூமா.

6. சூத்திரார்த்தம்:—

भूमा பூம (அதிக) குணத்துடன் கூடியிருப்பது பரமாத்மாவே.

संप्रसादादध्युपदेशात् சம்பிரசாத சப்தம் சுருதிகளில் ஜீவனை பிரசித்தமாகச் சொல்லுகிறது. அவனுக்கும் மேற்பட்டவனைச் சொல்லியிருப்பதால் பூமகுணவிசிஷ்டன் பரமாத்மாவே. (46)

I-3-2- ல் 2 (9)

பூமாவுக்குச்சொல்லிய தர்மங்களாவன:—அமிருதத்வம், ஸ்வமஹிமையில் இருப்பு, சர்வாத்மத்வம், சர்வோத்பத்தி முதலியவைகளுக்கு காரணத்வம். இவைகள் பரமாத்மாவுக்குப் பொருந்தும். ஆகையால் பூமா ஜீவனல்ல. (47)

XII. துவைதப்படி

I-3-2-வது அதிகரணத்தின் சுருக்கம்.

1. இதின்கருத்து:—பூமசப்தத்தால் கூறப்பட்டவர் விஷ்ணுவே. (48)

2. இதிலடங்கிய சூத்திரங்கள்:—2 (8-9) (49)

3. இதின் விஷயம்:—

स एव अधस्तात् ... ... ... स भूमा

என்னுஞ்சுருதி (50)

4. சங்கதி:—

முந்தின அதிகரணத்தில் த்யுப்வாதிகளுக்கு ஸ்தானம் விஷ்ணுவென்று சொல்லியிருக்கிறது. ஆகையால் அவர் சர்வகதன் என்று ஏற்பட்டது.

இந்த சர்வகதத்தன்மை பூமா என்பதிலும் காணப்படுவதால் முந்தின தீர்மானம் ஆக்ஷேபிக்கப்படுகிறது. ஆகையால் ஆக்ஷேபசங்கதி. (51)

5. சந்தேகம்:—

यो वै भूमा तत्सुखं

என்கிற சா 7-வது அத்தியாயத்தின் சுருதியில் சொல்லிய பூமா

(1) முக்கியப் பிராணனு? அல்லது

(2) விஷ்ணுவா?

என்பது சந்தேகம். (52)

6. பூர்வபக்ஷம்:—பிராணன்தான் பூமா:--நாமம் முதல் பிராணன்வரையில் உள்ளவைகளில் எதைவிட எது பெரிது என்றுகேட்டவிடத்தில் ஒன்றைவிட ஒன்று பெரிது என்றுசொல்லி கடைசியில் பிராணனைவிட எதுபெரிது என்பதாய் கேள்வியும் உத்தரமும் ஏற்படவில்லை. ஆகையால் பிராணன் பூமாவென்று முடிந்தது. (53)

7. சித்தாந்தம்:—

அ-கை:—பேதம் (ஜீவபிரம்மபேதம்) பொய் என்பதை நிரஸனம் செய்யத்தக்கது என்று சொல்லும்பொருட்டு பூமா என்பது பிரம்மத்தில் பொருந்தும் என்று காட்டுகிறார்.

भूमा = यो वै भूमा तत्सुखं என்கிற சுருதியில்சொல்லிய பூமா விஷ்ணுவே. ஏனெனின்,

संप्रसादात् = அவர் பூர்ணசுகரூபர்.

अध्युपदेशात् = நாமம் முதலிய எல்லாவற்றிற்கும் மேல் இது உத்தமம் என்று சொல்லப்பட்டிருக்கிறது

8. I-3-2 ல் 2-வது (9)

धर्मोपपत्तेः च = स एव अधस्तात् स उपरिष्टात्

என்கிற சுருதியில்சொல்லிய சர்வவியாபகத்தன்மை முதலியவை பூமா விஷ்ணுவாக இருந்தால் மட்டும் பொருந்தும். (55)

9. பூர்வபக்ஷபலன்:—சுகம் என்பது பூர்ணசுகமானதால் ஆநந்தமய விஷ்ணுவிஷய ஆக்ஷேபமே.

சித்தாந்தபலன்:—ஸமாதானமே. (56)

---

## 1-3-3-வது அதிகரணத்தின் அனுக்கிரமணிகை.

---

## 1—3—3வது அதிகரணம்.

I. இதின் பெயர் :—அக்ஷராதிகரண மென்பதாம். (1)

II. இந்த அதிகரணத்தின் கருத்து :—அக்ஷர மென்பது பிரம்மமென்பதாம். (2)

III. இதின் விஷயவாக்கியம் :—

कस्मिंनु खल्वाकाश ओतश्च प्रोतश्चेति स होवाचैतद्वैतदक्षरं गार्गि ब्राह्मणा अभिवदन्त्यस्थूलमनणु (बृ-III-8 7;-8)

ரா அர்த்தம் :—பூதபவிஷ்யத் வர்த்தமானங்கள் எல்லாம் எதில் கோர்க்கப்பட்டிருக்கின்றன என்று கார்க்கி கேட்க யாஞ்ஞவல்கியர் அவ்வியாகிருத ஆகாசம் அதாவது மாயையானது சகலகாரியங்களுக்கும் ஆசிரயம் என்று சொன்னார். மாயை எதில் கோர்க்கப்பட்டிருக்கிறதென்று கேட்க அஸ்தூலாதிரூபமான அக்ஷரத்தில் என்று யாஞ்ஞவல்கியர் சொன்னார். பிராமணர்கள் இதை அக்ஷரம் என்று சொல்லுகிறார்கள். (3)

IV. சங்கதி :—

(1) முந்தின அதிகரணத்துக்கும் இதற்கும் :—முன் சத்தியசப்தத்துக்கு பிரம்மம்என்பது இடுகுறிப்பெயரானதால் பிரமமம் பூமா என்றுசொல்லப்பட்டது. அப்படியே இப்போது அக்ஷரசப்தத்துக்கு வர்ணம் என்கிற இடுகுறிபபெயர் கிரகிக்கவேண்டியபடியால், திருஷ்டாந்த சங்கதி பூர்வபக்ஷிமதப்படி ஏற்படுகிறது. (4)

(1) பாதசங்கதி :—

பூர்வபக்ஷிமதப்படி எல்லாம் ஆகாசத்தில் கோர்க்கப்பட்டிருக்கிறது. ஆகாசம் என்பது பிரம்மம். ஆகாசம் அக்ஷரத்தை ஆசிரயித்திருக்கிறது. ஆகையால் பிரம்மமும் அக்ஷரத்தை ஆசிரயித்திருக்கிறது. பிரம்மத்துக்கு ஆசிரயமாயிருக்கும் தன்மை அக்ஷரலிங்கம்.

சித்தாந்தப்பட்டி பிரம்மம் சகலத்தையும் ஆஞ்ஞாபிக்கிறதினால் இந்த ஆஞ்ஞை பிரம்மலிங்கம்.

இப்படி இரண்டு லிங்கங்களுமிருப்பதால் பிரம்மலிங்கம் அஸ்பஷ்டம். ஆகையால் இந்த அதிகரணம் இந்த பாதத்தில் சேர்க்கப்பட்டது.

(3) மற்ற சங்கதிகள் :—முன்போலவே.

V. சந்தேகம் :—அக்ஷரசப்தத்தால் கூறப்படுவது

(1) வர்ணமா? அல்லது

(2) பரமேசுவரனு?

रा சந்தேகபீஜம் :—இரண்டிடங்களிலும் அக்ஷரசப்தம் பிரயோகிக்கப்பட்டிருப்பதால் சந்தேகம் (6)

VI. இதிலடங்கிய சூத்திரங்கள் :— மூன்று (10-வது, 11 வது, 12-வது).

10-ல் அக்ஷரசப்தம் வர்ணத்தைக் கூறமாட்டாது என்பதும்,

11-ல் ஷை பிரதானத்தையும் கூறமாட்டாது என்பதும்,

12-ல் ஷை ஜீவனையும் கூறமாட்டாது என்பதும். நிரூபிக்கப்படுகின்றது (7)

VII. பூர்வபக்ஷம் :—அக்ஷரசப்தத்தால் வர்ணத்தையே அறியவேண்டியது. ஏனெனின்,

(1) अक्षर समाम्नाय முதலிய இடங்களில் அக்ஷரசப்தம் வர்ணத்தைத்தான் கூறுகிறது.

रा (2) न + क्षरति இதி அக்ஷர : என்கிற வித்பத்தியால் சலிக்காமலும், நாசமாகாமலுமிருக்கிறது பிரம்மம் என்று யோகத்தால் (காரணத்தால்) முக்கியார்த்தம் சித்திக்கட்டுமே. எனின், இரூடியானது யோகத்தைக்காட்டிலும பலமுள்ளதாகையால் பிரசித்தமான அர்த்தத்தை விட்டுவிடல் அயுக்தம்.

रा (3) (வர்ணமான ஓங்காரம் சகலத்துக்கும் ஆசிரயம் என்று எப்படிச் சொல்லலாமெனின் தியானத்தின் பொருட்டு)

ओंकार एव इदं सर्वं (छा II-23-3)

முதலிய சுருதிகளில் வர்ணம் உபாசிக்கத்தக்கதாகச் சொல்லியிருப்பதால் வர்ணம் சர்வத்துக்கும் ஆத்மா என்று தெரியவருகிறது. (8)

VIII. சித்தாந்தம்.

(1) இப்படி பூர்வபக்ஷி சொல்ல வியாசர்

**अक्षरमम्बरान्तधृतेः । १०**

என்கிற சூத்திரத்தில் சித்தாந்தம் கூறுகிறார். (9)

(2) பதஉரை :—

अम्बरान्तधृतेः = ஆகாசம் வரையிலுள்ளதை தரிக்கிறதினுல்.

अक्षरं அக்ஷரம் ब्रह्म பிரம்மம். (10)

(3) பொழிப்புரை

அக்ஷரசப்தத்தால் கூறப்பட்டது பிரம்மம். ஏனெனனின் ஆகாசம் வரையில் சகலத்தையும் அது தரிக்கிறது. (11)

(4) பாஷ்யம்.

1. अक्षरं பிரம்மாத்மாவே அக்ஷர சப்தத்தால் கூறப்பட்டிருக்கிறது. ஏனெனனின், அது, (12)

2. अम्बरान्तधृतेः = பிருதிவிமுதல் ஆகாசம்வரையிலுள்ள விகாரங்களை யெல்லாம் தரிக்கிறது.

மூன்று காலங்களால் பிரிக்கப்பட்டிருக்கிற அதாவது மூன்றுகாலங்களிலுள்ள பிருதிவிமுதலிய சகல காரியங்களும் ஆகாசத்தில் கோர்க்கப்பட்டிருப்பதால் ஆகாசத்தில் பிரதிஷ்டிதங்களாயிருக்கின்றனவென்று சொல்லி (பி-III-8-7) எதில் ஆகாசம் கோர்க்கப்பட்டிருக்கிறது என்கிற கேள்வியின் பேரில் அக்ஷரம் என்று மறுமொழி கூறப்பட்டது. அப்படியே உபசம்ஹாரத்தில் “ கார்க்கிய இந்த அக்ஷரத்தில் ஆகாசம் கோர்க்கப்பட்டிருக்கிறதென்று சொல்லியிருக்கிறது. இப்படி ஆகாசம்வரையில் தரிக்கும் தன்மை பிரம்மத்தைவிட வேறுன இடத்தில் சம்பவிக்கமாட்டாது

ஓங்காரமே இது எல்லாம் என்று சொன்னதும் பிரம்மத்தை அடைய சாதனமாக இருப்பதால் ஸ்துதியின் பொருட்டென்று அறியத்தக்கது.

रा (பிரச்னப்பிரதி வசனங்களால் ஜகத்தைத்தரிப்பதில் தாற்பரியம் தெரியவருவதால், தியானத்தின் பொருட்டு என்று சொல்லக்கூடாது. ஆகையால் இந்த லிங்கத்தின் பலத்தால் ரூடி அர்த்தத்தைத்தள்ளி)

நாசமடைகிறதில்லை, வியாபிக்கிறது என்கிறதினுல் நித்தியத்வமும் வியாபிக்கும் தன்மையும் சித்திக்கிறதைக்கொண்டு அக்ஷரம் பரபிரம்மமென்று சித்திக்கிறது. (13)

IX. 1-3-3ல்2 11 வது சூத்திரம்.

**सा च प्रशासनात् ॥ ११**

2. முந்தின சூத்திரத்துக்கும் இதற்கும் சம்பந்தம் :—स्व (முன் ஆகாசம் வரையிலுள்ளதை தரிக்கும்

தன்மையைக்கொண்டு அக்ஷரம் வர்ணமன்று பிரம்மம் என்று சொல்லப்பட்டது. இப்போது அந்தக் காரணத்தைக்கொண்டே அக்ஷரம் பிரதானமாயிருக்கட்டுமே என்று ஒருவன் ஆக்ஷேபிக்கக்கூடும். இதற்கு உத்தரம் இப்போது கூறப்படுகின்றது.)

காரியம் காரணாதீனமாக இருக்கும் பக்ஷத்தில், பிரதானத்தைக் காரணமாகச் சொல்லுகிறவர்கள் மதப்படி, பிரதானம் சகலத்துக்கும் காரணமாகையால் ஆகாசம் வரையிலுள்ளதை தரிக்கும் தன்மையும் பிரதானத்துக்கும் பொருந்தும். இந்த தரிக்கும் தன்மையாகவே பிரம்மம் தான் நிச்சயிக்கப்பட்டிருக்கிறது என்று எப்படி சொல்லாம்.

இதற்கு உத்தரம் இந்த சூத்திரத்தில் கூறப்படுகின்றது. (15)

(3) பதஉரை.

सा च அந்த ஆகாசம் வரையிலுள்ளதைத்தரிக்கும் தன்மையானது

प्रशासनात् ஆஞ்ஞையால் (16)

(4) பொழிப்புரை:—

ஆகாசம் வரையிலுள்ளதை தரிக்கும் தன்மை பரமேசுவரனுடையதே ஏனெனின், அவருக்குரிய ஆஞ்ஞை கூறப்பட்டிருக்கிறது. (17)

(5) பாஷ்யம்.

(1) साच ஆகாசவரையிலுள்ளதை தரித்தல் பரமேசுவரனுடையதே காரியம். ஏனெனின் (18)

(2) प्रशासनात्

(2) एतस्यवाक्षरस्य प्रशासने गार्गि सूर्याचन्द्रमसौ विधृतौ तिष्ठतः (बृ-111-8-9)

முதலிய சுருதிகளில் சூரியசந்திரர்கள் இவருடைய ஆஞ்ஞைக்கு விஷயங்கள் என்று சொல்லியிருப்பதால், ஆஞ்ஞை ஒன்று தெரியவருகிறது. இப்படி ஆஞ்ஞாபித்தல் பரமேசுவரனுடைய செயலே தவிர அசேதனமான பிரதானமானது ஆஞ்ஞாபிக்கமாட்டாது. அசேதனமான கடாதிகாரணங்களான மண் முதலியவைகள் கடம் முதலியவைகளுக்கு ஆஞ்ஞை செய்யமாட்டா.

रा (பூதாகாசம் காரியகோடியில் சேர்ந்து போய் விட்டபடியால் சர்வகாரியத்துக்கும் ஆசிரயம் என்பது பொருந்தமாட்டாது. பிரதான சப்தத்தால் கூறப்படும் மூலஅஞ்ஞானமாகிற (மாயை) ஆகாசம் அக்ஷரத்தை ஆசிரயித்திருக்கிறது. ஆகையால் அக்ஷரம் பிரதானமல்லவென்பது கருத்து) (19)

X. 1-3-3ல் 3 (12)வது சூத்திரம்.

## अन्यभावव्यावृत्तेश्च ॥ (20)

2. முந்தின சூத்திரத்துக்கும் இதற்கும் சம்பந்தம்:—அக்ஷரம் பிரம்மம் என்பதற்கு இதிலும் காரணத்தைச் சொல்லுகிறார். (21)

3. பதஉரை:—பேதம் நிஷேதிக்கப்பட்டிருப்பதாலும். (22)

4. பொழிப்புரை:—பிரம்மத்தைவிட வேறான தெல்லாம் அக்ஷரமல்லவென்று சுருதி சொல்லுவதால் பிரம்மம் அக்ஷரம் (23)

5. பாஷ்யம்:—

இந்த சூத்திரத்திற் சொல்லிய காரணத்தால் பிரம்மமே அக்ஷரசப்தத்தால் கூறப்படுகின்றது. ஆகாசம் வரையிலுள்ளதை தரித்தல் அதினுடைய செயலே, மற்றொன்றினதுமன்று. இந்த காரணமென்ன? பிரம்மத்தைவிட வேறான எது அக்ஷரசப்தத்தால் கூறப்பட்டிருக்கிறதென்று சங்கிக்கப்படுகின்றதோ, அதைவிட அக்ஷரம்வேறு என்று ஆகாசம் வரையிலுள்ளதை தரிக்கும் தன்மையானது காட்டுகிறது அப்படியே சுருதி சொல்லுகிறது.

"तद्वा एतदक्षरं गार्ग्यदृष्टं द्रष्टृ अश्रुतंश्रोतृ अमतं मन्तृ अविज्ञातं विज्ञातृ" (बृ-III-8-11)

இந்த சுருதியானது அக்ஷரத்தைப் பார்க்கப்படாவிட்டாலும் பார்க்கிறதென்றும், கேட்கப்படாவிட்டாலும் கேட்கிறதென்றும், மனனம் பண்ணப்படாவிட்டாலும் மனனம் செய்கிறதென்றும் அறியப்படாவிட்டாலும் அறிகிற தென்றும் சொல்லுகிறது. இவ்விடத்தில் பார்க்கப்படாமை முதலியவைகள் பிரதானத்துக்கும் பொருந்தினும், பார்க்கிறது முதலியவைகள் பிரதானத்துக்குப் பொருந்தமாட்டா. ஏனெனின் பிரதானம் அசேதனம்.

அப்படியே

नान्यदतोऽस्ति द्रष्टृ नान्यदतोऽस्तिश्रोतृ नान्यदतोऽस्ति मन्तृ नान्यदतोऽस्तिविज्ञातृ

என்கிற சுருதியானது இதைவிட வேறான திருஷ்டா, சுரோதா, மந்தா, விஞ்ஞாதா இல்லை என்று சொல்லுகிறதினால், வேறு ஆத்மா இல்லை என்று நிஷேதிக்கிறது; ஆகையால் உபாதியுடன்கூடின ஜீவன் அக்ஷரசப்தத்தால் கூறப்படமாட்டான்.

மேலும்

अचक्षुष्कमश्रोत्रमवागमनः

என்கிற बृ (III-8-8) மந்திரம் அக்ஷரத்துக்கு சக்ஷுஸ் முதலிய உபாதியில்லை என்று கூறுகிறது. உபாதியற்றவன் ஜீவனாகமாட்டான்; ஆகையால் பரப்பிரம்மமே அக்ஷரம் என்பது நிச்சயம்.

रा (ஆகையால் கார்க்கி பிராமணம் நிர்குண அக்ஷரத்தினிடத்தில் தாற்பரியப்படுகிறது என்று சித்தமாகிறது). (24)

रा XI. பூர்வபக்ஷபலன்:—ஓங்கார உபாஸனை
சித்தாந்தபலன்:—நிர்க்குண பிரம்மஞானம். (25)

XII. வியாசாதிகரணமாலைப்படி அத்வைதச் சுருக்கம்.

I. சுலோகங்கள்:—

अक्षरं प्रणवः किंवा ब्रह्मलोकेऽक्षराभिधा ।
वर्णे प्रसिद्धा तेनात्र प्रणवः स्यादुपास्तये ॥
अव्याकृताधारतोक्तेः सर्वधर्मनिषेधतः ।
शासनाद्द्रष्टृतादेश्च ब्रह्मैवाक्षरमुच्यते ॥

2. விஷயம்:—

பிரஹதாரணியத்தில் 5-வது அத்தியாயத்தில் கார்கிக்கிக்கு யாஞ்ஞவல்கியர்

एतद्वैतदक्षरं गार्गि ब्राह्मणा अभिवदन्ति अस्थूलमनण्वह्रस्वम्

என்று சொல்லுகிறார். (27)

3. சந்தேகம்:—இவ்விடத்தில் அக்ஷரசப்தத்தால் பிரணவம் கூறப்படுகிறதா? அல்லது பிரம்மம் கூறப்படுகிறதாவென்பது சந்தேகம். (28)

4. பூர்வபக்ஷம்:— பிரணவம்தான் கூறப்படுகின்றது. ஏனெனின்,

येनाक्षरसमाम्नायमधिगम्य முதலிய இடங்களில் அக்ஷரசப்தம் வர்ணத்தைக் கூறுகிறது. இவ்விடத்தில் பிரணவம் உபாஸியம் என்று சொல்லவேண்டியது. (29)

5. சித்தாந்தம்:—

பிரம்மம்தான் அக்ஷரசப்தத்தால் கூறப்படுகின்றது. ஏனெனின்,

एतस्मिन्खल्वक्षरे गार्ग्याकाश ओतश्च प्रोतश्च

என்கிற சுருதியில் ஆகாசசப்த வாச்சியமான அவ்வியாகிருதத்துக்கு அக்ஷரம் ஆதாரம் என்று சொல்லப்பட்டிருக்கிறது. இது பிரணவவிஷயத்தில் பொருந்தமாட்டாது. மேலும்,

अस्थूलमनण्वह्रस्वम् என்பதாய் அக்ஷரவிஷயத்தில் சகலசம்சாரதர்மங்களும் நிஷேதிக்கப்பட்டிருக்கின்றன. அப்படியே

एतस्य वाऽक्षरस्य प्रशासने गार्गि सूर्याचन्द्रमसौ विधृतौ तिष्ठतः

என்கிறதில் அந்த அக்ஷரத்துக்கே ஜகத்தை நியமனம் செய்யும்தன்மை கூறப்பட்டிருக்கிறது. அப்படியே

तद्वा एतदक्षरं गार्ग्यदृष्टं द्रष्टृ अश्रुतं श्रोतृ

முதலிய சுருதியால் பிரமாணத்துக்கும் அவிஷயம் என்றும் திரஷ்டா முதலானது என்றும் சொல்லப்பட்டிருக்கிறது. இவையெல்லாம் பிரணவபக்ஷத்தில் பொருந்தவில்லை. ஆகையால் பிரம்மமே அக்ஷரம். (30)

XIII. விசிஷ்டாத்வைதப்படி சுருக்கம்.

I-3-3-ல் 1 (10)

1. இதிலடங்கிய சூத்திரங்கள் 3 (10-12 (31)
2. விஷயவாக்கியம்:—बृ-III-8-8. (32)
3. இதில் சொல்லிய அக்ஷரம்.

பிரதானமா?

ஜீவனா?

பரமாத்மாவா என்பது சந்தேகம். (33)

4. பூர்வபக்ஷம்:—பிரதானம், அல்லது ஜீவன் பரமாத்மாவன்று. ஏனெனின்,

कस्मिन्नु खलु आकाशः ओतश्च प्रोतश्च

என்று கேள்வி ஏற்பட்டிருக்கிறது. ஆகையால் ஆகாசாதிகளுக்கு ஸ்தானம் பிரதானமாக இருக்க வேண்டும். ஏனெனின் ஆகாசாதி விகாரங்களுக்கு பிரதானம் காரணம். ஜீவனும் அசித்துகளுக்கு போக்தாதிரூபமாய் ஆதாரமாக இருக்கிறான். (34)

5. சித்தாந்தம் — மூன்றுகாலங்களிலுமிருக்கிற சகலத்துக்கு ஆதாரமான ஆகாசம் அவ்வியாகிருதம் பூதாகாசமல்ல. இதற்கு ஆதாரமாகச் சொல்லிய அக்ஷரம் பிரதானமல்ல. ஏனெனின் பிரதானமே அவ்வியாகிருதம். ஆகையால் இந்த ஆதாரம் பரமாத்மாதான்; ஜீவனுமல்ல.

अक्षरं = பு-III-8 8ல் சொல்லிய அக்ஷரம் பரம்பிரம்ம. ஏனெனின்,

अंबरान्तधृतेः = ஆகாசத்துக்குக் காரணமான அவ்வியாகிருத பிரதானத்தையும் தரிக்கிறது பிரம்மம்தான் (35)

I-3 3-ல் 2 (11)

அப்படியானால் ஜீவன் ஆதாரமாயிருக்கட்டுமே அவன் பிரதானத்தை தரிக்கலாம். எனின் அது சரியன்று. ஏனெனின், சூரியசந்திராள் அவருடைய ஆஞ்ஞையில் கட்டுப்பட்டதாக சொல்லியிருக்கிறது. அவர்கள் ஜீவனுடைய ஆஞ்ஞையில் கட்டுப்பட்டவர்களல்ல. ஆகையால் ஆதாரம் பரமாத்மாதான். (36)

I-3-3-ல் 3 (12)

अदृष्टं द्रष्टा முதலிய வாக்கியசேஷம் இந்த அக்ஷரத்தை பரமபுருஷனை விட வேறு அல்லவென்று சொல்லுகிறது. (37)

XIV. துவைதப்படி சுருக்கம்.

I-3-3-வது அதிகரணம்.

1. இதின்கருத்து.—அக்ஷர சப்தம் விஷ்ணுவையே கூறும் என்பதாம். (38)

2. இதிலடங்கிய சூத்திரங்கள்:-3 (10-12) (39)

3. இதின்விஷயம்.— यत्त दद्रश्यं என்கிற சுருதியிற் சொல்லிய அக்ஷரம். (40)

4. சங்கதி:—முன் ஒரு பிரகரணத்திலிருக்கிற

(1) சர்வகதத்வமும்

(2) உத்கிரமணமும்

விஷ்ணுவுக்குப் பொருந்துமென்று சொல்லப்பட்டது.

இவ்விடத்திலோ ஒருவாக்கியத்தில் இருக்கிற (1) அணுத்வ (2) மகத்வங்கள் பரஸ்பரம் விருத்தமாயிருந்தாலும் விஷ்ணுவினிடத்தில் பொருந்துகிறபடியால் திருஷ்டாந்தசங்கதி ஏற்படுகிறது (41)

5. சந்தேகம்.—காண்வசாகையில் 5-வது அத்தியாயத்தில் 8-வது பிராமணத்தில்

एतद्वैतदक्षरं गार्गि ब्राह्मणमभिवदन्ति अस्थूलमनणु अह्रस्वम् — —

என்றுசொல்லியிருக்கிறது. இதில் சொல்லிய அக்ஷரம்

(1) சித்பிரகிருதியா? அல்லது

(2) விஷ்ணுவா? என்பது சந்தேகம். (42)

6. பூர்வபக்ஷம்.—அக்ஷரசப்தம் சித்பிரகிருதியைகூறுகிறது. ஏனெனின்,

(1) येऽव्यक्षरमनिर्देश्यं என்பது முதலிய இடங்களில் ஸ்ரீதத்வம் அக்ஷரசப்தத்தால் கூறப்பட்டிருக்கிறது.

(2) விநாசமற்றது என்று அக்ஷரசப்தம் அர்த்தம்கொள்ளுவதால் அது ஸ்ரீதத்துவத்தையே கூறும்.

(3) अहं सोमं என்கிற சுருதியில் ஸ்ரீதத்துவத்தையே சூரியசந்திரனுக்கு ஆதாரமாகச் சொல்லியிருக்கிறது. இந்த பிரகரணத்திலும் அப்படியே சொல்லியிருக்கிறது.

ஆகையால் அக்ஷரசப்தத்தால் கூறப்பட்டது சித்பிரகிருதியான ஸ்ரீதத்துவம்தான். (43)

7. இப்படி பூர்வபக்ஷிசொல்ல இனி சித்தாந்தம் கூறப்படுகிறது. 10-வதுசூத்திரம்.—

अक्षरं அக்ஷரசப்தத்தால் கூறப்பட்டது பிரம்மமே சித்பிரகிருதியன்று. ஏனெனின்,

अंबरान्तधृतेः = एतस्मिन्खल्वक्षरे गार्गि

என்கிற சுருதியில் அம்பரம் அதாவது ஆகாசம் அதாவது ஸ்ரீதத்துவம் வரையிலுள்ள சகலத்தையும் தரிக்கிறதாகச் சொல்லியிருக்கிறது. (44)

8. I-3-3 ல் 2 (11)

அடியிற்கண்ட காரணத்தாலும் அக்ஷரம் பிரம்மமே.

சூத்திரார்த்தம்:—

एतस्य वा अक्षरस्य प्रशासते गार्गि

என்கிற சுருதியில் ஆகாசம்வரையில் உள்ளது அக்ஷரத்தின் ஆஞ்ஞையால் இருக்கிறது என்று தெரியவருகிறது. (45)

9. I-3-3 ல் 2-12

இன்னும் ஒருகாரணம் கூறுகிறார்.

अस्थूलमनणु முதலிய சுருதிகள் மற்றபதார்த்தங்களின் ஸ்தூலத்வம் முதலியதர்மங்கள் அக்ஷரத்தினிடத்தில்லை என்றும் சொல்லியிருக்கிறது. (46)

10. பூர்வபக்ஷபலன்:— अदृश्यत्वादिगुणको धर्मोक्तेः என்கிற சூத்திரத்தில் அக்ஷரம் விஷ்ணுவென்று சொல்லப்பட்டிருக்கிறது. அதின் ஆக்ஷேபமே பூர்வபக்ஷ பலன்.

சித்தாந்தபலன்:—சமாதானமே (47)

---

# I-3-4-வது அதிகரணத்தின்.

## அனுக்கிரமணிகை.

## 1-3-4-வது அதிகரணம்.

I. இதின் பெயர் :—ஈக்ஷதிகர்மாதிகரண மென்பதாம். (1)

II. இந்த அதிகரணத்தின் கருத்து :—பரப்பிரம்மமே தியானம் செய்யத்தக்கதென்பதாம். (2)

III. விஷயவாக்கியம் :—

एतद्वै सत्यकाम परं चापरं च ब्रह्म यदोङ्कारस्तस्माद्विद्वानेतेनैवायतनेनैकतरमन्वेति (प्र-V-2)

என்பது முதல்.

यः पुनरेतं त्रिमात्रेणोमित्येतेनैवाक्षरेण परं पुरुषमभिध्यायीत

सतेजसि सूर्ये संपन्नो यथा पादोदरस्त्वचा विनिर्मुच्यत एवं ह वै सपाप्मना विनिर्मुक्तः स सामभिरुन्नीयते ब्रह्मलोकं स एतस्माज्जीवघनात्परात्परं पुरिशयं पुरुषमीक्षते (प्र-V-5)

IV. அர்த்தம் :—பிப்பலாதர் என்னும் குருவானவர் சத்தியகாமரால் கேட்கப்பட்டு சொல்லுகிறார் :—சத்தியகாமரே, நிர்க்குணப்பிரம்மம் சகுணப்பிரம்மம், இரண்டும் ஓங்காரமே, ஓங்காரமானது விஷ்ணுவின் பிரதிமைபோல, பிரம்மத்துக்குப் பிரதீகமாயிருக்கிறது. ஆகையால் பிரணவத்தை பிரம்மமாக அறிகிறவன் ஓங்காரத்தியானத்தினுல், தியானத்துக்குத்தக்கபடி நிர்க்குணத்தையும் சகுணத்தையும் அடைகிறான்.

இப்படி சுருதி ஆரம்பித்து, மத்தியில் ஓங்காரத்தின் ஒரு மாத்திரையின் தியானத்தையும் இரண்டு மாத்திரைகளின் தியானத்தையும்சொல்லி கடைசியில் :—

எவன் மூன்று மாத்திரைகளுடன் கூடின ஓங்காரத்தைத்தியானம் செய்கிருனே, அவன் சூரியன் மூலமாக பிரம்மலோகம்சென்று பரமாத்மாவான் புருஷனைப் பார்க்கிறான் :—என்று சுருதிசொல்லுகிறது. (3)

V. சங்கதி :—

(a) முந்தின அதிகரணத்துக்கும் இதற்கும் சங்கதி :—

(1) பிரசங்கசங்கதி :—முந்தின அதிகரணத்தின் பூர்வபக்ஷத்தில் ஓங்காரம் உபாசிக்கத்தக்கது என்று சொல்லப்பட்டது. இந்தப் பிரசங்கத்தை மனதில் வைத்துக்கொண்டு ஓங்காரத்தால் எதைத்தியானிக்கிறதென்பதை நிச்சயிக்கும் பொருட்டு இந்த அதிகரணம் ஏற்பட்டபடியால் பிரசங்க சங்கதி ஏற்பட்டது.

(2) திருஷ்டாந்தசங்கதி :— முன் அக்ஷரசப்தம் ரூடியால் வர்ணத்தைக்கூறினும் லிங்கத்தால் பிரம்மத்தைக்கூறுகிறதுபோல், இந்த அதிகரணத்திலும் பரசப்தம் பிரம்மலோகப் பிராப்திக்குச்சாதகம் என்கிற லிங்கத்தால் ஹிரண்யகர்ப்பரைக்கூறுவதாக பூர்வபக்ஷி சொல்லுவதால் திருஷ்டாந்த சங்கதி ஏற்படுகிறது. (4)

(b) பாதசங்கதி :—சாக்ஷாத்காரத்துக்கு விஷயமாயிருக்கும் தன்மை பிரம்மலிங்கம், பிரம்மலோகப் பிராப்திக்குச் சாதகமாயிருக்கும் தன்மை அபரப்பிரம்மலிங்கம். இந்த விஷயவாக்கியத்தில் இரண்டும் காணப்படுவதால் பிரம்மலிங்கம் ஸ்பஷ்டமாய்த் தெரியவில்லை. ஆகையால் இந்த அதிகரணம் இந்தப்பாதத்தில் சேர்க்கப்பட்டது.

(c) இதரசங்கதிகள் :—முன்போலவே (5)

VI. சந்தேகம் :—एतेनैवायतनेन परम परं चैकतरमन्वेति

(இந்த மார்க்கத்தால் பரம் அபரம்இவைகளுக்குள் ஒன்றைத்தேடுகிறான்) என்று சொல்லியிருப்பதால், இந்த (மூன்று மாத்திரை) வாக்கியத்தில்]

(1) பரப்பிரம்மம் தியானிக்கத்தக்கது என்று உபதேசிக்கப்பட்டிருக்கிறதா, அல்லது.

(2) அபரப்பிரம்மம் தியானிக்கத்தக்கதென்று சொல்லியிருக்கிறதா என்பது சம்சயம்.

VII. இதிலடங்கிய சூத்திரம்—13-வது.

VIII. பூர்வபக்ஷம் :—

அபரப்பிரம்மந்தான் தியானிக்கத்தக்கது. ஏனெனின்.

(1) सतेजसि सूर्ये संपन्नः

உபாசகன் தேஜோரூப சூரியனிடத்தில் பிரவேசிக்கிறான் என்றும்,

(2) स सामभिरुन्नीयते ब्रह्मलोकं

அவன் சாமங்களின் அபிமானிதேவதைகளால் பிரம்மலோகம் கொண்டுபோகப்படுகிறான் என்றும்,

சொல்லிருப்பதால் அபரப்பிரம்மத்தை அறிந்தவனுக்கு வேறு இடமாகிய பலன் கூறப்பட்டிருக்கிறது.

பரப்பிரம்மத்தை அறிந்தவன் தேசவிசேஷமாகிற பலத்தை அடைகிருன் என்று சொல்லக்கூடாது. ஏனெனின் பரப்பிரம்மம் சர்வவியாபகம்.

அபரப்பிரம்மத்தை ஒப்புக்கொள்ளும் பக்ஷத்தில் பரமபுருஷன் என்கிற விசேஷணம் பொருந்தவில்லையே எனின், இதில் தோஷமில்லை. ஸ்தூலமான விராட்டை அபேக்ஷித்து சூத்திராத்மா பரமாக இருக்கிருன். (8)

IX. சித்தாந்தம்.

1. இப்படி பூர்வபக்ஷி சொல்ல வியாசர்.

## ईक्षतिकर्मव्यपदेशात् सः 13-9

என்கிற சூத்திரத்தில் சித்தாந்தம் கூறுகிருர்.

2. பதஉரை.

ईक्षति कर्मव्यपदेशात् தர்சனத்துக்கு விஷயம் என்று சொல்லியிருப்பதால்.

स: தியானிக்கத்தக்கவன் परब्रह्म பரப்பிரம்மம். (10)

3. பொழிப்புரை.

தியானிக்கத்தக்கவன் தர்சனத்துக்கு விஷயம் என்று சொல்லியிருப்பதால் அவன் பரப்பிரம்மமே. (11)

4. பாஷ்யம்.

பரபிரம்மமே தியானிக்கத்தக்கதாய் உபதேசிக்கப்படுகிறது. ஏனெனின்,

ईक्षति कर्मव्यपदेशात् स एतस्माज्जीवघनात् परात् परं पुरुषं पुरिशयं ईक्षत (प्र-V-5)

என்கிற பிந்திய வாக்கியத்தில் உபாசகன் இந்த ஹிரண்யகர்ப்பனுக்கு மேலான புருஷனை அதாவது பிரம்மமே நான் என்று பார்க்கிருன் அதாவது சாக்ஷாத்கரிக்கிருன் என்று சொல்லியிருப்பதால், அப்படிப்பட்ட ईक्षति அதாவது தர்சனம் அதாவது சாக்ஷாத்காரத்துக்கு விஷயமான புருஷனே (பரப்பிரம்மமே) தியானிக்கத்தக்கது.

மனதினுல் கற்பிக்கப்பட்ட வஸ்துவும் தியானத்துக்கு விஷயமாகலாமாதலால், இவ்விடத்தில் தியானத்துக்கு விஷயம் மித்தையான அபரப்பிரம்மமாக இருக்கட்டுமே. பிரபஞ்சத்தில் பார்வைக்கு வாஸ்தவமான வஸ்துவே விஷயமாயிருக்கிறது. ஆகையால் சாக்ஷாத்காரத்துக்கு விஷயமான பரமாத்மாவே இவ்விடத்தில் கூறப்பட்டதாகத் தெரியவருகிறது.

ர (சாக்ஷாத்காரத்துக்கு விஷயம் சத்திய வஸ்துவாயிருந்தாலும், தியானத்துக்கு விஷயம் அசத்தியமான அபரப்பிரம்மம் ஏன் இருக்கக்கூடாதெனின்)

பரசப்தத்தாலும் புருஷ சப்தத்தாலும் பிந்தின வாக்கியத்தில் கூறப்பட்ட புருஷனே முந்திய வாக்கியத்தில் கூறப்பட்டவன் என்று தெரியவருகிறது. ஆகையால் தியானத்துக்கு விஷயமான புருஷன் பரப்பிரம்மமாகவே இருக்கவேண்டும்.

(ஆக்ஷேபம்) தியானத்துக்கு விஷயமாகப் பரபுருஷனைச் சொல்லப்பட்டது. ஞானத்துக்கு (ஈக்ஷணகர்மத்துக்கு) விஷயமாக பராத் பரம் என்று சொல்லியிருக்கிறது. இப்படியிருக்க ஒன்று மற்றொரு இடத்தில் ஸ்மரிக்கப்பட்டிருக்கிறதாக எப்படி சொல்லலாம்

சமாதானம்:—பர சப்தமென்ன, புருஷ சப்தமென்ன இவ்விரண்டும் இரண்டிடத்திலும் சாதாரணமாயிருக்கின்றன. ஜீவகன சப்தம் தியானிக்கத்தக்க புருஷனைக் கூறியிருந்தால் அவனைவிட வேருனவன் சாக்ஷாத்கரிக்கத்தக்கவன் என்று சொல்லலாம். ஆனல் அப்படி சொல்லப்படவில்லை.

ர (தியானத்துக்கும் அதின் பலமாகிய சாக்ஷாத்காரத்துக்கும் விஷயம் லோகத்தில் ஒன்ருக இருப்பதால், தியானிக்கத்தக்கவனே பார்க்கத்தக்கவன் (சாக்ஷாத்கரிக்கத்தக்கவன்) இப்படி உபக்கிரம உபசம்ஹாரவாக்கியங்கள் ஒரே அர்த்தத்தைக் கொடுக்கின்றன என்பது கருத்து. ஜீவகன சப்தம் தியானிக்கத்தக்கவனை கூருத பக்ஷத்தில் ஜீவகன யார் எனின், கனமென்ருல் மூர்த்தி, ஜீவஸ்வரூப மூர்த்தி; பரமாத்மாவினுடைய உப்புக்கட்டிபோல் உபாதியால் ஏற்பட்ட ஒரு அம்சம்; இது விஷய இந்திரியங்களைவிட வேறு இதுவே இரணியகர்ப்பன். இவன்தான் இவ்விடத்தில் ஜீவகனசப்தத்தால் கூறப்படுகிருன்.

சிலர் சொல்லுகிறதாவது:—

स सामभिरुन्नीयते ब्रह्मलोकम् (प्र-V-5)

என்கிற முந்தின வாக்கியத்தில் கூறப்பட்ட யாதொரு பிரம்மலோகமுண்டோ அது இதரலோகங்

களைவிட பரமாயிருக்கிறது. அது இவ்விடத்தில் ஜீவ் கன சப்தத்தால் கூறப்படுகிறது. வியஷ்டிகரணங்களுக்கு அபிமானியான ஜீவர்கள் சர்வகரண ஸ்வரூபமான ஹிரண்யகர்ப்பனிடத்தில் சேர்ந்திருக்கிறார்கள். ஹிரணியகர்ப்பன் பிரம்மலோகவாஸி. இந்த பரம் பராசம்பந்தத்தினால் பிரம்மலோகமே ஜீவகனமாக சொல்லப்படலாம். பிரம்மலோகத்தைவிட பரமான அதாவது रा (சர்வலோகாதீத, சுத்தமான) பரமாத்மாவே சாக்ஷாத்காரத்துக்கு விஷயம், அவரே தியானத்திற்கும் விஷயம் என்று அறியப்படுகின்றது.

रा முதல் பக்ஷத்தில் ஜீவகன பதத்துக்கு ஹிரணிய கர்ப்பன் என்றும், இரண்டாவது பக்ஷத்தில் பிரம்ம லோகம் என்றும் அர்த்தம் செய்வதில், முதல் பக்ஷத்தில் சேதனத்தைவிட பிரம்ம பரம் என்றும், இரண்டாவதில் ஜடத்தைவிட சிலாக்கியம் என்றும் ஏற்படுவதால் முதல் பக்ஷமே சுவாரஸியமாக இருக்கிறது

श्री பரமாத்மாவை கிரகித்தால்தான் பரம், புருஷம் என்கிற விசேஷணம் பொருந்தும். அந்த பரபுருஷன் பரமாத்மாவே அவரைவிட பரமானது ஒன்றுமில்லை. पुरुषान्नपरं किञ्चित् सा काष्ठा सा परागतिः

என்கிற (क-III-11) சுருதியானது

புருஷனைவிட பரமானது ஒன்றுமில்லை என்றும் அதுவே பரமமானகதி என்றும் சொல்லுகிறதினால்

रा (பரசப்தம் பிண்டத்தைவிடபரமான சூத்திராத்மாவைக் கூறவில்லை) பரமாத்மாவைத்தான் கூறுகிறது. ஓங்காரம் பரபிரம்மம் என்றும் அபரப்பிரம்மமென்றும் பிரித்துச்சொல்லி, பிறகு ஓங்காரத்தால் பரமான புருஷனை தியானிக்கவேண்டியதென்று சொல்லி, அந்த பரபுருஷன் பரப்பிரம்மம்தான் என்று சுருதி தெரிவிக்கிறது.

(பாப நிவிர்த்தி லிங்கத்தாலும் பரமாத்மாதான் தியானிக்கத்தக்க பரபுருஷன் என்கிறார்.)

यथा पादोदरस्त्वचा विनिर्मुच्यते एवं हवै स पाप्मना विनिर्मुक्तः

(என்கிற பாம்பு சட்டையினின்றும் விடுபடுவது போல் அவன் பாபத்தினின்றும் விடுபடுகிறான் என்று சுருதியில் பாபம் நிவிர்த்தியாய் விடுவதாகச்சொல்லிய வசனம் பரமாத்மாவே தியானிக்கத்தக்க தென்பதை சூசிப்பிக்கிறது.

பரமாத்மாவைத் தியானிக்கிறவன் (रा பரப்பிரம்ம உபாசனையால் சூரியன் மூலமாக பிரம்மலோகம்போய் பரப்பிரம்மத்தைப் பார்த்து, அந்த சாந்தமாயும் அபயமாயுமிருக்கிற ஸ்வரூபத்தைப் பார்க்கிறான் என்பதாய்) யாதொரு தேசபரிச்சின்னமான பலத்தை அடைகிறான் என்று சொல்லப்பட்டதோ, அது விஷயத்தில் நாம் சொல்லுகிறதாவது :—மூன்று மாத்திரைகளுடன் கூடின ஓங்காரத்தால் பரமாத்மாவைத் தியானிக்கிறவன் பிரம்ம லோகத்தை அடைந்து (அவ்விடத்தில் உபதேசம் பெற்று, பிறகு சாக்ஷாத்காரத்தை அடைகிறான் என்றிருப்பதால் கிரம முக்தியைச் சொல்லும் பொருட்டு இந்த வசனம் ஏற்பட்டதில் யாதொரு தோஷமுமில்லை. (12)

रा X. பூர்வபக்ஷபலன் :—அபரப்பிரம்ம உபாஸ்தி.

சித்தாந்தபலன் :—பிரம்ம உபாஸ்தி

रा (இவ்விதமாக பர, புருஷ, என்கிற வசனங்களால் பரப்பிரம்மமே கிரகிக்கப்பட்டு, பிரம்மலோக பிராப்தி லிங்கம் பாதிக்கப்பட்டு, பிரச்னோபநிஷத்து வாக்கியம் பிரணவத்தில் தியானிக்கத்தக்க பிரம்மத்தினிடத்தில் சமந்வயமாகிற தென்பது சித்தித்து. (13)

XI. வியாசாதிகரணமாலைப்படி அத்வைதச் சுருக்கம்.

1. சுலோகங்கள்:—

त्रिमात्र प्रणवे ध्येयमपरं ब्रह्म वा परम् ।
ब्रह्मलोकफलोक्त्यादेरपरं ब्रह्म गम्यते ॥
ईक्षतव्यो जीवघनात्परस्तत्प्रत्यभिज्ञया ।
भवेत्ध्येयं परं ब्रह्म क्रममुक्तिः फलिष्यति ॥

2. விஷயவாக்கியம்:—பிரச்னோபநிஷத்தில்

यः पुनरेतं त्रिमात्रेणोमित्येते नैवाक्षरेण परं पुरुषमभिध्यायीत

என்று சொல்லியிருக்கிறது. (15)

3. சந்தேகம்:—இவ்விடத்தில் தியானிக்கத்தக்கவஸ்து ஹிரணியகர்பம் என்கிற அபரப்பிரம்மமா? அல்லது பரப்பிரம்மமா என்பது சந்தேகம். (16)

4. பூர்வக்ஷம்:—இது அபரப்பிரம்மமே. ஏனெனின் स सामभिरुन्नीयते ब्रह्मलोकम्

என்பதால் கமலாசன (பிரம்ம) லோகப்பிராப்திபலம் கூறப்பட்டிருக்கிறது.

பரமபுருஷார்த்தத்தைக்கொடுக்கும் பரப்பிரம்மத்தியானத்துக்கு இந்தபலன் பொருந்தாது.

परं पुरुषम् என்பதில் பரசப்தம் அபரப்பிரம்ம விஷயத்திலும் பொருந்தும். ஏனெனின் இது மற்றதை அபேக்ஷித்து பரம். (17)

5. சித்தாந்தம்:—இப்படி பூர்வபக்ஷி சொல்ல நாம் சொல்லுகிறதாவது:—

பரப்பிரம்மம்தான் தியானிக்கத்தக்கது. ஏனெனின்: स एतस्माज्जीवघनात्परात्परं पुरिशयं पुरुषमीक्षते

என்கிற வாக்கிய சேஷத்தில் அப்படியே சொல்லப்பட்டிருக்கிறது. மேற்சொல்லிய சுருதியின் அர்த்தம்:—எவன் உபாசனையால்பிரம்மலோகத்தை அடைகிறானோ அவன் இந்த சர்வஜீவ சமிஷ்டியாகிற உத்கிருஷ்டமான ஹிரணியகர்ப்பனைவிட உத்கிருஷ்டமான சகலபிராணிகளின் ஹிருதயத்திலிருக்கிற பரமாத்மாவை பார்க்கிறான் என்பதாம். இவ்விடத்தில் பார்க்கத்தக்கதான எந்தபரமாத்மாவோ, அந்தபரமாத்மாவே வாக்கியாரம்பத்தில் தியானவிஷயமாக சொல்லப்பட்டிருக்கிறார் என்று தெரியவருகிறது. பரசப்தமும் புருஷசப்தமும் அவரையே ஞாபகப்படுத்துகின்றன. பிரம்மலோகப் பிராப்தியான பலம்மட்டும்தான் கூறப்படவில்லை. ஏனெனின் கிரமமுக்தி ஏற்படலாம். ஆகையால் பிரம்மமே தியானிக்கத்தக்கது. (18)

விசிஷ்டாத்வைதப்படி சுருக்கம்

I-3-4-வது அதிகரணம்

1. இதிலடங்கிய சூத்திரம்:— 1 (13) (19)

2. விஷயவாக்கியம்:—

यः पुनरेतं என்பது முதல்पुरिशयं पुरुषं ईक्षते வரையிலுமுள்ள பிரச்னோபநிஷத்தின் V-5-வது வாக்கியம். (20)

3. சந்தேகம்:—தியானத்துக்கும் சாக்ஷாத்காரத்துக்கும் விஷயமாகச் சொல்லப்பட்ட பரமபுருஷன்

1. ஹிரணியகர்ப்பனா? அல்லது
2. பரமாத்மாவா?

என்பது சந்தேகம்.

4. பூர்வபக்ஷம்:—ஹிரணியகர்ப்பன். ஏனெனின்,

1. பிரணவத்தின் ஒரு மாத்திரியை உபாசிக்கிறவனுக்கு மனுஷிய லோகம் பலன் என்றும்

2. இரண்டு மாத்திரைகளை உபாசிக்கிறவனுக்கு அந்தரிக்ஷலோகம் பலன் என்றும்

3. மூன்றுமாத்திரைகளை உபாசிக்கிறவனுக்கு பிரம்மலோகம் பலன் என்றும் சொல்லியிருக்கிறது. இந்த பிரம்மலோகத்திலிருந்துகொண்டு சாக்ஷாத்காரத்துக்கு விஷயமாக இருக்கிறவன் சதுர்முக பிரம்மாவாகத் தானிருக்கவேண்டும். மனுஷியலோகம், அந்தரிக்ஷலோகம் இவைகளுடன் சேர்த்து பிரம்மலோகத்தை படித்திருப்பதால் பிரம்மலோகம் ஹிரண்ணிய கர்ப்பலோகமாக இருக்கவேண்டும். (22)

5. சித்தாந்தம்:-இவன் பரமாத்மாவாகத்தான் இருக்கவேண்டும். ஏனெனின் இந்த பிரச்னத்தின் கடைசிவாக்கியத்தில் शान्तं अमरं अजरं अमृतं अभयं முதலிய விசேஷணங்கள் கொடுக்கப்பட்டிருக்கின்றன. இவைகள் பரமாத்மாவையே பொருந்தும் என்பது நிச்சயம். ஆகையால் பிரம்மலோகசப்தமும் அவன் ஸ்தானத்தையே குறிப்பிடுகிறதென்று தெரியவருகிறது. (23)

6. சூத்திரார்த்தம்:—

ईक्षति कर्म ஈக்ஷணத்துக்கு விஷயம்.

सः பரமாத்மா.

ஏனெனின் தியானத்துக்கும் ஈக்ஷணத்துக்கும் ஒரே விஷயம்.

व्यपदेशात् சாந்தம் அஜம் முதலிய பரமாதம் தர்மங்கள் சொல்லப்பட்டிருக்கின்றன. (24)

துவைதப்படி சுருக்கம்.

I-3-4-வதுஅதிகரணம்.

1. இதின் கருத்து :—சத்சப்தம் பிரம்மத்தைக் கூறுமென்பதாம். (25)

2. இதிலடங்கிய சூத்திரம்:—1. (13-வது) (26)

3. விஷயம் :—सदेव सोम्येदमग्र आसीत् என்கிற சா சுருதி. (27)

4. சங்கதி :—முந்தின அதிகரணத்தில் சகலத்தையும் தரிக்கிறவர் விஷ்ணுவென்பது சொல்லப்பட்டது.

இந்த விஷயவாக்கியத்தில் சத் தான் தரிக்கிறதாகத் தெரியவருகிறது. ஆகவே முந்தின தீர்மானம் ஆக்ஷேபிக்கப்படுவதால் ஆக்ஷேப சங்கதி ஏற்படுகிறது. (28)

5. சந்தேகம் 1:-சாந்தோக்கியம் 6-வது அத்தியாயத்தில் सदेव என்று ஆரம்பித்து तदैक्षत என்பது வரையிலுள்ள சுருதிகளில் காரணமாகச் சொல்லிய सत् பதம்

(1) பிரதானத்தைக் கூறுகிறதா? அல்லது

(2) பிரம்மத்தைக் கூறுகிறதா?

என்பது சந்தேகம். (29)

6. பூர்வபக்ஷம். பிரதானத்தைத்தான் கூறுகிறது. वहुस्यां என்பதால் தேஜஸ் முதலியவைகளாக அது ஆனதாகச் சொல்லியிருக்கிறது. நிர்விகாரமான பிரம்மத்தினிடத்தில் இது பொருந்தாது. (30)

7. சித்தாந்தம் :—

तदैक्षत என்று சொல்லியிருக்கிறது. சங்கற்பத்துக்கு முக்கியார்த்தத்தை விட்டுவிட்டு வேறு அர்த்தத்தை கிரகிக்கக்கூடாது. (31)

8. சூத்திரார்த்தம்.

सदवे सोम्य என்கிற சுருதியில் சிருஷ்டியை பிரதிபாதித்திருக்கும்பிரகரணத்திலிருக்கிற சத் சப்தத்தால் கூறப்பட்டவர்

स: அதாவது முந்தின கிரந்தத்தில் தத் சப்தத்தால் ஏற்பட்ட விஷ்ணுவே.

ஏனெனின் ईक्षति कर्म व्यपदेशात् = तदैक्षत

என்கிற சுருதில் சங்கற்பிக்கிற வியாபாரம் கூறப்பட்டிருக்கிறது இது ஜடப்பிரதானத்தினிடத்தில் ஏற்படமாட்டாது (32)

9 பூர்வபக்ஷபலன் :—ஜன்மாதி சூத்திரத்தில் விஷ்ணுஜகத்காரணம் என்கிற ஆக்ஷேபமே

சித்தாந்தபலன் :—சமாதானம் (33)

---

## 1-3-5-வது அதிகரணத்தின்

### அனுக்கிரமணிகை.

## 1-3-5-வது அதிகரணம்.

I. இதின் பெயர் :— தஹராதிகரண மென்பதாம். (1)

II. இதின் கருத்து :— தஹராகாசம் என்பதினால் பிரம்மத்தையே அறியவேண்டு மென்பதாம்.

(பாஷ்யக்காரருடைய வசனதோரணையாலும், ஆநந்தகிரி ருமாநந்தர், பிரம்மவித்தியாபரணகாரர், இவர்களுடைய வசனதோரணையாலும் தஹரவாக்கியமும் அடுத்த அகூஷிபுருஷவாக்கியமும் ஒரு அதிகரணத்தில் அடங்கியிருப்பதாகத் தெரியவருகிறது. வித்தியாரண சுவாமிகள் இரண்டு அதிகரணங்களாக எடுத்திருக்கிறார்கள். இந்த மொழிபெயர்ப்பில் ஒரு அதிகரணம் தான் கிரகிக்கப்பட்டிருக்கிறது) (2)

III. இதின் விஷயவாக்கியம் :—

अथ यदिदमास्मिन् ब्रह्मपुरे दहरं पुंडरीकं वेश्म दहरोऽस्मिन्नन्तराकाशस्तस्मिन् यदन्तस्तदन्वेष्टव्यं तद्वाववविजिज्ञासितव्यम् (छा-VIII-I-I)

அர்த்தம் :— பூமவித்தைக்குப் பிறகு தஹர வித்தை ஆரம்பிக்கப்படுகிறது. இந்த சரீரத்தால் ஹிருதயகமலமாகிற ஒரு அல்பஸ்தானமிருக்கிறது. அதில் அல்பஆகாச சப்தத்தால் கூறப்படும் பிரம்மமிருக்கிறது. அவன் கேட்கத்தக்கவன், அறியத்தக்கவன். இப்படி நாரதர் கேட்க சனத்குமாரர் சொல்லுகிறதாவது :— இந்த ஆகாசம் எவ்வளவு இருக்கிறதோ அவ்வளவு இருக்கிறது இந்த ஹிருதயத்திலும். அதில் சுவர்க்கம், பூமி, அக்கினி, வாயு, சூரியன், சந்திரன், நக்ஷத்திரங்கள் முதலியவை அடங்கியிருக்கின்றன. இதில் சமஸ்தமும் அதாவது சகல பிராணிகள், சகல காமங்கள், அடங்கியிருக்கின்றன. இது ஜரையை அடைகிறது, நாசத்தை அடைகிறது. இப்படிஜரைநாசம் இவைகளை ஹிருதயம் அடைந்தாலும், அதிலிருக்கிற பிரம்மம் (ஆகாசம்) ஜரையையும் அடைகிறதில்லை, நாசத்தையும் அடைகிறதில்லை. இவன் சத்தியம், பாபமற்றவன் ஜரை, மிருத்தியு, சோகம் அற்றவன், பசிதாக இச்சையற்றவன், சத்திய சங்கற்பன் சத்திய காமன். (3)

IV. சங்கதி :—

(1) இந்த அதிகரணத்துக்கும் முந்தினதற்கும்:-

(a) இராமநந்தீயப்படி :- பரபுருஷ சப்தங்கள் முக்கியமாய் பிரம்மத்தைக் கூறுகின்றபடியால் பிரம்மம் தியானிக்கத்தக்கது என்று முன் சொன்னதுபோல் இந்த அதிகரணத்தில் ஆகாசபதம் பூதாகாசத்தைக் கூறுவதால் பூதாகாசம் தியானிக்கத்தக்கதென்று பூர்வபக்ஷிசொல்லுவதால் திருஷ்டாந்த சங்கதி ஏற்படுகிறது.

(b) பிரம்மவித்தியாபரணப்படி :— முந்தின அதிகரணத்தில் பிரதீக உபாசனையும் வசனபலத்தால் பிரம்மலோகப் பிராப்தி மூலமாக மோக்ஷபலத்தைக்கொடுக்கும் என்று அறியப்பட்டதுபோல், இந்த அதிகரணத்தில் பூர்வபக்ஷத்தில் ஜீவனாவது பூதாகாசமாவது உபாசியமாக இருந்தாலும் வசனபலத்தால் சத்தியசங்கற்பாதிகள் கிடைக்கின்றன என்பதாய் திருஷ்டாந்த சங்கதி ஏற்படுகிறது.

(2) சுருதி முதலிய சங்கதிகள் :— தஹர வாக்கியம் சகுணபிரம்மத்தைச் சொல்லுவதால் சுருதி முதலிய சங்கதிகள் முன்போலவே ஏற்படுகின்றன. (4)

V. சந்தேகம் :—

1. இந்த விஷய வாக்கியத்தில் கூறப்பட்டிருக்கிற தஹர (அற்ப)மான ஹிருதயகமலத்தில் தஹர ஆகாசம்.

(1) பூதாகாசமா ? அல்லது
(2) விஞ்ஞாநாத்மாவா ? அல்லது
(3) பரமாத்மாவா ? என்பது சந்தேகம்

2. இந்த சம்சயத்துக்குக்காரணம் (a) ஆகாச, (b) பிரம்மபுர சப்தங்களின் பிரயோகமாம்.

(1) இந்த ஆகாசசப்தம் பூதாகாசத்திலும் உபயோகிக்கப்படுவதாகக் காணப்படுகிறது ; பரப்பிரம்மத்தினிடத்திலும் காணப்படுகிறது. ஆகையால் பூதாகாசம்தான் தஹரமா அல்லது பரப்பிரம்மம் தஹரமா என்பது சந்தேகம்.

(2) அப்படியே பிரம்மபுரம் விஷயத்திலும், ஜீவனே பிரம்மம் அவனுடையபுரம் அதாவது சரீரம் பிரம்மபுரம் எனப்படுகிறதா ?

அல்லது பரப்பிரம்மத்தின்புரம் பிரம்மத்தின் அபிவியக்திக்கு ஸ்தானமாயிருப்பதால் பிரம்மபுரம் எனப்படுகிறதா ? இந்த புரத்துக்கு சுவாமி ஜீவனாயிருந்தாலும் பரப்பிரம்மமா யிருந்தாலும், தஹராகாசம் ஜீவனா பிரம்மமா என்பது சந்தேகம். (5)

VI. இதிலடங்கிய சூத்திரங்கள் :—8 (14-21)

இவைகளில் தஹராகாசம் பிரம்மம் என்பது
14-ல் குருசிஷ்ய வசனங்களாலும்
15-ல் கமன-பிரம்மலோக-சப்தங்களாலும்
16-ல் சர்வஜகத்காரண லிங்கத்தாலும்
17-ல் ஆகாச சப்தத்தின் பிரசித்தார்த்தத்தாலும்
18-19ல் ஜீவனாயிருக்கமாட்டான் என்பதினாலும்
20-ல் ஜீவனைப் பிரஸ்தாபித்தகாரணமும்
21-ல் தஹரபதததின் பிரயோகம் உசிதம் தான் என்பதும்

நிரூபிக்கப்படுகிறது.

VII. பூர்வபக்ஷம் :—

1. இப்படி சம்சயம் நிற்க, ஆகாசசப்தம் பூதாகாசத்தை பிரசித்தமாய்க் கூறுவதால் பூதாகாசமே தஹரசப்தத்தால் கூறப்படுகின்றது.

ரா அப்படியானால் இந்தப் பூதாகாசம்

(1) எப்படி அற்பமாகும்.
(2) பாஹ்ய ஆகாசம்போல் ஹிருதயாகாசம் என்கிற உபமான உபமேயங்கள் எப்படி ஏற்படும்.

(3) சுவர்காதிகள் முதலியவை இதில் அடங்கியதாக எப்படி சொல்லலாம்)

இந்த சந்தேகங்களுக்கு முறையே உத்தரம்

(1) ஹிருதயமாகிற அற்பஸ்தானத்தை அபேக்ஷித்து பூதாகாசம் அற்பமாயிருக்கிறது.

(2) "இந்த ஆகாசம் எவ்வளவோ அவ்வளவு இந்த ஹிருதயாகாசம்" என்று சொன்னதானது உள் என்றும் வெளி என்றும் இரண்டு உபாதிகளின் கற்பனையால் ஏற்படுகிறது. ஆகையால் உபமான உபமேயங்கள் பொருந்தும்.

(3) ஆகாசம் என்பது ஒன்று. அது சகலத்துக்கும் அவகாசம் கொடுக்கத்தக்கது, ஆகையால் ஹிருதயாகாசமும் சுவர்க்காதிகளுக்கு ஆசிரயமாயிருக்கிறது. (7)

ரா அல்லது(एष आत्मा) என்று சொல்லியிருப்பதால் ஆத்ம சப்தம் பூதாகாசத்துக்குப் பிரயோகிப்பது யுக்தமன்றே என்று வேறுவிதமாக அர்த்தம் சொல்லப்படுகிறது.

தஹராகாசம் ஜீவனாயிருக்கலாம்; ஏனென்னின் பிரம்மபுர சப்தம் உபயோகிக்கப்பட்டிருக்கிறது. இந்த சரீரம் ஜீவனுடையதாக இருப்பதால் பிரம்மபுரம் என்று சொல்லப்படுகின்றது. ஜீவனுடைய சரீரம் அவனுடைய கர்மத்தால் ஏற்படுகின்றது. ஜீவனும் ஔபசாரிகமாக பிரம்மம் என்று சொல்லப்படலாம் பரப்பிரம்மத்தை சுரீரச்வாமியாக சொல்லக்கூடாது. ஒரு அரசன் பட்டணத்தின் ஏகதேசத்திலிருப்பது போல் புரத்துக்கு ஸ்வாமியாயிருக்கிறவன் புரத்தின் ஏகதேசத்தில்தான் இருப்பான். ஜீவன் மனதை உபாதியாயுடையவன், மனதோ விசேஷமாய் ஹிருதயத்திலிருக்கிறது. ஆகையால் ஹிருதயத்துக்குள் இருக்கிறவன் ஜீவனாகத்தான் இருக்கவேண்டும். ஜீவன் தார்மூலைப்போலிருக்கிறான் என்று சொல்லியிருப்பதால் தஹரத்வமும் பொருந்தும்.

பூதாகாசம்போல் ஹிருதயாகாசமாகிற ஜீவனிருக்கிறான் என்பது ஜீவனுக்கும் பிரம்மத்துக்கும் பேதமில்லை என்று சொல்லுவதினால் பொருந்தும் (பூதாகாசம் சர்வவியாபி. ஜீவனும் ஔபசாரிகமாக பிரம்மமாவதால் வியாபி. ஆகையால் உபமான உபமேய பாவம் பொருந்தும்) இதேகாரணதகனுல் சர்வாதாரத்வமும் ஜீவனுக்கு பொருந்தும். (8)

ரா ஜீவனை ஆகாசப்தத்தால் கூறக்கூடாது ஆகையால் தஹராகாசம் பூதாகாசத்தைத்தான் கூறவேண்டியது அப்படியானால் அறியத்தக்கது தேடத்தக்கது என்று சொல்லியிருக்கிறதே எனின் தஹராகாசத்தைத்தேடவேண்டுமென்றாவது அறியவேண்டுமென்றாவது சொல்லவில்லை. அதற்குள் எது இருக்கிறதாக சொல்லியிருக்கிறதோ அது தேடத்தககது, அறியத்தக்கது. ஆகையால் தஹராகாசம் பூதாகாசமே, பிரம்மமுமல்ல ஜீவனுமல்ல. (9)

VIII. சித்தாந்தம்:—

1. இப்படி பூர்வபக்ஷிசொல்ல வியாசர்

## दहर उत्तरेभ्यः । १४

என்கிற சூத்திரத்தில் சித்தாந்தம் கூறுகிறார். (10)

2. பதஉரை:—

दहर தஹராகாசம்

उत्तरेभ्यः இனி சொல்லப்போகிற காரணங்களால்

(परमात्मा பரமாத்மாவே) (11)

3. பொழிப்புரை:—

இனி சொல்லப்போகிற காரணங்களால் தஹராகாசம் பிரம்மமாகத்தான் இருக்கவேண்டும். (12)

4. பாஷ்யம்:—

(1) दहरः பரமேசுவரனே தஹராகாசமாக இருக்கவேண்டும். பூதாகாசமாவது ஜீவனாவது தஹராகாசமாகமாட்டாது. ஏனெனின்

(2) उत्तरेभ्यः கீழ்வரும் வாக்கியங்களிலுள்ள காரணங்களால் ரா அதாவது சிஷ்யர்கள் குருவைப் பார்த்து

तं चेद्ब्रूयुः முதல் किं तदत्र विद्यते यदन्वेष्टव्यं यद्वाव विजिज्ञासितव्यं

அதாவது ஹிருதயம் அற்பம், அதிலிருக்கிற ஆகாசம் அதைவிட அற்பம், அந்த அற்பத்தில் எது இருக்கிறது, எதை விசாரித்து அறியவேண்டியது, என்று கேட்டார்கள். அதற்கு அவர்

स ब्रूयात् यावान् वा अयमाकाशस्तावानेषोऽन्तर्हृदय आकाश उभे अस्मिन् द्यावा पृथिवी अन्तरेव समाहिते (छा-VIII1-3)

அதாவது இந்த பூதாகாசம் எவ்வளவு இருக்கிறதோ அவ்வளவு ஹிருதயாகாசமுமிருக்கிறது. அதில் சுவர்க்கம், பூமி இவ்விரண்டும் உள்ளேயே சேர்ந்திருக்கின்றன என்று சொன்னார். ஹிருதயகமலம் அற்பமாக இருப்பதால் அதிலிருக்கிற ஆகாசத்துக்கு அற்பத்வம் கிடைத்தது. அதற்கு பிரசித்த ஆகாசத்தின் உபமானம் கொடுத்ததினால் அற்பத்வம் கொடுத்ததினால் அற்பத்வம் நீங்கிற்று, பூதாகாசமல்லவென்றும் சித்தித்தது என்பதாய் ஆசாரியார் சொன்னார்.

ஆகாசசப்தம் பூதகாசத்தைப் பிரசித்தமாய்க் கூறினாலும், அதற்கே அது திருஷ்டாந்தமாகாதபடியால் இவ்விடத்தில் தஹராகாசம் பூதாகாசமாகமாட்டாதா என்னும் சங்கை நிவிர்த்தியாய்விடுகிறது.

ஒரே ஆகாசத்துக்கு உள், வெளி என்று பேதம் கற்பிக்கிறதினால் உபமான உபமேயங்கள் சித்திக்கின்றனவென்று முன் பூர்வபக்ஷிசொன்னதானது யுக்தமன்று, வேறு வழியில்லாவிட்டால் ஒன்றிலேயே பேதத்தைக் கற்பிக்கவேண்டும். அப்படி பேதத்தை கற்பித்து உபமான உபமேயத்தை ஒப்புக்கொள்ளுகிறவர்களுக்கு ஹிருதயாகாசம் பரிச்சின்னமாய்ப் போய்விட்டபடியாலும் வெளி யாகாசம் எவ்வளவோ அவ்வளவாக இராதபடியாலும் உபமான உபமேயம் ஒத்துவரவில்லை.

ஆக்ஷேபம்:—ज्यायानाकाशात् (शत ब्रा-VI-3-2)என்பதினால் ஆகாசத்தைப்பார்க்கிலும்பரமேசுவரன்பெரியவரென்று சொல்லியிருப்பதால், உன்மதத்திலும் ஆகாசபரிமாணம் பொருந்தவில்லையே.

சமாதானம் :-பாதகமில்லை யாவான் என்கிற வாக்கியம் ஹிருதயகமலத்தால் வளைபட்டதென்பதால் விளங்கும் அற்பத்தை நிவிர்த்திக்கும் பொருட்டு பிரவிர்த்தித்திருக்கிறதேதவிர, அளவைக்கூறுவதற்காகப் பிரவிர்த்திக்கவில்லை.

ரா ஹிருதயாகாசத்தின் அற்பத்வமும்நீங்கி, அளவும் சித்திக்கட்டுமே எனின் வாக்கியம் பேதித்துப் போகும்.

(இது மீமாம்சா விருத்தம் II-1-46-47 பார்க்க)

ஆகையால் அற்பம் என்கிற பாவத்தை நிவிர்த்திப்பதிலேயே தாற்பரியம் என்பது கருத்து. (13)

ரா (இப்படி ஆகாச உபமானத்தால் தஹராகாசம் பூதாகாசமல்லவென்று சித்தித்தது. சுகலத்துக்கும் ஆசிரயம் முதலிய லிங்கங்களாலும் அப்படியே என்று இனி சொல்லுகிறார்)

ஹிருதய புண்டரீகத்திலிருக்கிற ஆகாசம் பாஹிய ஆகாசத்துக்கு வாஸ்தவத்தில் வேறாகாமலும், அதின் ஏகதேசமாயுமிருந்தால், அதற்குள் சுவர்க்கம் முதலியவைகள் அடங்கியிருக்கின்றனவென்று சொல்லக்கூடாது.

एष आत्मापहतपाप्मा विजरो विमृत्युर्विशोको विजिघत्सोऽपिपासः सत्यकामः सत्यसंकल्पः (छा-VIII-1-5)

என்கிற வாக்கியத்தில் ஆத்மா பாபமற்றவனென்றும், ஜராமிருத்யுவற்றவன் என்றும், சோகமற்றவன் என்றும், பசிதாகமற்றவன் என்றும், சத்தியகாமன், சத்திய சங்கற்பன் என்றும் சொல்லியிருப்பதால், இந்த குணங்கள் பூதாகாசத்தில் பொருந்தா (ஆகையால் ஹிருதயாகாசம் பூதாகாசமன்று)

ஆத்மசப்தம் ஜீவனுக்கு உபயோகப்பட்டாலும், இதரகாரணங்களால் ஆத்மசப்தம் ஜீவனைக்கூறுகிறதென்கிற சங்கை நிவிர்த்தியாகிறது. உபாதியால் வளைபட்டவனாயும், தார்முனைபோலுமிருக்கிற ஜீவனுக்கு ஹிருதயத்திலிருக்கிறான் என்பதால் ஏற்படும் அற்பத்தன்மையை நிவிர்த்திக்க முடியாது.

ஆ (ஏனெனின் ஹிருதயாகசத்துக்கு பூதாகாச திருஷ்டாந்தம் கொடுக்கப்பட்டிருக்கிறது. பூதாகாசமோ வியாபகம். இந்த வியாபகத்தன்மை ஜீவனுக்குச்

சம்பவிக்கமாட்டாது. ஆகையால் ஹிருதயாகாசம் ஜீவனல்ல.) பிரம்மத்துக்கும் ஜீவனுக்கும் பேதமில்லாததால் ஜீவன் சர்வவியாபகன், அப்படிபட்ட ஜீவன் தான் தஹராகாசம் என்று சொல்லுகிறோம் எனின் எதின் ஸ்வரூபமாயிருப்பதால் ஜீவன் சர்வவியாபகன் என்று சொல்லுகிறோமோ அந்த சர்வவியாபகமாயிருக்கிற பிரம்மமே சாக்ஷாத்தான ஹிருதயாகாசம் என்று சொல்லுவது யுக்தம். (14)

(பிரம்மபுரசப்தத்தால் ஜீவன் என்று அர்த்தமாகலாம் என்கிறவிடத்தில் இனிசொல்லுகிறார்)

பிரம்மபுரம் என்றால் ஜீவபுரம், ஒரு பட்டணத்துக்கு அரசன் சுவாமியாயிருந்து ஒரு இடத்தில் வசிக்கிறான். அதுபோல் ஜீவன் தேகத்தோடு சம்பந்தப்பட்டு தேகத்துக்கு சுவாமியாயும் (ஹிருதயமாகிற) ஒரு இடத்திலுமிருக்கிறான். ஆகையால் தஹராகாசம் ஜீவனாயிருக்கட்டுமே என்று முன் பூர்வபக்ஷி சொல்லிய விஷயத்தில் நாம் உத்தரம் சொல்லுகிறதாவது :-

பிரம்மசப்தம் பரப்பிரம்மத்தையே முக்கியமாய் கூறுமானதால் பரமான பிரம்மத்துக்கே இந்த சரீரம் புரமாயிருந்து சரீரம் பிரம்மபுரம் எனப்படுகின்றது. அந்த பரப்பிரம்மத்தை அறிய இந்த சரீரம் ஸ்தானமாயிருப்பதால் அதற்கும் இந்த புரத்துடன் சம்பந்தம் ஏற்படக்கூடும், பிரமாணவாக்கியம் :—

स एतस्माज्जीवघनात् परात् परं पुरिशयं पुरुषमीक्षते (प्र-V-5)

ஹிரணியகர்ப்பனைவிட பரனும் சரீரமாகிற பட்டணத்திலிருக்கிறவனாயுமிருக்கிற புருஷனை பார்க்கிறான்.

(2) स वा अयं पुरुषः सर्वासु पूर्षु पुरिशयः (बृ-II-5-18)

இந்த புருஷன் சர்வ சரீரங்களிலுமிருப்பதினால் புரிசயனாகிறான். (15)

(சரீரம் பிரம்மத்தை அறிய சாதகமாயிருப்பதால் பிரம்மபுரம் என்பது பிரம்மத்தின் புரம் என்றே அர்த்தம் செய்யப்பட்டது. இனி வேறு விதமாய் அர்த்தம் செய்கிறார்)

रा. (தேகத்தை बृहयति அன்னபானாதிகளால் விர்த்தி செய்வதால் பிரம்மசப்தம் ஜீவனை கூறுகிறது. ஆகவே பிரம்மபுரம்--ஜீவபுரம் அதில் ஹிருதயம் பிரம்மத்தின் ஸ்தானமாயிருக்கலாம், ஒரு அரசனுடைய பட்டணத்தில் ஒருவனுக்கு கிரகமிருப்பதுபோலும்.) சாலிக்கிராமத்தில் விஷ்ணு சன்னிஹிதராயிருப்பதுபோல் சரீரத்தில் பிரம்மம் சன்னிஹிதமாயிருக்கலாம். (ஆகையால் தஹராகாசம் பிரம்மம்தான். (16)

रा அனந்த பல லிங்கத்தாலும் தஹரம் பிரம்மம் என்று சொல்லுகிறார்.)

तद्यथेह कर्मचितो लोकः क्षीयते एवमेवामुत्र पुण्यचितो लोकः क्षीयते (छा-VIII-1-6)

(அதாவது இந்தலோகத்தில் கர்மத்தால் கிடைப்பதெல்லாம் நசித்துப்போனது போல் பரலோகத்திலும் புண்ணியத்தால் கிடைத்து நசித்துப்போகிறது.)

என்கிற சுருதியால் கர்மங்களின் பலன்களுக்கு முடிவுண்டென்பதைச் சொல்லி

अथ य इहात्मानमनुविद्य व्रजन्त्येतांश्च सत्यान् कामान् तेषां सर्वेषु लोकेषु कामचारो भवति

रा அதாவது கர்மபலத்தினின்றும் வைராக்கியமடைந்து ஜீவித்திருக்கும் போதே ஆத்மாவையும், ஆத்மாவை ஆசிரயித்த சத்தியகாமாதி குணங்களையும் ஆசாரியருடைய உபதேசத்தின் பேரில் தியானத்தால் அனுபவித்து எவர்கள் பரலோகத்தை அடைகிறார்களோ அவர்களுக்கு சகல லோகங்களிலும் அநந்த ஐசுவரியம் உண்டாகிறது

என்றுசொல்லி பிரகிருத தஹராகாசஞானத்தால் அநந்தபலன் உண்டாவதாக சொல்லுவது மூலமாக தஹரம் பரமாத்மாவென்பதை சூசிப்பிக்கிறது. (17)

3. தஹராகாசம் தேடத்தக்கதாகவாவது அறியத்தக்கதாகவாவது சுருதியிற் சொல்லப்படவில்லை அதற்குள்ளிருக்கிறதுதான் தேடத்தக்கது அறியத்தக்கது. என்று பூர்வபக்ஷி சொன்னவிஷயத்தில் நாம் சொல்லுகிறதாவது :—

ஆகாசமானது தேடத்தக்கதாக சொல்லப்படாவிட்டால்.

यावान् वा अयमाकाशस्तावानेषोऽन्तर्हृदय आकाशः (छा-VIII 1-3)

என்பதில் “இந்த பாஹிய ஆகாசம் எவ்வளவோ அவ்வளவு உள் ஹிருதயாகாசமிருக்கிறது” என்று சொல்லியதால் யாதொரு ஆகாசஸ்வரூபம் காண்பிக்கப்பட்டதோ அது பொருந்தாது.

तं चेद्ब्रूयुः यदिदमस्मिन् ब्रह्मपुरे दहरं पुंडरीकं वेश्म दहरोऽस्मिन्नन्तराकाशः किं तदत्र विद्यते यदन्वेष्टव्यं यद्वाव विजिज्ञासितव्यं (छा-VIII-1-1)

என்கிற சுருதியில் சிஷ்யர்கள் குருவை பார்த்து இந்த சரீரத்தில் ஹிருதயபுண்டரீகத்தில் அந்தராகாசமிருக்கிறதாக நீங்கள் சொல்லும் பக்ஷத்தில், அதில் தேடத்தக்கதாயும் அறியத்தக்கதாயும் என்ன இருக்கிறதென்று கேட்ட சமயத்தில் ஆகாசதிருஷ்டாந்தத்தைக்கொடுத்து சுவர்க்கம் பூமி முதலியவைகள் உள் இருக்கிறதாக குரு சொன்னதினால் தஹராகாசத்துக்குள் ஒருவஸ்து இருக்கிறதென்பதை காண்பிவிக்கும் பொருட்டு இந்த சுருதி ஆகாசஸ்வரூபத்தை காண்பிவிக்கிறதென்று பூர்வபக்ஷி சொன்னதானது யுக்தமன்று. அப்படியிருந்தால், உள்ளிருப்பதாக சொல்லப்பட்ட சுவர்க்கம், பூமி முதலியவைகள், தேடத்தக்கதென்றும் அறியத்தக்கதென்றும் சொன்னதாக ஆகும், அப்படி சொன்னால் பிந்தின வாக்கியம் பொருந்தவில்லை.

अस्मिन् कामाः समाहिताः एष आत्मा अपहतपाप्मा (छा-VIII-1-5)

(இதில் காமங்கள் அடங்கியிருக்கின்றன. இந்த ஆத்மா பாபமற்றவன்)

என்கிற சுருதியானது சுவர்க்காதிகளுக்கு ஆதாரமான பிரகிருத ஆகாசத்தை அனுசரித்து

अथ य इहात्मानमनुविद्य व्रजन्त्येतांश्च सत्यान् कामान् (छा-VIII-1-6)

என்பதினால் காமங்களுக்கு ஆதாரமான ஆத்மாவையும் அதை ஆசிரயத்திருக்கும் காமங்களையும் அறியத்தக்கதாக காண்பிவிக்கிறது (இப்படி பிந்தினவாக்கியம் ஆத்மபரமாயிருப்பதால் முந்தினவாக்கியமும் இதை அனுசரித்தேயிருக்கவேண்டும்.) ஆகையால் வாக்கியாரம்பத்திலேயும் ஹிருதயகமலத்திலிருக்கிற, உள்ளிருக்கிற பிருதிவிமுதலியவைகளுடனும், சத்தியகாமங்களுடனும் கூடியிருக்கிற தஹராகாசமே அறியத்தக்கதாக சொன்னதாக அறியவேண்டியது.

முன்சொன்னகாரணங்களால் தஹராகாசம் பரமேசுவரனே. (18)

1-3ல்-2-(15)வது சூத்திரம்.

## गतिशब्दाभ्यां तथा हि दृष्टं लिङ्गं च ।१५

ஸ 2. முந்தினசூத்திரத்துக்கும் இதற்கும் சம்பந்தம்:— முந்தினசூத்திரத்தில் தஹராகாசம் பிரம்மம் என்று சொல்லப்பட்டது. இதற்கே வேறுகாரணத்தை இதில் கூறுகிறார் (20)

3. பதவுரை:—

गतिशब्दाभ्यां அடைதல் என்னும் கிரியை என்ன பிரம்மலோகம் என்னும் சப்தம் என்ன இவைகளால்

(दहरः ब्रह्म एव=தஹரம் பிரம்மமே)

तथा हि = அப்படியே

दृष्टं = காணப்படுகிறது

लिंगं च = லிங்கமுமிருக்கிறது. (21)

4. பொழிப்புரை:—

அடைதல் என்னும் கிரியையாலும் பிரம்மலோக சப்தத்தாலும் தஹரம் பிரம்மமே. ஏனெனின் ஜீவர்கள் பிரம்மத்தை அடைவதாக இதரசுருதியில் சொல்லியதைப்பார்க்கிறோம். பிரம்மத்தை அடைதலே(பிரம்மலோக சப்தத்துக்குசரியான அர்த்தம் செய்யும்படியான ஒரு லிங்கம். (22)

5. பாஷ்யம்

கீழ்சொல்லப்போகிற காரணங்களால் தஹரம் பிரம்மம் என்று சொல்லப்பட்டது. அந்த காரணங்கள் இப்போது விவரிக்கப்படுகின்றன. பரமேசுவரனே தஹரம் ஏனெனின் தஹரவாக்கிய விசேஷத்தில் (அதாவது பிந்தின வாக்கியத்தில்) கமனம் பிரம்மலோகசப்தம் இவ்விரண்டும் பரமேசுவரனையே பொருந்துகின்றன.

माहुः सर्वाः प्रजाः अहरहर्गच्छन्त्य एवं ब्रह्मलोकं न विन्दन्ति (छा.VIII-3-2)

இந்த சகல ஜீவர்களும் பிரதிதினம் ஹிருதயத்திலிருக்கிற தஹரத்தை அதாவது பிரம்ம ஸ்வரூபத்தை சுஷுப்திகாலத்தில் அடைந்து ததாத்மாவாக இருந்து, அஞ்ஞானத்தால் மூடப்பட்டபடியால் பிரம்மத்தை அறிகிறதில்லை.

இந்த சுருதியானது பிரகிருத தஹரத்தை பிரம்மலோகசப்தத்தால் குறிப்பிட்டு, பிரஜாசப்தத்தால் கூறப்பட்ட ஜீவர்கள் அதினிடத்தில் செல்லுகிறார்கள் என்று சொல்லுகிறதாய் தஹரம் பிரம்மமென்றே காண்பிவிக்கிறது.

सता सोम्य तदा सम्पन्नो भवति (छा-VI-8-1)

(சுஷுப்தியில் சத்துடன் சேருகிறான்)

என்ற சுருதியும் இதர சுருதிகளும் சுஷுப்தி காலத்தில் பிரதிதினம் ஜீவர்கள் பிரம்மத்துடன் சேருவதை காட்டுகின்றன. பிரபஞ்சத்திலும் நன்றாக தூங்குகிறவனைப் பார்த்து ब्रह्मीभूतो ब्रह्मतां गतः பிரம்மமாய் விட்டான் பிரம்மத்தை அடைந்திருக்கிறான் என்று சொல்லுகிறார்கள்.

அப்படியே பிரகிருத தஹரவாக்கியத்தில் உபயோகிக்கப்பட்டிருக்கிற பிரம்மலோகசப்தமும் ஜீவசங்கையையும் பூதாகாசசங்கையையும் நிவிர்த்தித்து தஹராகாசம் பிரம்மமென்பதை அறிவிக்கிறது.

சதுர்முக பிரம்மலோகமும் பிரம்மலோகசப்தத்தால் கூறப்படலாமே எனின், கூறப்படலாம் பிரம்மத்தின் லோகம் என்று ஆறாம்வேற்றுமை அர்த்தம் செய்தால் பிரம்மமாகிற லோகம் என்று அர்த்தம் செய்தால் பரப்பிரம்மத்தையே பிரம்மலோகசப்தம் கூறும். இப்படி பிரதிதினம் பிரம்மத்தை அடைவதாகக்காணப்படுவதே பிரம்மலோகசப்தத்துக்கு பிரம்மமாகிற லோகம் என்று அர்த்தம் செய்வதில் லிங்கம். இந்த ஜீவர்கள் பிரதிதினம் காரிய பிரம்மலோகமாகிற சத்திய லோகத்தை அடைகிறார்கள் என்று சொல்லமுடியாது. (ஆகையால் தஹராகாசம் பிரம்மமே) (23)

रा च சூத்திரத்திலிருக்கிற சகாரம் இப்படி அர்த்தம் செய்வதற்கு நிஷாதஸ்தபதி என்னும் மீமாம் சாநியாயமிருக்கிறதென்பதைக் காட்டுகிறது. (24)

X. I-3-5ல் 3 (16)வது சூத்திரம்.

## धृतेश्च महिम्नोऽस्यास्मिन्नुपलब्धेः ।

रा 2. முந்தின சூத்திரத்துக்கும் இதற்கும் சம்பந்தம் :—முன் தஹரம் பிரம்மம் என்று கதிசப்தங்களால் சொல்லப்பட்டது. இப்போது சர்வஜகத்காரணலிங்கத்தாலும் தஹரம் பிரம்மம் என்று சொல்லப்படுகிறது. (26)

3. பதஉரை :—

धृतेः च தரிக்கிறதினாலேயும்

(दहरः परमात्मा தஹரம் பரமாத்மா)

अस्य இந்த

महिम्नः மஹிமை

अस्मिन् பரமாத்மாவினிடத்திலேயே

उपलब्धेः அறியப்பட்டிருக்கிறது. (27)

4. பொழிப்புரை :—

சகல ஜகத்தையும் தரிக்கிறதினால் தஹரம் பரமாத்மாவே, இப்படி தரிக்கும்படியான மஹிமையானது பரமாத்மாவினுடையது என்பது இதரசுருதிகளில் தெரியவருகிறது. (28)

5. பாஷ்யம் :—

धृतेः च தரித்தல் என்னும் காரணத்தாலும் இந்த தஹரம் பரமேசுவரனே.

रा अथ य आत्मा स सेतुर्विधृतिरेषां लोकानामसम्भेदाय (छा-VIII-4-1)

रा என்கிற இடத்தில் अथ சப்தம் கீழ்ப்பிரகரணத்தை வேறுபடுத்திக் காட்டுகிறபடியால் சுருதியிற் சொல்லிய தரித்தல் என்னும் லிங்கம் தஹரத்தைப் பொருந்தாது என்று ஒருவன் சங்கித்தால் दहरोऽस्मिन्नन्तराकाशः முதல் தஹரத்துக்கு ஆகாச உபமானம்கொடுத்து, அதில் சர்வமும் அடங்கியிருக்கிறதாகச்சொல்லி அதற்கே ஆத்மசப்தத்தைத் பிரயோகித்து, பாபமற்ற தன்மை முதலிய குணத்துடன் கூடியிருப்பதாக உபதேசித்து, அந்த பிரகரணம் முடியவில்லை என்பதை

अथ य आत्मा स सेतुर्विधृतिरेषां लोकानामसंभेदाय

(எது ஆத்மாவோ அதுசேது, லோகங்கள் பிரிந்து போகாமலிருக்கும்பொருட்டு அவைகளை தரிக்கிறது)

என்று சுருதி சொல்லுகிறது.

विधृतिः என்னும் பதம் ஆத்மபதம்போல் முதல் வேற்றுமையில் உபயோகிக்கப்பட்டிருப்பதால் தரிக்கிறவன் என்று அர்த்தம். எப்படி அணையானது வயல்கள் ஒன்றோடொன்று சேர்ந்துபோகாமலிருக்கும்படி ஓடுகிற பிரவாஹத்தைத் தடுக்கிறதோ அப்படி இந்த ஆத்மா ஆத்தியாத்மிகம் முதலிய லோகங்களும், வர்ணாசிரமங்களும் ஒன்றோடொன்று சேர்ந்து போகாமலிருக்கும்படி அணையாயிருக்கிறது. அப்படி இந்தப் பிரகிருத தஹரத்துக்கும் தரித்தல் என்னும் மஹிமை இருக்கிறதென்று சுருதிகாண்பிக்கிறது. இந்த மஹிமை பரமேசுவரனுடையதே என்பது

एतस्य वाक्षरस्य प्रशासने गार्गि सूर्याचन्द्रमसौ विधृतौ तिष्ठत (बृIII-8-9)

(இந்த அக்ஷரத்தினுடைய ஆஞ்ஞையில் சூரிய சந்திரர்கள் தரிக்கப்பட்டவர்களாய் இருக்கிறார்கள்)

முதலிய சுருதிகளால் தெரியவருகிறது. இப்படியே இதர நிச்சயமான பரமேசுவரவாக்கியத்திலும்

**एष सर्वेश्वर एष भूताधिपतिरेषभूतपाल एष सेतुर्विधारण एषां लोकानामसंभेदाय** (பி-IV-4-22)

ஈசுவரன் சேது என்றும் தரிக்கிறவன் என்றும் சொல்லியிருக்கிறது. ஆகவே தரித்தல் என்னும் காரணத்தாலும் தஹரம் பரமேசுவரனே. (29)

ர (சூத்திரத்தில் धृते च என்கிற இடத்திலிருக்கிற சகாரத்தால் சேதுபதத்தால் கூறப்பட்ட நியமனம் செய்தல் என்னும் லிங்கத்தையும் கிரகிக்கவேண்டியது இந்த நியமனம் एतस्य वा अस्य प्रशासने என்னும் மேற்சொல்லிய சுருதியில் தெரியவருகிறது). (30)

XI. 1-3-5 ல் 4 (17) வது சூத்திரம்.

## प्रसिद्धेश्च । १७ (31)

2. முந்தின சூத்திரத்துக்கும் இதற்கும் சம்பந்தம்:—தஹரம் பரமாத்மா வென்பதற்கு வேறுகாரணம் சொல்லப்படுகிறது. (32)

3. பதஉரை:—

प्रसिद्धेः च பிரசித்தியாலும் (33)

4. பொழிப்புரை:—

ஆகாசசப்தம் பரமேசுவரனைப் பிரசித்தமாய்க் கூறுவதாலும் தஹரம் பரமேசுவரனே. (34)

5. பாஷ்யம்:—

ஹிருதயபுண்டரீகத்திலிருக்கிற தஹரமான ஆகாசம் இப்போது சொல்லப்போகிறகாரணத்தாலும் பரமேசுவரனே. அந்தக்காரணம் யாதெனின், ஆகாசசப்தம் பரமேசுவரனிடத்தில் பிரசித்தமாய் உபயோகப்பட்டதாக

**आकाशो वै नामरूपयोर्निवहिता** (சா-VIII-24-7)

(ஆகாசம் நாமரூபங்களைச் செய்கிறது)

**सर्वाणि ह वा इमानि भूतान्याकाशादेव समुत्पद्यन्ते** (சா-I-9-1)

(இந்த சகலபூதங்களும்ஆகாசத்திலிருந்தே உண்டாகின்றன)

முதலிய சுருதிகளில் தெரியவருகிறது. ஜீவவிஷயத்தில் ஆகாசசப்தம் பிரயோகிக்கப்பட்டதாக எங்கும் தெரியவில்லை.

ஆகாசசப்தம் பூதாகாசத்தை பிரசித்தமாய்க் கூறினாலும், உபமான உபமேயபாவங்கள் சித்திக்காதபடியால், ஆகாசசப்தம் பூதாகாசத்தைக் கூறமாட்டாது என்று சொல்லப்பட்டது.

ர (आकाश=आ (समन्तात्) काशते (दीप्यते)=आकाश:

அதாவது எங்கும் பிரகாசிக்கிறது. ஸ்வயம் ஜோதிஸ். இப்படிப்பட்ட பிரம்மத்தை ஆகாசசப்தம் கூறலாம். அல்லது எங்கும் வியாபிக்கிறதென்கிற குணத்தால் கூறலாம்.) (35)

I-3-5 ல் 5 (18) வது சூத்திரம்.

## इतर परामर्शात् स इति चेन्नासम्भवात्

2. முந்தின சூத்திரத்துக்கும் இதற்கும் சம்பந்தம்:—முன் ஆகாசசப்தம் பூதாகாசத்தைக் கூறமாட்டாது என்று சொல்லப்பட்டது. இப்போது அது ஜீவனையுமிருக்கமாட்டாது என்று சொல்லுகிறார். (37)

3. பதஉரை:—

इतरपरामर्शात् வேறு (ஜீவன்) சொல்லப்பட்டிருப்பதால்

सः அவன் (தஹராகாசம் ஜீவன்)

इति चेत् என்று சொன்னால்

न இல்லை.

असम्भवात् சம்பவிக்காதபடியால். (38)

4. பொழிப்புரை:—

வாக்கியசேஷத்தில் ஜீவனைப்பற்றிச் சொல்லியிருப்பதால் தஹராகாசம் ஜீவனைத்தான்கூறுகிறது என்று சொன்னால் அது சரியன்று. ஏனெனின் ஆகாச உபமானம் முதலியவைகளுக்கு பொருத்தமில்லை. (39)

5. பாஷ்யம்:—

(1) इतर....चेत्:- ர (இந்த ஆத்மா பாபமற்றவன் என்கிற) வாக்கிய சேஷபலத்தால் தஹராகாசம் பரமேசுவரனல்ல என்று சொன்னால்,

**अथ य एष सम्प्रसादोऽस्माच्छरीरात् समुत्थाय परं ज्योतिरुपसम्पद्य स्वेन रूपेणाभिनिष्पद्यते एष आत्मेति होवाच** (சா-VIII-3-4)

என்கிற வாக்கியசேஷத்தில் ஜீவனைப்பற்றியும் சொல்லியிருக்கிறது. (சுருதியின் அர்த்தம்)

ஏ (இந்த ஜீவன் சரீரத்தைவிட்டு அர்ச்சிராதி மார்க்கத்தில் சூரியாதிகளை அடைந்து பிரம்மலோகத்துக்குரிய சத்தியகாமத்வாதிரூபத்தை அடைகிறான். இந்த வாக்கியம் ஜீவவிஷயம் என்று சித்தித்தது. இதற்குப் பிறகுவரும் एष आत्मेति होवाच என்கிற வாக்கியத்தால் அவனே அபஹதபாப்மத்துவாதிரூப ஆத்மா என்று சொல்லப்படுகிறது. இப்படி வசனத்தினாலேயே தஹராகாசரூப ஆத்மா ஜீவன் என்று சித்தமானவளவில் द्यावापृथिव्यादि களால் பிரம்மலோகத்திலுள்ள சிலபதார்த்தங்களைமட்டும் கிரகிக்கவேண்டியது. இதில் தோஷமில்லை. சத்தியகாமத்துக்குப் போக சமர்த்தர்களானபிதிர்க்கள் என்றும்சத்தியசங்கல்பத்துக்குப் போக சாதனமானசங்கல்பம் என்றும் அர்த்தம் செய்யவேண்டியது. ஆகவே பிரம்மலோகத்தில் கிடைக்கும் உபாசகனுடைய ஸ்வரூபமே உபாதியும் என்பதாய் ஆகாசபதத்தால் அறியவேண்டியது.)

மேற்படி சுருதியில் சம்பிரசாத சப்தம் வேறு (संप्रसादेरत्वां) என்கிற சுருதியால் சுஷுப்தி அவஸ்தையைக் கூறுகிறது. ஆகையால் அது அவஸ்தையுடன்கூடின ஜீவனைக் கூறுமேதவிர வேறு ஒன்றைக் கூறமாட்டாது. அப்படியே சரீரத்தை ஆசிரயித்திருக்கிற ஜீவன் சரீரத்தைவிட்டு வெளியே போகவும் முடியும்.

ரா (எப்படி அவஸ்தானம் ஜீவலிங்கமோ அப்படி வெளிக்கிளம்புவதும் ஜீவலிங்கம்.) எப்படி ஆகாசத்தை ஆசிரயித்துக்கொண்டிருக்கிற வாயுமுதலியவைகள் ஆகாசத்தினின்றும் வெளிக்கிளம்புவதுபோல் ஜீவனும் சரீரத்தை ஆசிரயித்து அதைவிட்டு வெளிக்கிளம்புகிறான்.

பிரபஞ்சத்தில் ஆத்மசப்தம் பரமேசுவரனைக் கூறிவிட்டாலும்,

## आकाशो वै नामरूपयोर्निर्वहिता

முதலிய இடங்களில் நாமரூபங்களைச் செய்கிறதாகிய ஈசுவரதர்மம் ஆகாசபதத்துடன் சேர்த்துச் சொல்லப்படுவதால், ஆகாசசப்தம் பரமேசுவரனைக் கூறுகிறது. இதுபோல் ஜீவதர்மங்கள் தஹராகாசப் பிரகரணத்தில் சொல்லியிருப்பதால் தஹராகாசம் ஜீவனைக்கூறும். ஆகையால் வேறு (ஜீவனை) ஒன்றை சொல்லுகிறபடியால் दहरोस्मिन्नन्तर आकाशः என்கிற இடத்தில் ஜீவனே கூறப்பட்டிருக்கிறான் என்று சொல்லும் பக்ஷத்தில் (41)

(உ) न असंभवात् இது அப்படியல்ல. ஏனெனின் புத்தி முதலிய உபாதிகளால் பரிச்சின்னனாக நினைக்கிறஜீவன் ஆகாச உபமானத்தை அடையமாட்டான். உபாதிதர்மங்களை தன்னுடைய தர்மங்களாக நினைக்கிறவன் பாபமற்றவனாக ஆகமாட்டான். दहर उत्तरेभ्यः என்கிற முதல் சூத்திரத்தில் இது விவரிக்கப்பட்டிருக்கிறது. ஆயினும் இனி அடுத்துவரும் சூத்திரத்தில் அதிக சங்கைவரப்போகிறது அதை நிவிர்த்திக்கும்பொருட்டு இப்போதும் சொல்லப்பட்டது.

एष संप्रसादः என்பதால் ஜீவனைப்பற்றிச் சொல்லியிருக்கிறதேனெனின் अन्यार्थश्च परामर्शः என்கிற (1-3-20-வது சூத்திரத்தில்) இந்த வாக்கியத்தின் கருத்தைச்சொல்லப் போகிறார். (42)

### I-3-5ல் 6 (19)வது சூத்திரம்.

## उत्तराच्चेदाविर्भूतस्वरूपस्तु । १९ 43

2. முந்தின சூத்திரத்துக்கும் இதற்கும் சம்பந்தம் :- முந்தின சூத்திரத்தில் असंभवात् என்கிற காரணத்தால் தஹரம் ஜீவனாகமாட்டாது என்றுநிச்சயிக்கப்பட்டது. இப்போது ஜீவனாயிருக்கட்டுமே என்று சங்கையைக் கிளப்பிப் பரிஹரிக்கிறார் (44)

3. பத உரை :—

उत्तराचेत् கீழ்வாக்கியத்தில் ஜீவன்தான் கூறப்பட்டதாக சொல்லும் பக்ஷத்தில்.

तु அதுசரியல்ல

आविर्भूतस्वरूपः வியக்தமான பாரமார்த்திக ஸ்வரூபம் (சொல்லப்பட்டிருக்கிறது) (45)

4. பொழிப்புரை :—

அடியில்வரும் பிரஜாபதிவாக்கியத்தால் ஜீவன்தான் (தஹரத்தால்) கூறப்பட்டதாக சொல்லும் பக்ஷத்தில், அது அப்படியல்ல, ஜீவனுடைய பாரமார்த்திகரூபம்தான் அவ்விடத்தில் நிரூபிக்கப்பட்டிருக்கிறது. (46)

5. பாஷ்யம் :—

1. उत्तराचेत् इतरपरामर्शात् அதாவது "வேறு ஒன்றைச்சொல்லியிருப்பதால்" என்பதால் தஹரம் ஜீவனாயிருக்கட்டுமே என்று யாதொரு சங்கை ஜனித்ததோ அது

असंभवात् என்பதால் நிராகரிக்கப்பட்டது. இறந்து போனவன்பேரில் அமிருதத்தைத் தெளிக்கிறதினால் அவன் மறுபடியும் எழுந்திருக்கிறதுபோல், நிராகரிக்கப்பட்ட ஜீவசங்கையும் கீழ்வரும் பிரஜாபதிவாக்கிய பலத்தால் மறுபடியும் கிளம்புகிறது (ர ஏனெனின் ஜீவனுக்கே அபஹதபாப்மத்துவாதிகள் பொருந்துமாகையால் அசம்பவம் என்கிற காரணமில்லாமல் போய்விட்டது) எப்படியெனின் :—

य आत्मा अपहतपाप्मा (छा-VIII-7-1)

என்கிறதினால் பாபமற்ற முதலிய குணங்களுடன் கூடிய ஆத்மா தேடத்தக்கது அறியத்தக்கது என்று சொல்லி, பிறகு

य एषोऽक्षिणि पुरुषो दृश्यते एष आत्मा

கண்ணில்காணப்பட்ட புருஷன் ஆத்மா (छा VIII-7-3) என்கிறவாக்கியத்தில் கண்ணில்காணப்படுகிற புருஷன் அதாவது ஜீவன் ஆத்மா என்றுசொல்லி

एतं त्वेव ते भूयोऽनुव्याख्यास्यामि

அவனைப்பற்றி மறுபடியும் உனக்குச் சொல்லுகிறேன் (छा-VIII-9-3, VIII-10-4) என்கிற வாக்கியத்தில் அவனைப்பற்றியே மறுபடியும் மறுபடியும் சொல்லி,

य एष स्वप्ने महीयमानश्चरत्येष आत्मा

(எவன் ஸ்வப்நத்தில் சுகமாய்த் திரிகிறானோ அவன் ஆத்மா) (छा-VIII-10-1)

तद्यत्रैतत् सुप्तः समस्तः सम्पन्नः स्वप्नं न विजानात्येष आत्मा

எவன் நன்றாகத் தூங்கி இந்திரிய வியாபாரங்களற்று ஆகையால் பிரசன்னமாகி ஸ்வப்நத்தைப் பார்க்கவில்லையோ அவன் ஆத்மா) (छा-VIII-11-1)

என்கிற வாக்கியங்களில் அநேக அவஸ்தைகளில் சம்பந்தப்பட்டவன் ஜீவனே என்று சுருதி சொல்லுகிறது.

एतदमृतमभयमेतत् ब्रह्म

இது அமிருதம், அபயம், பிரம்மம் (छा-IV-15-1) என்கிற வாக்கியத்தில் ஜீவன் பாபமற்ற முதலிய குணமுடையவன் என்று சுருதி காட்டுகிறது.

(மேற்படி சுருதிவசனங்கள் பிரஜாபதியை இந்திரனும் விரோசனனும் கேட்டசமயத்தில் பிரஜாபதியால் சொன்னவை. சுவப்நத்தை அறியாதவனே ஆத்மா என்று முன்சொன்னதைக் கேட்டுத் துக்கப்பட்டு இந்திரன்

नाह खल्वयमेवं सम्प्रत्यात्मानं जानात्ययमहमस्मीति नो एवेमानि भूतानि (छा-VIII-11-2)

தூங்குகிற மனிதன் சுஷுப்தி அவஸ்தையில் இந்த தேவதத்தன் நான் என்பதாய் அறியவில்லை. இந்த பூதங்களையும் அறியவில்லை என்று சுஷுப்தி அவஸ்தையில் தோஷத்தைச் சொல்ல பிரஜாபதியானவர்

एतं त्वेव ते भूयोऽनुव्याख्यास्यामि नो एवान्यत्रैतस्मात्

உனக்கு மறுபடியும் சொல்லுகிறேன். இதற்கு மேல் ஒன்றுமில்லை

என்றுசொல்லி, ஜீவனுக்கு சரீரசம்பந்தத்தை நிந்தித்து

एष संप्रसादोऽस्मात् शरीरात् समुत्थाय परं ज्योतिरुपसंपद्य स्वेन रूपेण अभिनिष्पद्यते स उत्तमः पुरुषः

என்பதால் இந்த ஜீவன் இந்த சரீரத்தினின்றும் வெளிக்கிளம்பி, பரஞ்சோதியை அடைந்து தன்னுடைய ஸ்வரூபத்துடன் காணப்படுகிறான். அவன் உத்தமமான புருஷன்

என்றுசொல்லி சரீரத்தினின்றும் வெளிப்பட்ட ஜீவனே உத்தமபுருஷன் என்று காட்டுகிறார்.

ஆகையால் பரமேசுவர தர்மங்கள் ஜீவனிடத்தில் பொருந்துகின்றன. ஆகவே தஹராகாசத்தால் ஜீவன் தான் கூறப்படுகிறான். இப்படி ஒருவன் சொன்னானேயானால் அவனுக்கு (47)

(2) आविर्भूतस्वरूपस्तु

என்று உத்தரம் சொல்லுகிறோம்.

तु இந்த சப்தம் முந்தின கக்ஷியைவிலக்குகிறது. உத்தரவாக்கியத்தாலும் இவ்விடத்தில் தஹராகாசத்தால் ஜீவனை அறியலாம் என்பதாய் சங்கை உண்டாகவில்லை என்பது கருத்து. ஏனெனின் அவ்விடத்திலும் ஆவிர்பூதஸ்வரூபனான ஜீவனே கூறப்பட்டிருக்கிறான்.

आविर्भूतस्वरूपः =आविर्भूतं + स्वरूपं + अस्य इति = आविर्भूतस्वरूपः
அதாவது எவனுடைய ஸ்வரூபம் பிரகாசமாகிறதோ அவன்

ए (அவஸ்தாத்திரயங்களை சோதிக்கிறதினால் ஜீவனுடைய அஞ்ஞானம் நிவிர்த்தியாய்விடுகிறதே, ஞானம் வந்தபின் ஜீவன் என்று எப்படி சொல்லலாம் எனின் ஞானத்துக்குமுன் அவித்தியாப்பிரதிபிம்பனுகை இருப்பதால் ஜீவன் என்கிற பெயர் ஏற்பட்டாலும், ஞானத்துக்குப்பிறகு அவன் பிரம்மரூபமாகியும்) முந்தின பெயரை அனுசரித்தே இப்போதும் ஜீவன் என்று பெயர் விளங்குகிறது.

மேற்சொன்னதற்குக் கருத்து அடியில் வருமாறு:-

ए அபஹதபாப்மத்வாதி குணங்களுடன் கூடின ஆத்மாவைச் சொல்லும் என்று பிரஜாபதியைப்பார்த்து இந்திரனும் விரோசனனும் கேட்க கண்ணில்காணப்படுகிற புருஷன் ஆத்மாவென்று பிரஜாபதி சொன்னார். இதைக்கேட்டுக்கொண்டு அவர்கள் போய்விட்டார்கள். பிறகு ஜலத்திலும் கண்ணாடியிலும் பிரதிபிம்பத்தைக்கண்டு மறுபடியும் பிரஜாபதியிடம் வந்து பிரதிபிம்பம் யார் என்றுகேட்க பிரஜாபதி அதுவும் ஆத்மாதான் என்றுசொன்னார். பிரஜாபதியின் கருத்து இவைகளைப் பிரேரணைசெய்கிறவன் ஆத்மாவென்பதாம். இந்திரனும் விரோசனனும் கிரஹித்தது பிரதிபிம்பமே ஆத்மாவென்பதாம். இப்படி இவர்கள் விபரீதமாய்க் கிரகித்ததை அறிந்து இவர்களுக்குச் சரியான கருத்துத்தோற்றும்பொருட்டு ஒரு சாலில் ஜலத்தைவைத்து அதில் பார்த்து உங்களுக்குத் தெரியாததைச் சொல்லுங்களென்றார். அப்போதும் பிரதிபிம்பத்தையே ஆத்மாவாக அவர்கள் பாவித்தார்கள். பிறகு அலங்காரம் பண்ணிக்கொண்டு பிரதிபிம்பத்தைப் பார்க்கச்சொன்னார். பிரஜாபதியின் கருத்து சரீரம் இருக்கும்போது பிரதிபிம்பமிருக்கிறது. இல்லாதபோது இல்லை. ஆகையால் சரீரம் ஆத்மாவல்லவென்று அவர்கள் தெரிந்துகொள்ளவேண்டுமென்பதாம். இந்த அபிப்ராயத்தை அறியாமல் விரோசனன் தேகத்தை அனுசரித்து பிரதிபிம்பம் உண்டாவதால் தேகமே ஆத்மாவென்று பாவித்து புறப்பட்டுப்போய்விட்டான். இந்திரன் பிரதிபிம்பமே ஆத்மாவென்று மறுபடியும் பாவித்தான். இப்போதும் பிரஜாபதி பொதுவாய் "இவன் ஆத்மா இது அமிருதம், அபயம், பிரம்மம்" என்றுசொன்னார். அவர்கருத்து என்னவெனின் முன்பின் வாக்கியங்களை இந்திரன் பரியாலோசனைசெய்து தான்கிரகித்த அர்த்தத்தில் விரோதத்தைக்கண்டு தானே நம்முடையகருத்தைத்தெரிந்து கொள்ளட்டும், அல்லது நம்மிடம் வரட்டும். அப்போது செவ்வையாய் போதிப்போம் என்பதாம். அப்படியே இந்திரன் பிரதிபிம்பத்தில் தோஷத்தைக்கண்டு பிரஜாபதியினிடம்வர, एतं त्वेव ते என்கிற வாக்கியத்தால் இவனைப்பற்றியே விவரிக்கிறேன் என்று அடிக்கடி சொல்லி, பிறகு ஒவ்வொரு அவஸ்தையிலும் காணப்படுகிறவன் ஆத்மாவென்று தனித்தனியாய்ச்சொல்லி, ஒவ்வொரு அவஸ்தையிலும் இந்திரன் தோஷம் கண்டவுடன் கடைசியில் परं ज्योतिरुपसम्पद्य स्वेनरूपेणाभिनिष्पद्यते

என்பதாய் இவனுடைய பார்மார்த்திகமான ஸ்வரூபம் அதாவது பிரம்மஸ்வரூபம் யாதொன்று உண்டோ அந்த ரூபமாய் ஜீவனைச் சொன்னாரேதவிர ஜீவரூபமாய்ச் சொல்லவில்லை. அடையத்தக்கதாகச் சொல்லிய பரஞ்ஜோதியானது பரப்பிரம்மமே. அது அபஹதபாப்மத்வாதி குணமுள்ளது. அதுவே தத்வமஸி முதலிய சாஸ்திரங்களால் விளங்கும் ஜீவனுடைய பாரமார்த்திகமான ஸ்வரூபம். உபாதியால் கற்பிக்கப்பட்ட ஸ்வரூபம் பாரமார்த்திகமல்ல. எதுவரையில் கட்டையில் கள்ளன் என்கிறபுத்தியைபோல் துவைதஸ்வரூபமான அவித்தையை நிவர்த்தித்து கூடஸ்தனையும் நித்தியஞானஸ்வரூபமாயுமிருக்கிற பிரம்மமே நான் என்பதாய் அறியவில்லையோ அதுவரையில் ஜீவனுக்கு ஜீவத்தன்மையிருக்கிறது. எப்போது தேகம், இந்திரியம், மனது, புத்தி இவைகளின் கூட்டத்தி(சேர்க்கையி)னின்றும் வெளிக்கிளம்பி "நீ தேகேந்திரிய மனோபுத்திகளின் சங்காதமன்று சம்சாரியன்று. எது சத்தியமோ அது ஆத்மா. சைதன்யமாத்திரஸ்வரூபம். அது நீ" என்பதாய் சுருதியானது போதிக்கிறதோ அப்போது கூடஸ்தனையும் நித்தியஞானஸ்வரூபனையுமிருக்கிற ஆத்மாவை அறிந்து, இந்த சரீரம் முதலியவைகளின் அபிமானத்தினின்றும் வெளிப்பட்டு அவனே கூடஸ்தனையும், நித்தியஞானஸ்வரூபனையுமிருக்கிற ஆத்மாவாக ஆகிறான்

स यो ह वै तत् परमं ब्रह्म वेद ब्रह्मैव भवति

(எவன் பிரம்மத்தை அறிகிறானோ அவன் பிரம்மமாகவே ஆகிறான்) முதலிய சுருதிகள் பிரமாணங்கள். சரீரத்தினின்றும் வெளிக்கிளம்பி எந்த ரூபத்துடன் விளங்குகிறானோ அதுவே இவனுடைய பாரமார்த்திகஸ்வரூபம். (48)

(3) ஆக்ஷேபம்:—கூடஸ்தனையும் நித்தியனையுமிருக்கிறவனுக்கு நிஜமானரூபத்தை பிரஸ்தாபித்து அந்த நிஜமானரூபத்தை அடைகிறான் என்று எப்படி சொல்லலாம். பொன் வெள்ளி முதலிய இதரபதார்த்தத்துடன் சம்பந்தப்பட்டால் அதின்

ஸ்வரூபம் மறைந்துபோகிறது. பிறகு உப்பு முதலிய வைகளின் பிரயோகத்தால் புடத்தில் சோதிக்கப்பட்டவுடன் அதின் ஸ்வரூபம் விளங்குகிறது. அப்படியே பகலில் நக்ஷத்திரம் முதலியவைகளின் பிரகாசம் சூரிய தேஜஸால் மறைபட்டுப்போகிறது. இரவில் மறைக்கும் காரணமிராதபடியால் அவைகளின் நிஜமான ரூபம் காணப்படுகிறது. அப்படி நித்தியமான தேஜோரூப ஆத்மசைதன்னியத்துக்கு ஒன்றினாலும் மறைவு ஏற்படுகிறதில்லை, ஏனெனில் அது ஆகாசம் போல் ஒன்றுடனும் சம்பந்தப்படமாட்டாது, மேலும் பிரத்தியக்ஷத்துக்கும் விரோதம் வரும். எப்படியெனின் பார்த்தல், கேட்கல், கவனித்துப்பார்த்தல், அறிதல் இவைகள் ஜீவனுடைய ஸ்வரூபம். இது சரீரத்தினின்றும் வெளிக்கிளம்பாத ஜீவனுக்கும் எப்போதுமிருக்கிறதாக காணப்படுகிறது. சமஸ்தமான ஜீவர்களும் பார்த்தும், கேட்டும், கவனித்தும், அறிந்தும் வியவஹரிக்கிறார்கள். வேறுவிதமாய் வியவஹாரம் ஏற்படுகிறதில்லை. சரீரத்தினின்றும் வெளிக்கிளம்பின ஜீவனுக்குத்தான் ஸ்வரூபம் விளங்குகிறதாயிருந்தால், வெளிக்கிளம்பாததற்குமுன் காணப்பட்ட வியவஹாரம் விரோதப்படும். ஆகையால் சரீரத்தினின்றும் வெளிக்கிளம்புதல் என்பது என்ன? ஸ்வரூபத்தை அடைவது என்பதென்ன? (49)

(4) இதற்கு உத்தரம்:-(அ)விவேசனையால் ஞானமுண்டாகும் முன் ஜீவனுடைய ஜோதிஸ்வரூபம், சரீரம், இந்திரியம் மனது, புத்தி, விஷயங்கள், சுகதுக்கம் ஆகிய உபாதிகளினின்றும் பிரிபடாததுபோலும், பார்த்தல் முதலிய கிரியைகளுடன் கூடினதுபோலும் இருக்கிறது. திருஷ்டாந்தம்:-சுத்தஸ்படிகத்தின் ஸ்வரூபம் நிர்மலமாயும் வெண்மையாயுமிருக்கிறது. அதற்கு சமீபத்தில் சிகப்பு அல்லது நீல பதார்த்தம் வைக்கப்பட்டால் இந்த வர்ணம் அதில் காணப்படுகிறது. விவேசனைசெய்து பார்க்கும்முன் ஸ்படிகத்தின் வர்ணம் சிகப்பு அல்லது நீலம்போலவே தோன்றுகிறது (பிரத்தியக்ஷாதி) பிரமாணத்தால் விவேசனைசெய்து பார்த்தவளவில் ஸ்படிகம் தன்னுடைய சுத்த வெண்மையான ரூபத்தை முன்னமேயே அடைந்திருந்தாலும் இப்போது அடைகிறதுபோலிருக்கிறது அப்படியே தேகாதி உபாதிகளினின்றும் விவேகத்தால் பிரிபடாத ஜீவனுக்கு சுருதியால் ஏற்படும் விவேக ஞானம் சரீரத்தினின்றும் வெளிக்கிளம்புதலாம். விவேகவிஞ்ஞானத்தின் பலன் ஸ்வரூபத்தை அடைதல் அதாவது தன் ஸ்வரூபம் சுத்த ஆத்மாவென்பதை அறிதல். ஆகவே விவேகத்தாலும் அவிவேகத்தாலும் மட்டும் ஆத்மாவுக்கு சரீரமில்லாமையும் சரீரமும் ஏற்படுகிறது. பிரமாணவசனங்கள் :—(1) கடோபநிஷத்தில் 1-2-22-ல் अशरीरं शरीरेषु என்பதினால் சரீரத்திற்குள் சரீரமற்ற ஜீவன் இருக்கிறான் என்று சொல்லியிருக்கிறது. இதனால் அசரீரத்வம் ஏற்படுகிறது. இருக்கிறான் என்று சொன்னதினால் சரீரத்வமும் ஏற்படுகிறது. இது அவிவேகத்தால்மட்டும் கற்பிக்கப்பட்டது.

(2) शरीरस्थोऽपि कौन्तेय न करोति न लिप्यते

என்று கீதையில் சொல்லியிருக்கிறது.

ஏ (தன்னுடைய கர்மத்தால் சரீரம் ஏற்பட்டிருக்க அதில் போகங்களை போகித்தே தீரவேண்டுமே. எப்படி ஜீவிக்கும்போதே ஸ்வரூபசித்தி யாகுமெனின்) சரீரத்திலிருந்தாலும் அவன் வாஸ்தவத்தில் ஒன்றும் செய்கிறதில்லை ஒன்றுடனும் பற்றுதலடைகிறதில்லை ஆகையால்சரீரத்வம் அசரீரத்வமென்கிற விசேஷணங்கள் ஜீவனுக்கு ஏற்படவில்லை ஆகையால் விவேக விஞ்ஞானமில்லாததினால் ஸ்வரூபம் காணப்படவில்லை என்றும்விவேக விஞ்ஞானத்தால் ஸ்வரூபம் காணப்படுகிறதென்றும் சொல்லப்படுகின்றது. ஸ்வரூபம் எப்போதும் ஒரேவிதமாயிருப்பதால் ஸ்வரூபம் வேறுவிதமாய்க் காணப்படுகிறது என்றாவது காணப்படவில்லை என்றாவது ஏற்படமாட்டாது. இவ்விதமாய் ஜீவனுக்கும் பரமேசுவரனுக்கும் பேதம் மித்தியாஞானத்தால் ஏற்படுகிறதேதவிரவாஸ்தவஞானத்தால் ஏற்படவில்லை. இருவர்களும் ஆகாசம்போல் ஒன்றுடனும் சம்பந்தப்படாதவர்கள். (50)

(b) ஆ (சுருதி யுக்தியால் ஜீவப்பிரம்ம பேதம் மித்தை என்று சொல்லப்பட்டது இப்போது பிரஜாபதி வாக்கியத்தாலும் அதையே நிரூபிக்கிறார்.)

என்ன காரணத்தினால் இப்படி அறியத்தக்கது? பிரஜாபதியானவர்.

य एषोऽक्षिणि पुरुष दृश्यते तदमृतमभयमेतत् ब्रह्म

அதாவது எந்த புருஷன் கண்ணில் காணப்படுகிறானோ அவன் அமிருதன், பாபமற்றவன், பிரம்மம்

என்பதாய் உபதேசித்தார். எவன் கண்ணில் பிரசித்தமான திர்ஷ்டாவாகக் காணப்படுகிறானோ அவன் அமிர்தமாயும் அபயமாயுமிருக்கிற பிரம்மத்தைவிட வேறாக இருந்தால், அப்போது அவன் அமிருத அபயமான பிரம்மத்துடன் ஒன்றாகச் சொல்லப்படமாட்

டான், கண்ணில் காணப்படும் பிரதிபிம்பமும் அக்ஷி புருஷன் அல்ல. ஏனெனின் அப்படியிருந்தால் பிரஜாபதி பொய்சொன்னவராவார்.

இரண்டாவது பிரிவில்,

**एतं त्वेव ते भूयोऽनुव्याख्यास्यामि**

(இவனையே மறுபடியும் உனக்குச் சொல்லுகிறேன்) என்று ஆரம்பித்திருப்பதால்

**य एष स्वप्ने महीयमानश्चरति**

(எவன் ஸ்வப்நத்தால் சுகமாய் சஞ்சரிக்கிறானோ) என்பதினால் முதல் பிரிவில் குறிப்பிட்ட அக்ஷிபுருஷனைவிட வேறானவன் கூறப்படவில்லை. மேலும் நான் ஸ்வப்நத்தில்யானையைப்பார்த்தேன்இப்போது அதைப் பார்க்கவில்லை என்பதாய் விழித்துக்கொண்டபின் பார்த்தபதார்த்தமில்லை என்று சொல்லுகிறான். ஸ்வப்நத்தைபார்த்த தான்தான் ஜாக்கிரத்தையும் பார்க்கிறதாக அறிகிறான்.

மூன்றாவது பிரிவில்:—

**नाहं खल्वयमेवं सम्प्रत्यात्मानं जानात्ययमहस्मीति नो एवेमानि भूतानि**

என்கிற சுருதியில் தான் இருக்கிறதாக தன்னையும் தெரிந்துகொள்ளவில்லை, இந்தப் பிராணிகளையும் தெரிந்துகொள்ளவில்லை என்று சொல்லியிருப்பதால் சுருதியானது சுஷுப்தியில் விசேஷ ஞானமில்லை என்று காண்பிவிக்கிறதேதவிர, ஞாதா இல்லை என்று நிஷேதிக்கவில்லை.

तत्र विनाशमेवापीतो भवति அதாவது சுஷுப்திகாலத்தில் விநாசத்தை அடைந்துவிடுவதாக சுருதி சொல்லியிருப்பதும், விசேஷ ஞானநாசமிருக்கிறதென்கிற அபிப்ராயத்தாலே ஒழிய ஞாதாவே நாசமாய்விடுகிறான் என்கிற அபிப்பிராயத்தாலல்ல. பிரஹதாரணியகம் IV-3-30ல்

**नहि विज्ञातुर्विज्ञातेर्विपरिलोपो विद्यते अविनाशित्वात्**

அதாவது ஞாதாவின் ஞானத்துக்கு நாசமில்லை, ஏனெனின் அநித்தியம் என்று சொல்லியிருக்கிறது. அப்படியே நான்காவது பிரிவிலும்.

**एतं त्वेव ते भूयोऽनुव्याख्यास्यामि नो एवान्यत्रैतस्मात्**

"இவனைப்பற்றியே உனக்கு மறுபடியும் சொல்லுகிறேன், இவனைவிட வேறானவனில்லை" என்று ஆரம்பித்து मघवन्मर्त्यं वा इदं शरीरं (இந்திரனே இச்சரீரம்சிக்கத்தகுந்தது) முதலியதால் சரீரம் முதலிய உபாதிகளை நிஷேதித்து சம்பிரசாத சப்தத்தால் கூறப்பட்டஜீவன் தன்னுடையரூபத்தை அடைகிறான் என்பதாய், பிரம்ம ஸ்வரூபப்பிராப்தியை காண்பிவித்து அமிருத அபயஸ்வரூபமான பரப்பிரமத்தைவிட ஜீவன் வேறில்லை என்று சுருதி காட்டுகிறது. (51)

(5) சிலர் பிரஜாபதிவாக்கியத்தைப் பிரம்மபரமாக அர்த்தம்செய்ய இச்சித்து, एतन्त्वेव ते என்பது ஜீவனைப்பற்றிச் சொல்லுகிறதாகச் சொல்லுவது அயுக்தம் என்று நினைத்து, ते भूयोऽनुव्याख्यास्यामि என்பதினால் வாக்கியாரம்பத்தில் சூசனையாகிற அபஹதபாப்மத்வாதி குணங்களுடன் கூடின ஆத்மாவையே மறுபடி விவரிக்கிறேன் என்று அபிப்பிராயம் கொள்ளுகிறார்கள்

இந்த மதத்தில் இரண்டு தோஷங்கள் ஏற்படுகின்றன:

(1) சமீபத்தில் இருக்கிறதைக் கூறவேண்டிய ஏதத் சப்தம் தூரத்தில் இருக்கிறதைக் கூறுகிறதாக ஆகும்.

(2) ஒரு பிரிவில்சொன்னதை இன்னும் ஒருபிரிவில் சொல்லாதபக்ஷத்தில் भूयः (மறுபடியும்) சொல்லுகிறேன் என்று சொன்னதானது அனுசிதமாகும்.

(3) நான்கு பிரிவுக்கு முன்னமேயே एतन्त्वेव ते என்பதினால்ஒன்றைச்சொல்லுகிறேன் என்று பிரதிஞ்ஞைசெய்து, வேறு ஒன்றை பிரஜாபதி சொன்னால், அவரிடத்தில் வஞ்சனையாகிற தோஷம் ஏற்படும்.

இந்த வியாக்கியானம் சம்பாவிதமாயிராத படியால், அவித்தையால் ஏற்பட்டதாயும், பாரமார்த்திகமாயிராமலும், கர்த்தா போக்தாக்களுடைய இராகத்வேஷம் முதலிய தோஷங்களால் அழுக்கடைந்தும், அநேக அநர்த்தங்களுடன் கூடியுமிருக்கிற ஜீவரூபமானது மஹாவாக்கிய ஜன்னிய ஞானத்தால் சோதிக்கப்படுவதினால் அதற்கு விபரீதமாயும், அபஹதபாப்மத்வாதி குணங்களுடன் கூடியுமிருக்கிற பரமேசுவரனுடைய ஸ்வரூபத்தை அடைகிறது, பழுதையில் பாம்பு தோன்றுகிற காலத்தில் பாம்பைப் பரிசோதித்துப் பார்க்குமளவில் பழுதையே அடையப்படுவது போலும். வேறு சிலர்கள், அவர்களுக்குள் நம்மைச் சேர்ந்தவர்களுமான சிலர்கள் ஜீவனுடைய ஸ்வரூபம் வாஸ்தவம் என்று நினைக்கிறார்கள். ஜீவப்பிரம்மம் ஐக்கிய ஞானத்தை ஒப்புக்கொள்ளாதவர்களை எல்லாம் நிராகரிக்கும் பொருட்டு இந்த சாரீரக சாஸ்திரம்

ஆரம்பிக்கப்படுகிறது. இதன் கருத்து யாதெனின் பரமேசுவரன் ஒருவனே இருக்கிறான். அவன் கூடஸ்தநித்தியன், ஞானஸ்வரூபம், மாயையால் மாயாவிபோல் அவித்தையால் அநேகவிதமாகக் காணப்படுகிறான். இவனைவிட வேறான ஞானஸ்வரூபமில்லை, அதாவது, இவனைவிட வேறான ஜீவன் இல்லை என்பதாம்.

इतरपरामर्शात् नेति चेन्नासम्भवात्

என்கிற 1-3-18-வது சூத்திரத்தில் ஜீவனைப் பற்றிச்சொல்லியிருப்பதால் தஹராகாசம் ஜீவனாயிருக்கட்டுமே என்கிற ஆக்ஷேபத்தின் பேரில் தஹரம் ஜீவனாயிருக்கமாட்டாது என்று தீர்மானம் செய்யப்பட்டிருப்பதால் ஜீவன் வேறு என்று ஏற்படுகிறதே, அப்படியிருக்க ஜீவப்பிரம்ம ஐக்கியம் எப்படி சம்பவிக்கும் எனின், ஜீவனை நிஷேதித்ததின் கருத்து யாதெனின் நித்தியமாயும் சுத்தமாயும் புத்தமாயும் முக்தமாயும், கூடஸ்தநித்தியமாயும், ஏகமாயும், அசங்கமாயும் இருக்கிற பரமாத்மாவினிடத்தில் அதற்கு விபரீதமான ஜீவரூபம் ஆகாசத்தில் ரூபம வர்ணம்போல் கற்பிக்கப்பட்டிருக்கிறது. ஜீவப்பிரம்ம ஐக்கியத்தை பிரதிபாதிக்கிறதாயும், யுக்தியுடன் கூடியும், த்வைதவாதத்தை நிஷேதிக்கிறதாயுமிருக்கிற வாக்கியங்களால் அந்தக் கற்பனையைப் போக்கடிக்கிறேன் என்று பரமாத்மாவை ஜீவனுக்கு வேறு என்று சுருதி திடமாய் சொல்லுகிறது. ஜீவன் பரமாத்மாவைவிட வேறு என்று பிரதிபாதிக்க இச்சிக்கவில்லை, பின்னையோவெனின் அவித்தையால் கற்பிதமாயும் லோகப்பிரசித்தமாயுமிருக்கிற ஜீவபேதத்தைச் சுருதி அனுவதிக்கிறது.

रा (அதிஷ்டானம் கற்பிதத்தைவிட வேறானாலும் கற்பிதம் அதிஷ்டானத்தைவிட வேறல்ல என்பதாம்.

आ (ஜீவன் இல்லாவிடின் அதிகாரியில்லை; அதிகாரியில்லாவிடின் அவனுக்காக ஏற்பட்ட கர்மவிதிகள் நிஷ்பிரயோசனங்களாகுமே எனின்) உலகப்பிரசித்தமான கர்த்தா போக்தாக்களை உத்தேசித்து கர்மவிதிகள் ஏற்பட்டிருக்கின்றன. ஆகையால் அவைகளைப் பற்றிச்சொன்னதில் விரோதமில்லை என்று சூத்திரகாரர் எண்ணுகிறார்.

शास्त्रदृष्ट्या तूपदेशो वामदेववत् (I-I-30)

முதலிய சூத்திரங்களால் ஜீவப்பிரம்ம ஐக்கியம் தான் சாஸ்திரார்த்தம் என்று காட்டுகிறார்.

(रा முதலிய என்பதால் आत्मेति तूपगच्छन्ति என்கிற IV-1-3 முதலிய சூத்திரங்களை அறியவும்.)

रा (அத்வைதத்தை சாஸ்திரார்த்தமாக பாவிக்கிறபக்ஷத்தில் த்வைதத்தை அபேக்ஷிக்கிற கர்மவிதிகள் விரோதப்படுமேயெனின்) அத்வைதத்தைத்தை அறியாதவர்களுக்கு, கர்மவிதிகள் ஏற்பட்டிருக்கின்றவென்றும் மற்றவர்களுக்கு ஏற்படவில்லை என்றும் நாம் முன்னமேயே சொல்லியிருக்கிறோம். ஆகையால் எல்லாம் உசிதமே. (52)

I-3-5ல்7 (20)வது சூத்திரம்

## अन्यार्थश्च परामर्शः । २० (53)

रा 2. व முந்தின சூத்திரத்துக்கும் இதற்கும் சம்பந்தம்:-இவ்விதமாய் பிரஜாபதி வாக்கியத்தில் ஜீவனை அனுவதித்து பிரம்மத்துக்கே அபஹதபாப்மத்வாதி குணங்கள் என்று சொன்னதினால், ஜீவனிடத்தில் அவைகள் ஏற்படாதபடியால் ஜீவன் தஹராகாசமல்லவென்று கூறப்பட்டது. அப்படியானால் ஜீவனைப்பற்றிச் சொன்னதற்குப் பிரயோசனமென்ன வெனின் இந்த சூத்திரத்தில் உத்தரம் கூறுகிறார். (54)

3. பதஉரை.

परामर्शः (ஜீவனைப்பற்றிச்) சொன்னதானது.

अन्यार्थः வேறு பிரயோஜனத்தை உடையது (55)

4. பொழிப்புரை.

ஜீவனைப்பற்றிச் சொன்னதற்கு பிரயோசனம் வேறுண்டு. அதாவது ஈசுவரனைப் பிரதிபாதிப்பதாம். (56)

5. பாஷ்யம்.

தஹரவாக்கிய சேஷத்தில் अथ य एष संप्रसादः என்பதால் ஜீவன் கூறப்பட்டிருக்கிறான் தஹரத்தை பரமேசுவரபரமாக அர்த்தம் செய்தவளவில் ஜீவஉபாசனை உபதேசிக்கப்பட்டிருக்கிறதாயும் சொல்லக்கூடாது பிரகிருத தஹரத்திலுள்ள விசேஷகுணமும் உபதேசிக்கப்பட்டதாகவும் சொல்லக்கூடாது. ஆகையால் ஜீவனை கூறினது வியர்த்தமாகும் அப்படி ஆகாயலிருக்கும் பொருட்டு வேறு அர்த்தம் இருக்கவேண்டும். இந்த ஜீவனைக்கூறினதற்கு ஜீவஸ்வரூபத்தில் தாற்பரியமில்லை, பின்னையோவெனின் பரமேசுவர ஸ்வரூபத்தைப் பிரதிபாதிப்பதில் தாற்பரியம். எப்படியெனின் சம்பிரசாத சப்தத்தால் கூறப்பட்ட ஜீவன் ஜாக்

கிராவஸ்தையில் தேஹம் இந்திரியம் ஆகிய கூட்டில் எஜமானனாக இருந்து கொண்டு, அவைகளின் வாசனையால் ஏற்படும் ஸ்வப்நங்களை, நாடியிலிருந்துகொண்டு அநுபவித்து, சிரமமடைந்து, சிரமபரிஹார ஸ்தானத்தை அடைய இச்சித்து, ஸ்தூல ஸூக்ஷ்மசரீராபிமானத்திலின்றும் வெளிக்கிளம்பி, சுஷுப்தி அவஸ்தையில் ஆகாசசப்தத்தால் கூறப்படும் பரப்பிரம்மத்தை அடைந்து, (பிரபஞ்சத்தின்) விசேஷ ஞானத்தை மறந்து, தன் ரூபமாக ஆகிறான். இவன் அடைய வேண்டியது எந்த பரஞ்ஜோதியோ, எதினால் இவன் தன் ரூபத்தை அடைந்தவனாக ஆகிறானோ, அதுவே அபஹதபாப்மத்வாதி குணத்துடன் கூடிய உபாஸ்யம் என்பதைக் காட்டும் பொருட்டு ஜீவனைப்பற்றிச் சொல்லியிருக்கிறது. இப்படி ஜீவனைக்கூறுதல் பரமேசுவரனை ஒப்புக்கொள்ளுகிறவர்களுக்கும் சம்மதமாகும். (57)

I-3-5ல் 8 (21)வது சூத்திரம்.

## अल्पश्रुतेरिति चेत्तदुक्तम् ॥ २१

2. முந்தின சூத்திரத்துக்கும் இதற்கும் சம்பந்தம்:—முந்தின கிரந்தத்தால் தஹரம் பரமேசுவரன்தான் என்று சித்தித்திருந்தாலும், தஹரம் என்பது அற்பமானதால் எப்படி பரமேசுவரனைக் கூறும் என்கிற ஆக்ஷேபத்துக்கு உத்தரம் சொல்லுகிறார். (59)

3. பதஉரை.

अल्पश्रुतेः= சுருதியில் அற்பம் (தஹரம்) சொல்லப்பட்டிருப்பதால்.

इति चेत्= தஹரத்தால் பரமேசுவரன் கூறப்பட்டதாக எப்படி சொல்லலாமெனின்

तत् उक्तं= அது சொல்லப்பட்டிருக்கிறது. (60)

4. பொழிப்புரை.

தஹரமென்றால் அற்பம் என்று அர்த்தம். இந்த அற்பம் என்பது பரமேசுவரனை எப்படி கூறுவதாக சொல்லலாம் எனின், இதற்கு உத்தரம் முன்னமேயே கூறப்பட்டிருக்கிறது. (61)

5. பாஷ்யம்.

(1) दहरोऽस्मिन्नन्तराकाशः என்கிற சுருதியில் ஆகாசம் அற்பம் என்று சொல்லியிருக்கிறது. இந்த அற்பத்தன்மை பரமேசுவரனிடத்தில் பொருந்தமாட்டாது. ஜீவனோ தாரநுனிபோலிருப்பதால் அவனுக்கு பொருந்தும் (ஆகையால் தஹராகாசம் பரமேசுவரனல்லவென்று ஆக்ஷேபித்தால் அதற்கு) பரிஹாரம் சொல்லவேண்டியது.

(2) तदुक्तम्:—अर्भकौकस्त्वात्तद्व्यपदेशाच्च नेति चेन्न निचाय्यत्वादेवं व्योमवच्च

என்கிற 1-2-7-வது சூத்திரத்தில் பரமேசுவரனுக்கு அற்பத்வமும் கூடும் என்று சொல்லியிருப்பதை இவ்விடத்திலும் கிரகித்துக்கொள்ள வேண்டியது என்று சூத்திரகாரர் சூசனைசெய்கிறார். (62)

यावान् वा अयमाकाशस्तावानेषोऽन्तर्हृदय आकाशः

என்பதில் ஆகாசத்தின் உபமானத்தைக் கொடுக்கிறதினாலேயே அற்பத்வம் இல்லை என்று சுருதியே சொல்லுகிறது. (63)

XVI. பூர்வபக்ஷபலன்:-பூதாகாச, ஜீவஉபாஸ்தி

சித்தாந்தபலன்:—சகுண பிரம்ம உபாசனையால் நிர்குண பிரம்ம ஞானம் (64)

ரா இவ்விதமாக தஹர வாக்கியம் சகுண பிரம்மத்திலும் பிரஜாபதி வாக்கியம் நிர்குண பிரம்மத்திலும் சமன்வயப்படுகிறதென்று சித்தமாகிறது.

XVII. வியாஸாதிகரணமாலைப்படி அத்வைதச் சுருக்கம்.

1. சுலோகங்கள்.

दहरः को वियज्जीवो ब्रह्माऽऽकाशशब्दतः ।
वियत्स्यादथवाऽल्पत्वश्रुतेर्जीवो भविष्यति ॥
बाह्याकाशोपमानेन द्युभूम्यादि समाहितेः ।
आत्माऽपहतपाप्मत्वात्सेतुत्वाच्च परमेश्वरः ॥

ஸ்ரீவித்தியாரணிய சுவாமிகள் இந்த அதிகரணத்தை இரண்டாகப்பிரித்து 14—18வரை ஒன்றாகவும் 19—21 மற்றொன்றாகவும் பாவிக்கிறார். அவரபிப்பிராயப்படி முதலாவது பாகத்துக்குச் சம்பந்தமான சுலோகங்கள் மேல் எழுதப்பட்டிருக்கின்றன. (65)

2. விஷயவாக்கியம்—

சாந்தோக்கியத்தின் 8-வது அத்தியாயத்தில் अथ (VIII-1-1) என்பதாய் சொல்லியிருக்கிறது. (அதிகரண ஆரம்பத்தில் பார்க்க).

அர்த்தம்:—பிரம்மத்தை அறிய ஸ்தானமாக இருப்பதால் சரீரம் பிரம்மபுரம் எனப்படும். அதில்

அற்பமான ஹிருதயகமலஸ்தானம் யாதொன்றுண்டோ அந்த ஸ்தானத்தில் ஆகாசமிருக்கிறது. (66)

3. சந்தேகமும்—பூர்வபக்ஷமும் :—

(1) ஆகாசத்துக்கு 3 வித அர்த்தமாகுமானுலும் பிரசித்தாகாசம் என்பதை எடுத்துக்கொள்ளவேண்டியது. இது தான் ஆகாசசப்தத்தின் பிரசித்தமான அர்த்தம்.

(2) அல்லது தஹரசப்தத்துக்கு அற்பம் என்று அர்த்தமானதால் தஹரம் பரிச்சின்னமான ஜீவனுயிருக்கலாம் ; பிரம்மமாயிருக்கமாட்டாது. (67)

4. சித்தாந்தம் :—ஆகாசசப்தத்தால் கூறப்படுவது பிரம்மமே.

यावान्वा अयमाकाशस्तावानेषोऽन्तर्हृदय आकाशः

அதாவது இந்த ஆகாசம் எவ்வளவோ அவ்வளவு இந்த ஹிருதயத்துக்குள்ளிருக்கிற ஆகாசம்—

என்பது பிரம்மத்துக்கு பிரசித்தமான ஆகாச உபமானம். ஆகாசத்துக்கே ஆகாச உபமானம் ஏற்படமாட்டாது. மேலும் அல்பபரிமாணமுள்ள ஜீவனுக்கு ஆகாசபரிமாணம் உபமானமாக ஏற்படமாட்டாது. உலகத்தில் விளங்கும் சாதாரண அர்த்தம் சுருதி பிரசித்த அர்த்தத்தால் பரிஹரிக்கப்பட்டுப்போகும்.

மேலும்

उभे अस्मिन्द्यावापृथिवी अन्तरेवसमाहिते

அதாவது :—இதற்குள் ஸ்வர்க்கமும் பூமியும் சேர்ந்திருக்கின்றன

என்கிற சுருதியில் தஹராகாசமானது சுவர்க்கம் பிருதிவிமுதலிய சகல ஜகத்துக்கும் ஆதாரமாகச்சொல்லப்பட்டிருக்கிறது.

மேலும் अथैष आत्माऽपहतपाप्मा என்பதில் ஆத்மாவென்றும் பாபமற்றவன் என்றும் சொல்லப்பட்டிருக்கிறது.

य आत्मा स सेतुर्विधृतिः என்று ஜகத்தின் எல்லை கெட்டுப்போகாமலிருக்கும்படி सेतु என்று சொல்லப்பட்டிருக்கிறது.

ஆகையால் இக்காரணங்களால் தஹரம் பரமாத்மாவே. (68)

5. இரண்டாவது பாகத்துக்கு சுலோகங்கள் :-

यः प्रजापतिविद्यायां स किं जीवोऽथवेश्वरः ।
जाग्रत्स्वप्नसुषुप्तोक्तेस्तद्वाञ्जीव इहोचितः ॥
आत्मापहतपाप्मेति प्रक्रम्यान्ते स उत्तमः ।
पुमानित्युक्त ईशोऽत्र जाग्रदाद्यवबुद्धये ॥ (69)

6. விஷயவாக்கியம் :— தஹரவித்தைக்கு மேல் பிரஜாபதிவித்தையில் இந்திர விரோசன சம்வாதத்தில்

य एषोऽक्षिणि पुरुषो दृश्यते एष आत्मेति होवाच

என்று சொல்லுகிருர். (70)

7. பூர்வபக்ஷம் :— இவன் ஜீவாத்மா. ஏனெனின் அவஸ்தாத்திரயங்கள் கூறப்பட்டிருக்கின்றன. இதனுல் ஜீவனை கிரகிப்பதே உசிதம். ஏனெனின் ஈசுவரனுக்கு அவஸ்தையில்லை. (71)

8. சித்தாந்தம் :—

ஈசுவரனைத்தான் எடுத்துக்கொள்ள வேண்டியது ஏனெனின் य आत्माऽपहतपाप्मा विजरो विमृत्युः என்று பரமாத்மபரமாக சுருதி ஆரம்பித்து स उत्तमः पुरुषः என்பதாய் பரமாத்மபரமாக உபசம்கரிக்கிறது. அப்படியானுல் ஜாகரணுதிகளைச்சொன்னது வியர்த்தமோவெனின், அப்படியல்ல, சாகாசந்திர நியாயப்படி பரமாத்மாவை அறிய அது சாதகமாயிருக்கிறது.

ஆகையால் ஈசுவரன் அக்ஷிபுருஷன். (72)

XVIII. விசிஷ்டாத்வைதப்படி சுருக்கம்.

1. அத்வைதத்தின் 5—6வது அதிகரணங்கள் விசிஷ்டாத்வைதத்தில் 5வது அதிகரணமாக ஏற்பட்டிருக்கின்றன. ஆகவே இதில் அடங்கிய சூத்திரங்கள் 10 (14—23). 14, 15, 16, 17, 18-வது சூத்திரங்களுக்கு அர்த்தம். அத்வைதத்திற் போலவே. (73)

2. 19-வது சூத்திரம் :—மேல்வரும் பிரஜாபதி வாக்கியத்தால் அபஹதபாப்மத்வாதி குணமுள்ளவன் ஜீவன் என்பதாய் தெரியவருகிறதெனின்

आविर्भूतस्वरूपः அனுதிகாலமாய் ஏற்பட்ட புண்ணிய பாபங்களால் மறைபட்ட குணமுடைய ஜீவன் பரப்பிரம்மோபாசனையால் ஸ்வஸ்வரூபத்தை அடைந்து சத்தியகாமத்வாதிகளுடன் கூடினவனுக பிரஜாபதி வாக்கியத்தில் சொல்லியிருக்கிறது. தஹராகாச சப்தத்தால் கூறபட்டவனே மறைபடாத ஸ்வரூபமுள்ளவன், அபஹதபாப்மத்வாதி குணமுள்ளவன். ஆகையால் தஹராகாசம் ஜீவனல்ல. (74)

20-வது சூத்திரம்.

3. தஹராகாச வாக்கியத்தில் ஜீவனைப்பற்றிச் சொல்லுவானேன் எனின், தஹராகாசத்தால் கூறப்பட்டவர் எப்படி ஜகத்தை தரிக்கிறாரோ அப்படி மறைபட்ட ஸ்வரூபமுடைய ஜீவனுக்கும் ஸ்வஸ்வரூபத்தைக்கொடுக்கிறார் என்பதை காட்டும்பொருட்டு தஹரவாக்கியத்தில் ஜீவனைப்பற்றி சொல்லப்பட்டது. (75)

I-3-5ல் 7 (21)

4. அத்வைதத்தில் போலவே. (76)

XIX. துவைதப்படி

I-3-5வது அதிகரணத்தின் சுருக்கம்.

1. இதின் கருத்து :—ஹிருதய பத்மத்திலிருக்கிறவர் பரமாத்மாவே ஆகாசாதியல்லவென்பதாம்(77)

2. இதிலடங்கிய சூத்திரங்கள் :-8(14-21) (78)

3. விஷயவாக்கியம்:— சா VIII-1ன்

यदिदमास्मिन् दहरे पुण्डरीकं — — — अन्तरेव समाहिते.

என்பதாம். இந்த வாக்கியத்தில் சர்வத்துக்கும் ஆதாரமாக ஹிருதயத்திலிருக்கிறதாகச்சொல்லிய ஆகாசவிஷயமாய் விசாரம். (79)

4. சங்கதி :—முந்தின அதிகரணத்தில் சகலத்துக்கும் ஆதாரம் விஷ்ணுவென்று ஏற்பட்டது.

பிரகிருத சுருதியில் ஹிருதயாகாசம் ஆதாரமாகச் சொல்லப்பட்டிருப்பதால் முந்தின தீர்மானம் பாதிக்கப்படுவதால் ஆக்ஷேபசங்கதி ஏற்படுகிறது. (80)

5. சந்தேகம் :—இந்த ஹிருதயபத்மத்திலிருக்கிறது

(1) பூதாகாசமா ?

(2) ஜீவனா ?

(3) விஷ்ணுவா ? (81)

6. பூர்வபக்ஷம் :—இது பூதாகாசமே, பிரம்மமல்ல. ஏனெனின் பூதாகாசத்தைக்கூறும் ஆகாசசப்தமே ஹிருதயபுண்டரீகத்திலிருக்கிறதைக் குறிப்பிட உபயோகிக்கப்பட்டிருக்கிறது. அல்லது ஜீவனாயிருக்கலாம். ஏனெனின் இந்த வாக்கியத்தில் ஆத்ம சப்தம் பிரயோகிக்கப்பட்டிருக்கிறது. एषः என்கிற ஆண்பாற் சொல்லும் இருக்கிறது:— (82)

7. சித்தாந்தம் :—

ஹிருதயத்திலிருக்கிற தஹராகாசத்திலிருக்கிற பிரம்மமே, ஏனெனின் அபஹதபாப்மத்வாதிகள்மேல் சொல்லப்பட்டிருக்கின்றன. சகல பாபங்களினின்றும் விடுபட்டவன் விஷ்ணுவே. (மற்றவிவரங்களை, சூத்திரார்த்தில் பார்த்துக்கொள்ளவும்) (83)

8. 14-வது சூத்திரம்.

அ-கை :—ஹிருதயகமலத்திலிருத்தல் என்னும் விசேஷதர்மம் பிரம்மத்துக்குப் பொருந்தும்.

दहरे=दहरं पुंडरीकं वेश्म என்கிறவாக்கியத்தில் சொல்லியஹிருதயபுண்டரீக ஆகாசத்திலிருக்கிறவர் விஷ்ணுவே, ஜீவனல்ல. ஏனெனின்,

उत्तरेभ्यः = य आत्मापहतपाप्मा என்கிற மேல்வாக்கியத்தில் அபஹதபாப்மத்வாதிகுணங்கள் சொல்லப்பட்டிருக்கின்றன. (84)

15-வது சூத்திரம்.

9. இதுவும் ஒரு காரணம் :—

गतिशब्दाभ्यां= अहरहर्गच्छंति என்கிற சுருதியால் பிரதிதினம் தூங்கும் ஜனங்கள் ஹிருதயபுண்டரீகத்தில் இருக்கிறவனை (गति) அடைகிறார்கள். ब्रह्मलोकं न विंदंति என்கிறதில் ब्रह्म (शब्द) சப்தம் இருக்கிறது. இந்த இரண்டுகாரணங்களால் ஹிருதய புண்டரீகத்திலிருக்கிறவர் விஷ்ணுவே.

हि- तथा लिंगंच दृष्टं = எப்படி தூங்குகிறவனால் அடையப்படும் தன்மை, பிரம்மலோக சப்தம் இவைகள் ஹிருதயத்திலிருக்கிறவனை விஷயமாக்குகின்றனவோ அப்படி அரணிய என்கிற இரண்டு அமிருத சமுத்திரங்கள் எந்த லோகத்தில் (சத்தியலோகத்தில்) இருக்கின்றனவோ அந்த லோகத்தை உடைத்தாயிருத்தல் என்னும் லிங்கமும் ஹிருதயபுண்டரீகத்திலிருக்கிற விஷ்ணுவை விஷயமாக்குவதாக சுருதியில் சொல்லியிருக்கிறது. இதினாலும் விஷயவாக்கியத்தில் ஹிருதயபுண்டரீகத்திலிருக்கிறவர் விஷ்ணுவே. (85)

16-வது சூத்திரம்.

10. இன்னும் ஒரு காரணம் சொல்லுகிறார்.

धृतेः च= स एष सेतुर्विधृतिः

என்கிற சுருதியில் ஹிருதயபுண்டரீகத்தில் இருக்கிறவன் சர்வாதாரமாகச் சொல்லியிருப்பதாலும் விஷ்

ணுவே ஹிருதயபுண்டரீகத்திலிருக்கிறவர். अस्य महिम्न: சாந்தோக்கியத்தில்

एष भूताधिपतिः एष सर्वेश्वरः

என்கிற சுருதியால் சர்வேசுவரத் தன்மை என்னும் விஷ்ணுவின் மாஹாத்மியம் ஹிருதயகமலத்திலிருக்கிறது என்பதாய்

अस्मिन्नुपलब्धेः = य एषोऽन्तर्हृदयः என்கிற வாஜஸநேய சுருதியால் தெரியவருகிறது. இரண்டு சுருதிகளிலும் ஒரேவிதமாகச் சொல்லியிருப்பதால் விஷ்ணுவே ஹிருதயகமலஸ்தர். (86)

17-வது சூத்திரம்.

11. அடியிற்கண்ட காரணத்தாலும் தஹராகாசத்திலிருக்கிறவர் விஷ்ணுவென்று சொல்லுகிறார்.

प्रसिद्धेः च= दहरं विपापं என்கிற சுருதியில் விஷ்ணுவானவர் ஹிருதயபுண்டரீகத்தி லிருக்கிறதாக பிரசித்தமாகச் சொல்லியிருக்கிறது. (87)

18-வது சூத்திரம்.

12. முன் சொல்லப்பட்டதானது ஆக்ஷேபிக்கப்பட்டு சமாதானம் சொல்லப்படுகிறது.

इतरपरामर्शात् परं ज्योतिरुपसंपद्य स्वेन रूपेणाभिनिष्पद्यते

என்கிற சுருதியில் इतर அதாவது ஜீவன் என்று அர்த்தமாகிறது. அவன் एष आत्मेति होवाच என்கிற சுருதியில் एष என்கிற சப்தத்தால் கூறப்பட்டிருக்கிறான், இந்த சுருதியில் இவன் ஹிருதயகமலத்திலிருக்கிறான். ஆகையால் स: தஹராகாசத்திலிருக்கிறவன் ஜீவன்தான்.

इति चेत्= என்றுசொன்னால்

न= அப்படியல்ல. ஏனெனின்

असंभवात्= ஹிருதயகமலத்திலிருக்கிறவனுக்குச் சொல்லிய அபஹதபாப்மத்வாதி குணங்கள் ஜீவனிடத்தில் ஸ்வதந்திரமாய் ஏற்படமாட்டா. (88)

19 வது சூத்திரம்.

13. முந்தின சூத்திரத்தில் ஹிருதயகமலத்திலிருக்கிறவன் பத்தஜீவன் அல்லவென்று நிராகரிக்கப்பட்டது. இப்போது முக்தஜீவனுமல்லவென்று நிராகரிக்கப்படுகிறது.

उत्तरात्=स तत्र पर्येति என்கிற மேல்வாக்கியத்தினால் ஜீவன் சத்தியகாமம் முதலிய குணங்களுடையவன் என்று தெரியவருவதாலும், ஆகையால் அவன் சோகமற்றவன் என்று தெரியவருவதாலும் அவனே ஹிருதயகமலத்திலிருக்கிறவன்.

चेत् என்றுசொன்னால்

(न= அது சரியல்ல)

आविर्भूतस्वरूपस्तु= அந்த வாக்கியத்தில் பரமாத்மா பிரசாதத்தால் ஆவிர் பூதஸ்வரூபமுள்ள (அதாவது தன் ஸ்வரூபஞானத்தை உடைய) முக்த ஜீவன்தான் கூறப்பட்டிருக்கிறான். கேவலம் ஜீவன் மட்டும் கூறப்படவில்லை. முக்தனும் ஸ்வத: அபஹதபாப்மத்வாதி குணங்களுள்ளவனன்று, ஆகையால் அவனும் ஹிருதயகமலத்திலிருக்கிறவனுமல்ல. (89)

20-வதுசூத்திரம்

14. एष आत्मा என்கிற சுருதியில் ஜீவனுடைய சம்பந்தமிருப்பதால் ஜீவன்தான் ஹிருதய புண்டரீகத்திலிருக்கிறான் என்று எப்படியாவது சொல்லிவிடுகிறோம் என்று ஒருவன்சொன்னால் அதற்கு உத்தரம் கூறுகிறார்.

परामर्शः=एष आत्मा என்பதால் கூறப்பட்டவன்

अन्यार्थः=यं परमात्मानं प्राप्य என்கிற வாக்கியப்படி ஜீவனைவிட வேறான பரமாத்மாவே. (90)

21-வது சூத்திரம்.

15. அத்வைதத்தில் போலவே அர்த்தம்:- (91)

16. பூர்வபக்ஷபலன்:— அக்ஷராதிகரணத்தில் (I-3-5) சகலத்தையும் தரிப்பது பிரம்மம் என்று சொல்லப்பட்டது. இந்த அதிகரணத்தின் பூர்வபக்ஷப்படி சூரியாதிகளைத் தரிப்பது விஷ்ணுவைத்தவிர வேறு ஒருவனானால் அந்த அதிகரணத்தின் தீர்மானம் ஆக்ஷேபிக்கப்படுவதால் ஆக்ஷேபமே பலன். (92)

17. சித்தாந்தபலன்:—சமாதானமே. (93)

I-3-5-வது அதிகரணம்

முற்றிற்று.

## 1-3-6-வது அதிகரணத்தின்

### அனுக்கிரமணிகை.



---

## 1-3-6-வது அதிகரணம்.

I. இதின் பெயர்:— அனுக்கிருத்யதிகரண மென்பதாம். (1)

II. இந்த அதிகரணத்தின் கருத்து :—சகல ஜகத்தையும் பிரகாசிப்பிக்கிறது சைதன்னியம் என்பதாம். (2)

III. இதின் விஷயவாக்கியம் :—

न तत्र सूर्यो भाति न चन्द्रतारकं नेमा विद्युतो भान्ति कुतोऽयमग्निः । तमेव भान्तमनुभाति सर्वं तस्य भासा सर्वमिदं विभाति ॥ (मु-II-2-10-कठ-V-15)

அர்த்தம் :—அவ்விடத்தில் சூரியன் பிரகாசிக்கிறதில்லை, சந்திரனும், நக்ஷத்திரங்களும் பிரகாசிக்கிறதில்லை. மின்னல்கள் பிரகாசிக்கிறதில்லை ; இந்த அக்கினி எம்மாத்திரம்—பிரகாசிக்கிற அதை அனுசரித்து இதெல்லாம் பிரகாசிக்கிறது ; அதினுடைய பிரகாசத்தால் இதெல்லாம் பிரகாசிக்கிறது (3)

IV. சங்கதி :—

(1) முந்தின அதிகரணத்துக்கும் இதற்கும் :—

ஆ (a) பிராசங்கிக சங்கதி :—முந்தின அதிகரணத்தில் परं ज्योतिरुपसंपद्य என்கிற வாக்கியத்தை விசாரிக்கிற சமயத்தில் முண்டகோபநிஷத்தின் तच्छुभ्रं ज्योतिषां ज्योतिः என்கிற வாக்கியம் ஸ்மரணைக்கு வந்தது அதற்குச் சாதகமாக न तत्र सूर्यो भाति என்கிற வாக்கியம் ஏற்பட்டிருக்கிறது. இப்படி பிரசங்கத்தில் விசாரணை ஏற்பட்டபடியால பிராசங்கிக சங்கதி சித்தித்தது

इ (b) ஏகவிஷயத்வசங்கதி :— परं ज्योतिरुपसंपद्य என்கிற வாக்கியத்தில் ஜோதிஸ்சப்தம் பிரம்மத்தைக் கூறுகிறது. இவ்விடத்திலும் ஜோதிஸ்வரூபம் பிரம்மம் என்றே ஏற்படுகிறது ஆகையால் இரண்டு வாக்கியங்களுக்கு விஷயம் ஒன்றாக ஏற்படுவதால் ஏகவிஷயத்வ சங்கதி சித்தித்தது. (5)

ர (c) திருஷ்டாந்த சங்கதி :—முந்தின அதிகரணத்தில் ஆத்மசுருதி பலத்தால் ஆகாசசப்தம் இடுகுறி அர்த்தத்தைவிட்டு ஈசுவரனைக் கூறுவதாகச்சொல்லப்பட்டது. அப்படியே இவ்விடத்திலும் तत्र அதாவது அவ்விடத்தில் என்பதினால் எது இருக்கும்போது சூரியாதிகள் பிரகாசிக்கப்போகிறதில்லையோ அந்த தேஜோவிசேஷம் உபாசியம் என்று அர்த்தமாகிறது. பிரகாசிக்கிறது என்னும் நிகழ்கால அர்த்தத்தை விட்டு பிரகாசிக்கப்போகிறது என்கிற வருங்கால அர்த்தம் சித்திக்கிறது என்று பூர்வபக்ஷிசொல்லுகிறபடியால் திருஷ்டாந்த சங்கதி ஏற்படுகிறது (6)

(2) சர்வாவபாசகலிங்கத்தால் பிரகரணம் பிரம்மபரமாக ஏற்படுகிறது. भान्त என்பதால் பிரகாசத்துக்கு ஆசிரயம் ஒன்று தெரியவருகிறது. ஆசிரயம் என்று சொன்னால் ஆதாரம் வேறு இருக்கவேண்டும். இவ்விரண்டும்சூரியாதிகளிடத்திலிருக்கின்றன. ஆகையால் இவைகளால் பிரம்மம்தான் கூறப்பட்டதாகதெரியவில்லை. பரியவசானத்தில் பிரம்மம்தான் கூறப்பட்டதாக தெரியவந்தாலும் முதலில் தெரியவராததினால் பிரம்மலிங்கம் ஸ்பஷ்டமாய் விளங்கவில்லை. ஆகையால் இந்த பாதத்தில் இந்த அதிகரணத்தை எடுத்தது யுக்தமே (7)

(3) மற்ற சங்கதிகள் முன்போலவே. (8)

V. சந்தேகம்.—இந்த விஷயவாக்கியத்தில் भान्तं अनुभाति सर्वं அதாவது எது பிரகாசிக்கிறதோ அதை அனுசரித்து சர்வம் பிரகாசிக்கிறதென்றும்

(2) भासा सर्वं मिदं भाति என்பதினால், எதினுடைய பிரகாசத்தால் எதெல்லாம் பிரகாசிக்கிறதென்றும் சொல்லியிருக்கிறதோ, அது என்ன ? தேஜோமய பதார்த்தமா ? அல்லது பரமாத்மாவா ?

ர சந்தேகபீஜம் (இந்த சந்தேகத்துக்குக் காரணமென்ன வெனின் तत्र भाति என்கிற இடத்தில் तत्र என்பதற்கு ஏழாம்வேற்றுமையின் அர்த்தம், இதற்கு "எது இருக்கும்போது" மற்றது பிரகாசிக்கிறது என்று அர்த்தமா ? அல்லது "எதை" மற்றது பிரகாசம் பண்ணுகிறதென்று அர்த்தமா ? ஏழாம்வேற்றுமைக்கு இரண்டு அர்த்தங்களையும் சொல்லலாமாகையால் சந்தேகம் ஏற்பட்டது (9)

VI. இதிலடங்கிய சூத்திரங்கள் 2. (22—23) முதலாவதில் விஷயவாக்கியம் பிரம்மத்தைத்தான் கூறுகிறதென்றும், இரண்டாவதில் ஸ்மிருதிப்பிரமாணமும் கூறப்பட்டிருக்கின்றன (10)

VII. பூர்வபக்ஷம் :—இப்படி சந்தேகம் ஏற்பட, அதுதேஜோரூப பதார்த்தம் என்று ஏற்படுகிறது. ஏனெனின் தேஜோரூப சூரியாதிகளின் பிரகாசம்நிஷேதிக்கப்பட்டிருக்கிறது. தேஜோரூபசந்திரன், நக்ஷத்திரங்கள் முதலியவை தேஜோரூப சூரியன் பிரகாசிக்கும்போது பகலில் பிரகாசிக்கிறதில்லை என்பது பிரசித்தம். அப்படியே சூரியன் சந்திரன் நக்ஷத்திரங்கள் முதலியவை எது இருக்கும்போது பிரகாசிக்கவில்லையோ அதுவும் தேஜஸாக இருக்கவேண்டும்

ஒருவன் நடந்தால் பின்னோடு மற்றொருவன் நடக்கிறான் என்பதுபோல் அநுசரணை என்பது சமான சுவபாவமுள்ளதைத்தான் கூறும். சூரியாதிகள் அநுசரித்து பிரகாசிக்கின்றன வென்பதினால் அநுசரிக்கப்பட்டதும் தேஜோரூபமாயிருக்கவேண்டும். (11)

VIII. சித்தாந்தம்:

1. இப்படி பூர்வபக்ஷிசொல்ல

## अनुकृतेस्तस्य च । २२

என்கிற சூத்திரத்தில் சித்தாந்தம் சொல்லுகிறார். (12)

2. பதஉரை.

अनुकृतेः= அநுசரித்த செய்கையாலும் அதாவது பிரகாசத்தாலும்.

तस्य च= அதினுடைய என்பதினாலும். (13)

3. பொழிப்புரை.

அநுசரித்து பிரகாசிக்கிறதென்று சொல்லியிருப்பதால் எதை அநுசரித்து சூரியாதிகள் பிரகாசிக்கின்றனவோ அது பரமாத்வாகவே யிருக்கவேண்டும். அவருடைய தேஜஸால் எல்லாம் பிரகாசிக்கிறதாயும் சொல்லப்பட்டிருக்கிறது. (14)

4. பாஷ்யம்.

A. सर्वं சப்தத்துக்கு சூரியாதிகள் என்ற குறிற அர்த்தம்)

1. अनुकृतेः இந்த பதார்த்தம் பரமாத்மாவாகவே யிருக்கவேண்டும், ஏனெனின் அநுசரித்துச் செய்ய சொல்லியிருக்கிறது तमेव भान्तमनुभाति सर्वं (பிரகாசிக்கிற அதையே அநுசரித்து சகலமும் பிரகாசிக்கிறது) என்பதில் யாதொரு அநுசரித்து பிரகாசித்தல் கூறப்பட்டிருக்கிறதோ அது பரமாத்மாவை கிரகித்தால்தான் சாத்தியமாகும். பரமாத்மாவைப் பிரகாசஸ்வரூபம் என்னும் சத்தியசங்கற்பன் என்றும் சாந்தோக்கியம் III-14-2-வது சுருதி சொல்லுகிறது. தேஜோரூபமான ஒரு பதார்த்தத்தை சூரியன் முதலானவர்கள் அநுசரித்துப் பிரகாசிக்கிறதாகத் தெரியவில்லை. தேஜோரூபமான சூரியாதிகள் சமமாக இருப்பதால், அவர்கள், அநுசரித்து பிரகாசிக்கும்படியான வேறு தேஜோரூபம் அவர்களுக்கு வேண்டியதில்லை. ஒரு தீபம் வேறு தீபத்தை அநுசரித்துப் பிரகாசிக்கிறதில்லை. (15)

2. சமானஸ்வபாவமுள்ள பதார்த்தங்களுக்குள்தான் அநுசரித்த செயல் காணப்படுகிறது என்கிற நியமமில்லை. வெவ்வேறு ஸ்வபாவமுள்ளவைகளுக்குள்ளும் அநுசரணையான செயல் காணப்படுகிறது. பழுக்கச்சுட்ட இரும்பு உருண்டையானது தஹிக்கிற அக்கினியை அநுசரித்து தஹிக்கிறதுபோலும், பூமியிலிருக்கிற (தரையிலிருக்கிற) தூளிகள் அடிக்கிறகாற்றைஅநுசரித்துபறக்கிறதுபோலும்(16)

3. अनुकृतेः என்னும் சூத்திரபதம் விஷயவாக்கியத்திலுள்ள அநுபானத்தை குறிப்பிக்கிறது.

तस्य च என்னும் சூத்திரபதம் ஷை வாக்கியத்தின் நான்காவது பாதத்தைக் குறிப்பிடுகிறது.

रा (तमेव भान्तं=பிரகாசிக்கிற அதையே என்று சொன்னதினால் அதின் பிரகாசமன்றியில் மற்ற எதற்கும் சபார்வமான்வேறு பிரகாசம் இல்லை என்பதை அநுகிருதி பதம் காட்டுகிறது. தஸ்யச என்பதால் சகலத்தையும் பிரகாசிப்பிக்கும் தன்மை கூறப்பட்டது. ஆகையால் இரண்டிலும் பௌநருக்திய தோஷமில்லை) (17)

4. तस्य भासा सर्वमिदं विभाति என்கிற வாக்கியத்தில் சூரியாதிகளின் பிரகாசத்துக்குக் காரணமாக எந்தப் பிரகாசம் கூறப்படுகிறதோ அது பரமாத்மாவாக இருக்கவேண்டும்.

तद्देवा ज्योतिषां ज्योतिरायुर्होपासतेऽमृतं

(அவரை தேவதைகள் ஜோதிஸ்ஸுக்களுக்கு ஜோதிஸ் என்றும், அமிருதமான ஜீவகாலமென்றும் உபாசிக்கிறார்கள்)

என்கிற பிரஹதாரணிய IV-4-16-வது சுருதியானது பரமாத்மாவைப் பற்றிச்சொல்லுகிறது. வேறு தேஜஸால் சூரியாதிகளின் தேஜஸ் பிரகாசிக்கிறது என்று சொல்லுவது அப்பிரசித்தம், மேலும் விருத்தம். ஏனெனின் ஒரு தேஜஸ் மற்றொரு தேஜஸை மறைத்து விடுகிறது. (18)

(b) (सर्वं சப்தத்துக்கு குறுகாத அர்த்தம்).

रा (இதுவரையில் சர்வ சப்தத்துக்கு சூரியாதிகள் என்று அர்த்தம் செய்யப்பட்டது. இனி அர்த்தத்தைக்குறுக்காமல் நாமரூபாதிகள் எல்லாம் என்ற அர்த்தம் செய்யபபடுகிறது) அல்லது, சுலோகத்திற் சொல்லிய சூரியாதிகளுக்குமட்டும் காரணமாக தேஜஸ் சொல்லப்படவில்லை. பின்னேயோவெனின்

सर्वमिदं என்பது ஒன்றையும் குறிப்பாக சொல்லாத படியால், நாமம், ரூபம், கிரியை, சாதகம், பலம், இவைகளெல்லாம் பிரகாசம் ஆகிறதற்கு பிரம்மதேஜஸே காரணம். சூரியாதி ஜோதிஸ் இருந்தால்தான் சகல ரூபங்களும்வியக்தமாய் தெரிவதுபோலும். (19)

2. न तत्र सूर्यो भाति

என்கிற இடத்தில் तत्र என்னும் சப்தம் பிரகிருதத்தில் கிரகிக்கவேண்டியதை காட்டுகிறது. பிரகிருதமோ பிரம்மம் என்று

यस्मिन् द्यौः पृथिवीचान्तरिक्षमोतम्

(எதினிடத்தில் சுவர்க்கம் பூமி, அந்தரிக்ஷம் கோர்க்கப்பட்டிருக்கிறதோ).

என்னும் முண்டகம் II-2-5ல் தெரியவருகிறது. பிறகும்.

हिरण्मये परे कोशे विरजं ब्रह्मनिष्कलं ।
तच्छुभ्रं ज्योतिषां ज्योतिस्तद्यदात्मविदो विदुः ॥

என்கிற சுருதியும், ஜோதிர்மயமாயும் அன்னமயாதிகளை அபேக்ஷித்து பரமாயுமிருக்கிற ஆநந்தமயமென்கிற கோசத்தில் இராகாதிதோஷமற்ற, அவயவமற்ற, சுத்தமான, ஜோதிஸ்ஸுக்கு ஜோதியாயிருக்கிற பிரம்மமிருக்கிறது, அதை பிரம்மஞானிகள் ஆத்மாவாக அறிகிறார்கள்

என்று சொல்லுகிறது.

ஆகையாலும் तत्र என்பது பிரம்மத்தைத்தான் கூறுகிறது. (20)

3. ஷை சுருதியில் ஜோதிஸுக்கெல்லாம் ஜோதிஸ் என்று எப்படி சொல்லலாமென்கிற கேள்விக்கு உத்தரமாக न तत्र सूर्यो भाति என்கிற வாக்கியம் பிரவிர்த்தித்திருக்கிறது. (21)

4. சூரியனுடைய பிரகாசத்தில் மற்ற சந்திராதிகள் பிரகாசிக்காததுபோல், வேறு ஒரு தேஜோரூப பதார்த்தத்தில் சூரியாதிகளின் பிரகாசம் மறைந்துவிடுகிறது (என்று பூர்வபக்ஷி சொன்ன விஷயத்தில், சூரியாதிகளை மறைக்கும்படியான வேறு ஒரு தேஜோமய பதார்த்தமிருந்தால் அதைகிரகிக்கலாம். அப்படியில்லாததினால் அந்த தேஜோரூப பதார்த்தம் பரப்பிரம்மமே வேறல்லவென்று நாம் முன்னமேயே சொல்லியிருக்கிறோம்.

பிரம்மமிருக்கும்போது இவைகளில் பிரகாசம் மறைந்துவிடுகிறதாகச் சொல்லலாம். ஏனெனின் எது அறியப்படுகிறதோ அதெல்லாம் பிரம்மத்தினுடைய தேஜஸால் அறியப்படுகிறது. பிரம்மமோ இதரதேஜஸால் அறியப்படுகிறதில்லை. ஏனெனின் அது ஸ்வயம் தேஜோரூபம் பிரம்மதேஜஸால் சூரியாதிகள் பிரம்மத்தினிடத்தில் பிரகாசிக்கின்றன. பிரம்மம் வேறு ஒன்றை பிரகாசிப்பிக்கிறது, பிரம்மம் வேறு ஒன்றால் பிரகாசிபிக்கப்படுகிறதில்லை, பிரமாண வாக்கியங்கள் :—

(1) आत्मनैवायं ज्योतिषास्ते (बृ-IV-3-6)

ஜோதிரூப ஆத்மாவால் இவன் இருக்கிறான்.

(2) अगृह्यो नहि गृह्यते (बृ-IV-2-4)

கிரகிக்கப்படாதவன் ஏனெனின் கிரகிக்கப்படுகிறதில்லை முதலியவை. (22)

5. சங்கதியை விவரித்த இடத்தில் பூர்வபக்ஷியானவன் திருஷ்டாந்த சங்கதியை ஒப்புக்கொண்டு விஷயவாக்கியத்திலுள்ள न भाति என்பதற்கு பிரகாசிக்கிறதில்லைஎன்னும் நிகழ்கால அர்த்தத்தைவிட்டுவிட்டு न भास्यन्ति பிரகாசிக்கப்போகிறதில்லை என்று வருங்கால அர்த்தம் செய்தான். ஏனெனின் அவன் மதப்படி ஒரு தேஜோரூப பதார்த்தமிருக்கும்போது இன்னும் ஒன்று பிரகாசிக்கிறதில்லை என்று சொல்லுவது பிரத்தியக்ஷ விரோதம். இந்த விரோதத்தைப் பரிகரிக்கும்பொருட்டு இனிப் பிரகாசிக்கப்போகிறதில்லை என்று சொல்லவேண்டும். ஆகவே அவன் மதப்படி இருக்கிறதைவிட்டுவிட்டு இல்லாததைக் கிரகிக்கும்படி நேரிடுகிறது.

நம்முடைய மதப்படி பிரம்மத்தை சூரியாதிகள் பிரகாசிப்பிக்கிறதில்லை என்று சொன்னால் பிரத்தியக்ஷமான சூரியாதிப் பிரகாசத்தைவிடாமலே न भाति என்பதற்கு பதிலாக न भासयति அதாவது பிரகாசிக்கவில்லை என்பதற்கு பதிலாக பிரகாசிப்பிக்கவில்லை என்று சொன்னால் லாகவம் ஏற்படுகிறது. ஆகையால் இந்த அர்த்தத்தையே எடுத்துக்கொள்ளவேண்டும். (23)

I-3-6 ல் 2 (23) வது சூத்திரம்.

## अपि च स्मर्यते । २३ (24)

2. முந்தின சூத்திரத்துக்கும் இதற்கும் சம்பந்தம்:-முந்தின சூத்திரத்தில் न भाति என்பதற்கு न भासयते

என்று அர்த்தம் செய்யவேண்டும் என்று சொல்லப்பட்டது. அப்படி செய்வதில் ஸ்மிருதிபலமிருக்கிறதென்று இதில் கூறுகிறார். (25)

3. பதஉரை:—

अपि च=மேலும்

स्मर्यते=ஸ்மிருதியில் சொல்லியிருக்கிறது. (26)

4. பொழிப்புரை:—

மேலும் ஸ்மிருதியும் பிரம்மத்தைப்பற்றி தேஜோரூபமாகச் சொல்லுகிறது.

5. பாஷ்யம்:—

மேலும் பகவத்கீதையின் அடியிற்கண்ட சுலோகங்களால் இந்தரூபம் பரமாத்மாவினுடையது என்றே தெரியவருகிறது.

न तद्भासयते सूर्यो न शशांको न पावकः यद्गत्वा न निवर्त्तन्ते तद्धाम परमं मम (XV- )

சூரியனாவது சந்திரனாவது அக்கினியாவது அதை பிரகாசிப்பிக்கிறதில்லை. எதை அடைந்து மனிதர்கள் திரும்பவில்லையோ அது என்னுடைய பரமமான இடம்.

(2) यदादित्यगतं तेजो जगद्भासयतेऽखिलम् यच्चन्द्रमसि यच्चाग्नौ तत्तेजो विद्धि मामकम् (XV-12)

சகலஜகத்தையும் பிரகாசிப்பிக்கிற எந்த தேஜஸ் சூரியனிடத்திலிருக்கிறதோ, சந்திரனிடத்திலும், அக்கினியினிடத்திலும் எந்த தேஜஸ் இருக்கிறதோ, அதை என்னுடையதாக அறிவாயாக.

ரா முதலாவது சுலோகத்தால் பிரம்மம் வேறு ஒன்றால் பிரகாசிக்கிறதில்லை என்றும் இரண்டாவது சுலோகத்தால் சகலத்தையும் பிரகாசிப்பிக்கிறதென்றும் தெரியவருகிறது. ஆகையால் अनुमान மந்திரம் பிரம்மத்தினிடத்தில் சமன்வயப்படுகிறதென்று சித்தமாகிறது. (28)

X. பூர்வபக்ஷபலன்:—தேஜோத்தியானம் அதாவது உபாஸ்தி.

சித்தாந்தபலன்:-நிர்க்குண ஸ்வயஞ்ஜோதியான ஆத்மஞானம். (29)

IX. வியாசாதிகரணமாலைப்படி அத்வைதச்சுருக்கம்

1 சுலோகங்கள்:—

न तत्र सूर्यो भातीति तेजोन्तरमुतात्रचित् ।
तेजोभिभावकत्वेन तेजोत्तरमिदं महत् ॥
चित्स्यात्सूर्याद्य भास्यत्वात्तादृक्तेजो प्रसिद्धितः ।
सर्वस्यात्पुरतो भानात्तद्भासा चान्यभासनात् ॥

2. விஷயவாக்கியம்:—

न तत्र .... ... ... विभाति

என்னும் முண்டகவாக்கியம். இதின் அர்த்தம் முன் சொல்லிய ஜோதிஸுக்கெல்லாம் ஜோதியாயிருக்கிறவிடத்தில் சந்திரசூரியாதிகள் பிரகாசிக்கிறதில்லை. பின்னையோவெனின் அந்த ஜோதிஸ்களை பிரகாசிப்பிக்கும் பிரகாசமான பதார்த்தத்தை அனுசரித்தே சர்வஜகத்தும் பிரகாசிக்கிறது. ஜகத்தானது பிரகாசிக்கும்போது தன்னுடைய சொந்த பிரகாசத்தால் விளங்கவில்லை. பின்னையோவெனின் அந்த பிரகாசமான பதார்த்தத்தின் பிரகாசத்தால் இதெல்லாம் விளங்குகிறது. (31)

3. சந்தேகம்:—

இந்த வாக்கியத்தில் ஜகத்தைப் பிரகாசிப்பிக்கிறதாகச் சொல்லியது சூரியாதிகள்போல் கண்ணால் பார்க்கக்கூடிய தேஜோந்திரமா (வேறுதேஜஸா) அல்லது சைதன்னியமா? (32)

4. பூர்வபக்ஷம்.— அது தேஜோந்திரம்தான். ஏனெனின் அது சூரியாதிதேஜஸை தோற்கச்செய்கிறது. மகாதேஜஸ்ஸின் சன்னிதானத்தில் ஸ்வல்ப தேஜஸ் மறைபட்டுப்போகிறது. சூரியன் முன்பாக தீபம்போலும். அப்படியே சூரியாதிகளை மறைக்கும்படியான தேஜஸும் அந்த சூரியாதிகளைவிடவும் அதிக தேஜோரூபமாகவேயிருக்கவேண்டியது. (33)

5. சித்தாந்தம்:—சூரியாதிகளால் பிரகாசிப்பிக்கப்படாததாகச் சொல்லப்பட்டவஸ்து சைதன்னியமே. ஏனெனின் சூரியாதிகளை மறைக்கும்படியான வேறு மகாதேஜஸ் இருக்கிறதாகத் தெரியவில்லை.

மேலும் तमेव भान्तं अनुभाति सर्वं என்பதாய் சகலத்துக்கும் முன் பிரகாசமாய் விளங்குவது சைதன்னிய தர்மம். तस्य भासा सर्वं इदं विभाति என்பதால் பிரகாசமாயும் பிரகாசமன்றியிலுமிருக்கிற சர்வஜகத்தும் விளங்குவது சைதன்னியதர்மத்தாலேயே. ஆகையால் இந்தவாக்கியத்தால் சித்தித்தது சைதன்னியமே (34

XII. விசிஷ்டாத்வைதப்படி சுருக்கம்.

I-3-5 ல் 8 (22)

1. தஜ்ஜாதீயத்தால் கூறப்பட்டவருடைய ஸாம்யம் ஜீவனுக்குச் சொல்லியிருப்பதால் அப்படி கூறப்பட்டவர் ஜீவனைவிட வேறான பரமாத்மாவே. (35)

I-3-5 ல் 9 (23)

2 अपि स्मर्यते (च இல்லை) பரமாத்ம உபாசனையால் பரமாத்ம சாம்யத்தை ஜீவன் அடைகிறான் என்று ஸ்மிருதியில் சொல்லியிருக்கிறது.

इदंज्ञानमुपाश्रित्य मम साधर्म्यमागताः सर्गेपि नोपजायन्ते प्रळये न व्यथन्ति च

என்று ஸ்மிருதியில் சொல்லியிருக்கிறது. (36)

I-3-6-வது அதிகரணம்.

1. இதின்கருத்து:— ஞானத்தின்பொருட்டு பிரார்த்திக்கத்தது விஷ்ணுவே, ஞானிசுகமன்று என்பதாம். (37)

2. இதிலடங்கிய சூத்திரங்கள்:-2 (22-23) (38)

3. இதின் விஷயவாக்கியம்:—

तदेतदिति मन्यन्ते निर्देश्यं परमं सुखं ।
कथं तु तद्विजानीयां किं नु भाति न भाति वा ॥

என்கிற காடகசுருதி (39)

4. சங்கதி.-முந்தின அதிகரணத்தில் एष आत्मा என்கிற இடத்தில் एषः என்கிற ஆண்பால்பதப்பிரயோகத்தால் விஷ்ணு என்று அர்த்தம் செய்யப்பட்டது. இந்த விஷயவாக்கியத்தில் तत् एतत् என்கிற அலிப்பால் பதங்கள் உபயோகிக்கப்பட்டிருப்பதால் விஷ்ணுவென்று அர்த்தமாகமாட்டாது என்று பூர்வபக்ஷி சொல்லுகிறபடி பிரத்தியுதாஹரண சங்கதி ஏற்படுகிறது. (40)

5. சந்தேகம்:—ஞானத்தின்பொருட்டு அறிய வேண்டிய விஷயம்

1. ஞானியின் சுகமா?

2. விஷ்ணுவா? (41)

6. பூர்வபக்ஷம்:—ஞானிசுகம்தான் அறியத்தக்கது. ஏனெனின் तत् विजानीयां என்கிற இடத்திலுள்ள तत् பதம் முந்தின வாக்கியத்திலுள்ள சுகத்தை கூறும். இந்த சுகம் சமீபத்திலிருக்கிற அதாவது तमात्मस्थं येनुपश्यन्ति என்கிற வாக்கியத்திலுள்ள ஞானிசுகத்தையே கூறுமேதவிர தூரத்திலிருக்கிற ஈச்வர சுகத்தைக் கூறமாட்டாது. மேலும் तत् என்பது அலிப்பால்பதம். ஆகையால் ஞானிசுகத்தைதான் கிரகிக்கவேண்டியது (42)

7. சித்தாந்தம்:—22-வது சூத்திரத்தின் அர்த்தம்:—

च இது சமுச்சயத்தைக் கூறுகிறது.

तस्य=तस्य भासा सर्वमिदं विभाति என்கிற சுருதியிலிருந்து இந்த பதம் எடுத்துக்கொள்ளப்பட்டிருக்கிறது. ஆகவே तस्य= பரமாத்மாவின் अनुकृतेः= காரியத்தை அனுசரித்து காரியஞ்செய்வதால் அதாவது तमेव भान्तं என்கிற வாக்கியசேஷத்தில் சூரியாதிகள் பரமாத்மாவின் பிரகாசத்தை அனுசரித்து பிரகாசிக்கிறார்கள் என்று சொல்லியிருப்பதால் तस्य भासा सर्वमिदं विभाति என்கிற சுருதியில் பரமாத்மாஜகத்தைபிரகாசிக்கும்படி செய்கிறார் என்றுசொல்லியிருப்பதாலும் விஷயவாக்கியத்தில் ஞானத்தின்பொருட்டு பிரார்த்திக்கத்தக்கது விஷ்ணுவே ஞானிசுகமன்று. (43)

8. I-3-6 ல் 2 (23)

முன் சொன்னதற்கு ஸ்மிருதி ஆதாரத்தைக் கூறுகிறார்.

स्मर्यते अपि=முன் சொன்னதற்கு கேவலம் சுருதிபிரமாணம் மட்டுமில்லை. यदादित्यगतं तेजो என்கிற பகவானுடைய வசனமும் (கீதை XV-12)ம் அதையே சொல்லுகிறது. (44)

I-3-6-வது அதிகரணம்

முற்றிற்று.

---

## 1-3-7-வது அதிக்ரணத்தின்

### அனுக்கிரமணிகை.



## 1-3-7-வது அதிகரணம்.

I. இதற்குப் பெயர் :—பிரமிதாதிகரணமென்பதாம். (1)

II. இந்த அதிகரணத்தின் கருத்து ஜீவாத்மா பரமாத்மா. இவர்களுக்குள் பரமாத்மாவையே அங்குஷ்டமாத்திர புருஷன் என்னும் பதம்கூறும் என்பதாம். (2)

III. இதின் விஷயவாக்கியம் :—

अङ्गुष्टमात्रः पुरुषो मध्य आत्मनि तिष्ठति ईशानो भूतभव्यस्य न ततो विजिगुप्सते (कठ-II-4-12)

अङ्गुष्ठमात्रः पुरुषो ज्योतिरिवावधूमकः ईशानो भूतभव्यस्य स एवाद्य स उश्व एतद्वैतत् (कठ-II-4-13)

அர்த்தம் :—

(1) சரீரத்துக்கு மத்தியில கட்டைவிரல் பரிமாணமான புருஷன் இருக்கிறான். அவன் சென்றதற்கும் வரப்போகிறதற்கும் ஈசன் அவனிடத்தினின்றும் ஒழிய ஒருவன் இச்சிக்கிறதில்லை.

(2) அங்குஷ்டபரிமாணமான புருஷன் புகையில்லாத ஜோதிஸ்போலிருக்கிறான். சென்றதற்கும் வரப்போகிறதற்கும் ஈசன் இன்றும் நாளையும் அவனே இருக்கிறான். நீ எதைக்கேட்டாயோ அதுவே இது.

IV. சங்கதி :—

(a) முந்தின அதிகரணத்துக்கும் இதற்கும் சங்கதி :—திருஷ்டாந்தசங்கதி.

(1) பிரம்மவித்தியாபரணப்படி :—முந்தின அதிகரணத்தில் न तत्र என்கிற வாக்கியத்துக்கு ஸ்மிருதியை அநுசரித்து அர்த்தம் செய்யப்பட்டது. அப்படியே இந்த அதிகரணத்திலும் ஸ்மிருதியை அநுசரித்து ஜீவபரமாய் அர்த்தம் செய்யலாம் என்று பூர்வபக்ஷி சொல்லுவதால் திருஷ்டாந்தசங்கதி ஏற்பட்டது.

(2) ராமாநந்தீயப்படி :—முந்தின அதிகரணத்தில் அநுபான லிங்கத்தால் न भाति என்பதற்கு न भासयते அதாவது எதை சூரியாதிகள் பிரகாசிப்பிக்கவில்லையோ அது அதாவது பிரம்மம் என்று அர்த்தம் செய்யப்பட்டது. அப்படியே இந்த விஷயவாக்கியத்தில் முதலிற்கூறிய பரிமாணலிங்கத்தால் ஜீவனை அங்கீகரித்து, ஈசுவரனாயிருக்கிறேன் என்று தியானம் செய்யவேண்டியதாகையால் தியானவிதியை ஒப்புக்கொண்டு இந்த வாக்கியத்தை தியானபரமாக அர்த்

தம் செய்யவேண்டியதாக பூர்வபக்ஷி சொல்லுகிறுன். ஆகவே இரண்டு இடத்திலும் இல்லாததை வரவழைத்துக்கொள்ளவேண்டியதாக இருப்பதால் திருஷ்டாந்த சங்கதி ஏற்பட்டது. (4)

(2) பாதசங்கதி :—கட்டைவிரல் பரிமாணம் என்பது ஜீவலிங்கம், இது முதலில் கூறப்பட்டிருக்கிறது. ஈசான: என்பது பிரம்மலிங்கம். ஆனால் ஜீவனையும் ஈசானனுக சொல்லியிருக்கிறது. ஆகவே பிரம்மலிங்கம் ஜீவலிங்கத்தைவிட துர்பலமாகக் காணப்படுவதால் இந்த அதிகரணத்தை இந்த பாதத்தில் படிக்கப்பட்டது.

(c) மற்ற சங்கதிகள் :—முன்போலவே. (5)

V. ஸந்தேகம் :-இந்த விஷயவாக்கியத்தில்கூறிய அங்குஷ்டமாத்திர புருஷன்,

(a) ஜீவனு? (b) பரமாத்மாவா? என்பது சந்தேகம்.

ஆ இதற்கு காரணம் ஜீவனுடைய பரிமாணமும் சொல்லப்பட்டிருக்கிறது. பரமாத்மாவுக்குரிய ஈசான பதமும் வந்திருக்கிறது. (6)

VI. இதிலடங்கிய சூத்திரங்கள் :—2(24—25)

இவைகளில்,

24ல் அங்குஷ்டமாத்திரன் ஈசுவரன் என்பதும்

25ல் அங்குஷ்டமாத்திரம் என்பது எப்படி பொருந்தும் என்பதும்

விவரிக்கப்படுகின்றன. (7)

VII. பூர்வபக்ஷம் :—ஜீவனுக்குப் பரிமாணம் உபதேசிக்கப்பட்டிருப்பதால் அங்குஷ்டமாத்திர புருஷன் ஜீவனுயிருக்கவேண்டியது. அளவில்லாமல் நீண்டும் அகண்டும் (रा அதாவது மஹத்தாய்) இருக்கிற பரமாத்மாவுக்கு கட்டைவிரல் பரிமாணத்தை சுருதி உபதேசிக்கமாட்டாது. ஜீவன் உபாதியுடன் கூடினவனுனதாலும் ஹிருதயகமல கோசமானது ஜீவனை அறிய ஸ்தானமாயிருப்பதாலும், இந்த ஹிருதயம் அங்குஷ்ட பரிமாணமாயிருப்பதாலும் ஜீவனை அங்குஷ்டபரிமாணமாகச் சொல்லலாம் மஹாபாரதம் வன பர்வத்தில் 296-வது அத்தியாயத்தில் 16-வது சுலோகத்தில்

अथ सत्यवतः कायात् पाशबद्धं वशंगतम् ।
अङ्गुष्ठमात्रं पुरुषं निश्चकर्ष यमो बलात् ॥

அதாவது மரணத்துக்குப்பிறகு யமன் பலாத்காரமாய் சத்தியவானுடைய சரீரத்தினின்றும் கர்மவசமடைந்த (பரதந்திரனை) கட்டைவிரல் பரிமாணமான புருஷனை கயிற்றால் கட்டி இழுத்தான்.

என்று சொல்லியிருக்கிறது. பரமேசுவரன் யமனால் பலாத்காரமாய் இழுக்கப்படமாட்டான். ஆகையால் இந்த வாக்கியத்தில் அங்குஷ்டமாத்திரன் ஜீவன் என்று நிச்சயமாகிறது. இந்த விஷயவாக்கியத்திலும் இந்த ஜீவனையே கிரகிக்கவேண்டியது. (8)

VIII. சித்தாந்தம்.

1. இப்படி பூர்வபக்ஷி சொல்ல

**शब्दादेव प्रमितः ॥ २४** (9)

என்கிற சூத்திரத்தில் உத்தரம் சொல்லுகிறார்.

2. பதஉரை.

शब्दात् एव சப்தத்தினுல் பரமேசுரனே.
प्रमितः அறியப்படுகிறுன். (10)

3. பொழிப்புரை.

ஈசுவரசப்தம் பிரயோகத்தால் அங்குஷ்டமாத்திரன் ஈசுவரன் என்றே தெரியவருகிறது. (11)

4. பாஷ்யம்

(1) शब्दात् கட்டைவிரல் பரிமாணமான புருஷன் பரமாத்மாவாகவே இருக்கவேண்டும். ஏனெனின் शब्दात् அதாவது ईशानो भूतभव्यस्य அதாவது சென்றதற்கும் வரப்போகிறதற்கும் ஈசுவரன் என்று சொல்லியிருக்கிறது. பரமேசுவரனைத்தவிர வேறு ஒருவன் சென்றதற்கும் வரப்போகிறதற்கும் தங்குதடையற்ற நியாமகனுக இருக்கமாட்டான். एतद्वै तत् என்பதும் பிரகிருதத்தில் கேட்டதைத்தான் கூறுகிறது. எது கேட்கப்பட்டதோ அது அதாவது பிரம்மம் என்று அர்த்தம்.

अन्यत्र धर्मादन्यत्राधर्मादन्यत्रास्मात् कृताकृतात् ।
अन्यत्र भूताच्च भव्याच्च यत्तत् पश्यसि तद्वद ॥ (कठ-I-2-14)

தர்மாதர்மங்களைவிடவும் காரியகாரணங்களைவிடவும், சென்றது, வரப்போகிறது இவைகளைவிடவும் வேறான எதை பார்க்கிறீரோ அதை சொல்லும்

என்கிற வாக்கியத்தால் கேட்கப்பட்டது பிரம்மம் என்று தெரியவருகிறது. (12)

ஆ (2) (ஏவ சுருதியும் லிங்கமும் ஏற்பட்ட இடத்தில்சுருதிதான் பிரபலம் என்பதைகாட்டும் பொருட்டு ஏவ சப்தம் உபயோகிக்கப்பட்டிருக்கிறது).

பரமேசுவரனைக்கூறும் ஈசான: என்கிற சப்தம் உபயோகிக்கப்பட்டிருப்பதால் பரமேசுவரனையே அறியவேண்டியது. (13)

IX. I-3-7ல் (2) 25-வது சூத்திரம்

**हृद्यपेक्षया तु मनुष्याधिकारत्वात् २५।** 14

2. முந்தின சூத்திரத்துக்கும் இதற்கும் சம்பந்தம் :—முந்தின சூத்திரத்தில் அங்குஷ்டமாத்திரன் பரமேசுவரன் என்று ஈசானசப்தத்தால் நிச்சயிக்கப்பட்டது. அங்குஷ்ட பரிமாணத்தை எப்படிச் சொல்லலாமென்பதை இதில் விவரிக்கிறார். (15)

3. பதஉரை.

तु=ஆனால்

हृद्यपेक्षया= ஹிருதயத்தை அபேக்ஷித்து

मनुष्याधिकारत्वात्= மனிதனுக்கே அதிகாரமிருப்பதால். (16)

4. பொழிப்புரை.

ஹிருதயத்தை அபேக்ஷித்து அங்குஷ்ட மாத்திரன் பரமேசுவரன் என்று சொல்லலாம். எந்த ஹிருதயம் எனின் மனிதனுடைய ஹிருதயம். ஏன் இவனுடையதுதான் எனின் இவனுக்கே வேதாத்தியயனத்தில் அதிகாரமுண்டு (17)

5. பாஷ்யம். (1) हृद्यपेक्षया :—

பரமாத்மா எங்கும் வியாபித்திருந்தாலும், ஹிருதயத்திலிருக்கிறதை அபேக்ஷித்து பரமாத்மாவுக்கு கட்டைவிரல் பரிமாணம் சொல்லப்படுகிறது. ஆகாசத்துக்கு மூங்கில்கணுவை அபேக்ஷித்து ஒருமுழம் என்னும் நீளம் கூறுவதுபோலும், அளவிலடங்காத பரமாத்மாவுக்கு கட்டைவிரல் பரிமாணம் வேறுவிதமாய் பொருந்தமாட்டாது. ஈசானசப்தம் முதலியதால் பரமாத்மாவைத்தவிர வேறு ஒன்றை கிரகிக்கமுடியாது என்று சொல்லப்பட்டிருக்கிறது. (ரா அங்குஷ்ட மாத்திரன் முக்கியமாய் ஜீவனைக் கூறுமே, பிரம்மத்தை கௌவணமாய் கிரகிப்பானேன் எனின், முக்கியார்த்தம் பொருந்துமானால் அதை கிரகிக்கவேண்டியது நியாயம்தான். இவ்விடத்திலோ சுருதி விரோதமிருப்பதால் முக்கியார்த்தம் சித்திக்கவில்லை. ஆகவே கௌணத்தையே கிரகிப்பதேயுக்தம் என்பதுகருத்து) (18)

(2) பிராணிக்குப் பிராணிஹிருதயத்தின் பரிமாணம் வித்தியாசப்படுவதால் ஹிருதயத்தை அபேக்ஷித்து கட்டைவிரல் பரிமாணத்தைச் சொன்னது பொருந்தாது எனின் அதற்கு உத்தரமாக

मनुष्याधिकारत्वात् என்று சொல்லுகிறார். சாஸ்திரம் பொதுவாய் பிரவிர்த்தித்திருந்தாலும் மனுஷியர்களையே அதிகாரிகளாக்குகிறது ஏனெனின் அவர்களே சக்தியுள்ளவர்கள், ஆசையுள்ளவர்கள், நிஷேதிக்கப்படாதவர்கள், உபநயனாதிவிதிக்குட்பட்டவர்கள்.

(ரா சக்தியுள்ளவர்கள் என்பதால் பசு முதலியவைகளையும், தேவதைகளையும், ரிஷிகளையும் விலக்கவேண்டும்.

பசுவாதிகள் சாஸ்திரார்த்தஞானத்தை அடையாதவைகளாதலால் அவைகளுக்குக் கர்மத்தில் சக்தியில்லை. இந்திரன் முதலான தேவதைகள் ஸ்வயம் தேவதைகளானதால் தங்களை உத்தேசித்தே தாங்கள் கர்மஞ்செய்யமாட்டார்கள்.

மனுஷியர்கள் ரிஷிகளை வரிக்கும்படி சொல்லியிருக்கிறது. ரிஷிகள் வரிக்கும்படி வேறு ரிஷிகள் சொல்லப்படவில்லை. ஆகையால் ரிஷிகளும் விலக்கப்பட்டார்கள்.)

(ஜ ஆகவே சக்தி என்பது அங்கத்தோடு பிரயோகங்களை அனுஷ்டித்தலிலுள்ள சாமார்த்தியத்தை கூறுவதால் இந்த சாமார்த்தியம் ஏற்படாதவர்களை விலக்கவேண்டியது.)

ரா ஆசையுள்ளவர்கள் என்பதால் காமங்களற்ற முமுக்ஷுக்களையும் ஸ்தாவரங்களையும் விலக்கவேண்டியது. முமுக்ஷுக்களுக்கு சித்தசுத்தியின்பொருட்டு நித்தியத்தில் ஆசையேதவிர காம்மியகர்மங்களிலில்லை. சித்தசுத்தமடைந்தவர்களுக்கு சிரவணாதிகளில் ஆசையேதவிர கர்மத்திலில்லை.

ரா நிஷேதிக்கப்பட்டவர்கள் யஞ்ஞம் விதிக்கப்படாத சூத்திராதிகள் இவர்களையும் விலக்கவேண்டியது.

பூர்வமீமாம்சையின் 6-வது அத்தியாயத்தில் 1-வது பாதம் 1-வது சூத்திரத்தில் அதிகாரியின் லக்ஷணம் வர்ணிக்கப்பட்டிருக்கிறது. (ரா இந்த லக்ஷணப்படி பிராமணன் க்ஷத்திரியன், வைசியன் இவர்களே அதிகாரிகள்) (அது எப்படியெனின்.

स्वर्गकामो यजेत என்கிற சாஸ்திரம் பொதுவாக சுவர்க்க சுகத்தை விரும்புகிறவர்களைக்குறித்து ஏற்

பட்டிருப்பதாலும், பசு முதலிய சகலபிராணிகளும் சுகத்தை விரும்புகிறதாலும், சுகசாதனமான கர்மத்தில் பசுமுதலியவைகளுக்கு அதிகாரம் உண்டென சங்கித்து, அவைகளுக்குச் சக்தியில்லாமையால் சுவர்க்ககாமபதம் மனுஷியபரமென நிரூபிக்கி மனுஷியர்களுக்கே கர்மாதிகாரமென்று ஸ்தாபித்தபிறகு, பிராமணன் முதலான நான்கு ஜாதிகளுக்கும் அதிகாரமுண்டென சங்கித்து

वसन्ते ब्राह्मणोऽग्नीनादधीत ग्रीष्मेराजन्यः—शरदि वैश्यः

என்கிற சுருதிப்படி வசந்தத்தில் பிராமணனும் கிரீஷ்மத்தில் க்ஷத்திரியனும், சரத்காலத்தில் வைசியனும் அக்கினி ஆதானம் செய்யவேண்டுமென்று மூன்றுவர்ணங்களுக்குமட்டுமே அக்கினி சம்பந்தம் சொல்லியிருப்பதாலும் அவர்களுக்குக் கர்மத்தில் அதிகாரம். (19)

(3) மனுஷியர்களின் சரீரம் கிஞ்சித்தமான அளவுள்ளது. இதற்குத்தக்கபடியே இவர்களுடைய ஹிருதயமும் கட்டைவிரல் பரிமாணமாக நியதமாயிருக்கிறது. ஆகவே சாஸ்திரத்துக்கு மனுஷியனே அதிகாரியானதால், மனுஷிய ஹிருதயத்தை அபேக்ஷித்து பரமாத்மாவுக்கு கட்டைவிரல் பரிமாணம் கூறப்பட்டது. (20)

(4) பரிமாணத்தை உபதேசித்தபடியாலும் ஸ்மிருதியாலும் ஜீவனையே அங்குஷ்டமாத்திரனாக அறியவேண்டியது என்று பூர்வபக்ஷி சொன்னதற்கு உத்தரம் என்னவெனின் स आत्मा तत्त्वमसि முதலிய உபதேசங்கள்போல் அங்குஷ்டமாத்திரனான ஜீவனுக்கே இந்த பிரம்மத்வம் உபதேசிக்கப்பட்டிருக்கிறது. வேதாந்த வாக்கியங்கள் இரண்டுவிதமாய் பிரவிர்த்தித்திருக்கின்றன. சில இடங்களில் பரமாத்மஸ்வரூபத்தை நிரூபணம் செய்கின்றன. சில இடங்களில் ஜீவனும் பரமாத்மாவும் ஒன்று என்பதாய் உபதேசிக்கின்றன. இவ்விடத்தில் ஜீவனும் பரமாத்மாவும் ஒன்று என்று சுதிரு உபதேசிக்கிறதேதவிர, எதற்கும் கட்டைவிரல் பரிமாணத்தையும் உபதேசிக்கவில்லை. இந்த அர்த்தத்தையே

अंगुष्ठमात्रः पुरुषोन्तरात्मा सदा जनानां हृदये सन्निविष्टः। तं स्वाच्छरीरात् प्रवृहेन् मुञ्जादिवेषीकां धैर्येण तं विद्याच्छुक्रममृतम् (कठ-II-6-17)

என்கிற பின்வரும் சுருதியும் ஸ்பஷ்டமாக்குகிறது.

(ர அர்த்தம்:—அங்குஷ்டமாத்திரனான, பூர்ணனான அந்தராத்மா எப்போதும் ஜனங்களுடைய ஹிருதயத்தில் இருக்கிறான். அவனைத் தன் சரீரத்தினின்றும் இந்திரிய நிக்கிரகம் முதலியவைகளால் வேறுபடுத்தி அப்படி வேறுபடுத்தப்பட்ட ஆத்மாவை ஸ்வயம் பிரகாசமாயும் கூடஸ்தமாயுமிருக்கிற பிரம்மமாக அறியவேண்டியது.)

ர (ஆகையால் கடவல்லிவாக்கியம் ஞேயமான பிரத்தியக்பிரம்மத்தினிடத்தில் தாற்பரியப்படுகிறது என்று சித்தமாகிறது.) (21)

X. பூர்வபக்ஷபலன்:— பிரம்மரூபமாக ஜீவனை உபாசித்தல்.

சித்தாந்தபலன்:-ஜீவபிரம்ம ஐக்கிய ஞானம். (22)

XI. வியாசாதிகரணமாலைப்படி அத்வைதச்சுருக்கம்.

1. சுலோகங்கள்:—

अंगुष्ठमात्रो जीवःस्यादीशो वाऽल्पप्रमाणतः ।
देहमध्ये स्थितेश्चैव जीवो भवितुमर्हति ॥
भूतभव्येशता जीवे नास्त्यतोऽसाविहेश्वरः ।
स्थितिप्रमाणे ईशेपि स्तो ह्यस्योपलब्धितः ॥ (23)

2. விஷயம்:—கடவல்லிசுருதி II-4-12) (24)

3. பூர்வபக்ஷம்:—அங்குஷ்டமாத்திரன் ஜீவன் ஏனெனின் அங்குஷ்டமாத்திரம் என்று அற்பபிரமாணம் கூறப்பட்டிருக்கிறது. मध्य आत्मनि तिष्ठति என்பதால் தேகமத்தியில் இருக்கிறதாயும் சொல்லியிருக்கிறது. (25)

4. சித்தாந்தம்:—பரமாத்மா அங்குஷ்டமாத்திரம். ஏனெனின் ईशानो भूतभव्यस्य என்பதினால் போன ஜகத்து வரப்போகிற ஜகத்து இவைகளுக்கெல்லாம் ஈசிதாவென்று சுருதி சொல்லுகிறது. ஜீவனிடத்தில் ஆளும்தன்மையில்லை. ஜீவன் வேறு. ஒருவனால் ஆளப்படுகிறான். அற்பபிரமாணமும், தேகத்திலிருப்பும் ஈசுவரனுக்கும் பொருந்தும். ஹிருதய புண்டரீகத்தில் பிரம்மத்தை அறியவேண்டியதாகையால் அவ்விரண்டு வசனங்களும் ஏற்பட்டன. ஆகையால் அங்குஷ்டமாத்திரம் பரமேசுவரன். (26)

XII. விசிஷ்டாத்வைதப்படி,

I-3-7-வது அதிகரணம்.

1. இது பிரமிதாதிகரணம்

2. இதிலடங்கிய சூத்திரங்கள் 2. (24—25)

3. விஷயவாக்கியம் :-அத்வைதத்தில்போல் (27)

## XIII. த்வைதப்படி.

### 1-3-7-வது அதிகரணம்.

1. இதின் கருத்து :—காடகத்திற் சொல்லிய ஈசான : என்பவன் பரமாத்மாவே வாயுவன்று என்பதாம். (28)

2. இதிலடங்கிய சூத்திரங்கள்:-2 (24-25) (29)

3. இதின் விஷயவாக்கியம் :—अंगुष्ठमात्रपुरुषः ...

என்கிற காடக (II-4-12) சுருதியில் சொல்லிய ஈசானம் விஷயம். (30)

4. சங்கதி :—முந்தின அதிகரணங்களில் விஷ்ணு உபாசனியர் என்று ஏற்பட்டது.

विश्वेदेवा उपासते என்கிறதினால் உபாஸியபுருஷனுடைய ஞானத்தால் மோக்ஷம் கிடைக்கிறதாகச் சொல்லியிருப்பதால் விஷ்ணுஞானம் அவசியம் என்று ஏற்படவில்லை என்பதாய் பூர்வபக்ஷி சொல்லுகிறபடி ஆக்ஷேபசங்கதி ஏற்படுகிறது. (31)

5. சந்தேகம் :— விஷய வாக்கியத்திலுள்ள ஈசான :

(1) முக்கிய வாயுவா ? அல்லது

(2) விஷ்ணுவா ? (32)

6. பூர்வபக்ஷம்:—வாயுவே ஏனெனின், பிராணாதிகளின் வியவஸ்தையைச் செய்கிறவனாக சொல்லியிருக்கிறது. (33)

7. சித்தாந்தம் :—

24-சூத்திரம் :—

பதஉரை.

प्रमितः=ईशानो भूतभव्यस्य

என்கிற இடத்தில் ஈசானசப்தத்தால் கூறப்பட்டவன் விஷ்ணுவென்று நிச்சயிக்கப்பட்டிருக்கிறான். வாயு கூறப்படவில்லை.

ஏனெனின்,

शब्दात् एव= இந்த சுருதியில் வேறு ஒருவனுக்கும் பொருந்தாத वामन சப்தமிருக்கிறது. (34)

I-3-7ல் 2 (25)

8. அ-கை :—சர்வவியாபியான பிரம்மத்தை இந்த अंगुष्ठमात्र சுருதியில் அங்குஷ்டபரிமாணமுள்ளதாக எப்படிச் சொல்லலாம். எனின் உத்தரம் கூறுகிறார்:— हृद्यपेक्षयातु= அங்குஷ்டமாத்திர சுருதியில் ஹிருதயத்துக்குள்ளிருக்கும் ஆகாசம் கட்டைவிரல் பரிமாணமாயிருப்பதால் பரமேசுவரன் அங்குஷ்டமாத்திரன் என்று சொல்லியிருக்கிறது. ஏனெனின் मनुष्याधिकारत्वात्= பசு முதலியவைகளுக்கு கட்டைவிரல் இல்லாவிடினும் மனிதர்களுக்கு வேதத்தை அறிவதில் அதிகாரமிருப்பதால் அவர்களை உத்தேசித்து இப்படி சொல்லப்பட்டது. (35)

9. பூர்வபக்ஷபலன் :—உபாஸிப்ர் விஷ்ணுவாகாவிட்டால் ஜிஞ்ஞாஸா அதிகரணம் ஆக்ஷேபிக்கப்பட்டுப்போகிறது.

சித்தாந்தபலன் :—சமாதானம். (36)

I-3-7-வது அதிகரணம்.

முற்றிற்று.

## I-3-8-வது அதிகரணத்தின்,

### அனுக்கிரமணிகை.

I-3-8வது அதிகரணம்

I. இதின் பெயர் :—தேவதாதிகரண மென்பதாம். (1)

II. இந்த அதிகரணத்தின் கருத்து :—தேவதைகளுக்கு நிர்குணபிரம்ம வித்தையில் அதிகாரமுண்டென்பதாம். (2)

III. இதின் விஷயவாக்கியம் :—

तद्यो यो देवानां प्रत्यबुध्यत स एव तदभवत् तथर्षीणाम् (बृह I-4-10)

தேவதைகளுக்குள்ளே எவன் பிரம்மத்தை அறிந்தானோ அவனே பிரம்மமாவான் அப்படியே ரிஷிகளுக்குள்ளும்.

IV. சங்கதி :— (3)

(1) முந்தின அதிகரணத்துக்கும் இதற்கும்:- முந்தின அதிகரணத்தில் மனுஷியனுடைய ஹிருதயத்தை அபேக்ஷித்து அங்குஷ்டமாத்திர சுருதிக்கு அர்த்தம் செய்ய வேண்டியது என்றும் சாஸ்திரத்தில் மனுஷியனுக்கு அதிகாரம் என்றும் சொல்லப்பட்டது. மனுஷியாதிகாரத்தைக் கேட்டவுடன் தேவதைகளின் அதிகாரம் ஞாபகம்வர அதைப்பற்றி இந்த அதிகரணம் தீர்மானிக்கிறது. ஞாபகத்துக்கு வந்ததை உபேக்ஷை செய்யாமை பிரசங்கமெனப்படும். ஆகவே பிரசங்க சங்கதி ஏற்பட்டது. (4)

(2) பாதசங்கதி :—சமன்வய அத்தியாயத்தில் அதிகாரத்தைப்பற்றி விசாரிக்கவேண்டியது அனுசிதமே யெனின், பிரசங்கத்தில் ஏற்பட்டதால் அது விசாரிக்கப்பட்டது வேறுவிதமாய் சங்கதி ஏற்படவில்லை.

இதர சங்கதிகளை முன்போலவே அறியவும். (5)

V. சந்தேகம் :—மனுஷியாளுக்கு அதிகாரம் உண்டென்று சொன்னதின் பேரில் தேவதைகளின் ஞாபகம்வர அவர்களுக்கும் வேதாந்த சிரவணம் முதலியவைகளில் அதிகாரம் உண்டா இல்லையா வென்பது சந்தேகம். இதற்குக் காரணம் தேவதைகளுக்குச் சரீரம் இருக்கிறதென்று சிலரும் இல்லை என்று சிலரும் சொல்லுவதேயாம். (6)

VI. இதிலடங்கிய சூத்திரங்கள் 8. (26-33) இவைகளில்.

26-ல் தேவதைகளுக்குச் சரீரமிருப்பதால் வித்தையில் அதிகாரமிருக்கிற தென்றும்,

27-ல் சரீரமிருந்தால் கர்மத்தில் அசங்கதமேற்படுமென்பதற்குப் பரிஹாரமும்,

28-ல் வேதத்திலும் அசங்கதமில்லை என்றும்,

29-ல் சப்தம் நித்தியம் என்றும்

30 ல் ௸

31-ல் எல்லா உபாசனைகளில்தான் தேவதைகளுக்கு அதிகாரமில்லை யென்றும்,

32-ல் தேவதைகளுக்குச் சரீரமேயில்லை என்றும்

33-ல் 31-32ல் கண்ட பூர்வபக்ஷத்துக்கு உத்தரமும் அதாவது சரீரமிருக்கிறதென்றும் விசாரிக்கப்படுகின்றது.

VII. பூர்வபக்ஷம் :—

அதிகாரியானவன் ஆசையுள்ளவனாயும், சமர்த்தனாயும், வித்வானாயும், சாஸ்திரத்தால் விலக்கப்படாதவனாயுமிருக்க வேண்டும். தேவதைகளுக்குச் சரீரமில்லை. சரீரமிருந்தால்தான் ஆசை முதலியவைகள் சித்திக்கும். ஆகையால் தேவதைகளுக்கு அதிகாரமில்லை. (8)

VIII. சித்தாந்தம் :—

1. இப்படி பூர்வபக்ஷிசொல்ல வியாசர் சித்தாந்தத்தை,

तदुपर्यपि बादरायणः सम्भवात् ।२६

என்கிற சூத்திரத்தில் கூறுகிறார். (9)

2. பதவுரை :—

तत्= மனுஷியர்களுக்கு

उपरि अपि= மேலிருக்கிறவர்களையும்

(शास्त्र:=சாஸ்திரமானது

अधिकरोति=அதிகாரியாக்குகிறது.

इति= என்று)

बादरायण:=வியாசர்

(मन्यते=எண்ணுகிறார்)

सम्भवात्= காரணம் சம்பவிக்கிறபடியால் (10)

3. பொழிப்புரை:—

மனிதர்களுக்கு மேலிருக்கிற தேவதைகளுக்கும் பிரம்மவித்தையில் அதிகாரம் இருக்கிறதென்று பாதராயண ஆசாரியர் நினைக்கிறுர். ஏனெனின் அதிகாரகாரணம் இருக்கிறது. (11)

4. பாஷ்யம்:—

1. तदुपर्यपि बादरायणः— பிரம்ம ஞானத்தில் மனுஷியர்களுக்கு அதிகாரமிருக்கிறதென்று நீ சொன்னது சரிதான்; ஆனல் மனுஷியர்களுக்குத்தான் அதிகாரமிருக்கிறதென்கிற நியாயமில்லை. அவர்களுக்கு மேலிருக்கிற தேவதைகளுக்கும் பிரம்மவித்தையில் அதிகாரமிருக்கிறதென்று பாதராயணுசாரியார் பாவிக்கிறுர். ஏனெனின். (12)

2. सम्भवात्- அதிகாரம் சித்திக்கிறதற்குக் காரணமான ஆசைமுதலியவைகள் அவர்களிடத்திலிருக்கின்றன.

(a) அர்த்தித்வம்:— காரியரூபமான சுவர்க்காதி ஐசுவரியமும் அநித்தியம் என்று பரியாலோசனை செய்து பார்ப்பதினுல் மோக்ஷத்தில் இச்சை தேவதைகளுக்கும் உண்டாகிறது. (13)

ர. (b) சாமர்த்தியம்:— (सहस्राक्षो गोत्रभिद्वज्रबाहुः முதலிய) மந்திரம், (इन्द्रप्रजापतिसंवादरूप)

அர்த்தவாதம், (பாரதம் முதலிய) இதிஹாஸம், (விஷ்ணுபுராணம் முதலிய) புராணம், சில்பசாஸ்திரம் இவைகளால் தேவதைகளுக்கும் சரீரமிருக்கிறதென்று தெரியவருவதால் அவர்களுக்கும் சாமர்த்தியம் உண்டு. (14)

ர (c) நிஷேதம்:—(சூத்திரனுக்கு யஞ்ஞத்தில் அதிகாரமில்லை என்று நிஷேதம் ஏற்பட்டிருப்பதுபோல்) தேவதைகளுக்கு வித்தையில் அதிகாரமில்லை என்பதாய் நிஷேதம் ஏற்படவில்லை. (15)

ர (d) உபநயன விதி:— (விக்கிரகமிருக்கிறபடியால் சாமர்த்தியம் இருந்தாலும், உபநயனம் அவர்களுக்கு ஏற்படாததினுல் சாஸ்திரீய சாமர்த்தியம் இல்லை யெனின்.)

உபநயனம் முதலியதை விதிக்கும் சாஸ்திரத்தால் அவர்களுக்கு அதிகாரம் விலகவில்லை, ஏனெனின் உபநயனத்தின்பிரயோசனம் வேதாத்தியயனம், தேவதைகள். ர (ஜன்மாந்திரத்திற் செய்த அத்தியயன பலத்தினுல்) அவர்களுக்கு வேதங்கள் தானுகவே ஞாபகத்துக்கு வருகின்றன.

ர (பாலர்களிடத்தில் பிரவேசித்த பிசாசாதிகள் கூட வேதத்தைச் சொல்லுவதைப்பார்த்திருக்கிறோம். தேவதைகளுக்கு ஜன்மாந்திரஸ்மரணை இருக்கும். அப்படி ஸ்மரிக்கப்பட்ட வேதாந்தத்தின் அர்த்தவிசாரத்தை அவர்கள் செய்வது யுக்தம். ஆகையால் வேதாத்தியயனம் செய்யும் பொருட்டு அவர்களுக்கு உபநயனம் வேண்டுமென்கிற நியமமில்லை)

ர (அல்லது स्वाध्यायोऽध्येतव्यः தன்னுடைய சாகையை அத்தியயனம் செய்யவேண்டியது என்று ஏற்பட்டிருக்கிறது. மனுஷியர்கள் தங்கள் தங்களுடைய பூர்விகர்கள் அத்தியயனம் செய்துவந்ததை தாங்களும் அத்தியயனம் செய்கிறுர்கள். தேவதைகளுக்கோ தங்களுடைய சாகை என்று ஏற்படவில்லை. எல்லா சாகைகளும் அவர்களுக்குச்சமம். ஆகையால் அவர்களுக்கு அத்தியயனநியமம் ஏற்படவில்லை. ஆகையால் உபநயனம் வேண்டியதில்லை) (16)

ர (e) ஆனுலும் (குருகுலவாசம் முதலியவைகள் அவர்களுக்கு உண்டு. ஏனெனின்)

एकशतं ह वै वर्षाणि मघवान् प्रजापतौ ब्रह्मचर्यमुवास (छा-VIII-11-3)

(இந்திரன் பிரம்மாவினிடத்தில் ஸ்திரீசங்கம் முதலியதைவிட்டு 101-ஞு வசித்தான்)

भृगुर्वै वारुणिर्वरुणं पितरमुपससार अधीहि भगवो ब्रह्म (तै-III-1)

பிருகுவானவர் வருணனுகிற பிதாவை சுவாமின் பிரம்மத்தைச் சொல்லும் என்று அடைந்தார்.

இவை முதலிய சுருதிகள் பிரம்மவித்தையைக் கிரகிக்கும் பொருட்டு இவர்களுக்கும் பிரம்மசரியம் முதலியதுண்டு என்று காட்டுகின்றன. (17)

ர (f) (யாகத்தில் இந்திரனை உத்தேசித்து ஹோமம்செய்யச் சொல்லியிருக்கிறது. இந்திரனே யாகம் செய்கிறதாயிருந்தால் தன்னை உத்தேசித்தே ஹோமம் செய்யவேண்டும். இது அசம்பாவிதம். அப்படியே ரிஷிகளை வரிக்கும்படி சொல்லியிருக்கிறது. ரிஷிகளே யாகம் செய்கிறதாயிருந்தால் அவர்கள் தங்களையே வரிக்கவேண்டும். இதுவும் அசம்பாவிதம். ஆகவே) தேவதைகளுக்கு வேறு தேவதைகளில்லாதபடியாலும், ரிஷிகளுக்கு வேறு ரிஷிகளில்லாதபடியாலும் கர்மத்தில் அதிகாரமில்லை என்று சொல்லியிருந்தாலும், வித்தையில் அதிகாரகாரணமில்லை என்பது

இல்லை. வித்தையில் அதிகாரம் பெற்ற இந்திரன் முதலானவர்கள் இந்திரன் முதலானவர்களை உத்தேசித்துச் செய்ய வேண்டியது யாதொன்றுமில்லை. அப்படியே பிருகு முதலானவர்களும் சகோத்திரர்களான பிருகுமுதலானவர்களை உத்தேசித்துச் செய்யவேண்டியது யாதொன்றுமில்லை. ஆகையால் தேவதைகளுக்கும் வித்தையில் இருக்கிற அதிகாரத்தை எவனும் தள்ள முடியும். (18)

(g) தேவாதிகளுக்கு அதிகாரமிருந்தால் அங்குஷ்டமாத்திர சுருதி எப்படிப் பொருந்துமெனில், அவர்களுடைய அங்குஷ்டத்தை உத்தேசித்து அந்த சுருதியும் பொருந்தும். (19)

IX. I-3-8ல் 2(27)வது சூத்திரம்.

## विरोधः कर्मणीति चेन्नानेकप्रतिपत्ते दर्शनात् ।२७ (20)

2. முந்தின சூத்திரத்துக்கும் இதற்கும் சம்பந்தம் :—மந்திரங்களால் தேவதைகளுக்கு சரீரம் இருக்கிறதென்று சித்தித்தபடியால் வித்தையில் அவர்களுக்கு அதிகாரம் உண்டென்று கூறப்பட்டது. அப்படி சரீரமிருந்தால் கர்மத்தில் விரோதம் வருமே என்கிற ஆக்ஷேபத்துக்கு பரிஹாரத்தை இதில் கூறுகிறார். (21)

3. பதஉரை:—

कर्मणि = கர்மத்தில்

विरोधः इति चेत् விரோதமிருக்கிறதென்றுசொன்னால்

न=அப்படியல்ல

अनेकप्रतिपत्तेः = அநேக சரீரங்களை அடைவதால்

दर्शनात् = காணப்படுவதால். (22)

4. பொழிப்புரை:—

தேவதைகளுக்குச் சரீரம் இருக்கிறதென்று சொன்னால் கர்மத்தில் விரோதம் வருமே எனின் அது அப்படி அல்ல. அவர்கள் அநேக சரீரங்களை எடுத்துக் கொள்ளுகிறார்கள் என்பது சுருதியில் காணப்படுகிறது. (23)

5. பாஷ்யம்:—

(1) विरोधः कर्मणि इति चेत्

தேவதைகளுக்கு சரீரத்தை ஒப்புக்கொண்டு வித்தையில் அதிகாரமிருக்கிறதென்று சொன்னால், ரித்விக்குக்கள்போல் இந்திரன் முதலானவர்களும் பிரத்யக்ஷமாயிருந்து கர்மத்துக்கு அங்கமாக ஆகவேண்டும். அப்போது கர்மத்தில் விரோதம் வரும். இந்திரன் முதலானவர்கள் யாகத்தில் பிரத்தியக்ஷமாய் அங்கமாகக்காணப்படவில்லை. இது சம்பவிக்கவும் மாட்டாது. ஏனெனின் அநேக யாகங்களில் ஒரே காலத்தில் இந்திரன் பிரத்தியக்ஷமாய் இருக்க முடியாது. இப்படி சொன்னால் (24)

(2) ந விரோதமில்லை. ஏனெனின், (25)

(3) अनेकप्रतिपत्तेः :—- தேவதை ஒன்றாயிருந்தாலும் ஒரே காலத்தில் அநேக ஸ்வரூபங்களை தரிக்கக்கூடும் இது எப்படி தெரியவருகிறதெனின். (26)

(4) दर्शनात् :— (a) பிருஹதாரணியகம் IIIவது அத்தியாயம் 9வது பிராமணத்தில் 1வது சுருதியில் :—சாகலியர் யாஞ்ஞவல்கியரைப்பார்த்து வைசுவதேவ சாஸ்திரத்தில் ஸ்துதிக்கத்தகுந்தவர்களாய் எத்தனை தேவதைகள் இருக்கிறார்கள் என்று कति देवाः என்பதால் கேட்கத்துடங்க,

யாஞ்ஞவல்கியர் 3, 300, 3, 3000 அதாவது3306 என்று சொல்ல,

2-வது சுருதியில் அவர்கள் யார் என்று சாகலியர் கேட்க,

महिमान एवैषामेते त्रयस्त्रिंशत्वेव देवाः

ர அதாவது (8 வசுக்கள், 11 ருத்திரர்கள், 12 ஆதித்தியர்கள், இந்திரன், பிரஜாபதி ஆகிய 33) தேவதைகளின் விபூதிகளே சகல தேவதைகளும் என்று யாஞ்ஞவல்கியர் சொன்னார். இப்படி சுருதியானது ஒவ்வொரு தேவதையுட ஒரேகாலத்தில் அநேக ரூபங்களைதரிக்கும் என்று காட்டுகிறது. இந்த 33 தேவதைகளும் அக்கினி, பிருதிவி, வாயு, அந்தரிக்ஷம் ஆதித்தியா, சுவர்க்கம், ஆகிய ஆறு தேவதைகளின் விபூதிகள். இவர்களுக்குள் அவர்கள் அடங்கிப்போகிறார்கள். இந்த 6 தேவதைகளும் 3 லோகங்களிலும், 3 லோகங்கள் அன்னம் பிராணன் ஆகிய இவ்விரண்டிலும் இவ்விரண்டும் பிராணனாகிற ஹிரணியகர்பனிடத்திலும் அடங்கிப் போகிறார்கள். இப்படி தெரிவிக்கிறது சுருதியானது ஒரே பிராணன் ஏககாலத்தில் அநேக ரூபங்களை தரிக்கக்கூடும் என்று காட்டுகிறது. (27)

(b) அப்படியே ஸ்மிருதியும்,

आत्मनो वै शरीराणि बहूनि भरतर्षभ ।
योगीकुर्याद्बलं प्राप्य तैश्च सर्वैः महीं चरेत् ॥
प्राप्नुयाद्विषयात् कैश्चित् कैश्चिदुग्रंतपश्चरेत् ।
सङ्क्षिपेच्चपुनस्तानि सूर्योरश्मिगणानिव ॥

ர அர்த்தம் :—பரதசிரேஷ்டனே, ஒரு யோகியானவன் பலத்தை அடைந்து தனக்கு அநேக சரீரங்களைச் செய்துகொண்டு, அவைகளால் பூமியை சஞ்சரிக்கக்கூடும். சிலதுகளால் விஷயங்களை அடையக்கூடும்; சிலதுகளால் உக்கிரமான தபஸை செய்யக்கூடும். சூரியன் கிரணசமூகத்தை தன்னிடத்தில் இழுத்துக்கொள்ளுவதுபோல், எல்லாச் சரீரங்களையும் யோகி தன்னிடத்தில் இழுத்துக்கொள்ளக்கூடும்.

இப்படிப்பட்ட சுருதிகள் அணிமாதி ஐசுவரியங்களை அடைந்த யோகிகளுக்குக்கூட ஒரேகாலத்தில் அநேக சரீரங்கள் இருக்கலாம் என்று சொன்னால், ஜன்மமுதல் சித்திகளைபெற்ற தேவதைகள் விஷயத்தில் சொல்லவேண்டியதென்ன. அநேக ரூபங்களை அடைய முடியுமானதால் ஒவ்வொரு தேவதையும் அநேகரூபங்களாக தன்னைச் செய்துகொண்டு அநேக யாகங்களில் ஒரேகாலத்தில் பிரத்தியக்ஷமாயிருந்து அங்கமாகலாம், மற்றவர்களால் பார்க்கப்படாமலுமிருக்கலாம். அந்தர்தானம் முதலிய சக்தி அவர்களுக்கு இருப்பதால் இது ஸாத்தியம். ஆ (இந்த காரணங்களால் தேவதைகளுக்கு சரீரம் ஏற்படுவதால் வித்தையில் அவர்களுக்கு அதிகாரமுண்டென்று சித்தித்தது) (28)

ஆ (c) (சமீபத்தில் இருந்தால்தான் அங்கமாகலாம் என்கிற நியமமில்லை.) ஆகையால் अनेक-प्रतिपत्तेर्दर्शनात् என்கிற வாக்கியத்துக்கு வேறுவிதமாயும் வியாக்கியானம் செய்யலாம். (சமீபத்தில் இல்லாததும் சரீரமுள்ளதும் ஒரேகாலத்தில் அநேக இடங்களில் கர்மத்துக்கு அங்கமாகலாம் என்று காணப்படுகிறது. அநேகர்களால் போஜனம் செய்து வைக்கப்பட்ட ஒரே பிராமணன் ஒரேகாலத்தில் போஜனம் செய்யமுடியாதுபோல், சரீரமுள்ள ஒருவன் சில இடங்களில் ஒரேகாலத்தில் அங்கபாவத்தை அடையமுடியாது. சில இடங்களில் சரீரமுள்ளவன் ஒருவனாயிருந்தாலும் அநேக இடங்களில் ஒரேகாலத்தில் அங்கபாவத்தை அடைகிறான். வெகுபெயர்களால் நமஸ்கரிக்கப்படுவது போலும். இதுபோல் உத்தேசத்தை பரித்தியாகம்செய்தலாகியயாகத்தில் சரீரமுள்ள ஒரே தேவதையை உத்தேசித்து அநேகர்கள் தங்கள் தங்களுடைய திரவியத்தை ஒரேகாலத்தில் கொடுத்துவிடுதலால், தேவதை சமீபத்திலில்லாவிட்டாலும், தூரத்திலிருக்கிறதை கிரகிக்க சாமர்த்தியமிருக்கிறது. ஆகையால் தேவதைகள் சரீரமுள்ளவர்களாயினும் கர்மத்தில் விரோதமில்லை. (29)

I-3-8ல் 3 (28)வது சூத்திரம்.

**शब्द इति चेन्नातः प्रभावात् प्रत्यक्षानुमानाभ्याम् । २८** (30)

2. முந்தின சூத்திரத்துக்கும் இதற்கும் சம்பந்தம் :—முந்தின சூத்திரத்தில் தேவதைகளுக்குச் சரீரமிருந்தாலும் கர்மத்தில் விரோதமில்லை என்று நிரூபித்து இப்போது வேதசப்தத்தில் காணப்படும் விரோதமுமில்லை என்று நிரூபிக்கிறார். (31)

3. பதஉரை.

शब्दे=சப்தத்தில்

इति चेत् = (விரோதம் இருக்கிறது) என்று சொன்னால்.

न=இல்லை.

अतः प्रभावात् = இதினின்றும் (ஜகத்து) உண்டாவதால்

प्रत्यक्षानुमानाभ्यां = பிரத்தியக்ஷத்தாலும் அனுமானத்தாலும் அதாவது சுருதியாலும் ஸ்மிருதியாலும். (33)

4. பொழிப்புரை.

வேதசப்தத்திற்கும் சப்தத்தால்கூறப்பட்ட அர்த்தத்திற்கும் சம்பந்தம் நித்தியம் என்றும் ஆகையால் சப்தம் பிரமாணம் என்றும் மீமாம்சகர்கள் ஒப்புக்கொண்டிருக்க, வேதத்தில் கூறிய தேவதைகளுக்குச் சரீரத்தை ஒப்புக்கொண்டால் சரீரம் அநித்தியமானதால், தேவதையைக்கூறும் சப்தத்திற்கும் தேவதையின் சரீரத்திற்கும் இருக்கிற சம்பந்தமும் அனித்தியமாகும். ஆகையால் அப்பிரமாணமாகும். இப்படி சரீரத்தை ஒப்புக்கொள்ளுவதினால் சப்தத்தில் விரோதம் வருகிறதே எனின், வரவில்லை. ஏனெனின் ஜகத்தானது சப்தத்தினின்றும் உண்டாயிருக்கிறது. சுருதியாலும் ஸ்மிருதியாலும் இது தெரியவருகிறது. (33)

5. பாஷ்யம்.

1. शब्द इति चेत्= தேவதைகளுக்கு சரீரத்தை ஒப்புக்கொள்ளுவதில் கர்மத்தில் யாதொரு விரோதமும் வரவேண்டாம். சப்தத்திலோ விரோதம் உண்டு. எப்படியெனின், பூர்வமீமாம்சா சாஸ்திரத்தில் முதலாவது அத்தியாயம் முதலாவது பாதத்தில் 5-வது சூத்திரம் :—

औत्पत्तिकस्तु शब्दस्यार्थे न संवन्धः ...... अनपेक्षत्वात्

என்பது. இந்த சூத்திரத்தின் கருத்து யாதெனின் :—தேவதத்தனுக்கு ஒரு குழந்தை பிறந்தால் அதற்கு யஞ்ஞதத்தன் என்று பெயரிடுகிறான். இந்தப் பெயர் சங்கேதமானது, பிதாவின் புத்தியை அபேக்ஷிக்கிறது. இந்தப் பெயருக்கும் அதினுல் குறிப்பிடப்பட்ட குழந்தைக்குமிருக்கிற சம்பந்தம் சங்கேதரூபமாயிருப்பதாலும், புத்தியை அபேக்ஷித்திருப்பதாலும் அநித்தியம். ஆகையால் அப்பிரமாணம். பூமியிலிருந்து புதிதாய் நெல் முதலிய தான்னியம் விளைந்து வருகின்றது. அது வந்தவுடன் அதற்குப்பெயர் நெல் என்பதாய் ஒருவனும் புதிதாய் ஏற்படுத்துகிறதில்லை. அந்த பொருளுக்கு நெல் என்னும் பெயர் அனுதியாகவே ஏற்பட்டிருக்கிறது. இந்தப் பெயரும் இதனுல் குறிப்பிடப்பட்ட பொருளும் சங்கேதரூபமுமன்று, புத்தியையும் அபேக்ஷிக்கவில்லை. ஆகையால் பெயரும் இவைகளின்சம்பந்தமும் பிரமாணம். இதுபோல்வேதசப்தத்துக்கும் சப்தத்தால் குறிப்பிடப்பட்ட பொருளுக்கும் சம்பந்தம் அனுதியாயும், சங்கேதரூபமாயிராமலும் புத்தியை அபேக்ஷிக்காமலுமிருப்பதால், வேதசப்தம் பிரமாணம் என்று சித்தமாகிறது.

இப்போது தேவதைக்கு சரீரத்தை ஒப்புக்கொண்டால், ஐசுவரிய பலத்தால் ஒரேகாலத்தில் அநேக கர்மங்களில்(யாகங்களில்) சம்பந்தப்பட்ட ஹவிஸுக்களை தேவதை புஜித்தாலும், சரீரம் ஏற்பட்டபடியால், எங்களைப்போலவே தேவதையும் ஜனனமரணங்களை உடையதாக ஆகவேண்டும். அப்போது நித்தியமான சப்தத்திற்கு அநித்தியமான அர்த்தத்துடன் சம்பந்தமுண்டாவதால், அச்சம்பந்தமும் அநித்தியமாகும். அப்போது வேதசப்தம் அப்பிரமாணமாகும். ஆகவே வேதசப்தத்திலுள்ள பிராமாணியத்துக்கும் விரோதம் உண்டாகுமே எனின். (34)

(2) न = விரோதமில்லை. ஏனெனின் (35)

(3) अतः प्रभवात् = வேதசப்தத்தினின்றுமே தேவதை முதலிய ஜகத்தானது உண்டாகிறது.

ஆக்ஷேபம்.:- जन्माद्यस्य यतः என்கிற இரண்டாவது சூத்திரத்தில் ஜகத்தானது பிரம்மத்தினிடமிருந்து உண்டானதாக நிச்சயிக்கப்பட்டிருக்க, எப்படி இவ்விடத்தில் சப்தத்தினின்றும் உண்டானதாகச் சொல்லலாம்.

மேலும், வேதசப்தத்தினின்றும் ஜகத்து உண்டானதாகவே ஒப்புக்கொள்ளுவோம். அப்போதும் சப்தத்தில் விரோதம் எப்படி நீங்கினதாகும். வசுக்கள், ருத்திரர்கள், ஆதித்தியர்கள், விசுவே தேவர்கள், மருத்துக்கள் இவர்கள் எல்லாரும் உற்பத்தியுள்ளவர்களானதால் அநித்தியர்கள். எப்போது அநித்தியர்களானுர்களோ, அப்போது அவர்களைக்கூறும் வசுமுதலிய வேதசப்தங்களுக்கும் அநித்தியத்வம் ஏற்படுமே. அதை எப்படி நிவிர்த்திசெய்ய முடியும்.

ஆகையால் சப்தத்தில் விரோதம் தான் இருக்கிறது என்று சொன்னுல் न விரோதமில்லை. ஏனெனின் (गो, பசு முதலிய சப்தத்திற்கும் அர்த்தத்திற்கும் சம்பந்தம் நித்தியம் என்பதைப் பார்த்திருக்கிறோம். பசுவாகிற சரீரத்துக்கு உற்பத்தியிருந்தாலும், பசுவென்கிற ஜாதிக்கு உற்பத்தியில்லை. திரவியம், குணம், கர்மம் இவைகளின் வியக்திகள் உண்டாகின்றனவே தவிர திரவியத்வம் முதலிய என்கிற ஜாதி உண்டாகிறதில்லை. சப்தத்திற்கு ஜாதியுடன் சம்பந்தமே தவிர வியக்தியுடனில்லை. வியக்திகள் அநேகமானதால், சப்தமானது இன்னதுடன் சம்பந்தப்பட்டதென்று நிச்சயமாகமாட்டாது. வியக்திகள் உற்பத்தியானுலும், ஜாதி நித்தியமாயிருப்பதால், गो (பசு) முதலிய சப்தங்களில் யாதொரு விரோதமும் காணப்படுகிறதில்லை. அப்படியே தேவதைகளின் சரீரம் உண்டாகிறதாக ஒப்புக்கொண்டாலும் ஜாதி நித்தியமாகையால், பசு முதலிய சப்தங்களில் யாதொரு விரோதமுமில்லை என்று அறியத்தக்கது. மந்திரம் அர்த்தவாதம், முதலியவைகளால் தேவதைகளுக்கு சரீரத்தை ஒப்புக்கொள்ளுகிறபடியால் அவர்களுடைய ஜாதிவிசேஷத்தையும் ஒப்புக்கொள்ளுகிறோம்.

ஸ்தானவிசேஷ சம்பந்தத்தினுலேயும் இந்திராதி சப்தங்கள் சேனுபதிமுதலிய சப்தங்கள்போல் பிரவிர்த்தித்திருக்கின்றன. ஆகையால் எவன் எவன் எந்த எந்த ஸ்தானத்திலிருக்கிருனே அவனவன் இந்திராதி சப்தங்களால் கூறப்படுகிருன். (ரா வியக்தி அநித்தியமானுலும், ஸ்தானம் ஸ்திரமானதால், சப்தார்த்த சம்பந்தம் நித்தியம் ஆகையால்) தோஷமில்லை, பிரம்மம் உபாதானகாரணமாயிருப்பதால் பிரம்மத்தின்றும்

ஜகத்துண்டாயிற்று என்று சொல்லுவதுபோல் சப்தமும் உபாதானம் என்கிற அபிப்பிராயத்துடன் அதினின்றும் ஜகத்துண்டாவதாக சொல்லப்படவில்லை. பின்னையோவெனின், வாசகரூபமாய் நித்தியமாயும், நித்தியார்த்தத்துடன் சம்பந்தப்பட்டுமிருக்கிற சப்தம் இருக்கும்போது அதினுலுண்டாகக்கூடிய அர்த்தஞானமுண்டாகிறது. (ஸ்ர கடமென்னும் பதமிருந்தால்தான் ஒரு பொருளைப்பார்த்தவுடன் இது கடம் என்கிற வியவஹாரஞானம் சித்திக்கிறது.) இவ்விதமாகத்தான் சப்தம் ஜகத்துக்குக் காரணமென்று சொல்லப்படுகிறது.

(ஸ்ர ஜன்மாதி சூத்திரத்தில் பிரம்மம் நிமித்தகாரணமென்றும் உபாதான காரணமென்றும் கூறப்பட்டது. இந்த சூத்திரத்தில், எப்படி சில்பியானவன் சில்பசாத்திரத்திற் சொல்லிய ஆகாரத்தை தெரிந்துகொண்டு அதின்படி ஒரு ஆகாரத்தைச் செய்கிறதினுல், இந்த ஆகார உற்பத்திக்கு சில்பசாஸ்திரம் காரணமாயிருக்கிறதோ அப்படி வேதசப்தமும் காரணமென்று அறியவும். ஆகையால் இரண்டு சூத்திரங்களுக்கும் விரோதமில்லை. (36)

(4) प्रत्यक्षानुमानाभ्याम् சப்தத்தினின்றும் ஜகத்தானது உண்டாகிறதென்று எப்படி தெரியவருகிறது எனின் பிரத்தியக்ஷத்தினுலும் அனுமானத்தினுலும் என்கிருர்.

பிரத்தியக்ஷம் என்பது சுருதி. (ஸ்ர பிரபஞ்சத்தில் ஒருபொருள் எதிரிலிருந்தால் அதை அறிவதற்கு இந்திரியசாதகம் தவிர வேறு சாதகம் வேண்டியதில்லை. இந்திரியம் பிரத்தியக்ஷம் அப்படியே வேதசப்தத்தால் கூறப்பட்ட விஷயத்தை அறிகிற விஷயத்தில் வேதத்தைத்தவிர வேறு சாதகம் வேண்டியதில்லை யாதலால் சுருதி பிரத்தியக்ஷம் என்று சொல்லப்படுகிறது.

அனுமானம் என்பது ஸ்மிருதி (பர்வதத்தில் புகையைக்கண்டு நெருப்பு இருக்கிறதாக ஊகிக்கிறேம். இப்படி ஊகிப்பதற்கு முன் நெருப்பு இருக்கிற இடத்தில் புகையைப்பார்த்த ஞானத்தின் ஸ்மரணையே காரணம். அனுமான ஞானம் முந்தின ஞானத்தின் ஸ்மரணையை அபேக்ஷிப்பதுபோல் ஸ்மிருதியும் சுருதியை அபேக்ஷிப்பதால் அனுமானம் என்று சொல்லப்படுகிறது.

இவ்விரண்டும் (சுருதியும் ஸ்மிருதியும்) சப்தத்தினின்றும் சிருஷ்டி உண்டானதாக கூறுகின்றன. எப்படியெனின்,

சுருதி :—

एत वै इति वै प्रजापतिर्देवानसृजतासृग्रमिति मनुष्यानिन्द-वं इति पितृंस्तिरः पवित्रमिति ग्रहानाशव इति स्तोत्रं विश्वानी-ति शस्त्रमभिसौभगेत्यन्याः प्रजाः

அர்த்தம் :—

एते என்பது முந்தின வாக்கியங்களில் பிரஸ்தாபிக்கப்பட்ட தேவதைகளைக் கூறுகிறது. இந்த பதத்தால் அவர்களை நினைத்துக்கொண்டு பிரம்மாவானவர் தேவதைகளை சிருஷ்டித்தார்.

असृक् என்றால் இரத்தம்: இந்த அதிகமாயுடையது தேகம். இந்த தேகத்தில் இரமிக்கிறவர்கள் மனுஷியர்கள். ஆகையால் असृक् என்கிற பதத்தை நினைத்துக்கொண்டு பிரம்மா மனிதர்களை சிருஷ்டித்தார்.

பிதிருக்களுக்கு இந்து (சந்திர) மண்டலம் ஸ்தானம். ஆகையால் இந்தவ என்பதை நினைத்துக்கொண்டு பிதிருக்களை பிரம்மா சிருஷ்டித்தார்.

பவித்திரம் என்றால் சோமலதை அதை திரஸ்காரம் செய்கிறது அதாவது தன்னுக்குள்ளே வைத்துக்கொண்டு மறைக்கிறது பாத்திரம். இந்த திர: பவித்திரம் என்கிற பதத்தை நினைத்துக்கொண்டு சோமத்தை வைக்கவேண்டிய பாத்திரங்களை பிரம்மா சிருஷ்டித்தார்.

आशव: என்றால் வியாபிக்கிறன் என்று அர்த்தம் அதாவது பிரயோகத்தில் உபயோகப்படுகிறது என்று அர்த்தம். ஸ்தோத்திரங்கள் பிரயோகத்தில் சேருவதால் ஆசவ என்கிற பதத்தின் ஸ்மரணைவந்தவுடன் ஸ்தோத்திரங்களை பிரம்மா சிருஷ்டித்தார்.

विश्वानि ஸ்தோத்திரத்திற்குப்பிறகு பிரயோகத்தில் பிரவேசிக்கிறது சாஸ்திரம். இந்த பிரவேசஞாபகம் வந்தவுடன் பிரம்மாவானவர் சாஸ்திரத்தைச் செய்தார். (ஸ்ர சாமவேதத்தால் ஸ்துதிசெய்வதற்கு ஸ்தோத்திரம் என்றும் ரிக்வேதத்தால் செய்வதற்கு சஸ்திரம் என்றும் பெயர்.)

अभिसौभगा எங்கும் ஸௌபாக்கியத்துடன் கூடியவைகளை இந்த பதம் ஞாபகப் படுத்துவதால் இதை ஸ்மரித்துக்கொண்டு பிரம்மாவானவர் இதரபிராணிகளைச் சிருஷ்டித்தார்.

ஸ்ர இப்படி சாமவேதபிராமணத்தில் சுருதிகூறுகிறது.

அப்படியே

स मनसा वाचं मिथुनं समभवत् (बृ I-2-4)

அவர் மனதினால் வைதிகசப்தங்களை ஸ்மரித்துக் கொண்டு, அவைகளால் கூறப்படும் தேவாதி ஆகாரங்களை சிருஷ்டிக்கும் பொருட்டு ஆலோசனை செய்தார்

முதலிய சுருதிகளில் சப்தத்தினின்றும் சிருஷ்டி உண்டானதாக தெரியவருகிறது. (37)

அப்படியே ஸ்மிருதியும் காட்டுகிறது.

अनादिनिधना नित्या वागुत्सृष्टा स्वयंभुवा ।
आदौ वेदं मही दिव्या यतः सर्वाप्रवृत्तयः॥

ஆதியில் ஸ்வயம்புவால், ஆதியந்தமில்லாமலும், நித்தியமாயும், வேதஸ்வரூபமாயும், திவ்வியமாயும் இருக்கிற வாக்கானது உச்சரிக்கப்பட்டது. அதினின்றும் சகல பிரவிர்த்திகளும் உண்டாயின.

வாக்கை உச்சரித்தார் என்பதினால் (நூதனமாய் சிருஷ்டித்தார் என்று அர்த்தமல்ல. குருசிஷ்யர்களின் பரம்பரையான அத்தியனமென்று அறியவேண்டியது) ஆதியும் அந்தமுமில்லாத வாக்கின் உச்சாரணையை வேறுவிதமாய் அறியமுடியாது. அப்படியே,

नामरूपे च भूतानां कर्मणां च प्रवर्तनम् ।
वेदशब्देभ्य एवादै निर्ममे स महेश्वरः ॥

ஆதியில் மஹேசுவரன் வேதசப்தங்களினின்றும் பிராணிகளின் நாமரூபங்களையும் (ரா யாகம் முதலிய) வேளாண்மை முதலிய கர்மங்களை அனுஷ்டிக்கும் பிரகாரத்தையும் ஆதியில் நிர்மாணம் பண்ணினார்.

सर्वेषां च स नामानि कर्माणि च पृथक्पृथक् ।
वेदसब्देभ्य एवादौ पृथक् संस्थाश्च निर्ममे ॥ (मनु I-21)

ஆ சகலமான கர்மங்களின் தனித்தனி ஆகாரத்தையும், நாமங்களையும் வேதசப்தத்தினின்றும் பரமேசுவரன் ஆதியில் நிர்மாணம் செய்தார் (மனு1-21) (38)

ரா (இதுவரையில் प्रत्यक्षानुमानाभ्यां என்பதற்கு சுருதிஸ்மிருதி அர்த்தம் என்பதின் பேரில் பாஷ்யம் எழுதப்பட்டது. இனி இப்பதங்களுக்கு ஏற்பட்ட சாதாரண அர்த்தத்தின்பேரில் பாஷ்யம் எழுதுகிறார்

(2) மேலும் ஒருவன் ஒருகாரியத்தைச் செய்ய இச்சித்தால், அதைக் கூறும் பதத்தை முதலில் ஸ்மரித்து பிறகு அந்த காரியத்தைச் செய்கிறான் என்பது எங்களுக்கெல்லாம் பிரத்தியக்ஷமாய்தெரியவருகிறது.

அப்படியே சிர்ஷ்டாவான பிரஜாபதியினுடைய சிருஷ்டிக்குமுன் வைதிகசப்தங்கள் அவருடைய மனதில் உதித்தன. பிறகு அவைகளை அனுசரித்து பதார்த்தங்களை அவர்சிருஷ்டித்தார் என்று அறியப்படுகிறது. அப்படியே

स भूरिति व्याहरन्स भूमिमसृजत (तै-ब्रा-1I-2-4-2)

(அதாவது அவர்பூ: என்று சொல்லி பூமியை சிருஷ்டித்தார்) முதலிய சுருதிகள் மனதில் உதித்த பூ: முதலிய சப்தங்களினின்றும் பூமி முதலிய லோகங்கள் சிருஷ்டிக்கப்பட்டனவென்று காட்டுகின்றன.(39)

(5) சப்தத்தினின்றும் ஜகத்து உண்டானதாக சொல்லப்பட்டதே. அந்த சப்தத்தின் ஸ்வரூபம் என்ன? (வர்ண அதாவது அக்ஷரரூபமா? அல்லது ஸ்போட ரூபமா?)

(அ) வையாகரணனென்பவன் ஸ்போடம்தான் சப்தம் என்று சொல்லுகிறான். (ரா ஸ்போடமானது :— அக்ஷரங்களால் உண்டாகியும் ஒரு அர்த்தத்தை விளக்கக்கூடியதாயுமிருப்பதாம். திருஷ்டாந்தம் :— ரா-ம, என்கிற அக்ஷரங்களால் ராம என்னும் சப்தம் உண்டாகிறது. இந்த சப்தம் தசரதபுத்திரனைக் கூறுகிறது. இப்படிப்பட்ட சப்தம் ஸ்போடம் எனப்படுகிறது.)

அக்ஷரத்தைச் சப்தமாகச்சொல்லும் பக்ஷத்தில், அக்ஷரம் உண்டாகி நாசமாய்விடுவதால், நித்தியமான சப்தங்களினின்றும் தேவதை முதலான ஆகாரங்கள் உண்டாவதாக எப்படி சொல்லலாம். உச்சரிக்கும் தன்மையை அனுசரித்து அக்ஷரம் ஒவ்வொரு தடவையிலும் வெவ்வேறாகவே காணப்படுகிறதினால் அக்ஷரம் உண்டாகி நாசம் ஆகிறதாயிருக்கிறது. திருஷ்டாந்தம் :— அத்தியயனம் செய்கிறவனை பார்க்காவிட்டாலும் அத்தியயனத் துவனியைக் கேட்டதினாலேயே அத்தியயனம் செய்கிறவன் தேவதத்தன் யஞ்ஞதத்தன் என்பதாய் நிச்சயமாகிறது.

வர்ணம் ஒன்று. ஆனால் உச்சரிக்கிறவனுடைய கண்டஸ்திதியை (துவனியை) அனுசரித்து அது வெவ்வேறாய்த் தோன்றுகிறது. இப்படி தோன்றுவது பிரமை. வர்ணம் மட்டும் சத்தியம் என்று சொல்லுவாரேயானால்,

அது யுக்தமன்று. பிரமையை நிவிர்த்திக்கும்படியான சத்திய ஞானம் ஒன்று இருந்தால் பிரமையை ஒப்புக்கொள்ளலாம். அப்படிப்பட்ட ஞானமில்லாதபடியால் இதை பிரமை என்று சொல்லக்கூடாது.

அ( ஆகையால் அக்ஷரம் அனித்தியமாகையால் அக்ஷரரூப சப்தத்தினின்றும் ஜகத்துண்டாவதாக சொல்லக்கூடாது.)

மேலும் அக்ஷரங்களினின்றும் அர்த்தம் விளங்க மாட்டாது. ஒவ்வொரு அக்ஷரமும் தனித்தனியே நாசமடைவதால் அர்த்தத்தை விளக்கிவைக்கமாட்டாது. அக்ஷரங்கள் ஒன்றிற்குப்பிறகு ஒன்று வருவதால் அவைகளின் சமுதாயமே ஏற்படமாட்டாது.

முந்தின அக்ஷரங்களின் ஞானத்தால் உண்டாகும் சம்ஸ்காரங்களுடன்கூடின கடைசியான அக்ஷரம் அர்த்தஞானத்தைக் கொடுக்கிறதென்று சொன்னால், அதுவும் சரியன்று. ஏனெனின், புகைக்கும் நெருப்புக்கும் சம்பந்தம் ஏற்பட்டு புகையைப் பார்ப்பதினால் நெருப்பை ஊகிக்கும்படியா யிருக்கிறதுபோல், சப்தத்துக்கும் அர்த்தத்துக்கும் ஒரு சம்பந்தம் ஏற்பட்டு சப்தமிருந்தால், அதினால் அர்த்தத்தை ஊகிக்கலாம், பிரகிருதத்திலோ முந்தின எழுத்துக்களின் சம்ஸ்கார சகிதமான கடைசி எழுத்து இருக்கிறதாகச் சொல்லுகிறாய். இது அர்த்தஞானத்தைக் கொடுக்கிறதாயிருந்தால் புகைபோல் பிரத்தியக்ஷமா யிருக்கவேண்டும். ஆனால் சம்ஸ்காரங்கள் பிரத்தியக்ஷமா யில்லை. ஆகையால் கடைசியான அக்ஷரம் அர்த்த ஞானத்தை உண்டுபண்ணமாட்டாது.

காரியத்தால் ஊஹிக்கக்கூடிய சம்ஸ்காரங்களுடன் கூடின கடைசியான அக்ஷரமானது அர்த்தஞானத்தை உண்டுபண்ணுகிறதென்று சொல்லும் பக்ஷத்தில்

அது பண்ணமாட்டாது. ஏனெனின், சம்ஸ்காரத்தின் சாக்ஷாத்காரியமான அக்ஷரங்களின் ஸ்மரணையே ஒவ்வொரு அக்ஷர சம்ஸ்காரத்துடன் உண்டாகி நாசமாய்விடுவதால், சகல அக்ஷரங்களின் சமுதாய ஸ்மரணை சித்திக்கமாட்டாது. ஆகையால் சம்ஸ்கார சமுதாயத்தையும் ஒப்புக்கொள்ளக்கூடாது. ஆகையால் இவைகளுடன் கூடின கடைசியான அக்ஷரத்தால் அர்த்தஞானமுண்டாவதாகச் சொல்லக்கூடாது.

இப்படி வர்ணங்களால் அர்த்தஞானம் உண்டாகமாட்டாதாகையால் ஸ்போடமே சப்தம் என்று ஒப்புக்கொள்ள வேண்டும். ஒவ்வொரு அக்ஷரத்தின் ஞானமுண்டானவுடன் அதின் சம்ஸ்காரமாகிற பீஜம் மனதில் தங்குகிறது. கடைசியான எழுத்தின் ஞானமுண்டானவுடன் இந்த பீஜங்கள் பரிபக்குவத்தை அடைகின்றன. உடனே சமுதாயமான ஒரு ஞானத்துக்கு விஷயமாக மனதில் யாதொன்று தோன்றுகிறதோ அதுவே ஸ்போடம். இந்த ஏகஞானம் அக்ஷரங்களுடைய ஸ்மரணை ரூபமல்ல. ஏனெனின் அக்ஷரங்கள் அநேகமானதால் ஏகஞானம் உண்டாகமாட்டாது. இந்தப் பதத்தை எத்தனைதடவை உச்சரித்தாலும் ஒரே விதமாயிருப்பதாக அறியப்படுவதால், அது நித்தியம். ஸ்வரபேதத்தால் தோன்றும் வித்தியாசம் அக்ஷரத்தைப் பொருந்தினது.

ஆகையால் ஸ்போடரூபமாயும், வாசகமாயும் நித்தியமாயுமிருக்கிற சப்தத்தினின்றும் கர்மம், சாதகம், பலம், இவைகளுடன்கூடின வாக்கியமான ஜகத்தானது உண்டாகிறது. (40)

(பூர்வபக்ஷம் முற்றிற்று)

சித்தாந்தம்:—

பூஜ்ஜியரான உபவர்ஷாசாரியார் அக்ஷரங்களை சப்தம் என்று சொல்லுகிறார்.

அக்ஷரங்கள் உண்டாகி நாசமாயிவிடுகின்றன என்று சொன்னது சரியன்று. உச்சரிக்கும்போதெல்லாம் அந்த அக்ஷரங்களே இவைகள் என்று தெரியவருகிறது. (அதுவே இது என்னும் ஞானம் பிரத்தியபிஞ்ஞை.)

க்ஷவரம்செய்துகொள்ளுங்காலத்தில் மயிர்போய் விட்டாலும் பிறகு உண்டாகும் மயிரைப்பார்த்து அந்த மயிரே இது என்று சொல்லுகிறார்கள். இது பிராந்தி என்பது நிச்சயம். இதுபோல் அக்ஷரங்களின் ஞானமும் பிராந்தி என்று ஒருவன் சொன்னால் அது பிராந்தியன்று. மயிர்விஷயத்தில் பழய மயிர்போனதும் புது மயிர் உண்டானதும் பிரத்தியக்ஷமாய்த் தெரிந்திருக்கிறபடியால் அதுவே இது என்று சொல்லுவதில் பிராந்தி வியக்தமாய்த் தெரியவருகிறது. ஆனால் அக்ஷரவிஷயத்தில் அதுவே இது என்னும் ஞானம் சத்தியமே, பிராந்தியன்று. ஏனெனின் வேறு பிரமாணத்தால் அந்த ஞானம் பாதிக்கப்படுகிறதில்லை. (ஒன்று வேறொன்றால் பாதிக்கப்பட்டால்தான் பிராந்தி என்று சொல்லலாம், பாதிக்கப்படாதவரையில் சத்தியமே.) அந்தப்பசுவே இது என்று சொல்லுமிடத்தில் பசுவின் (ஜாதித்) தன்மை இரண்டு பசுக்களிலுமிருப்பதால் அந்தப்பசுவே இதுவென்று சொல்லுகிறோம். அதுபோல் அந்த அக்ஷரமே இது என்று சொல்லுமிடத்திலும் அக்ஷரத்தின் (ஜாதித்) தன்மையைக் கொண்டு அப்படி சொல்லுகிறோம் என்று ஒருவன் சொன்னால்,

பசுவிஷயத்தில் முன்பார்த்த பசுவும் இப்போது பார்க்கப்படும் பசுவும் வெவ்வேறாயிருப்பதால், அந்தப்பசுவே இது என்று சொல்லுமிடத்தில் வியக்தி வித்தியாசப்படுவதால், ஜாதியையே ஒப்புக்கொள்ளும்படி நேரிட்டது. அக்ஷரவிஷயத்தில் அந்த அக்ஷரம் இந்த அக்ஷரமல்லவென்று சொல்லுவதற்குக் காரணமிராதபடியால் அதுவே இது என்று சொல்லலாம். (நீ குடித்த ஜலத்தையே நான் குடித்தேன் என்கிற இடத்தில் ஜலத்தின் வியக்தி வித்தியாசப்படுவதுபோல் அக்ஷரவிஷயத்தில் வியக்தி வித்தியாசப் படுகிறதில்லை) ௰ சப்தத்தை இரண்டு தடவை உச்சரித்தேன் என்று சொல்லுகிறார்களே தவிர இரண்டு கோ சப்தத்தை உச்சரித்தேன் என்று சொல்லுகிறதில்லை. (ஆகையால் வர்ணவிஷயமான பிரத்தியபிஞ்ஞை சித்திக்கிறது. வர்ணம் நசித்துப்போவதாகச் சொல்லக்கூடாது).

தேவதத்தன்—யஞ்ஞதத்தன்— இவர்களுடைய அத்தியயனத்துவனியை கேட்டதினாலேயே அக்ஷரங்களின் பேதம் தெரியவருவதால் அக்ஷரங்களும் உச்சாரணபேதத்தால் வெவ்வேறாகவே இருக்கின்றனவென்று பூர்வபக்ஷி சொன்னவிஷயத்தில் நாம் சொல்லுகிறதாவது:—

தொண்டை, வாய் முதலிய அவயவங்களின் வித்தியாசத்தால் அவைகளுடன் சம்பந்தப்பட்டும் அவைகளினின்றும் பிரிந்துமிருக்கிற காற்றில் வித்தியாசம் உண்டாகிறது. இந்த வித்தியாசத்தால், காத்தினால் விளங்கும் அக்ஷரமும் வித்தியாசப்படுகிறது. இதுவே தவிர அக்ஷரத்தின் ஸ்வரூபத்தில் வித்தியாசமில்லை.

௱ வர்ணங்களின் வியக்திபேதத்தை ஒப்புக்கொள்ளுகிறவனுடைய மதத்திலும், ககாராதிவியக்திகள் அநந்தம். அவைகளில் பிரத்தியபிஞ்ஞான முண்டாகும்பொருட்டு கத்வஜாதியைக் கற்பிக்கவேண்டும். அவைகளிலுள்ள பேதத்துக்காக உதாத்தம் முதலிய சுவரபேதங்களைக் கற்பிக்கவேண்டும். இந்த கற்பனைகளைவிட அக்ஷரங்களின் வியக்திமாத்திரத்தை ஒப்புக்கொண்டு உதாத்தாதி உபாதிபேதத்தால் அவைகளின் பேதத்தைக் கற்பித்து, அவைகளின் ஸ்வரூபத்தால் பிரத்தியபிஞ்ஞை உண்டாகிறதாகச் சொல்லுவது சுலபம்.

மேலும் அக்ஷரவிஷயங்களில் யாதொரு பேதமிருப்பதாக பூர்வபக்ஷி சொன்னானே அது இந்த பிரத்தியபிஞ்ஞானத்தால் பாதிக்கப்படுகிறது. (ஆகையால் அந்தபேதம் மித்தையே)

பிரத்தியபிஞ்ஞானமிருப்பதால் அக்ஷரம் ஒன்று என்று தெரிந்தால், ஒரே காலத்தில் வெகு பெயர்கள் ககாரமென்ற ஒரு எழுத்தை உச்சரித்தால் உதாத்த அனுதாத்த, ஸ்வரித, அனுனாசிக, அநநுநாசிக பேதங்களுடன் இந்த எழுத்து காணப்படவேண்டிய காரணமென்ன?

௨ (இந்தக் கேள்விக்கு உத்தரம் உபாதிபேதத்தால் உண்டாகிறது என்று முன்னமே கொடுபட்டிருந்தாலும் வேறு விதமாய் உத்தரம் கொடுக்கும் பொருட்டு இந்த கேள்வியையே மறுபடியும் கேட்கிறார்)

இந்த பேதஞானமானது துவனியால் உண்டாகிறது, அக்ஷரத்தாலுண்டாகவில்லை. ஆகையால் தோஷமில்லை.

இந்தத்துவனி என்பது என்ன? சப்தத்தை தூரத்தில் கேட்டவனுக்கு எழுத்துக்களின் வித்தியாசம் தெரியாமல் கேவலம் யாதொரு சப்தம்மட்டும் கேட்கப்படுகிறதோ, சமீபத்திலிருக்கிறவனுக்கு அக்ஷரங்களின் மந்தப்படுத்தன்மைகளை காட்டுகிறதோ அதுவே துவனி. அதினால் உதாத்தாதிகளின் வித்தியாசம் காணப்படுகிறதே தவிர அக்ஷரங்களின் ஸ்வரூபத்தால் காணவில்லை. ஏனெனில் அக்ஷரங்களை ஒவ்வொருதடவை உச்சரிப்பதிலும் அவைகளே இவைகள் என்ற பிரத்தியபிஞ்ஞானமிருக்கிறது. (ஆகையால் ஸ்வரூபத்தால் வித்தியாசம் ஏற்படவில்லை)

துவனி என்னும் உபாதியை ஒப்புக்கொண்டால் தான் உதாத்தாதிகளின் ஞானத்துக்கு ஒரு ஆதாரம் ஏற்படுகிறது. இல்லாவிடின் அக்ஷரங்கள் ஒன்றே என்கிற பிரத்தியபிஞ்ஞானம் இருப்பதால் பேதம் ஏற்படவில்லை. ஆகையால் கண்டாதி அவயவங்களுடன் வாயுவின் சம்யோக விபாகங்களை ஒப்புக்கொண்டு அவைகளால் உதாத்தாதி பேதங்கள் உண்டாவதாக கற்பிக்கவேண்டும். ஆனால் சம்யோகவிபாகங்களோ சிரவணத்துக்கு அப்பிரத்தியக்ஷங்கள், அப்படிப்பட்டவைகளை பிரத்தியக்ஷமான உதாத்தாதிகள் ஆசிரயித்து அக்ஷரங்களில் காணப்படுவதாக சொல்லக்கூடாது. ஆகவே உதாத்தாதிகளுக்கு ஆசிரயம் இல்லாமல் போகும். ௱ (ஆகையால் கேட்கக்கூடிய துவனியே உதாத்தாதிகளின் ஆசிரயஸ்தானம் என்பது கருத்து.)

உதாத்தாதி பேதங்களைக்கொண்டு ஒன்றாக அறியப்படுகிற அக்ஷரங்களில் பேதமிருக்கிறதென்று ஒப்

புக்கொள்ளக்கூடாது. ஒன்று பேதப்படுவதினுல் பேதப்படாத மற்றென்றும் பேதப்படமாட்டாது. சரீராதிகள் பேதப்படுவதால் ஜாதி வித்தியாசப்படுவதாக நினைக்கிறதில்லை.

அக்ஷரங்கள் ஸ்திரமாயிருப்பதால் அவைகளினின்றும் அர்த்தஞானம் உண்டாகும். ஆகவே ஸ்போடகற்பனை வியர்த்தம்.

ஸ்போடத்தை நான் கற்பிக்கவில்லை. பிரத்தியக்ஷமாகவே அதை நான் அறிகிறேன். ஒவ்வொரு அக்ஷரத்தைக் கிரகித்தவுடன் அதின் சம்ஸ்காரம் புத்தியில் தங்குகிறது. கடைசியான அக்ஷரத்தைக்கேட்டவுடன் புத்தியில் உடனே ஸ்போடம் ஒன்றாகத் தோன்றுகிறது (ஏகன் கண்ணுடியுடன் சம்பந்தப்பட்டவளவில் புத்தியில் முகம் தோன்றுவதுபோல் சுரோத்திரத்துடன் அக்ஷரம் சம்பந்தப்பட்டவுடன் புத்தியில் ஸ்போடம் பிரத்தியக்ஷமாகத் தோன்றுகிறது) இப்படி பூர்வபக்ஷி சொன்னுல்

இது சரியன்று, புத்தியில் ஒவ்வொரு அக்ஷரமும் கிரகிக்கப்பட்டு, எல்லா அக்ஷரங்களும் கிரகிக்கப்பட்டவுடன் புத்தியில் பசு என்கிற ஏகபுத்தி உண்டாகிறதே தவிர வேறு (ஸ்போடம் என்கிற) விஷயம் தோன்றுகிறதில்லை.

ஏ (புத்தியில் வர்ணங்கள் ஸ்புரிக்கின்றனவே தவிர ஸ்போடம் ஸ்புரிக்கவில்லை என்பது) எப்படி தெரியவருகிறதெனின் இந்த புத்தியில் பசு என்கிற பதத்தின் அக்ஷரங்கள் அனுவர்த்தித்துக்கொண்டு இருக்கின்றனவே தவிர வேறு அக்ஷரங்கள் புத்திக்கு விஷயமாகிறதில்லை. பகாராதிகளைவிட்டவேறுன ஸ்போடம் புத்திக்கு விஷயமானுல் எப்படி தகாராதிகள் புத்திக்கு விஷயமன்றே அப்படி பகாராதிகளும் விஷயமாகமாட்டா. ஆனுலோ அப்படியல்ல (பசுவென்பதில் பகாராதிகள் அனுவர்த்தித்துக்கொண்டே யிருக்கின்றன.) ஆகையால் (இது பசு வென்னும்) ஏகபுத்தியானது அக்ஷரங்களை விஷயமாயுடைய ஸ்மரணேயே.

அக்ஷரங்கள் அநேகமாயிருப்பதால் அவைகள் ஏகபுத்திக்கு விஷயமாகமாட்டா என்று பூர்வபக்ஷி சொன்னவிஷயத்தில் நாம் சொல்லுகிறதாவது.

அநேகமும் ஏகபுத்திக்கு விஷயமாகலாம். வரிசை, வனம், சேனை, பத்து, நூறு, ஆயிரம் முதலிய இடங்களில் அநேகம் ஒரு புத்திக்கு விஷயமாவதைக் கண்டிருக்கிறோம். வெகு அக்ஷரங்கள் சேர்ந்து ஒரு அர்த்தத்தைக் கொடுப்பதால், பசுவென்பதும் ஒரு பதம் என்று சொல்லப்படுகிறது. வனம், சேனை முதலியதுபோலும்.

அக்ஷரங்கள் சேர்ந்து பதமாகி ஏகபுத்திக்கு விஷயமாகின்றன என்றுசொன்னுல் ஜாரா, ராஜா, கபி: பிக: முதலிய பதங்கள் விஷயத்திலும் வெவ்வேறு பதங்கள் என்கிற ஞானமுண்டாகவேண்டியதில்லை. ஏனெனின் ஒரே அக்ஷரங்கள் ஒவ்வொரு வகுப்பிலும் காணப்படுகின்றன.

இப்படி பூர்வபக்ஷிசொன்னுல் அதற்கு நாம் உத்தரம் கொடுப்பதாவது:—எல்லா அக்ஷரங்களின் சமுதாய ஸ்மரணேயே இருந்தாலும், எப்படி எறும்புகளின் ஒன்றுக்குப்பின் ஒன்று போவதைப்பார்த்து எறும்புகளின் வரிசை என்றும் புத்தி சித்திக்கிறதோ அப்படி அக்ஷரங்களின் கிரமத்தை அனுசரித்து பதம் என்கிற புத்தி சித்திக்கிறது. ஆகையால் அக்ஷரங்கள் ஒன்றுனுலும், அவைகளின் கிரமத்தை முன்னிட்டுக்கொண்டு பதங்கள் வெவ்வேறு என்கிற ஞானமுண்டாவதால் விரோதமில்லை. அக்ஷரங்கள் விஷயத்தில், அவைகளின் கிரமத்தையும், சங்கியை (எண்ணிக்கை) யும் விருத்த வியவஹாரத்தால் அறிந்திருக்கிறோம், நம்முடைய வியவஹாரத்திலும் அந்த பதங்களையே உபயோகப்படுத்துங்காலத்தில் ஒவ்வொரு அக்ஷரத்தையும் கிரகித்தபிறகு, ஒன்று என்கிற சமுதாயஞானம் புத்தியில் வந்த சமயத்தில் முன்போலவே அர்த்த ஞானமுண்டாகிறது.

ஆகையால் வர்ணவாதிகளுடைய கற்பனை சுலபமானது.

ஸ்போடவாதிகள் மதப்படி பிரத்தியக்ஷமாயிருக்கிற அக்ஷரத்தை விட்டுவிட்டு பிரத்தியக்ஷமாயிராத ஸ்போடத்தைக் கற்பிக்கவேண்டியதாக இருக்கிறது. கிரமமாகக் கிரகிக்கப்பட்ட இந்த அக்ஷரங்கள் ஸ்போடத்தை விளக்கிவைக்கின்றன. ஸ்போடம் அர்த்தத்தை விளக்கிவைக்கிறது என்கிற கற்பனை விரிவாயிருக்கிறது.

அல்லது, ஒவ்வொருதடவை எழுத்துக்களை உச்சரிக்கும்போதும் வெவ்வேறுய் காணப்படுவதால் அவைகள் அநித்தியம் என்று சொன்னுலும், பிரத்தியபிஞ்ஞை இருப்பதால் அக்ஷரங்களின் ஜாதியை ஒப்புக்கொள்ளவேண்டும். அக்ஷரங்களால் எந்த அர்த்தம் சித்திப்பதாகச் சொன்னேமோ அது ஜாதியால் சித்திப்பதாக சொல்லுகிறோம்.

ஆகையால் நித்தியமான சப்தங்களினின்றும் தேவதைகளின் உற்பத்தியைச் சொன்னதில் விரோதமில்லை. (41)

XI. I-3-8 ல் 4 (29) வது சூத்திரம்.

## अत एव च नित्यत्वम् । २९

2. (आ व त प्र) முந்தின சூத்திரத்துக்கும் இதற்கும் சம்பந்தம்:—முந்தின சூத்திரத்தில் ஜகத்தானது சப்தத்தினின்றும் உண்டாயிற்று என்று சொல்லப்பட்டது. இதுபோல சப்தமும் வேறு ஒன்றினின்றும் உண்டாயிருக்குமோ என்று சந்தேகம்வர சப்தம் நித்தியம் என்று இதில் நிரூபிக்கிறார். (43)

3. பதவுரை:—

अत एव च ஆகையாலும்

नित्यत्वम् நித்தியத்தன்மை. (44)

4. பொழிப்புரை:—

மேற்சொன்ன காரணத்தினாலேயே வேதம் நித்தியம் என்று சித்திக்கிறது. (45)

5. பாஷ்யம்:—

(1) அ-கை:— பூர்வமீமாம்சையில் I-1-29-ல் வேதத்துக்கு ஸ்வதந்திரரான கர்த்தா இன்னாரென்று தெரியவராதபடியால் வேதம் நித்தியம் என்று சொல்லப்பட்டிருக்கிறது. தேவதைகளின் சரீரத்தை ஒப்புக்கொண்டால் வேதம் அநித்தியமாகுமே என்று சங்கைவர अतः प्रभावात् என்பதினால் அதை பரிஹரித்து அந்த வேதம் நித்தியம் என்பதையே ஸ்திரப்படுத்துகிறார். (46)

(2) अत एव च நியதமான ஜாதியுடைய தேவாதி ஜகத்தானது வேதசப்தத்தினின்றும் உண்டானதாலேயே. (47)

नित्यत्वं வேதசப்தம் நித்தியம் என்பதையும் அறியவேண்டியது. அப்படியே ரிக்-சம்-10-71 3 ல்

यज्ञेन वाचः पदवीयमायन् तामन्वविन्दन्नृषिषु प्रविष्टाम्

ரி அதாவது யஞ்ஞ (புண்ணியகர்ம)த்தினால் வேதத்தை கிரகிக்க யோக்கியதையை சம்பாதித்தவர்கள் ரிஷிகளிடத்தில் இருந்த வேதத்தை அடைந்தார்கள்.

என்கிற மந்திரமானது அடையப்பட்ட வேதம் ஸ்திரம் என்பதைக் காட்டுகிறது.

வேதவியாசர் அவருடைய ஸ்மிருதியில்

युगान्तेऽन्तर्हितान् वेदान् सेतिहासान् महर्षयः ।
लेभिरे तपसापूर्वं मनुज्ञाताः स्वयंभुवा ॥

அதாவது முன்காலத்தில் ரிஷிகள் ஸ்வயம்பூவால் அநுஞ்ஞை கொடுக்கப்பட்டு யுகாந்தத்தில் மறைந்திருந்த வேதங்களையும் இதிஹாசங்களையும் தபஸால் அடைந்தார்கள்

என்று சொல்லியிருக்கிறார். (48)

I-3-8 ல் 5 (30) வது சூத்திரம்

## 1. समाननामरूपत्वाच्चावृत्तावप्यविरोधो दर्शनात् स्मृतेश्च ॥ ३० ॥

2. முந்தின சூத்திரத்துக்கும் இதற்கும் சம்பந்தம்:—முன் சூத்திரத்தில் வேதம் ஜாதியை அபேக்ஷித்து நித்தியம் என்று சொல்லப்பட்டது. ஜாதி வியக்திஸ்வரூபமான பிரபஞ்சம் மகாபிரளயத்தில் இராதபடியாலும், வியக்தியன்றியில் ஜாதி இராதபடியாலும் மகாபிரளயத்தில் ஜாதியிருக்கிறதாக சொல்லக்கூடாது. ஆகையால் ஜாதியை அபேக்ஷித்து வேதம் நித்தியம் என்று சொன்னது யுக்தமன்று என்று ஆக்ஷேபம்வர அதற்கு இந்த சூத்திரத்தில் சமாதானம் சொல்லுகிறார். (50)

1. பதவுரை:—

समाननामरूपत्वात् च சமானமான நாமரூபங்களிருப்பதாலும்

आवृत्तौ अपि பிரளயகாலத்திலும்

अविरोधः விரோதமில்லை

दर्शनात् சுருதியாலும்

स्मृतेः च ஸ்மிருதியாலும் (தெரியவருகிறது.) 51

4. பொழிப்புரை:—

பிரளயத்தில் பிரபஞ்சம் ஸம்ஸ்காரரூபமாயிருப்பதாலும் பிரளயத்துக்குப் பிறகு பிரபஞ்சம் முந்தின கற்பத்தில்போலவே உண்டாவதாலும் இப்படி சமான நாமரூபங்களிருப்பதினால் பிரளயகாலத்திலும் ஸம்ஸ்காரரூப ஜாதியிருக்கிறது. ஆகையால் வேதம் நித்தியம் என்று சொல்லுவதால் விரோதமில்லை. சுருதிஸ்மிருதி பிரமாணங்களால் இது சித்தம். (52)

5. பாஷ்யம்:—

பசுமுதலியவைகளின் சரீரங்கள்போல் தேவதைகளின் சரீரங்களும் தொடர்ச்சியாய் உண்டாகி நாசமடைந்து வந்தால், அப்பொழுது சப்தம், அர்த்தம், சொல்லுகிறவன் இவர்களுடைய வியவஹாரமும் தொடர்ச்சியாய்வரும், சப்தத்துக்கும் அர்த்தத்துக்கும் சம்பந்தமும் நித்தியமாயிருக்கும். அதினால் வேதப்பிரமாணமல்லவென்றும் மதம்பரிஹாரமாய்விடும், எப்போது 3 லோகங்களும் நாமரூபங்களை இழந்து பிரளயத்தில் நாசமாய்விடுகின்றனவென்றும், புதிதாகவே மறுபடியும் உண்டாகின்றனவென்றும் சுருதிஸ்மிருதிகள் சொல்லுகின்றனவோ அப்போதும் விரோதமில்லை. சப்தமும் பிரமாணம் என்பது எப்படி? 53

समाननामरूपत्वत् இதற்கு உத்தரம் சமானநாமரூபத்வாத் என்று கூறப்படுகிறது. சம்சாரம் அனாதி என்பதை ஒப்புக்கொள்ளவேண்டியது. ஸ்ரீ வேதவியாசர்

उपपद्यते चाप्युपलभ्यते च

என்கிற II-1-36-வது சூத்திரத்திலும் அப்படியே சொல்லப்போகிறார். ஆகையால் அனாதியான சம்சாரத்திலும் ஜாக்கிறத்திலும் சுஷுப்தியிலும் வியவஹாரம் உண்டாகி நாசமடைவதாக சுருதியில் சொல்லியிருந்தாலும் முந்தின ஜாக்கிரத்திற்போல் பிந்தின ஜாக்கிரத்திலும் வியவஹாரமிருப்பதால் எப்படிவிரோதமில்லையோ, அப்படி புதிதாய் உண்டாகும் கற்பத்தின் உற்பத்திநாசங்களிலும் விரோதமில்லை என்று அறியவேண்டியது.

(மகாப்பிரளயத்தில் சுத்தமாய் ஒன்றுமில்லை என்பது இல்லை சப்தம், அர்த்தம் சப்தார்த்தம் சம்பந்தம் இவைகள் சம்ஸ்காரரூபமாய் இருக்கின்றன. அவைகளே மறுபடியும் சிருஷ்டியில் வியக்தமாகின்றன. ஆகையால் வேதம் அனித்தியமன்று. முன்னிருந்தவைகளே வியக்தமாய்க் காணப்படுவதால் முந்தின கற்பத்தின் நாமரூபங்களே பிந்தினகற்பத்திலும் சித்திக்கின்றன. ஆகையால் புதிதாய் நாமரூபங்களை ஏற்படுத்தவேண்டியதில்லை. சிருஷ்டி பூராவாய் புதிதாயிருந்தால் வேறு நாமரூபங்களை அபேக்ஷிக்கும். சமானசிருஷ்டி இவைகளை அபேக்ஷிக்கமாட்டாது. ஆகையால் வேதப்பிராமாண்ணியத்துக்கு விரோதமில்லை.) சுஷுப்தி ஜாக்கிராவஸ்தைகளில் வியவஹாரம் உண்டாகிறதும் நாசமாகிறதும் அடியிற்கண்ட கௌஷீதகி பிராமணோபநிஷத்து 3-வது அத்தியாயம் 3-வது கண்டவாக்கியத்தால் தெரியவருகிறது.

यदा स्वप्नं

ஆ எப்போது தூங்குகிறவன் ஸ்வப்நத்தையும் ஜாக்கிரத்தையும் பார்க்கவில்லையோ அப்போது பரமாத்மாவுடன் ஜீவன் ஒன்றாய்விடுகிறான். அப்போது பரமாத்மாவை திணக்கு விஷ்டமான் நாமங்களுடனும், சக்ஷுரிந்திரியம் சகல ரூபங்களுடனும்; ச்ரோத்திரேந்திரியம் சகல சப்தங்களுடனும், மனது சகல விருத்திகளுடனும் அடைகிறது. இவன் எப்போது விழித்துக்கொள்ளுகிறானோ, அப்போது ஜ்வலிக்கிற அக்கினியினின்றும் பொறிகள் நான்கு திக்குகளிலும் போகிறதுபோல பரமாத்மாவினிடமிருந்து சகல இந்திரியங்களும், அவையவைகளுடைய ஸ்தானத்தை அடைகின்றன. இந்திரியங்களுண்டான பிறகு அவைகளை அனுக்கிரகிக்கும் தேவதைகளுண்டானார்கள். பிறகு இந்திரியங்களுடைய விஷயங்கள் உண்டாயின.

ஒருவன் தூங்கிக்கொண்டிருக்கையில் வேறு ஒருவன் வியவஹரித்துக்கொண்டே யிருக்கிறான். வியவஹாரம் அற்றுப்போகிறதில்லை. மேலும் விழித்துக்கொண்டவனும் தான் தூங்குமுன் செய்திருந்த வியவஹாரத்தை ஸ்மரிக்கிறான். ஆகையால் சப்தத்திற்கும் அர்த்தத்துக்கும் சம்பந்தம் நித்தியம் என்று சொல்லுவதில் விரோதமில்லை. தார்ஷ்டாந்தத்தில் மஹாப்பிரளயத்திலோ சகல வியவஹாரமும் ஒழிந்துவிடுகிறது, போன ஜன்மத்தின் வியவஹாரத்தை மரணத்தால் விலக்கப்பட்டதால் ஜன்மத்தில் ஸ்மரிக்கமுடியாதது போல் கற்பாந்தர வியவஹாரத்தையும் ஸ்மரிக்கமுடியாது. ஆகையால் சப்தத்துக்கும் அர்த்தத்திற்கும் சம்பந்தமிருக்கிறதாகச் சொல்லக்கூடாது.

இதில் பாதகமில்லை. ஏனெனின் மகாப்பிரளயத்தில் சகலவியவஹாரங்களும் அற்றுப்போயிருந்தாலும் பரமேசுவரனுடைய அனுக்கிரகத்தினால் ஹிரணியகர்ப்பர் முதலான ஈசுவரர்களுக்கு கற்பாந்தர வியவஹாரமும் ஸ்மரணைக்கு வரக்கூடும்.

ர (ஹிரணியகர்ப்பாதிகள் சம்சாரியானதால் பூர்வகற்பாதிகளை ஸ்மரிக்கமாட்டார்கள் என்று சொல்லக்கூடாது. ஏனெனின், பிராகிருத பிராணிக்கு ஜன்மாந்திர வியவஹாரத்தின் ஸ்மரணை வாராவிட்டாலும், இவர்களைப்போல ஈசுவரர்களுக்கும் ஸ்மரணைஉண்டாகமாட்டாது என்று சொல்லக்கூடாது. எப்படி எல்லாரும் பிராணிகளானாலும், மனிதன் முதல் ஸ்தம்பம் வரையில் ஞானஐசுவரியாதிகளின் பிரதிபந்தம் அதிக

மாக அதிகமாகக் காணப்படுகிறதோ, அப்படி மனிதன் முதல் ஹிரணியகர்ப்பன் வரையில் ஞானஐச்வரியாதிகளின் விர்த்தி அதிகமாக அதிகமாக ஆகிறது என்பது சுருதிஸ்மிருதிகளில் அடிக்கடி கேட்டிருப்பதால், அது இல்லை என்று சொல்லமுடியாது. சென்ற கற்பத்தில் விசேஷ கர்மங்களைச் செய்து ஞானதிக்கியத்தை சம்பாதித்த ஹிரணியகர்பாதி ஈசுவரர்கள் இக்கற்பத்தில் உண்டாகி பரமேசுவரனுடைய அனுக்கிரகத்தினால், தூங்கி விழித்துக்கொண்டவன் முன் வியவஹாரத்தை ஸ்மரிப்பதுபோல், கற்பாந்திர வியவஹாரத்தையும் ஸ்மரிக்கலாம். அப்படியே,

**यो ब्रह्माणं विदधाति पूर्वं यो वै वेदांश्च प्रहिणोति तस्मै तं ह देवमात्मबुद्धिप्रकाशं मुमुक्षुर्वै शरणमहं प्रपद्ये (श्वे VI-18)**

அர்த்தம்:—

எவன் கற்பாதியில் பிரம்மாவை சிருஷ்டித்தாரோ, எவர் அவருக்கு வேதங்களை உபதேசித்தாரோ அதாவது அவருடைய புத்தியில் வேதங்களின் ஸ்மரணை வரும்படி செய்தாரோ, அப்படிபட்ட ஜோதிஸ்வரூபராயும், மகாவாக்கிய ஞானத்தால் புத்தியில் விளங்குகிறவராயுமிருக்கிறவரை சரணமடைகிறேன்

என்று சுவேதாசுவதரம் VI-18ல் சொல்லியிருக்கிறது.

ர (பிரம்மாவுக்குமட்டும் ஞானதிசயம் ஏற்பட்டதாக பாவிக்கக்கூடாது. பின்னையோவெனின்) ரிக்வேதத்தின் 10 மண்டலங்களிலுள்ள ரிக்குகளை மதுச்சந்த முதலான ரிஷிகள் பார்க்கிறார்கள் என்று சௌனகாதிகள் ஸ்மிருதிகளில் சொல்லியிருக்கிறார்கள். இதரவேதங்களின் காண்டம், சூக்தம், மந்திரம், இவைகளை போதாயனாதிகளும் பார்த்திருக்கிறதாக ஸ்மிருதியில் சொல்லியிருக்கிறது.

**यो ह वा अविदितार्षेयच्छन्दो दैवतब्राह्मणेन मन्त्रेण याजयति गध्यापयति वा स्थाणुं चर्च्छति गर्त्तं वा प्रपद्यते तस्मादेतानि मन्त्रे मन्त्रे विद्यात्**

என்கிற சுருதியானது மந்திரத்தின் ரிஷியைத் தெரிந்துகொண்டு அதை அனுஷ்டிக்கவேண்டியது என்று சொல்லியிருக்கிறது. (ர ரிஷிகளைத் தெரிந்துகொள்ளவேண்டியது என்று சொல்லியிருப்பதால், மந்திர திரஷ்டாக்களான ரிஷிகளின் ஞானம் அதிகம் என்று தெரியவருகிறது).

ர சுருதியின் அர்த்தம்:—எவன் ரிஷிசம்பந்தத்தையும், காயத்திரிமுதலிய சந்தஸையும் அக்கினிமுதலிய தேவதையையும், விநியோகத்தையும் தெரிந்துகொள்ளாமல் யாகம் செய்துவைக்கிறானோ, அத்தியயனம் சொல்லிவைக்கிறானோ அவன் ஸ்தாவரபாவத்தை அடைகிறான் அல்லதுநரகத்தை அடைகிறான். ஆகையால் ஒவ்வொரு மந்திரத்திலும் இவைகளை அறியவேண்டியது.

ர (ஆகவே அதிக ஞானத்தால் கல்பாந்திரத்திலுள்ள வேதத்தை ஸ்மரித்து ரிஷிகள் அவைகளை அனுஷ்டானத்துக்குக் கொண்டு வந்திருக்கிறார்கள் என்று சொல்லியிருப்பதால் வேதம் அநாதி என்பதும் ஒன்றையும் அபேக்ஷிக்கவில்லை என்பதும் தெரியவருகிறது. ஆகையால் விரோதமில்லை).

முந்தின கற்பம் வேறு, இந்தக் கற்பம் வேறு, வேதங்கள் வேறு, தர்மாதர்மங்கள் வேறு, வர்ணாசிரமங்கள் வேறு, ஆக எல்லாம் வேறு, ஆனதால் முந்தின கற்பத்தின் அனுசந்தானம் ஹிரணியகர்ப்பாதிகளுக்கு உண்டாகவேண்டியதில்லை. ஆகையால் வேதம் அனித்தியம் என்று சொல்லுவோமே என்று ஒருவன் சொன்னால்,

அது சரியன்று, பிராணிகள் சுகத்தை அடையும் பொருட்டு தர்மமும், துக்கத்தைப் பரிகரிக்கும் பொருட்டு அதர்மநிஷேதமும் பிரபஞ்சத்தில் ஏற்பட்டிருக்கிறது. சுகத்தில் இச்சையும் துக்கத்தில் துவேஷமும் காணப்படுகிறது. பசு முதலியதை அடைய ஒருவன் ஒரு காரியத்தைச் செய்தால், இச்சையை அனுசரித்த பசுவையே அடைகிறான், வேறு ஒன்றை அடைகிறதில்லை, துக்கநிவிர்த்திக்காக ஒன்றைச் செய்தால் அந்த நிவிர்த்தியையே அடைகிறான், வேறு ஒன்றை அடைகிறதில்லை. இப்படி சுகாதிகளின் பொருட்டு செய்யப்பட்ட கர்மங்கள் அவைகளை அனுசரித்த பலன்களையே கொடுப்பதாய் பிரத்தியக்ஷ வியவஹாரத்திலும் சுருதியிலும் கண்டிருக்கிறோம். முந்தின கற்பம் வேறு, இந்தக் கற்பம் வேறு, ஒன்றுக்கொன்று சம்பந்தமில்லை என்று சொன்னால் முந்தின கற்பத்தில் ஆரம்பிக்கப்பட்டு பலத்துக்கு வராத கர்மங்களுக்கு பிந்தின கற்பத்தில் விபரீதபலன்கள் உண்டாகவேண்டும், இவைகளில் ஒருவனுக்கும் இஷ்டமிருக்கமாட்டாதாகையால் கர்மத்திலேயே பிரவிர்த்தியுண்டாகமாட்டாது. ஆனால்பிரவிர்த்தியுண்டாகிறதைப்பார்த்திருக்கிறோம். இதனால் முந்தின வியவஹாரம் சுத்தமாய் விட்டுப்போனதாக தெரியவில்லை. ஆகையால்

ஹிரணியகர்பாதிகள் அநுசந்தானம் செய்யலாம். அப்படிச்செய்வதினல் வேதம் நித்தியம் என்று ஏற்படுகிறது. எப்போது வேதம் நித்தியமோ அப்போது வேதத்தினின்றும் உண்டான சிருஷ்டியும் நித்தியம் அதாவது முந்தின சிருஷ்டியை அநுசரித்தே இந்த சிருஷ்டியும் இருக்கிறது. அப்படியே.

तेषां ये यानि कर्माणि प्राक्सृष्ट्यां प्रतिपेदिरे ।
तान्येव ते प्रपद्यन्ते सृज्यमानाः पुनः पुनः ॥
हिंस्राहिंस्रे मृदुक्रूरे धर्माधर्मावृतानृते ।
तद्भाविताः प्रपद्यन्ते तस्मात्तत्तस्यरोचते ॥

என்கிற சுருதியில்

பிராணிகளுக்குள் எவர்கள் முந்தின சிருஷ்டியில் எந்தக் கர்மங்களைச்செய்கிறார்களோ அவர்கள்பிந்திய சிருஷ்டியில் உண்டாகி அவைகளையே அடைகிறார்கள். ( அதாவது கர்மங்கள் செய்யப்பட்டவுடன் பலனைக் கொடுக்கும்படியான அபூர்வமென்ற யோக்கியதை ஏற்படுகிறதுமன்றியில் அவைகளின் சம்ஸ்காரமும் உண்டாகிறது. அபூர்வத்தால் பலத்தை பிராணிகள் அநுபவிக்கிறார்கள். சம்ஸ்காரத்தால் முந்தின கர்மத்தை அநுசரித்த நூதனகர்மங்களைச் செய்கிறார்கள்.) அந்த கர்மங்கள் தீங்கு செய்பவைகளோ, தீங்குசெய்யாதவைகளோ, மிருதுக்களோ, குரூரங்களோ, தர்மமோ, அதர்மமோ, சத்தியமோ, அசத்தியமோ, எப்படியானாலும் சரி, அவைகளால் பிரேரணைசெய்யப்பட்டு அவைகளை அநுசரித்தே கர்மங்களைச் செய்கிறார்கள். இந்த சம்ஸ்காரவசத்தினல் புண்ணியபாபாதிகள் அவனுக்கு ருசிக்கின்றன

என்று சொல்லியிருக்கிறது. ர (ஆகையால் புருஷனுக்கு இருக்கும் ருசி என்கிற அடையாளத்தைக் கொண்டு புண்ணியபாப சம்ஸ்காரத்தை ஊகிக்கலாம். அந்த சம்ஸ்காரமே ஸ்வபாவம், பிரகிருதி, வாஸனை என்று சொல்லப்படுகிறது.)

(இவ்விதமாய்க் கர்மத்தால் சிருஷ்டிசாதிருசியத்தைச் சொல்லி இனி தன்னுடைய உபாதானகாரணத்தில் லயமடைந்த சம்ஸ்காரமாகிய சக்திபலத்தாலும் சாதிருசியத்தை நிரூபிக்கிறார்.)

இந்த ஜகத்தானது லயத்தை அடைந்திருந்தாலும் அதின் சூட்சுமரூப மிருந்துகொண்டே யிருக்கிறது. அந்த சூட்சுமத்திலிருந்தே ஜகத்து மறுபடியும் உண்டாகிறது, அப்படி சூட்சுமரூபம் மகாப்பிரளயத்திலிராவிடின் ஜகத்து காரணமன்றியில் உண்டானதாகச் சொல்லும்படி நேரிடும்.

சூட்சுமரூபங்கள் அநேகவிதம் என்றும் சொல்லமுடியாது. ர( அவித்தையில் லயமடைந்த சூட்சுமரூபத்தைவிட வேறு சூட்சும ரூபங்களைக் கற்பிக்கிறதற்கு பிரமாணமில்லை கௌரவமும் ஏற்படும்.

महान् न्यग्रोधस्तिष्ठति श्रद्धत्स्व सोम्य

அதாவது ஒருவிரையில் பெரியமரமிருக்கிறது என்பதை நம்பு என்று சுருதிசொல்லுகிறது. ஆகையால் அவித்தையாகிற உபாதானகாரணத்தில் சூட்சுமரூபம் தங்குகிறது என்பது சித்தம். ஆகையால் அவித்தை, அதின்காரியம் இவைகளைத்தவிர வேறு சூட்சுமரூபங்களில்லை. ஆத்மாவை அறியாமையே அந்த சூட்சுமரூபம் என்பது கருத்து.

ஆகவே பூ: முதலிய லோகங்களின் வரிசைகள், தேவதைகள், மிருகங்கள், மனிதர்கள் ஆகிய பலவிதப் பிராணிகளின் வரிசை, வர்ணாசிரமதர்ம பலங்கள், இவைகளெல்லாம் அடிக்கடி (மஹாப்பிரளயங்களில்) லயமடைந்து லயமடைந்து மறுபடியும் உண்டானாலும் (எப்படி தூங்கி எழுந்திருந்தவனுக்கு முன்னிருந்த கண்போலவே கண் உண்டாகிறது, அது ரூபத்தையே கிரகிக்கிறது, ரஸாதிகளைக் கிரகிக்கிறதில்லை.) இப்படி இந்திரியங்களுக்கும் விஷயங்களுக்கும் சம்பந்தமிருப்பதுபோல், அநாதியான சம்சாரத்தில் (யோக்கியமான லோகங்கள், போகாசிரயமான பிராணிகள், போககாரணமான கர்மங்கள், இவைகளெல்லாம் ஸம்ஸ்காரபலத்தால் முந்தின லோகாதிகளுக்குச் சமானமாகவே) உண்டாகின்றன என்று அறியத்தக்கது. (எப்படி ஆறாவது இந்திரியமான மனதிற்கு சுகாதிகள் சாட்சிவிஷயமானதால் அசாதாரணமான விஷயமில்லையோ அல்லது எப்படி ஆறாவது இந்திரியமில்லையோ அதின் விஷயமுமில்லையோ) அப்படி இந்திரியத்துக்கும் விஷயத்திற்கும் இருக்கிற சம்பந்தம் ஒவ்வொரு கற்பத்திலும் வெவ்வேறாயிருக்கும் என்று சொல்லமுடியாது. ஆகையால் சகல கற்பங்களிலும் வியவஹாரம் சமானமாயிருப்பதாலும் ஈசுவராதிகளுக்குகல்பாந்தர வியவஹாரங்களை அநுசந்தானம் செய்யமுடியுமானதாலும், ஒவ்வொரு கற்பத்திலும் பிரபஞ்சவிஷயங்கள் முந்தின நாமரூபங்களுடன் உண்டாகின்றன. இப்படி சமான நாமரூபங்களிருப்பதினல், ஜகத்துக்கு மஹாபிரளயங்களும் மகாகற்பங்களும் அடிக்கடி உண்டாவதாக ஒப்புக்கொள்ளுவதிலும் வேதப்பிராமாண்ணியத்துக்கு யாதொரு விரோதமுமில்லை.

சமான நாமரூபங்கள் இருக்கின்றன வென்பதற்கு சுருதிஸ்மிருதிப் பிரமாணங்களிருக்கின்றன.

(1) சுருதிப்பிரமாணம் :—

सूर्या चन्द्रमसौ धातायथा पूर्वमकल्पयत् दिवञ्च पृथिवीञ्चान्तरीक्षमथोस्वः

என்கிற ரிக்வேத சம்ஹிதை X-190-3ல் பிரம்மாவானவர் முந்திபோல் சூரியன், சந்திரன், ஆகாசம், பிருதிவி, அந்தரிக்ஷம், பிரகாசமான ஸ்வர்க்கம் இவைகளைச் செய்தார் என்று சொல்லியிருக்கிறது. எப்படி முந்தின கற்பத்தில் சூரியன் சந்திரன் முதலான ஜகத்தானது ஏற்பட்டிருந்திருந்ததோ அப்படி இந்த கற்பத்திலும் பரமேசுவரன் ஏற்படுத்தினர் என்பது கருத்து.

அப்படியே தைத்திரீய பிராமணம் III-1-4-1ல்.

अग्निर्वा अकामयत अन्नादो देवानां स्याम् स एवमग्नये कृत्तिकाभ्यः पुरोडाशमष्टाकपालं निरवपत्

அதாவது இனிவரும் கற்பத்தில் நான் தேவதைகளுக்கு அன்னத்தைக் கொடுக்கிறவனாக ஆகவேண்டும் என்று இச்சித்து, இப்போது அக்கினியானவன் கிருத்திகா நக்ஷத்திரத்துக்கு அபிமானியான அக்கினிக்கு எட்டுப்பாத்திரங்களில் பக்குவம் பண்ணப்பட்ட ஹவிசைக்கொடுத்தான்

என்று சொல்லியிருக்கிறது. இந்த வசனமானது நக்ஷத்திரங்களின் இஷ்டிவிதியில் எந்த அக்கினிகொடுக்கிறதாகவும் எந்த அக்கினியின் பொருட்டுக்கொடுக்கப்பட்டதாகவும் சொல்லியிருக்கிறதோ, அந்த இரண்டு அக்கினிகளுக்கும் நாமரூபங்கள் சமம் என்று காட்டுகிறது. (ஏ அக்கினியானவன் தன்னை உத்தேசித்தே யாகம் செய்வானா என்று கேட்கும் பக்ஷத்தில் யாகம் செய்தவன் மனிதன்தான். இனிவரும் கல்பத்தில் தான் அக்கினியாக வேண்டும் என்று இச்சித்து அந்த பதவியை அடையப்போகிறபடியால் இப்போது அவன் அக்கினிபதத்தால் கூறப்படுகிறான் என்று அறியத்தக்கது).

இப்படிப்பட்ட சுருதிகளை இவ்விடத்தில் உதாகரிக்க வேண்டியது.

ஸ்மிருதிப்பிரமாணம் :—

ऋषीणां नामधेयानि श्रया वेदेषु दृष्टयः ।
शर्वर्यन्ते प्रसूतानां तान्येवैभ्यो ददात्यजः ॥
यथर्तुष्वृतुलिङ्गानि नानारूपाणि पर्यये ।
दृश्यन्ते तानि तान्येव तथा भावा युगादिषु ॥
यथाभिमानिनोऽतीतास्तुल्यास्ते साम्प्रतैरिह ।
देवा देवैरतीतैर्हि रूपैर्नामभिरेव च ॥

(பூர்வகல்பத்தில்) ரிஷிகளுக்கு நாமதேயங்கள் எவைகளோ, வேதங்களைப்பார்க்க யாதொரு சாமர்த்தியங்களோ அவைகளையே, பிரம்மாவானவர் பிரளயத்துக்கு முடிவில் (கல்பாரம்பத்தில்) உண்டான அவர்களுக்குக் கொடுக்கிறார். ருதுக்களின் அநேகவித சின்னங்கள் அந்தந்த காலங்களில் எப்படி திரும்பித்திரும்பி வருகின்றனவோ அப்படியே ஒரே பிராணிகள் வெவ்வேறு யுகங்களில் காணப்படுகிறார்கள்.

ஆ சக்ஷுஸ் முதலியவைகளுக்கு முந்தின கற்பத்தில் எந்த தேவதைகள் அபிமானிகளாக இருந்தார்களோ அவர்கள் இப்போதும் சக்ஷுஸ் முதலியவைகளுக்கு அபிமானியாயிருக்கிற தேவதைகளுக்கு நாமரூபங்களில் சமானமாக இருக்கிறார்கள். இப்படிப்பட்ட வசனங்களை உதாஹரணமாகப் பாவிக்க வேண்டியது. (54)

## XIII. I-3-8ல் 6 (31)வது சூத்திரம்.

## मध्वादिष्वसम्भवादनधिकारं जैमिनिः (55)

2. முந்தின சூத்திரத்துக்கும் இதற்கும் சம்பந்தம் —தேவதைகளுக்கு சரீரமிருக்கிறதென்றும் ஜகத்துக்கு உற்பத்திவிநாசங்க ளிருக்கின்றன வென்றும் ஒப்புக்கொள்ளுகிற விஷயத்தில் கர்மத்திலும் வைதிக சப்தத்திலும் விரோதத்தைச் சங்கித்து அதைப் பரிஹரித்தார். (ஐ) तदुपर्यपि என்கிற முதல் சூத்திரத்தில் தேவாதிகளுக்கு உபாசனைகளில் அதிகாரமிருக்கிறதென்று சொல்லப்பட்டது. எல்லா உபாசனைகளிலும் அதிகாரமிருக்கிறதா, அல்லது சில உபாசனைகளில்மட்டும் அதிகாரமிருக்கிறதா என்று சந்தேகம் வர முதற் பக்ஷத்தை நிராகரிக்கும் பொருட்டு இந்த சூத்திரத்தை ஆரம்பிக்கிறார். (56)

3. பதவுரை :—

| | |
|---|---|
| मध्वादिषु | மது முதலியவைகளில் |
| असंभवात् | சம்பவிக்காதபடியால் |
| अनधिकारं | அதிகாரமில்லை |
| जैमिनिः | ஜைமினி (நினைக்கிறார்) (57) |

4. பொழிப்புரை :—

மதுமுதலியவித்தைகளில் எப்படி தேவதைக ளுக்கு அதிகாரமில்லையோ அப்படி எல்லா வித்தைக ளிலும் அதிகாரமில்லை என்று ஜைமினி ஆசாரியார் நினைக்கிறார். (58)

5. பாஷ்யம் :—

(1) தேவதை முதலானவர்களுக்கும் பிரம்மவித் தையில் அதிகாரமிருக்கிறதாக तदुपर्यपि என்கிற முதல் சூத்திரத்தில் யாதொன்று கூறப்பட்டதோ அது இந்த சூத்திரத்தில் திருப்பப்படுகிறது (ஆக்ஷேபிக் கப்படுகிறது) (59)

(2) अनधिकारं जैमिनिः தேவதைகளுக்கு அதிகா ரமில்லை என்று ஜைமினி ஆசாரியர் நினைக்கிறார் ஏனெனின். (60)

(3) मध्वादिष्वसंभवात् பிரம்மவித்தையில அதி காரத்தை ஒப்புக்கொள்ளும்பக்ஷத்தில், வித்தை என் பது ஒன்றாக இருப்பதால் மதுமுதலிய வித்தையி லும் அதிகாரத்தை ஒப்புக்கொள்ளவேண்டும். ஆனால் இது சம்பவிக்கவில்லை. எப்படி யெனின்

असौ आदित्यो देवमधु

(இந்த சூரியன் தேவதைகளின் மது) என்கிற சாந்தோக்கிய III-1-1 சுருதியிற் சொல்லியபடி மனி தர்கள் ஆதித்தியனை மதுவாக உபாசிப்பார்கள். தே வதைகளை உபாசகர்களாக ஒப்புக்கொள்ளும்பக்ஷத் தில் ஆதித்தியன் வேறு எந்த ஆதித்தியனை உபாசிப் பான்? (ரா உபாசிக்கிறவனும் உபாசிக்கப்பட்டதும் ஒன்றாக இருக்கமாட்டாதாகையால் ஆதித்தியன் ஆதித்தியனைஉபாசிக்கமாட்டான். ஆகையால் தேவதை களுக்கு உபாசனையில் அதிகாரம் ஏற்படவில்லை).

ரா (ஆதித்தியனுக்கு ஆதித்திய உபாசனையில் அதிகாரம் வேண்டாம். வசுமுதலானவர்களுக்கு அதி காரம் இருக்கட்டுமே எனின் அவர்களும் தியானிக்கக் கூடியவர்களாயும் அடையக்கூடியவர்களாயு மிருப்ப தால், அவர்களுக்கும் உபாசனையில் அதிகாரமில்லை என்று இனி சொல்லுகிறார்) (எப்படி யெனின்).

மேலும் அதேபிரகரணத்தில் சிகப்பு முதலிய ஐந்து அமிருதங்கள் ஆதித்தியனை ஆசிரயித்துக் கொண்டிருக்கின்றன வென்று ஆரம்பித்து, வசுக்கள், ருத்திரர்கள், ஆதித்தியர்கள், மருத்துக்கள், சாத்தி யர்கள் ஆகிய ஐந்து தேவகணங்கள் முறையே அந்த அமிருதங்களை அநுபவிக்கிறார்கள்என்று உபதேசித்து

स य एतदेवममृतं वेद वसूनामेवैको भूत्वाग्निनैव मुखेनैत-द्वेवामृतं दृष्ट्वा तृप्यति

(அதாவது எவன் இந்த அமிருதத்தை இப்படி அறிகிறானோ அவன் வசுக்களில் ஒன்றாகி, அக்கினிமு கத்தாலேயே அமிருதத்தைப்பார்த்து திருப்தி அடை கிறான்).

இது முதலிய வசனங்களால் வசுமுதலானவர்க ளால் அநுபவிக்கப்படும் அமிருதங்களை அறிகிறவர் கள் வசுமுதலானவர்களின் மஹிமையை அடைகிற தாக சுருதி காட்டுகிறது.

வசுமுதலானவர்களே வேறு எந்த வசுமுதலான வர்களை அமிருதாநுபவிகளாக அறிவார்கள், எப்படிப் பட்ட வேறான வசுமுதலானவர்களின் மஹிமையை அடைவார்கள். (ஆ இவர்கள் உபாசகர்களானால் இவர் களே உபாசிக்கப்பட்டவர்களாவதால் விரோதம் சம் பவிக்கிறது. ஆகையால்இவர்களும் உபாசகர்களன்று)

(இனி சூத்திரத்திலுள்ள ஆதி சப்தத்திற்கு அர்த்தம் சொல்லப்படும்.)

அப்படியே சாந்தோக்கியம் III-18-2ல்

(1) अग्निः पादो वायुः पादः आदित्यः पादः दिशः पादः

(அக்கினி பாதம், வாயு பாதம், ஆதித்தியன் பா தம், திக்குகள் பாதம்)

(2) சாந்தோக்கியம் IV—3—1ல்

वायुर्वाव सम्वर्गः

வாயுவானவன் சம்வர்க்கன் அதாவது சகலத் தையும் தன்னிடத்தில் லயப்படுத்துகிறவன்.

(3) சா-III-19-1ல் आदित्यौ ब्रह्मेत्यादेशः

ஆதித்தியன் பிரம்மம் என்கிற உபதேசம்.

முதலிய சுருதிகளில் தேவதைகளின் ஆத்மாவை (ஸ்வரூபத்தை) உபாசிக்கும்படி சொல்லியவிடங்க ளில் தேவதைகளுக்குத் தேவதோபாசனையில் அதி காரம் ஏற்படவில்லை.

அப்படியே பிரஹதாரணியகம் II-2-4

इमावेव गौतमभरद्वाजावयमेव गौतमोऽयं भरद्वाजः

(இவர்களே கௌதம பாரத்வாஜரிஷிகள், வல துகாது கௌதமர் இடதுகாது பாரத்வாஜர்)

முதலிய சுருதிகளில் ரிஷிசம்பந்தமான உபாசனைகள் சொல்லப்பட்டிருக்கின்றன. அவைகளுக்கு ரிஷிகளே அதிகாரிகளாகமாட்டார்கள்.

(இவ்விதமாக மதுமுதலிய உபாசனைகளில் தேவர்திகளுக்கு அதிகாரம் ஏற்படாததால் எல்லா உபாசனைகளிலும் அதிகாரமிருக்கிற தென்கிற பக்ஷம் இந்த சூத்திரத்தில் நிராகரிக்கப்பட்டது) (62)

XIV. I-3-8ல் 7(32)வது சூத்திரம்.

# ज्योतिषि भावाच्च ॥ ३२ ॥ (63)

முன் சூத்திரத்துக்கும் இதற்கும் சம்பந்தம் :— சகல உபாசனைகளிலும் தேவதைமுதலானவர்களுக்கு அதிகாரம் ஏற்படவில்லை என்று முன் பூர்வபக்ஷ சூத்திரத்தில் நிரூபிக்கப்பட்டது. இப்போது, எந்தவிடத்தில் விரோதம் காணப்படவில்லையோ அந்த உபாசனைகளில் தேவதை முதாலனவர்களுக்கு அதிகாரமிருக்கட்டுமே என்றும் இரண்டாவது பக்ஷத்தை இந்த பூர்வபக்ஷசூத்திரத்தில் விசாரித்து நிராகரிக்கிறார்(64)

3. பதவுரை:—

ज्योतिषि ஜோதிர்மண்டலத்தில்

भावात् च இருப்பதினாலும் (65)

4. பொழிப்புரை :—

சூரியன், சந்திரன், சுக்கிரன், அங்காரகன் முதலான தேவதைகளைக்கூறும் பதங்கள் ஜோதிர்மண்டலத்தைக் கூறுவதாலும், இந்த மண்டலம் சேதனரூபமாக இராதபடியாலும் தேகமுள்ள தேவதைகள் இல்லை. ஆகையால் தேவதைகள் அதிகாரிகளாக மாட்டார்கள். (66)

5. பாஷ்யம் :—

ஆகாசத்திலிருந்துகொண்டு இரவும் பகலும் சுற்றிக்கொண்டு யாதொரு ஜோதிர்மண்டலமானது ஜகத்தைப் பிரகாசிப்பிக்கிறதோ, அந்த மண்டலத்தை, ஆதித்தியன் முதலான தேவதைகளைக்கூறும் சப்தங்கள், கூறுவதாக உலகவழக்கத்தாலும், (மது வாக்கியத்தின் பிந்தின) வசனங்களாலும் தெரிய வருகிறது.

இப்படிப்பட்ட ஜோதிர்மண்டலத்துக்கு ஹிருதயம் முதலிய அவயவமாவது, சேதனமாவது, இச்சையைத்தரிக்கும் சக்தியாவது எப்படி இருக்கக் கூடும் என்பதை நாம் அறியமாட்டோம். ஏனெனின் மண் முதலியதுபோல் ஜோதிர்மண்டலமும் அசேதனம் என்று அறிகிறோம். இதனால் அக்கினி முதலானவர்களும் சேதனமன்று என்று சொன்னதாக ஆய்விட்டது.

சித்தாந்தி இப்படி சங்கிக்கலாம்: वज्रहस्तः पुरन्दरः என்கிற மந்திரங்களென்ன,

(2) सोऽरोदीत् (அக்கினி அழுதான் முதலிய அர்த்தவாதங்கள் என்ன,

इष्टान् भोगान् हि वो देवा दास्यन्ते यज्ञभाविताः ।
ते तृप्तास्तर्पयन्त्येनं सर्वकामफलैः शुभैः ॥

(யஞ்ஞத்தில் பூஜிக்கப்பட்ட தேவதைகள் இஷ்டமான போகங்களைக் கொடுக்கிறார்கள். அவர்கள் திருப்தி அடைந்தவர்களாய் இவனை சகல சுபபலன்களுடன் திருப்திசெய்கிறார்கள்.)

முதலிய இதிஹாஸபுராணங்கள் என்ன,

(4) உலகத்தில் யமனை தண்டபாணியாகவும் இந்திரனை வஜ்ஜிரபாணியாகவும் சித்திரத்தில் எழுதுகிறார்கள். இப்படிப்பட்ட லோகவழக்கமென்ன,

இவைகளால் தேவதை முதலானவர்களுக்கு தேகமிருப்பதாகத் தெரியவருவதினால் அவர்களுக்கு அதிகாரமில்லை என்கிற தோஷமில்லை

இப்படி சித்தாந்தி சொல்லுவது யுக்தமன்று. ஏனெனின்,

(1)லோகம் என்பதாய் ஸ்வதந்திரமான யாதொரு பிரமாணமுமில்லை. மூலத்தை விசாரிக்காத பிரத்தியக்ஷம் முதலிய பிரமாணங்களால் எது பிரசித்தமாயிருக்கிறதோ அது உலகத்தில் பிரசித்தம் என்று சொல்லப்படுகிறது. விக்கிரஹம் முதலியவைகளில் பிரத்தியக்ஷம் முதலிய பிரமாணங்களுக்குள் ஒன்றும் பிரமாணமாக இல்லை. ஆகையால் உலகப்பிரசித்திக்கு பிரத்தியக்ஷாதி மூலமாகமாட்டாது.

ஆ (2) உலகப்பிரசித்திக்கு இதிஹாஸ புராணங்கள் மூலமாயிருக்கட்டுமே எனின்,

இதிஹாஸபுராணமும் புருஷனால் ஏற்படுத்தப்பட்டபடியால், (தன்னுடைய சித்திக்கு)வேறு பிரமாணமான மூலத்தை அபேக்ஷிக்கிறது. ( ஆகையால் அது லோகப்பிரசித்திக்கு மூலமாகமாட்டாது).

ஆ (3) அர்த்தவாத வாக்கியங்கள் வேதவாக்கியங்களானதால் புருஷனால் ஏற்படாதவைகள். ஆகையால் அவைகள் மூலமாக இருக்கட்டுமே எனின்)

ஆ (பூர்வமீமாம்சையின், I-2-7வது சூத்திரப்படி) இவைகள் விதிவாக்கியங்களால் போதிக்கப்பட்ட அர்த்தத்தையே பிரசம்சிக்கின்றன. (ஸ்வதந்திரமாக ஒன்றையும் போதிக்கவில்லை). தேவதை முதலானவர்களுக்கு சரீரம் முதலியவை இருக்கின்றன என்கிற விஷயத்தில் மூலமாகமாட்டா.

ஆ (4) (மந்திரங்கள் ஸ்துதிபரமாக இராதபடியால் அவைகள் மூலமாக இருக்கட்டுமே எனின்),

யாகத்தில் தான்னியங்களைக்கொண்டு சில காரியங்களைச் செய்யும்படி சொல்லியிருப்பதுபோல் மந்திரங்களையும் உபயோகிக்கும்படி சொல்லியிருக்கிறது. ஆகவே மந்திரங்கள் பிரயோகங்களுடன் சேர்ந்தே வருகின்றன. மேலும் அந்த பிரயோகங்களில் எந்த விஷயங்கள் கூறப்பட்டிருக்கின்றனவோ அவைகளையே கூறுகின்றனவேதவிர வேறு விஷயத்தைக்கூறுகிறதில்லை என்று மீமாம்சகர்கள் சொல்லுகிறார்கள். (ஆகையால் மந்திரங்கள் தேவதைகளின் சரீராதிகளைக் கூறமாட்டா).

இப்படி தேவதைகளுக்கு சரீரம் ஏற்படாதபடியால் அவர்களுக்கு அதிகாரம் சித்திக்கவில்லை. (67)

I-3-8-ல் 8 (33) வது சூத்திரம்.

## भावं तु बादरायणोऽस्ति हि ॥ ३३ ॥ (68)

2. முந்தின சூத்திரத்துக்கும் இதற்கும் சம்பந்தம்:—முந்தின இரண்டு சூத்திரங்களாலும் தேவதைகளுக்கு சரீரமில்லை என்பதாய் பூர்வபக்ஷம் ஏற்பட்டது. அதை இந்த சூத்திரத்தில் கண்டிக்கிறார். 69

3. பதவுரை:—

तु ஆனால்

बादरायण: பாதராயணாசாரியார்

भावं (அதிகார)மிருப்பதை

मन्यते நினைக்கிறார் (அதாவது ஒப்புக்கொள்ளுகிறார்)

हि ஏனெனின்

अस्ति (அதிகாரகாரணம்) இருக்கிறது. (70)

4. பொழிப்புரை:—

ஆனால், பாதராயணாசாரியார் தேவதைகளுக்கும் அதிகாரமிருப்பதாக பாவிக்கிறார். ஏனெனின் அதிகாரமிருக்கிறது என்று சொல்லுவதற்குக் காரணமிருக்கிறது. (71)

5. பாஷ்யம்:—

ர (1) तु இந்த சப்தம் (இரண்டு சூத்திரங்களால் ஏற்பட்ட) பூர்வபக்ஷத்தை நிராகரிக்கிறது. (72)

(2) भावन्तु बादरायण: பாதராயணாசாரியார் தேவதைகளுக்கும் அதிகாரமிருப்பதாக நினைக்கிறார். (73)

ர (3) अस्ति हि (மது முதலிய வித்தைபோல் பிரம்மவித்தையும் வித்தையாக இருப்பதால் தேவதைகளுக்கு பிரம்மவித்தையில் அதிகாரமில்லை என்று பூர்வபக்ஷி சொன்னது யுக்தமன்று)

தேவதை முதலானவர்களுடைய சம்பந்தம் பெற்ற மதுமுதலிய வித்தைகளில் தேவதை முதலானவர்களுக்கு அதிகாரமில்லாவிட்டாலும் சுத்தமான பிரம்மவித்தையில் அதிகாரமிருக்கிறது. அதிகாரம் ஆசை, சாமர்த்தியம், நிஷேதிக்கப்படாமை இவைகளைத்தான் அபேக்ஷிக்கிறது. (ர இராஜஸூயம் முதலிய யாகங்களில் பிராமணனுக்கு அதிகாரமில்லாததினால் தர்ச பூர்ணமாசாதி யாகங்களிலும் அவர்களுக்கு அதிகாரமில்லை என்று எப்படி சொல்லக்கூடாதோ அப்படி) சில இடங்களில் அதிகாரம் ஏற்படாததைக்கொண்டு, எங்கே எங்கே அதிகாரமிருக்கிறதோ அங்கங்கேயும் அதிகாரம் ஏற்படமாட்டாது என்று சொல்லக்கூடாது. மனிதர்களுக்குள்ளும், பிராமணன் முதலான சகலமானவர்களுக்கும் இராஜசூயமுதலிய சகலயாகங்களிலும் அதிகாரம் ஏற்படவில்லை. அந்த இடத்தில் எந்த நியாயம் ஏற்பட்டதோ அதுவே இவ்விடத்திலும் ஏற்படுகிறது. (ர எதில் எவனுக்கு அதிகாரமிருக்கிறதோ, அதற்கு அவன் அதிகாரி) என்கிற நியாயமானது இரண்டு இடத்திலும் சமம் என்பது கருத்து.) பிரம்மவித்தை விஷயத்தில் தேவதை முதலானவர்களுக்கு அதிகாரமிருக்கிறதாக சுருதி சூசிப்பிக்கிறதாக தெரியவருகிறது. எப்படியெனின் பிரஹதாரணியம் I-4-10-ல்

"तद्यो यो देवानां प्रत्यबुध्यत स एव तदभवत्तथर्षीणां तथा मनुष्याणां"

ர அதாவது தேவதைகளுக்குள் எந்த தேவதை அந்த பிரம்மத்தை தன் ஸ்வரூபமாக அறிகிறானோ அந்த தேவதை அந்த பிரம்மமாய் விடுகிறான் என்று சொல்லியிருக்கிறது.

சாந்தோக்கியம் VIII-7-2 ல்

ते होचु हन्त तमात्मानमन्विच्छामो

यमात्मानमन्विष्य सर्वांश्च लोकानाप्नोति सर्वांश्च कामा-
निति इन्द्रो ह वै देवानामभिप्रवव्राज विरोचनोऽसुराणाम्

ரா அதாவது தேவதைகள் ஒருவருடன் ஒருவர் பேசிக்கொண்டார்கள்:—நல்லது, எந்த ஆத்மாவைத் தேடி சகலலோகங்களையும் சகல இச்சைகளையும் ஒருவன் அடைகிறானோ அப்படிப்பட்ட ஆத்மாவைத் தேடிப்பார்ப்போம். பிறகு தேவதைகளின் அரசனான இந்திரனும் அசுரர்களின் அரசனான விரோசனனும் பிரம்மவித்தையைக் கொடுக்கத்தக்கவரான பிரஜாபதியிடம் சென்றார்கள்.

ரா (இவ்விரண்டு சுருதி வசனங்களும் தேவதைகளுக்கு பிரம்மவித்தையில் அதிகாரமிருக்கிறதென்பதை சூசிப்பிக்கின்றன.)

ஆ அப்படியே ஸ்மிருதிகளாலும் தெரியவருகிறது. எப்படியெனின் மஹாபாரதம் சாந்திபர்வம் மோக்ஷதர்ம பிரகரணத்தில், கந்தர்வயாஞ்ஞவல்கிய சம்வாதத்தில்

किमत्र ब्रह्म अमृतं किं स्विद्वेद्यमनुत्तमम् ।
चिन्तयेत्तत्र वै गत्वा गन्धर्वो मामपृच्छत ।
विश्वावसुस्ततो राजा वेदान्तज्ञानकोविदः ॥

அதாவது:—வேதாந்தமறிந்த கந்தர்வ அரசனான விசுவாசுவானவன் நான் இருந்த இடத்துக்கு வந்து அமிருதமான பிரம்மம் நிகரற்ற வேத்தியமா அதாவது அறியத்தக்கதா அல்லது தியானிக்கத்தக்கதா வென்று என்னைக் கேட்டான்.

என்று சொல்லியிருக்கிறது. (ஆ இப்படியே ஜநகயாஞ்ஞவல்கிய சம்வாதமும், பிரஹ்லாத அஜகரசம்வாதமும் ஏற்பட்டிருக்கிறது. இவைகளால் தேவதை முதலானவர்களுக்கு அதிகாரமிருக்கிறதென்பது சூசிப்பிக்கப்படுகிறது.) (74)

(4) ज्योतिषि भावाच्च என்கிற சூத்திரத்தில் ஆதித்திய முதலியபதங்கள் ஜோதிர்மண்டலத்தைத்தான் கூறுகின்றன வென்று பூர்வபக்ஷி சொன்னவிஷயத்தில் நாம் சொல்லுகிறதாவது:—

(ரா எப்படி பாலகர்கள் சக்ஷுஸ் முதலிய பதங்களை கோளங்களில் பிரயோகித்தாலும், சாஸ்திரஞ்ஞர்கள் கோளங்களுக்கு வேறான இந்திரியபரமாக அறிகிறார்களோ, அப்படி)

ஆதித்தியன் முதலிய பதங்கள் ஜோதிர்மண்டலம் முதலியவைகளைக் கூறினாலும், அந்த சப்தங்கள் சேதனத்துடன் கூடியும் ஐசுவரியத்துடன்கூடியும் சரீரத்துடன் கூடியுமிருக்கிற தேவதைகளையும் கூறலாம். அப்படியே மந்திரங்களினாலும் அர்த்தவாதங்களினாலும் தெரியவருகிறது.

(ரா இப்படி அவர்கள் சேதனமாயும் ஜடமாயும் எப்படி இருக்கக்கூடுமெனின்) ஐசுவரியயோகத்தினால் ஜோதிஸ் முதலியவைகளில் இருக்கவும் இஷ்டப்படி சரீரத்தைக் கிரகிக்கவும் அவர்களுக்கு சாமர்த்தியமுண்டு.

சுருதிப்பிரமாணம்:—

(a) அப்படியே சாமவேதத்தின் ஷட்விம்சத் பிராமணம் I-1-ல் சுப்பிரமணிய அர்த்தவாதத்தில் मेधातिथेर्मेष என்று சொல்லியிருக்கிறது. அதாவது யாகத்தில் உத்காதிருகணஸ்தானத்திலிருக்கும் ரித்விக்குக்கு சுப்பிரமணிய என்று பெயர். அவன் விஷயமாக इन्द्रागच्छ முதல் ஒரு அர்த்தவாதம் (ஸ்தோத்திரம்) ஏற்பட்டிருக்கிறது. அதில் இந்திரன் ஆட்டுக்கடாவாக ஆகி கண்வவம்சஸ்தனான மேதாதிதியைக் கொண்டுபோய்விட்டான் என்று சொல்லியிருக்கிறது.

(b) ஸ்மிருதி பிரமாணம்:—

आदित्यः पुरुषो भूत्वा कुन्तीमुपजगामह

அதாவது சூரியன் புருஷரூபம் தரித்து குந்தியை அடைந்தான் என்று மகாபாரதத்தில் சொல்லியிருக்கிறது.

(ரா இந்த பிரமாணங்களால் தேவதைகள் சரீரத்தைத் தரிக்கிறார்கள் என்று தெரியவருகிறது.)

(ரா மிருத்முதலியவைகள்போல் ஆதித்தியாதிகள் அசேதனம் என்று பூர்வபக்ஷி சொன்னதும் யுக்தமன்று. ஏனெனின்)

மிருத்பேசிற்று, ஜலம் பேசிற்று முதலிய காங்தோக்கிய சுருதிவசனங்களால் மிருத் முதலியவைகளில்கூட சேதனஸ்வரூப அதிபதிகள் வசிக்கிறதாக ஒப்புக்கொள்ளப்பட்டிருக்கிறது. ஆதித்தியாதிகளுக்குள் பூததாதுவான ஜோதிஸை அசேதனமாய் ஒப்புக்கொண்டிருக்கிறோம். அதிஷ்டாதாவான தேவதாத்மாக்கள் சேதனங்கள் என்று மந்திரார்த்தவாதங்களால் தெரியவருகிறதென்று முன்னமேயே சொல்லப்பட்டிருக்கிறது.

( ஒருவன் மற்றொருவன் சத்துருவீட்டுக்குப் போவதைப் பார்த்து "விஷத்தைச் சாப்பிடு" என்று சொல்லுகிறான். இவனுடைய கருத்தானது விஷத்தைச் சாப்பிடுவதில் இல்லை, பின்னையோவெனின் சத்துருவீட்டுக்கே போகக்கூடாதென்பதாம். இது போல் மந்திரார்த்தவாதங்கள் முதலியவைகளிலுள்ள பதங்கள் தேவதைகளின் சரீரத்தைக் கூறுவதாகத் தோன்றினாலும், அவைகளுக்கு அதில் தாற்பரியமில்லை. அவைகள் வேறு அர்த்தத்தைக் கூறுகின்றன. இப்படி பூர்வபக்ஷி சொன்னதற்கு நாம் சொல்லுகிறதாவது:—

ஒருபதார்த்தத்தின் ஞானத்தால் அது இருக்கிறது என்று சொல்லுகிறோம். அதை அறியாவிட்டால் அது இல்லை என்று சொல்லுகிறோம். இப்படியன்றியில் வேறு ஒரு பிரயோஜனமில்லாதபக்ஷத்தில் இது இல்லை என்றாவது சொல்லவில்லை. இது இருக்கிறதென்பதற்கும் இல்லை என்பதற்கும் இதின் ஞானமும் அஞ்ஞானமும் காரணமாயிருக்கிறதேதவிர வேறு ஒன்றின் சம்பந்தமும் காரணமாயில்லை. திருஷ்டாந்தம்:—ஒருவன் ஒரு பிரயோஜனத்தை உத்தேசித்துப் புறப்புட்டுப்போகிறான். வழியில் விழுந்திருக்கிற புல், இலைமுதலியவைகளைப் பார்த்து இவைகள் இருக்கின்றனவென்றே அறிகிறான். (ஆகையால் மந்திரார்த்தவாதங்களின் பதங்களுக்கு வேறு கருத்து ஏற்பட்டிருந்தாலும் பதங்களால் விளங்கும் சரீரத்தை ஒப்புக்கொள்ளுவதில் பாதகமில்லை.)

பூர்வபக்ஷி:—நீ சொல்லுகிற திருஷ்டாந்தம் உபயோகப்படமாட்டாது. திருஷ்டாந்தத்தில் புல், இலை முதலியவைகள் பிரத்தியக்ஷமாய்க் காணப்படுகிறபடியால் அவைகள் இருக்கின்றனவென்று ஒப்புக்கொள்ளுகிறோம். இவ்விடத்தில் அர்த்தவாதவாக்கியங்களால் தேவதைகளின் சரீரங்கள் பிரத்தியக்ஷமாய்த் தெரியவில்லை. அர்த்தவாக்கியங்களோ விதிவாக்கியங்களிலுள்ள அர்த்தங்களையே ஸ்துதிக்கின்றன. ஆகையால் இவைகளுக்கு வேறான சரீராதிகளை இவைகள் கூறமாட்டா. ஆகையால் அர்த்தவாதவாக்கியங்களால் சரீராதிகளை அறியமுடியாது. (ரா அவாந்திரவாக்கியத்தால் சரீராதிகளின் ஞானமுண்டாகட்டுமே என்று சொல்லுவாயேயா) மகாவாக்கியத்தால் ஒரு அர்த்தம் விளங்குகிறதாக இருக்க, அதற்குள்ளடங்கிய சின்ன வாக்கியம்வேறுஒரு அர்த்தத்தை போதிக்கமாட்டாது. न सुरां पिबेत् (சுராபானம் செய்யாதே) என்கிற வாக்கியத்தில் 3 பதங்களுடைய சேர்க்கையால் கள்ளுக்குடித்தலின் நிஷேதம் என்ற ஒரே ஒரு அர்த்தம் அறியப்படுகின்றது. सुरां पिबेत् என்கிற இரண்டு பதங்களை சேர்க்கிறதினால் கள்ளைக்குடி என்கிற விதியும் ஏற்படவில்லை. (ஆகையால் அவாந்தர வாக்கியமாகிய அர்த்தவாத வாக்கியத்தைக்கொண்டு தேவதைகளுக்குச் சரீரமிருக்கிறதாக ஒப்புக்கொள்ளக்கூடாது)

சித்தாந்தம்:—உன்னுடைய திருஷ்டாந்தம் சரியன்று. न सुरां पिबेत् என்கிற இடத்தில் न காரம் सुरां पिबेत् என்கிற இரண்டு பதங்களுடன் சேர்ந்து சுராபான நிஷேதம் என்கிற ஒரு அர்த்தத்தைக் கொடுக்கிறது. ஆகையால் सुरां पिबेत् என்கிற இரண்டு பதங்கள் மட்டும் வேறு ஒரு அர்த்தத்தைக் கொடுக்கிறதாகச் சொல்லக்கூடாது. (ரா ஏனெனின் சுராபானத்தை விதித்திருந்தால் அதின்நிஷேதமும் ஏற்படமாட்டாது)

விதி அர்த்தவாதங்கள் விஷயத்திலோ, அர்த்தவாதவாக்கியத்திலுள்ள பதங்கள் ஒரு தனி அர்த்தத்தைக் கூறுகின்றன. பிறகு என்ன பிரயோசனத்திற்காக இது ஏற்பட்டது என்று விசாரிக்குமளவில் விதியை ஸ்தோத்திரம் செய்வதற்காக என்று தெரியவருகிறது. (ரா ஆகையால் அர்த்தவாதவாக்கியத்தால் தேவதைகளின் சரீரத்தை ஒப்புக்கொள்ளலாம்).

वायव्यं श्वेतमालभेत भूतिकामः

அதாவது ஐசுவரியத்தை இச்சிக்கிறவன் வாயுவுக்குவெண்மையான மிருகத்தைக் கொடுக்கவேண்டும் என்று சொல்லியிருக்கிற இடத்தில் விதிவாக்கியத்திலுள்ள வாயுமுதலிய பதங்களுக்கு "கொடுக்கவேண்டும்" என்கிற விதியுடன் சம்பந்தம் ஏற்படுகிறது. ஆனால்,

वायुर्वै क्षेपिष्ठा देवता वायुमेव स्वेन
भागधेयेनोपधावति स एवैनं भूतिं गमयति

(அதாவது:—வாயுவானவன் வெகுவேகமாகப் போகிற தேவதை, வாயுவையே எவன் தன்னுடைய திரவியத்துடன் அடைகிறானோ அவன் ஐசுவரியத்தை அடையும்படி வாயு செய்கிறான்).

என்கிற அர்த்தவாதத்திலுள்ள பதங்கள் முந்தின விதிவாக்கியத்திலுள்ள பதங்களுடன் சம்பந்தப்படவில்லை. வாயுவின் ஸ்தோத்திரத்தைக் கூறும் ஒரு தனிவாக்கியமாக அவைகள் ஏற்பட்டு, இந்தக் கர்மமானது இப்படிப்பட்ட குணத்துடன்கூடிய வாயுவுடன் சம்பந்தப்பட்டிருக்கிறது என்று சொல்லுவதினால், அந்தக் கர்மவிதியை ஸ்துதிக்கிறது.

வி லோகாக்ஷி என்கிற மீமாம்சகரால் செய்யப்பட்ட அர்த்தசங்கிரக பிரகரணத்தில்

**विरोधे गुणवादः स्यादनुवादोऽवधारिते ।**
**भूतार्थवादस्तद्धानादर्थवादस्त्रिधा मतः ॥**

(விரோதத்தில் குணவாதம் ஏற்படுகிறது, நிச்சிதமான அர்த்தத்தில் அனுவாதம் ஏற்படுகிறது. இரண்டுமில்லாத இடத்தில் பூதார்த்தவாதம் ஏற்படுகிறது.

என்று சொல்லியபடி அர்த்தவாதம் (அவாந்தர வாக்கியம்) (a) அனுவாதம், (b) குணவாதம் (c) பூதார்த்தவாதம் என மூவ்வகைத்து.

இவைகளுக்குள் (1) अग्निर्हिमस्य भेषजं (2) वायुर्वै क्षेपिष्ठा देवता அதாவது (1) அக்கினியானவன் பனிக்கு மருந்து மாத்திரை (2) வாயுவானவன் வேகமாய் ஓடும் தேவதை, முதலிய வாக்கியங்களைப்போல் எந்த இடத்தில் அவாந்திரவாக்கியத்தின் அர்த்தமானது இதரப்பிரமாணத்தால் தெரியவருகிறதோ அந்த இடத்தில் அந்த அர்த்தவாதமானது அனுவாதரூபமாயிருக்கிறது அதாவது தெரிந்த சங்கதியையே சொல்லுகிறதாயிருக்கிறது.

(b) आदित्यो यूपः (ஆதித்தியன்) சூரியன் யூபஸ்தம்பம் முதலிய வாக்கியங்களிற்போல் எந்த இடத்தில் பிரத்தியக்ஷம் முதலிய பிரமாணங்களுக்கு விரோதம் வருகிறதோ அவ்விடத்தில் பதங்களால் சித்திக்கும் அர்த்தம் ஏற்படமாட்டாது. ஆகையால் குணத்தையே கிரகிக்கவேண்டியது. சூரியன்போல் யூபம் நிர்வாஹகன், தேஜஸ்வி என்று அறிவது போதும். இவ்விடத்தில் அர்த்தவாதவாக்கியம் குணவாதரூபமாயிருக்கிறது.

(இந்த இரண்டு வாதங்களிலும் அதாவது அனுவாத குணவாதங்களிலும் ஸ்வார்த்தத்தில் தாற்பரியம் ஏற்படுகிறதில்லை).

**वि इन्द्रो वृत्राय वज्रमुदयच्छत्**

இந்திரன் விருத்திராசுரனை உத்தேசித்து வஜ்ஜிராயுத்தை உயரவெடுத்தான்) என்கிற இடத்தில் பிரத்தியக்ஷாதி பிரமாணத்துக்கு விரோதமும் ஏற்படவில்லை. இதரபிரமாணத்தால் சொன்ன விஷயம் அறியும்படியாகவுமில்லை. இப்படிபோல் எவ்விடத்தில் இதரப்பிரமாணத்தால் அறியப்படும்தன்மை, இதரபிரமாணத்துக்கு விரோதமாயிருக்கும்தன்மை, இவ்விரண்டும் ஏற்படவில்லையோ, அவ்விடத்தில்,

(a) இதரபிரமாணம் சித்திக்காததால் அனுவாதம் சித்திக்கவில்லை, ஆனால் குணவாதம் சித்திக்கிறதா? அல்லது இதரப்பிரமாணவிரோதமிராததால்குணவாதமும் சித்திக்கவில்லை. ஆகையால் இருக்கிற விஷயத்தை சொல்லுகிறதாகிய பூதார்த்தவாதம் சித்திக்கிறதா? இப்படி பரியாலோசனை செய்து பார்க்குமளவில் பூதார்த்தவாகத்தையே ஒப்புக்கொள்ளவேண்டுமென்று ஏற்படுகிறது. குணவாதத்தை ஒப்புக்கொள்ளக்கூடாது. தேவதாசரீரத்தைக் கூறும் அர்த்தவாத வாக்கியங்களுக்கு ஸ்வார்த்தத்தில் தாற்பரியமிருக்கிறதுபோல்மந்திரங்களுக்கும் ஸ்வார்த்தத்திற் தாற்பரியமிருக்கிறது. அந்த யுக்தியே மந்திரங்கள் விஷயத்திலும் பொருந்துகிறது.

தேவதைகளுக்குச் சரீரமிருப்பதை ஒப்புக்கொள்ளவேண்டியவிஷயத்தில் இன்னும் ஒருகாரணமுமிருக்கிறது. இந்திரன்முதலான தேவதைகளுக்கு ஹவிஸைக் கொடுக்கும்படி விதிக்கும் விதிவாக்கியங்கள் இந்திரன்முதலானவர்களின் ஸ்வரூபத்தை அபேக்ஷிக்கின்றன. ஏனெனின் சரீரமற்ற இந்திரன்முதலான தேவதைகளை மனதினால் பாவிக்கமுடியாது மனதினால் நினைக்கமுடியாத தேவதைகளுக்கு ஹவிசைக் கொடுக்கமுடியாது.

அப்படியே ஐதரேயப்பிராமணத்தில் IV-8-1ல்

**यस्यै देवतायै हविर्गृहीतं स्यात्तां**
**मनसा ध्यायेद्वषट्करिष्यन्**

அதாவது எந்த தேவதைக்காக ஹவிசு கிரகிக்கப்பட்டிருக்கிறதோ, அந்த தேவதையை வஷட்காரத்தை உச்சரிக்கும்போது மனதினால் தியானிக்க வேண்டியது

என்று சொல்லியிருக்கிறது, (ஆகையால் தேவதைகளுக்கு சரீராதிகளை ஒப்புக்கொள்ளவேண்டும்)

மேலும் கேவலம் சப்தம்மட்டும் ஒரு பதார்த்தத்தின் ஸ்வரூபமாகமாட்டாது. ஏனெனின் சப்தம்வேறு, சப்தத்தால் கூறப்பட்ட விஷயம் வேறு. ஆகையால் எவன் வேதசப்தத்தைப் பிரமாணமாக ஒப்புக்கொண்டிருக்கிறானோ அவன், மந்திரார்த்த வாதங்களால் இந்திரன் முதலான தேவதைகளுக்கு எந்த ஸ்வரூபம் தெரியவருகிறதோ அந்த ஸ்வரூபமில்லை என்று சொல்லமுடியாது.

கீழ்ச்சொன்ன யுக்திப்படி மந்திரங்களுக்கும் அர்த்தவாதங்களுக்கும் பிராமாணியம் ஏற்படுகிறது. அப்

படிப்பட்ட மந்திர அர்த்தவாதங்களை இதிஹாஸபுராணங்கள் மூலமாய் உடைத்தாயிருப்பதால், அவைகளும் தேவதைகளுக்குச் சரீராதிகள் உண்டென்று சாதிக்கமுடியும். இதிஹாஸ புராணங்களுக்கு பிரத்தியக்ஷம் முதலியதும் மூலமாயிருக்கலாம். நமக்கு அப்பிரத்தியக்ஷமாயிருப்பதும் முன்காலத்திலிருந்த வியாசாதி யோகிகளுக்குப் பிரத்தியக்ஷமாக இருக்கலாம். வியாசாதிகள் தேவதை முதலானவர்களுடன் பிரத்தியக்ஷமாய் வியவஹரித்தார்கள் என்று ஸ்மிருதியாலும் தெரியவருகிறது. நமக்குப்போல முன் இருந்தவர்களுக்கும் தேவாதிகளுடன் பிரத்தியக்ஷமாய் வியவகரிக்க சாமர்த்தியம் இருந்திருக்கமாட்டாது என்று சொல்லுகிறவன் ஜகத்தானது விசித்திர மென்பதை ஒப்புக்கொள்ளக்கூடாது. (ா கடம்போல் எல்லாம் வஸ்துவாயிருப்பதால் எல்லாம் கடம்தான் என்று அவன் சொல்லவேண்டும்).

இப்போது பூமண்டலம் முழுமையையும் ஆளுகிற அரசன் இராததுபோல் முன்காலத்திலும் இருந்திருக்கவில்லை என்று அவன் சொல்லலாம். அப்போது இராஜஸூயாதியாகம் செய்யும்படி ஏற்பட்ட வேதவசனமே வியர்த்தமாய்விடும். மேலும் இப்போதுபோல் முற்காலத்திலும் வர்ணாசிரமதர்மங்கள் அவ்வியவஸ்திதங்களா யிருந்தனவென்று சொல்லலாம். அப்போது இவைகளின் வியவஸ்தையைக்கூறும் வேதவசனங்கள் நிஷ்பிரயோசனங்களாய்விடும்.

ஆகையால் முன்னிருந்தவர்கள் அவர்களுடைய மேன்மையான தர்மபலத்தால் தேவதை முதலானவர்களுடன் பிரத்தியக்ஷமாய் வியவஹரித்தார்கள் என்று ஒப்புக்கொள்ளலாம்.

மேலும் स्वाध्यायादिष्टदेवतासम्प्रयोगः (வேதபடனத்தினால் இஷ்டதேவதையுடன் சாக்ஷாத்கார சம்பந்தம் சித்திக்கிறது) என்கிற யோக சூத்திரம் II—44படி மந்திரஜபத்தினால் தேவசான்னித்தியமும் தேவதையுடன் சம்பாஷணமும் சித்திக்கிறது.

யோகத்தால் அணிமாதிசித்திகள் கிடைக்கும் என்று ஸ்மிருதிசொல்லுவதை எவ்விதத்தாலும் நிராகரிக்கமுடியாது.

அடியிற்கண்ட சுருதியும் யோகமஹாத்மியத்தை பிரசித்தப்படுத்துகிறது.

पृथ्व्यप्तेजोऽनिलखे समुत्थिते पञ्चात्मके योगगुणे प्रवृत्ते ।
न तस्य रोगो जरा न मृत्युः प्राप्तस्य योगाग्निमयं शरीरम्

அதாவது யோகாப்பியாசத்தால் பிருதிவி முதலிய பஞ்சபூதங்களும் வசப்படுத்தப்படுகின்றன. அணிமாதி சித்திகளும் ஏற்படுகின்றன. இப்படி எவனுடைய சரீரம் யோகாக்கினியால் ஏற்படுகிறதோ அவனுக்கு ரோகமில்லை ஜரையில்லை, மிருத்யுவுமில்லை.

மந்திரம் பிராமணம் இவைகளைப் பார்க்கும் ரிஷிகளின் சாமர்த்தியத்தை நம்முடைய சாமர்த்தியத்தால் அளவிடமுடியாது. ஆகையால் இதிஹாசபுராணங்களுக்கு மூலமிருக்கிறதென்று ஏற்படுகிறது.

இப்படி தேவதைகளின் சரீராதிகளுக்கு மூலம் ஏற்படுமானல் உலகப்பிரசித்தியைத் தள்ளுவது யுக்தமன்று.

ஆகையால் மந்திரம் முதலியவைகளால் தேவதை முதலானவர்களின் சரீராதிகளை ஒப்புக்கொள்ளுதல் யுக்தமே.

சரீராதிகள் ஏற்படுவதால் மோக்ஷ ஆசைமுதலியதும் ஏற்படக்கூடுமாதலால் தேவதை முதலானவர்களுக்கும் பிரம்மவித்தையில் அதிகாரம் இருக்கிறது.

ந (தேவதாதிகளின் அதிகாரத்தை விசாரிப்பதில் நமக்குப் பிரயோசனமில்லை, தேவதைகளுக்கும் பிரயோஜனமில்லை. அவர்களுக்கு சரீரம் இருக்கிறதென்பதையும் பிரம்மவித்தையில் அதிகாரமிருக்கிறதென்பதையும் இவ்வளவு விசாரமின்றியில் அவர்களே தெரிந்து கொள்ளலாம். ஆகையால் அவர்களுக்கு இந்த விசாரத்தால் உபயோகமில்லை. நமக்குத்தான் என்னப் பிரயோசனம் என்று ஒருவன் சங்கிக்க)

கிரமமுக்திபலத்தைக் கொடுக்கும் உபாசனைகளும் தேவதைகளுக்கு சரீராதிகளை ஒப்புக்கொண்டால் தான் பொருந்தும் என்று சொல்லுகிறார். இந்த விசாரம் நமக்குத்தான் பிரயோசனமுள்ளது. எப்படியெனின் தஹராதி உபாசனைகள் நம்மால் அனுஷ்டிக்கப்பட்டவைகளாய் பிரம்மலோகத்தில் தேவசரீரத்தைக் கொடுத்து அதின் மூலமாய் பிரம்ம சாக்ஷாத்காரத்தைக்கொடுத்து பரம முக்தியைகொடுக்கின்றன. ஆகையால் இந்த உபாசனைகள் கிரமமுக்தியைக் கொடுக்கின்றன. தேவதைகளுக்கு அதிகாரமில்லை என்று சொல்லும்பக்ஷத்தில் அவைகளில் பிரவிருத்தியே உண்டாகமாட்டாது.

அப்படி பிரவிருத்தி உண்டாகும் பொருட்டு தேவதைகளின் அதிகாரத்தை நிச்சயிக்கவேண்டியது அவசியம்.

XVI. பூர்வபக்ஷபலன் :— மேற்சொல்லியபடி உபாசனைகளில் அப்பிரவிருத்தி.

சித்தாந்தபலன் :—இவைகளில் பிரவிருத்தி. (76)

XVII. வியாசாதிகரணமாலைப்படி அத்வைதச் சுருக்கம்.

1. சுலோகங்கள்,

नाधिक्रियन्ते विद्यायां देवाः किंवाधिकारिणः ।
विदेहत्वेन सामर्थ्यहानेर्नैषामधिक्रिया ॥
अविरुद्धज्ञातवादि मन्त्रादेर्देहसत्वतः ।
अर्थित्वादेश्च सौलभ्याद्देवाद्या अधिकारिणः॥ (77)

2. விஷயவாக்கியம்.

பிரஹதாரணியகத்தின் 3-வது அத்தியாயத்தில்

तद्यो यो देवानां प्रत्यबुध्यत स एव तदभवत् तथर्षीणाम्

என்று சொல்லியிருக்கிறது.

தேவதைகளுக்குள் எவன் பிரம்மத்தை அறிந்தானோ அவன் தான் பிரம்மமாகிறான் என்று அர்த்தம். (78)

3. பூர்வபக்ஷம் :— தேவரிஷிகள் வித்தையில் அதிகாரிகளன்று. ஏனெனின் ஆசையுள்ளவன், சமர்த்தன், வித்வான், இப்படிபட்டவன்தான் அதிகாரியானதால் சரீரமில்லாத தேவதைகளிடத்தில் இவையில்லாததால் இவர்கள் அதிகாரிகளன்று. மந்திரம், அர்த்தவாதம், இவைகளால் தேவதைகளுக்கு தேகம் சித்திக்கவில்லை. ஏனெனின் இவைகளுக்கு ஸ்வார்த்தத்தில் தாற்பரியமில்லை. (79)

4. சித்தாந்தம் :—

அர்த்தவாதம் மூன்றுவிதம் :—

(1) குணவாதம், அனுவாதம், பூதார்த்தவாதம் என்பதாம்.

(1) आदित्यः यूपः சூரியன் யூபம்.

यजमानः प्रस्तरः யஜமானன் பிரஸ்தரன்.

இவைகள் பிரத்தியக்ஷ வருத்தங்களா யிருந்தாலும், சூரியாதிகள்போல் யாகத்தை நிர்வஹிக்கும் குணம் ஆதித்தியாதி சப்தங்களால் கூறப்படுவதால் இது குணவாதம்.

(2) अग्निर्हिमस्य भेषजम् அக்கினியானவன் பனிக்கு மருந்து.)

முதலிய இடங்களில் இதரபிரமாணங்களால் சித்தமான அர்த்தத்தை அனுவதிக்கிறதினால், அனுவாதரூப அர்த்தவாதம் சித்திக்கிறது. ஸ்வார்த்தத்தில் தாற்பரியமில்லை.

(3) इन्द्रो वृत्राय वज्रमुदयच्छत् முதலிய இடங்களில் விரோதம், அனுவாதம் இவை யில்லாவிடினும் ஸ்வார்த்தத்தில் தாற்பரியமில்லாதபடியால், பதங்கள் மூலமாக அவாந்திர தாற்பரியமடைந்து பிறகு மகாதாற்பரியத்தை அடைவது பூதார்த்தவாதம்.

மந்திரங்களிலும் இந்த நியாயத்தை அனுசரிக்கவேண்டியது. மந்திரார்த்தவாதாதி பலத்தால் தேவாதிகளுக்கு தேகம் ஏற்பட்டிருக்க சிரவணாதிகளில் சாமர்த்தியம் சுலபமாய் ஏற்படும்.

ஐசுவரியம் கூடியிருக்கிறபடியால் மோக்ஷசாதனமான பிரம்மவித்தியா விஷயம் ஏற்படுகிறது. தேவாதிகளுக்கு உபநயன அத்தியயனவிதிகள் இராவிடினும், வேதம் ஸ்வயம் விளங்குவதால், அவர்களுக்கு ஞானமுமிருக்கக்கூடும். ஆகையால் தேவதைகளுக்கு வித்தையில் அதிகாரமில்லை என்று சொல்ல முடியாது, ஆதித்தியாதி தேவதைகளுக்கு ஆதித்தியாதி தியானத்தில் அதிகாரமிராவிடினும், நிர்குணவித்தையில் அதிகாரமிருப்பதில் தோஷமென்ன? ஆகையால் அதிகாரம் இருக்கவே இருக்கிறது. (80)

XVIII. விசிஷ்டாத்வைதப்படி

I-3-7-8-வது அதிகரணங்கள்.

1. இவைகளிலடங்கிய சூத்திரங்கள் 8. அத்வைதத்தின் 8-வது அதிகரணம் விசிஷ்டாத்வைதத்தில் 7-வது 8-வது அதிகரணங்களாக விளங்குகிறது. (81)

2. 1ன் கருத்து பிரம்மோபாசனத்தில் தேவதைகளுக்கு அதிகாரமிருப்பதென்பதாம் (82)

3. விஷயம் :—பிரம்மவித்தை, (83)

4. சந்தேகம் :— தேவதைகளுக்கு அதிகாரம் உண்டா? இல்லையா? (84)

5. பூர்வபக்ஷம் :— தேவாதிகளுக்கு அதிகாரமில்லை. சித்தவஸ்துவான பிரம்மவிஷயத்தில் வேதம் பிரமாணமாயிருந்தாலும் தேவாதிகளின் சரீரவிஷயத்

தில் பிரமாணமன்று. மந்திரார்த்தவாதங்களில் தேவதைகளின் சரீரத்தைப்பற்றிச் சொல்லியிருக்கிறதே எனின், மந்திரார்த்தவாதங்கள் விதிசேஷங்களானதால் விதியால் கூறப்பட்ட அர்த்தத்தில் அவைகளுக்குக் கருத்தேதவிர தேவதைகளின் சரீரத்தில் கருத்தில்லை. ஆகையால்தேவதைகளுக்கு அதிகாரமில்லை (85)

6. சித்தாந்தம் :— ஜகத்சிருஷ்டிப் பிரகரணங்களில் நாமரூப பிரிவினைகளைக் கூறும் சுருதிகளாலேயே தேவாதிகளுக்கு சரீராதிகள் இருக்கின்றனவென்று தெரியவருகிறது. தேவாதிகளுக்கு தேக இந்திரிய முதலியவைகளைச் செய்வதே நாமரூபசிருஷ்டி என்பது மந்திரார்த்தவாதங்களால் தெரியவருகிறது. மந்திரம் அநுஷ்டிக்கத்தக்க பதார்த்தங்களைப் பிரகாசம் பண்ணினுலும் அர்த்தவாதம் ஸ்துதிபரமாயிருந்தாலும் தேவதைகளுக்கு சரீராதிகளிருக்கும் விஷயத்தில் மந்திராதிகள் பிரமாணங்கள். ஆகையால் தேவதைகளுக்குச் சரீராதிகளுண்டு. இவைகளில்லாதபக்ஷத்தில் ஸ்துதிமுதலியவைகள் ஏற்படமாட்டா. ஆகையால் தேவதைகளுக்கு அதிகாரமுண்டு. (86)

7. சூத்திரார்த்தம் 26-க்கு :—

तदुपरि மனிதர்களுக்கு மேலிருக்கிற தேவதைகளுக்கும் அதிகாரமிருக்கிறது.

संभवात् அவர்களுக்கும் பிரம்மோபாசனுதிசாமர்த்தியமிருக்கிறது என்பதாய்,

बादरायणः வியாசர் பாவிக்கிறார். (87)

(27)

कर्मणि யாகாதிகளில்

विरोधः தேவதைகளுக்கு விக்கிரகங்களை ஒப்புக்கொண்டால் ஒருதேவதை ஒரேகாலத்தில் அநேக யாகங்களில் நேரில் இருக்கமுடியாததால் விரோதம் इतिचेत् வருகிறது என்றால் न अनेक சௌபரி सौभरि முதலான ரிஷிகளும் ஒரேகாலத்தில் சாமர்த்தியத்தினல் அநேக சரீரங்களை அடைவதாகக் கண்டிருக்கிறோம். (88)

(28)

शब्द इति चेत् வைதிகசப்தத்தில் விரோதம் ஏற்படும். எப்படியெனின், தேகம் அவயவசகிதம். ஆகையால் உற்பத்தியுள்ளது. தேக உற்பத்திக்கு முன்னும் நாசமடைந்த பின்னும் இந்திராதிகளிராதபடியால் இவர்களைப்பற்றிச் சொல்லும் வேதவசனம் அர்த்தமற்றதாக இருக்கவேண்டும். ஆகையால் வேதம் அப்பிரமாணமாகும்.

इति चेत् न என்று சொன்னல் அது சரியன்று.

अतः प्रभवात् வைதிக சப்தத்தினின்றும் இந்திராதிகளின் சிருஷ்டி உண்டாகிறதினல் விரோதமில்லை. வைதிகஇந்திராதி சப்தங்கள் சரீராதிகளைக் கூறவில்லை; ஆகிருதி (ஜாதி, தன்மை)யைக்கூறுகின்றன. ஒரு இந்திரன் போய்விட்டாலும் அவன் தன்மையை நினைத்துக்கொண்டு பிரம்மா வேறு இந்திரனை சிருஷ்டிக்கிறார். ஆகையால் விரோதமில்லை. இது எப்படி தெரியவருகிறதெனின்,

प्रत्यक्षानुमानाभ्यां சுருதிஸ்மிருதிகளால் தெரியவருகிறது. (89)

(29)

பிரம்மாவானவர் வேதார்த்தத்தை நினைத்துக்கொண்டு அதின்படி சிருஷ்டிக்கிறபடியால்,

मन्त्रकृतो वृणीते

विश्वामित्रस्य सूक्तं भवति

என்பதினல் விசுவாமித்திராதிகள்

மந்திரங்களைச் செய்கிறவர்களாயிருந்தாலும், மந்திராதிமய வேதம் நித்தியம். இவர்கள் நைமித்திக பிரளயத்தில் போய்விட்டாலும் இவர்களைப்பற்றிச் சொல்லும் சப்தங்களையும் அவைகளின் அர்த்தங்களையும் நினைத்துக்கொண்டு இவர்களைப்போன்ற இதர விசுவாமித்திராதிகளை பிரம்மா சிருஷ்டிக்கிறார் இவர்களையும் மந்திரங்களைச் செய்யும்படி செய்கிறார். ஆகையால் வேதம் நித்தியம். (90)

(30)

நைமித்திகபிரளயத்தில் வேதம் நித்தியமாயிருந்தாலும் பிராகிருதபிரளயம் சம்பவிக்கும்போது பிரம்மாவே போய்விடுகிறாரே, வேதமும் நஷ்டமாய்விடுகிறதே, அப்படியிருக்க வேதம் நித்தியம் என்று எப்படி சொல்லலாம் எனின்,

समाननामरूपत्वात् முன்னிருந்த நாமரூபங்களுக்குச் சமானமாகவே நாமரூபங்கள் பிரஜைகளுக்கு இருப்பதினல்,

आवृतावपि பிராகிருத பிரளயத்திலும்

अविरोधः விரோதமில்லை.

ஆதிகர்த்தாவான பரமபுருஷன் மகாப்பிரளயத்துக்குப் பிறகு முன்னிருந்த ஜகத்தையும் ஸ்மிருதிவேதங்களேயும் முன்போலவே செய்து பிரம்மாவுக்கு உபதேசித்தார். இது சுருதிஸ்மிருதிகளால் தெரியவருகிறது.

दर्शनात् :—धाता यथापूर्वमकल्पयत्

முதலியசுருதிகள் பிரமாணங்கள் (அத்வைதம் பார்க்க.) (91)

(31)

இதுமுதல் விசிஷ்டாத்வைதத்தில் 8-வது அதிகரணரம்பம்.

விஷயம் :— III-1-1ல் ஆதித்தியனே மதுவாகச் சொல்லியிருக்கிறது. இப்படிப்பட்ட மது முதலிய உபாசனைகள் விஷயம். (92)

2. சந்தேகம் :—இந்த உபாசனைகளில் ஆதித்தியாதி தேவதைகளுக்கு அதிகாரமுண்டா இல்லையா என்பது சந்தேகம். (93)

3. பூர்வபக்ஷம்:—அதிகாரமில்லே, அவர்களேயே உபாசிக்கும்படி சொல்லியிருப்பதால் அவர்களே உபாசகர்கள் ஆகமாட்டார்கள். விசுவர்திகள் வசுவாதித்தன்மையை முன்னமேயே அடைந்திருப்பதால் இந்த உபாசனையால் அடையும்படி ஒன்றுமில்லே. ஆகையால் தேவதைகளுக்கு அதிகாரமில்லே. (94)

4. சித்தாந்தம் :— பிரம்மமே உபாசியமாகையால் வசுவாதிகளும் தங்களிடத்திலிருக்கிற பிரம்மத்தை அநுசந்தானம் செய்வதில் விரோதமில்லே. வேறு கல்பத்திலும் வசுவாதிகளுக்கு இந்த தன்மையையே அடைவதில் விரோதமில்லே. ஆகையால் வசுவாதிகளுக்கு அதிகாரமுண்டு. (95)

சூத்திரார்த்தம்.

(31) இது பூர்வபக்ஷ சூத்திரம்.

मध्वादिषु மதுமுதலிய உபாசனைகளில் வசுவாதிகளுக்கு,

अनधिकारं அதிகாரமில்லே என்பதாய்.

जैमिनिः ஜைமினி பாவிக்கிறுர்,

असंभवात् உபாசியர்களான வசுவாதிகளே உபாசகர்களாக ஆகமாட்டார்கள். வசுத்வம் அடையப்பட்டிருப்பதால் அடையக்கூடியதாக ஆகமாட்டாது. (96)

I-3-8-ல் 2 (32)

तं देवाः ज्योतिषां ज्योतिरायुर्होपासतेमृतमिति

என்கிற சுருதியில் தேவதைகள் ஜோதிஸ்ஸுக்கு ஜோதிஸ்ஸாயிருக்கிற பரமாத்மாவை உபாசிக்கிறதாகச் சொல்லியிருப்பதால் மற்ற உபாசனைகளில் அதிகாரமில்லே என்பது தெரியவருகிறது. ஏனெனின் தாங்கள் உபாசகர்களாயும் உபாசியங்களாயுமிருக்க மாட்டார்கள். (97)

I-3-8ல் 3 (33)

இதுமேல் சொன்னதை நிராகரிக்கிறது. வசுவாதிகளுக்கு அதிகாரமிருப்பதாக பகவான் பாதராயணர் பாவிக்கிறுர்.

யுக்திகளே 31ல் பார்க்க.

மதுவித்தையின் முடிவில்

एतामेवं ब्रह्मोपनिषदं वेद

என்பதாய் இந்த வித்தையை பிரம்மவித்தையாகச் சொல்லியிருக்கிறது. ஆகையால் மது உபாசனைபிரம்மோபாசனைதான். ஆகையால் அதிகாரமுண்டு. (98)

துவைதப்படி I-3-8-வது அதிகரணம்.

1. இதின் கருத்து :—தேவதைகளுக்கு வேதவித்தையில் அதிகாரமிருக்கிறதென்பதாம். (99)

2. இதிலடங்கிய சூத்திரங்கள்:-8(26-33)(100)

3. இதின் விஷயவாக்கியம் :—

विश्वे देवा उपासते என்னும் சுருதி (101)

4. சங்கதி :—முந்தின அதிகரணத்தில் மனிதர்களுக்குத்தான் உபாசனையில் அதிகாரம் என்று சொல்லப்பட்டது. அதுபோல் தேவதைகளுக்கும் அதிகாரம் உண்டு என்று இப்போது சொல்லுவதால் திருஷ்டாந்த சங்கதி ஏற்படுகிறது. (102)

5. சந்தேகம் :-உபாசனையில் தேவதைகளுக்கு,

(1) அதிகாரம் உண்டா ? அல்லது

(2) இல்லையா ? என்பது சந்தேகம். (103)

6. பூர்வபக்ஷம் :—தேவதைகளுக்கு அதிகாரமில்லே. காரணங்களும் சமாதானங்களும் சூத்திரார்த்தத்தில் விவரிக்கப்படுகின்றன. (104)

7. சித்தாந்தம் :—

26-வது சூத்திரம் :—

तदुपर्यपि=मनुष्याः संतो देवा भवन्ति

என்கிற சுருதியில் மனுஷியர்கள் தேவதைகளாகிறார்கள் என்று சொல்லியிருக்கிறது. வித்தைகர்மங்களால் தேவபதவியை அடைய யோக்கியர்களான மனுஷியர்கள், மனுஷியதசையில் மட்டுமல்ல, தேவபாவத்தை அடைந்தபிறகும் வேதவித்தையில் அதிகாரமிருக்கிறது. ஏனெனின்,

संभवात् அவர்களுக்கு அதிகாரமிருக்கும்படியான விசேஷயுக்தி யிருக்கிறது.

बादरायणः இப்படி பகவான் பாதராயணர் சொல்லுகிறார். (105)

8. I-3-8ல் (2) 27.

முந்தின சூத்திரத்தில் उपरि என்பதால் அனுதியான தேவதைகள் ஆதியுள்ளவர்களாகச் சொல்லப்பட்டார்கள். இதன்பேரில் ஒரு சங்கைவர அதற்குச் சமாதானம் கூறப்படுகிறது.

कर्मणि=मनुष्याः संतो देवा भवंति

என்பதினால் தேவதைகளுக்கு ஆதியுண்டு என்பதாய் அங்கீகாரம் செய்தால் முன் தேவதைகளிராதபடியால் அவர்களை உத்தேசித்துச் செய்யப்படும் கர்மம்

विरोधः इतिचेत् தேவதைகளில்லாததால் அவர்களை உத்தேசித்து செய்யப்பட்டதாக ஆகமாட்டாது; ஆகையால் வியர்த்தம்—இதுவே விரோதம் என்று சொல்லும் பக்ஷத்தில்,

न அப்படியல்ல. ஏனெனின்,

अनेकप्रतिपत्तेः அநேக யோக்கிய மனுஷியர்கள் தேவதாபதத்தை அடைந்திருப்பதாக

दर्शनात्=यत्र पूर्वे साध्याः संति देवाः

என்கிற சுருதியில் காணப்படுகின்றது. (106)

I-3-(8ல் 3) 28.

9. தேவதைகளுக்கு அந்தம் உண்டென்று முன் சொன்னதை ஆக்ஷேபித்து சொல்லுகிறார்.

शब्दे தேவதைகளுக்கு ஆதி அந்தம் இருக்கிறதாகச் சொல்லும்பக்ஷத்தில் நித்தியமான வேதம் அப்பிரமாணமாகி விரோதம் சம்பவிக்கும். ஏனெனின் தேவதைகள் ஒருக்கால் இல்லாமலுமிருக்கலாம்.

इतिचेत् என்று சொன்னால்

न அது சரியன்று.

अतः=सूर्याचन्द्रमसौ धाता यथापूर्वमकल्पयत्

என்கிற சுருதிப்படி

प्रभवात् தேவதைகள் பிரவாஹரூபமாக நித்தியர்கள்

प्रत्यक्षानुमानाभ्यां அப்படியே ஞானிகளுக்குப் பிரத்தியக்ஷமாயிருக்கிறது. மேலும் இப்போது தேவதைகள் இருப்பதுபோல் இனியும் இருப்பார்கள் என்று அனுமானம் ஏற்படுகிறது. (107)

I-3-8-ல் 4 (29)

அர்த்தாபத்தியாலும் பிரவாஹம் நித்தியம் என்று சொல்லுகிறார். अथ एव च नित्यत्वं வேதம் நித்தியமாயிருக்கிறதினாலேயே தேவதைகள் பிரவாஹரூபமாய் நித்தியர்கள். இல்லாவிடின் வேதம் நித்தியமாகமாட்டாது. (108)

I-3-8ல் 5- 30.

10. आवृत्तावपि முந்தின கல்பத்தில் முக்தர்களான தேவதைகள் மறுபடியும் அந்த ஸ்தானங்களிராவிடினும் अविरोधः ஒரேவிதமாய் பிரதிபாதிக்கும் வேதத்துக்கு அப்பிராமாணியம் என்னும் விரோதம் வர மாட்டாது.

समाननामरूपत्वात् இந்த கல்பத்தில் உண்டான தேவதைகளுக்கும் முந்தின கல்பத்திலிருந்த நாமரூபங்களுக்குச் சமானமான நாமரூபங்கள் இருக்கின்றன. பிரதிபாத்தியர்களான தேவதைகள் ஒரேவிதமாயிருப்பதால் பிரதிபாதிக்கும் வேதத்துக்கு அப்பிராமாணியம் வரமாட்டாது என்பது கருத்து.

ஒரேவிதம் என்பது எப்படி தெரியவருகிறதெனின்,

दर्शनात् स्मृतेः च=यथापूर्वमकल्पयत्

என்கிற சுருதிப்படிக்கும்

अनादिनिधना

என்கிற ஸ்மிருதிப்படிக்கும்தெரியவருகிறது 109

I-13-8ல் 6-31.

11. मध्वादिषु=असावादित्यो देवमधु

முதலியதால் சொல்லிய மத்வாதி வித்தையில்.

अनधिकारं தேவதைகளுக்கு அதிகாரமில்லை என்பதாய்

जैमिनिः ஜைமினி ஆசாரியர் பாவிக்கிறார். ஏனெனின்,

असंभवात् அவர்கள் அபேக்ஷித்து அடையும் படியானது.

ஒன்றுமில்லை. (ஏனெனின் அவர்கள் அந்த அந்த பதவிகளை அடைந்துவிட்டார்கள்). (110)

I-3-8ல் 7-32.

12. ज्योतिषि भावात् च சகல வஸ்துக்களின் ஞானம் தேவதைகளுக்கு இருப்பதால் மோக்ஷசாதக ஞானமும் அவர்களுக்கு இருக்கிறது. ஆகையால் உபாசனையில் அவர்களுக்கு அதிகாரமில்லை என்று ஜைமினி நினைக்கிறார். (111)

I-3-8ல் 8-33.

13. முன் இரண்டு சூத்திரங்களில் அதிகாரமில்லை என்று சொன்னதைக் கண்டிக்கிறார். भावंतु பகவானைத்தவிர மற்றவர்களுக்கு சர்வஞுத்தன்மையில்லை, ஆகையால் வித்தையை விசாரிப்பதால் விசேஷஞான முண்டாகிறது. ஆகையால் தேவதைகள் தங்கள் பதவியை அடைந்தாலும் மதுமுதலிய வித்தையை சம்பாதிப்பது அவசியம். இப்படி बादरायणः ஞானியான பாதராயணர் சொல்லுகிறார். ஏனெனின்,

अस्ति हि மோக்ஷபலத்திலும் அதற்குக்காரணமான ஞானத்திலும் விசேஷமிருக்கிறது. (112)

14. பூர்வபக்ஷபலன் :— விசுவேதேவதைகள் உபாசிக்கிறார்கள் என்பது அப்பிரமாணம்.

சித்தாந்தபலன் :—பிரமாணம் (113)

1-3-8-வது அதிகரணம்

முற்றிற்று.

---

## 1-3-9-வது அதிகரணத்தின்

### அநுக்கிரமணிகை.

## 1-3-9வது அதிகரணம்.

I. இதின் பெயர் :-அபசூத்திராதிகரணமென்பதாம். (1)

II. இந்த அதிகரணத்தின் கருத்து:--சூத்திரனுக்கு பிரம்மவித்தையில் அதிகாரமில்லை என்பதாம். (2)

III. சங்கதி.

(1) திருஷ்டாந்த சங்கதி.-முந்தின அதிகரணத்துக்கும் இதற்கும் திருஷ்டாந்த சங்கதி:—எப்படி மனிதனுக்கே அதிகாரம் என்கிற நியமத்தைத்தள்ளி தேவதை முதலானவர்களுக்கும் பிரம்மவித்தையில் அதிகார மிருக்கிறதாக சொல்லப்பட்டதோ, அப்படி (பிரம்ம க்ஷத்திரிய வைசியர் ஆகிய) த்விஜாதிகளுக்குத்தான் அதிகாரமிருக்கிறதென்கிற நியமத்தைத்தள்ளி சூத்திரனுக்கும் பிரம்மவித்தையில் அதிகாரம் இருக்கலாம் என்கிற சங்கையை நிவர்த்திக்கும்பொருட்டு இந்த அதிகரணம் ஆரம்பிக்கப்படுகிறது. ஆகையால் இரண்டு அதிகரணங்களுக்கும் திருஷ்டாந்தசங்கதி ஏற்படுகிறது.) (3)

(2) அத்தியாயசங்கதி:-முந்தின அதிகரணத்தில் பிரம்ம க்ஷத்திரிய வைசியர்கள் ஆகிய மூன்று வர்ணங்களில் சேராத தேவதைகளுக்கும் பிரம்மவித்தையில் அதிகாரம் சித்திக்கும்பொருட்டு மந்திரம் முதலான வைகளுக்கு சித்தார்த்தமான சரீராதிகளில் தாற்பரியம் கூறப்பட்டு அதின்மூலமாக சகலவேதாந்தங்களுக்கும் சித்தார்த்தமான பிரம்மத்தினிடத்தில் சமன்வயம் (தாற்பரியம்) திடப்படுத்தப்பட்டது. இப்படி மந்திரங்களுக்கு ஸ்வார்த்தத்தில் சமன்வயம் கூறப்பட்டது.

அப்படியே இந்த அதிகரணத்திலும் சுருதியில் வந்திருக்கிற சூத்திரசப்தமும் க்ஷத்திரியார்த்தத்தில் சமன்வயப்படுகிறது என்று சொல்லுவதுமூலமாக பிரம்மத்தில் சமன்வயம் திடப்படுத்தப்படுகிறது. ஆகவே இரண்டு அதிகரணங்களையும் சமன்வயாத்தியாயத்தில் சேர்த்தது யுக்தமே.

(3) சுருதிமுதலிய சங்கதிகள் :— சூத்திரசப்தமுள்ள சுருதியின் அர்த்தத்தை இந்த அதிகரணம் விளக்கிவைக்கிறதினால் சுருதிமுதலிய சங்கதிகள் முன்போலவே ஏற்படுகின்றன. (4)

IV. விஷயம் :—வேதாந்தவிசாரம் இந்த அதிகரணத்துக்கு விஷயம். (5)

V. சந்தேகம் :—இந்த விசாரத்துக்கு சூத்திரன் அதிகாரியா, அல்லவா என்பது சந்தேகம். இல்லை என்று சிலரும் உண்டு என்று சிலரும் சொல்லுவதால் சந்தேகம் உண்டாகிறது. (6)

VI. இதிலடங்கிய சூத்திரங்கள் 5(34—38) இவைகளுக்குள்

34-ல் ஜாநசுருதி திருஷ்டாந்தத்தால் சூத்திரனுக்கு பிரம்மவித்தையில் அதிகாரமிருக்கிறதாகச் சொன்னதை நிராகரித்து, அதிகாரமில்லை என்பதும்,

35-ல் ஜாநசுருதியே க்ஷத்திரியன் என்பதும்,

36, 37, 38-ல் ஜாதியில் சூத்திரனுக்கு அதிகாரமில்லை என்பதற்குப் பிரமாணங்களும் கூறப்பட்டிருக்கின்றன.

36-ல் ஜாதியில் சூத்திரனுக்கு உபநயனம் விதிக்கப்படவில்லை என்கிற காரணமும்,

37-ல் அதிகாரமில்லை என்பதற்குசுருதிலிங்கமும்,

38-ல் ஷைக்கு ஸ்மிருதிலிங்கமும். கூறப்படுகின்றன.

VII. பூர்வபக்ஷம் :—இந்த பிரம்மவிசாரத்தில் சூத்திரனுக்கும் அதிகாரமிருக்கிறது. ஏனெனின் அவனுக்கு மோக்ஷ இச்சை இருக்கலாம். சிரவணாதிகளில் சாமர்த்தியமிருக்கலாம். மேலும் तस्माच्छूद्रो यज्ञेऽनवक्लृप्तः (ஆகையால் சூத்திரன் யாகத்தில் அசமர்த்தன் அநர்ஹன்) என்கிற தைத்திரீயசம்ஹிதை VII-1-1-6 சுருதிவசனப்படி சூத்திரனுக்கு யாகத்தில் அதிகாரம் ஏற்படாததுபோல் பிரம்மவித்தையிலும் அதிகாரமில்லை என்று நிஷேதம் சுருதியில் ஏற்படவில்லை. சூத்திரனுக்கு யாகத்தில் அதிகாரமில்லாமலிருப்பதற்கு காரணம் ஆஹவனீயாதி அக்கினியில்லாமை. இதைக்கொண்டு பிரம்மவித்தையிலும் அவனுக்கு அதிகாரமில்லை என்று சொல்லக்கூடாது. ஆஹவனீயாதிகளில்லாதவன் வித்தையைக் கிரகிக்க முடியாதென்பதில்லை.

மேலும் வித்தியார்த்திவிஷயத்தில் சூத்திரசப்தம் பிரயோகிக்கப்பட்டிருப்பதால் சூத்திரனுக்கு அதிகாரமிருக்கிற தென்கிற பக்ஷம் பலப்படுகிறது. எப்படியெனின், வேதாந்தசிரவணம செய்ய இச்சித்து புத்திர கோத்திரத்திற் பிறந்த ஜாநசுருதி என்பவர் (ஆ 600 பசுக்கள், இரதம், ஹாரம் இவைகளை எடுத்துக்கொண்டு)ரைக்வர் என்கிற ரிஷியை அடைந்த சமயத்தில், அவர்

अह हारेत्वा शूद्र तवैव सह गोभिरस्तु

என்று சூத்திரசப்தத்தால் ஜாநசுருதியைப்பார்

த்துச்சொன்னுர் என்று சாந்தோக்கியத்தில் சம்வர்க்க வித்தியாப்பிரகரணத்தில் சொல்லியிருக்கிறது.

சுருதி அர்த்தம்.

ர (அதாவது, ஐயோ கஷ்டம்,) உன்னுடைய ஹாரம், இரதம், பசுக்கள் இவைகளெல்லாம் உனக்கே இருக்கட்டும். கிரஹஸ்தனயிராத எனக்கு இவைகளால் பிரயோஜனமென்ன).

விதுரர் முதலானவர்கள் சூத்திரஜாதியிற் பிறந்திருந்தாலும் விசேஷ ஞானமுள்ளவர்கள் என்று பாரதபாகவதங்களினுல் தெரியவருகிறது, ஆகையால் பிரம்மவித்தையில் சூத்திரனுக்கு அதிகாரம் இருக்கிறது. (8)

VIII. சித்தாந்தம்.

1. இப்படி பூர்வபக்ஷி சொல்ல

# शुगस्य तदनादरश्रवणात्तदाद्रवणात् सूच्यते हि ।३४।

என்கிற சூத்திரத்தில் உத்தரம் சொல்லுகிறுர் (9)

2. பதஉரை:—

अस्य இவனுக்கு

तदनादरश्रवणात् அவர்களுடைய (ஹம்சபக்ஷிகளுடைய) அனுதரவான வார்த்தையைக் கேட்டு,

शुक् துக்கம்

(उसन्ना உண்டாயிற்று)

तदाद्रवणात् அதினுல் ஓடிவந்ததினுல்

सूच्यते हि சூசிப்பிக்கப்படுகிறது (10)

3. பொழிப்புரை:—

தன்னைப்பற்றிய அனுதரவான வார்த்தையை கேட்ட ஜாநசுருதி என்பவனுக்கு துக்கமுண்டாயிற்று. இப்படி துக்கத்துடன் ஓடிவந்ததினுல் ரைக்வியர் அவனை சூத்திரன் என்று கூப்பிட்டார். ஏனெனின் துக்கமானது ரைக்வியரால் சூசிப்பிக்கப்பட்டது. அதாவது அவன் துக்கத்துடன் வருகிறுன் என்பது தனக்குத்தெரியும் என்பதை ரைக்வியர் இந்தப்பதத்தால் காட்டினுர். (11)

4. பாஷியம்:—

சூத்திரனுக்கு வேதாத்தியயன மில்லாதபடியால் அதிகாரமில்லை. வேதத்தை அத்தியயனம் செய்து அதின் அர்த்தத்தை சாமான்னியமாய்த் தெரிந்துகொண்டவன் வேதார்த்தத்தை விசேஷமாய்த் தெரிந்துகொள்ள அதிகாரியாகிறுன். சூத்திரனுக்கு வேதாத்தியயனம் ஏற்படவில்லை. ஏனெனின் வேதாத்தியயனம் உபநயனத்தின் பேரில் ஏற்படுகிறது. உபநயனமோ பிரம்மக்ஷத்திர வைசியர் ஆகிய மூவர்களுக்குத்தான் ஏற்பட்டு இருக்கிறது.

சூத்திரனுக்கு மோக்ஷ இச்சை இருக்கக்கூடும் என்று பூர்வபக்ஷி சொன்னதும் சரியல்ல. ஏனெனின் சாமர்த்தியமிராதவரையில் அது அதிகாரத்தைக் கொடுக்கமாட்டாது. (சாமர்த்தியம்-இருவகைத்து.) ஒன்று சிரவணுதிகளில் இலௌகிகமாய்க் காணப்படுகின்றது. மற்றொன்று சாஸ்திரத்தால் சித்திக்கிறது. சூத்திரனுக்குச் சிரவணுதிகளில் சாமர்த்தியமிருந்தாலும் அது அதிகாரத்தைக் கொடுக்கமாட்டாது. வேதசாஸ்திரத்தால் அறியவேண்டிய விஷயத்தில் சாஸ்திரத்தால் சித்திக்கக்கூடிய சாமர்த்தியம் வேண்டியது. இந்த சாமர்த்தியம், அத்தியயனம் ஏற்படாததினுல் ஏற்படமாட்டாது.

சூத்திரன் யாகத்தில் அதிகாரமடையாதவன் என்று சொன்ன நியாயமே பிரம்மவித்தையிலும் அதிகாரமில்லை என்பதைக் காண்பிக்கிறது. ஏனெனின் நியாயம் ஒன்ருக இருக்கிறது. ஏ (யாகத்தில் அதிகாரம் சித்திக்க அத்தியயனம் வேண்டும். அத்தியயனத்துக்கு உபநயனம் வேண்டும். உபநயனம் சூத்திரனுக்கு ஏற்படவில்லை. ஆகவே சூத்திரனுக்கு உபநயனமிராதபடியால் அத்தியயனத்தில் அதிகாரமில்லை. அத்தியயனமிராதபடியால் வேதார்த்தத்தை தெரிந்துகொள்ள மார்க்கமில்லை. வேதார்த்த ஞானமிராதபடியால் யாகத்தில் அதிகாரம் இல்லை. இந்த நியாயமே பிரம்மவிசாரத்திலும் ஏற்படுகிறது. எப்படியெனின் எப்போது சூத்திரன் உபநயனமன்றியிலிருப்பதால் வேதார்த்தத்தை சாமான்னியமாய்க்கூடத்தெரிந்துகொள்ள அர்ஹனன்ருே. அப்போது விசேஷ விசாரத்தை அவன் எப்படிச் செய்யலாம். ஆகையால் அவனுக்கு வேதபூர்வகமாகப் பிரம்மவிசாரம்-செய்ய அதிகாரம் ஏற்படவில்லை.

சம்வர்க்கவித்தையில் சூத்திரசப்தத்தை பிரயோகித்ததைக்கொண்டு சூத்திரனுக்கு அதிகாரம் இருக்கிறது என்று பூர்வபக்ஷி சொன்னது யுக்தமன்று. ஏனெனின் சாமர்த்தியம் இல்லை என்பதினுலேயே இச்சைமுதலியவைகளும் ஏற்படமாட்டா. சூத்திரசப்தத்தால் சூத்திரனே கூறப்பட்டதாகத் தெரியவருகிறது என்று சொன்னதானது நியாயமிருந்தால்தான் பொருந்தும். இவ்விடத்தில் நியாயமில்லை.

रा (निषादस्य पार्तिं याजयेत् என்பதினால் நிஷாதனுக்கு (வேடனுக்கு) அத்தியயனம் இல்லாவிட்டாலும் நிஷாதசப்தத்தால் அவனுக்கு யாகம் விதிக்கப்பட்டிருப்பதுபோல் சூத்திரசப்தத்தால் சூத்திரனுக்கு பிரம்ம வித்தையில் அதிகாரம் இருக்கட்டுமே எனின், நிஷாதனுக்கு ஒரு குறிப்பான யாகத்தில்மட்டும் அதிகாரம் ஏற்பட்டதுபோல்) இந்த சூத்திரசப்தமும் சம்வர்க்கவித்தையாகிற ஒரு வித்தையில்மட்டும் சூத்திரனை அதிகாரியாக்கட்டும். ஏனெனின் அவ்விடத்தில் சூத்திரசப்தம் பிரயோகிக்கப்பட்டிருக்கிறது. சகல வித்தைகளிலும் அது சூத்திரனை அதிகாரியாக்கமாட்டாது.

சூத்திரபதம் அர்த்தவாத வாக்கியத்திலிருப்பதால் அது எந்த வைதீககர்மத்திலும் சூத்திரனை அதிகாரியாக்கமாட்டாது. ஏனெனின்,

(1) रा வேடனுக்கு அதிகாரம் விதிவாக்கியத்தால் ஏற்பட்டதுபோல் சூத்திரனுக்கு விதிவாக்கியத்தால் ஏற்படவில்லை. விதிவாக்கியபலத்தை பெற்றிராத அர்த்தவாதவாக்கியபதம் அதிகாரத்தை உண்டுபண்ணமாட்டாது.

(2) ஈ வித்தியாப்பியாசம் செய்யவேண்டுமென்று ரைக்வரிடம் வந்த ஜானசுருதியைப்பார்த்து அவர் சொன்ன வசனத்தில் சூத்திரபதமிருக்கிறதினால் வந்தவன் சூத்திரன் என்று அறிவதுபோல் அந்தப் பிரகரணத்திலேயே ஜானசுருதி என்பவன் க்ஷத்திரியன் என்று சொல்லுவதற்கும் அநேக சின்னங்களிருக்கின்றன.

(a) இரதத்தை ஓட்டுகிறவனுக்கு க்ஷத்தா என்று பெயர். இவன் பிராமணஸ்திரீயினிடத்தில் வைசியன் மூலமாக பிறந்தவன். இவனுடைய தொழில் அரசனுடைய அந்த:புரத்தைக் காப்பாற்றுதல். இவனுக்கு இராஜசேவையே ஏற்பட்டிருக்கிறது. ஜானசுருதி க்ஷத்தாவைப் பிரேரணைசெய்ததாகச் சொல்லியிருப்பதால் ஜானசுருதி அரசன் அதாவது க்ஷத்திரியனாக இருக்க வேண்டும்.

(b) மஹாவிருஷதேசத்தில் ரைக்வபர்ணமென்கிற கிராமத்தை ரைக்வருக்கு ஜானசுருதி தானம்கொடுத்ததாக சொல்லியிருக்கிறது. கிராமத்தைக் கொடுக்கிறவன் கிராமாதிபதியாக இருக்கவேண்டும். சூத்திரனுக்குக் கிராமாதிபத்தியும் ஏற்படவில்லை என்று சாஸ்திரம் கூறுகிறது. ஆகையால் ஜானசுருதி க்ஷத்திரியனாகத்தான் இருக்கவேண்டும்.

(c) ரைக்வர் ஜானசுருதியால் பரிபாலிக்கப்பட்ட கிராமத்திலிருந்ததாகத் தெரியவருகிறது. சூத்திரனால் பரிபாலிக்கப்பட்ட கிராமத்தில் வசிக்கக்கூடாதென்று சொல்லியிருப்பதால், அப்படி நிஷேதிக்கப்பட்ட கிராமத்தில் ரைக்வர் வசிக்கமாட்டார். ஆகையால் அவருடைய வாசத்தால் கிராமபாலகன் க்ஷத்திரியன் என்றே ஊஹிக்கவேண்டும்.

(d) ஜானசுருதி தன்பெண்ணை ரைக்வருக்குக்கொடுத்ததாகச் சொல்லியிருக்கிறது. ஜானசுருதி சூத்திரனாயிருந்தால் ரைக்வர் பெண்ணைக் கிரகிப்பாரா? ஆகையாலும் அவர் க்ஷத்திரியனாக இருக்கவேண்டும்.

(e) ஒரு சூத்திரபதத்தைக்கொண்டு சாஸ்திர விதிப்படி தெரியவரும் லிங்கங்கள் கற்பிதங்கள் என்று சொல்லுவது அனுசிதம்.

இப்படி அநேக லிங்கங்களால் வந்தவன் க்ஷத்திரியன் என்று அறியும்படி இருக்க சூத்திரன் என்கிற ஒருபதத்தினால் சூத்திரனையே இந்த சுருதி கூறுகிறது என்று அறியமுடியாது.

(அப்படியானால் வித்தியாப்பியாசத்துக்காக வந்த ஜானசுருதியாகிற அதிகாரி விஷயத்தில் சூத்திரசப்தத்தை எப்படி உபயோகிக்கலாமெனின்) இந்த சப்தம் அதிகாரியைக் கூறும் என்று சொல்லமுடியும். எப்படியெனின்,

अनादरश्रवणात् (ராஜா ஜானசுருதி என்னும் அரசன் கோடைகாலத்தில் இராத்திரியில் மாடியில் தூங்கிக்கொண்டிருக்கையில் அவனுடைய அன்னதானாதிகுணகணங்களால் சந்தோஷமடைந்த ரிஷிகள் இவனுடைய ஹிதத்தின் பொருட்டு ஹம்சங்களாகி அவனிருக்குமிடத்துக்குமேல் வந்தார்கள். அவர்களுக்குள் பின்னால்வந்த ஹம்சம் முன்சென்ற ஹம்சத்தைப் பார்த்து, பத்திராக்ஷ! ஜானசுருதியின் தேஜஸை ஏன் கவனிக்கவில்லை. அது ஸ்வர்க்கத்தை வியாபித்திருக்கிறது. அது உன்னைத்தஹிக்கும், கிட்டப்போகவேண்டாம் என்று சொல்லிற்று. அதற்குமுன் சென்ற ஹம்சம்)

कंवर एनमेतत् सन्तं स युग्वानमिव रैक्वमात्थ

रा (அதாவது அடே, வித்தையற்ற இந்தப் புருஷனை வண்டியுடன் கூடியிருக்கிற (நொண்டியான) ரைக்வர்போல் எவன் சொல்லுவான். பிரம்மநிஷ்டரான ரைக்வருடைய தேஜஸ் ஒருவனாலும் அதிக்கிரமிக்கமுடியாது, ஆத்மஞானமற்றவனுடைய தேஜஸ் அப்படியல்ல.)

என்று சொல்லிற்று. रा (நம்முடைய வசனத்தால் துக்கமடைந்த அரசன் வண்டிபடையாளத்தைக்கொண்டு ரைக்வனைக்கண்டுபிடித்து வித்வானுப் விடுவான் என்பது ஹம்சங்களின் அபிப்பிராயம்).

இந்த ஹம்சவசனத்தால் தன்னுடைய அகௌரவமான விஷயத்தைக்கேட்ட अस्य :—புத்திர கோத்திரத்திற் பிறந்த ஜாநசுருதி என்பவருக்கு,

शुक् துக்கம் உண்டாயிற்று,

सूच्यते हि அந்த துக்கமானது சூத்திரசப்தத்தால் ரைக்வரால் சூசிப்பிக்கப்படுகிறது. தான் அறிந்திருக்கிறார் என்பதைத் தெரியப்படுத்தும் பொருட்டு சூத்திரசப்தத்தை பிரயோகித்தார் என்று தெரியவருகிறது, ஏனெனின் ஜாதியில் சூத்திரனுயிருக்கிறவனுக்கு பிரம்மவித்தையில் அதிகாரமில்லை (ஆகையால் அதை அவர் உத்தேசித்திருக்கமாட்டார்).

रा (हि ஹிசப்தமானது சுருதி சப்தத்திற்கு யோகார்த்தம் கூடிவரும்போது கூடிவராதஸ்ரூடி அர்த்தத்தை தள்ளிவிடவேண்டிய தென்கிற நியாயத்தைக் காட்டுகிறது,)

तदाद्रवणात् சூத்திரசப்தத்தால் துக்கம் உண்டாயிற்று என்று எப்படி தெரியவருகிறது எனின்

तदाद्रवणात् அதாவது तदा + आद्रवणात् என்று சொல்லுகிறார். இந்த பதத்துக்கு.

(1) शुचं + अभिदुद्राव அதாவது சோகத்தை அரசன் அடைந்தான் என்றாவது

(2) शुचा राजा अभिदुद्रुवे சோகத்தால் அரசன் அடையப்பட்டான் அதாவது சோகம் அரசனை அடைந்தது என்றாவது

(3) शुचा रैकं अभिदुद्राव அதாவது துக்கத்தினால் ரைக்வரை அரசன் அடைந்தான் என்றாவது

அர்த்தம் செய்யலாம். இப்படி சூத்திரசப்தத்துக்கு அவயவார்த்தம் சித்திக்கிறதினாலும், இடுகுறிப் பெயர் சித்திக்காததாலும் சூத்திரசப்தத்தால் சோகம் உண்டாயிற்று என்று சூசனை ஏற்படுகிறது.

இந்தக் கதையில் இந்த அர்த்தம் வெளியாகிறது

(ஆகையால் சூத்திரனுக்கு பிரம்மவித்தையில் அதிகாரமில்லை என்று ஏற்படுகிறது) (24)

IX. I-3-9ல் 2 (35)வது சூத்திரம்.

# क्षत्रियत्वगतेश्चोत्तरत्र चैत्ररथेन लिंगात्

(25)

(2) முந்தின சூத்திரத்துக்கும் இதற்கும் சம்பந்தம் :—முந்தின சூத்திரத்தில் ஜாநசுருதி என்பவன் சூத்திரசப்தத்தால் கூறப்பட்ட க்ஷத்திரியன் என்று தெரியவருகிறது. சூத்திரசப்தத்துக்கு முக்கியார்த்தத்தைவிட்டுவிட்டு யோகார்த்தத்தை (காரணப்பெயரைக்கிரகிப்பானேன் என்று சங்கைவரக்கூடும். அதை நீக்கும் பொருட்டு யோகார்த்தத்தில் லிங்கம் அதாவது சூசனை இருக்கிறது என்று இந்த சூத்திரத்தில் சொல்லுகிறார். (26)

3. பதவுரை :—

च மேலும்

उत्तरत्र மேல் அதாவது சம்வர்க்கவித்தியா வாக்கியசேஷத்தில்

चैत्ररथेन சைத்திர ரதனுடன் சேர்த்திருக்கிற

लिङ्गेन லிங்கத்தால்

क्षत्रियत्वगतेः க்ஷத்திரியன் என்பது அறியப்படுவதினால் (ஜாநசுருதி சூத்திரனல்ல) (27)

4. பொழிப்புரை :—சம்வர்க்க வித்தியாவாக்கியசேஷத்தில் பிரசித்தக்ஷத்திரியனுகிய சைத்திர ரதனுடன் ஜாநசுருதியையும் சேர்த்து சொல்லியிருப்பதினால் இவன் க்ஷத்திரியன் என்று தெரியவருகிறது. ஆகையால் இவன் ஜாதியில் சூத்திரனல்ல. (28)

பாஷ்யம் :—

(1) क्षत्रियत्वगतेः च அடியிற்கண்ட காரணத்தாலும் ஜாநசுருதியானவன் சூத்திர ஜாதியிற் சேர்ந்தவனல்ல. அக்காரணம் யாதெனின் இந்தப் பிரகரணத்தைப் பரியாலோசனை செய்து பார்க்குமளவில் ஜாநசுருதியானவன் க்ஷத்திரியன் என்று தெரியவருகிறது. (29)

ஏனெனின்.

उत्तरत्र சம்வர்க்கவாக்கிய சேஷத்தால் க்ஷத்திரியனும் அபிப்பிரதாரனுடைய பிள்ளையாகவும் இருக்கிற சைத்திரரதனுடன் இவனையும் சேர்த்துச்சொல்லியிருக்கிறது. இதனுல் இவன் சூத்திரனல்ல என்று தெரியவருகிறது.

சம்வர்க்கவித்தியா வாக்கிய சேஷத்தில்,

अथह शौनकं च कापेयमभिप्रतारिणं चकाक्षसेनिं सूदेन परिविष्यमाणौ ब्रह्मचारी बिभिक्षे (छा. IV-3-5)

ரா அதாவது கபிகோத்திரத்திற் பிறந்தவனும் சுனகனுடைய புத்திரனுமிருக்கிற புரோஹிதனும், கக்ஷசேனனுடைய பிள்ளையாகவும், அபிப்பிரதாரி என்கிற பெயரை உடையவனுமான அரசனும் சமயற்காரனால் சேவிக்கப்பட்டு சாப்பிட உட்கார்ந்திருந்த சமயத்தில் ஒரு பிரம்மசாரி அவர்களைப் பிக்ஷைகேட்கவந்தான்.

என்கிற வாக்கியத்தில் க்ஷத்திரியனான சைத்திரரதி அபிப்பிரதாரி என்பவன் கூறப்படுகிறான்.

ரா (அபிப்பிரதாரி என்பவன் சைத்திரரதீ என்று சுருதியில் தெரியவில்லையே எனின்)

அவன் சைத்திரரதீ அதாவது சித்திராத வம்சத்தில் பிறந்தவன் என்பது காபேய சம்பந்தத்தால் தெரியவருகிறது.

एतेन वै चैत्ररथं कापेया अयाजयन्ति

என்கிற தாண்டிய பிராமணம் XX-12-5 சுருதியில் காபேயர்கள் சைத்திரரதனை யாகம் செய்துவைத்தார்கள் என்று சொல்லிருப்பதால் சைத்திரரதனுக்கு காபேய யோகம் தெரியவருகிறது. ஒரு வம்சத்தில் பிறந்தவர்கள் ஒரே வம்சத்தில் பிறந்தவர்களைப் புரோஹிதர்களாக வைத்துக்கொள்ளுகிறார்கள் என்பது பிரசித்தம் (இவ்விதமாக அபிப்பிரதாரிக்கு காபேய சம்பந்தமும் சைத்திரரதிக்கும் காபேய சம்பந்தமும் ஏற்படுவதால் அபிப்பிரதாரி சைத்திரரதன் என்று தெரியவருகிறது).

ரா (அபிப்பிரதாரி சைத்திரரதியாக இருக்கட்டும் அவன் க்ஷத்திரியன் என்று எப்படி தெரியவருகிறது எனின்)

तस्माच्चैत्ररथिर्नामैकः क्षत्रपतिरजायत

(சித்திரரதனிடமிருந்து சைத்திரரதி என்கிற அரசன் பிறந்தான்) என்கிற சுருதி வசனத்தால் அவன் அதாவது சைத்திரரதன் அரசனாகத் தெரியவருவதால் அவன் க்ஷத்திரியன் என்று அறியவேண்டியது. ஆகையால் அபிப்பிரதாரியும் க்ஷத்திரியனே. ஒரே வித்தையில் க்ஷத்திரியனான அபிப்பிரதாரினியையும் ஜானசுருதியையும் சேர்த்து சொல்லியிருப்பதானது ஜானசுருதி என்பவனும் க்ஷத்திரியன் என்பதைச்சூசிப்பிக்கிறது.

அநேகமாய் சமானமானவர்கள் தான் சேர்த்துச் சொல்லப்படுவார்கள்.

க்ஷத்தாவான வண்டிக்காரனை ரைக்வனைத் தேடும்படி அனுப்பினதும், அன்னம் பசுமுதலியவைகளைத் தானம் செய்ததும் ஜானசுருதி க்ஷத்திரியன் என்பதில் லிங்கங்களாயிருக்கின்றன.

ஆகையால் சாதியில் சூத்திரனாயிருக்கிறவனுக்கு பிரம்ம வித்தையில் அதிகாரமில்லை. (30)

X. I-3-9 ல் 3-36-வதுசூத்திரம்.

1. संस्कारपरामर्शात्तदभावाभिलापाच्च । ३६ । (31)

2. முந்தின சூத்திரத்துக்கும் இதற்கும் சம்பந்தம்:—முந்தின இரண்டு சூத்திரங்களில் ஜானசுருதி க்ஷத்திரியன் என்கிற நிரூபணத்தினால் சம்வர்க்கவித்தையில் காணப்படும் சூத்திரசப்தத்திற்கு யோகார்த்தமே எடுத்துக்கொள்ளவேண்டுமென்றும் ஜாதியில் சூத்திரனுக்கு வித்தையில் அதிகாரமில்லை என்றும் சொல்லப்பட்டது. இந்த சூத்திரம் முதல் 3 சூத்திரங்களால் ஜாதியில் சூத்திரனுக்கு வித்தியில் அதிகாரமில்லை என்பதற்குப் பிரமாணங்களைக் கூறுகிறார். 32

3. பதஉரை:—

संस्कारपरामर्शात् சம்ஸ்காரம் சொல்லியிருப்பதாலும்

तदभावाभिलापात् च அது இல்லை என்று சொல்லியிருப்பதாலும் சூத்திரன் வித்தைக்கு அதிகாரியன்று. 33

4. பொழிப்புரை:—

பிரம்மவித்தைக்கு உபநயனாதி சம்ஸ்காரங்கள் சொல்லியிருப்பதினாலும் சூத்திரனுக்கு அவைகள் சொல்லப்படாததினாலும் சூத்திரனுக்கு வித்தையில் அதிகாரமில்லை. (34)

5. பாஷ்யம்:—

(1) संस्कारपरामर्शात्:- சொல்லப்போகிற காரணங்களாலும் சூத்திரனுக்கு அதிகாரமில்லை. வித்தைகளைச் சொன்னவிடங்களில் (ரா அவைகளை கிரகிக்க அங்கங்களாக) உபநயனம், (உபசதனம், குருகுலவாசம், குருசுசுரூஷை) முதலிய சம்ஸ்காரங்கள் சொல்லப்பட்டிருக்கின்றன.

திருஷ்டாந்த சுருதிகள்:—

(1) तं होपनिन्ये என்கிற சதபத பிராம்மணம் XI-5-3-13-வது மந்திரத்தில் வித்தியார்த்தியான சிஷ்யனை ஆசாரியர் உபநயனம் செய்துவைத்தார் என்று சொல்லியிருக்கிறது.

(2) अधीहि भगव इति होपससाद என்கிற சாந்தோக்கியம் VII-1-1-ல் வித்தியார்த்தியான நாரதர்கூட "உபதேசியும்" என்பதாய் சனத்குமாரரை அடைந்தார் என்று சொல்லியிருக்கிறது.

(3) ब्रह्मपरा ब्रह्मनिष्ठाः परं ब्रह्मान्वेषमाणा एष ह वै तत्सर्वं वक्ष्यतीति ते ह समित्पाणयो भगवन्तं पिप्पलादमुपसन्नाः

என்கிற பிரச்னோபநிஷத்தில் I-1-ல் வேதபாரங்கதர்களாயும், சகுணபிரம்ம நிஷ்டர்களாயுமிருக்கிற பாரதுவாஜாதி ஆறுரிஷிகள் நிர்குணபிரம்மத்தை அறிய இச்சிக்கிறவர்களாய் இந்த பிப்பலாதர் நாம் இச்சிக்கிறதை யெல்லாம் சொல்லுவார் என்று தங்களுக்குள் நிச்சயித்து, ரிக்தஹஸ்தர்களாய் குருவினிடம் போகக்கூடாதபடியால் சமித்துக்களைக் கையில் எடுத்துக்கொண்டு அவரிடம் சென்றார்கள் என்று சொல்லியிருக்கிறது.

(இந்த பிரமாணங்களால் பிரம்மவித்தையைக் கிரிகிப்பதற்கு உபநயனம் முதலிய சம்ஸ்காரங்கள் வேண்டியவை என்று தெரியவருகிறது.

வைசுவாநர வித்தையில் உபநயனமாகாதவர்களுக்குக்கூட அதிகாரமிருக்கிறதாகத் தெரியவருவதால் உபநயனம் அவசியமில்லை என்னும்பக்ஷத்தில்) तान्हानुपनीयैव என்கிற சாந்தோக்கிய V-II-7-வது சுருதியில் ஔபமன்யவ முதலிய பிராமணர்களுக்கு உபநயனம் செய்துவைக்காமலே அசுவபதி என்னும் அரசன் வித்தையை உபதேசித்தான் என்பதினால் உபநயனம் அடையாதவர்களுக்கும் பிரம்மவித்தையில் அதிகாரம் இருக்கிறதாக தெரியவருகிறது. முந்தின வாக்கியத்தில் முதல்நாள் இவர்கள் சமித்துக்களை எடுத்துக்கொண்டுவந்தார்கள் என்று சொல்லியிருப்பதால் அவர்கள் உபநயனத்தின் பொருட்டு வந்தார்கள் என்று தெரியவருகிறது. ஆனால் தாழ்ந்த ஜாதியில் பிறந்தவன்மேல் ஜாதியில் பிறந்தவனுக்கு உபநயனம் செய்யாமலே உபதேசிக்கவேண்டியது என்று சொல்லியிருப்பதால் இவர்கள் விஷயத்தில் உபநயனத்தை அபேக்ஷிக்காமலே அரசன் உபதேசித்தபடியால் உபநயனம் சாதாரணமாய் வேண்டியது என்பது தெரியவருகிறது. (35)

ब्र-त-प्र 2. அப்படியானால் எல்லாவற்றையும் கற்பிப்போமே என்னின்,

तदभावाभिलापात् च= शूद्रश्चतुर्थो वर्ण एकजातिः

என்கிற மனுஸ்மிருதி X-4-வது வசனத்தில் சூத்திரன் நான்காவது வர்ணத்தில் சேர்ந்தவன், ஒரு பிறப்புள்ளவன் என்று சொல்லியிருப்பதால் அவனுக்கு உபநயனமில்லை என்று தெரியவருகிறது.

न शूद्रे पातकं किञ्चिन्न च संस्कारमर्हति

என்கிற மனுஸ்மிருதி X-12-6-வது வசனத்தால் சூத்திரனுக்கு பாபமில்லை என்றும் சம்ஸ்காரத்துக்கு அர்ஹனல்லவென்றும் சொல்லியிருக்கிறது. இப்படியே पद्युहवा एतत् முதலிய வசனங்களும் சூத்திரனுக்கு ஸம்ஸ்காரமில்லை என்று சொல்லியிருக்கிறது. (36)

XI. I-3-9-ல் 4 (37) வது சூத்திரம்.

## 1. तदभावनिर्धारणे च प्रवृत्तेः । ३७ ।

2. முந்தின சூத்திரத்துக்கும் இதற்கும் சம்பந்தம்:—சூத்திரனுக்கு வித்தையில் அதிகாரமில்லை என்று முன் சொன்ன விஷயத்தில் வேறு பிரமாணத்தை இதில் கூறுகிறார்.




3 பதவுரை:—

च மேலும்

तदभावनिर्धारणे அவன் (சூத்திரன்) அல்லவென்று நிச்சயமானவளவில்

प्रवृत्तेः (உபதேசிக்க) பிரவிர்த்தித்திருப்பதால். 39

4. பொழிப்புரை:—

ஜாபாலன் சூத்திரனல்லவென்று நிச்சயமாகத் தெரிந்ததின் பேரில் கௌதமர் அவனுக்கு உபதேசம் செய்ய ஏற்பட்டபடியால், சூத்திரன் உபதேசத்துக்கு அர்ஹன் அல்லவென்று தெரியவருகிறது. (40)

5. பாஷ்யம்:—

அடியிற்கண்ட காரணத்தாலும் சூத்திரனுக்கு அதிகாரமில்லை என்று தெரியவருகிறது.

சத்தியகாமன் என்று ஒருவனிருந்தான். அவனுடைய தகப்பனார் இறந்துபோய்விட்டார்.

(1) பிரம்மசரிய விரதத்தை அனுஷ்டிக்கும் காலம் வந்தசமயத்தில் அவன் ஜபாலா என்னும் தன்னுடைய தாயாரிடம்போய்

(2) ஒரு குருவினிடம்போய் பிரம்மசரிய விருத்தத்தை ஆசரிக்க இச்சிக்கிறேன். "நான் எந்தகோத்திரத்திற் சேர்ந்தவன்" என்று கேட்டான். அதற்கு அவள் நான் பர்த்தாவினுடைய சேவையிலேயே முழுகியிருந்தபடியால் உன் பிதாவின் கோத்திரத்தை நான் விசாரிக்கவில்லை. என்பெயரோ ஜபாலா என்பது உன்பெயர் சத்தியகாமன் இவ்வளவுதான் எனக்குத் தெரியும் என்று சொன்னாள்.

பிறகு சத்தியகாமன் கௌதமரிடம் சென்று தங்களிடம் பிரம்மசரிய விருதத்தை ஆசரிக்க இச்சிக்கிறேன், அனுக்கிரகம் செய்யவேண்டுமென்று கேட்டான். உனக்கு என்ன கோத்திரம் என்று அவர் கேட்க நான் கோத்திரத்தை அறியமாட்டேன், என் தாயாரும் அறியமாட்டாள். ஆனால் உபநயனத்தின் பொருட்டு ஆசாரியரிடம்போய், நான் சத்தியகாமன் ஜாபாலன் என்பதாய் சொல்லு என்று சொன்னதாக சொன்னாள்.

இந்த சத்தியவசனத்தால் சத்தியகாமன் சூத்திரனல்லவென்று நிச்சயமாயிற்று. அதின்பேரில் அந்த கௌதமர் ஜாபாலனுக்கு உபநயனம் செய்துவைக்கவும் உபதேசிக்கவும் பிரவிர்த்தித்தார்.

नैतदब्राह्मणो विवक्तुमर्हति समिधं सोम्याहरोपत्वानेष्ये न सत्यादगाः

ரா. அதாவது பிராமணனாயிராதவன் இப்படி சத்தியத்தைச் சொல்லமாட்டான். ஹே! ஸௌம்ய, நீ சத்தியத்தை விட்டவனல்ல. ஆகையால் உனக்கு உபநயனம் செய்துவைக்கிறேன். அதின்பொருட்டு சமித்தைக்கொண்டுவா என்று சாந்தோக்கிய IV-4-5-ல் சொல்லியதானது சூத்திரனுக்கு உபதேசத்தில் அதிகாரமில்லை என்று காட்டுகிற லிங்கமாயிருக்கிறது.

கௌதமருடைய பிரவிர்த்தியைக்கொண்டு சூத்திரனுக்கு அதிகாரமில்லையென்று தெரியவருகிறது. அவருடைய பிரவிர்த்தியே லிங்கம். (41)

XII. I-3-9-ல் 5 (38) வது சூத்திரம்.

1. श्रवणाध्ययनार्थप्रतिषेधात् स्मृतेश्च । ३८ । (42)

2. முந்தின சூத்திரத்துக்கும் இதற்கும் சம்பந்தம்:—சூத்திரனுக்கு அதிகாரமில்லை என்கிற விஷயத்தில் சுருதி லிங்கம் கூறப்பட்டது. இப்போது ஸ்மிருதி லிங்கமும் இருக்கிறதாகக் கூறுகிறார். (43)

3. பதவுரை:—

स्मृतेः च ஸ்மிருதியிலிருந்தும்

श्रवणाध्ययनार्थप्रतिषेधात् சிரவணம், அத்தியயனம், அர்த்தஞானம் அர்த்தானுஷ்டானம் இவைகள் நிஷேதிக்கப்பட்டிருப்பதாலும். (44)

4. பொழிப்புரை:—

சூத்திரனுக்கு வேத சிரவணம், அத்தியயனம், அர்த்தஞானம், அர்த்தானுஷ்டானம் இவைகள் இல்லை என்று ஸ்மிருதியால் சொல்லியிருப்பதாலும் அவனுக்கு பிரம்மவித்தையில் அதிகாரமில்லை. (45)

5. பாஷியம்:—

(1) श्रवणाध्ययनप्रतिषेधात्:—

அடியிற்கண்ட காரணத்தாலும்சூத்திரனுக்குபிரம்மவித்தையில் அதிகாரமில்லை.

சூத்திரனுக்கு வேதசிரவணமில்லை என்பதும், வேதாத்தியயனமில்லை என்பதும், வேதத்தின் அர்த்தத்தைத் தெரிந்துகொள்ளல், அனுஷ்டித்தல் இவைகளுமில்லை என்பதும் ஸ்மிருதியால் தெரியவருகிறது

(a) வேதசிரவணமில்லை என்பது

(1) अथास्य वेदमुपश्रृण्वतस्त्रपुजतुभ्यां श्रोत्रप्रतिपूरणम्

என்கிற சுருதியில் துவிஜர்களால் சொல்லப்பட்ட வேதத்தை எந்த சூத்திரன் அஜாக்கிரதையாக கேட்கிறானோ அவனுடைய காதுகளில் ஈயத்தையும் அரக்கையும் காய்ச்சிவிட வேண்டியது என்றும்

(2) पद्युहवा एतत् श्मशानं यच्छूद्रस्तस्मात् शूद्रसमापे नाध्येतव्यः

என்கிற சுருதியில் சூத்திரன் நடக்கிற ஸ்மசானமானதால் சூத்திரனுடைய சமீபத்தில் வேதாத்தியயனம் செய்யக்கூடாது என்றும்

சொல்லியதால் தெரியவருகிறது. (46)

(b) சிரவணநிஷேதத்தினால் அத்தியயன நிஷேதமும் சொன்னதாகவே ஆயிற்று. ஏனெனின் எவனுடைய சமீபத்திற்கூட அத்தியயனம் செய்யப்படவில்லையோ, அவன் எப்படி சுருதியை அத்தியயனம் செய்வான்.

वेदोच्चारणे जिह्वाच्छेदो धारणे शरीरभेदः

என்கிற ஸ்மிருதியில் வேதத்தை உச்சரிக்கும் சூத்திரனுடைய நாக்கை அறுத்துவிட வேண்டியதெனும், அதைத் தரித்தால் சரீரத்தை வெட்டிவிடவேண்டியது என்றும் சொல்லியிருப்பதால் சூத்திரனுக்கு அத்தியயனம் ஏற்படவில்லை என்று தெரியவருகிறது.

ஆகையாலேயே சூத்திரன் வேதார்த்தத்தை தெரிந்துகொள்ளக்கூடாது என்றும் அதின்படி அனுஷ்டிக்கக்கூடாதென்றும் சொன்னதாக ஆகிறது. (47)

(2) स्मृतेः च:—ஸ்மிருதிப்பிரமாணம்:—

(a) न शूद्राय मतिं दद्यात् என்கிற ஸ்மிருதிவசனம் சூத்திரனுக்கு வேதார்த்த ஞானத்தைக் கொடுக்கலாகாது என்று சொல்லுகிறது.

(b) द्विजातीनामध्ययनमिज्यादानं

என்கிற ஸ்மிருதிவசனம் துவிஜாதிகளுக்கு அத்தியயனம், யாகம், நித்தியதானம் இருக்கிறதென்று சொல்லுகிறது. (48)

முன்செய்த கர்மங்களின் சம்ஸ்காரபலத்தால் விதுரர், தர்மவியாசர் என்கிற வேடன் இவர்கள் முதலானவர்களுக்கு ஞானமுண்டாகிறது. அதின் பலத்தை தடுக்கமுடியாது. ஏனெனின் ஞானம் முக்தியாகிற பலத்தைக் கொடுத்திருப்பதும்

श्रावयेच्चतुरो वर्णान् அதாவது நான்கு வர்ணத்தார்களை உபதேசிக்கவேண்டியது என்கிற மஹாபாரத வசனப்படி இதிஹாஸ புராணங்களை அறிவதில் நான்கு வர்ணத்தார்களுக்கும் அதிகாரம் இருக்கிறதென்று ஏற்படுகிறது. சூத்திரனுக்கு வேதபூர்வமாக அதிகாரமில்லை என்பது சித்தம். (49)

XIII. பூர்வபக்ஷபலன்:—சூத்திரனுக்கும் துவிஜனுக்குப்போல் வேதாந்த சிரவணத்தில் பிரவிர்த்தியுண்டு.

சித்தாந்தபலன்:—இல்லை.

XIII. வியாசாதிகரணமாலைப்படி,

I-3-9ன் அத்வைதச் சுருக்கம்.

1. சுலோகங்கள்.

शूद्रोऽधिक्रियते वेदविद्यायामथवा न हि ।
अत्रैवर्णिक देवाद्या इव शूद्रोऽधिकारवान् ॥
देवाः स्वयंभातवेदाः शूद्रोऽध्ययनवर्जनात् ।
नाधिकारी श्रुतौस्मार्तत्वधिकारोनवार्यते ॥

2. விஷயமும் பூர்வபக்ஷமும் சாந்தோக்கியத்தில் 4-வது அத்தியாயத்தில் சம்வர்க்கவித்தையில்.

आजहारेमाः शूद्र अनेनैवमुखेनाऽऽलापयिष्यथाः

என்று சொல்லியிருக்கிறது. ஜானசுருதி என்கிற ஒரு சிஷ்யன், 1000 பசுக்கள், பொன், முத்துமாலை, தேர்முதலியவைகளை தானமாக எடுத்துக்கொண்டு ரைக்வர் என்னும் குருவை அடைந்தான். அப்போது ரைக்வர் அவனைப் பார்த்து, ஜானசுருதியே, சூத்திரனே பசுமுதலியவைகளைக் கொண்டுவந்து என் மனதை சந்தோஷப்படுத்தி உபதேசம் செய்யும்படி செய்கிறாய் என்று சொன்னார். இதினால் சூத்திரனும் வேதவித்தையில் அதிகாரமுள்ளவன் என்று தெரியவருகிறது. மூன்றுவர்ணங்களில் சேராத தேவதைகளுக்குப்போல் மூன்றுவர்ணங்களில் சேராத சூத்திரனுக்கும் இது பொருந்தும். (51)

3. சித்தாந்தம்:—தேவதைகளுக்கும் சூத்திரனுக்கும் வித்தியாசமிருக்கிறது. தேவதைகளுக்கு உபநயனமும் அத்தியயனமும் இராவிடினும், அவர்களுக்கு வேதம்தானாகவே தெரியும். அப்படிப்பட்ட சுகிருதத்தை அவர்கள் முன்னமேயே அடைந்திருக்கிறார்கள். சூத்திரனோ அப்படிப்பட்ட சுகிருதத்தைச் செய்யாததினால் வேதம் அவனுக்கு தானாகவே விளங்கமாட்டாது. மேலும் இவனுக்கு உபநயனமிராதபடியால் வேதாத்தியயனமில்லை. இப்படி அதிகாரமிராததபடியால் சூத்திரன் சுரௌதவித்தையில் அதிகாரியன்று. அப்படியானால் முன்சொன்ன வாக்கியத்தில் ஜானசுருதி விஷயமாய் சூத்திரசப்தம் எப்படி பிரயோகிக்கப்பட்டது. யோகார்த்தம், ரூடி அல்லவென்று சொல்லுகிறோம். சூத்திரசப்தத்துக்கு

विद्याराहि त्यजनितया शुचागुरुं दुद्राव

(அதாவது வித்தையில்லாததால் உண்டான துக்கத்தால் குருவை அடைந்தான் என்பது அர்த்தம். ரூடியால் யோகார்த்தம் கெட்டுப்போகமாட்டாது. ரூடி அர்த்தம் இவ்விடத்தில் பொருந்தாது. இந்த உபாக்கியானத்தில் ஜானசுருதி என்பவன் க்ஷத்திரியன் என்று தெரியவருகிறது.

சூத்திரனுக்கு வேதவித்தையில் அதிகாரமில்லாமையால் மோக்ஷ இச்சையிருந்தும் முக்தி சித்திக்கமாட்டாதே எனின்.

அப்படியல்ல ஸ்மிருதிபுராணாதி மூலமாக பிரம்மஞானம் கிடைத்து முக்தி சித்திக்கலாம்.

ஆகையால் சூத்திரனுக்கு வேதவித்தையில் அதிகாரமில்லை. (52)

1-3-9-வது அதிகரணம் முற்றிற்று.

## 1-3-10-வது அதிகரணத்தின்

### அனுக்கிரமணிகை.



## 1-3-10வது அதிகரணம்.

I. இதற்குப் பெயர் :— கம்பனாதிகரண மென்பதாம். (1)

II. இந்த அதிகரணத்தின் கம்பனத்துக்கு (நடுக்கலுக்கு)க் காரணம் ஈசுவரனே என்பதாம். (2

III. இதின் விஷயவாக்கியம் :—

यदिदं किञ्च जगत् सर्वं प्राण एजतिनिःसृतम् ।
महद्भयं वज्रमुद्यतं य एतद्विदुरमृतास्ते भवन्ति

என்கிற கடவல்லி II-3-2ல் ரா ஜகத்தெல்லாம் பிராணனிடமிருந்து உண்டாகி சிதாத்மாவான பிராணன் பிரேரணை செய்யும்போது சேஷ்டிக்கிறது; அந்தப் பிராணன் என்கிற காரணம் பிரம்மம். உயரவெடுக்கப்பட்ட வஜ்ஜிரம் பயகாரணமாயிருப்பதுபோல் இது பயகாரணமாயிருக்கிறது. எவர்கள் இந்தப் பிராணன் என்கிற நிர்விசேஷ பிரம்மத்தை அறிகிறார்களோ அவர்கள் முக்தர்களாகிறார்கள்

என்று சொல்லியிருக்கிறது.

IV சங்கதி :—

(1) முந்தின அதிகரணத்துக்கும் இந்த அதிகரணத்துக்கும் :—ஆநந்தகிரி என்பவர் இதைக் கூறுகிறார். ஆனல் இராமாநந்தர், பிரம்ம வித்தியாபரணக்காரர், பிரம்ம தத்துவப் பிரகாசிகக்காரர் இந்த அதிகரணத்துக்கும் முந்தின शब्दादेव प्रमितः என்கிற 8-வது அதிகரணத்துக்கும் தான் சம்பந்தம் ஏற்படுகிறது என்றும் 9-வது அதிகரணம் பிராசங்கிகமானதால் சம்பந்தம் ஏற்படவில்லை என்றும் சொல்லுகிறார்கள்.

(a) முதலில் ஆநந்தகிரிப்படி :—திருஷ்டாந்த சங்கதி.—முந்தின அதிகரணத்தில் சூத்திர சப்தத்துக்கு முக்கியார்த்தத்தை ஒப்புக்கொள்ளுவதற்கு அநேக பாதகங்களிருப்பதால் அதைத் தள்ளிவிடவேண்டும் என்று தீர்மானிக்கப்பட்டதுபோல் இந்த அதிகரணத்தில் பிராணசப்தத்துக்கும் முக்கியார்த்தத்தை எடுத்துக்கொள்ளுவதில்

(a) வாயு சகிதஜகத்தின் நடுக்கலுக்குக் காரணமாயிருத்தல்.

(b) பயஹேதுவாயிருத்தல்.

(c) மோக்ஷசாதனமாயிருத்தல் ஆகிய அநேக லிங்கங்களால் விரோதம் ஏற்படுவதால் முக்கியார்த்

த்தைத் தள்ளவேண்டுமென்று ஏற்படுகிறது. ஆகை யால் இரண்டு அதிகரணத்துக்கும் திருஷ்டாந்த சங் கதி ஏற்படுகிறது. (4)

(b) பிரம்ம வித்தியாபரணர்ர்ப்படி :—

திருஷ்டாந்த சங்கதி :—இதற்கு முந்தின அதிகர ணம் அங்குஷ்டமாத்திரனை விசாரிக்கும் சமயத்தில் தற்செயலாய் ஏற்பட்டபடியால் அதற்கும் இந்த அதி கரணத்துக்கும் சங்கதி ஏற்படமாட்டாது. ஆகை யால் அஙகுஷ்டாதி கரணத்துக்கும் இதற்கும் தான் சங்கதியைச் சொல்லவேண்டியது. அது திருஷ் டாந்த ரூபமாயிருக்கிறது எப்படி யெனின்

அங்குஷ்ட வாக்கியத்தில் ஈசான சப்தத்தால் பர மாத்மாவே அங்குஷ்டமாத்திரன் என்று சொன்னது போல், பிரகிருத மந்திரத்தில் பிராணசப்தத்தால் பஞ் சவிருத்திகளுள்ள வாயுவே சலிக்கிறவன் என்றும், வஜ்ஜிரபதத்தால் பயத்தை உண்டுபண்ணுகிற இடி என்றும் அர்த்தம் என்று பூர்வபக்ஷி சொல்லுகிறபடி யால் இரண்டு அதிகரணங்களுக்கும் திருஷ்டாந்த சங் கதி ஏற்படுகிறது. (5)

(c) இராமானந்தீயப்படி :—

பிரத்தியதாஹரணசங்கதி.—முந்தின அடுத்த அதி கரணத்துக்கும் இதற்கும் சங்கதி ஏற்படவில்லை. அதற்கு முந்தினதற்கும் இதற்கும் தான் ஏற்படுகி றது. அங்குஷ்டவாக்கியத்தில் ஜீவப்பிரம்ம ஐக்கிய ஞானத்தின் பொருட்டு ஜீவனைப்பற்றி சொல்லப்பட் டது. இந்தப்பிரகிருதமந்திரத்தில் பிராணனைப்பற்றி ச்சொல்லுவதானது ஐக்கியஞானம் உண்டாகும் பொருட்டல்ல. ஏனெனின் பிராணன் கற்பிதன் அவ னுக்கும் பிரம்மத்துக்கும் ஐக்கியம் ஏற்படமாட்டாது ஆகையால் இந்த வாக்கியம் பிராணோபாஸ்திபரம் என்று ஏற்படுகிறது. ஆகவே முந்தின அதிகரண விஷயம் திருஷ்டாந்தமாக இதற்கு ஏற்படாதபடியால் பிரத்தியுதாஹரண சங்கதி என்று சொல்லவேண் டும். (6)

(d) பாஷ்யகாரர்:—பிரசங்கத்தில் வந்த அதி கார விஷயத்தின் விசாரம் முடிந்தது. இப்போது வாக்கியார்த்த விசாரணையை ஆரம்பிப்போம். (7)

(2) பாதசங்கதி:—ஜகத்தைச் சலிக்கும்படி செ ய்யும்தன்மை பிராணனுக்கும் பயகாரணமாயிருக்கும் தன்மை இடிக்கும் பொருந்துமாகையால், இவைகள் பிரம்மத்தையே கூறுகின்றன வென்று ஸ்பஷ்டமாய் தெரியவாராதபடியால் இந்த அதிகரணத்தை இந்தப் பாதத்தில் சேர்க்கப்பட்டது.

(3) சுருதி முதலிய சங்கதிகளை முன்போலவே அறியவும். (8)

V. சந்தேகம்:—விஷயவாக்கியத்திலுள்ள ஏஜதி என்கிற பதத்திற்கு கம்பநம் அதாவது நடுங்குகிறது என்று அர்த்தமாகையால், கம்பநாத் என்கிற சூத்திரத் துக்கு விஷயவாக்கியத்தில் அந்த பதமில்லாவிட்டா லும் அந்த அர்த்தத்தைத்தரும் ஏஜதி என்னும் பதம் வந்திருப்பதால், அந்தவாக்கியம் உதாஹரிக்கப் பட்டது. இந்த வாக்கியத்தில், இந்த ஜகத்தெல்லாம் பிராணனை ஆசிரயித்து நடுங்குகிறது என்றும், பயகா ரணமான, இடி என்று பெயருள்ள மஹத்தான ஒன் று உயரெடுக்கப்பட்டிருக்கிறதென்றும், அதை அறி வதினால் மோக்ஷம் கிடைக்கிறதென்றும், சொல்லியி ருக்கிறது.

இந்த வாக்கியத்தில் கூறிய பிராணன் யார். பய காரணமான வஜ்ஜிரம் (இடி) என்பது எது என்பது சந்தேகம். இந்த பிராணன் பஞ்சவிருத்திப் பிராணனா அல்லது ஈசுவரனா? வஜ்ஜிரம் என்பது பிரசித்த அசனி (இடி)யா வேறு ஒன்றா? (9)

VI. இதிலடங்கிய சூத்திரம் 1 (39) (10)

VII. பூர்வபக்ஷம்:—1 விசாரித்துப்பார்க்குமளவில் பிராணசப்தத்துக்கு பிராண அபானாதி ஐந்து விர்த்தி களுள்ள வாயு என்கிற அர்த்தம் பிரசித்தமாக இருப் பதால், பிராணன் அப்படிப்பட்ட வாயுவென்றே அறி யவேண்டியது.

(2) அப்படியே வஜ்ஜிர சப்தத்துக்கு இடி என்கிற அர்த்தம் பிரசித்தமாயிருப்பதால், இடி என் றே அறியவேண்டியது. இந்த சுருதியானது வாயு வின் மாஹாத்மியத்தைக் கூறுகிறது. எப்படியெ னின் இந்த ஜகத்தெல்லாம் பிராணசப்தத்தால் கூறப் பட்ட ஐந்து விருத்திகளுடன் கூடிய வாயுவினிடத் தில் இருந்துகொண்டு நடுங்குகிறது, சலிக்கிறது. வாயுவினிடமிருந்து பயகாரணமான இடி உண்டா கிறது. (ஈ இடி வாயுவின் பரிணாமம். பாஹியவாயு வே புகை, ஜோதிஸ், ஜலம் இவைகளுடன்கூடி மேக மாக பரிணமிக்கிறது. அப்படி) வாயு மேகமாகக் கா ணப்படும்போது அதினிடத்தில் மின்னல், இடி, மழை இவைகள் உண்டாகின்றனவென்று சொல்லுகிறார்கள்.

2. வாயுவை அறிவதினாலேயே இந்த மோக்ஷம் உண்டாகிறது. அப்படியே

वायुरेव व्यष्टिर्वायुः समष्टिरपपुनर्मृत्युं जयति य एवं जयति

அதாவது:-வாயுவே தனித்தனி பதார்த்தம், சகலபதார்த்தங்களிலுமிருக்கிறது வாயுவே எவன் இதை அறிகிறானோ அவன் அபமிருத்தியுவை ஜயிக்கிறான் என்று சுருதி சொல்லுகிறது. (12)

3. (भा-सर्वं जगत् ஜெகத்தெல்லாம் என்பதினால் வாயுவும் எல்லாம் என்பதில் அடங்கினதாகத் தோன்றினும், சர்வ சப்தம் தன்னுடைய அர்த்தத்தை விடாமல் கொஞ்சம் குறைவான அர்த்தத்தைச் சொல்லுகிறது. ஆகவே சர்வம்ஜகத்து என்கிற பதத்துக்குப் பிராணனைத்தவிர மற்றஜகத்து என்று அர்த்தம் செய்யலாம் பிராண சப்தத்துக்கும் வஜ்ஜிர சப்தத்துக்கும் பிரம்மம் என்று அர்த்தம் செய்யும்பக்ஷத்தில் இப்பதங்களின் அர்த்தத்தைப் பூராவாகவிட்டுவிட வேண்டியதாக இருக்கிறது. ஆகையால் ஸ்வார்த்தத்தைப் பூராவாக விட்டுவிடுவதைப்பார்க்கிலும் அதின் அர்த்தத்தைக் குறுக்கியாவது அதை எடுத்துக்கொள்ளுவது நலம். அமிருத சப்தமும் மரணாபாவத்தைக் கூறுகிறதேதவிர எந்தக்காலத்திலும் மரணமில்லை என்றுசொல்லவில்லை. ஏனெனின் அமிருதா: தேவா: என்கிற இடத்தில் வெகுகாலம் ஜீவிக்கும் தேவதைகளும் அமிருதர்களாகச் சொல்லியிருக்கிறது. ஆகையால் பிராண சப்தத்தை அனுசரித்தும் வஜ்ஜிர சப்தத்தை அனுசரித்தும் வாயுவே இவ்விடத்தில் கூறப்பட்டிருக்கிறது. பிரம்மம் கூறப்படவில்லை என்று சொல்லவேண்டும்.)

VIII. சித்தாந்தம்:—

1. இப்படி பூர்வபக்ஷி சொல்ல வியாசர் சித்தாந்தத்தை

## कम्पनात् । ३९ ।

என்கிற சூத்திரத்தில் கூறுகிறார். (14)

2. பதஉரை (15)

कम्पनात् சலிக்கிறதினால்.

3. பொழிப்புரை:—அடியிற்பார்க்க.

4. பாஷ்யம்:—

1. பூர்வபக்ஷி சொல்லுவதற்கு நாம் உத்தரம் சொல்லுகிறதாவது:— இவ்விடத்தில் பிராண சப்தத்தாலும் வஜ்ஜிர சப்தத்தாலும் முன்பின்கிரந்தத்தை பரியாலோசனையினால் பிரம்மத்தைத்தான் அறியவேண்டியது. முன்பின் இருக்கும் கிறந்தபாகங்களில் பிரம்மமே கூறப்பட்டிருப்பதாக அறிகிறோம். முக்கிய பாகமான இவ்விடத்தில் யாதொருகாரணமுமின்றியில் வாயு கூறப்பட்டிருப்பதாக எப்படி அறிவோம். முந்தினபாகத்திலோ

तदेव शुक्रं तद्ब्रह्म तदेवामृतमुच्यते

तस्मिँल्लोकाश्रिताः सर्वे तदु नात्येति कश्चन

என்கிற கடவல்லி சுருதியில் அது ஸ்வயம் பிரகாசம் சுப்பிரமானது, அது பிரம்மம் அதுவே அமிருதம் என்று சொல்லப்படுகிறது. அதை சகல லோகங்களும் ஆசிரயித்துக் கொண்டிருக்கின்றன அதை ஒருவனும் அதிக்கிரமிக்கிறதில்லை என்று சொல்லியிருக்கிறது. அவ்விடத்திற்கூறப்பட்ட பிரம்மமே இவ்விடத்திலும்

(1) சாமீப்பியத்தினாலும்.

(2) जगत् सर्वं प्राण एजति என்கிற சுருதியால் விளங்கும் யாதொரு லோகாசிரயத்தன்மை உண்டோ அதின் ஞானத்தாலும், அதுவே கூறப்பட்டதாக தெரியவருகிறது. (17)

2. प्राणस्य प्राणः (அதாவது பிராணனுக்குப் பிராணன் என்கிற பிரஹதாரணியாக VI-4-18 சுருதியில் சொல்லியபடி இந்த பராணசப்தமும் பரமாத்மாவினிடத்திலேயே உபயோகிக்கப்பட்டதாக தெரிய வருகிறது. (18)

(இதுவரையில் சொன்னது பூர்வாபர வாக்கிய லிங்கம் இனி சூத்திரத்தில் இருக்கிற லிங்கத்தால் பிரம்மத்தை நிரூபிக்கிறார்).

कम्पनात् :— கம்பனத்துக்குக் காரணமாயிருத்தல் பரமாத்மாவுக்கே பொருந்தும், கேவலவாயுவுக்கு பொருந்தமாட்டாது. ஆகையால் வாயுசகித சகலத்தின் கம்பனத்துக்கும் காரணமான பிராணன் பரமாத்மா. அப்படியே,

न प्राणेन नापानेन मर्त्यो जीवति कश्चन ।

इतरेणतु जीवन्ति यस्मिन्नेतावुपाश्रितौ

என்கிற கடவல்லி II-2-5-வது சுருதியில் மனிதன் பிராணனாலும் ஜீவிக்கவில்லை என்றும், அபானனாலும் ஜீவிக்கவில்லை என்றும், எதில் இவ்விரண்டும் ஆசிரயித்துக் கொண்டிருக்கிறதோ அப்படிப்பட்ட வேறு ஒன்றால் ஜீவிக்கிறான் என்றும் சொல்லியிருக்கிறது. மேல்பாகத்திலும்,

भयादस्याग्निस्तपति भयात्तपति सूर्यः ।
भयादिन्द्रश्च वायुश्च मृत्युर्धावति पंचमः

என்கிற கடவல்லி II-6-வது சுருதியில் இதின் பயத்தால் அக்கினி தபிக்கிறான் என்றும், சூரியன் தபிக்கிறான் என்றும், பயத்தால் இந்திரனும் வாயுவும், ஐந்தாவதான மிருத்தியுவும் ஓடுகிறார்கள் என்றும்,

இப்படி வாயுசகித ஜகத்துக்கு பயகாரணம் ஒன்று சொல்லியிருப்பதால் பிரம்மமே கூறப்பட்டிருக்கிறது வாயு கூறப்படவில்லை.

அந்த பிரம்மமே இவ்விடத்திலும்,

(1) சாமீப்பியத்தினாலும்,

(2) महद्भयं वज्रमुद्यतं என்கிறதினால் யாதொரு பயகாரணத்வம் காணப்படுகிறதோ அதின் ஞானத்தினாலும்,

கூறப்பட்டிருக்கிறது என்று அறியப்படுகிறது. (19)

4. வஜ்ஜிரம் சாமான்னியமாய் பயகாரணமாயிருப்பதால் வஜ்ஜிரசப்தம் பிரயோகிக்கப்பட்டிருக்கிறது. அரசனுடைய ஆஞ்ஞைப்படி நான் நடக்காதவரையில் இந்த இடி என்னுடைய தலையிலேயே விழும் என்கிற பயத்தினால் ஜனங்கள் அரசனுடைய ஆஞ்ஞையில் பிரவிர்த்திக்கிறார்கள். இப்படியே இந்த அக்கினி, வாயு, சூரியன் முதலான ஸ்வரூபமான ஜகத்தானது இந்த பிரம்மத்தினின்றும் பயத்தை அடைந்து, நியமமாக தன்னுடைய வியாபாரத்தில் பிரவிர்த்திக்கிறபடியால் பிரம்மத்துக்கு பயகாரணமான வஜ்ஜிரம் உபமானமாகச் சொல்லப்பட்டது.

அப்படியே பிரம்மத்தைப்பற்றி,

भीषास्माद्वातः पवते भीषोदेति सूर्यः ।
भीषास्मादग्निश्चेन्द्रश्च मृत्युर्धावति पञ्चमः॥

என்கிற தைத்திரீய II-8-1-ல் இவனுடைய பயத்தினால் வாயு வீசுகிறான், பயத்தினால் சூரியன் உதிக்கிறான், இவனுடைய பயத்தினால் அக்கினி, இந்திரன், ஐந்தாவதான மிருத்தியு ஓடுகிறார்கள் என்று சொல்லியிருக்கிறது. (20)

5. மோக்ஷபலத்தை சுருதி கூறுவதினாலும் இது பிரம்மமென்று அறியப்படுகிறது.

तमेव विदित्वाऽतिमृत्युमेति नान्यः पन्था विद्यतेऽयनाय

என்கிற சுவேதாசுவதர VI-15-வது மந்திரத்தில்—அவரையே அறிந்து மிருத்தியுவை அதிக்கிரமிக்கிறான், மோக்ஷத்துக்கு வேறு மார்க்கமில்லை.

என்று சொல்லியிருப்பதால் பிரம்ம ஞானத்தால் மோக்ஷம் சித்திக்கிறது.

ஈ பிருஹதாரணியகத்தில் वायुरेव व्यष्टिः என்கிற இடத்தில் வாயுவை அறிகிறவன் அபமிருத்தியுவை ஜயிக்கிறான் என்று சொல்லியிருப்பதைக் கொண்டு மோக்ஷம் சித்திக்கிறதென்று பூர்வபக்ஷி சொன்னது சரியன்று. ஏனெனின் அபமிர்த்யும் ஜயதி என்கிற சுருதியானது அபமிருத்யுவின் ஜயத்தைக் கூறுகிறதே தவிர பரமமிருத்யுவின் ஜயத்தைக் கூறவில்லை. ஆகவே வாயு ஞானத்தால் சித்திக்கும் மோக்ஷம் ஆபேக்ஷிகமே தவிர, முக்கியமன்று.

ஆ மேலும் கேவலம் அபமிருத்யு சுருதியால் தான் ஆபேக்ஷிகம் என்பது ஏற்படவில்லை. ஈ பின்னையோவெனின் அந்த இடத்தில் வாயுவின் உபாஸ்திப் பிரகரணத்தை முடித்து அடுத்தபிரகரணத்தில் अथ हैनं उषस्तः पप्रच्छ என்கிறதினால் ஞேயமான பரமாத்மாவைச் சொல்லி, இதைவிட வேறானதெல்லாம் நசுவரம் என்பதாய் வாயு முதலியவைகளும் நசுவரம் என்று சொல்லியிருக்கிறது.

अन्यत्र धर्मात् अन्यत्राधर्मात्
अन्यत्रास्मात्कृताकृतात्
अन्यत्र भूतात् भव्याच्च यत् पश्यसि तद्वद

அதாவது தர்மம், அதர்மம், காரியம், காரணம், பூதம், பவிஷ்யம், வர்த்தமானம் இவைகளைவிட வேறாக எதைப் பார்க்கிறாயோ அதை சொல்லும்.

என்கிற கடவல்லி I 2-24-வது சுருதியில் ஆ எது கேட்கப்பட்டிருக்கிறதோ அந்த முக்கியமான விஷயத்தைச் சொல்லுவதே யுக்தமானதாலும், கேட்காததைச் சொல்லும் சாஸ்திரம் அப்பிரமாணமானதாலும், உத்தரத்தில் பிரம்மமே சொல்லப்பட்டிருப்பதாலும் பரமாத்மாவைப்பற்றியே கேட்டதாகத் தெரியவருகிறது. இப்படி பிரகரணத்தாலும் பரமாத்மாவே பிராணசப்தத்தால் கூறப்பட்டதாக நிச்சயிக்க வேண்டியது. (21)

6 பூர்வபக்ஷியானவன் சுருதியின் அர்த்தத்தை விட்டு விடுவதைப் பார்க்கிலும் அதை வைத்துக்கொண்டு சர்வ சப்தத்தின் அர்த்தத்தைக் குறுக்கிவிடுவது நலம் என்று சொல்லியிருந்தான்.

இது சரியன்று. முன்பின் வாக்கியங்களாலும் பிரகரணத்தாலும் பிரம்மமே பிரதிபாதிக்கப்பட்டிருப்பதால் பிராண்சுருதியின் முக்கியார்த்தத்தை விட்டு விட வேண்டியதாக இருக்கிறது. ஆகையால் சர்வ சப்தத்தின் அர்த்தத்தைக் குறுக்கவேண்டியதில்லை. (22)

IX. ஆ பூர்வபக்ஷபலன் :—பிராணோபாஸ்தி.

ஸித்தாந்தபலன்:—நிர்விசேஷப் பிரம்ம ஞானம் 23

ஐ अत एव प्राणः என்கிற முந்தின I-1-23-வது சூத்திரத்தில் பிராணசப்தம் பிரம்மத்தைக் கூறுகிறது என்று சொல்லியிருக்கிறது. அப்படியிருக்க இந்த சுருதியிலும் அந்த சங்கதியையே மறுபடியும் சொல்லவேண்டிய காரணமென்ன?

மேற்படி 23-வது சூத்திரத்தில் பிரம்ம லிங்கமாகிய சர்வத்துக்கும் காரணமாயிருக்குந்தன்மை பிராணனுக்குச் சொல்லியிருப்பதால்

பிராணன் பிரம்மம் என்று கூறப்பட்டது. இந்த பிரம்ம லிங்கமும் ஸ்பஷ்டமாயிருக்கிறது.

இவ்விடத்திலும் சகலத்தின் சேஷ்டைக்கும் பயத்துக்கும் காரணம் என்கிற லிங்கம் பிரம்ம லிங்கமாயிருந்தாலும் சுருதி ஸ்பஷ்டமாய் பிரம்மத்தையே கூறுகிறதாகத் தெரியவில்லை. ஏனெனின் ஜகத்தைச் சேஷ்டிக்கும்படி பிராணனும் செய்யலாம். ஆகவே பிரம்ம லிங்கம் அஸ்பஷ்டமாயிருக்கிறது.

ஆகையால் இந்த சுருதியை விசாரிக்கும்படி நேரிட்டது. (24)

வியாசாதிகரணமாலைப்படி

I-3-10-வது அதிகரணத்தின் சுருக்கம்.

1. சுலோகங்கள் :—

जगत्कम्पनकृत्प्राणोऽशनिर्वायुरुतेश्वरः ।
अशनिर्भयहेतुत्वाद्वायुर्वा देहचालनात् ॥
वेदनाऽमृतत्वोक्तेरीशोन्तर्यामिरूपतः ।
भयहेतुश्चालनं तु सर्वशक्तियुतत्वतः ॥ (25)

2. விஷய வாக்கியம் :—

கடவல்லியில் 6-வது அம்சத்தில்

यदिदं किञ्च जगत्सर्वं प्राण एजति निःसृतं ।
महद्भयं वज्रमुद्यतं य एतद्विदुरमृतास्ते भवन्ति ॥

என்று சொல்லியிருக்கிறது. இதின் அர்த்தம்:—

உற்பத்தியாயிருக்கிற இந்த ஜெகத்தெல்லாம் நிமித்த காரணமான பிராணனிருக்கும்போது சலிக்கிறது. அந்த பிராண சப்தத்தால் கூறப்பட்ட வஸ்துவானது உயரெடுக்கப்பட்ட வஜ்ஜிரம்போல் மஹாபய ஹேதுவாயிருக்கிறது. இந்தப் பிராண சப்தத்தால் கூறப்பட்டதை யார் அறிவார்களோ அவர்கள் மரண மற்றவர்களாகிறார்கள். (26)

3. சந்தேகமும்—பூர்வபக்ஷமும் :—

இவ்விடத்தில் ஜகத்தின் சலனத்துக்குக் காரணமான பிராணனை மூன்றுவிதமாய் அறியமுடியுமாகையால், இடி என்கிற அர்த்தத்தையே எடுத்துக்கொள்ள வேண்டியது. ஏனெனின் महद्भयं என்பதாய்ப் பய காரணமாகச் சொல்லப்பட்டிருக்கிறது.

வாயுவாகவாவது இருக்கலாம். ஏனெனின் प्राण एजति என்று சொல்லியிருக்கிறது. தேகாதிகளை வாயு சலிக்கிறதாக அறிந்திருக்கிறோம். (27)

4. ஸித்தாந்தம் :—பிராண சப்தத்தால் ஈசுவரனையே அறிவது யுக்தம். ஏனெனின்,

य एतद्विदुरमृतास्ते भवन्ति

என்பதினால் அதை அறிவதினால் மோக்ஷம் கிடைப்பதாகச் சொல்லியிருக்கிறது. பயஹேதுவாயிருப்பதும்

ஈசுவரன் அந்தர்யாமியாக இருப்பதால் அவருக்கும் பொருந்தும். भीषास्माद्वातः पवते என்றுவேறு சுருதியில் சொல்லியிருக்கிறது. தேகாதிகளைச்சலிக்கச் செய்வதும் சர்வ சக்திமானான ஈசுவரனுக்குப் பொருந்தும் :—ஆகையால் பிராண சப்தத்தால்கூறப்பட்டது ஈசுவரனே. (28)

I-3-10வது அதிகரணம்.

முற்றிற்று.

## 1-3-11-வது அதிகரணத்தின் அனுக்கிரமணிகை.



---

## I—3—11-வது அதிகரணம்.

I. இதின் பெயர்:—ஜோதிரதிகரணமென்பதாம். (1)

II. இந்த அதிகரணத்தின் கருத்து.

ஜோதிஸ் சப்தம் பிரம்மத்தைக் கூறுகிறதென்பதாம். (2)

III. இதின் விஷயவாக்கியம்:—

एष संप्रसादोऽस्माच्छरीरात्समुत्थाय परंज्योतिरुपसंपद्य स्वेनरूपेणाभिनिष्पद्यते

என்கிற சாந்தோக்கியத்தின் VIII-12-3-வது வாக்கியம்.

இதின் அர்த்தம்:—இந்தஜீவன் இந்தச் சரீரத்தினின்றும் வெளிக்கிளம்பி பரஞ்சோதியை அடைந்து தன்னுடைய ரூபத்துடன் விளங்குகிறுன் என்பதாம். (3)

IV. சங்கதி:—

(a) முந்தின அதிகரணத்துக்கும் இதற்கும்:- முன்பிரகரணம் பிரம்மபரமானதாலும், சர்வசப்தத்துக்குச் சங்கோசம் ஏற்படாததாலும், பிராணசப்தத்துக்குப் பிரம்மம் அர்த்தமென்பதாய் கூறப்பட்டது. இதில் எப்படி சர்வசப்தசங்கோசபரவம் பிரகரணசாதகமாக ஏற்பட்டிருந்ததோ அப்படி சம்பிரசாத சுருதியில் பிரகரணத்துக்கு சாதகம் ஏற்படாதபடியால் முந்தின யுக்திதிருஷ்டாந்தம் பொருந்தாது. ஆகையால் பிரத்தியுதாஹரணசங்கதி ஏற்படுகிறது. (4)

ஜ (2) பாதசங்கதி:-ஜோதியைக்காட்டிலும் பரமாயிருக்கும் தன்மையே பிரம்மலிங்கம் என்று சொல்லும்பக்ஷத்தில் நக்ஷத்திராதி ஜோதிகளைக்காட்டிலும் சூரியன் பரமாயிருப்பதால் அப்படிப் பரமாயிருக்கும் தன்மை பிரம்மத்துக்குத்தான் பொருந்தும் என்று சொல்லக்கூடாது. ஆகையால் அந்தலிங்கம் அஸ்பஷ்டம். ஆகையால் இந்த அதிகரணம் இந்தப் பாதத்தில் படிக்கப்பட்டது.

(3) இதர சங்கதிகளை முன்போலவே அறியவும். (5)

V. சந்தேகம்:—இந்த ஜோதிஸ்சப்தம்

(1) சக்ஷுஸ்விஷயமாயும் இருட்டைப்போக்கடிக்கிறதாயுமிருக்கிற சூரியாதிதேஜஸைக் கூறுகிறதா?

(2) அல்லது பரப்பிரம்மத்தைக் கூறுகிறதா? என்று சம்சயமுண்டாகிறது.

रा (பரசப்தத்தாலும் ஜோதிஸ் சப்தத்தாலும் இந்த சந்தேகம் ஏற்படுகிறது.) (6)

VI. இதிலடங்கிய சூத்திரம் 1-(40) (7)

VII. பூர்வபக்ஷம்:—இப்படி சந்தேகம் வர ஜோதிஸ்சப்தம் பிரசித்தமான தேஜஸையே கூறுகிறதென்று ஒப்புக்கொள்ளவேண்டும். ஏனெனின் ஜோதிஸ் சப்தத்துக்குத் தேஜஸ்ஸென்பதே சாதாரணமான அர்த்தம்.

ज्योतिश्चरणाभिधानात्

என்கிற I-1-24-வது சூத்திரத்தில் ஜோதிஸ் சப்தம் பிரகரணபலத்தால் ஸ்வார்த்தத்தைவிட்டுப் பிரம்மத்தைக் கூறுகிறது என்று சொல்லப்பட்டது. அப்படிப்போல் இவ்விடத்தில் ஸ்வார்த்தத்தை விட்டுவிடுவதில் யாதொருகாரணமு மில்லை. ஆகையால் சுருதியே பலமானது. (8)

2. அப்படியே சாந்தோக்கியத்தில் நாடிகளைப் பற்றிச் சொல்லுமிடத்தில்.

अथ यत्रैतदस्मात् शरीरादुत्क्रामत्यथैतैरेव रश्मिभिरूर्ध्वमाक्रमते

रा அதாவது நாடிகளுக்கும் சூரியரஸ்மிகளுக்கும் ஒன்றோடொன்று சம்பந்தத்தைச் சொல்லி, பிரஞ்ஞைபோனபின் எந்தக்காலத்தில் மரணமடைகிறானோ அக்காலத்தில் சரீரத்தைவிட்டு ஜீவன் வெளியே கிளம்புகிறான், பிறகு நாடிகளுடன் சம்பந்தப்பட்ட சூரியரஸ்மிகளால் மேல்போகிறான். அப்படிபோய்ப் பிரம்மலோகத்துக்குத் துவாரமாயிருக்கிற ஆதித்தியனை அடைகிறான்

என்பதினால் முமுக்ஷுவானவன் ஆதித்தியனை அடைகிறதாகச் சொல்லியிருக்கிறது. (9)

3. भा மூன்றின் சூத்திரத்தில் போல் இவ்விடத்தில் சுருதியின் அர்த்தத்தைக் குறுக்கவேண்டியதில்லை.

ஆனாலோ பிரம்மத்துக்கு ஜோதிஸ் அர்த்தத்தை ஒப்புக்கொள்ளுகிறபக்ஷத்தில் उपसंपद्य என்கிற பதத்துக்கு அடைந்து என்கிறதால் விளங்கும் சென்றகால அர்த்தத்தைத் தள்ளும்படி நேரிடும். ஏனெனின், அப்போது பிரம்மமாகி எந்தப்பரமமான ஸ்வரூபத்தை அடைகிறதாகச் சொல்லுகிறது. தேகத்துக்கு வேறான பிரம்மஸ்வரூப ஸாக்ஷாத்காரவிருத்தியே அந்தப் பரமமான ஸ்வரூபம் என்று சொல்லும்பக்ஷத்தில், அந்தப்பிரம்மமாகிறதற்கு முன் அந்தவிருத்தி ஏற்படுகிறதேதவிர பிரம்மமானபின் ஏற்படவில்லை. ஆகையால் அடைந்து என்கிறதினால் சென்றகால ஸ்வரூபம் ஏற்படவில்லை. ஆகையால் ஜோதிஸ் சப்தத்துக்கு பிரம்மம் என்கிற அர்த்தத்தை எடுத்துக்கொள்ளக்கூடாது.

भा மேலும் समुत्थान என்கிற சுருதிபதத்தாலும் தேஜஸே ஜோதிஸ், ஏனெனின், समुत्थान சப்தத்துக்கு வெளியே போகிறது என்று அர்த்தமேதவிர விவேகவிஞ்ஞானம் என்று அர்த்தமல்ல. தேஜஸை ஒப்புக்கொள்ளுப்பக்ஷத்தில் இந்த கமனமானது அர்ச்சிராதி மார்க்கத்துடன் பொருந்துகிறது. ஏனெனின் சூரியன் அர்ச்சிராதி மார்க்கத்தை அபேக்ஷித்து பரமான ஜோதிஸ். ஆகவே இந்த சுருதிக்கு:—

சரீரத்தைவிட்டு வெளிக்கிளம்பி அதாவது மரணமடைந்து பரஞ்சோதியான சூரியனை उपसंपद्य அதாவது சமீபித்து, அவர்மூலமாகப் பிரம்மலோகம் சென்று, தன் ஸ்வரூபத்தை அடைகிறான் அதாவது

கிரமமுக்தி அடைகிறான் என்று அர்த்தம்செய்ய வேண்டும்.

ஆகவே (1) समुत्थाय (2) उपसंपद्य (3) स्वेन रूपेण अभिनिष्पद्यते என்கிற மூன்று வசனங்களாலும் பிரகரணம் பாதிக்கப்படுகிறபடியால், இதைவிட்டு வெளியே கொண்டுபோய் சுருதிக்கு அர்த்தம் செய்யவேண்டும்.

மேற்சொல்லிய காரணங்களால் ஜோதிஸ் சப்தத்தால் பிரசித்தமான தேஜஸையே அறியவேண்டியது. (10)

IX. 1. இப்படி பூர்வபக்ஷி சொல்ல,

## ज्योतिर्दर्शनात् ॥

என்கிறசூத்திரத்தில் வியாசர் சமாதானம் சொல்லுகிறார். (11)

2. பதஉரை.

ज्योतिः ஜோதிஸ்.

दर्शनात् காணப்படுவதினால் (12)

3. பொழிப்புரை.

ஜோதிஸ் பிரம்மம், ஏனெனின் பிரம்பம் சுருதியால் நெடுகிலும் சொல்லப்பட்டதாககாணப்படுகிறது. 13

பாஷ்யம்.

ज्योतिः ஜோதி:-ஜோதிஸ்சப்தம் பரப்பிரம்மத்தையே கூறுகிறது. ஏனெனின்,

दर्शनात्:—அந்த பிரம்மம் இந்தப் பிரகரணத்தில் நெடுகிலும் சொல்லப்பட்டதாகவே காணப்படுகிறது.

யா எது பிரதிஞ்ஞை செய்யப்படுகிறதோ, எது மத்தியில் கூறப்படுகிறதோ, எது உபஸம்ஹாரம் செய்யப்பட்டிருக்கிறதோ அதுவே பிரகரணத்தின் முக்கியமான அர்த்தம். ) இவைகளுக்கு மத்தியில் இருக்கிறவைகளையெல்லாம் முக்கியார்த்தத்தை அனுசரித்தே அர்த்தம் செய்யவேண்டியது, சுருதிபதத்தைமட்டும் வைத்துக்கொண்டுபிரகரணத்துக்குவெளியேகொண்டு போய் தனிமையான அர்த்தம் செய்யக்கூடாது. இது உலக நியாயம். இப்படி செய்யாதவரையில் பூர்வமீமாம்சா நியாயத்துக்கு விரோதம் வரும்.

பிரகிருதத்தில் இந்தப்பிரகரண ஆரம்பத்தில்

य आत्मा अपहतपाप्मा (छा VIII-7-1) என்பதினால் பாபமற்ற தன்மைமுதலிய குணங்களுடன் கூடின ஆத்மாவை தேடவேண்டுமென்றும் அறியவேண்டுமென்றும் பிரதிஞ்ஞை செய்யப்பட்டிருக்கிறது.

एवं त्वेव ते भूयोऽनुव्याख्यास्यामि

(உனக்கு மறுபடியும் வியாக்கியானம் செய்கிறேன்) என்கிற சாந்தோக்கிய VIII-9-3 சுருதியால் அதுவே அனுசந்தானம் செய்யப்பட்டிருக்கிறது.

சாந்தோக்கியம் VIII 12-1-ல்

अशरीरं वा वसन्तं न प्रियाप्रिये स्पृशतः

என்பதினால் சரீரத்தைவிட்டு விலகினவனை சுகமும் துக்கமும் தொடவில்லை என்று சொல்லியிருப்பதால் சரீரமில்லாமை என்கிற மோக்ஷபலத்தின்பொருட்டு பரமான ஜோதியை அடைகிறான் என்று சொல்லியிருப்பதாலும், சரீரமில்லாமை பிரம்மத்துக்கு வெளியே சித்திக்காதபடியாலும் ரா பிரம்மமே ஜோதிஸ்; சூரியனல்ல.

(சூரியனை அடைந்து பிறகு அசரீரத்வத்தை அடைகிறான் என்று சொல்லக்கூடாது. ஏனெனின்) பரமான ஜோதியே உத்தம புருஷன் என்பதுடன் சேர்த்துச் சொல்லியிருப்பதாலும் ஜோதிஸ் சப்தம் பிரமத்தையே கூறும். (14)

2. 9-க்கு உத்தரம் முமுக்ஷுவானவன் ஆதித்தியனை அடைகிறான் என்று பூர்வபக்ஷி சொல்லிய விஷயத்தில் நாம் சொல்லுகிறதாவது:—

ரா தஹரோபாசகனுக்கு யாதொரு சூரியப்பிராப்தி சொல்லப்பட்டிருக்கிறதோ, அது ஆத்தியந்திக மோக்ஷமன்று. ஏனெனின் கதிஉத்கிராந்தி சம்பந்தம் கூறப்பட்டிருக்கிறது. யா பின்னையோ வெனின் அது காரியப்பிரம்மத்தை அடைய சாதகமாயிருக்கிறது. स्वेन रूपेण अभिनिष्पद्यते என்கிற வசனம் கிரமமுக்தி அபிப்பிராயத்துடன் கூறப்படவில்லை. ரா பிரஜாபதி வாக்கியத்தில் நிர்குணவித்தையில் அர்ச்சிராதி மார்க்கத்திலிருக்கிற சூரியனைப்பற்றிச் சொல்லவில்லை.

யா இந்தப் பிரகரணத்திற்கூறிய பிரம்மத்தை அறிகிறவனுக்கு கதியும் உத்கிராந்தியுமில்லை என்பது "न तस्मात्प्राणा उत्क्रामन्ति अत्रैव समवनीयन्ते" (பிராணன்கள் வெளியே போகிறதில்லை, இவ்விடத்திலேயே லயமாகின்றன) என்கிற சுருதியால் தெரியவருகிறது. சூரியன்மூலமாகக் கிரமமுக்தி கிடைக்கிறதாகவும் சொல்லக்கூடாது. ஏனெனின் அர்ச்சிராதிமார்க்கம் காரியப் பிரம்மலோகத்தை அடையும்படி செய்யுமே தவிர பிரம்மபாவத்தை அடையச் சாதகமாகாது. உபாதியற்ற நித்திய சுத்த புத்த பிரம்மபாவசாக்ஷாத்காரத்தை ஹேதுவாயுடைய மோக்ஷத்தில் அர்ச்சிராதி மார்க்கத்தின்உபயோகமில்லை. ஏனெனின் பிரம்மத்தை அறிந்தவன் இவ்விடத்திலேயே பிரம்மபாவத்தை அடையக்கூடும். ஆகையால் சூரியனாகிற தேஜஸை அடைந்து ஜீவன் தன் ரூபமாகிய பிரமரூபமாகிறான் என்று சொல்லுவதும் சமஞ்சஸமாயில்லை ரா ஆகையால் ஜோதிஸ் சப்தத்தால் பிரம்மம் என்று அறிந்து स्वेन रूपेण अभिनिष्पद्य அதாவது பிரம்ம ஸ்வரூபத்தை ஸாக்ஷாத்கரித்து परंज्योतिः उपसंपद्यते பரம்ஜோதிஸான பிரம்மபாவத்தைஜீவன் அடைகிறான் என்று அர்த்தம் செய்யவேண்டும்.)

ஆத்தியந்திகமோக்ஷத்தில் கதி, உத்கிராந்தி இல்லை என்பதை இனிமேல் விவரிப்போம். (15)

IX. பூர்வபக்ஷபலன் :—சூரியோபாஸ்தி
சித்தாந்தபலன் :— பிரம்மஞானத்தில் மோக்ஷபலன்.

பூர்வபக்ஷசாதக யுக்தி :—சுருதி ஒன்றே.

சித்தாந்தசாதக யுக்தி :— பிரகரணம் உத்தம புருஷ சுருதி. (16)

X. வியாசாதிகரணமாலைப்படி

I-3-11ன் சுருக்கம்.

1. சுலோகங்கள் :—

परंज्योतिस्तु सूर्यस्य मण्डलं ब्रह्म वा भवेत् ।
समुत्थायोपसंपद्येत्युक्त्या स्याद्रविमण्डलम् ॥
समुत्थानं त्वंपदार्थशुद्धिर्वाक्यार्थबोधनम् ।
संपत्तिरुत्तमत्वोक्तेर्ब्रह्म स्यादस्य साक्ष्यतः ॥

2. விஷய வாக்கியம் :—

சாந்தோக்கியத்தின் 8-வது அத்தியாயத்தின் பிரஜாபதி வித்தையில்

**एष संप्रसादोऽस्माच्छरीरात्समुत्थाय परंज्योतिरुपसंपद्य स्वेन रूपेणाभिनिष्पद्यते**

என்று சொல்லியிருக்கிறது. இதின் அர்த்தம்:—

संप्रसादः= सम्यक् + प्रसीदति + अस्यां + अवस्थायां इति

அதாவது எந்த அவஸ்தையில் செவ்வையாக பிரசன்னமாக இருக்கப்படுகிறதோ. அது அதாவது சுஷுப்தி. அந்த அவஸ்தையில் அதையுடையவன் ஜீவன் என்றுதெரியவருகிறது. एष जीवः अस्मात् शरीरात्समुत्थाय என்று ஏற்படுகிறது மற்றது சுலபம். (18)

3. சந்தேகமும் — பூர்வபக்ஷமும். ஜோதிஸ் சப்தத்துக்கு இரண்டு சந்தேகார்த்தங்கள் சம்பவிக்க சூரியமண்டலம் என்கிற அர்த்தத்தையே எடுத்துக் கொள்ளவேண்டும். ஏனெனின் शरीरात् संमुत्थाय ज्योतिरुपसंपद्य அதாவது தேகத்தினின்றும் வெளிப்பட்டு ஜோதியை அடைகிறான் என்று சொல்லியிருக்கிறது. பிரம்மத்தை அடைவதாகச் சொல்லுகிற விஷயத்தில் வெளியே போகுதலில்லை, அடைகிறவன், அடையப்பட்டது என்கிற பேதமுமில்லை. (19)

4. சித்தாந்தம்:—

ஜோதிஸ் சப்தத்தால் கூறப்பட்டது பிரம்மமே ஏனெனின் स उत्तमः पुरुषः என்பதால் உத்தமபுருஷனைச் சொல்லியிருக்கிறது. சூரியமண்டலவிஷயத்தில் இந்த வசனம் ஏற்படமாட்டாது. மேலும்

यो वेद – इदं जिघ्राणि – स आत्मा
यो वेद – इदं शृण्वानि – स आत्मा

முதலிய வாக்கியங்களில் கேட்கிறவன், கேள்வி, கேட்கப்பட்டது முதலியவைகளுக்கு சாக்ஷியாக ஆத்மாவைச் சொல்லியிருக்கிறது. இந்த வாக்கியமும் முன்கூறப்பட்ட வாக்கியமும் ஒன்றாக இருப்பதால் ஜோதிஸ் சப்தவாக்கியம் பிரம்மமே.

(1) சரீரத்தைவிட்டுக் கிளம்பி

(2) ஜோதியை அடைந்து என்கிற இரண்டு வசனங்களும் பிரம்மவிஷயத்தில் பொருந்தமாட்டா என்று சொன்னது சரியன்று. இவ்விடத்தில் வெளிக்கிளம்புதல் என்பதால் வெளியே புறப்பட்டுப் போகுதல் என்று அர்த்தமல்ல. பின்னையோவெனின் த்வம் பதார்த்தமான ஜீவனை மூன்று சரீரங்களினின்றும் பிரித்து அறிவதாம். உபசத்தி என்பதற்கும் பிராப்தி என்று அர்த்தமல்ல. பின்னையோ வெனின் அப்படி சோதிக்கப்பட்ட த்வம்பதார்த்த ஜீவனை பிரம்மமாக அறிவதாம்.

ஆகையால் ஜோதிஸ் பிரம்மமே. (20)

I-3-11வது அதிகரணம்.

முற்றிற்று.

---

## 1-3-12-வது அதிகரணத்தின்

அனுக்கிரமணிகை.



## 1—3—12—வது அதிகரணம்.

I. இதின்பெயர்:-அர்த்தாந்தராதிகரண மென்பதாம். (1)

II. இந்த அதிகரணத்தின் கருத்து:—

பிரம்மமே நாமரூப நிர்வாஹக மென்பதாம். (2)

III. இதின் விஷயவாக்கியம்:— சாந்தோக்கியத்தில் 8-வது அத்தியாயத்தின் முடிவில்,

आकाशो ह वै नामरूपयोनिर्वहिता ते यदन्तरा तत् ब्रह्म तदमृतं स आत्मा ॥

என்று சுருதி ஏற்பட்டிருக்கிறது.

இதின் அர்த்தம்:—

ஆகாசம் என்பது ஒருபதார்த்தம், அது ஜகத்தாகிற நாமரூபங்களுக்கு நிர்வாகமானது. அந்த நாமரூபங்கள் ஆகாசத்தைவிட வேறு (அல்லது) ஆகாசத்துக்குள் இருக்கின்றன. அந்த ஆகாசம் மரணமற்ற பிரம்மம், அதுவே பிரத்தியகாத்மா.

IV. சங்கதி.—

(1) முன் அதிகரணத்துக்கும் இதற்கும்:-முந்தின அதிகரணத்தில் உபக்கிரம பலத்தைக்கொண்டு ஜோதிஸ் சப்தத்துக்கு பிரசித்தார்த்தமன்று என்று நிச்சயிக்கப்பட்டது. அப்படியே இந்த அதிகரணத்தில் முதலிலிருக்கிற ஆகாச பதத்தைக்கொண்டு பிரம்மசப்தத்துக்கும் பிரசித்தார்த்தம் சித்திக்கவில்லை என்று பூர்வபக்ஷி சொல்லுகிறபடி திருஷ்டாந்தசங்கதி ஏற்படுகிறது. (4)

(2) பாதசங்கதி:-இந்த அதிகரணத்தில் நாமரூபங்களுக்கு வேறு என்கிற லிங்கம் கூறப்பட்டிருக்கிறது. அது ஆகாசத்துக்கும் பொருந்துமாகையால் பிரம்மத்துக்குத்தான் உரியது என்று ஸ்பஷ்டமாய்த் தெரியாதபடியால் பாதசங்கதி சித்தித்தது.

(3) மற்றசங்கதிகளை முன்போலவே அறியவும். (5

V. சந்தேகம்:—இந்த ஆகாசசப்தம் பரப்பிரம்மத்தைக் கூறுகிறதா?

அல்லது பிரசித்தமான பூதாகாசத்தைக் கூறுகிறதா? (6)

VI. இதிலடங்கிய சூத்திரம் 1 (41) (7)

VII. பூர்வபக்ஷம்:—விசாரித்துப்பார்க்குமளவில் ஆகாசசப்தம் பூதாகாசத்தைக் கூறுவதாக பாவிப்பதே யுக்தம். ஏனெனின்:—

(1) ஆகாசசப்தம் பூதாகாசத்தைத்தான் சாதாரணமாய்க் கூறுகிறது. (8)

(2) ஆகாசமானது நாமரூபங்களுக்கு அவகாசம் கொடுப்பது மூலமாக நிர்வாஹகமாயிருக்கிறது. ஒரு அரசன் ஜனங்களுடைய உபத்திரவாதிகளை நிவர்த்திப்பது மூலமாக தன்தேசத்துக்கு நிர்வாகனுகிறான் ஆாவது பரிபாலனம் செய்கிறவனுகிறான் அதுபோல நிர்வஹித்தல் ஆகாசத்திலும் சம்பவிக்கும். ஆகையால் நிர்வஹித்தல் என்பது பிரம்மத்துக்கே உரியது என்று இல்லை. ஆகையால் ஆகாசசப்தம் பூதாகாசத்தைக் கூறுவதாகச் சொல்லமுடியும். (9)

ர (3) आकाशस्तल्लिंगात् என்கிற 1-1-22-வது சூத்திரத்தில், பிரம்மலிங்கம் ஸ்பஷ்டமாயிருந்ததைக் கொண்டு ஆகாசபதம் பிரம்மத்தைக் கூறுவதாகச்சொல்லப்பட்டது. அப்படிப்போல் இவ்விடத்தில் சிருஷ்டிக்கும்தன்மை முதலிய ஸ்பஷ்டமான பிரம்மலிங்கங்கள் சுருதியிற் கூறப்படாதபடியால் ஆகாசசப்தம் பூதாகாசத்தைத்தான் கூறுகிறது. (10)

VIII. 1. இப்படி பூர்வபக்ஷி சொல்ல வியாசர் சித்தாந்தத்தை

## आकाशोऽर्थान्तरत्वादिव्यपदेशात् ॥

என்கிற சூத்திரத்தில் கூறுகிறார். (11)

2. பதவுரை:—

आकाशः ஆகாசம் (பிரம்மம்.)

अर्थान्तरत्वादिव्यपदेशात् (நாமரூபங்களைவிட) வேறான பதார்த்தமாக சொல்லியிருப்பதால் (12)

3. பொழிப்புரை:—

ஆகாசசப்தம் பிரம்மத்தைக் கூறுகிறது. ஏனெனின் நாமரூபங்களைவிட அது வேறு முதலியதாளன்று கூறப்பட்டிருக்கின்றது. (13)

4. பாஷ்யம்:—

1. आकाशः இவ்விடத்தில் ஆகாசசப்தம் பரப்பிரம்மத்தையே கூறுவதாக சொல்லுவது யுக்தம். (14)

ஏனெனின்.

2. अर्थान्तरत्वादिव्यपदेशात् என்கிற வசனம் நாமரூபங்களைவிட வேறான ஆகாசத்தைக் கூறுகிறது. நாமரூபங்களைவிட வேறானது பிரம்மத்தைத்தவிர வேறு ஒன்றுமில்லை. ஏனெனின் சகலவிகாரங்களும் நாமரூபங்களாலேயே சித்திக்கின்றன.

अनेन जीवेनात्मनानुप्रविश्य नामरूपे व्याकरवाणि ॥

(இந்த ஜீவனுடன் பிராணிகளுக்குள் அநுப்பிரவேசம் செய்து நாமரூபங்களைச் செய்கிறேன்.)

என்கிற சாந்தோக்கியம் VI-3-2-வது சுருதிப்படி நாமரூபங்களை பூராவாகச்செய்தல் பிரம்மத்தைத் தவிர வேறு ஒன்றாலும் முடியாது.

நாமாதிகளைச் செய்தல் பிரம்மலிங்கமன்றே. ஜீவனும் பிரத்தியக்ஷமாய் நாமரூபங்களை நிர்வஹிக்கிறானே ?

ர வாஸ்தவம் தான். ஜீவன் பிரம்மத்தைவிடவேறன்று பிரம்மத்துக்கு சாக்ஷாத்தாய் கர்த்திருத்வம் சம்பவிக்கமாட்டாது. நாமரூப நிர்வாஹகம் ஜீவனுக்கே பொருந்தினும் ஜீவனும் பிரம்மமும் ஒன்றானதால் பிரம்மத்துக்கும் அது கூறப்பட்டது. (15)

ர 3. ஸ்பஷ்டமான பிரம்மலிங்கமில்லை என்று பூர்வபக்ஷி சொன்னவிஷயத்தில்,

நாமரூபங்களை நிர்வஹிக்கிறதாக சொன்னதினுலேயே சிருஷ்டித்தல் முதலிய பிரம்மலிங்கம் சொன்னதாக ஆகிறது.

तत् ब्रह्म तदमृतं स आत्मा ஆ ஆகாசத்தைப் பிரம்மமாகச் சொல்லும்பக்ஷத்தில் லிங்கங்கள் இருக்கின்றன. பூதாகாசம் என்று ஒப்புக்கொள்ளும்பக்ஷத்தில் आकाशः என்கிற சுருதியும் லிங்கமும் இருக்கிறது. கேவலம் லிங்கபலத்தைக்காட்டிலும் சுருதியும் லிங்கமும் பலமானதால் பூதாகாச அர்த்தத்தையே ஒப்புக்கொள்ளவேண்டும் என்று சொல்லும்பக்ஷத்தில்,

நாமரூபங்களை நிர்வஹித்தல், அவைகளைவிட வேறாயிருத்தல், அமிருதம் ஆகிய லிங்கங்களுடன் பிரம்ம ஆத்ம சுருதிகளும் சேர்ந்திருப்பதால் சித்தாந்தியின் பக்ஷமும் வெகுபலமானதே. तत् ब्रह्म तदमृतं स आत्मा என்கிற பதங்கள் பிரம்மம் கூறப்பட்டதாக சூசிப்பிக்கின்றன. (16)

ர 5. आकाशः तल्लिङ्गात् என்கிற I-1-21வது சூத்திரத்தில் ஆகாசம் பிரம்மமென்று சொல்லியிருப்பதால் இப்போது மறுபடியும் அந்த விசாரம் செய்யவேண்டியதில்லை எனின், பிரகிருதவிசாரம் முந்தின

விசாரத்துக்குச் சாதகமானதே ஆகாசம் பிரமம் என்பதை ஒப்புக்கொண்டே, அவ்விஷயத்தில் ஜனித்த சந்தேகத்தை நிவிர்த்திக்கும்பொருட்டு இந்த சூத்திரம் ஏற்பட்டபடியால் பௌநருக்தியுமில்லை. ஆ அவ்விடத்தில்கிருஷ்டிருத்வம் ஸ்பஷ்டமா யிருக்கிறதுபோல் இவ்விடத்தி லில்லை. (17)

IX. பூர்வபக்ஷபலன் :—ஆகாசோபாஸ்தி

சித்தாந்தபலன் :—நிர்குணப் பிரம்மஞானம்,

பூர்வபக்ஷயுக்தி :—சுருதி லிங்கம்

சித்தாந்தியின் யுக்தி :— சுருதிகளும்லிங்கங்களும். (18)

X. வியாசாதிகரணமாலைப்படி

I-3-12ன் சுருக்கம்.

I. சுலோகங்கள்.

वियद्वा ब्रह्म वाऽकाशो वै नामेति श्रुतं वियत् ।
अवकाशप्रदानेन सर्वनिर्वाहकत्वतः ॥
निर्वोढृत्वं नियन्तृत्वं चैतन्यस्यैवतत्वतः ।
ब्रह्म स्याद्वाक्यशेषे च ब्रह्मात्मेत्यादिशब्दतः ॥

II. விஷயவாக்கியம் :—

சாந்தோக்கியத்தின் 8-வது அத்தியாயத்தின் முடிவில்.

आकाशो ह वै नामरूपयोर्निर्वहिता ते यदन्तरा तद्ब्रह्म तदमृतं स आत्मा ॥

என்று சொல்லியிருக்கிறது. இதற்கு அர்த்தம்:—

ஆகாசம் என்பது ஒரு பதார்த்தம். அது ஜகத்தாகிற நாமரூபங்களை நிர்வாஹம் செய்கிறது. அந்த நாமரூபங்கள் எந்த ஆகாசத்தைவிடவேறோ, அல்லது எந்த ஆகாசத்துக்குள் இருக்கின்றனவோ, அந்த ஆகாசம் மரணமற்ற பிரம்மம்,அதுவே பிரத்தியகாத்மா.20

III. பூர்வபக்ஷம் :—ஆகாசம் என்பது பிரசித்தாகாசம். எனெனின் அது அவகாசம் கொடுப்பதால் நாமரூபங்களுக்கு நிர்வாஹகமானது. (21)

IV. சித்தாந்தம் :—இவ்விடத்தில் நிர்வாஹம் பண்ணுகிறது என்பதினால் அவகாசத்தைக் கொடுக்கிறதென்று மட்டும் அர்த்தமல்ல, பின்னையோ வெனின் நியமனம் செய்யவேண்டியது. இந்த நியமனம் செய்தலும் சகலவித நிர்வாஹகத்தில் அடங்கிப்போனது. அப்படி நியமனம் செய்தல் சேதனமான பிரமத்தில் பொருந்தும். வேறு சுருதியிலும்

अनेन जीवेन आत्मनाऽनुप्रविश्य नामरूपे व्याकरवाणि

என்று சொல்லியிருக்கிறது அசேதனமான ஆகாசம் நியமனம்செய்யமாட்டாது ஆகையால் ஆகாசம் பிரம்மமாக இருக்கவேண்டும். மேலும் வாக்கியமுடிவில் तद्ब्रह्म तदमृतं स आत्मा என்பதாய் பிரம்மத்வம், அமிருதத்வம், கூறப்பட்டிருக்கின்றன. ஆகையாலும் பிரம்மமே ஆகாசம். (22)

I-3-12வது அதிகரணம்.

முற்றிற்று.

## 1-3-13-வது அதிகரணத்தின்

அனுக்கிரமணிகை.



---

## 1—3—13-வது அதிகரணம்.

I. இதின் பெயர்:—சுஷுப்த்யுத்க்ராந்தி அதிகரணமென்பதாம். (1)

II. இந்த அதிகரணத்தின் கருத்து:—பிரம்மமே விஞ்ஞானமயமென்பதாம். (2)

III. இதின் விஷயவாக்கியம்:—பிரஹதாரண்யகம் 4-வது அத்தியாயத்தில் 3-7-ல்.

कतम आत्मेति योऽयं विज्ञानमयः प्राणेषु हृद्यन्तर्ज्योतिः पुरुषः समानः सन्नुभौ लोकावनुसंचरति

வி அதாவது, ஜனகர் யாஞ்ஞியவல்கியரை பார்த்து ஆத்மா நான் என்கிற ஞானத்துக்கு விஷயமான தேகாதிகளுக்குள் யாராவது ஒன்று அல்லது இவைகளைவிட வேறானதா என்றுகேட்க ஸ்தூலதேகம், இந்திரியங்கள், பிராணவாயுக்கள். அந்தக்கரணம், அதின் விர்த்திகள் இவைகளைவிட வேறாயும் இவைகளுக்கு சாட்சியாயும் சித்ஜோதிஸ் ஸ்வரூபமாயுமிருக்கிறவன் புருஷன். அவன் லிங்கசரீரத்தை தான் என்று பாவித்து இஹ பரலோகங்களில் சஞ்சரிக்கிறான்.

என்று அவர் சொல்லியிருக்கிறார். இப்படி ஆத்மவிஷயமான பிரச்னப்பிரதிவசனங்கள் வெகுவாய் ஏற்பட்டிருக்கின்றன. (3)

IV. சங்கதி:—

(1) முந்தின அதிகரணத்துக்கும் இதற்கும்:- முந்தின அதிகரணத்தில் ஆகாசமானது நாமரூபங்களைவிட வேறாயிருப்பதால் ஆகாசம் பிரம்மம் என்று சொல்லப்பட்டது. ஆகவே இந்த முந்தின அதிகரணத்தில் முக்கியமான பேதத்தைக்கொண்டு சித்தாந்தம் ஏற்பட்டது.

प्राज्ञेन आत्मना संपरिष्वक्तः(பிராஞ்ஞனை ஆத்மாவுடன் சம்பந்தப்படுகிறான்) என்கிற இடத்தில் ஜீவனுக்கும் பிரம்மத்துக்கும் பேதம் வாஸ்தவத்திலிராவிட்டாலும் ஔபசாரிகமாக சொல்லப்படுவதுபோல் நாமரூபங்களுக்கும் ஆகாசத்துக்கும் பேதம் வாஸ்தவமன்று என்று ஆக்ஷேபிக்கப்பட்டு ஜீவப்பிரம்ம பேதமும் வியாவஹாரிகத்தில் வாஸ்தவம்தான் என்று ஏற்படுகிறபடியால் ஆக்ஷேப சங்கதி ஏற்படுகிறது. (4)

ஆ (2) சுருதிமுதலிய சங்கதிகள்:-பிரஹதாரணியகம் ஆறாவது அத்தியாயம் நிர்விசேஷப் பிரம்மத்திற் தாற்பரியப்படுவதால் சுருதிமுதலிய சங்கதிகள் ஏற்படுகின்றன.

ஆ (3) முந்தின சூத்திரத்துக்கும் இதற்கும் சங்கதி:—முந்தினதில் சுருதிசகித லிங்கத்தால் சுருதி பாதிக்கப்பட்டதாகச் சொல்லப்பட்டது. இப்போது லிங்கத்தால் லிங்கமே பாதிக்கப்படுவதாகச் சொல்லப்படுகிறது.

(4) பாதசங்கதி:—உபக்கிரமத்தில் ஜீவலிங்கங்கள் அநேகமாய்க் காணப்படுகின்றன. கடைசியில் பிரம்மலிங்கம் காணப்படுகிறது. அநேகத்தால் ஸ்வல்பம் மறைபட்டுப்போகிறபடியால் இந்த அதிகரணத்தை இந்தப்பாதத்தில் சேர்க்கப்பட்டது. (5)

V. சந்தேகம்:—இந்த விஷயவாக்கியம் (1) சம்சாரி ஸ்வரூபத்தைமட்டும் பிரதிபாதிக்கிறதா? அல்லது (2) அசம்சாரி ஸ்வரூபத்தைப் பிரதிபாதிக்கிறதா?

VI. சந்தேகபீஜம்:—

ஆ வாக்கியாரம்பத்தில் विज्ञानमय சப்தமிருப்பதாலும் உபசம்காரத்தில் सर्वेईशान முதலிய சப்தங்களாலும் சந்தேகம் ஜனிக்கிறது. (6)

VI. இதிலடங்கிய சூத்திரங்கள் 2 (42—43) இவைகளில்

42-ல் விஷயவாக்கியம் அசம்சாரியைத்தான் கூறுகிறதென்பதும்

43-ல் இதற்கு நூதனகாரணமும் விவரிக்கப்படுகிறது. (7)

VII. பா பூர்வபக்ஷம்:—ஆதியிலும், மத்தியிலும் அந்தத்திலும் சம்சாரியைப்பற்றிச் சொல்லியிருப்பதால், இந்த வாக்கியத்தை சம்சாரிபரமாகவே அர்த்தம்செய்ய வேண்டியது. எப்படியெனின்:—

(a) உபக்கிரமத்தில்

योऽयं विज्ञानमयः प्राणेषु

என்கிற இடத்தில் பிராணுதிகளுக்குள் விஞ்ஞானமயன் என்பதினால் சாரீரலிங்கம் ஏற்படுகிறது.

வி—उभौ लोकौ अनुसंचरान्ति இரண்டு லோகங்களையும் சஞ்சரிக்கிறான் என்பதினாலும் சம்சாரி ஸ்பஷ்டம்.

(b) உபசம்ஹாரத்தில்

स वा एष महानज आत्मा योयं विज्ञानमयः प्राणेषु

அதாவது பிராணன்களுக்குள் எவன் விஞ்ஞானமயனோ அவன் மஹானாயும், பிறப்பில்லாமலுமிருக்கிற ஆத்மாவென்று பிரஹதாரணியகம் IV-4-22-ல் கூறப்பட்டிருக்கிறது.

ஆகையால் இந்த சம்சாரியை விடாமலே மத்தியிலும் ஜாக்கிரதாதி அவஸ்தைகளிலும் அவனே இருக்கிறான் என்றுசொல்லியிருக்கிறது.

வி இவ்விதமாக உபாதி சகத ஸ்வரூபமே வர்ணிக்கப்பட்டிருப்பதால் விஷயவாக்கியம் சம்சாரியையே கூறுகிறது. (8)

VIII. இப்படி பூர்வபக்ஷிசொல்ல வியாசர் சித்தாந்தத்தை

## सुषुप्त्युत्क्रान्तयोर्भेदेन ॥ ४२ ॥

என்கிற சூத்திரத்தில் கூறுகிறார். (9)

2. பதஉரை:—

सुषुप्त्युत्क्रान्तयोः—சுஷுப்தி அவஸ்தை வெளியே போகுதல் இவைகளில்

भेदेन பேதமாய்

(व्यपदेशात्) சொல்லியிருப்பதால். (10)

3. பொழிப்புரை:—

சுஷுப்தி வெளியேபோகுதல் இந்த அவஸ்தைகளில் ஜீவனைவிட பரமாத்மா வேறு என்றுசொல்லியிருப்பதால் இந்த விஷயவாக்கியம் பரமாத்மாவை கூறுகிறது. (11)

4. பாஷ்யம்:—

1. இந்தவாக்கியம் பரமேசுவரனை உபதேசிக்கிறதாக இருக்கிறது. சாரீரனை ஜீவனைமட்டும் சொல்லவில்லை. ஏனெனின்

सुषुप्त्युत्क्रान्तयोः भेदेन சுஷுப்தி வெளியேபோகுதல், இவைகளில் ஜீவனைவிட பரமேசுவரன் வேறுஎன்று சொல்லியிருக்கிறது.

(1) சுஷுப்தியில் இந்த புருஷன் பிராஞ்ஞனை ஆத்மாவுடன் சம்பந்தப்பட்டு வெளியிலிருக்கிற யாதொன்றையும் அறிகிறதில்லை, உள்ளிருக்கிறதும் அறிகிறதில்லை என்று கூறிய

अयं पुरुषः प्राज्ञेनात्मना संपरिष्वक्तो न बाह्यं किंचन वेद नान्तरम् (बृ-4-3-21)

என்கிற சுருதியானது ஜீவனைவிட வேறாக பரமேசுவரனைக் கூறுகிறது. இவ்விடத்தில் புருஷன்

ஜீவனே. ஏனெனின் அவன் அறிகிறவன். அப்படி அறிகிறவனாயிருப்பதால் உள்ளேயும் வெளியிலும் அறிகிறான் என்கிற பிரசக்தி ஏற்படுகிறது. (ஜாக்கிராவஸ்தையில் இப்படிப்பட்ட பிரசக்தி இருப்பதால் சுஷுப்தி அவஸ்தையில் இது இல்லை என்கிற நிஷேதம் சம்பவிக்கும்.

பிராஞ்ஞ: என்பவன் பரமேசுவரன் ஏனெனின் அவர் சர்வஞ்ஞத்தன்மையென்கிற பிரஞ்ஞையுடன் எப்போதும் கூடியிருக்கிறார்.

(2) அப்படியே மரணத்துக்குப்பிறகு வெளியேபோவதிலும்

अयं शारीर आत्मा प्राज्ञेनात्मनान्वारूढ उत्सर्जन् याति

என்கிற பிரஹதாரணியகம் IV-3-35-வது மந்திரத்தில் இந்த சாரீரனை ஆத்மாவானவன் பிராஞ்ஞனகிற ஆத்மாவால் அதிஷ்டிதனைப் அநேககோர சப்தங்களை வெளியிட்டுக்கொண்டு போகிறான்

என்று சொல்லியிருப்பதால் இந்த சுருதியும் பரமேசுவரனை ஜீவனைவிட வேறாகக் கூறுகிறது. இவ்விடத்திலும் சாரீரன் ஜீவன். ஏனெனின் அவன் சரீரத்துக்கு எஜமானனாயிருக்கிறான். பிராஞ்ஞனே பரமேசுவரன்.

ஆகையால் சுஷுப்தியாலும் மரணகாலத்தில் வெளியே போவதிலும் ஜீவனைவிட பரமேசுவரன் வேறு என்று சொல்லியிருப்பதால், இந்த விஷயவாக்கியத்தில் பரமேசுவரனே கூறப்பட்டதாக அறியப்படுகிறது. (12)

2. ஆதியிலும், மத்தியிலும், முடிவிலும் ஜீவலிங்கமிருப்பதால் வாக்கியம் ஜீவபரம் என்று பூர்வபக்ஷி சொன்ன விஷயத்தில் நாம் சொல்லுகிறதாவது:-

(1) உபக்கிரமத்திலோ योयं विज्ञानमयः प्राणेषु என்கிற வாக்கியத்தில் ஜீவஸ்வரூபம் கூறப்படவில்லை. பின்னையோவெனின் உலகப்பிரசித்தமான ஜீவஸ்வரூபத்தை அனுவதித்து அது பரபிரம்மத்துடன் ஒன்றாக இருக்கிறது என்று அந்த வாக்கியம் கூறுகிறது. ஏனெனின் ध्यायतीव लेलायतीव முதலிய மேல் வாக்கியங்களில் புத்தி தியானிக்கும்போது தியானம் செய்கிறதுபோலும், சலிக்கும்போது சலிக்கிறது போலும் என்று சொல்லியிருப்பதால், இந்த மேல் வாக்கியங்கள் சம்சாரிதர்மங்களை தள்ளுகிறதாக தெரியவருகிறது.

(2) அப்படி உபசம்ஹாரத்திலும் சுருதி எப்படி ஆரம்பித்திருக்கிறதோ, அப்படி முடிக்கிறது.

स वा एष महानज आत्मा यो यं विज्ञानमयः प्राणेषु

என்கிற பிரஹதாரணியபாகம் IV-4-22-வது சுருதியில் பிராணன்களுக்குள் எவன் விஞ்ஞானமயனை சம்சாரியாக காணப்படுகிறானே அவன் இந்த மஹான், பிறப்பற்ற ஆத்மா அதாவது பரமேசுவரன் என்று நாம் பிரதிபாதிக்கிறோம்.

எவன், மத்தியில் ஜாக்கிரதவஸ்தையைச் சொன்னதினால், ஸம்சாரி ஸ்வரூபம் கூறப்பட்டதாக நினைக்கிறானே, அவன் கிழக்குத்திக்கு நோக்கி புறப்பட்டவனாக இருந்தும், அதேசமயத்தில் மேற்குத்திக்கிலும் புறப்படுகிறான். ஏனெனின் ஜாக்கிறத்முதலிய அவஸ்தைகளைச் சொல்லுவதினால் ஜீவன் சம்சாரி என்று சொல்ல சுருதி கருத்துக்கொள்ளவில்லை, பின்னையோவெனின் அவஸ்தைகளில்லை என்றும், சம்சாரி இல்லை என்றும் சுருதி கூறுகிறது. இது எப்படி தெரியவருகிறதெனின்

अत ऊर्ध्वं विमोक्षायैव ब्रूहि

அதாவது மோக்ஷத்தின் பொருட்டு சொல்லும் (பி-IV-3-14 to 16) என்பதாய் ஜனகர் அடிக்கடி யாஞ்ஞவல்கியரைக் கேட்டு அவர்

अनन्वागतस्तेन भवति असंगो ह्ययं पुरुषः

அதாவது இந்தபுருஷன் அசங்கன் அதாவது ஒன்றுடனும் சம்பந்தப்படாதவன். ஆகையால் ஒன்றினாலும் பாதிக்கப்படாதவன்

என்று சொல்லுகிறார். (IV-3-15 & 16)

अनन्वागतं पुण्येनानन्वागतं पापेन तीर्णो हि तदा सर्वान् शोकान् हृदयस्य भवति

என்கிற ஷை IV-3-22-வது சுருதியில், புண்ணியத்தாலும் பாபத்தாலும் பாதிக்கப்படாததினால், ஹிருதயத்திலிருக்கிற சகல துக்கங்களையும் தாண்டினவனாகிறான்.

ஆகையால் இந்த வாக்கியம் அசம்சாரியான பரமேசுவரனுடைய ஸ்வரூபத்தை பிரதிபாதிக்கிறதற்காகவே ஏற்பட்டதாக அறியத்தக்கது.

IX—I—3—43-வது சூத்திரம்.

## पत्यादिशब्देभ्यः । ४३

2. முந்தின சூத்திரத்துக்கும் இதற்கும் சம்பந்தம்.—முன் வாக்கியம் பிரம்மாத்மைக்கியபரம் என்று சொன்னவிஷயத்தில் இந்த சூத்திரத்தில் வேறு காரணத்தைக் கூறுகிறார். (15)

3. பதவுரை:—

पत्यादि शब्देभ्यः பதிமுதலிய சப்தங்களால். (16)

4. பொழிப்புரை:—

பதிமுதலிய சப்தங்களால் வாக்கியம் பிரம்மபரம் என்றே தெரியவருகிறது.

5 பாஷ்யம்:—

அடியிற்கண்ட காரணத்திலும் இந்த வாக்கியம் அசம்சாரி ஸ்வரூபத்தை பிரதிபாதிக்கிறதென்றே அறியத்தக்கது.

அடியிற்கண்ட வாக்கியங்களில் அசம்சாரி ஸ்வரூபத்தை பிரதிபாதிக்கிறவைகளாயும், சம்சாரிஸ்வபாவத்தை பிரதிக்ஷேதிக்கிறவைகளாகவும், இருக்கிற பதிமுதலிய சப்தங்களிருக்கின்றன.

सर्वस्य वशी सर्वेशानः सर्वस्याधिपतिः (बृ-IV-4-22.)

அதாவது சகலத்தையும் ஸ்வாதீனத்தில் வைத்துக்கொண்டு தான் ஸ்வதந்திரனு யிருக்கிறவன். சகலத்தையும் நியமனம்செய்யும் சக்தியுள்ளவன், சகலத்துக்கும் அதிபதி.

இப்படிப்பட்ட சுருதிகள் அசம்சாரி ஸ்வபாவத்தை பரிதிபாதிக்கின்றன.

स न साधुना कर्मणा भूयान्नो एव साधुना कनीया ब्र-IV-31

அதாவது நல்லகர்மத்தால் அவன் பெரியவனுகிறதில்லை. கெட்டகர்மத்தினுல் சிறியவனுகிறதில்லை.

இப்படிப்பட்ட சுருதிகள் சம்சாரி சுவபாவத்தை நிஷேதிக்கின்றன.

ஆகையால் அசம்சாரியான பரமேசுவரன் இந்த வாக்கியத்தில் கூறப்பட்டிருக்கிறுன் என்று அறியப்படுகிறது. (18)

X. பூர்வபக்ஷபலன்:—கர்மத்தைச் செய்யும் ஜீவனுடைய ஸ்துதி.

சித்தாந்தபலன்:—கற்பித ஜீவனை அனுவதித்துக்கொண்டு, ஜீவப்பிரம்ம ஐக்கியத்தை அறிவதே பலன்.

ஆகவே ஆறுவது அத்தியாயம் ஐக்கியத்தில் தாற்பரியப்படுவதாக சித்தம். (19)

வியாசாதிகரணமாலைப்படி I-3-13-க்கு சுருக்கம்.

1. சுலோகங்கள்.

स्याद्विज्ञानमयो जीवो ब्रह्म वा जीव इष्यते ।
आदिमध्यावसानेषु संसारप्रतिपादनात् ॥
विविच्य लोक संसिद्धं जीवं प्राणाद्युपाधितः ।
ब्रह्मत्वमन्यतो प्राप्तं बोध्यते ब्रह्म नेतरम् ॥

2. விஷயம்:—

பிரஹதாரணியகத்தின் 6-வது அத்தியாயத்தில்.

योऽयं विज्ञानमयः प्राणिषु हृद्यन्तर्ज्योतिः पुरुषः समानः सन्नुभौ लोकावनुसंचरति

என்று சொல்லியிருக்கிறது. இதின் அர்த்தம்:- விஞ்ஞானமயன் லிங்கசரீரமயன். அதைவிட ஸ்தூலதேகம் வேறானது. சக்ஷுஸ்முதலிய இந்திரியங்களில், பிராணுதி வாயுக்களில், அந்தக்கரணத்தில், இப்படி ஏழாம்வேற்றுமைப் பிரயோகத்தால் அதாவது இவைகள் ஆதாரமாகையால் ஆதேயமான இவைகளைவிட வேறான புருஷன் ஒருவன் இருக்கிறுன் என்பதுசித்தம். அந்த சப்தத்தால் புத்திவிருத்திகளுக்கும் கர்மசங்கற்பாதிகளுக்கும் வேறானவன் என்பது சித்தம். (21)

புத்திபரிணமங்களான அந்தவிருத்திகள் வெளிப்பட்டவை. ஆகவே ஸ்தூலதேகம், இந்திரியங்கள், பிராணவாயு, அந்தக்கரணம், அதின் விர்த்திகள் இவைகளைவிட வேறாயும் இவைகளுக்கு சாக்ஷியாயும் சித்ஜோதிஸ் ஸ்வரூபபுருஷன் இருக்கிறுன் என்று சொன்னதாக ஆகிறது. அந்த புருஷன் லிங்கசரீரத்தையேதான் என்று அத்தியாசம்செய்து இஹபர லோகங்களை சஞ்சரிக்கிறுன்.

3. பூர்வபக்ஷம்:—

விஞ்ஞானமயன் ஜீவனுயிருக்கவேண்டும். ஏனெனின் ஆதியிலும் மத்தியிலும் முடிவிலும் சம்சாரியையே சொல்லியிருக்கிறது.

ஆதியிலோ उभौ लोकावनुसंचरति என்பதால் சம்சாரவசனம் ஸ்பஷ்டம்.

மத்தியிலோ சுஷுப்தி முதலிய 3. அவஸ்தைகளில் இருக்கிறதாகச் சொல்லியிருக்கிறது.

முடிவிலோ

स वा अयमात्मा ब्रह्म विज्ञानमयो मनोमयः प्राणमयः
முதலியவசனங்களால் உபாதிஸ்வரூபத்தாலேயே சம்
சாரி கூறப்படுகிறான். ஆகையால் அவன் ஜீவன் (22)

4 சித்தாந்தம்:—

இவ்விடத்தில் ஜீவன் கூறப்படவில்லை. ஏனெ
னின் அஹ் என்கிறதினாலேயே ஜீவனென்கிற ஞானமு
ண்டாகிறது. அப்படியானால் ஜீவனை விடுவானேன்
எனின் பிராஞ்ஞி உபாதிகளைவிட்டு விவேசனைசெய்
யும்பொருட்டு முதலிலும், மத்தியில் அவஸ்தாத்திரய
த்தின் சம்பந்தமில்லை என்பதைக்காட்டும்பொருட்டும்
கடைசியில் இப்படிப்பட்ட ஜீவனை பிரம்மம் என்றும்
சுருதி கூறுகிறது. வேறுவிதமாக பிரம்மத்துவம்
கிடைக்கமாட்டாது. ஆகையால் பிரம்மம் இவ்விடத்
தில் பிரதிபாத்தியமானது, ஜீவனன்று என்று சித்தித்
தது. (23)

I-1-3-13-வது அதிகரணம் மூன்றுவதுபாதம்
முற்றிற்று.

---

## 1-ல் 4-வது பாதம்

அனுக்கிரமணிகை.

## முதலாவது அத்தியாயம்

### நான்காவது பாதம்.

I. இதின் பெயர் :—பதசமன்வயபாதமென்றாம். (1)

II. இதின் கருத்து :—அவ்யக்தம் முதலிய சிலபதங்கள் பிரம்மத்தில் சமன்வயப்படுகின்றன வென்பது இதில் நிரூபிக்கப்படுகின்றது. முதல் பாதத்தில் பிரதானம் வேதத்தில் கூறப்படாமையால் ஜகத்காரணமாகமாட்டாதென்று நிரூபிக்கப்பட்டது. வேதத்தில் கூறப்பட்டிருக்கிறதென்று சிலர் ஆக்ஷேபிக்க, கூறப்படவில்லை என்றும் பிரம்மம்தான் காரணமென்றும் இந்த பாதத்தில் சித்தாந்தம் செய்யப்படுகின்றது. (2)

(1) சுருதி சங்கதி :— महतः पर முதலிய சுருதிகளின் தாற்பரியத்தை இந்த பாதம் நிர்ணயம்செய்வதால் சுருதிசங்கதி சித்திக்கிறது. (3)

(2) சாஸ்திரசங்கதி :— பிரம்ம விசாரத்துக்கும் சாதனமாக இந்த பாதமிருப்பதால் சாஸ்திரசங்கதி ஏற்படுகிறது. (4)

(3) அத்தியாயசங்கதி :-முதலாவது அத்தியாயம் சமன்வயாத்தியாயம். பிரதானாதிகளைநிராகரித்து பிரம்மத்திலேயே வேதாந்தம் தாற்பரியப்படுகின்றது என்றுஇந்த பாதமும் திடப்படுத்துகிறதினால் அத்தியாய சங்கதி ஏற்படுகிறது. (5)

ब (4) பாதசங்கதி.—முதலாவது பாதத்தில் முதலாவது அதிகரணத்தில் अथातो ब्रह्मजिज्ञासा என்கிற சூத்திரத்தினால் பிரம்மத்தைவிசாரிக்கவேண்டியது என்று பிரதிஞ்ஞை செய்து, जन्माद्यस्य यतः என்கிற இரண்டாவது சூத்திரத்தில் ஜகத்காரணத்வமாகிற பிரம்மலக்ஷணம் கூறப்பட்டது. இந்த லக்ஷணம் பிரதானத்துக்கும் பொருந்தும் என்கிற சங்கையின் பேரில் ईक्षते नाशब्दं என்கிற நான்காவது சூத்திரத்தில் பிரதானம் வேதத்தில் கூறப்படாததினால் அது காரணமாக மாட்டாது என்று நிரூபிக்கப்பட்டது.

சமஸ்த வேதாந்த வாக்கியங்களும் பிரம்மத்தையே காரணமாகச் சொல்லுவதினால் ஒரேதாற்பரியத்தைக் கொள்ளுகின்றன, பிரதானத்தைக் காரணமாக ஒப்புக்கொள்ளவில்லை என்று आनन्दमयोऽभ्यासात् என்கிற 6-வது அதிகரணம் முதல் पत्यादिशब्देभ्यः என்கிற மூன்றும் பாதத்தின் கடைசியான அதிகரணம் வரையிலுள்ள சூத்திரங்களால் சங்கை சமாதானத்துடன் ரூபிக்கப்பட்டது. (भा) ஆகவே மேல்கிரந்தத்தை ஆரம்பிக்கும்படி என்ன விசாரிக்கவேண்டியதாக பாக்கியிலிருக்கிறதென்று விசாரித்துப் பார்க்குமளவில்

महतः परं முதலிய சுருதிகள் காணப்படுகின்றன. இந்த சுருதிகள் பிரதானத்தில் தாற்பரியப்பட்டாலும் பிரதானம் ஜகத்காரணமென்று சொல்லவில்லை; பின்னேயாவெனின் பிரதானமிருக்கிறது என்று மட்டுமே சொல்லுகின்றன. அப்படி இருக்கிறது என்று சொன்னமாத்திரத்தில் பிரம்ம லக்ஷணத்தில் யாதொரு குறைவும்வரவில்லை ஆகையால் மேல் கிரந்தம் வேண்டியதில்லை என்று சிலர் சொன்னாலும்,

பிரதானம் வேதத்தில் கூறப்படவில்லை என்று சொன்னது யுக்தமன்று. சில சாகைகளில் பிரதானத்தைக் காரணமாகச் சொல்லுவதுபோல் சில சுருதிகளிருக்கின்றன. ஆகையால் பிரதானம் காரணம் என்பது வேதசித்தமென்று கபிலர் முதலான மஹரிஷிகள் அபிப்பிராயப்படுகிறார்கள். எதுவரையில் பிரதானாதிபதங்களுக்கு வேறுவிதமாக அர்த்தத்தை நாம் சொல்லவில்லையோ, அதுவரையில் சர்வஞ்ஞமான பிரம்மம் ஜகத்காரணமென்று சொல்லுவது கஷ்டமே. அந்தப் பதங்களுக்கு வேறு அர்த்தமுண்டென்று நிரூபித்து, பிரம்மலக்ஷணத்தில் வியபிசாரமில்லை என்று காட்டும்பொருட்டு மேல்கிரந்தம் ஆரம்பிக்கப்படுகிறது.

முந்தின பாதங்களில் கூறிய ஜகத்காரணத்வம் ஆக்ஷேபிக்கப்படுகிறபடியால் முந்தின பாதங்களுக்கும் இதற்கும் ஆக்ஷேபசங்கதி ஏற்படுகிறது. (6)

VI. இந்த பாதத்தில் 8-அதிகரணங்களும் 28-சூத்திரங்களும் அடங்கியிருக்கின்றன. இவைகளுக்குள் முதல்மூன்று அதிகரணங்களில், வேதத்தில் பிரதானம் கூறப்படவில்லை என்கிற விஷயத்தை ஆக்ஷேபித்து சமாதானம் சொல்லுகிறார். அதினால் பிரம்மலக்ஷணத்தில் அதிவியாப்திதோஷசங்கை நிவிர்த்தியாகிறது.

4-வது அதிகரணத்தில், வேதாந்தங்கள் பிரம்மத்தில் தாற்பரியப்படுகின்றன என்னும் பக்ஷத்தை விருத்தார்த்தங்களைச் சொல்லுகின்றன வென்று ஆக்ஷேபித்து சமாதானம் கூறுகிறார்.

5-வது 6-வது அதிகரணங்களில் ஜீவனிடத்திலும் பிரம்ம லக்ஷணம் பொருந்தும் என்கிற விஷயத்தை ஆக்ஷேபித்து சமாதானம் கூறுகிறார்.

7-வது அதிகரணத்தில் :—ஜன்மாதி சூத்திரத்தில்பிரம்மம் ஜன்மத்தின் நிமித்தகாரணம் என்றும்,

உபாதானகாரணம் பிரதானம் என்றும் சங்கித்து, ஜகத்தின் நிமித்தகாரணம் உபாதானகாரணம் இரண்டும் பிரம்மமே என்று சொல்லப்பட்டிருக்கிறது.

ஆகவே இந்த பாதம் முழுமையும் முன்சொன்ன விஷயத்தை ஆக்ஷேபித்துச் சமாதானத்தைக் கூறுகிறது.

8-வது அதிகரணத்தில் இதுவரையில் கூறப்படாத வாக்கியங்களுக்கும் முன்சொன்ன நியாயங்களாலேயே பிரம்மபரமாகவே அர்த்தம் செய்யவேண்டியது என்று கூறப்பட்டிருக்கிறது. (7)

முதலாவது அதிகரணம்.

V. இதின்பெயர்:— ஆனுமானிகாதிகரணமென்பதாம். (8)

VI. இந்த அதிகரணத்தின் கருத்து அவ்வியக்தபதம் காரணசரீரத்தைக் கூறுகிறதென்பதாம். (9)

VII. இதின் விஷயவாக்கியம்:—

महतः परमव्यक्तं अव्यक्तात् पुरुषः परः

(மஹத்தைவிட மேலானது அவ்வியக்தம். அவ்வியக்தத்தைவிட மேலானவன் புருஷன்.)

என்றும் காடகம் I-3-11-வது சுருதி, இதிலடங்கிய अव्यक्त பதம் விஷயம். (10)

VIII சங்கதி.

(a) முந்தின அதிகரணத்துக்கும் இதற்கும்:— முந்தின அதிகரணத்தில் பிரஹதாரணியத்தின் ஆறுவது அத்தியாயம் பிரசித்தமான ஜீவனைக் கூறவில்லை. அப்பிரசித்தமான பிரம்மத்தைத்தான் கூறுகிறது என்று சொன்னதுபோல்.

இந்த அதிகரணத்திற் விஷயவாக்கியத்திலுள்ள அவ்வியக்தபதம் அப்பிரசித்தமான பிரதானத்தைத்தான் கூறும் என்று பூர்வபக்ஷி சொல்லுவதால் இரண்டு அதிகரணங்களுக்கும் திருஷ்டாந்தசங்கதி ஏற்படுகின்றது (11)

(b) பாதசங்கதி:—இந்தபாதம் பதங்களை விசாரிக்கிறது. இந்த அதிகரணமும் அவ்வியக்தபதத்தை விசாரிக்கிறபடியால் இந்த பாதத்தில் சேர்க்கப்பட்டது. ஆகவே பாதசங்கி ஏற்பட்டது.

(c) மற்றசங்கதிகளை முன்னமேயே சொல்லியாய்விட்டது. (12)

IX. சந்தேகம்:-இந்த வாக்கியத்திலுள்ள அவ்வியக்தபதம்

(a) சாங்கிய ஸ்மிருதிகளிற் கூறப்பட்ட பிரதானத்தைக் கூறுகிறதா? அல்லது.

(b) आत्मानं रथिनं विद्धि शरीरं रथमेव तु

(ஆத்மாவை இரதிகனையும் சரீரத்தை இரதமாகவும் அறி) என்றும் முந்தின I-3-3-வது சுருதியிற் கூறிய சரீரத்தைக் கூறுகிறதா?

என்பது சந்தேகம். (13)

X. இதிலடங்கிய சூத்திரங்கள் 7.
இவைகளில்.

1ல். இதர திருஷ்டாந்தத்தால் அவ்வியக்தம் சரீரம்தான், பிரதானமல்லவென்றும்,

2ல். சூட்சுமமான காரணசரீரம் அவ்வியக்தபதத்தால் கூறப்படலாமென்றும், பிரளயாவஸ்தையிலுள்ள சூட்சுமாவஸ்தையே அவ்வியக்தமென்றும்,

3ல். இந்த அவஸ்தை ஈசுவராதீனமானதால் சிருஷ்டி சித்திக்கிறது, ஸ்வதந்திரமான பிரதானமானால் சிருஷ்டி சித்திக்கமாட்டாதென்றும்,

4ல். அவ்வியக்தம் ஞேயம் என்று சொல்லிராததினால் அது பிரதானமாக மாட்டாதென்றும்,

5ல். ஞேயமாகச்சொல்லப்பட்டது பிராஞ்ஞனே தவிர அவ்வியக்தமல்ல வென்றும்,

6ல். கடவல்லி உபநிஷத்தில் அவ்வியக்தத்தின் பிரஸ்தாபமேயில்லை என்றும்

7ல். மஹத் சப்தத்துக்கு சாங்கியர்களின் அர்த்தம் வேதத்தில் ஏற்படாததுபோல் அவ்வியக்தத்துக்கும் ஏற்படவில்லை என்றும் நிரூபிக்கப்படுகிறது. (14)

XI. பூர்வபக்ஷம்:—

## आनुमानिकमप्येकेषामिति चेन्नशरीररूपकविन्यस्तगृहीतेर्दर्शयति च ।१

என்னும் இந்தபாதத்தின் முதலாவது சூத்திரத்திலுள்ள आनुमानिकमप्येकेषामिति चेत् என்கிற பாகத்தால் பூர்வபக்ஷம் ஏற்படுகிறது.

अनुमानिकं अपि :—அனுமானத்தால் நிரூபிக்கப்பட்ட பிரதானமும் சிலசாகிகளுடைய சாகைகளில் பிரதிபாதிக்கப்பட்டதாக காணப்படுகிறது.

ஆ.ர (உம் என்பதாலும் சில என்பதாலும் பிரம்மமும் அங்கீகரிக்கப்பட்டதாகவே தெரியவருகிறது.)

காடகத்திலோ I-1-11-ல்,

महतः परं अव्यक्तमव्यक्तात्पुरुषः परः

என்று சொல்லியிருக்கிறது. சாங்கிய ஸ்மிருதியால் பிரசித்தமான மஹத்து, அவ்வியக்தம், புருஷன் என்கிற பதார்த்தங்கள் எந்த கிரமத்துடன் கூறப்பட்டிருக்கின்றனவோ, அந்த கிரமத்துடன் அந்தபதார்த்தங்களே இந்த காடகசுருதியிலும் காணப்படுகின்றன. இந்த மூன்று பதங்களுக்குள் அவ்வியக்தமானது, சாங்கியஸ்மிருதியில் பிரதானம் என்று பிரசித்தமாய் சொல்லியிருப்பதாலும், சப்தஸ்பர்சாதிகளற்றதாயிருப்பதால் வியக்தமாயிராதபடியாலும், பிரதானத்தையே கூறுகிறது. இப்படி பிரதானம் சுருதியில் கூறப்பட்டிருப்பதால் அது கூறப்படவில்லை என்று சொல்லக்கூடாது. சுருதியில் ஒப்புக்கொள்ளப்பட்ட பிரதானமே ஜகத்காரணமென்று

रा (a) (1) महतः परं अव्यक्त

रा (2) अजां एकां (श्वे IV. 4.)

முதலிய சுருதிகளாலும்,

रा (b) हेतुः प्रकृतिरुच्यते

என்கிற (भ-गी-XIII 20) ஸ்மிருதியினாலும்,

(c) यदल्पं तज्जडप्रकृतिकं

(எது அற்பமோ அது ஜடபிரகிருதியால் உண்டானது)

என்னும் நியாயத்தாலும் சித்திக்கிறது. रा ஆகையால் பிரம்மமே காரணம் என்கிற மதத்துக்குக் குறைவு வந்துவிட்டது.

XII. சித்தாந்தம் :—இப்படி பூர்வபக்ஷி சொல்ல சித்தாந்தத்தை न शरीर முதலிய பதங்களால் கூறுகிறார்.

1. பதவுரை :—न (பிரதானம் வேதசித்தம் என்பது அல்ல शरीररूपकविन्यस्तगृहीतेः சரீரமே இரதமாகக்கற்பிக்கப்பட்டதாகத் தெரியவருவதால் दर्शयति च அப்படியே சுருதியும்) காட்டுகிறது. (17)

2. பொழிப்புரை :—சிலர் அனுமானசித்தமான பிரதானம் महतः परं अव्यक्तम् என்பதால் வேதசித்தம் என்று சொல்லுகிறார்கள். அது சரியன்று. ஏனெனின் அவ்வியக்த சப்தம் சரீரத்தைக் கூறுவதாக சரீரத்தை இரதமாக வர்ணிக்கிற சற்பனையால் தெரியவருகிறது. சுருதியும் அப்படியே காண்பிவிக்கிறது. 18

2. பாஷ்யம் :—

1. न பிரதானம் வேதசித்தமல்ல. இந்த காடக வாக்கியம், ஸ்மிருதியிற் பிரசித்தமான மஹத் அவ்வியக்தம் என்பவைகள் இருக்கின்றன என்று சொல்ல ஏற்படவில்லை. ஸ்மிருதியில் பிரதானம் ஸ்வதந்திரமென்றும், காரணமென்றும், முக்குணமுள்ளதென்றும் எப்படிசொல்லப்பட்டிருக்கிறதோ, அப்படி இந்த காடகசுருதியில் அறியப்படவில்லை. அவ்வியக்தம் என்கிற சப்தம் மட்டும் இந்த சுருதியில் தெரியவருகிறது. அந்த சப்தம் எது வியக்தமன்றோ அது என்று அவயவார்த்தத்தைக் கொள்ளுவதால், சூட்சுமமாயும், வருத்தத்தின் பேரில் பார்க்கக் கூடியதாயுமிருக்கிற வேறு பதார்த்தங்களையும் கூறும். இந்தப்பதம் எந்தப் பொருளுக்கும் இடுகுறிப் பெயரன்று. பிரதானவாதிகள் அவ்வியக்தத்திற்குப் பிரதானம் ரூடி (இடுகுறி) அர்த்தமென்று சொல்லுகிறார்களே எனின்; அவர்களுக்குத்தான் அந்த ரூடி அர்த்தம் ஏற்பட்டிருக்கிறது. வேதார்த்தத்தை நிருபணம் செய்வதில் அது காரணமாக ஏற்படவில்லை. சாங்கியஸ்மிருதியில் எந்தக் கிரமமாகச் சொல்லியிருக்கிறதோ அந்தக் கிரமமே காடகச்சுருதியிலும் காணப்படுவதினால் ஒரே அர்த்தம் இரண்டிலும் விளங்குகிறதென்றும் சொல்லக்கூடாது. ஏனெனின் அவ்வியக்த பதத்துக்கு வேறு அர்த்தத்தை அறிந்திருக்கிறோம். குதிரைகட்டுகிறயிடத்தில் பசுவைப் பார்த்து இது குதிரை என்று மூடன் கிரகிக்கமாட்டான். (रा ஆகவே ஒரு விஷயம் முன் அறியப்பட்டிருந்தால் வேறு ஒரு விஷயமும் அதுவே என்று ஒருவன் சொல்லுவானா?)

பிரகரணத்தை விசாரித்துப்பார்க்குமளவிலும் அதாவது கடவல்லி I-3-3-ல் சரீரத்தை ஆத்மாவுக்கும் புத்திக்கும் முத்தியில் சொல்லியிருப்பதாலும், I-3-11-ல் அவ்வியக்தத்தை பரமபுருஷனுக்கும் ஹிரண்யகர்ப்பனுடைய புத்தியாகிற மஹத்துக்கும் மத்தியிற் சொல்லியிருப்பதாலும் சரீரம் அவ்வியக்தம் என்று தெரியவருகிறதேதவிர இந்த காடகசுருதியில் பிறரால் கற்பிக்கப்பட்ட பிரதானம் தெரியவில்லை. ஏனெனின்

शरीररूपकविन्यस्तगृहीतेः

அவ்வியக்த சப்தத்தால் இரதரூபமாக கற்பிக்கப்பட்ட சரீரத்தை கிரகிக்கவேண்டியது என்று பிரகரணத்தாலும் பரிசேஷத்தாலும் தெரியவருகிறது.

(ரா இனி பிரகரணத்தை விவரிக்கிறார்)

आत्मानं रथिनं विद्धि शरीरं रथमेव तु
बुद्धिं तु सारथिं विद्धि मनः प्रग्रहमेव च ॥
इन्द्रियाणि हयान्याहुर्विषयांस्तेषु गोचरान् ।
आत्मेन्द्रियमनोयुक्तं भोक्तेत्याहुर्मनीषिणः ॥

என்கிற அடுத்த முந்தின 3-வது 4-வது சுருதிகளில்,

(1) ஆத்மாவை ரதியாகவும் சரீரத்தை இரதமாகவும் புத்தியைச் சாரதியாகவும் மனதைக் கடிவாளமாகவும் அறி என்றும்,

(2) இந்திரியங்களைக் குதிரைகளென்றும், விஷயங்களை மார்க்கங்களாகவும், சரீரம், இந்திரியம், மனது இவைகளுடன்கூடின சைதன்னியத்தைப் போக்தாவாகவும் மனனசீலர்கள் சொல்லுகிறார்கள் என்றும்,

சொல்லியிருப்பதால்

இந்த சுருதிகள் ஆத்மா சரீரம் முதலியவைகளை ரதி ரதம் முதலிய ரூபமாக வர்ணிக்கின்றன.

(ரா சாரதி) விவேகியானால் குதிரைகளை கெட்ட மார்க்கத்தில் போகாமற் செய்வான். அவிவேகியானால் அவைகள் போகும்படி செய்கிறான். ஆகையால் மனது கடிவாளமாக சொல்லப்பட்டது. கேவலாத்மா அசங்கனானதால் இந்திரியாதிகளுடன்கூடின ஆத்மா போக்தா என்று சொல்லப்பட்டது.

அடக்கப்படாத இந்திரியம் முதலியவைகளால் சம்சாரத்தை அடைகிறான். அடக்கப்பட்டவைகளால் மார்க்கத்தின் கரையை அதாவது முடிவை அதாவது விஷ்ணுவின் பரமபதத்தை அடைகிறான் என்று 8-வது 9-வது 10-வது சுருதிகளில் கூறி, விஷ்ணுவின் பரமபதமாக எந்த மார்க்கத்தின் முடிவு சொல்லப்பட்டதோ அது எது என்று கேட்குமளவில்,

इन्द्रियेभ्यः परा ह्यर्था अर्थेभ्यश्च परं मनः
मनसस्तु परा बुद्धिर्बुद्धेरात्मा महान् परः ॥
महतः परमव्यक्तमव्यक्तात्पुरुषः परः
पुरुषान्न परं किञ्चित् सा काष्ठा सा परा गतिः ॥

என்று சொல்லப்பட்டது.

அதாவது:—எவன் இந்திரியங்களை வசப்படுத்த வேண்டுமென்று இச்சிக்கிறானோ அவன் விஷயங்களை முதலில் வசப்படுத்தவேண்டியது. அவைகளை சமீபத்தில் வைத்துக்கொள்ளாமையே அவைகளை வசப்படுத்தலாம்.

விஷயங்களை அப்புறப்படுத்தினாலும் மனதானது அவைகளில் பிரவேசிக்கக்கூடும். அப்போது இந்திரியங்கள் மறுபடியும் கலக்கமடையும். ஆகையால் மனதினால்கூட அவைகளை நினைக்கக்கூடாது.

விஷயங்களில் நிச்சயபுத்தி இருக்கும்வரையில் மனது விஷயங்களை நினைக்காமல் இருக்கமாட்டாதாகையால் இந்த நிச்சயபுத்தியை பரித்தியாகம் செய்ய வேண்டியது இப்படி ஒவ்வொன்றின் பரத்துவம் கூறப்பட்டது.

விஷயத்தில் நிச்சயபுத்தியின் பரித்தியாகம் பரமேசுவரனிடத்தில் நிச்சயபுத்தியன்றியில் சித்திக்கமாட்டாது. சரீரம் சுவாதீனமாயிராதவரையில் ஈசுவரனுடைய ஆராதனையும் சித்திக்கமாட்டாது. ஆகவே சரீரசுவாதீனத்தின்பேரில் ஈசுவராராதனை ஏற்படுகிறபடியால் சரீரத்தைவிட ஈசுவரன் பரம். இந்த சுருதியானது இந்திரியம் முதலியவைகளைவிட பரமானது பரமாத்மாதான் என்று காட்டுகிறது.

சரீரத்தை இரதமாக வர்ணித்த முந்தின சுருதியில் எந்த இந்திரியாதிகள் குதிரைகள் முதலானவர்களாகக் கூறப்பட்டனவோ அவைகளே இந்தப் பின்னசுருதியிலும் கிருகிக்கத்தக்கவை இல்லாவிடின் பிரகிருதஹானியும் அப்பிரகிருதகிரஹணமும் சம்பவிக்கும். இதைப் பரிஹரிக்கும்பொருட்டு அவைகளையே கிரகிக்கவேண்டியது. இந்திரியம், மனது, புத்தி இம்மூன்று பதங்களும் இரண்டு இடங்களிலும் சமமாயிருக்கின்றன.

அர்த்தா: என்பவைகள் இந்திரியங்களாகிற குதிரைகளுக்கு விஷயங்களாகக் கூறிய விஷயங்கள். இந்திரியங்களைவிட விஷயங்கள் சிரேஷ்டம் என்று பிரஹதாரணியக (III-2) சுருதியால் தெரியவருகிறது.

(ரா) அவ்விடத்தில் இந்திரியங்களை கிரகங்களாகவும் விஷயங்களை அதிக்கிரஹங்களாயும் சொல்லியிருக்கிறது. இந்திரியம் மூலமாக புருஷன் விஷயத்துக்கு சுவாதீனப்பட்டுப்போவதால் இந்திரியம் ग्रह அதாவது கட்டும்கயிறுபோலிருக்கிறது. விஷயமிராதவரையில் புருஷனை கட்டமாட்டாதாகையால் இந்திரி

யத்தைவிட விஷயம் சிரேஷ்டம். கிரஹத்தைவிட சிரேஷ்டமாகையால் அதிகிரஹ என்ற பெயர் விஷயத்துக்கு சித்தித்தது.

விஷயங்களைவிட மனது சிரேஷ்டம்: ஏனெனின் விஷய இந்திரியவியவஹாரம் மனதை முன்னிட்டுக்கொண்டே ஏற்படுகிறது. மனதைவிட புத்தி சிரேஷ்டம். ஏனெனின் போக்தாவுக்கு விஷயத்தில் நிச்சயஞானம் ஏற்பட்டதின்பேரில் அவன் அதைக் கிரகிக்கிறான்.

புத்தியைவிட பரமாக எந்தமஹான் ஆத்மா கூறப்பட்டிருக்கிறதோ அது आत्मनं रथिनं என்கிற முந்தின வாக்கியத்தில் கூறப்பட்ட ஆத்மாவே ஏனெனின், இரண்டு இடங்களிலும் ஆத்மசப்தம் பிரயோகிக்கப்பட்டிருக்கிறது. போகசாதகமான புத்தியைவிட போக்தா சிரேஷ்டன் ஆத்மா எஜமானனாகையால் மஹான் என்றும் சொல்லக்கூடும்.

ஆ (அப்படியானால் ஆத்மாவைவிட அவ்வியக்தம் பரம் என்று சொல்லவேண்டியதே தவிர மஹத்தைவிட பரம் சொல்லக்கூடாதே எனின், மஹத்பதத்துக்கு வேறு அர்த்தம் சொல்லுகிறார்.)

அல்லது:—

मनो महान् मतिः ब्रह्मा पूर्बुद्धिः ख्यातिरीश्वरः प्रज्ञ संविच्चितिश्चैव स्मृतिश्च परि पठ्यते

என்கிற சுருதியில் ஹிரணிய கர்ப்பருடைய புத்திக்கு, மஹத்தானமனது என்றும், மதி என்றும், பிரம்மாவென்றும், கோட்டை என்றும், புத்தி என்றும், கியாதி என்றும், ஈசுவரன் என்றும், பிரஞ்ஞை என்றும், ஸம்வித் என்றும், விதி என்றும், ஸ்மிருதி என்றும் சொல்லியிருப்பதாலும்,

यो ब्रह्माणं विदधाति पूर्वं यो वै वेदांश्च प्रहिणोति तस्मै

என்கிற சுவேதாசுவதர VI. 18-வது சுருதியில் அவர் (ஹிரணியகர்பர்) முதலில் பிரம்மாவை சிருஷ்டித்து வேதங்களை அவரிடம் ஒப்புவித்தார் என்று சொல்லியிருப்பதாலும்,

महान् आत्मा என்பதினால் சகல புத்திகளுக்கும் இருப்பிடமாகிய, முதலிலுண்டானவரான ஹிரணிய கர்ப்பருடைய புத்தியை அறியலாம்.

இந்த ஹிரணியகர்ப்ப புத்தி முன் வாக்கியத்தில் புத்தியைச் சொன்னதினாலேயே சொன்னதாக ஆகி, இவ்விடத்தில் அந்த ஹிரணியகர்ப்பபுத்தி நம்முடைய புத்திகளைவிட சிரேஷ்டமானதினால் தனிமையாக கூறப்பட்டிருக்கிறது. இந்த பக்ஷத்தில், வாஸ்தவத்தில் பரமாத்மாவுக்கும் விஞ்ஞானத்மாவான ஜீவனுக்கும் வித்தியாசமில்லாதபடியால் முதலில் கூறியஇரதிகனை ஆத்மாவை பரபுருஷனாகிற பரமாத்மாவாகவே அறியலாம். ஆகவே சரீரம் மட்டும் முதலிலும் அவ்வியக்தம் இரண்டாவதிலும் மிச்சப்படுகின்றது. इन्द्रियेभ्यः परा என்கிற சுருதியானது பரமபதத்தைக்காட்டும்பொருட்டு இந்திரியம் முதலியவைகளைக் கூறி முன் आत्मनं रथिनं என்கிற சுருதியில் கூறிய இந்திரியாதிகளே இவைகள் என்று நிரூபித்து, மிச்சமாயிருக்கிற அவ்வியக்தம் என்கிற ஒரு பதத்தால் முந்தின வாக்கியத்தில் மிச்சமாயிருக்கிற பிரகிருத சரீரத்தை குறிப்பிடுகிறது என்று தெரியவருகிறது. சரீரம், இந்திரியம், மனது, புத்தி, விஷயம், விஷயஞானம் இவைகளுடன் கூடிய அஞ்ஞானியான போக்தாவினுடைய சரீராதிகளை இரதம் முதலிய ரூபமாக வர்ணித்து அவைகளுக்குச் சம்சார பிராப்தியையும், மோக்ஷத்தையும் கூறுவதினால், ஜீவப்பிரம்ம ஐக்கிய ஞானத்தை சுருதி கொடுக்கிறது. அப்படியே (அதாவது அந்த சுருதியை அனுசரித்து)

एष सर्वेषु भूतेषु गूढोत्मा न प्रकाशते दृश्यते त्वग्र्यया बुद्ध्या सूक्ष्मया सूक्ष्मदर्शिभिः ॥

அதாவது சகல பூதங்களுக்குள்ளும் மறைபட்டவனாக இந்த ஆத்மா பிரகாசிக்கிறதில்லை. ஆனால் சூட்சும திருஷ்டியுள்ளவர்களால் சூட்சுமமாயும் ஏகாக்கிரமாயுமிருக்கிற புத்தியால் பார்க்கப்படுகிறான்.

என்கிற கடவல்லியின் I-3-12-வது சுருதியானது விஷ்ணுவின் பரமபதமானது வருத்தத்தின் பேரில் அறியத்தக்கது என்று சொல்லி, அதை அறியும் பொருட்டு

यच्छेद्वाङ्मनसी प्राज्ञस्तद्यच्छेज्ज्ञान आत्मनि । ज्ञानमात्मनि महति नियच्छेत्तद्यच्छेच्छान्त आत्मनि

அதாவது:—பிராஞ்ஞன் வாக்கை மனதில் அடக்கவேண்டியது; மனதைபுத்தியில் அடக்கவேண்டியது; புத்தியை மஹானாத்மாவில் அடக்கவேண்டியது; இதைச் சாந்த ஆத்மாவில் அடக்கவேண்டியது.

என்கிற கடவல்லி I-3-13-வது சுருதியானது போகமார்க்கத்தை காட்டுகிறது.

இந்த சுருதியின் கருத்து யாதெனின் :-வாக்கை மனதில் அடக்கவேண்டியது. வாக்கு முதலிய பாஹிய

இந்திரியங்களின் வியாபாரத்தைவிட்டு மனதிலேயே ஞானி இருக்கவேண்டியது. விஷயத்தை நோக்கும் மனதை விஷயத்தில் தோஷத்தைப் பார்ப்பதினால், நிச்சயாத்மகமாயும் ஞானசப்தத்தால் கூறப்பட்டுமிருக்கிற புத்தியில் அடக்கவேண்டியது. அந்தப் புத்தியை மஹாத்மா அதாவது போக்தா அல்லது சூட்சுமமான புத்தியில் அடக்கவேண்டியது. இந்த மஹாத்மாவை சாந்த ஆத்மாவில் அதாவது பரமாத்மாவில் பிரகிருத பரமபதத்தில் வைக்கவேண்டியது. இப்படி முன் பின் பரியாலோசனை செய்து பார்க்குமளவில் சாங்கியர்களால் கற்பிக்கப்பட்ட பிரதானத்துக்கு இடமில்லை என்று தெரியவருகிறது. (20)

XIII. I-4-1-ல் 2 (2)வது சூத்திரம்.

# सूक्ष्मं तु तदर्हत्वात् ।२। (21)

2. முந்தின சூத்திரத்துக்கும் இதற்கும் சம்பந்தம்:—முன் சூத்திரத்தில் அவ்வியக்தம் சரீரம் என்று நிரூபிக்கப்பட்டது. இந்த மந்திரத்தில் அப்படி சொன்னது சரியே என்று நிரூபிக்கிறார். (22)

3. பதவுரை:—

तु ஆனால்

सूक्ष्मं (அந்த சரீரம்) சூட்சுமம்.

तदर्हत्वात् அதினால் கூறத்தகுந்ததா யிருப்பதினால் (23)

4. பொழிப்புரை:—

ஆனால், அது சூட்சுமம், ஆகையால் அது அவியக்த சப்தத்தால் கூறப்படலாம். (24)

5. பாஷ்யம்:—

1. பிரகரணத்தாலும், சரீரம் மிச்சப்படுகிறபடியாலும் அவ்வியக்த சப்தமானது சரீரத்தைக் கூறுகிறது, பிரதானத்தைக் கூறவில்லை என்று முன் சூத்திரத்தில் சொல்லப்பட்டது. இது இப்போது ஆக்ஷேபிக்கப்படுகிறது. சரீரம் எப்படி அவ்வியக்த சப்தத்தால் கூறப்படலாம், ஸ்தூலமாக இருப்பதால் நிரம்பஸ்பஷ்டமாயிருக்கிற சரீரம் வியக்த சப்தத்தால் கூறப்படலாம். அவியக்தசப்தம் ஸ்பஷ்டமாயிராததைத் தான் கூறும். ஆகவே எப்படி அவ்வியக்த சப்தம்சரீரத்தைக் கூறக்கூடும். ஆகையால் இதற்கு உத்தரம் கூறப்படுகிறது. (25)

2. सूक्ष्मं तु இந்த சூத்திரத்தில் சூட்சுமமான காரணசரீரம் கூறப்படுகிறது. சூட்சுமமானது அவ்வியக்த சப்தத்தால் கூறப்படலாம். ஸ்தூலமான இந்த சரீரம் அவ்வியக்த சப்தத்தால் கூறப்படாவிட்டாலும் இதற்குக் காரணமான சூட்சுமபூதங்களை அவ்வியக்த சப்தத்தால் கூறலாம்.

௩. (காரியத்துக்கும் காரணத்துக்கும் பேதமிராதபடியால் மூலப்பிரகிருதியைக் கூறும் அவ்வியக்த சப்தத்தால் அதின் விகாரங்களைக்கூறலாம் என்பது கருத்து காரணத்தைக்கூறும் சப்தம் காரியத்தையும் கூறுவதாகவும். श्रीणीतमत्सरे அதாவது சோமத்தை மாடுகளுடன் (அதாவது மாட்டின் பாலுடன்) கலந்துவிடு என்கிற ரிக்வேத சம்ஹிதை XI-46-4-வது சுருதியில் கண்டிருக்கிறோம்.

तद्धेदं तर्ह्यव्याकृतमासीत्

(அப்போது இதெல்லாம் அவ்வியாகிருதம், விகாரமற்றதாக இருந்தது) என்கிற பிரஹதாரணியம் I-4-7-வது சுருதியானது

நாமரூபங்களால் பேதமடைந்த இந்த ஜகத்தானது முந்தின அவஸ்தையில் அதாவது பிரளயத்தில் பிரிபட்ட நாமரூபங்களை விட்டு விட்டு, சம்ஸ்காரரூபமாக இருந்து, அவ்வியக்தமாக இருந்தது. அவ்வியக்த சப்தத்தால் கூறக்கூடியதாக இருக்கிறதென்று காட்டுகிறது.

(ஆகையால் அவ்வியக்த பதம் சரீரத்தைக்கூறும் பிரதானத்தைக் கூறமாட்டாது.) (26)

XIV. I-4-1-ல் 3 (3) வது சூத்திரம்.

# तदधीनत्वादर्थवत् ३ । (27)

2. முந்தின சூத்திரத்துக்கும் இதற்கும் சம்பந்தம்:—முந்தின சூத்திரத்தில் பிரளயகாலத்திலுள்ள ஜகத்தின் சூட்சுமாவஸ்தையே அவ்வியக்தமென்று சொல்லப்பட்டது. இதின் பேரில் ஒரு ஆக்ஷேபம் வர இதில் சமாதானம் கூறப்பட்டது. (28)

3. பதவுரை:—

तदधीनत्वात् ஈசுவராதீனமாயிருப்பதால்

अर्थवत् பிரயோஜனத்துடன் கூடினது. (29)

4. பொழிப்புரை:—

ஜகத்தின் சூட்சுமாவஸ்தை ஈசுவராதீனமானதால் அதை ஒப்புக்கொள்ளலாம். அப்படி ஒப்பு

கொள்ளுவதே பிரயோசனத்தைக் கொடுக்கக்கூடிய தாக இருக்கிறது. (30)

4. பாஷ்யம்:—

இவ்விடத்தில் பூர்வபக்ஷி ஒரு ஆக்ஷேபம் செய்கிறான். பிரளயகாலத்தில் வியக்தமான நாமரூபங்களின்றியிலும், பீஜஸ்வரூபமாயும் இருக்கிற ஜகத்தானது அவ்வியக்த சப்தத்தால் கூறப்பட்டு, காரணரூபத்தால் சரீரமும் அவ்வியக்த சப்தத்தால் கூறப்படும் என்றும் சொல்லும்பக்ஷத்தில், பிரதானகாரணவாதமே ஒப்புக்கொண்டதாக ஆய்விட்டது. ஏனெனின், இந்த ஜகத்தின் பிரளயாவஸ்தையையே பிரதானம் என்று நாம் (சாங்கியர்கள்) அறிகிறோம். சித்தாந்தியின் உத்தரம்:—

ஜ (ஜகத்தின் பிரளயாவஸ்தையை நாம் ஒப்புக்கொள்ளுகிறோம். சாங்கியர்களும் ஒப்புக்கொள்ளுகிறார்கள். ஆகையால் அவ்விஷயத்தில் வித்தியாசம் இல்லை.) ஸ்வதந்திரமான ஒரு முந்தின அவஸ்தையை ஜகத்துக்குக்காரணமாக நாம் ஒப்புக்கொள்ளும் பக்ஷத்தில், அப்போது பிரதானகாரணவாதம் பொருந்தும். ஜகத்தின் இந்த முந்தின அவஸ்தை பரமேசுவராதீனம் என்றும் ஸ்வதந்திரமல்லவென்றும் நாம் அறிகிறோம். அப்படி ஸ்வதந்திரமாயிராத அவஸ்தையையே அவசியம் ஒப்புக்கொள்ளவேண்டும். அந்த அவஸ்தை பிரயோஜனமுள்ளதாக இருக்கிறது. அதன்றியில் பரமேசுவரனுக்கு சிருஷ்டிக்கும்தன்மை சித்திக்கமாட்டாது. ஏனெனின் மேற்சொன்ன அவஸ்தையாகிய சக்தியற்ற அவருக்கு பிரவிர்த்தி உண்டாகமாட்டாது. மேலும் முக்தர்களுக்கு புனருத்பத்தி உண்டாகமாட்டாது. ஏனெனின் வித்தையால் அந்த காரணசக்தி தஹித்துப்போகிறது. அந்தகாரணசக்தி அவித்தியாஸ்வரூபம், அவ்வியக்த சப்தத்தால் கூறத்தக்கது; பரமேசுவரனை ஆசிரயித்திருக்கிறது; மாயாஸ்வரூபம்; சம்சாரிகளான ஜீவர்கள் தங்களுடைய ஸ்வரூபஞானமன்றியில் எதில் தூங்குகிறார்களோ அப்படிப்பட்ட மஹாசுஷுப்தி, இந்த அவ்வியக்தம்

एतस्मिन्नु खल्वक्षरे गार्ग्याकाश ओतश्च प्रोतश्च ।

என்கிற பிரஹதாரணியக III-8-11-வது சுருதியில்“ ஓ! கார்க்கியரே, இந்த அக்ஷரத்தில் (நாசமடையாததில்) ஆகாசமானது உண்டையும் பாகும்போல் கோர்க்கப்பட்டிருக்கிறது.” என்று சொல்லியதுபோல் சில இடங்களில் ஆகாசசப்தத்தால் கூறப்படுகிறது. (ஆகாசத்துக்கு ஹேதுவானதால் ஆகாசம் என்று கூறப்படுகிறது.)

अक्षरात् परतः परः

என்கிற முண்டகோபநிஷத்து II-1-2-ல் பரமான அக்ஷரத்தைவிட பரம் என்று சொல்லியிருப்பதுபோல் சில இடங்களில் அக்ஷரசப்தத்தால் கூறப்படுகிறது. (ர ஞானமன்றியில் நாசமாகாததால் அக்ஷரம் எனப்படுகிறது.)

मायां तु प्रकृतिं विद्यात् मायिनं तु महेश्वरं

என்கிற சுவேதாசுவதம் IV-10 ல் பிரகிருதியை மாயை என்றும் ஈசுவரனை மாயையுடையவன் என்றும் சொல்லியபடி சில இடங்களில் மாயை என்று சூசிப்பிக்கப்படுகிறது. (ர விசித்திரகாரியங்களைச்செய்வதால் மாயை எனப்படுகிறது.) இந்த மாயையானது இருக்கிறதென்றாவது இல்லை என்றாவது நிரூபிக்கமுடியாதபடியால் அது அவ்வியக்தமே.

(ர இந்த அவ்வியக்தம் மஹத்தைவிட பரம் என்பதை இனி நிரூபிக்கிறார்.)

மஹத்சப்தத்துக்கு அர்த்தம் ஹிரணியகர்ப்பனுடைய புத்தி என்று சொல்லும்போது மஹத்தானது அவ்வியக்தத்தினின்றும் உண்டானதினால் மஹத்தைக்காட்டிலும் அவ்வியக்தம் பரம் என்று சொல்லப்பட்டது.

ர மஹத்சப்தத்துக்கு ஜீவன் என்று அர்த்தம் செய்யும்போதும், ஜீவன் அவித்தையாகிற உபாதியில் காணப்படும் பிரதிபிம்பமானபடியாலும், அவித்தையே அவ்வியக்தமாகையாலும், பரதந்திரமான பிரதிபிம்பத்தைவிட ஸ்வதந்திரமான உபாதி பரமானதாலும் மஹத்தைவிட அவ்வியக்தம் பரம் என்று சொல்லப்பட்டது. அவித்தையே அவ்வியக்தம். ஜீவன் அவித்தையுடன் கூடியிருப்பதால்தான் அவனுக்கு ஜீவத்வம்முதலிய சகலவியவஹாரமும் ஏற்படுகிறது. அவ்வியக்தத்தை அடைந்திருக்கிற மஹத்தைவிட பரம் என்னும் தன்மையானது, அவ்வியக்தத்தின் விகாரமாகிய சரீரத்திலும் ஔபசாரிகமாகக் கற்பிக்கப்படுகிறது. சரீரம்போல் இந்திரியம் முதலியவைகளும் அவ்வியக்தத்தின் விகாரங்களானதால் இவைகளுக்குள் வித்தியாசமிராவிடினும் சரீரத்தையே அவ்வியக்த சப்தத்தால் ஔபசாரிகமாகக் கிரகிக்கவேண்டியது. ஏனெனின், இந்திரியங்கள் முதலியவை தங்களைக்கூறும் சப்தங்களாலேயே குறிப்பிடப்பட்டிருக்கின்றன. சரீரம் மட்டும் குறிப்பிடப்படாமல் மிச்சப்பட்டிருக்கிறது.

ஆகையால் அவ்வியக்தம் சரீரத்தையே கூறுகிறது என்பது சித்தம். (31)

12. (ரா இப்படி தன்மதப்படி வியாக்கியானம் செய்து பிறர் வியாக்கியானம் செய்வதை இனி விவரிக்கிறார்.)

சிலர் சொல்லுகிறதாவது:-சரீரம் ஸ்தூலம் சூட்சுமம் என இருவகைத்து. நாம் அறிவதே ஸ்தூலசரீரம். சூட்சுமசரீரம்,

तदन्तरप्रतिपत्तौ रंहति संपरिष्वक्तः प्रश्ननिरूपणाभ्यां

என்கிற III-1-1-வது சூத்திரத்தில் கூறப்படும். இந்த இரண்டும் சரீரமாக இருப்பதால் முன் இரதம் என்று கூறப்பட்டது. இவ்விடத்திலோ சூட்சுமம் மட்டும் அவ்வியக்த சப்தத்தால் கிரகிக்கப்படுகிறது. ஏனெனின் சூட்சுமம் அவ்வியக்த சப்தத்தால் கூறப்படலாம். ஜீவனுடைய பந்தமோக்ஷங்களும் சூட்சும சரீரத்தைப் பொருத்திருக்கின்றன. இந்திரியங்களின் வியாபாரம் விஷயங்களைப் பொருத்திருப்பதால், இந்திரியங்களைவிட விஷயங்கள் பரம் என்றுசொன்னதுபோல் ஜீவனைவிட சூட்சுமம் பரம் (இவர்களைப் பார்த்து சித்தாந்தி கேட்கிறதாவது) முன் இரண்டு சரீரங்களும் ஒருவித் தியாசமன்றியில் இரதம் என்று சொல்லியிருப்பதாலும், இரண்டுவாக்கியங்களும் சமானமாயிருப்பதாலும், இந்த இரண்டாவது வாக்கியத்தில் ஏன் சூட்சுமசரீரம்தான் கிரகிக்கப்பட்டிருக்கிறது ஸ்தூலசரீரமும் கிரகிக்கப்படவில்லை என்பதை இவர்கள் சொல்லவேண்டியது.

பூர்வபக்ஷி:- சொன்ன அர்த்தத்தை கிரகிக்கத்தான் நம்மால் முடியும். ஏன் அர்த்தம் இப்படி சொல்லப்பட்டது என்று நாம் கேட்கமுடியாது. அவ்வியக்த பதம் சூட்சுமத்தையே கூறமுடியும். ஸ்தூலம் வியக்தமாக இருப்பதால் அதைக் கூறமாட்டாது.

சித்தாந்தி :—

நீ சொல்லுவது சரியன்று. பிரகரணத்தின் தாற்பரியம் வாக்கியங்கள் ஏகமாயிருந்தால் தான் ஏற்படும். முன்பின் வாக்கியங்கள் ஏகவாக்கியமாகாமல் யாதொரு கருத்தையும் கொடுக்கமாட்டா. அப்படிக் கொடுத்தால் பிரகிருதத்தை விட்டு விட்டு அப்பிரகிருதத்தை ஸ்வீகரிக்கிறதாயிருக்கும். ஒன்றையொன்று அபேக்ஷிக்காமல் ஏகவாக்கியத்தன்மை ஏற்படமாட்டாது. முந்தின வாக்கியத்திலுள்ள சரீரபதம்இரண்டு சரீரங்களையும் கூறி முந்தின வாக்கியம் பிந்தின வாக்கியத்தின் சம்பந்தத்தைப், பிரகரணம் ஒரு தாற்பரியத்தைக் கொடுக்கும் பொருட்டு, அபேக்ஷிக்கிறது. அப்படியிருக்க இந்த சம்பந்தத்தை நீ ஒப்புக்கொள்ளாத பக்ஷத்தில் ஏகவாக்கியம் கெட்டுப்போய்விடுவதுமன்றியில் உத்தேசிக்கப்பட்ட அர்த்தமும் கிடைக்காமல் போய்விடும். ரா ஸ்தூலசரீரம் உள்ளிப்பூண்டுமுதலிய பதார்த்தம்போல் பார்க்கக்கூடியதாயும் வெறுப்புக் கொடுக்கக்கூடியதாயுமிருப்பதால் அதில் வைராக்கியம் வரக்கூடும், அது ஆத்மாவன்று என்றும் தெரிந்து கொள்ளக்கூடும். சூட்சுமசரீரம் ஸ்தூலசரீரம் போலிராதபடியால் அது அநாத்மா என்கிற நிச்சயம் சுலபமாய் ஏற்படமாட்டாதாகையால் அந்த சூட்சுமசரீரத்தையே இவ்விடத்தில் கிரகிக்கவேண்டியது என்று சொல்லக்கூடாது. ஏனெனின் இவ்விடத்தில் எதினுடைய சோதனமும் சொல்லக்கூறவில்லை. சோதிக்கவேண்டும் என்பதைக் காட்டக்கூடிய வினைச்சொல்லுமில்லை. ஆனாலோ முன் तद्विष्णोः परमं पदं என்பது என்னவென்பது இவ்விடத்தில் கூறப்படுகிறது. இது இதைவிட பரம், இது இதைவிட பரம் என்று சொல்லி, புருஷனைவிட பரம் யாதொன்றுமில்லை என்று சொல்லியிருக்கிறது. ஆகவே வைஷ்ணவபதத்தைக்காட்டும் பொருட்டு பிரகிருத அவ்வியக்தபதத்தால் ஸ்தூலசரீரத்தையே கிரகிக்கவேண்டும். இந்திரியாதிகளைச் சொன்னதினால் சூட்சுமம் சொல்லியாய்விட்டது போலவே. ஆகையால் சரீரபதத்தினாலும் கிரகிக்கக்கூடாது. அவ்வியக்த பதத்தினாலும் கிரகிக்கக்கூடாது.

ஸ்தூலசூட்சுமங்களில் எதையாவது ஒன்றை கிரகிக்கவேண்டியது. சூட்சுமத்தை கிரகித்தாலும், பிரதானத்தை நிராகரிப்பதில் காரணமிருப்பதால் நாம் சொன்னதற்கு யாதொரு குறையுமில்லை. (32)

XV. I-4-1-ல் 4 (4) வதுசூத்திரம்.

## ज्ञेयत्वावचनाच्च । ४ (33)

2. முந்தின சூத்திரத்துக்கும் இதற்கும் சம்பந்தம்:—அவ்வியக்தபதம் பிரதானத்தைக் கூறமாட்டாதென்பதற்கு இன்னும் ஒரு காரணத்தைச் சொல்லுகிறார். (34)

3. பதவுரை:—

ज्ञेयत्वावचनाच्च அறியத்தக்கதென்று சொல்லப்படாததினாலேயும் (35)

4. பொழிப்புரை:—

அவ்வியக்தமானது அறியத்தக்கது என்றுசொல்லியிராததினாலும், அவ்வியக்தம் பிரதானத்தைக் கூறமாட்டாது. (36)

5. பாஷ்யம்:—

சத்வமுதலிய குணஸ்வரூபமான பிரதானத்தை விட புருஷன் வேறு என்று அறிவதினால் மோக்ஷம் சித்திக்கிறதென்று சொல்லுகிற சாங்கியர்கள் பிரதானத்தை ஞேயமாக அறிகிறார்கள். குணங்களின் ஸ்வரூபத்தை அறியாமல் குணங்களுக்கும் புருஷனுக்குமுள்ள பேதத்தை அறியமுடியாது.

(ஆ ஆகையால் மூன்றுகுணங்களின் சாம்யாவஸ்தையாகிய பிரதானம் ஞேயம்.)

(ஆ புருஷனைவிட வேறு என்கிற காரணத்தால் தான் பிரதானம் ஞேயம், ஸ்வதந்திரமாக ஞேய மன்று என்று சொல்லக்கூடாது. ஏனெனின்) சில இடங்களில், பிரதானத்தை உபாசிப்பதினால் அணிமாதி விபூதிகள் சித்திக்கின்றனவென்று சொல்லியிருப்பதால், இவைகளை அடையும்பொருட்டும் பிரதானம் ஞேயம் என்று சொல்லியிருக்கிறது.

(ஆ அப்படியே இவ்விடத்திலும் அவ்வியக்தமும் அறியத்தக்கதென்பதைக் கூறுகிறது என்று சொல்லும்பக்ஷத்தில்)

இந்த அவ்வியக்தம் இவ்விடத்தில் ஞேயமாக சொல்லப்படவில்லை. அவ்வியக்தம் என்று பதம் மட்டுமிருக்கிறது. அவ்வியக்தம் அறியத்தக்கதென்றாவது உபாசிக்கத்தக்கதென்றாவது வசனம் ஏற்படவில்லை.

(ரா அவ்வியக்தம் ஞேயம் என்கிற விதிவாக்கியம் இல்லாவிட்டாலும் அவ்வியக்த பதப்பிரயோகத்தால் அது அறியதத்க்கது என்று ஏற்படுகிறதே எனின்)

(ரா எந்தஞானம் உபதேசிக்கப்பட்டிருக்கிறதோ அது பலத்தைக்கொடுக்குமென்று அறியமுடியும். நிஷ்பலமான ஞானம் உபதேசிக்கப்படமாட்டாது. அவ்வியக்தத்தின் ஞானம் உபதேசிக்கப்படவில்லை.) உபதேசிக்கப்படாத பதார்த்தத்தின் ஞானம் புருஷனுக்கு பலனைக்கொடுக்கும் என்று அறியமுடியாது. இக்காரணத்தாலும் அவ்வியக்தசப்தம் பிரதானத்தைக் கூறமாட்டாது.

(ரா சரீரமும் அறியத்தக்கது என்று சொல்லப்படவில்லையே எனின்) எங்களுடைய பக்ஷத்தில், சரீரம் இரதமென்பதாக வர்ணிக்கிற கற்பனையை அனுசரித்து, விஷ்ணுவின் பரமபதத்தைக்காட்டும்பொருட்டு பிந்தின சுருதி ஏற்பட்டபடியால் நம்முடைய அர்த்தத்தில் தோஷமில்லை

(ரா நம்முடையமதத்தில் வைஷ்ணவபதத்தையே அறியவேண்டியது. அது ஒன்றே ஞேயம். அதை காண்பிக்கும்பொருட்டு அவ்வியக்தபதம் சரீரத்தைக்கூறும் என்று சொன்னது யுக்தமே.) (37)

I-4-1ல் (5)வது சூத்திரம்.

## वदतीति चेन्न प्राज्ञोहि प्रकरणात् (38)

ஆ 2. முந்தின சூத்திரத்துக்கும் இதற்கும் சம்பந்தம்:— முந்தின சூத்திரத்தில் அவ்வியக்தம் ஞேயமென்று சொல்லப்படாததனாலும் அது பிரதானத்தைக் கூறமாட்டாது என்று சொன்னதை சாங்கியன் ஆக்ஷேபிக்க இதில் உத்தரம் கூறப்படுகின்றது. (39)

3. பதஉரை:—

वदति इति चेत् சொல்லுகிறதென்று சொன்னால்

न அப்படியல்ல

हि ஏனெனின்

प्रकरणात् பிரகரணத்தினின்றும்

प्राज्ञः பிராஞ்ஞன் (தெரியவருகிறான்) (40)

4. பொழிப்புரை:—

மஹத: பரம் த்ருவம் என்கிறமேல் வாக்கியம் அவ்விபக்தம் ஞேயம் என்று சொல்லுகிறதே என்று சொன்னால், அது சரியன்று. ஏனெனின் பிரகரணத்தில் பிராஞ்ஞன் தான் கூறப்பட்டிருக்கிறான். (41)

5. பாஷ்யம்:—

1. वदतीति चेत् சாங்கியன் இப்போது சொல்லுகிறான்:—அவ்வியக்தம் ஞேயம் என்று சொல்லப்படவில்லை என்று சொல்லக்கூடாது.

ஏனெனின்,

अशब्दमस्पर्शमरूपमव्यं
तथारसं नित्यमगन्धवच्च यत् ।
अनाद्यनन्तं महतः परं ध्रुवं
निचाय्य तं मृत्युमुखात् प्रमुच्यते

என்கிற (1-3-15)மேல் வாக்கியத்தில்

ஏது சப்தமன்றியிலும், ஸ்பரிசமன்றியிலும், ரூபமன்றியிலும், நாசமன்றியிலும், இரசமன்றியிலும், நித்தியமாயும், கந்தமன்றியிலும், ஆதியந்தமன்றியிலும், மஹத்துக்கு மேற்பட்டதாயும், மாறுதலன்றியிலும் இருக்கிறதோ, அஃதை அறிந்து மிருத்யுமுகத்தினின்றும் விடுபடுகிறான்.

என்று சொல்லியிருப்பதால் இந்த வாக்கியத்தில் அவ்வியக்த சப்தத்தால் கூறப்பட்ட பிரதானம் ஞேயம் என்று சொன்னதாக தெரியவருகிறது. சாங்கிய ஸ்மிருதியில் எப்படிப்பட்ட பிரதானம் சப்தாதிகளற்றதாயும் மஹத்தைவிட பரமாயும் சொல்லப்பட்டிருக்கிறதோ, அப்படிப்பட்டதே அறியத்தக்கதாக இவ்விடத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. ஆகையால் இது பிரதானம்தான். இது அவ்வியக்த பதத்தால் கூறப்பட்டிருக்கிறது. (42)

இப்படி பூர்வபக்ஷி சொல்லுவதற்கு நாம்சொல்லுகிறதாவது :—

2. प्राज्ञोहि இவ்விடத்தில் அறியத்தக்கதாக பிரதானம் சொல்லப்படவில்லை. பரமாத்மா இவ்விடத்தில் அறியத்தக்கதாக சொல்லியிருக்கிறதென்று தெரியவருகிறது.

ஏனெனின், (43)

3. प्रकरणात् பிராஞ்ஞனைப்பற்றி நெடுகிலும் விஸ்தாரமாக சொல்லியிருக்கிறது. எப்படியெனின்,

(1) पुरुषान्न परं किंचित् सा काष्टा सा परा गतिः

என்கிற (I-3-11) சுருதியில் புருஷனுக்கு மேல் யாதொன்றுமில்லை புருஷனே எல்லை, பரமகதி என்று சொல்லியிருக்கிறது.

(2) एष सर्वेषु भूतेषु गूढोत्मा न प्रकाशते

என்கிற I 3-12வது சுருதியில் சகல பூதங்களிலும் மறைபட்ட இந்த ஆத்மா பிரகாசிக்கிறதில்லை என்றுசொல்லியிருப்பதால் அது கஷ்டத்தின்பேரில் அறியத்தக்கதென்று ஏற்படுகிறது.

(3) यच्छेद्वाङ् मनसी प्राज्ञः

என்கிற I-3-13வது சுருதியில் பிராஞ்ஞனவன் வாக்கை மனதில் அடக்கவேண்டியது என்பதினால் அதை அறியும் பொருட்டே வாக்குமுதலியவைகளை அடக்கவேண்டுமென்று விதித்திருக்கிறது.

(4) I-3-15ல் மிருத்யுமுகத்தினின்றும் விடுபடுதலாகிய பலமும் சொல்லப்பட்டிருக்கிறது.

(இப்படி பிராரணத்தில் பிராஞ்ஞனே தெரிய வருகிறான்).

பிரதானத்தைமட்டும் அறிந்து மிருத்யுமுகத்தினின்றும் விடுபடுகிறான் என்று சாங்கியர்கள் ஒப்புக்கொள்ளவில்லை. சேதனஸ்வரூப ஆத்மஞானத்தால் மிருத்யுமுகத்தினின்றும் விடுபடுகிறான் என்பது அவர்களுடைய கொள்கை. சகல வேதாந்தங்களிலும் பிராஞ்ஞனென்கிற ஆத்மாவுக்கே சப்தமற்றதன்மைமுதலிய தர்மங்கள் கூறப்பட்டிருக்கின்றன. ஆகையால் இவ்விடத்தில் பிரதானம் அறியத்தக்கதுமல்ல, அவ்வியக்த சப்தத்தால் கூறப்படவுமில்லை. (44)

I-4-1ல் (6)வது சூத்திரம்.

## त्रयाणामेव चैवमुपन्यासः प्रश्नश्च ॥ (45)

1. 2. முந்தின சூத்திரத்துக்கும் இதற்கும் சம்பந்தம் :— முந்தின சூத்திரத்தில் பிரதானத்தை அவ்வியக்தபதத்தால் அறியக்கூடாது என்று நிரூபிக்கப்பட்டது.

இதின்பேரில் ஒரு ஆக்ஷேபம் வரக்கூடும். அது யாதெனின் :— கடவல்லி உபநிஷத்தானது பரமாத்மபரமாக இருந்தாலும், எப்படி அக்கினிவித்தையானது அதில் நிரூபிக்கப்பட்டிருக்கிறதோ அப்படிப் பிரதானவித்தையும் நிரூபிக்கப் பட்டிருக்கிறது என்று अशब्दं முதலிய மந்திரத்தால் ஏன் சொல்லக்கூடாது. येयं प्रेते என்பதினால் ஆத்மாவைப்பற்றிநசிகேதசன் கேட்டபிறகும் अन्यत् श्रेयोऽन्यत् முதலியதால் ஜீவனுடைய பலத்தை வர்ணித்திருக்கிறது போல், பிரதானமும் வர்ணிக்கப்பட்டிருக்கிறதுஎன்று ஏன் சொல்லக்கூடாது.

இப்படி சந்தேகம் வர அதை நிவர்த்திக்கும் பொருட்டு இந்தசூத்திரத்தை ஏற்படுத்திருக்கிறார் (46)

3. பதஉரை :—

त्रयाणां एव மூன்று விஷயமாகவே

प्रश्नः பிரசினம்

एवं அப்படியே

उपन्यासः உத்தரம் (47)

4. பொழிப்புரை :—

பிரசினமும் உத்தரமும் மூன்று விஷயங்கள் விஷயமாகத்தான் ஏற்பட்டிருக்கிறது. (48)

5. பாஷ்யம் :—

1. அடியிற்கூறிய காரணத்தாலும் பிரதானம் அவ்வியக்த சப்தத்தால் கூறப்படவுமில்லை ; அறியப் படவுமில்லை. ஏனெனின் இந்த கடவல்லி கிரந்தத்தில் அக்கினி, ஜீவன், பரமாத்மாவாகிய மூன்று விஷயங்களைப்பற்றியே கேள்விகள் ஏற்பட்டிருக்கின்றன. இவைகளுக்கு யமன் உத்தரம் கொடுத்து, வரங்களைக் கொடுப்பதாகச் சொன்னதையும் நிறைவேற்றுகிறான். இவைகள் விஷயமாவே பிரச்னம் ஏற்பட்டிருக்கிறது. இவைகளைத் தவிர வேறு விஷயமாய் கேள்வியில்லை, உத்தரமுமில்லை.

அந்த பிரச்னங்கள் எவையெனின் :—

(1) सत्वमग्निं स्वर्ग्यमध्येषि मृत्यो
प्रब्रूहि तं श्रद्दधानाय मह्यं

அதாவது :—யமனே நீர் ஸ்வர்க்கப்ராப்திக்குச் சாதகமான அக்கினியை அறிவீர், சிரத்தையுடன் கூடின எனக்கு அதைச் சொல்லும் என்கிற I-1-13 வது சுருதியில் அக்கினிவிஷயமான கேள்வி ஏற்பட்டிருக்கிறது.

(2) येयं प्रेते विचिकित्सा मनुष्येऽ-
स्तीत्येके नायमस्तीति चैके ।
एतद्विद्यामनुशिष्टस्त्वयाहं
वराणामेष वरस्तृतीयः

அதாவது :—மனிதன் இறந்த பிறகு இருக்கிறான் என்று சிலரும் இல்லை என்று சிலரும் சொல்லுவதினால் சந்தேகமிருக்கிறது, உம்மால் சிக்ஷிக்கப்பட்டனாய் இதை அறிவேன் வரங்களுக்குள் இது மூன்றாவது வரம் என்பதாய் I-1-20வது சுருதியில் ஜீவ விஷயமான கேள்வி ஏற்பட்டிருக்கிறது.

(3) अन्यत्र धर्मादन्यत्राधर्मादन्यत्रास्मात्कृताकृतात् ।
अन्यत्र भूताच्च भव्याच्च यत् तत्पश्यसि तद्वद ॥

அதாவது :—தர்மம், அதர்மம், காரணம் காரியம், பூதபவிஷ்யத் வர்த்தமானங்கள் இவைகளைவிட வேறாக எதை பார்க்கிறீரோ அதைச் சொல்லும் என்கிற I-2-14வது சுருதியில் பரமாத்ம விஷயமான கேள்வி ஏற்பட்டிருக்கிறது. இவைகளுக்குப் பிரதிவசனமும் கிரமமாக கொடுக்கப்படுகிறது.

(1) அக்கினி விஷயமான பிரதிவசனம்

लोकादिमग्निं तमुवाच तस्मै या इष्टका यावतीर्वा यथावा

அதாவது :—அவனுக்கு லோகங்களுக்கு ஆதியான அக்கினியையும் அக்கினிசயனத்துக்கு எப்படிப்பட்ட செங்கற்கள் வேண்டுமோ, எத்தனை செங்கற்கள் வேண்டுமோ, எந்த கிரமமாக அவைகளை வைக்க வேண்டுமோ இவைகளையும் யமன் சொன்னார் என்கிற I-1-15வது சுருதியில் ஏற்பட்டிருக்கிறது.

(2) हन्त इदं प्रवक्ष्यामि गुह्यं ब्रह्मसनातनं ।
यथा च मरणं प्राप्यात्मा भवति गौतम ॥
योनिमन्ये प्रपद्यन्ते शरीरत्वाय देहिनः ।
स्थाणुमन्येऽनुसंयन्ति यथा कर्म यथा श्रुतं ॥

அதாவது :-இரஹஸியமாயும் புராதனமாயுமிருக்கிற இந்த பிரம்மத்தை இப்போது உனக்கு நான் சொல்லுகிறேன். கௌதமனே ! மரணமடைந்தபின் ஆத்மா எப்படி இருக்கிறானோ அதையும் சொல்லுகிறேன், கர்மத்தையும் உபாசனையும் அனுசரித்து ஜீவர்கள் சரீரத்தை கிரகிக்கும் பொருட்டு வேறு ஜன்மங்களை அடைகிறார்கள் ; வேறு சிலர் ஸ்தாவரபாவத்தை அடைகிறார்கள். என்கிற தூரமாயிருக்கிற II-2-6-7வது சுருதிகளில் ஜீவவிஷயமான உத்தரம் ஏற்பட்டிருக்கிறது (பிரம்மத்தைச்சொல்லி பிறகு ஜீவனைச் சொன்னதினால் தூரமாயிருக்கிற என்று கீழ் சொல்லப்பட்டது).

(3) न जायते म्रियते वा विपश्चित्

அதாவது நித்திய ஞானஸ்வரூபமான ஆத்மா ஜனிக்கிறதில்லை, மரிக்கிறதில்லை என்பதாயும் இன்னும் அதின் விவரங்களும் விஸ்தாரமாய் I-2-8வது சுருதிமுதல் சொல்லியிருப்பதில் பரமாத்ம விஷயமான உத்தரம் ஏற்படுகிறது.

இப்படிப்போல் பிரதானவிஷயமாகப் பிரச்னமில்லை. கேட்கப்படாததினால் அதை சொல்லவேண்டியதுமில்லை. (49)

2. இப்போது பூர்வபக்ஷி ஆக்ஷேபிக்கிறான்:— येयं प्रेते विचिकित्सा मनुष्ये என்கிற சுருதியில் ஆத்மவிஷயமாக எந்த பிரசினம் கேட்கப்பட்டதோ அந்த பிரச்னமே

अन्यत्र धर्मात् अन्यत्राधर्मात्

என்கிற சுருதியில் மறுபடியும் கேட்கப்பட்டிருக்கிறதா ?

அல்லது, முன்கேட்கப்படாமல் இப்போது புதிதாய்க் கேட்கப்படுகிறதா ?

அந்த பிரச்னமே மறுபடியும் கேட்கப்படுகிறது என்று சொல்லும்பக்ஷத்தில் ஆத்மவிஷயமான இரண்டு பிரச்னங்களும் ஒன்ருய்விடுவதால், அக்கினி விஷயமாயும் இரண்டு பிரச்னங்கள்மட்டும் ஏற்படும் அப்போது பிரச்னங்கள் மூன்று, உத்தரமும் மூன்று என்று ஸூத்திரகாரர் சொல்லக்கூடாது.

அல்லது இது முன்கேட்கப்படாத வேறுகேள்வி என்று சொல்லும்பக்ஷத்தில் எப்படி மூன்று வரன்களைக்கொடுக்கிறதாக சொல்லியிருக்க, நான்காவதான நூதன பிரச்னத்தை கேட்கிறதில் தோஷமில்லையோ.

அப்படி கேட்டதற்கு மேலும் பிரதானத்தைப் பற்றிச் சொல்லியிருக்கிருர் என்று கற்பிப்பதில் தோஷமில்லை. (50)

ஸித்தாந்தியின் உத்தரம்:— வாக்கியாரம்பத்தில் சொல்லியதைக்கொண்டு, எத்தனை வரன்கள் கொடுக்கப்பட்டிருக்கின்றனவோ அவைகளுக்கு மேல் நாம் எந்த பிரச்னத்தையும் கற்பிக்கவில்லை, யமனுக்கும் நசிகேதனுக்கும் நடந்த ஸம்வாதத்தின் ஆரம்பத்தில் வரங்கள் கொடுக்கப்பட்டதாக சொல்லியிருக்கிறது. இதுமுதல் கடவல்லி முடியவும் இந்த ஸம்வாதம் கூறப்பட்டிருக்கிறது. யமன் தகப்பனுல் அனுப்பப்பட்ட நசிகேதனுக்கு மூன்றுவரங்களைக் கொடுத்தார். நசிகேதனே அவைகளுக்குள் முதல் வரத்தால் பிதா மனவருத்தமன்றியிலிருக்கவேண்டும் என்று கேட்டுக்கொண்டான். இரண்டாவது வரத்தால் அக்கினிவித்தையைக்கேட்டான்; மூன்ரும்வரத்தால் ஆத்மவித்தையை கேட்டான் என்பது येयं प्रेते என்பதாலும் वराणां एष वरः तृतीयः என்கிற I-2-20-வது சுருதியாலும் தெரியவருகிறது.

अन्यत्र धर्मात् என்பதினுல் முன் கேட்காத வேறு பிரச்னத்தைக் கேட்டதாக இருந்தால், கொடுக்கப்பட்ட வரன்களைவிட அதிகமாக கேள்விகேட்கப்பட்டதாக கற்பிக்கவேணும். அப்போதும் பிரகரணம் முழுமையும் பாதிக்கப்படும். (51)

4. பூர்வபக்ஷி ஆக்ஷேபிக்கிருன்:— விசாரித்த விஷயம் நூதனமாக இருப்பதால் இந்தக்கேள்வி முன் கேட்கப்படாததாகத் தானிருக்கவேண்டும்.

येयं प्रेते विचिकित्सा मनुष्ये
अस्तीत्येके नायमस्तीति चैके

என்கிற வாக்கியத்தில் ஸந்தேகம் கூறப்பட்டிருப்பதால் இந்த முந்தின பிரச்னம் ஜீவவிஷயமாகவே ஏற்பட்டிருக்கிறது. ஜீவனே தர்மாதிகளையுடையவனாகையால் அவன் விஷயத்தில் अन्यत्र धर्मात् என்பதாய்க்கேள்வி ஏற்படமாட்டாது. பிராஞ்ஞனே தர்மாதிகளுக்கு மேற்பட்டவனுகையால் அவன் விஷயத்தில் अन्यत्र धर्मात् என்கிற கேள்வி ஏற்படக்கூடும். கேள்வியின் ரீதியிலும் வித்தியாஸம் காணப்படுகிறது. ஏனெனின் முதலில் இருக்கிறதா, இல்லையா என்பதாய்க் கேள்வி. பிந்தியதில் தர்மாதிகளை அதிக்கிரமித்த விஷயமாய் பிரச்னம்.

ஆகையால் அந்த கேள்வியே இது என்று நிதானியவராதபடியால் கேள்விகள் வெவ்வேறு முன் பிரச்னமே பிந்தியும் செய்யப்படவில்லை. (52)

5. ஸித்தாந்தி உத்தரம்:—ஜீவனும் பிராஞ்ஞனும் ஒன்று என்று நாம் அறிவதால் பூர்வபக்ஷிசொல்லுவது ஸரியன்று. பிராஞ்ஞனைவிட ஜீவன் வேறுக இருந்தால், விஷயம் பேதப்படுவதினுல் பிரச்னமும் பேதப்படும். ஆனுல் तत्त्वमसि முதலிய வேறு சுருதிகளால் ஜீவன் பிராஞ்ஞனைவிட வேறன்று. இந்த இடத்தில் अन्यत्र धर्मात् என்கிற பிரச்னத்துக்கு பிரத்தியுத்தரமாக न जायते म्रियते वा विपश्चित् (ஞானஸ்வரூபம் ஜனிக்கிறதில்லை, மரிக்கிறதில்லை) என்பதாய் ஜன்மமரணங்களை நிஷேதிப்பது மூலமாக ஜீவஸ்வரூபத்தை குறிப்பிட்டு, ஜீவனும் பிரம்மமும் ஒன்று என்பதையும் யமன் ஸூசிப்பிக்கிருன். எதற்காவது பிரஸக்தியிருந்தால் அது இல்லை என்று நிஷேதிப்பது யுக்தமாகும். ஜீவனுக்குச் சரீர ஸம்பந்தமிருப்பதால் அவனுக்கு ஜனனமரண பிரஸக்தி உண்டு; பரமேசுவரனுக்கில்லை; அப்படியே, ஜீவன் பிரம்மம்போல் மோக்ஷத்துக்குச் ஸாதகமான ஞானத்துக்கு விஷயமாயிருப்பதால் பிரம்மத்தைவிட வேறல்லவென்பதை அடியிற் கண்ட சுருதி காட்டுகிறது. எப்படி எனின்,

स्वप्नान्तं जागरितान्तं चोभौ येनानुपश्यति
महान्तं विभुमात्मानं मत्वा धीरो न शोचति

என்கிற II-4-வது சுருதியில் ஞானி ஸ்வப்நத்திலும் ஜாக்கிரத்திலும் இரண்டிலும் எந்தஸாக்ஷியினுல் பார்க்கிருனே அந்த மஹத்தாயும் வியாபகமாயுமிருக்கிற ஸாக்ஷியை ஆத்மா அதாவது தான் என்று அறிந்து துக்கிக்கிறதில்லை

என்று சொல்லியிருப்பதால் இந்த சுருதியானது ஸ்வப்நஜாக்கிரத்துக்களைப் பார்க்கிற ஜீவனே மஹான் என்றும் வியாபகன் என்றும் மன்னம் செய்

வதினால் துக்கம் நீங்கிவிடுகிறது என்றும் காண்பிவித்து பிராஞ்ஞனைவிட ஜீவன் வேறல்லவென்பதை காண்பிவிக்கிறது. பிராஞ்ஞனை அறிவதினால் துக்கநாசமென்பது

तमेव विदित्वा अतिमृत्युमेति
नान्यः पन्था विद्यते अयनाय

அதாவது அவனையே அறிந்து மரணத்தை அதிக்கிரமிக்கிறான் மோக்ஷத்துக்கு வேறு மார்க்கமில்லை என்றுசொல்லிய சுவேதாச்வதர (III-8) முதலிய சுருதிகளால் சித்தமாகிறது.

(ஸ்வ மோக்ஷத்துக்குச் சாதகமான ஜீவஞானத்தாலும், பிரம்மஞானத்தாலும் துக்கநாசம் என்கிற பலம் ஏற்படுவதால் ஜீவனும் பிரம்மமும் ஒன்று என்பது சித்தம்)

(ரா பேதநிந்தனையாலும் அபேதமே சத்தியம் என்பது

यदेवेह तदमुत्र यदमुत्र तदन्विह
मृत्योः स मृत्युमाप्नोति य इह नानेव पश्यति

என்கிற II-4-10வது சுருதியில் எது (எந்த சைதன்னியம்) இவ்விடத்தில் அதாவது தேகத்திலிருக்கிறதோ அதுவே அவ்விடத்தில் சூரியாதிகளிலுமிருக்கிறது. எது அவ்விடத்திலிருக்கிறதோ அதுவே இவ்விடத்திலுமிருக்கிறது எவன் இவ்விடத்தில் அதாவது அகண்டைகரசமான பிரம்மத்தில் அநேகம் அதாவது மித்தியா பேதமிருக்கிறதுபோல் பார்க்கிறானோ அவன் (அந்த பேததர்சி) மரணத்துக்கு பிறகு மரணத்தை அடைகிறான் சம்சாரபயத்தினின்றும் விடுபடுகிறதில்லை என்று சொல்லியிருப்பதால் இந்த சுருதி ஜீவனுக்கும் பிராஞ்ஞனுக்கும் பேதமிருக்கிறதென்பதை நிந்திக்கிறது.

ரா (பிரச்னம் கேட்டவன் பிரசனம் இவைகளின் ஸ்துதியாகிற லிங்கத்தாலும், கேட்கப்பட்ட ஜீவனைச் சுலபமாய் அடையமுடியாது என்று காண்பிவிக்கிறதினாலும் ஜீவனும் பிரம்மமும் ஒன்று என்பது தெரியவருகிறது. எப்படி எனின்

ரா ஜீவன் இருக்கிறானா இல்லையா என்று கேட்ட பிறகு अन्यंवरं वृणीष्व என்பதுமுதல் புத்திராதிகளை கேட்டுக்கொள்ளு என்பதாய் யமனால் நசிகேதசன் அநேகவிதமாய் ஆசைப்படுத்தப்பட்டபோதிலும், விஷயங்களை வெறுத்து नान्यं तस्मान्नचिकेतो वृणीते என்பதினால் ஆத்மஞான ஆசையைவிட்டு நசிகேதன் விலகவில்லை என்று தெரியவருகிறது. அப்போது சந்தோஷமடைந்த யமன் अन्यच्छ्रेयोऽन्यदुतैव प्रेयः என்பதினால் போகமும் மோக்ஷமும் வெவ்வேறு என்று காண்பிவித்து, கர்மத்துக்கும் ஞானத்துக்கும் பலம் வெவ்வேறு என்பதையும் காண்பிவித்து,

विद्याभीप्सिनं नचिकेतसंमन्ये न त्वा कामा बहवोऽलोलुपन्त ॥

என்பதினால் புத்திரன் முதலான அநேக ஆசைப்படக்கூடியவைகள் என்னால் கொடுக்கப்பட்டும், நீ ஆசைப்படவில்லை என்று त्वादृङ्नोभूयान् नचिकेतः प्रष्टा என்பதினால் பிரச்னம் செய்த நசிகேதசனை ஸ்துதித்து பிரச்னத்தையும் ஸ்துதித்து

तं दुर्दर्शं गूढमनुप्रविष्टं गुहाहितं
गह्वरेष्ठं पुराणं । अध्यात्मविद्याधिगमेन देवं मत्वा धीरो हर्षशोकौ जहाति

அதாவது:—ஆத்மத்தியானத்தினால் ஞானியானவன் கஷ்டத்தின்பேரில் பார்க்கக்கூடியவனும், மறைபட்டும், புத்தியில் பிரவேசித்தும் ஹிருதயபுண்டரீகமாகிற குஹையிலிருக்கிறதும், விஷயாதிகளிலிருக்கிறதும் புராதனமாயும், ஜோதிஸ்வரூபமாயுமிருக்கிறவனை அறிந்து சாக்ஷாத்கரித்து சந்தோஷத்தையும் துக்கத்தையும் விட்டுவிடுகிறான் என்று I-2-12-ல் சொல்லுகிறான். இதனால் ஜீவனுக்கும் பிராஞ்ஞனுக்கும் பேதமில்லை என்று சொல்லுவதாய் தெரியவருகிறது. எந்த பிரச்னத்தினால் மிக்க ஸ்துதியை யமனிடமிருந்து நசிகேதன் அடைந்தானோ, அந்த பிரச்னத்தை விட்டுவிட்டு ஸ்துதிக்கப்பட்ட பிறகும் வேறு பிரச்னத்தையே கேட்டானேயானால், இந்த ஸ்தோத்திரமெல்லாம் அனாவசியமாகவே செய்ததாக ஆகும். ஆகையால் விஷயம் பேதப்படாததினால் ये यं प्रेते என்கிற பிரச்னமே अन्यत्र धर्मात् என்பதிலும் செய்யப்பட்டிருக்கிறது.

இரண்டு பிரச்னங்களுடைய ரீதி வெவ்வேறு என்று சொன்னதும் யுக்தமன்று. முன் கேட்ட விஷயமே விசேஷமாய் மறுபடியும் கேட்கப்படுகிறது முன்னேயே தேகாதிகளைவிட வேறான ஆத்மாவைப்பற்றி கேட்கப்பட்டது. பின்போ அது அசம்சாரியா என்பதைப்பற்றி கேட்கப்பட்டது. அவித்தை எதுவரையில் நிவர்த்தியாகவில்லையோ அதுவரையில் ஜீவனுக்குதர்மாதிகளின் சம்பந்தம் நீங்குகிறதில்லை. அது

கிவிர்த்தியாவதினால் तत्त्वमसि என்கிற சுருதிப்படி பிராஞ்ஞனே ஜீவன் என்று அறியப்படுகிறான். அவித்தையிருக்கும்போதும் அதுபோனபோதும் வஸ்துவில் வித்தியாசமில்லை. நல்ல இருட்டில் கீழ்விழுந்திருக்கிற கயிற்றைப்பார்த்து பாம்பு என்று நினைத்து பயமடைந்து, உடம்பு நடுக்கல் எடுத்து ஒருவன் ஓடுகிறான். வேறு ஒருவன் அவனைப்பார்த்து பயப்படாதே, இது பாம்பன்று, கயிறுதான் என்று சொல்லுகிறான். அவன் அதைக்கேட்டு பாம்பால் நேரிட்டபயத்தையும், நடுக்கலையும் ஓடுகிறதையும் விட்டுவிடுகிறான். பாம்பு என்கிற புத்தி இருந்தகாலத்திலும், இல்லை என்கிற காலத்திலும் வஸ்துவில் யாதொரு வித்தியாசமுமில்லை. அப்படியே இவ்விடத்திலும் பார்க்கத்தக்கது. ஜீவனுக்கு பிரம்மஸ்வரூபம் ஸ்வாபாவிகமாகையால் பிரம்ம பிரச்னத்துக்கு न जायते म्रियते என்பதினால் யாதொரு பிரத்யுத்தரம் கூறப்பட்டதோ அதுவே இருக்கிறதா என்கிற பிரச்னத்துக்கும், பிரத்தியுத்தரமாக ஆகிறது. அவித்தையால் ஏற்பட்ட ஜீவபிராஞ்ஞபேதத்தை உத்தேசித்து त्रयाणामेव என்பதாய் சூத்திரம் ஏற்பட்டதாக அறியவேண்டியது. ஆத்மவிஷயமாக பிரச்னம் ஒன்றாகவேயிருந்தாலும் முதல் பிரச்னத்தில் மரணாவஸ்தையில் தேகத்தைவிட வேறாக யாராவது இருக்கிறானா இல்லையா என்கிற சந்தேகத்தாலும் கர்த்திருத்வம் முதலிய சம்சார சுவபாவத்தை விலக்கிக்காட்டாததினாலும் முன் பிரச்னத்தில் ஜீவனைப்பற்றியே கேட்கப்பட்டிருக்கிறது. பிந்தினதிலோ தர்மாதிகளில்லை என்று சொன்னதினால் பிராஞ்ஞவிஷயமான பிரச்னம் என்று ஏற்படுகிறது. ஆகையால் அக்கினி, ஜீவன், பரமாத்மா விஷயமாக ஏற்பட்ட கற்பனை யுக்தமே. பிரதான கற்பனையிலோ வரம்கொடுக்கப்படவில்லை, கேள்வியுமில்லை, உத்தரமுமில்லை. ஆகையால் அது பொருந்தாது. (53)

XVIII. I-4-1-ல்-7-வது சூத்திரம்.

**महद्वच्च ॥** (54)

2. முந்தினசூத்திரத்துக்கும் இதற்கும் சம்பந்தம்: சாங்கியமதப்படி அவ்வியக்த பதத்தால் பிரதானத்தை அறியலாம் என்று பூர்வபக்ஷி சொன்னதற்கு, சாங்கிய பிரயோகத்துக்கும் வைதிகபிரயோகத்துக்கும் வித்தியாசமிருப்பதால் சாங்கியர்களுடைய அர்த்தத்தை எடுத்துக்கொள்ளக்கூடாதென்று இதில் சொல்லுகிறார். (55)

3. பதவுரையும் பொழிப்புரையும்.

மஹத் பதம்போல் அவ்வியக்தபதமும் இருக்கிறது. (56)

4. பாஷியம்.

சாங்கியர்கள் மஹத் சப்தத்தால் சத்துவப்பிரதானமான (ப) பிரகிருதியினின்றும் முதலிலுண்டான நிர்விகல்பபுத்தியை அறிகிறார்கள். வேதத்திலும் இந்த அர்த்தத்தில் இந்த பதம் உபயோகிக்கப்படவில்லை.—என்பது.

बुद्धेरात्मा महान् परः (கட I-3-10)

(புத்தியைவிட மஹத்தான ஆத்மசிரேஷ்டன்

महान्तं विभुमात्मानं (கட I-2-22)

(மஹத்தாயும், வியாபகமாயுமிருக்கிறஆத்மாவை

वेदाहमेतं पुरुषं महान्तं சுவே III-8)

(இந்த மஹாபுருஷனை நான் அறிவேன்)

முதலிய வாக்கியங்களில் ஆத்மசப்தம் புருஷசப்தம் இவைகளுடன் பிரயோகிக்கப்பட்டிருக்கிறதினால் தெரியவருகிறது. அப்படியே அவ்வியக்தசப்தமும் வேதத்தில் பிரதானத்தைக்கூறமாட்டாது. ஆகையால் அனுமானத்தால் கிரகிக்கப்பட்ட பிரதானம் வேதத்தால் கூறப்படவில்லை. (57)

XIX. பூர்வபக்ஷபலன்:—பிரம்மமும் பிரதானமும் காரணமாக இருக்கிறபடியால் வேதாந்தங்கள் பிரம்மத்தில் தாற்பரியப்படுகின்றன என்கிற நியமமில்லை.

சித்தாந்தபலன்:—அந்த நியமமுண்டு. (58)

வியாசாதிகரணமாலைப்படி அத்வைதச்சுருக்கம்.

1. சுலோகங்கள்:—

महतः परमव्यक्तं प्रधानमथवा वपुः ।
प्रधानं सांख्यशास्त्रोक्ततत्वानां प्रत्यभिज्ञया ॥
श्रुतार्थप्रत्यभिज्ञानात्परिशेषाच्च तद्वपुः ।
सूक्ष्मत्वात्कारणावस्थमव्यक्ताख्यां तदर्हति ॥ (59)

2. கடவல்லியின் 3-வது வல்லியில்

महतः परमव्यक्तमव्यक्तात्पुरुषः परः

என்று சொல்லியிருக்கிறது இவ்விடத்தில் அவ்வியக்த சப்தம் சாங்கியர்கள் சொல்லிய பிரதானத்தை கூறுகிறது. ஏனெனின் அப்படியே அதுவே இது என்று தெரியவருகிறது. சாங்கிய சாஸ்திரத்தில் மஹத் அவ்வியக்த புருஷர்கள் பர, அபர என்பதாய் பிரசித்தமாய் கூறப்பட்டிருக்கிறார்கள். அப்படியே சுருதியிலும் தெரியவருகிறது ஆகையால் அவ்வியக்த சப்தத்தால் கூறப்பட்டது பிரதானம். (60)

3. சித்தாந்தம்:— அவ்வியக்த சப்தத்தால் கூறப்பட்டது சரீரமாகத் தானிருக்கவேண்டும். ஏனெனின் முன்வாக்கியத்திற் சொல்லிய சரீரம் இவ்விடத்திலும் தெரியவருகிறது. முந்தின வாக்கியத்தில் அதாவது

आत्मानं रथिनं विद्धि शरीरं रथमेवतु ।
बुद्धिंतु सारथिं विद्धि मनः प्रग्रहमेवच
इन्द्रियाणि हयान्याहु र्विषयांस्तेषु गोचरान्

என்கிற வாக்கியத்தில் சரீராதிகள் இரதம் முதலியவைகளாக வர்ணிக்கப்பட்டிருக்கின்றன. இவைகளே

इन्द्रियेभ्यः पराह्यर्था अर्थेभ्यश्च परं मनः ।
मनसस्तु पराबुद्धिर्बुद्धेरात्मा महान्परः ॥
महतः परमव्यक्तमव्यक्तात्पुरुषः परः ॥

என்கிற கீழ்வாக்கியத்தில் கூறப்பட்டிருக்கின்றன. ஸ்மிருதியில் தெரியவருவதைவிட சுருதியில் தெரியவருவதே பிரபலமானது.

ஆக்ஷேபம்:— அநேக வஸ்துக்கள் சொல்லியிருப்பதால் அவ்வியக்தம் சரீரத்தைத்தான் கூறுகிறது என்று எப்படி நிச்சயம்.

சமாதானம்:— परिशेषात् அதாவது மிச்சப்படுவதால் என்று சொல்லுகிறோம். எப்படியெனின் முந்தின வாக்கியத்தில், இந்திரியம், அர்த்தம், மனது, புத்தி, இந்த சப்தங்களால் பதார்த்தங்கள் கூறப்பட்டன. பிந்திய வாக்கியத்தில் அந்த சப்தங்களாலேயே அவைகள் கூறப்படுகின்றன. முந்தினதில் ஆத்ம சப்தத்தால் கூறப்பட்ட வஸ்து பிந்தியதில் புருஷசப்தத்தால் கூறப்படுகிறது. பிந்தின வாக்கியத்தில் மஹத் சப்தத்தால் கூறப்பட்ட வஸ்து முந்தின வாக்கியத்தில் புத்தி சப்தத்தால் கூறப்பட்டிருக்கிறது. புத்தி இருவகைத்து, நம்முடைய புத்தி ஒன்று, இதற்குக் காரணமான ஹிரண்யகர்ப்பபுத்தி மற்றொன்று இது மஹத் சப்தத்தால் கூறப்படுகிறது. இவ்விரண்டும் முந்தின வாக்கியத்தில் ஒரு பதத்தால் கூறப்பட்டு பிந்தின வாக்கியத்தில் தனித்தனியாக கூறப்பட்டிருக்கின்றன. இப்படி இருக்க முந்தின வாக்கியத்தில் சரீரம் ஒன்று மிச்சம். பிந்தின வாக்கியத்தில் அவ்வியக்த சப்தம் மிச்சம். இப்படி மிச்சப்பட்டாலும் சரீரம் ஸ்பஷ்டமாக இருப்பதால் அது அவ்வியக்தம் என்று சொல்லக்கூடாது என்று சங்கிக்கலாகாது. ஏனெனின் சரீரத்தின் காரண அவஸ்தை சூட்சுமம், அது அஸ்பஷ்டம். ஆகையால் சரீரம் அவ்வியக்தம் என்று சொல்லப்படலாம். ஆகையால் அவ்வியக்த சப்தத்தால் கூறப்பட்டது சரீரமே. (61)

I-4-1-வது அதிகரணம்

முற்றிற்று.

## 1-4-2 வது அதிகரணத்தின்

### அனுக்கிரமணிகை.



---

## 1-4-2 வது அதிகரணம்.

I. இதின் பெயர்:—சமஸாதிகரணமென்பதாம்.

II. இந்த அதிகரணத்தின் கருத்து:—அஜா என்னும் பதம் அப்தேஜஸ்முதலிய ஸ்வரூபமான பிரகிருதியையே கூறும் என்பதாம். (2)

III. இதன் விஷயவாக்கியம்

अजामेकां लोहितशुक्लकृष्णाम्

बह्वीः प्रजाः सृजमानां सरूपाः ॥

अजो ह्येको जुषमाणोऽनुशेते ।

जहात्येनां भुक्तभोगामजोऽन्यः ॥

என்கிற சுவேதாசுவதர VI-5-வது சுருதி அர்த்தம்:—சிவப்பு, வெளுப்பு, கறுப்பு இந்த வர்ணமாயும், சமான ரூபமான அநேக பிரஜைகளை உண்டு பண்ணிக்கொண்டும் ஒரு அஜா இருக்கிறது. அவளிடத்தில் பிரீதிவைத்துக்கொண்டும் அவளுடன் சயனம் செய்துகொண்டும் ஒரு அஜன் இருக்கிறான். வேறு ஒரு அஜன் அவளை அநுபவித்து அவளை விட்டுவிடுகிறான்.

இதிலுள்ள அஜா பதம் விஷயம். (3)

IV. சங்கதி:—

(a) முந்தின அதிகரணத்துக்கும் இதற்கும்:-

அ (1) பிரத்தியுதாஹரணசங்கதி:—

முன் அவ்வியக்தசப்தமாத்திரத்தினால் பிரதானம் கூறப்படவில்லை என்று சொல்லியிருந்தாலும், இவ்விடத்தில் மூன்று குணங்களாகிற லிங்கத்தோடுகூடிய அஜா என்கிற பதத்தால் பூர்வபக்ஷிமதப்படி பிரதானத்தை அறியலாமாகையால் இரண்டு அதிகரணங்களுக்கும் பிரத்தியுதாஹரணசங்கதி ஏற்படுகிறது.

ஆ (2) திருஷ்டாந்த சங்கதி:—

முன் காரணத்தைக்கூறும் அவ்வியக்த சப்தத்தால் காரியமான சரீரம் அறியத்தக்கது என்றுசொல்லப்பட்டது. இதுபோல் இப்போது தர்மங்களைக் கூறும் லோஹிதம்முதலிய பதங்களால் தர்மிகளாகிற தேஜஸ்முதலியவைகளை அறியவேண்டியது என்று சித்தாந்தி சொல்லுவதால் திருஷ்டாந்தசங்கதி ஏற்படுகிறது. (4)

ஆ (b) பாதசங்கதி:— அஜாமந்திரம் பிரதான பரமாயிராதபடியால் பிரதானம் அசப்தம் அதாவது வேதத்தால் கூறப்படாதது என்று சொல்லுவதாலே

யே வேதத்துக்குப் பிரம்மத்திற் தாற்பரியம் என்பது திடப்படுவதால் பாதசங்கதி ஏற்படுகிறது.

(c) இதரசங்கதிகளை முன்போலவே அறியவும். (5)

V. (1) சந்தேகம்:—

அஜாசப்தத்துக்குச் சாதாரணமான அர்த்தம் ஆடு என்பதாம். ஆத்மவித்தையை விசாரிக்கிற பிரகரணத்தில் இந்த அர்த்தம் பொருந்தாதபடியால் யோகார்த்தத்தால் அதை அறியவேண்டும்.

त्र भा முந்தின அதிகரணத்தில் மஹத் சப்தத்துக்கு சமீபத்திலிருக்கிற சரீரம் என்கிற அர்த்தத்தை எடுத்துக்கொள்ளவேண்டியதேதவிர சமீபத்திலிராத பிரதானம் என்கிற அர்த்தத்தை எடுத்துக்கொள்ளக் கூடாது என்று சொல்லப்பட்டது. அதுபோல் பிரகிருதசுருதியிலிருக்கிற அஜா பதத்துக்கும் தேஜஸ் முதலிய விகாரங்களுக்குக் காரணமான பரமேசுவராதீனமான மாயாசக்தியை இந்த மந்திரம் கூறுகிறதா? அல்லது சாங்கியர்கள் அறிகிற சுவதந்திரமான பிரதானத்தைக் கிரகிக்கிறதா?

क (2) சந்தேகபீஜம்:—சத்வரஜஸ்தமோகுணங்கள் பிரதானத்துக்கும் மாயைக்கும் இருப்பதால் சந்தேகத்துக்கிடமாயிற்று. (6)

இதிலடங்கிய சூத்திரங்கள் 3(8-9-10)

VI பூர்வபக்ஷம்:—

भा அஜா சப்தத்தால் பிரதானத்தையே அறியவேண்டியது. ஏனெனில், சாங்கிய சாஸ்திரத்தில் பிரதானத்துக்கு எந்த லக்ஷணம் சொல்லப்பட்டிருக்கிறதோ அதுவே ஏற்றம் குறைவன்றியில் இந்த சுருதியில் சொல்லியிருக்கிறது. எப்படியெனின்:—

(1) अजा என்றால் எது ஜனிக்கவில்லையோ அது மூலப்பிரகிருதியாகிற பிரதானம் காரியமல்லவென்று சாங்கியர்கள் அறிகிறார்கள் இதுவே அஜா.

(2) एका பிரதானத்தை ஏகம் என்று சாங்கியர்கள் ஒப்புக்கொண்டிருக்கிறார்கள்.

(3) लोहितशुक्लकृष्णां இந்த மந்திரத்தில் இந்த சப்தங்கள் ரஜஸ், சத்வம், தமஸ் இவைகளை கூறுகின்றன. (பா) சிகப்புமுதலிய வர்ணங்கள் ரஜஸ்முதலியவைகளிலில்லாமற் போனாலும் (भा त्र) குசும்பாமுதலிய சிகப்பு பதார்த்தங்களைப் பார்த்தவுடன் மனதில் சந்தோஷம் உண்டாகிறது. ரஜஸும் மனிதனைச் சந்தோஷப்படுத்துகிறது. சந்தோஷத்தை உண்டாக்குந்தன்மை சிவப்புவர்ணத்துக்கும் ரஜோகுணத்துக்கும் சாதாரணமாயிருப்பதால் சிவப்பு ரஜஸைக் கூறலாம்.

(b) भा त्र வெண்மையான பதார்த்தத்தை பார்த்தவுடன் மனதிற்கு ஒருதெளிவு உண்டாகிறது. சத்வகுணமும் பிரகாசம் அதாவது தெளிவைக்கொடுக்கிறது. தெளிவை உண்டாக்கும் குணம் இரண்டுக்கும் சாதாரணமாயிருப்பதால் சுக்கிலம் சத்வம்.

(c) भा மேகம் முதலியவைகள் கிருஷ்ண அதாவது கறுப்பாயிருந்துகொண்டு மறைக்கின்றன, தமோகுணமும் மறைக்கும் தன்மையுள்ளது. இந்த குணம் இரண்டுக்கும் சாதாரணமாயிருப்பதால் கிருஷ்ண சப்தம் தமஸைக் கூறுகிறது.

இந்த लोहितशुक्लकृष्णवर्णां என்னும் சமுதாய பதம் முக்குணங்களின் சமான அவஸ்தையைக் கூறுகிறது. சாங்கியர்கள் பிரதானத்தை முக்குணங்களின் சமான அவஸ்தை என்று அறிகிறார்கள்.

(4) वह्वीः...सरूपाः...(रा) பிரஜாயதே இ பிரஜா: மஹத் முதலியவைகள். முக்குணங்களுடன்கூடின மஹத்முதலிய அநேக பதார்த்தங்களை பிரதானம் சிருஷ்டிக்கிறது.

(5) अजो...अनुशेते அந்த பிரகிருதியை பிறப்பற்ற புருஷன் அபிமானித்து அத்துடன்கூட சயனம் செய்கிறான். அதாவது அவித்தையால் அவளைத் தானாகவே பாவித்து தான் சுகி, துக்கி, மூடன் என்பதாய் ஜனனமரணரூபபிரவாஹத்தை அடைகிறான்.

(6) जहात्येनां... अन्यः பிறப்பற்ற மற்றொரு ஜீவன் போகங்களை அனுபவித்து, விரக்தி அடைந்து பிரகிருதியைவிட தான் வேறு என்கிற விவேகஞானத்தை அடைந்து அந்த பிரகிருதியை விட்டுவிடுகிறான் அதாவது மோக்ஷமடைகிறான்.

(भा) இந்த இரண்டு வாக்கியங்களால் ஜீவபேதம் தெரியவருகிறது. இது சாங்கியமதப்படி சரியானது. மாயாவாதிகள் மதப்படி ஆத்மா ஒன்றானதால் இந்த வாக்கியம் அந்த மதத்தை அனுசரிக்கமாட்டாது.

(7) தீர்மானம்:—ஆகையால் கபிலருடையமதத்தை அனுசரித்தவர்கள் பிரதானத்தைக் கற்பித்தது சுருதியை அனுசரித்தேயாம். (8)

VII. சித்தாந்தம்:-இப்படி பூர்வபக்ஷிசொல்ல வியாசர் சித்தாந்தத்தை

## चमसवदविशेषात् । ८

என்னும் சூத்திரத்தில் கூறுகிறார். (9)

2. பதஉரை:—

चमसवत् சமஸம்போல்

अविशेषात् விசேஷமில்லாததால் (10)

3. பொழிப்புரை.—

சமஸபதத்துக்கு விசேஷகாரணமன்றியில் இது தான் அர்த்தம் என்று சொல்லமுடியாததுபோல் அஜாபதத்துக்கும் விசேஷகாரணமன்றியில் பிரதானம் என்று அர்த்தம் சொல்லமுடியாது. (11)

4. பாஷ்யம் :—

இந்த மந்திரத்தினுல் சாங்கியவாதத்துக்கு சுருதி ஆதாரமிருக்கிற தென்று சொல்லமுடியாது. இந்த சுருதிமட்டும் இதரசாதனமன்றியில் எந்தவாதத்துக்கும் ஆதாரமாகமாட்டாது. ஏனெனின் எப்படியாவது, (எந்த கற்பனையாலாவது) அஜாசப்தத்தை எந்த வாதத்திலும் பொருந்தும்படி செய்துவிடலாம். சாங்கியவாதத்தில் கூறப்பட்ட பிரதானத்தைத்தான் இது கூறுகிறது என்று சொல்லுவதற்கு விசேஷகாரணமில்லை. சமஸம் என்கிறபதம் போலும். எப்படியெனின்,

अर्वाग्बिलश्चमसऊर्ध्वबुध्नः

என்கிற பிரஹதாரணியக II-2-3வது சுருதியில் வாய்கீழும் அடிபாகம் மேலுமுள்ளது சமஸமென்னும் கிண்ணம் என்று சொல்லியிருக்கிறது. (சமஸத்தில் யசஸ் வைக்கப்பட்டதாக சொல்லியிருப்பதாலும் இந்த மந்திரமானது தனிமையில் சமஸமின்னதென்பதை குறிப்பிடமாட்டாது. மலையின் குகை முதலியவைகளில் போல் "கீழ்வாய், மேல் அடிபாகம்" என்பவைகளை எந்த இடத்திலும் எப்படியாவது பொருந்தும்படி செய்துவிடலாம். இதுபோல் அஜாம் என்கிற மந்திரத்திலும் அஜாசப்தம் பிரதானத்தைத் தான் கூறுகிறதென்று சொல்லுவதற்கு விசேஷ காரணமில்லை. (12)

IX. I-4-2ல் 2 (9)வது சூத்திரம்.

## ज्योतिरुपक्रमा तु तथा ह्यधीयत एके । ९

2. முந்தின சூத்திரத்துக்கும் இதற்கும் சம்பந்தம் :—சமஸத்தைப்பற்றிச் சொல்லிய மந்திரத்திலே பே பிந்திய பாகத்தில் इदं तच्छिर एष ह्यर्वाग्बिलश्चमस ऊर्ध्वबुध्न என்று அதாவது பக்கத்தில்வாய், மேல் அடிபாகம், இப்படி எந்த சமஸமிருக்கிறதோ அது சிரசு என்று சொல்லியிருப்பதால் சமஸம் இன்னதென்று தெரியவருகிறது.

व (பிரகிருதத்தில் இந்த அஜாபதத்தின் அர்த்தத்தை நிர்ணயிக்கும்படி முந்தின மந்திரத்தில்

देवात्मशक्तिं स्वगुणैर्निगूढामेको वर्णो बहुधा शक्तियोगात् ।

என்றும்,

பிந்தின வாக்கியத்தில்

अस्मान् मायी सृजते विश्वमेतत् मायां तु प्रकृतिं विद्यान्मायिनं तु महेश्वरम् ।

என்றும் சொல்லியிருப்பதால் அஜா பதத்துக்கு மாயை என்று அர்த்தமானாலும், இந்த முன் பின் வாக்கியங்களில்லை என்று நினைத்துக்கொண்டு எந்த வாக்கியத்தால் சுவேதாசுவதர உபநிஷத்தின் அஜா பதத்துக்கு இன்னதுதான் அர்த்தம் என்பதை நிரக்கலாமெனின், இதரசாகையிலுள்ள வசனத்தால் அறியலாமென்று இந்த சூத்திரத்தில் சொல்லுகிறார். (14)

3. பதஉரை :—

ज्योतिरुपक्रमा ஜோதிஸ் முதலியவைகள்.

तु தான்

तथाहि அப்படியே

एके சிலர்

अधीयते படிக்கிறார்கள். (15)

4. பொழிப்புரை :—

அந்த அஜாபதத்தால் ஜோதிஸ் முதலிய பூதங்களையே அறியவேண்டியது. அப்படியே சந்தோகர்கள் சொல்லுகிறார்கள். (16)

5. பாஷ்யம் :—

(1) ज्योतिः இந்த அஜா பதத்தால் பரமேசுவரனிடமிருந்து உண்டாகியும் ஜோதிஸ்ஸை முதலாக உடையதும் அதாவது ஜோதிஸ், அப்பு, பிருதிவி ரூபமாயும், ஜராயுஜ, அண்டஜ, ஸ்வேதஜ, உத்பிஜ, ஆகிய நான்கு பிராணிகளுக்கு உபாதானகாரணமாயுமிருக்கிற பிரகிருதியை அறியவேண்டியது. (17)

(2) तु இந்த சப்தம் நிச்சயத்தைக் கூறுகிறது. இந்த மூன்று பூதங்களையே அறியவேண்டியதேதவிர மூன்று குணங்களை அறியக்கூடாது. (18)

எனெனின்,

(3) तथा...एके அப்படியே சில சாகிகள் (சந்தோ கர்கள்) தேஜஸ், அப்பு, பிருதிவி, இவைகள் பரமேசு வரனிடமிருந்து உண்டானவை என்று சொல்லி அவர் களுக்கே,

यदग्ने रोहितं रूपं तेजसस्तद्रूपं यच्छुक्लं तदपांयत्कृष्णं तदन्नस्य ।

என்கிற சாந்தோக்கிய (VI-4-1) சுருதியில் அக் கினியில் எந்த சிவப்பு ரூபமோ அது தேஜஸின்ரூபம். எந்த வெளுப்போ அது அப்புவின் ரூபம், எந்த கரு ப்போ அது பிருதிவியின் ரூபம் என்று சொல்லியிரு ப்பதால் சிவப்பு முதலிய ரூபங்களை கூறுகிறார்கள். रोहित முதலிய சப்தங்கள் இரண்டு சுருதிகளிலும் சமானமாயிருப்பதால் அவைகள் அந்த தேஜஸ், அப் பு, பிருதிவி இவைகளையே கூறுகின்றன.

आ (சாங்கியஸ்மிருதியில் ரோஹிதம்முதலிய பத ங்கள் பிரதானத்திலும் உபயோகப்படுகின்றனவே எனின்)

ரோஹிதம் முதலிய சப்தங்கள் முக்கியமாய் ரூப ங்களையே கூறுகின்றன. சத்வாதி குணங்களை இப்பத ங்கள் கௌணமாகத்தான் கூறும்.

अ (ஆக இம்மூன்று காரணங்களால் ரோஹிதா திசப்தங்கள் தேஜஸ்முதலியவைகளைத்தான் கூறு கின்றனவென்று தெரியவருகிறது.)

மேலும் சந்தேகமாயிருப்பதை சந்தேகமற்றதால் நிச்சயிக்கவேண்டியதென்று மீமாம்சகர்கள் சொல்லு கிறார்கள்.

ब्र (இந்த மாதிரியாய் அஜா பதத்தின் அர்த்தத் தை நிச்சயிக்கும்படியான வாக்கியம் சமீபத்திலில்லை என்று நினைத்து, சாகாந்தரத்தை அனுசரித்து அஜா பதத்துக்கு அர்த்தம் நிச்சயிக்கப்பட்டது. இனி இந்த சுவேதாசுவதரத்திலேயே ஆதாரமிருக்கிற தென்கிறார்.)

रा எப்படி சாகாந்தரவக்கியத்தால் பிரதானத் தை கிரகிக்கக்கூடாதென்று ஏற்படுகிறதோ அப்படி சுவேதாசுவதர உபநிஷத்தில் பிரகரணம் மாயையைப் பொருத்திருப்பதாலும் பிரதானத்தை கிரகிக்கக்கூடா தென்று தெரியவருகிறது. எப்படியெனின், இந்த உபநிஷத்திலும்,

ब्रह्मवादिनो वदन्ति किं कारणं ब्रह्म ।

आ பிரம்மவாதிகள் சொல்லுகிறார்கள் :—பிரம் மம் சுத்தமானதால் ஜகத்தை சிருஷ்டிக்கக் காரண மாகமாட்டாது. ஆகையால் ஜகத்துற்பத்திக்குக் கார ணம் உபகரணசகிதபிரம்மமா? அல்லது வேறொன்றா?

என்று ஆரம்பித்து,

ते ध्यानयोगानुगता अपश्यन् ।
देवात्मशक्तिं स्वगुणैर्निगूढाम् ॥

आ அவர்கள் தியானயோகத்தினால் பரமாத்மா வை அனுப்பிரவேசம் செய்து, அவ்விடத்திலேயே பர மாத்மஸ்வரூபத்துடன் கூடியிருக்கிற, பரதந்திரமா யிருக்கிற சத்வம்முதலிய குணங்களுடன் கூடியிருக் கிற மாயையை பிரம்மத்துக்கு சஹாயமாயிருக்கிற தாக பார்த்தார்கள்.

என்பதினால் வாக்கியாரம்பத்தில் சமஸ்த ஜகத் தையும் நிர்மாணம் செய்கிற பரமேசுவரனுடைய சக் தியை கூறுவதினாலும் பிந்தின வாக்கியத்திலும்,

मायां तु प्रकृतिं विद्यान्मायिनं तु महेश्वरं ।

(பிரகிருதியை மாயை என்றும், மஹேசுவரனை மாயி என்றும் அறி)

என்றும்,

IV-10-11ல்

यो योनिं योनिमधितिष्ठत्येकः ।

(எவன் ஒருவனாக இருந்து கொண்டு ஒவ்வொரு யோனியிலுமிருக்கிறானோ) என்றும் சொல்லியதில் அந்த சக்தியையே கூறுவதினாலும் அஜாமந்திரத் தில் சுவதந்திரமான பிரதானமென்று பெயருள்ள பிரகிருதி கூறப்பட்டிருக்கிறதென்று சொல்லமுடி யாது. பிரகரணத்தாலும், நாமரூபமாகப் பிரிபடாம லும், நாமரூபங்களின் முந்தின அவஸ்தையாயுமிருக் கிற அந்த தெய்வசக்தியே இந்த மந்திரத்தில் கூறப் படுகிறதாக சொல்லப்படுகின்றது.

இந்த மாயையின் விகாரங்களான பிருதிவி, அப்பு, தேஜஸ் இவைகளை ஆசிரயித்துக் கொண்டிருக் கிற மூன்று ரூபங்களால், அதற்கும் மூன்றுரூபங் கள் கூறப்பட்டன.

இவ்விதமாக பிரகரணபலத்தினால் மாயையே அஜா என்று தெரியவருகிறது. (19)

X. I-4-10வது சூத்திரம்.

# कल्पनोपदेशाच्च मध्वादिवदविरोधः। 20

2. முந்தின சூத்திரத்துக்கும் இதற்கும் சம்பந்தம் :—பிருதிவி, அப்பு, தேஜஸ் ஆகிய இவைகளின் மூன்று ரூபங்களால் ரூபமற்ற அஜா என்பதை எப்படி அறியமுடியும், ர தேஜஸ் முதலியவைகளை அஜா சப்தம் ரூடியால் கூறுகிறதா, அல்லது, யோகத்தால் கூறுகிறதா ?

தேஜஸ் முதலியவைகளில் அஜாத்வம் (ஆட்டுத் தன்மை) இல்லாதபடியால் ரூடி அர்த்தம் பொருந்தாது.

தேஜஸ் முதலியவைகளுக்கு ஜன்மமிருப்பதாலும் அஜா என்பதற்கு ஜன்மமில்லாதது என்று யோகார்த்தமானதாலும், தேஜஸ் முதலியவைகளை அஜா பதம் கூறமாட்டாது. ஆகவே எப்படி கூறும் என்று சந்தேகம்வர இந்த சூத்திரத்தில் உத்தரம் கூறுகிறார். (21)

3. பதவுரை :—

कल्पनोपदेशात् கற்பனை உபதேசிக்கப்பட்டிருப்பதாலும்.

अविरोधः விரோதமில்லை

मध्वादिवत् மதுமுதலியவைகளிற்போல் (22)

பொழிப்புரை :—

சூரியன்முதலியவைகளை மதுமுதலியவைகளாக கற்பித்து உபதேசித்திருப்பதுபோல, தேஜஸ்முதலிய ஸ்வரூபமான மாயை ஆடுபோல் கற்பித்து உபதேசிப்பதால் அஜா சப்தம் மாயையைக் கூறுவதில்விரோதமில்லை.

பாஷ்யம் :—

1. कल्पनोपदेशात् ர இந்த அஜாபதம் தேஜஸ் முதலியவைகளில் ஆட்டுத்தன்மை இருக்கிறதாக சொல்லவில்லை. யோகார்த்தத்தையும் கூறவில்லை. இது கற்பனையை கூறுகிறது, அதாவது பிருதிவி அப்பு, தேஜஸ் இவைகள் ரூபமான ஸ்தாவர ஜங்கமங்களின் காரணத்தை அஜாரூபமாக வர்ணிக்கிறது. லோகத்தில் எதாவது ஒரு பெண் ஆடு சிவப்பு, வெளுப்பு வர்ணங்களுடன் கூடியிருக்கலாம், அநேக குட்டிகளுடனிருக்கலாம், தாய் ஆடுபோலவே இருக்கிற அந்த குட்டிகளுடனிருக்கலாம், அதை ஒரு ஆண் ஆடு பிரீதியுடன் சேரலாம். வேறு ஒரு ஆண் ஆடு இதை அநுபவித்து விட்டுவிடலாம். இதுபோலவே பிருதிவி, அப்பு, தேஜஸ் ரூபமான பிரகிருதி மூன்று வர்ணங்களுடன் கூடியிருக்கிறது. அது தன்னைப்போலிருக்கிற அநேக ஸ்தாவர ஜங்கம பிராணிகளை சிருஷ்டிக்கிறது. அவித்துவானான ஜீவனால் அது அநுபவிக்கப்படுகிறது. வித்துவானால் அது பரித்தியாகம் பண்ணப்படுகின்றது. ஒரு ஜீவன் அநுபவிக்கிறான். மற்றொரு ஜீவன் பரித்தியாகம் செய்கிறான் ஆகையால் ஜீவர்கள் அநேகம் என்பதை வாஸ்தவமென்பதாய் சாங்கியன் சொல்லியிருக்கிறானே என்று சந்தேகிக்கவேண்டியதில்லை. ர வாஸ்தவத்தில் ஜீவபேதம் ஏற்படாததினால் பிரதானவாதம் சித்திக்கிறதில்லை) இந்த சுருதி ஜீவபேதத்தைப் பிரதிபாதிக்கிறதற்காக ஏற்படவில்லை; பின்னையோ வெனின் பந்தமோக்ஷங்களிருக்கின்றன வென்பதைக் காட்டும்பொருட்டே ஏற்பட்டிருக்கிறது. ஜீவர்களின் பேதம் உலகத்தில் பிரசித்தமாயிருப்பதை அநுசரித்து பந்தமோக்ஷங்களிருப்பதாகச் சொல்லப்பட்டது. பேதமோ உபாதியைப் பொருந்தியிருக்கிறது, மித்தியாஞானத்தாலுண்டாகிறது; வாஸ்தவமன்று. பிரமாணவாக்கியம் :-

एको देवः सर्वभूतेषु गूढः सर्वव्यापी सर्वभूतान्तरात्मा (श्वे VI-II)

சகல பூதங்களிலும் மறைபட்டும் சகலத்திலும் வியாபித்தும், சகல பிராணிகளிலும் அந்தராத்மாவாயுமிருக்கிற ஈசுவரன் ஒருவனே. (24)

मध्वादिवत् எப்படி மதுவாகாத சூரியன்மது வென்றும் கரக்கிற பசுமாடாகாத வாக்கு மாடு என்றும் அக்கினியாகாத சுவர்க்கம்முதலிய லோகங்கள் அக்கினி என்றும் இப்படியே அநேகம் கற்பிக்கப்படுகிறதோ, அப்படி அஜாவாகாத பூதபிரகிருதியும் அஜா (பெண்ணாடு) என்று கற்பிக்கப்படுகிறது என்பது கருத்து. ஆகையால் பிருதிவி அப்பு தேஜஸ் இவைகள் விஷயத்தில் அஜா சப்தத்தை உபயோகிப்பதில் விரோதமில்லை. (25)

XI. பூர்வபக்ஷபலன் :-ஜகத்காரணம் பிரம்மமாகாதபடியால் வேதாந்தம் பிரம்மத்தில் தாற்பரியப்படவில்லை.

சித்தாந்தபலன் :—பிரம்மத்தில் தான் தாற்பரியப்படுகிறது. (26)

XII. வியாசாதிகரணமாலைப்படி சுருக்கம்.
சுலோகங்கள்.

अजेह सांख्यप्रकृतिस्तेजोवन्नात्मिकाऽथवा ।
रज आदौ लोहितादिलक्ष्येऽसौ सांख्यशास्त्रगा ॥
लोहितादिप्रत्यभिज्ञा तेजोवन्नादिलक्षणाम् ।
प्रकृतिं गमयेच्छ्रौतीमजाकॢप्तिर्मधुत्ववत् ॥ (27)

2. விஷயம்—சந்தேகம்:—

சுவேதாசுவதர உபநிஷத்து நான்காவது அத்தியாயத்தில்

अजामेकां लोहितशुक्लकृष्णां என்று சொல்லியிருக்கிறது. அஜா சப்தத்தால் சாங்கியசாஸ்திரத்திற் சொல்லிய பிரதானம் என்ற பிரகிருதி கூறப்பட்டிருக்கிறதா, அல்லது சாந்தோக்கிய சுருதியிற் சொல்லிய தேஜோவன்னாத்மிக பிரகிருதி கூறப்பட்டிருக்கிறதா என்பது சந்தேகம். (28)

3. பூர்வபக்ஷம்:—

பிரதானம்தான். ஏனெனின் சத்வரஜஸ்தமோ குணஸ்வரூபம் விளங்குகிறது. லோஹிதசுக்கில கிருஷ்ணவர்ணங்களே கூறப்பட்டிருந்தாலும், குணங்கள் கூறப்படாவிட்டாலும், லோஹிதாதி சப்தங்களால் குணங்கள்தான் உத்தேசிக்கப்பட்டிருக்கின்றன. இரஞ்சித்தல் சமானமாயிருக்கிறதினால் லோஹிதசப்தம் இரஜோகுணத்தைக் காட்டுகிறது. ஸ்வச்ச சாம்மியத்தால் சுக்கிலசப்தம் சத்வகுணத்தைக் காட்டுகிறது. மறைத்தல் சாம்மியத்தால் கிருஷ்ணசப்தம் தமோகுணத்தைக் காட்டுகிறது. இப்படியிருக்கிறதினால் சாங்கியசாஸ்திரத்திற் சொல்லிய பிரதானமே கிரகிக்கக்கூடியதாயிருக்கிறது. (29)

4. சித்தாந்தம்:—

यदग्नेरोहितं रूपं तेजसस्तद्रूपम् यच्छुक्लं तदपां यत्कृष्णं तदन्नस्य ।

என்பதாய் சாந்தோக்கியத்தில் தேஜோவன்னாத்மிகமான பிரகிருதிக்கு லோஹித சுக்கில கிருஷ்ண ரூபங்கள் சுருதியிலேயே கூறியதாகத் தெரியவருகிறது. இவ்விடத்தில் சுருதியினால் விளங்குவது பிரபலமானதாலும் லோஹிதாதி சப்தங்களுக்கு முக்கியார்த்தம் ஏற்படுவதாலும் தேஜோவன்னஸ்வரூபமான பிரகிருதியே अजा என்று தெரியவருகிறது. अजा சப்தம் ஆட்டைக்கூறுவதால் பிரகிருதியை ரூடியால் கூறவிட்டாலும் न जायते (பிறக்கிறதில்லை) என்கிற வசனம் பொருந்தாவிட்டாலும், (ஏனெனின் தேஜோவன்னங்கள் பிரம்மத்தினின்றும் உண்டாயிருக்கின்றன) சுலபமாய் தெரிந்துகொள்ளும்பொருட்டு அப்படி கற்பிக்கப்பட்டிருக்கிறது.

असौ वा आदित्यो देवमधु என்பதில் மதுவாயிராத சூரியனை மதுவென்று சொல்லுவதுபோலும். ஆகையால் தேஜோவன்னாத்மிகா (அதாவது தேஜஸ் அப்பு, அன்னம் இந்த ஸ்வரூபமான) பிரகிருதி अजा, சாங்கியசாஸ்திரத்திற் சொல்லியது அன்று என்பது சித்தம். (30)

I-4-2-வது அதிகரணம்
முற்றிற்று.

---

## 1-4-3வது அதிகரணத்தின்.

அநுக்கிரமணிகை.



## 1-4-3வது அதிகரணம்.

I. இதின்பெயர்:—சங்கியோபசங்கிரகாதிகரணமென்பதாம். (1)

II. இந்த அதிகரணத்தின் கருத்து:—பிராணன் சக்ஷுஸ், சுரோத்திரம், மனது, அன்னம் இவைகளைத்தான் பஞ்சபஞ்சஜன என்னும் பதங்கள் கூறும் என்பதாம். (2)

III இதின் விஷயவாக்கியம்:—

यस्मिन्पञ्च पञ्च जना आकाशश्च प्रतिष्ठितः तमेवमन्य आत्मानं विद्वान् ब्रह्म मृतोऽमृतम् (बृ-IV-4-17)

அர்த்தம்:-எதினிடத்தில் பிராணாதிகளான ஐந்தும் ஆகாசமும் இருக்கின்றனவோ அந்த அமிருதபிரம்மம் நான் என்று நினைக்கிறேன். அப்படி அறிவதினால் நான் அமிருதனாகிறேன்.

IV. சங்கதி.—

ஆ (a) முந்தின அதிகரணத்துக்கும் இதற்கும் சம்பந்தம்:—அத்தியாத்மபிரகரணத்தில் அஜாசப்தத்துக்கு ஆடு என்கிற அர்த்தம் பொருந்தாதபடியால் தேஜஸ்முதலியவைகளை அது கூறுகிறது என்று முந்தின அதிகரணத்தில் கூறப்பட்டது.

இவ்விடத்திலும் பஞ்சஜன சப்தத்தால் ஐந்து மனிதர்கள் என்ற அர்த்தத்தை கிரகிப்பதில் சுருதிக்கு தாற்பரியமிராதபடியால் அவ்வவ அர்த்தத்தைக்கொண்டு சாங்கியர்களின் தத்துவங்களை கிரகிக்கவேண்டியது என்று பூர்வபக்ஷிசொல்லுகிறபடி திருஷ்டாந்த சங்கதி ஏற்படுகிறது. (4)

(b) பாதசங்கதி.—பஞ்சஜனசப்தம் பிரதானத்தைக் கூறாதபடியால் பிரதானம் அசப்தம் என்று ஏற்படுகிறது. இதனால் சமன்வயம் திடப்படுகின்றது.

(c) மற்றசங்கதிகளை முன்போலவே அறியவும். (5)

V. சந்தேகம்:—

(1) அஜாமந்திரத்தில் சாங்கியவாதம் நிராகரிக்கப்பட்டாலும் சாங்கியன் மறுபடியும் பஞ்சபஞ்சஜன மந்திரத்தினால் தன்னுடைய வார்த்தையே கூறுகிறான்

ரா பஞ்சஜனபதம் சாங்கியர்களுடைய தத்துவத்தைக் கூறுகிறதா? அல்லது வேறு ஒன்றைக் கூறுகிறதா?

(2) சந்தேகபீஜம்:—பஞ்சஜனபதத்துக்கு ரூடி அர்த்தம் அதாவது பிரசித்தமான அர்த்தம் மனிதர்

கள். இது அத்தியாத்மப் பிரகரணத்தில் பொருந்தாது. அவயவ அர்த்தத்தை எடுத்துக்கொள்ளும் பக்ஷத்தில் ஜனனமுள்ள 25 என்று அர்த்தமாகும். இதுவும் பொருந்தவில்லை. ஆகையால் சந்தேகம் (6)

VI. இதிலடங்கிய சூத்திரங்கள் 3 (11-12-13-வது) இவைகளில்

11-ல் பஞ்சஜன சப்தம் சாங்கியதத்துவத்தைக் கூறவில்லை, ஒருபொருளைக் கூறுகிறதென்றும்

12-ல் அந்தபொருள் யாது என்பதும்

13-ல் பிராணாதிதான் என்பதும் விவரிக்கப்படுகின்றது. (7)

VII. பூர்வபக்ஷம்:—இந்த மந்திரத்தில் பஞ்சபஞ்சஜன என இரண்டு பதங்களிருக்கின்றன. ஒன்று ஐந்து என்கிற எண்ணிக்கையைக் கூறுகிறது. மற்றொன்றும் ஐந்து என்பதைக் கூறுகிறது. இந்த இரண்டு ஐந்துகளால் ஐந்துஐந்து அதாவது 25 என்று ஏற்படுகிறது. ஆகவே இந்த இருபத்தைந்து என்கிற எண்ணிக்கையால் எத்தனை பதார்த்தங்கள் கூறப்படலாமோ அத்தனை தத்துவங்களையே சாங்கியர்கள் ஒப்புக்கொள்ளுகிறார்கள்.

சாங்கியகாரிகையில் சொல்லியதாவது:—

मूलप्रकृतिरविकृतिर्महदाद्याः प्रकृतिविकृतयः सप्त षोडशकश्च विकारो न प्रकृतिर्नविकृतिः पुरुषः

அர்த்தம்:—

ஈ ஜகத்தின் மூலகாரணமான பிரகிருதி சத்வ ரஜஸ்தமஸ் ஆகிய முக்குணங்களின் சமான அவஸ்தை இதற்குப் பிரதானமென்றுபெயர். இது எதினுடையவும் காரியமாக இராமையால் இது அவிகிருதி எனப்படும். விகிருதி என்றால் காரியம், மஹத்து, அஹங்காரம், பஞ்சதன்மாத்திரைகள் ஆகிய ஏழும் பிரகிருதி விகிருதிகள். பிரதானத்தினின்றும் மஹத்து உண்டாவதால் அது விகிருதி. மஹத்தினின்றும் அஹங்காரமுண்டானதால் மஹத்து பிரகிருதி. முன்னிருப்பதற்கு பின்னிருப்பது விகிருதி என்றும், பின்னிருப்பதற்கு முன்னிருப்பது பிரகிருதி என்றும் சொல்லப்படும். தாமஸ அஹங்காரம் சப்தாதி பஞ்சதன்மாத்திரைகளுக்கு பிரகிருதி சாத்விக அஹங்காரம் பதினொன்று இந்திரியங்களுக்கும் பிரகிருதி. பஞ்சதன்மாத்திரைகளும் ஆகாசம் முதலிய ஐந்துஸ்தூல பூதங்களுக்கும் பிரகிருதிகளாம். ஐந்து ஸ்தூலபூதங்களும் பதினொரு இந்திரியங்களும் ஆக பதினாறும் விகிருதிகள் பிரகிருதிகளன்று. புருஷன் ஒன்றினால் உண்டாகாததினால் விகிருதியன்று; புருஷனிடமிருந்து ஒன்றும் உண்டாகாததினால் பிரகிருதியுமன்று. உதாசீனன் என்னும் சங்கியை இந்த சுருதியிலிருக்கிற 25 சாங்கியஸ்மிருதியிலிருக்கிற 25 தத்துவங்களைக் கூறுமாகையால் பிரதானாதிகளுக்கு சுருதி ஆதாரம் ஏற்படுகிறது. (8)

VIII. இப்படி பூர்வபக்ஷிசொல்ல வியாசர் சித்தாந்தத்தை

## न संख्योपसंग्रहादपि नानाभावादतिरेकाच्च । ११

என்கிற சூத்திரத்தில் கூறுகிறார். (9)

பதஉரை:—

संख्योपसंग्रहात् அபி சங்கியை கிடைத்தாலுங்கூட

न இல்லை

नानाभावात् அநேகங்கள் இருப்பதாலும்

अतिरेकाच्च அதிகமிருப்பதாலும் (10)

3. பொழிப்புரை:—

சாங்கிய தத்துவங்களின் சங்கியையை சொன்னமாத்திரத்தினால் பிரதானத்துக்கு சுருதி ஆதாரம் கிடைத்தது என்று சொல்லமுடியாது. ஏனெனின் தத்துவங்கள் நாநா அதாவது தனித்தனியாயிருக்கின்றன. சங்கியையும் அதிகப்படுகிறது. (11)

4. பாஷ்யம்:—

1. न சங்கியை கிடைத்ததைக்கொண்டு பிரதானம் முதலியவைகளுக்கு சுருதி ஆதாரம் இருக்கிறதென்று நினைக்கவேண்டாம். ஏனெனின், (12)

2. नानाभावात् இந்த இருபத்தைந்து தத்துவங்களும் நாநாவாயிருக்கின்றன. இவைகளுக்குள் அவ்வைந்து அவ்வைந்துக்கும் பொதுவான தர்மம் இல்லை. ஒரு சாதாரணமாகிறகாரணமன்றியில் அநேகபதார்த்தங்களுக்குள் இரண்டு இரண்டாக மூன்று மூன்றாக, இப்படியே மேன் மேலும் பிரிக்கக்காரணமில்லை. (ஆகையால் $5 \times 5$ என்று சாங்கியன் சொல்லுகிறபடி வகுப்பு ஏற்படாததினால் 25 என்பதும் ஏற்படவில்லை.) சாங்கியன் அடிபிற்கண்டபடி சொல்லுவானேயானால்:—

ஆ பஞ்ச பஞ்ச என்கிற இரண்டு பதங்களும் ஸ்வல்பதுகையை கூறினாலும் 25 என்கிற பெருந்துகையைத்தான் லக்ஷியார்த்தத்தால் கூறுவதாகச் சொல்லுவோமே. அப்படியே

पञ्च सप्त च वर्षाणि न वर्ष शतक्रतुः

(ஐந்து ஏழு அதாவது 12 வர்ஷங்கள் இந்திரன் வர்ஷிக்கவில்லை.)

என்கிற இடத்தில் பெருந்துகையாகிய 12-யை அற்ப எண்ணிக்கைக்கூறுகிறது. இதுபோல் இவ்விடத்திலும் சொல்லுவோம்.

அதுவும் பொருந்தமாட்டாது. இந்த பக்ஷத்தில் லக்ஷணையால் அர்த்தம்சொல்லுவதேதோஷம். 13

ரா இதுவரையில் பஞ்ச ஜன இரண்டுசப்தங்களையும் வெவ்வேறாக வைத்துக்கொண்டு சாங்கியனுடைய 25 என்கிற துகை சித்திக்கவில்லை என்று நிரூபிக்கப்பட்டது. இனி ஒரேபதம் என்கிற நிச்சயமிருப்பதாலும் சாங்கியமதம் சித்திக்கவில்லை என்பதை கூறுகிறார்)

வியாகரணத்தில் समासस्य என்கிற VI-1-223-வது சூத்திரப்படிக்கும் VI-1-158-வது சூத்திரப்படிக்கும், சதபதப் பிராமணத்தின் ஸ்வரத்தை விதிக்கும் பாஷிகா என்னும் கிரந்தத்திற் சொல்லியபடிக்கும் பஞ்ச-ஜன இவைகளின் ஸ்வரத்தினால் இவைகள் சேர்ந்து ஒரேபதம் என்று நிச்சயமாகிறது.

தைத்திரீயத்தில் I-6-2 2-ல் पञ्चानां त्वापञ्च जनानां என்கிற இடத்தில் பஞ்ச என்பது ஒருபதமாயிருப்பதுபோல் பஞ்சஜனமும் ஒருபதமாயிருக்கிறது. இரண்டு பதங்களின் ஸ்வரமும் ஒன்றே. வேற்றுமையும் ஒன்றே. ஸ்வரத்தினாலும் வேற்றுமையினாலேயும் பஞ்சஜனம் ஒருபதம் என்று தெரியவருகிறது.

இப்படி பஞ்சஜன என்பது ஒருபதமாக இருப்பதினால் பஞ்ச-பஞ்ச என்பதாய் இரட்டித்தல் சம்பவிக்கவில்லை.

ரா (ஆகையால் 25 என்கிற லக்கம் ஏற்படவில்லை என்பது கருத்து.) (14

ஆ பஞ்ச-பஞ்ச என்று வெவ்வேறு பதமாக கிரகித்தாலும் 10 தத்துவங்கள் சித்திக்குமேதவிர சாங்கியனுடைய 25 தத்வங்கள் சித்திக்கமாட்டா. (15)

ரா மேலும் வெவ்வேறு பதங்களாக வைத்துக்கொள்ளும் பக்ஷத்திலும்,

(1) பஞ்ச-பஞ்ச பதங்கள் ஒன்றுக்கொன்று விசேஷணமா?

(2) இரண்டும் ஜனசப்தத்துக்கு விசேஷணமா?

(3) அல்லது முதலாவது பஞ்சசப்தம் பஞ்சஜன என்கிற சமுதாயத்துக்கு விசேஷணமா?

(1) முதலாவது பக்ஷம் கூடாது.

ரா ஏனெனின் அப்பிரதானமான இரண்டு விசேஷணங்களுக்குள் ஒன்றுக்கொன்று விசேஷணமாக மாட்டாது. குணங்களுக்குள் ஒன்று மற்றொன்றுக்கு விசேஷணமானால் வாக்கியபேதம் ஏற்படும்.

ஸ (2) இரண்டாவதும் கூடாது. ஏனெனின் 10 என்கிற சங்கியை ஏற்படுமேதவிர 25 என்பது ஏற்படமாட்டாது.

(3) மூன்றாவது பக்ஷம்:—

பஞ்சஜநா: என்பதினால் 5 ஜனங்கள் என்று ஏற்படுகிறது. இந்த பஞ்சஜநா: என்பதற்கு பஞ்ச என்கிற விசேஷணமிருப்பதினால் 25 ஜனங்களை அறிவோமே. पञ्च पञ्चपूल्यः என்கிற இடத்தில் 25 பூலங்களை அதாவது கட்டுகளை அறிவதுபோலும்.

இது சரியன்று. பஞ்சபூலி சப்தத்துக்கு சமுதாயம் அபிப்பிராயமானதால் எத்தனை பஞ்சபூலிகளிருக்கின்றனவென்று கேள்வி ஏற்படும்போது ஐந்து என்கிற விசேஷணத்தைக்கொடுத்து 5 பஞ்சபூலிகள் இருக்கின்றன என்று சித்திக்கும். இவ்விடத்திலோ பஞ்சஜநா என்கிற பதமே பேதத்தைக்கூறுகிறது. எப்படியெனின்,

ஞ பஞ்சாநாம் + பூலாநாம் + சமாஹார:=பஞ்சபூலீ என்பதுபோல், பஞ்சஜனபதத்துக்கு சமுதாய அர்த்தம் இருக்கும்பக்ஷத்தில் பஞ்சாநாம் + ஜநாநாம் + சமாஹார:=பஞ்சஜனீ என்று பதம் ஏற்படவேண்டும். அப்படியிராதபடியால் சமுதாய அர்த்தம் சித்திக்கவில்லை. ஆகவே பதத்தாலேயே பேதம்சித்திக்கிறது. ஆனதால் எத்தனை பஞ்சஜநா என்று கேட்கவே யிடமில்லை ஆகையால் பஞ்ச என்கிற விசேஷணத்துக்கு மிடமில்லை.

ரா ஜனங்களுடைய சங்கியை கேட்கவில்லை. ஜன சப்தத்துக்கு விசேஷணமான பஞ்ச ஐந்து என்பது எத்தனை என்றுகேட்க ஐந்து என்றே ஆகட்டுமே எனின்.

முன்சொன்ன தோஷமே அதாவது விசேஷணங்களுக்குள் ஒன்றுக்கு ஒன்று விசேஷணம் என்கிற தோஷமே ஏற்படுகிறது. ஆகையால் பஞ்சபஞ்சஜநா என்பதினால் 25 தத்துவங்களை அறியக்கூடாது. (16)

(3) अतिरेकात् च அதிகப்படுவதினாலேயும் பஞ்சபஞ்சஜனபதத்தால் 25 தத்துவங்களை அறியக்கூடாது. ஆத்மாவாலும் ஆகாசத்தாலும் தத்துவங்களே 25-யை அதிக்கிரமிக்கின்றன. இந்தவிஷயவாக்கியத்தில் எதினிடத்தில் பஞ்சமுதல் ஆகாசம்வரையிலுள்ளவைகள் இருக்கின்றனவோ அதையே ஆத்மாவாக நினைக்கிறேன் என்று சொல்லியிருப்பதால் இவைகளுக்கு ஆத்மா ஆதாரமாக ஏற்படுகிறது. ஆத்மா சேதனமான புருஷன். இவன் சாங்கியமதத்தில் 25 தத்துவங்களுக்குள் அடங்கியிருக்கிறவன். ஆகவே ஒரு ஆத்மா ஆதாரமாயும் அடங்கினதாயும் இருக்க மாட்டான். 25 தத்துவங்களுக்குள் அடங்கவில்லை என்று சொல்லும்பக்ஷத்தில் தத்துவங்களின் எண்ணிக்கை அதிகப்பட்டு சாங்கிய சித்தாந்தத்துக்கு விரோதம்வரும்.

அப்படியே आकाशश्च प्रतिष्ठितः என்பதினால் (25) தத்துவங்களுக்குள் சேர்ந்திருக்கிற ஆகாசத்தை தனியாகச்சொல்லுவதில் பிரயோஜனமில்லை. 25-க்குள் அகப்படவில்லை என்றுசொல்லும்பக்ஷத்தில் முன்சொன்ன தோஷமே ஏற்படுகிறது.

25 என்கிற சங்கியையே சொல்லியிருந்தாலும், 25 தத்துவங்களை சுருதி சொல்லாமலிருக்க, அவைகளை சொன்னதாக கிரகிக்கலாம், ஜனசப்தத்துக்கு தத்துவம் என்கிற அர்த்தம் ஏற்படவில்லையே. ஜனசப்தத்துக்கு வேறு அர்த்தத்தைச் சொன்னதினாலும் 25 என்கிற சங்கியை ஒட்டிப்போகிறது. (ஆகையால் தத்துவம் என்கிற அர்த்தம் எவ்விதத்திலும் பொருந்தவில்லை.)

அப்படியானால் पञ्चपञ्च जना என்பதற்கு அர்த்தம் எப்படி? दिक्संख्ये संज्ञायाम् என்கிற வியாகரண (II-1 50) சூத்திரத்தில் திக்கைக்கூறும் சப்தமும் சங்கியைக்கூறும் சப்தமும் வேறு ஒரு பதத்துடன்சேர்த்து ஒரு பொருளைக் குறிப்பிடும்போது ஸம்பந்தமான மேல்பதத்துடன் சேரும் தக்ஷிணாக்கினி: ஸப்தர்ஷய: என்பதுபோலும் என்றுசொல்லியிருக்கிறது. ஆகவே பஞ்சசப்தமும் ஜனசப்தமும் சேர்ந்து ஒருபொருளைக் கூறுகிறது. ஆகவே பஞ்சஜநா என்பது ஏதோ ஒன்று என்று சொல்லப்படுகின்றதேதவிர சாங்கியதத்துவாபிப்பிராயத்துடன் இந்தபதம் சொல்லப்படவில்லை.

அவைகள் எத்தனை என்றுகேட்க மறுபடியும் பஞ்ச என்று உத்தரம் ஏற்பட்டது. பஞ்சஜநாஎன்பவர்கள் சிலர். அவர்கள் பஞ்ச என்று அர்த்தம். 18

சப்தரிஷிகள் ஏழு என்பதுபோலும்.

### I-4-12-வது சூத்திரம்

## प्राणादयो वाक्यशेषात् । १२ (19)

2. முந்தின சூத்திரத்துக்கும் இதற்கும் சம்பந்தம்:—(ரா முந்தின சூத்திரத்தில் பஞ்சஜன சப்தம் ஒருபொருளைக் கூறும் என்று சொல்லி) அந்த பஞ்சஜனா: என்பவைகள் எவைகள் என்பதை இந்த சூத்திரத்தில் கூறுகிறார்.

ஜ பஞ்சஜனசப்தத்துக்கு கோசங்களால் மனிதன் என்று அர்த்தமானாலும் அந்த அர்த்தம் பிரகிருதத்தில் ஒட்டாதபடியால், இந்தபதத்தின் அர்த்தத்தை விசாரிக்கும்படி நேரிட்டது. (20)

3. பதஉரை.—

वाक्यशेषात् வாக்கிய சேஷத்தினால்

प्राणादयः பிராணன் முதலானவைகள். (21)

4. பொழிப்புரை:—

பிந்தின வாக்கியத்தினால் பஞ்சஜநா: என்பது பிராணன் முதலியவைகள் என்று தெரியவருகிறது. 22

5. பாஷ்யம்:—

यस्मिन् पञ्च पञ्च जनाः என்கிறதற்கு மேல்வாக்கியத்தில் பிரம்மஸ்வரூபத்தை நிரூபிக்கும்பொருட்டு

प्राणस्य प्राणमुत चक्षुषश्चक्षुरुत श्रोत्रस्य श्रोत्रमन्नस्यान्नं मनसो ये मनो विदुः ।

(அதாவது:—எவர்கள் பிராணனுடையவும் பிராணனை, சக்ஷுஸ்ஸுக்கும் சக்ஷுஸ்ஸை, சுரோத்திரத்திரத்துக்கும் சுரோத்திரத்தை, அன்னத்துக்கும் அன்னத்தை, மனதிற்கும் மனதை அறிகிறார்களோ அதாவது பிராணாதிகளை பிரேரணைசெய்து அவைகளுக்கு சாட்சியாயிருக்கிற ஆத்மாவை எவர்கள் அறிகிறார்களோ அவர்கள் பிரம்மவித்துக்கள்.)

என்பதாய் பிராணன் முதலியவைகள் குறிப்பிடப்பட்டிருக்கின்றன. இந்த வாக்கியசேஷத்திலிருக்கிறவைகளே சமீபத்திலிருப்பதினால் பஞ்சஜநா: என்று கூறப்படுகின்றன.

பஞ்சஜனசப்தம் பிராணாதிகளை எப்படி கூறலாம்? தத்துவத்தைத்தான் ஜனசப்தம் எப்படிகூறலாம்? பிரசித்தமான அர்த்தத்தைவிட்டு வேறு அர்த்தத்தை சொல்லுவது அதாவது रा சாங்கியன் தத்துவத்தை ஜனசப்தம் லக்ஷணையால் கூறுவதாக சொல்லுவதும் வைதிகன் பிராணாதிகளை பஞ்சஜனசப்தம்லக்ஷணையால் கூறுவதாகச் சொல்லுவதும் சமானமாயிருந்தாலும், (ஆ பிராணாதிகளை அறிகிறதா அல்லது சாங்கியதத்துவங்களை அறிகிறதா என்று கேள்வி ஏற்பட்டால்) பின்தின வாக்கியபலத்தால் பிராணாதிகளையே கிரகிக்கத்தக்கவை யாகின்றன

மேலும் பிராணாதிகளுக்கு பஞ்சஜன அதாவது மனிதனுடைய சம்பந்தமிருப்பதால் பஞ்சஜனசப்தம் லக்ஷணையால் பிராணாதிகளைக் கூறலாம்.

மனிதனைக் கூறும் புருஷசப்தம் பிராணனிடத்தில் பிரயோகிக்கப்பட்டிருக்கிறதாக ते वा एते पञ्च ब्रह्म पुरुषाः (இந்த ஐந்துபிராணன்களும் பிரம்மபுருஷர்கள்) என்கிற சாந்தோக்கியம் III-13-6-வது சுருதியாலும் प्राणो ह पिता प्राणो ह माता (பிராணன் பிதா பிராணன் மாதா) என்கிற சாந்தோக்கிய VII-15-1 வசனத்தாலும் தெரியவருகிறது.

ஜனசம்பந்தத்தால் முந்தின பாஷ்யத்தில் பஞ்சஜனசப்தத்துக்கு மனிதன் என்கிற ரூடிஅர்த்தத்தை ஒப்புக்கொண்டு லக்ஷணையால் இது பிராணனைக்கூறலாம் என்று சொன்னதை பூர்வபக்ஷி ஆக்ஷேபித்து (रा) जन சப்தத்துக்கு ஜாயந்தே இதிஜநா: அதாவது உண்டாவதினால் மஹத்முதலியவைகளையாவது ஜநகத்வாத்ஜநா: அதாவது உண்டுபண்ணுகிறதினால் பிரதானத்தையாவது யோகத்தால் அறியலாமே என்றுசொல்ல

रा (சித்தாந்தி) எப்படி அசுவகர்ண என்கிற சப்தம் ஒன்றாக இருப்பதால் அதற்கு விருக்ஷம் என்கிற ரூடிஅர்த்தம் சித்திக்கிறதோ அப்படி பஞ்சஜனசப்தத்துக்கும் பிராணன் என்பதே ரூடிஅர்த்தம் என்றுசொல்லிவிடுகிறோம்.

பஞ்சஜனபதத்துக்கு பிராணன் என்கிற அர்த்தத்தில் முன்னோர்கள் பிரயோகிக்காதவரையில், இந்த அர்த்தத்தை எப்படி ஒப்புக்கொள்ளலாம். உத்பித் முதலிய பதங்கள் விஷயத்தில்போல ஒப்புக்கொள்ள முடியும்.

பிரசித்தமாயிராத விஷயத்தைக்கூறும் பதம் பிரசித்தமானவிஷயத்தைக் கூறும்பதத்துடன் சேர்த்துச் சொல்லுவதினால் பிரசித்தமான அர்த்தத்தையே கூறும். திருஷ்டாந்தம்:—

(1) उद्भिदा यजेत अதாவது உத்பித்தினால் யாகம் செய் என்கிற இடத்தில் உத்பித் என்கிற பதத்துக்கு லோகத்தில் பிரசித்தமான அர்த்தம் ஏற்படவில்லை. ஆகையால் இது சாதனவிசேஷமாய் அறிகிறதா அல்லது ஒரு கர்மத்தின் பெயரா என்று சந்தேகம்வரக்கூடும். சாதனம் என்று அறியும்பக்ஷத்தில் முன் ஒருயாகம் பிரஸ்தாபிக்கப்பட்டிருக்கவேண்டும். அந்த பிரகரணத்தில் உத்பித்தினால்யாகம் செய்யவேண்டும் என்று சொல்லியிருப்பதால் உத்பித்என்பது ஒரு சாதனத்தைக்கூறலாம். ஆனால் அப்படி வேறு பிரகரணம் ஏற்படவில்லை. உத்பிதாயஜேத என்றே பிரகரணம் ஆரம்பிக்கிறது. ஆகையால் இது சாதனத்தைக்கூறமாட்டாது. ஒருகிரியையின் பெயரைத்தான் கூறும். எந்த கர்மத்தைக்கூறலாம் என்றுயோஜிக்குமளவில் யஜேத என்பதில் யாககர்மம் விளங்குவதால் உத்பித் என்பதும் யாகத்தைத்தான் கூறவேண்டும் என்று தெரியவருகிறது. ஆகவே உத்பிதாஎஜேத என்பதினால் உத்பித் என்னும் யாகத்தால் யாகம் செய்என்றும் அர்த்தம் ஏற்படுகிறது.

रा (2) यूपं छिनत्ति அதாவது யூபத்தைச்சேதிக்கிறான் என்கிற இடத்தில் யூபசப்தத்துக்கு அர்த்தம் விளங்காவிட்டாலும் சேதிக்கிறான் என்றுசொல்லியிருப்பதால் அந்த கர்மத்துக்கு விஷயமாகக்கூடிய ஒருகட்டைவிசேஷமே யூபபதத்தால் அர்த்தமாகவேண்டும்.

ब्र (3) वेदिं करोति அதாவது வேதியை செய்கிறான் என்கிற இடத்தில் வேதி என்பதற்கு அர்த்தம் விளங்காவிட்டாலும் चतुरंगुलं खनति पुरीषवती करोति அதாவது நான்குவிரல் கொத்துகிறான். சாணியுடன்கூடினதாகச் செய்கிறான். இவைமுதலிய வாக்கியங்கள் பிரகரணத்தில் ஏற்பட்டிருப்பதால் கொத்தி, மெழுகி முதலிய காரியங்களால் வேதி என்பது ஒரு ஸ்தலத்தைத்தான் கூறும்என்று தெரியவருகிறது.

இதுபோல் இவ்விடத்தில் பஞ்சஜனசப்தம் ஏகபதமாயிருப்பதால் இது ஒருபொருளைக் கூறவேண்டும். இது எது என்று விசாரிக்குமளவில் வாக்கியசேஷத்தில் பிராணாதிகளைக் கூறியிருப்பதால் பஞ்சஜன சப்தமும் பிராணாதிகளைத்தான் கூறும் என்று தெரியவருகிறது.

(23)

சிலர் பஞ்ச-பஞ்சஜனசப்தங்களால் தேவதை

கள், பிதிருக்கள், கந்தர்வர்கள், அசுரர்கள், இராக்ஷஸர்கள் ஆகிய ஐவரை அறிகிருர்கள்.

ர வேறு சிலர் பஞ்சஜனசப்தத்தால் பிரம்ம க்ஷத்திரிய வைசியசூத்திரர் ஆகிய நான்கு சாதிகளையும் சூத்திரஸ்திரீயினிடத்தில் பிராமணனுலுண்டான நிஷாத சாதியையும் அறிகிருர்கள்.

ர (சுருதியினுலும் பஞ்சஜன பதத்துக்கு பிரஜை என்கிற அர்த்தம் கிடைக்கிறது. எப்படியெனின்)

यत् पाञ्चजन्यया विशा

என்கிற ரிக்-சம்ஹிதை VIII-53-7-வது ரிக்கில் பஞ்சஜனசப்தத்துக்கு பிரஜை என்கிற அர்த்தம் ஏற்பட்டிருக்கிறது. ஆகையால் பிராணிகள் என்கிற அர்த்தத்தை கிரகிப்பதிலும் விரோதமில்லை.

ஆசாரியரோ (வியாசர்) பஞ்சஜனசப்தம் 25 தத்துவங்களை கூறவில்லை என்பதை प्राणादयो वाक्यशेषात् என்கிற இந்த சூத்திரத்தினுல் தெரிவித்தார். (24)

I-4-13-வது சூத்திரம்.

ज्योतिषैकेषामसत्यन्ने । १३ (25)

உ. முந்தின சூத்திரத்துக்கும் இதற்கும் சம்பந்தம்:—மாத்தியந்தினர்கள் பிராணுதிகளுக்குள் அன்னத்தைப் படித்திருக்கிருர்கள். ஆனதால் பஞ்சஜன சப்தம் பிராணுதிகளைக் கூறட்டும். காண்வர்கள் பிராணுதிகளுக்குள் அன்னத்தை படிக்கவில்லையே அவர்களுடைய பாடப்படி பஞ்சஜனபதம் பிராணுதிகளை எப்படிகூறும். இந்த சங்கைக்கு இதில் உத்தரம் கூறப்படுகிறது. (26)

3. பதஉரை—

एकेषां காண்வர்களுக்கு

अन्ने அன்னம்

असति இல்லாதபடியால்

ज्योतिषा ஜோதியால்

पञ्चसङ्ख्या पूर्यते ஐந்து என்கிற சங்கியை பூர்த்தியாகிறது. (27)

4. பொழிப்புரை:—

காண்வசுருதியில் அன்னத்தைப் படிக்காமலிருந்தாலும் ஜோதிஸ் சப்தத்தால் ஐந்து என்கிற சங்கியை பூர்த்தியாகிறது. (28)

5. பாஷ்யம்:—

காண்வசுருதியில் அன்னம் படிக்கப்படாவிட்டாலும் ஜோதிஸ் சப்தத்தால் அவர்களுடைய ஐந்து என்கிற சங்கை பூர்த்தியாகிறது. அவர்களும்

यस्मिन् पञ्च पञ्च जनाः

என்பதற்கு முந்தின மந்திரத்தில் பிரம்மஸ்வரூபத்தை நிச்சயிக்கும்பொருட்டு

तद्देवा ज्योतिषां ज्योतिः

ர அதாவது சூரியாதிகளாகிற ஜோதிஸுகளுக்கு ஜோதிஸாயிருக்கிற பிரம்மத்தை தேவதைகள் உபாசிக்கிருர்கள்:—

என்பதாய் ஜோதிஸை படித்திருக்கிருர்கள்.

இந்த ஜோதிஸ் இருவர்களுக்கும் சமானமாயிருக்கும்போது இருவர்களுக்கும் சமானமாயிருக்கிற பஞ்சபஞ்சஜன மந்திரத்தினுல் எப்படி சிலர் 5-யை கிரகிக்கலாம். சிலர் கிரகிக்காமலிருக்கலாம். எனின் அபேக்ஷையில் பேதமிருக்கிறதென்று சொல்லுகிருர். மாத்தியந்தினர்களுக்கு ஒரேமந்திரத்தினுல் பஞ்சஜன சப்தத்துக்கு பிராணுதிகள் அர்த்தம் என்று தெரிய வருவதினுல் வேறு மந்திரத்திற்கூறிய ஜோதிஸ்ஸின் அபேக்ஷையில்லை. காண்வர்களுக்கு அப்படி அர்த்தமாகாமையால் ஜோதிஸ்ஸின் அபேக்ஷயிருக்கிறது. மந்திரம் ஒன்ருயிருந்தாலும் அபேக்ஷா பேதத்தால் கிரகிப்பதும், கிரகிக்காமையும் ஏற்படுகிறது. அதிராத்திரம் என்கிற யாகத்தில்

अतिरात्रे षोडशं गृण्हाति
नाति रात्रे षोडशं गृण्हाति

என்பதாய் வாக்கியபேதத்தால் ஷோடசத்தை கிரகிப்பதும், கிரகிக்காமையும் ஏற்பட்டிருக்கிறது போல் சாகாபேதத்தால் அன்னத்தை படித்தவிடத்தில் ஜோதிஸை கிரகிக்காமையும், படிக்காதவிடத்தில் ஜோதிஸை கிரப்பதும் சித்திக்கிறது.

ர (திருஷ்டாந்தத்தால் கிரியை செய்கிறதா செய்கிறதில்லையா என்று விகல்பம் வரக்கூடும். வஸ்து விஷயத்தில் வரக்கூடுமா ? எனின்

ஒருசாகையால் அன்னசகித பிராணுதிகளும் மற்ருெரு சாகையில் ஜோதிஸ் சகிதபிராணுதிகளும் எந்த இடத்தில் பிரதிஷ்டிதங்களாயிருக்கின்றனவோ

அதை மனதினால் பார்க்கத்தக்கது என்பதாய் தியான கிரியை கூறப்பட்டிருப்பதால், விகற்பம் கூடும் தோஷமில்லை.

இப்படியிருப்பதினால் பிரதானத்துக்கு ஆகாரமாக யாதொரு சுருதியுமில்லை. ஸ்மிருதியிலும் நியாயத்திலும் ஆதாரமில்லை என்பதை II-1-ல் காட்டுவோம். (29)

XI. பூர்வபக்ஷபலன்:— பிரதானத்துக்கு சுருதி ஆதாரமானால் கதிசாமான்னியம் சித்திக்கவில்லை.

சித்தாந்தபலன்:—பிரதானம் அசப்தமாகையால் கதிசாமான்னியம் சித்திக்கிறது. (30)

XII. வியாசாதிகரணமாலைப்படி சுருக்கம்.

1. சுலோகங்கள்:—

पञ्च पञ्च जनाः सांख्यतत्वान्याहो श्रुतीरिताः
प्राणाद्याः सांख्यतत्वानि पंचविंशति भासनात् ॥
न पञ्चविंशतेर्भानमात्माकाशातिरेकतः ।
संज्ञा पञ्चजनेत्येषा प्राणाद्याः संज्ञिनः श्रुताः ॥

2. விஷயவாக்கியம்:—

பிரஹதாரணியகத்தில் 6-வது அத்தியாயத்தில்

यस्मिन्पञ्च पञ्चजना आकाशश्च प्रतिष्ठिताः ।
तमेवमन्य आत्मानं विद्वान्ब्रह्मामृतोऽमृतम् ॥

என்று சொல்லியிருக்கிறது.

இதற்கு அர்த்தம்:—ஐந்து பஞ்சஜனா: ஆகாசம் எதினிடத்தில் இருக்கின்றதோ, அந்த ஆசிரயத்தையே ஆத்மா, அமிருத, பிரம்மமாக நினைக்கிறேன்.()

3. சந்தேகம்:— இவ்விடத்தில் பஞ்ச-பஞ்சஜநா: என்று சொல்லப்பட்ட பொருள்கள் சாங்கியசாஸ்திரத்திற் சொல்லிய தத்துவங்களா? அல்லது சுருதியிற்சொல்லிய பிராணன், சக்ஷுஸ், சுரோத்திரம், மனது, அன்னம் இவைகளா? என்பது சந்தேகம்.()

4. பூர்வபக்ஷம்:-சாங்கிய தத்துவங்களே. ஏனெனின் சாங்கிய சாஸ்திரத்திற்சொல்லிய 25 லக்கமே இவ்விடத்திலும் விளங்குகிறது. எப்படியெனின்; 'பஞ்ச பஞ்ச என்று இரண்டு சப்தங்களிருக்கின்றன. ஒரு பஞ்சசப்தத்தால் 5 தத்துவங்கள் தெரியவருகின்றன. இரண்டாவது பஞ்சசப்தத்தால் இதற்கு விஷயமான வேறு ஐந்து தெரியவருகிறது. ஆகவே ஐந்துடன்கூடிய ஐந்து தத்துவகூட்டங்கள் தெரியவருகின்றன. ஆகவே ஐந்து ஐந்து சமுதாயத்தால் 25 ஏற்படுகிறது. (33)

5. சித்தாந்தம்:-இது 25 ஆகமாட்டாது. ஏனெனின் இவைகளுக்கு ஆசிரயமான ஆத்மா ஒன்று விளங்குகிறது. இந்த ஆத்மா இவைகளுக்குள் சேரமாட்டாது. அப்படியிருந்தால் ஒன்றே ஆதாரமாயும் ஆதேயமாயுமிருக்கும். இது அசம்பாவிதம். ஆகாசம் ஒன்றும் தனியாகச் சொல்லப்பட்டிருக்கிறது. அதுவும் 25-க்குள் அடங்கினதாகமாட்டாது. ஆகவே ஆத்மா ஆகாசம் இவைகளுடன் 27 ஏற்படுவதால் சாங்கிய தத்துவங்களை ஒப்புக்கொள்ள இடமில்லை.

அப்படியானால் வாக்கியார்த்தமென்ன? பாணனீ சூத்திரம் II-1-50-வது படி பஞ்சஜனசப்தம் ஒருபொருளைக் கூறுகிறது. பஞ்சஜன சப்தத்தால் கூறப்பட்ட பதார்த்தங்கள் ஐந்து என்று ஏற்படுகிறது. இந்த பதார்த்தங்கள் பிந்தின வாக்கியத்தால் பிராணாதிகள் என்று தெரியவருகிறது. இந்தவாக்கியத்தில் பிராணாதிகளின் ஐந்துக்கு சாக்ஷியான ஆத்மா இரண்டாவது பிராணசப்தத்தால் கூறப்படுகிறது. ஆகையால் வாக்கியசேஷத்தால் பிராணாதிகளே பஞ்சஜனா: என்று ஏற்படுகிறது. (34)

1-4-3-வது அதிகரணம்

முற்றிற்று.

---

## I-4-4-வது அதிகரணத்தின்

### அனுக்கிரமணிகை.



---

## I 4-4-வது அதிகரணம்.

I. இதின் பெயர் :—காரணத்வாதிகரணமென்பதாம். (1)

II. இந்த அதிகரணத்தின் கருத்து :—சகல வேதாந்தங்களும் ஜகத்காரணமான பிரம்மத்தையே கூறுகின்றனவென்கிற விஷயத்தில் தோன்றும் ஆக்ஷேபங்களுக்குச் சமாதானம். (2)

III. இதின் விஷயவாக்கியம் :—

ஜகத்காரணத்தைப் பிரதிபாதிக்கும் சுருதிகள். (3)

IV. சங்கதி :—

(a) முந்தின கிரந்தத்துக்கும் இதற்கும் :—

முதல் பாதத்தில் முதலில் பிரம்மம் ஜகத்காரணமென்பதாய் பிரம்மத்தில் லக்ஷணம் கூறப்பட்டது. பிறகு ईक्षतेर्नाशब्दं என்கிற அதிகரணத்தில் வேதத்திற் கூறப்படாத பிரதானம் ஜகத்காரணமாகமாட்டாது என்று நிரூபிக்கப்பட்டிருந்தாலும், சிலவாக்கியங்களால் பிரதானம் ஜகத்காரணமாகலாமென்று மறுபடியும் ஆக்ஷேபம் வர, இந்த ஆக்ஷேபம் முந்தின மூன்று அதிகரணங்களில் பூராவாக நிராகரிக்கப்பட்டது.

ஈக்ஷதி அதிகரணத்திலேயே சகல வேதாந்தங்களுக்கும் பிரம்மத்தில் தாற்பரியம் என்று நிரூபிக்கப்பட்டிருந்தாலும், சில வாக்கியங்களில் இதற்கு விருத்தமான அர்த்தம் தோன்றுகிறதே, ஆகையால் வேதாந்தங்களுக்கு பிரம்மத்தில் தாற்பரியம் என்பது நிச்சயப்படவில்லையே, ஆகையால் அனுமானத்தால் சித்திக்கிற பிரதானத்திலேயே தாற்பரியம் என்று சொல்லுவோமே என்று ஆக்ஷேபம் ஏற்படுகிறபடியால் முந்தின கிரந்தத்துக்கும் இதற்கும் ஆக்ஷேபசங்கதி ஏற்படுகிறது.

இதற்கு சித்தாந்தியானவர் இந்த அதிகரணத்தில் வேதாந்தவாக்கியங்களுக்குள் பரஸ்பர விருத்தார்த்தம் ஏற்படவில்லை என்று நிரூபிக்கிறார்.

ஆக்ஷேபம் :— அப்படி வேதாந்தவாக்கியங்களின் அவிரோதத்தைப் நிரூப்பிக்கிறதாயிருந்தால், அந்த அவிரோத நிரூபணத்துக்காக ஏற்பட்ட இரண்டாவது அத்தியாயத்தில் அதைப் பிரஸ்தாபிக்கவேண்டியதே தவிர சமன்வயாத்தியாயமாகிற இந்த முதலாவது அத்தியாயத்தில் பிரஸ்தாபிக்கக்கூடாது.

இரண்டாவது அத்தியாயத்தில் ஸ்மிருதி, தர்க்கம், இதரமதங்கள், இவைகளால் தோன்றக்கூடிய விரோதம் பரிஹரிக்கப்படுகிறது, சுருதியால் தோன்றும் விரோதம் இவ்விடத்திலேயே பரிஹரிக்கத்தக்கது. அப்படி பரஸ்பரவிரோதமில்லை என்று நிரூபிக்காதவரையில் வேதாந்தங்களுக்கு பிரம்மத்தில் தாற்பரியம் என்று நிச்சயமாகமாட்டாது. ஆகையால் இவ்விடத்தில் தான் சுருதிகளின் விரோதத்தை விசாரிக்க வேண்டியது என்று சொல்லும்பக்ஷத்தில் வியத்பிராணபாதங்களாகிற இரண்டாவது அத்தியாயத்தின் 3-வது 4-வது பாதங்களும் அவ்விடத்தில் இருக்கக்கூடாது. சுருதிகளின் தாற்பரியத்தைப் பிரதிபாதிக்கிற இந்த முதலாவது அத்தியாயத்திலேயே இருக்கவேண்டும்.

இப்படி ஒருவன் ஆக்ஷேபித்தால், சரிதான். அவைகள் முதலாவது அத்தியாயத்திலேயே இருக்கவேண்டும். ஆயினும் II-2-10ல் மதாந்திரங்களுக்குள் விரோதமிருப்பதால் அவைகள் அப்பிரமாணங்கள் என்று இரண்டாவது அத்தியாயத்தில் நிரூபணம் செய்கிற இடத்தில், வேதாந்தங்களுக்குள் பரஸ்பரவிரோதமிருப்பதால் அவைகள் தான் எப்படி பிரமாணமாகலாம் என்று கேட்கும்படி பிரஸக்தி நேரிட்டபடியால் அவ்விடத்தில் இவைகளை சேர்க்கப்பட்டன. (4)

ஆ (b) முந்தின அதிகரணத்துக்கும் இதற்கும் சங்கதி :—

முந்தின அதிகரணத்தில் ஐந்துஎன்கிற இலக்கம் சித்திக்கும் பொருட்டு அன்னம், ஜோதிஸ், ஆக இவ்விரண்டில் எதை வைத்துக்கொண்டாலும் பாதகமில்லை, ஆகையால் விரோதம் சித்திக்கவில்லை என்று நிரூபிக்கப்பட்டது போல், இவ்விடத்தில் காரணமான வஸ்துவிஷயத்தில் விகற்பம் பொருந்தாதபடியால், விரோதம் ஏற்படும். அப்போது வாக்கியங்கள் பிரமாணமாகமாட்டா வென்பதாய் பூர்வபக்ஷி சொல்லுகிறபடியால் பிரத்யுதாஹரணசங்கதி ஏற்படுகிறது.

(c) பாதசங்கதி :—இந்த பாதம் முன் பிரதிபாதிக்கப்பட்டவைகளின் பேரில் ஏற்படும் ஆக்ஷேபம் பரிஹரிக்கிறது. இந்தஅதிகரணம்வேதாந்தங்களுக்கு பிரம்மத்திற் தாற்பரியம் என்று முன் சொன்னதின் பேரில் ஏற்படும் ஆக்ஷேபனைகளுக்கு சமாதானம் சொல்லுவதால் இந்த பாதத்தில் சேர்க்கப்பட்டது.

(d) மற்ற சங்கதிகளை முன்போலவே அறியவும். (6)

ர V. சந்தேகம் :—ஜகத்காரண சுருதிகள் பிரம்மத்தில் தாற்பரியப்படுகின்றனவா இல்லையா வென்பது சந்தேகம். சுருதிகள் விருத்தார்த்தத்தைச் சொல்லுவதால் இந்த சந்தேகம் ஏற்பட்டது. (7)

VI. இதிலடங்கிய சூத்திரங்கள் 2. (14—15) இவைகளில் 14-ல் சிருஷ்டியை பிரதிபாதிப்பதில் வேதத்திற்கு தாற்பரியமில்லை என்று சொல்லி 15-ல் விரோதத்தைச் சூத்திரம் பரிஹரிக்கிறது. (8)

VII. பூர்வபக்ஷம் :—பிரம்மம் ஜகத்ஜன்மாதிகளுக்குக் காரணமென்றுவது, வேதாந்தவாக்கியங்களின் தாற்பரியம் பிரம்மம் என்றுவது நிரூபிக்கமுடியாது. ஏனெனின் விருத்தமான விஷயம் சொல்லப்பட்டதாக காணப்படுகிறது. வேதாந்தவாக்கியங்கள் சிருஷ்டியின் கிரமத்தை வெவ்வேறு விதமாய்ச் சொல்லுவதால், வெவ்வேறு சிருஷ்டிகள் தெரியவருகின்றன. எப்படியெனின்,

(1) ஒரு இடத்தில் (அதாவது தைத்திரீயம் II-ல்)

आत्मनः आकाशः सम्भूतः ।

(ஆத்மாவினின்றும் ஆகாசம் முதலில் உண்டாயிற்று) என்பதினால் ஆகாசத்தின் சிருஷ்டி கூறப்படுகின்றது.

(2) ஒரு இடத்தில் (அதாவது சாந்தோக்கியம் VI-2-3ல்)

तत्तेजोऽसृजत

(அது முதலில் தேஜஸை உண்டாக்கிற்று) என்பதாய் தேஜஸின் சிருஷ்டி கூறப்பட்டிருக்கிறது.

(3) ஒரு இடத்தில்(அதாவது பிரச்னம் VI-4ல்)

स प्राणमसृजत प्राणात् श्रद्धाम्

(அது முதலில் பிராணனை சிருஷ்டித்தது. பிராணத்தினின்றும் சிரத்தையை சிருஷ்டித்தது) என்பதாய் பிராணாதிகளின் சிருஷ்டி கூறப்பட்டிருக்கிறது.

(4) ஒரு இடத்தில் அதாவது ஐதரேய ஆரணியகத்தில் II-4-1-2, 3ல்

स इमाँल्लोकानसृजताम्भोमरीचिर्मरमापः

(ஆத்மா இந்த லோகங்களை அதாவது ஸ்வர்க்கலோகம், அந்தரிக்ஷலோகம், பிருதிவி (மனுஷ்யலோ

கம்) பாதாளலோகம் ஆகிய இவைகளை சிருஷ்டித்தது) என்பதாய் ஒரு கிரமமுமன்றியில் லோகங்களின் உற்பத்தி கூறப்பட்டிருக்கிறது.

ர (சிருஷ்டி விரோதத்தைச் சொல்லி இனி காரணவிரோதத்தைக் காட்டுகிறார்)

(1) அப்படியே ஒரு இடத்தில் அதாவது தைத்திரீயம் II-7ல்

असद्वा इदमग्र आसीत् ततो वै सदजायत

(முதலில் அசத் இருந்தது அதினின்றும் சத் உண்டாயிற்று) என்பதில் அசத்தினின்றும் சிருஷ்டியுண்டானதாக சொல்லியிருக்கிறது.

(2) இதற்குச் சரியான அர்த்தமே சாந்தோக்கியத்தில் III-19-1ல்

असदेवेदमग्र आसीत् तत्सदासीत्तत्समभवत्

(அதாவது முதலில் அசத்து இருந்தது, அது சத்தாயிற்று அது விருத்திபடைந்தது) என்பதில் சொல்லியிருக்கிறது.

(3) ஒரு இடத்தில் அதாவது சாந்தோக்கியம் VI-2-1, 2ல்

तद्धैक आहुरसदेवेदमग्र आसीत्

(முதலில் அசத்துத்தான் இருக்கிறது என்று சிலர் சொல்லுகிறார்) என்று ஆரம்பித்து,

कुतस्तु खलु सोम्यैवंस्यादिति

होवाच कथमसतः सज्जायेत

(அதாவது:—பிரியதர்சனமுள்ளவனே இது எப்படி இருக்கும் எப்படி அசத்தினின்றும் சத் உண்டாகும்) என்று கேட்டு

सदेव सोम्येदमग्र आसीत्

(பிரியதர்சனமுள்ளவனே, சத்தே முதலில் இருந்தது) என்பதாய் சுருதி சொல்லுகிறது.

(4) ஒரு இடத்தில் அதாவது பிரஹதாரணியகம் I-4-7ல்

तद्धेदं तर्ह्यव्याकृतमासीत् तन्नामरूपाभ्यामेव व्याक्रियत

(அதாவது இது முதலில் நாமரூபங்களால் பிரிபடாமலிருந்தது பிறகு நாமரூபங்களால் பிரிபட்டது) என்பதில் ஜகத்தானது தானாகவே நாமரூபபேதங்களை அடைந்தது என்று சொல்லியிருக்கிறது.

இவ்விதமாக விருத்தமான அர்த்தத்தைச் சொல்லும் வாக்கியங்கள் அநேகமிருப்பதாலும், வஸ்துவினிடத்தில் விகற்பங்கள் பொருந்தாதபடியாலும், வேதாந்தவாக்கியங்களுக்கு ஜகத்காரணத்தை நிச்சயிப்பதில் தாற்பரியமென்று சொல்லுவது யுக்தமன்று.

ஸ்மிருதியாலும் யுக்தியாலும் ஜகத்துக்கு வேறு காரணத்தை (அதாவது பிரதானத்தை) கிரகிப்பதில் நியாயமிருக்கிறது. (9)

VIII. 1. இப்படி பூர்வபக்ஷிசொல்ல சித்தாந்தத்தை வியாசர்

## कारणत्वेनचाकाशादिषु यथा व्यपदिष्टोक्तेः

என்கிற சூத்திரத்தில் கூறுகிறார். (10)

2. பதஉரை:—

(आकाशादिषु ஆகாசம் முதலியவைகளில்

विरोधे सत्यपि விரோதமிருந்தாலும்)

(ब्रह्मणः பிரம்மம்)

कारणत्वे காரணமென்கிற விஷயத்தில்

न விரோதமில்லை.

यथा व्यपदिष्टोक्तेः ஒரு இடத்தில் கூறியிருப்பது போல் மற்ற இடங்களிலும் சொல்லியிருப்பதால் (11)

3. பொழிப்புரை.—

சிருஷ்டிக்கப்பட்ட பதார்த்தங்களாகிற ஆகாசம் முதலிய விஷயமாய் வேதாந்த வாக்கியங்களில் விரோதம் தோன்றினாலும், பிரம்மம் காரணம் என்கிற விஷயத்தில் விரோதமில்லை. ஏனெனின் ஒரு இடத்தில் அவரை சொல்லியிருப்பதுபோலவே மற்ற இடங்களிலும் சொல்லியிருக்கிறது. (12)

4. பாஷ்யம்:—

1. कारणत्वेन च आकाशादिषु வேதாந்தவாக்கியங்களில் சிருஷ்டிக்கப்பட்ட ஆகாசம் முதலியவைகளின் கிரமத்தில் விரோதமிருந்தாலும், சிருஷ்டா விஷயத்தில் யாதொரு விரோதமுமில்லை. ஏனெனின்

2. यथा व्यपदिष्टोक्तेः எப்படி ஒரு வேதாந்தவாக்கியத்தில் சர்வஞ்ஞனும், சர்வேசுவரனும், சர்வஸ்வரூபனும், அத்விதீயனுமிருக்கிறவன் காரணமென்று சொல்லப்பட்டிருக்கிறதோ, அப்படியே வேறு வேதாந்தவாக்கியத்திலும் சொல்லப்பட்டிருக்கிறது. எப்படியெனின்:—

(a) தைத்திரீயத்தில் सत्यं ज्ञानमनन्तं ब्रह्म என்பதாய் II-1-ல் சொல்லியிருக்கிறது. இவ்விடத்தில்

(1) ஞான சப்தத்தாலும்

(2) II-6ல் सोऽकामयत என்கிற கீழ்வசனத்தில் பிரம்மம் இச்சித்தது என்று சொல்லுவதாலும் பிரம்மம் சேதனஸ்வரூபம் என்று தெரியவருகிறது.

(b) आ (1) इदं सर्वमसृजत (இதை எல்லாம் சிருஷ்டித்தது) என்கிற II-6வது வசனத்தாலும்

रा (2) तदात्मानं स्वयमकुरुत தன்னைத்தானே செய்து கொண்டது) என்கிற II-7வது வசனத்தாலும் ஈசுவரன் ஒன்றினுலும் ஏவப்படாததினுல் ஈசுவரன் சுவதந்திரமான காரணம் என்று சுருதி கூறுகிறது.

(c) (1) அந்த காரணத்தையே மேல் II-1ல் ஆத்மா என்று சொல்லியிருக்கிறது.

(2) மேலும் ஸ்தூலசரீரம் முதல் ஒன்றுக்குள் ஒன்ருக இருக்கும் ஐந்து கோசங்களுக்கெல்லாம் உள்ளே பிரவேசித்திருப்பதினுல், அது சகல பிராணிகளுக்குள்ளிருக்கும் பிரத்தியகாத்மா வென்று சுருதி சொல்லுகிறது.

(d) (एकत्व) மேலும் बहुस्यां प्रजायेय (நான் வெகு ஆவேனுக விருத்தி அடைவேனுக) என்பதாய் II-6ல் ஆத்மா வெகுவாக ஆனதாகச் சொல்லி, சிருஷ்டிக்கப்பட்டபதார்த்தங்களைவிட சிருஷ்டா வேறல்ல வென்பதையும் சுருதி கூறுகிறது.

(d) அப்படியே

इदं सर्वमसृजत यदिदं किञ्च

(எது எது இருக்கிறதோ அதை எல்லாம் சிருஷ்டித்தார்) என்கிற II-6ல் சகல ஜகத்தின் சிருஷ்டியையும் கூறுவதினுல், சிருஷ்டிக்கு முன் சிருஷ்டா ஒருவனுயே, இரண்ட[illegible]ருந்ததாக சுருதி சொல்லுகிறது.

கீழ் வாக்கியங்களில் பிரம்மத்தை காரணமாக பாவிக்கும்படி எந்த லக்ஷணம் கூறப்பட்டிருக்கிறதோ அந்த லக்ஷணமே இதரஇடங்களிலும் கூறப்பட்டிருக்கிறது.

(1) சந்தோக்கியம் VI-2-1-3ல்

सदेव सोम्येदमग्र आसीत् ।
एकमेवाद्वितीयम् ॥
तदैक्षत बहुस्यां प्रजायेय ।
तत्तेजाऽसृजत ॥

அதாவது :— பிரியதர்சனமுள்ளவனே, சத்தே முதலிலிருந்தது, ஒன்றே, இரண்டற்றது. தான் இவருவாகவேண்டும், விருத்தியாகவேண்டுமென்று அது இச்சித்தது. அது தேஜஸை சிருஷ்டித்தது என்று சொல்லியிருக்கிறது.

आ இதில் (1) एकमेवाद्वितीय என்பதினுல் ஏகத்வமும் அத்விதீயத்வமும் கூறப்பட்டன.

(2) तदैक्षत என்பதில் சர்வஜகத்தையும் பார்த்தது என்று சொல்லியிருப்பதால் சர்வஞ்ஞத்வம் சொன்னதாக ஆகிறது.

(3) VI-8ல் ऐतदात्म्यमिदं सर्वं எல்லாம் இதின் ஸ்வரூபம் என்று சொல்லியிருப்பதால் சர்வாத்மகத்வம் விளங்குகிறது.

(4) बहुस्यां என்பதினுல் ஸ்வாதந்திரியம் அதினுல் சர்வைசுவரியம் கூறப்படுகிறது.

அப்படியே ஐதரேய ஆரணியகத்தில் II-4-1-1-2ல்

आत्मा वा इदमेक एवाग्र आसीन्नान्यत् ।
किञ्चनमिषत् स ऐक्षत लोकान्नुसृजा ॥.

அதாவது :—

முதலில் ஆத்மா ஒன்றே இருந்தது. வேறு ஒன்றும் சலித்துக் கொண்டிருக்கவில்லை, லோகங்களை சிருஷ்டிப்போமா என்று நினைத்தது என்று சொல்லியிருப்பதில் ஏகத்வாதிகள் முன்போலவே தெரியவருகின்றன.

ஆகவே காரணத்தின் ஸ்வரூபத்தை நிரூபிக்கிற இப்படிப்பட்ட வேதாந்தவாக்கியங்களில் விருத்தார்த்தம் இ[illegible], காரணத்தில் பேதமில்லை.

காரியவிஷயத்திலோ வெவ்வேறு விதமாய் வசனங்கள் ஏற்பட்டிருக்கின்றன. ஒரு இடத்தில் ஆகாசம்முதல் சிருஷ்டியுண்டானதாக சொல்லியிருக்கிறது. ஒரு இடத்தில் தேஜஸ்முதல் சிருஷ்டியுண்டானதாக சொல்லியிருக்கிறது. இப்படியே பல இடங்களில் சொல்லியிருக்கிறது.

காரிய விஷயத்தில் பேதவசனங்கள் இருப்பதைக்கொண்டு சர்வவேதாந்தங்களிலும் ஏகரூபமாய் சொல்லப்பட்ட காரணமான பிரம்மவிஷயத்திலும் சர்வ வேதாந்தங்களுக்கும் தாற்பரியமில்லை என்று

முடியாது. அப்படி சொன்னால் அதிபிரசங்கம் ஏற்படும். ரா அதாவது ஒருவன் ஒவ்வொரு நாளும் ஒவ்வொருவிதமான ஸ்வப்நத்தைப் பார்க்கிறான். அதைக்கொண்டு பார்க்கிறவன் வெவ்வேறு என்று சொல்லுவதற்குச் சமானமாகும்.

சூத்திரகாரரும் न वियदश्रुतेः என்கிற II--3--1வது சூத்திரம் முதல் காரியவிஷயத்திலுள்ள விரோதவாக்கியங்களுக்கும் சமாதானம் சொல்லுகிறார். காரியவிஷயத்தில் வெவ்வேறு வசனங்கள் ஏற்படலாம். ஏனெனின், சிருஷ்டிமுதலிய பிரபஞ்சத்தைச் சொல்லுவதில் சுருதிக்கு தாற்பரியமில்லை. புருஷனுக்கு யாதொரு பிரயோசனமும் சிருஷ்டிஞானத்தைப் பொருத்திருப்பதாக தெரியவில்லை, சுருதியிலும் கூறப்படவில்லை, அப்படி பிரயோசனம் இருக்கிறதாகவும் கற்பிக்கக்கூடாது. ரா (ஏனெனின், பலத்தைக் கூறும் பிரதானமான பிரம்மவாக்கியத்துக்கு சிருஷ்டிவாக்கியம சாதகமாயிருக்க சிருஷ்டிவாக்கியத்துக்கு தனிப்பலனைச் சொல்லும்பக்ஷத்தில் வாக்கியபேதம் ஏற்படும். இது அசமீசீனம்). உபக்கிரம உபசம்ஹார வாக்கியங்களால், பிரம்மவிஷயமான வாக்கியங்களுடன் சிருஷ்டிவாக்கியங்களும் ஒன்றாக சேர்ந்திருப்பதாக தெரியவருகிறது.

अन्नेन सोम्य शुंगेनापोमूलमन्विच्छ ।
अद्भिः सोम्य शुंगेन तेजोमूलमन्विच्छ ।
तेजसा सोम्य शुंगेन सन्मूलमन्विच्छ ॥

அதாவது :—பிரியதர்சனமுள்ளவனே பிருதிவியாகிற கிளையால் அதின் மூலமாகிற ஜலத்தைத் தேடு. ஜலமாகிற கிளையால் அதின் மூலமாகிற தேஜஸைத் தேடு. தேஜஸாகிற கிளையால் அதின் மூலமாகிற சத்தைத்தேடு.

என்கிற சாந்தோக்கிய VI-8-4வது சுருதியும் காரணமான பிரம்மஞானத்தில் தாற்பரியமென்பதைக் காட்டுகிறது. மிருத்முதலிய திருஷ்டாந்தங்களாலும் காரியமானது காரணத்தைவிட வேறல்ல வென்பதைக் காட்டும்பொருட்டு சிருஷ்டிமுதலியவை சுருதியில் கூறப்பட்டிருக்கின்றன என்று தெரியவருகிறது. ரா சிருஷ்டிக்கு வேறு பிரயோசனத்தைச் சொல்லுவதில் சுருதிக்கு தாற்பரியமிராதபடியால், சிருஷ்டிவசனங்களில் விரோதம் தோஷமன்று என்பதாய் வேதாந்தசம்பிரதாயமறிந்தவர்கள்

मृल्लोहविस्फुलिंगाद्यैः सृष्टिर्याचोदितान्यथा ।
उपायः सोऽवताराय नास्ति भेदः कथञ्चन ॥

அதாவது :—

மிருத்து, சுவர்ணம், பொறிகள், முதலிய திருஷ்டாந்தங்களால் யாதொரு சிருஷ்டி வெவ்வேறுவிதமாகச் சொல்லப்படுகிறதோ, அது பிரம்மத்தை அறியும் பொருட்டேயாம். ஆகையால் அது வித்தியாசப்பட்டாலும் ஞேயபிரம்மத்தில் யாதொரு பேதமுமில்லை என்பதாய் (மாண்டூக்கியம் III-15) சொல்லுகிறார்கள்.

ஆனால் பிரம்மத்தை அறிவதினால் பலனே,

(1) ब्रह्मविदाप्नोति परं (பிரம்மத்தை அறிந்தவன் சிரேஷ்டத்தை அடைகிறான்) என்பதாய் தைத்திரீயம் II-1உம்

(2) तरति शोकमात्मवित् (ஆத்மஞானி துக்கத்தைத் தாண்டுகிறான்) என்பதாய் சாந்தோக்கியம் VII-1-3-உம்

(3) तमेव विदित्वा अतिमृत्युमेति (பிரம்மத்தையே அறிந்து மிருத்யுவை அதிக்கிரமிக்கிறான்) என்பதாய் சுவேதாசுவதரம் III-8உம் சொல்லியிருக்கிறது.

तत्त्वमसि (நீ அதாக இருக்கிறாய்) என்பதால் ஜீவன் அசம்சாரி என்று தெரிந்து கொண்டவுடன் சம்சாரதர்மங்கள் நிவிர்த்தியாய் விடுவதால் இந்த பலன் பிரத்தியக்ஷமாயும் தெரியவருகிறது.

பா இதுவரையில் இந்த சூத்திரத்துக்கு:—சிருஷ்டிக்கப்பட்ட ஆகாசம் முதலியவைகளில் கிரமம் வெவ்வேறுவிதமாகச் சொல்லியிருந்தாலும், சிருஷ்டாவிஷயத்தில் வெவ்வேறு விதம் சொல்லப்படவில்லை. ஏனெனின் எப்படி ஒருசுருதியில் பரமேசுவரன் சகலத்துக்கும் கர்த்தாவாக சொல்லியிருக்கிறதோ அப்படி இதர சுருதிகளிலும் காரணரூபமாக சொல்லியிருக்கிறது என்பதாய் அர்த்தம் செய்யப்பட்டது.

சிருஷ்டியே வெவ்வேறு விதமாய் சொல்லப்படவில்லை என்பதாயும் இந்த சூத்திரத்துக்கு அர்த்தம் செய்யலாம். எப்படியெனின்

यथा व्यपदिष्टः क्रमः आकाशादिषु

எப்படி ஆகாசம் முதலியவைகளில் கிரமம் சொல்லியிருக்கிறதோ அதாவது ஆத்மாவினின்றும் ஆகா

சம், ஆகாசத்தினின்றும் வாயு, வாயுவினின்றும் அக்கினி, அக்கினியினின்றும் ஜலம், ஜலத்தினின்றும் பிருதிவி இந்த கிரமமாக சொல்லியிருக்கிறதோ அப்படியே கிரமத்தை பிரதிபாதிக்காமலேயே तत्तेजोऽसृजत முதலியவைகளாலும் சிருஷ்டி சொல்லப்பட்டிருக்கிறபடியால் சிருஷ்டியில் பேதமில்லை. ஒரு இடத்தில் ஆத்மாவினிடமிருந்து ஆகாசம் என்றும், வேறு ஒரு இடத்தில் தேஜஸ் என்றும் சொன்னால் விரோதமில்லையா வெனின், कारणत्वेन அதாவது ஆகாசம், வாயு, அக்கினிமுதலிய ஒவ்வோரிடத்திலும் ஆத்மாவே சாக்ஷாத்தாய் காரணமாயிருக்கிறது என்று சொல்லியிருக்கிறது. ஆகையால் ஆத்மாவினின்று ஆகாசம் உண்டாயிற்று, ஆத்மாவினின்று தேஜஸ் உண்டாயிற்று என்று சொல்லுவதில் தோஷமில்லை. (13)

IX I-4-15-வது சூத்திரம்.

## समाकर्षात् । १५ (14)

2. முந்தின சூத்திரத்துக்கும் இதற்கும் சம்பந்தம்:—முந்தின சூத்திரத்தில் சிருஷ்டி வாக்கியங்களுக்கு ஸ்வார்த்தத்தில் அதாவது சிருஷ்டியை பிரதிபாதிப்பதில் தாற்பரியமில்லை என்று நிரூபிக்கப்பட்டது.

अत प्र । असद्वा इदमग्र आसीत् முதலிய வாக்கியங்களில், சத்தினின்றும் அசத்தினின்றும் பிரபஞ்சமுண்டாயிற்று என்பதால் ஜகத்காரணவிஷயமாய் யாதொரு விரோதம் காணப்படுகிறதோ அது பரிஹரிக்கத்தக்கதென்பதாய் இந்த சூத்திரம் ஏற்பட்டிருக்கிறது. (15)

3. பதஉரை:—

समाकर्षात् நன்றாக இழுத்துக்கொள்ளுவதினால்(16)

4. பொழிப்புரை:—

பிரம்மத்தைப்பற்றிச் சொல்லிய சுருதிகளுடன் சம்பந்தப்படுவதினால், அசத்தைப்பற்றிச் சொல்லும் சுருதிகள் சுத்த அசத்ரூபத்தை பிரதிபாதிக்கவில்லை. ()

5. பாஷ்யம்:—

1. असद्वा इदमग्र आसीत् (முதலில் அசத்துத்தான் இருந்தது) என்கிற சுருதியானது ஸ்வரூபமற்ற அசத்து காரணமென்று சொல்லவில்லை. ஏனெனின்,

असन्नेव स भवति असद्ब्रह्मेति वेद चेत् । अस्ति ब्रह्मेति चेद्वेद सन्तमेनं ततो विदुः

அதாவது:—எவன் பிரம்மம் அசத் என்று சொல்லுகிறானோ அவன் அசத்தாகவே ஆகிறான்: பிரம்மம் இருக்கிறதென்று அறிந்தானேயானால் அவன் இருக்கிறதாக அறிகிறார்கள் என்கிற தைத்திரீய II-6ல் பிரம்மமில்லை என்னும்வாதம் நிராகரிக்கப்பட்டு பிரம்மம் இருக்கிறதென்றே சொல்லப்பட்டிருக்கிறது. மேலும் அது அன்னமயம் முதலிய கோசங்களுக்கெல்லாம் உள்ளேயிருக்கிறதாகச் சொல்லியிருக்கிறது. सोऽकामयत (அது இச்சித்தது) என்பதால் அந்த பிரம்மமே கூறப்பட்டிருக்கிறது. அதினின்றும் சர்வசிருஷ்டி யுண்டானதாக சொல்லுகிறது तत् सत्यमित्याचक्षते (அதை சத்தியம் என்று சொல்லுகிறார்கள்) என்பதாய் முடிவில் சொல்லி கடைசியில் இந்த பிரம்மவிஷயத்திலேயே

तदप्येष श्लोको भवति

असद्वा इदमग्र आसीत्

அதாவது:—இதைப்பற்றி இந்த சுலோகமிருக்கிறது. அசத்து முதலில் இருந்தது என்று (II-7) சொல்லியிருக்கிறது.

இந்த சுலோகத்தில் ஸ்வரூபமற்ற அசத்து கூறப்பட்டிருந்தால் அப்போது கீழ்சொன்ன விஷயத்துக்கு திருஷ்டாந்தமாக அசத்துடன் சம்பந்தப்படாத வேறு ஒன்று சொன்னதாக ஆகும். அப்போது வாக்கியங்கள் சேராமற்போகும். ஆகையால், சத் சப்தம் சாதாரணமாய் நாமரூபங்களால் பிரிபட்ட வஸ்துக்களைக் கூறுவதினால், அப்படிப்பட்ட பிரிவினை இல்லை என்று காட்டும்பொருட்டு சிருஷ்டிக்குமுன் சத்தான பிரம்மம் அசத்துப்போலிருந்தது என்று ஔபசாரிகமாக சொல்லப்படுகிறது.

II. (a) असदेवेदमग्र आसीत् என்கிற சாந்தோக்கிய சுருதியிலும் இப்படியே அறியவேண்டியது. பிந்திய வாக்கியத்தில் तत्सदासीत् (அது சத்தாக இருந்தது) என்று சொல்லியிருக்கிறது.

रा (तत् பதத்துக்கு எப்போதும் ஒரே அர்த்தம். அது முன் சொல்லிய அசத்தைத்தான் இழுத்துக்கொள்ளும். ஆகையால் அசத்து சத்தாக இருப்பதால் சூன்னியம் என்று அர்த்தமல்லவென்பது கருத்து.)

சுத்தமாய் ஒன்றும் இல்லாவிட்டால் तत् सदासीत् என்பது எதை ஆகர்ஷித்துக்கொள்ளும்.

(d) சாந்தோக்யத்தில் VI-2-1-ல்

तद्धैक आहुरसदेवेदमग्र आसीत्

(அசத்தே முதலிலிருந்தது என்று சிலர் சொல்லுகிறார்கள்)

என்றுசொல்லிய இடத்திலும் வேறு சுருதியில் அசத்துபிரதிபாதித்திருப்பதைக்கொண்டு சிலருடைய அபிப்பிராயம் இப்படி இருக்கிறது என்று கருத்தல்ல. ஒருவனின் கிரியையில் விகற்பங்கள் ஏற்படுவது போல் வஸ்துவிஷயத்தில் ஏற்படமாட்டா.

ஆகையால் சுருதியில் கூறிய சத்பக்ஷத்தை திடப்படுத்தும்பொருட்டே, மந்தபுத்தியுள்ளவர்களால் கிரகிக்கப்பட்ட அசத்பக்ஷத்தைச் சொல்லி, பிறகு சுருதி அதை நிராகரிக்கிறது என்று அறியத்தக்கது.

III பிரஹதாரணியகத்தில் I-4-7-ல்

तद्धेदं तर्ह्यव्याकृतमासीत् तन्नामरूपाभ्यामेव व्याक्रियते ।

(ஜகத்து பிரளயகாலத்தில் நாமரூபங்களால் பிரிபடாமலிருந்தது. பிறகு நாமரூபங்களாலேயே பிரிபட்டது.) என்கிற இடத்திலும் வேறு ஒன்றினால் அதிஷ்டிதமாகாத ஜகத்தானது பிரிவுபடுகிறதாக சொல்லப்படவில்லை. பிந்தின வாக்கியத்தில் स एष इह प्रविष्टः आनखाग्रेभ्यः (அவனே நகசிகபரியந்தம் பிரவேசித்திருக்கிறான்) என்று சொல்லியிருக்கிறது. सः என்பது சிருஷ்டிக்கப்பட்ட பதார்த்தங்களில், பிரவேசிக்கிறான் என்பதினால் அதிஷ்டாதாவாயிருக்கிறவனையே இழுத்துக்கொள்ளும். அதிஷ்டாதாவன்றியில் சிருஷ்டியுண்டானதாகச் சொல்லும்பக்ஷத்தில் அடுத்தவாக்கியத்தில் அவன் பிரவேசித்திருக்கிறான் என்று சொல்லியிருக்கிறதே. அவன் எவனைக் கூறும். (ஆகையால் அதிஷ்டாதா ஒருவன் இருக்கவேண்டும்.) சேதனனை ஆத்மா சரீரத்தில் பிரவேசம் செய்திருக்கிறான்என்று சுருதியில் தெரியவருகிறது. அதேவாக்கியத்தில்

पश्यंश्चक्षुः शृण्वन् श्रोत्रं मन्वानो मनः

அதாவது:—பார்க்கும்போது திரஷ்டா, கேட்கும்போது சிரோதா, மனனம் செய்யும்போது மந்தா என்பதால் அனுபிரவேசம் செய்தவன் சேதனம் என்று சுருதி சொல்லுகிறது.

மேலும், இப்போது எப்படி கடபடாதிகள் அதிஷ்டாதாவான (கர்த்தாவான) குலாலன் முதலானவர்களை முன்னிட்டுக்கொண்டு நாமரூபவிகாரங்களை அடைகின்றனவோ, அப்படி முதல் சிருஷ்டியிலும் இருக்கும் என்று அறியத்தக்கது. பிரத்தியக்ஷத்துக்கு விரோதமாக கற்பிக்கமுடியாது.

अनेन जीवेनात्मनानु प्रविश्य नामरूप व्याकरवाणि

என்கிற சாந்தோக்கியம் VI-3-2-ல் இந்த ஜீவஸ்வரூபத்தால் பிரவேசித்து நாமரூபங்களை பிரிக்கிறேன் என்று சொல்லும் சுருதியானது ஜகத்தின் சிருஷ்டிக்கு கர்த்தா இருக்கிறான் என்பதைக் காட்டுகிறது.

சுருதியில் व्याक्रियते என்பதினால் அது பிரிபடுகிறது என்று அர்த்தமாகிறது. கர்த்தாவான பரமேசுவரன் இருக்கும்போது ஜகத்து சுலபமாய் சிருஷ்டிக்கப்படுகிறது என்கிற அபிப்பிராயத்துடன் ஜகத்தே பிரிபடுகிறதாக சொல்லியிருக்கிறது. வயல் தானாக அருக்கிறது என்கிற இடத்தில அருக்கிற ஆள்கள் அநேகம் பெயர்கள் இருப்பதால் அருப்பு சுலபமாய் முடியும் என்கிற கருத்துடன் சொன்னதுபோலும். கிராமம் அடையப்படுகிறது என்பதில் யாரால் என்று கேள்வி ஏற்படுவதுபோல் பிரிக்கப்படுகிறது என்பதில் யாரால் என்று கேள்வி ஏற்படுகிறது.

रा ஆகையால் சேதனஸ்வரூப பிரம்மமே சிருஷ்டிக்குக் கர்த்தாவென்று ஏற்படுகிறது. रा ஆகையால் கர்த்தாவைப்பற்றிச் சொல்லிய சுருதிகளில் விரோதமில்லை. ஆகையால் வேதாந்தவாக்கியங்களுக்குப் பிரம்பத்தில் தாற்பரியம் என்று சித்திக்கிறது. (18)

X. பூர்வபக்ஷபலன்:—சமன்வயாசித்தி.

சித்தாந்தபலன்:—ஷை சித்தி. (19)

XI. வியாசாதிகரணமாலைப்படி சுருக்கம்.

1. சுலோகங்கள்.

समन्वयो जगद्योनौ न युक्तो युज्यतेऽथवा ।
न युक्तो वेदवाक्येषु परस्परविरोधतः ॥
सर्गक्रमविवादेपि नासौ स्रष्टरि विद्यते ।
अव्याकृतमसत्प्रोक्तं युक्तोऽसौ कारणे ततः ॥ (20)

2. மூன்று பாதங்களில் வேதாந்தங்கள் ஜகத்காரணத்தில் தாற்பரியப்படுகிறதாக யாதொன்று சொல்லப்பட்டதோ, அதை ஆக்ஷேபித்து சமாதானம் சொல்லப்படுகிறது. (21)

3. பூர்வபக்ஷம்:- இந்த சமன்வயம் யுக்தமன்று. ஏனெனின், வேதாந்தங்களில் வெகுவாய் விரோதம் தோன்றுவதால் பிராமாண்ணியம் ஏற்படவில்லை எப்படியெனின்,

(I) தைத்திரியத்தில் आत्मनः आकाशः संभूतः என்பதாய் ஆகாசாதிகளுக்கு ஆத்மா சிருஷ்டா என்று சொல்லியிருக்கிறது.

(2) சாந்தோக்கியத்தில் तत्तेजोऽसृजत என்பதாய் தேஜஸ் முதலியவைக்கு ஆத்மா காரணம் என்று சொல்லியிருக்கிறது.

(3) ஐதரேயத்தில் स इमाल्लोकानसृजत என்பதாய் லோகங்களை ஆத்மா சிருஷ்டித்ததாய் சொல்லியிருக்கிறது.

(4) முண்டகத்தில் एतस्माज्जायते प्राणः என்பதாய் பிராணாதிகள் இதினின்றும் உண்டானதாகச் சொல்லியிருக்கிறது.

மேலும் கேவலம் காரியத்தை உத்தேசித்துமட்டும் விரோதம் காணப்படவில்லை என்பதில்லை. காரணத்திலும் விரோதமிருக்கிறது.

சாந்தோக்கியத்தில் सदेव सोम्येदमग्र आसीत् என்பதில் சத்ரூபம் காரணமாகச் சொல்லப்பட்டிருக்கிறது.

தைத்திரீயத்தில் असद्वा इदमग्र आसीत् என்பதில் அது அசத்ரூபம் என்று சொல்லியிருக்கிறது.

ஐதரேயத்திலோ इदमेक एवाग्र आसीत् என்பதாய் ஆத்மா காரணமாகச் சொல்லியிருக்கிறது. இப்படி விரோதமிருப்பதால் சமன்வயம் சித்திக்கவில்லை. (22)

4. சித்தாந்தம் :—சிருஷ்டிக்கப்பட்ட ஆகாசாதிகளிலும் அவைகளின் கிரமத்திலும் விவாத மிருக்கட்டும். ஆகாசாதிகளில் தாற்பரியமிராதபடியால், அத்விதீய பிரம்மத்தை போதிக்கும்பொருட்டு அவைகள் கூறப்பட்டன. தாற்பரியத்துக்கு விஷயமான ஜகத்சிருஷ்டாவான பிரம்மத்தினிடத்தில் யாதொரு விரோதமுமில்லை. சில இடங்களில் சத்சப்தத்தால் கூறப்பட்ட பிரம்மமே வேறு இடங்களில் சர்வஜீவஸ்வரூபம் என்று சொல்ல இச்சையுடன் ஆத்மா வென்பதாய் கூறப்பட்டிருக்கிறது. அசத்சப்தத்தால் எது கூறப்பட்டிருக்கிறதோ அது அவ்வியாகிருதம் என்பதைக் கூறும்பொருட்டு அப்படி சொல்லப்பட்டிருக்கிறதேதவிர அத்தியந்தம் அபாவம் என்கிற கருத்துடன் சொல்லப்படவில்லை. कथमसतः सज्जायेत என்பதாய் வேறு சுருதியில் அபாவம் காரணமாக மாட்டாது என்று சொல்லப்பட்டிருக்கிறது. ஆகவே எல்லாம் ஏக வாக்கியமாக முடிவுபெறுகிறபடியால ஜகத்காரணத்தில் வேதாந்தங்கள் சமன்வயப்படுவது யுக்தமே. (23)

## 1-4-4-வது அதிகரணம்

முற்றிற்று.

## 1-4-5-வது அதிகரணத்தின்

அநுக்கிரமணிகை.

## 1-4-5 வது அதிகரணம்.

I. இதின் பெயர் :—பா(வா)லாகாதிகரணமென்பதாம். (1)

II. இதின் கருத்து :—பரமாத்மாவுக்கே ஜகத்கருத்திருத்வம் பொருந்தும் என்பதாம். (2)

III. இதின் விஷயவாக்கியம் கார்க்கிய பாலாகி என்பவன் காசி தேசத்தின் அரசனான அஜாதசத்ருவை அடைந்து ब्रह्म ते ब्रवाणि அதாவது உமக்கு பிரம்மத்தைச் சொல்லுகிறேன் என்று சொன்னான்.

பிரம்மத்தை அறிந்த பிராமணர்களெல்லாரும் பிரம்மத்தை உபதேசிக்கும் பொருட்டு ஜனகரிடம் தான் போகிறார்கள். நீயோ என்னை உபதேசத்துக்கு யோக்கியனாக பாவித்து என்னிடம் வந்திருக்கிறாய், ஆகையால் உனக்கு 1000 பசுக்களை தானம் செய்கிறேன் என்று அரசன் சொல்லி பிரம்மத்தைக் கேட்க பாலாகி என்பவன் சூரியன், சந்திரன் முதலானவர்களிடத்தில் அபிமானியான புருஷனே பிரம்மம் என்று தான் அறிந்திருக்கிறதாகச் சொல்ல, அஜாதசத்ரு அந்த புருஷன் பிரம்மமல்லவென்று நிரூபித்து

यो वै बालाक एतेषां पुरुषाणां कर्ता यस्य वै तत्कर्म स वै वेदितव्यः

பாலாகே! ஆதித்தியன் முதலான இந்த புருஷர்களுக்கு எவன் கர்த்தாவோ, எவனுக்கு இந்த பிரபஞ்சம் காரியமோ அதாவது எவனால் பிரபஞ்சம் செய்யப்பட்டிருக்கிறதோ, அவன் அறியத்தக்கவன் என்று சொன்னான். இது கௌஷீதகிபிராமணத்தின் IV-19 வது சுருதி விஷயவாக்கியமாம். (3)

சங்கதி :—

(a) முந்தின அதிகரணத்துக்கும் இதற்கும் :—

अ (1) பிரத்தியுதாஹரண சங்கதி.

முந்தின அதிகரணத்தில் ஒரேவாக்கியத்திலுள்ள சத் முதலிய சப்தங்களால் அசத் சப்தத்துக்கும் பிரம்மபரமாக அர்த்தம் செய்யப்பட்டது. இதுபோல் இந்த அதிகரணத்தில் ब्रह्म ते ब्रवाणि என்கிற பாலாகி வாக்கியத்திலுள்ள பிரம்மசப்தத்தைக்கொண்டு அடுத்தவாக்கியத்திலுள்ள பிராணசப்தத்துக்கும் பிரம்மபரமாக அர்த்தம் செய்யமுடியாதபடியால் பூர்வபக்ஷி மதப்படி பிரத்தியுதாஹரணசங்கதி ஏற்படுகிறது.

आ (2) திருஷ்டாந்த சங்கதி.

விருத்தார்த்தமுள்ள அநேக பதங்கள் காரணமான ஒரே பிரம்மத்தினிடத்தில் அபிப்பிராயப்படுகின்றன என்று முந்தின அதிகரணத்தில் சொன்னது போல் இந்த அதிகரணத்தில் ஒரே சப்தத்துக்கு அநேக அர்த்தமிருக்கும்போது ஒரு அர்த்தத்தைக் கொண்டு பிரம்மத்தை காரணமாக அறியலாமாகையால் இரண்டு அதிகரணங்களுக்கும் திருஷ்டாந்த சங்கதி ஏற்படுகின்றது. (4)

क (b) பாதசங்கதி :—

இந்த விஷயவாக்கியத்திலுள்ள கர்மசப்தத்துக்கு பிரம்மத்தின் காரியம் என்று அர்த்தமானதால் பிரம்மத்தை அனுசரித்திருக்கிறது. ஆகையால் பாத சங்கதி ஏற்படுகிறது.

(c) சுருதிமுதலிய சங்கதிகளை முன்போலவே அறியவும். (5)

V. சந்தேகம் :—இந்த விஷயவாக்கியமானது

(1) ஜீவன் அறியத்தக்கவன் என்று உபதேசிக்கிறதா? அல்லது

(2) முக்கிய பிராணன் அறியத்தக்கது என்று உபதேசிக்கிறதா? அல்லது

(3) பரமாத்மா அறியத்தக்கவன் என்று உபதேசிக்கிறதா?

சந்தேகத்துக்காரணம் :—

क உபக்கிரமவாக்கியத்தில் பிரம்மத்தைப்பற்றிச் சொல்லியிருக்கிறது. உபசம்ஹாரவாக்கியத்தில் ஜீவனைப்பற்றிச் சொல்லியிருக்கிறது. ख மத்திய வாக்கியத்தினால் பிரம்மசப்தம் பிராணனையும் கூறலாம், ஆகையால் சந்தேகம் வருகிறது, கர்மசப்தத்துக்கு சலனமென்கிற செய்கை என்பது இடுகுறி அர்த்தம். எதினுடைய சேஷ்டை இவனுடையதோ என்றால் இது பிராணன் விஷயத்தில் பொருந்தும். ஆகையால் இதனால் பிராணனை அறியலாம். அல்லது எது செய்யப்படுகிறதோ அது கர்மம். இதைக்கொண்டு செய்கிறவனாகிய பிரம்மத்தையாவது ஜீவனையாவது அறியலாம். ஆகவே கர்மசப்தத்தால் சந்தேகம் ஜனிக்கிறது. (6)

VI. இதலடங்கிய சூத்திரங்கள் 3 (16—18) இவைகளுக்குள்

16-ல் விஷயவாக்கியம் ஈசுவரனையே கூறுகிற தென்றும்.

17-ல் பூர்வபக்ஷத்துக்கு கண்டனமும்.

18-ல் ஜீவனைப் பிரதிபாதித்ததும் பிரம்மப்பிரதி பாதிப்பதின்பொருட்டே என்றும்நிரூபிக்கப்படுகிறது.

VI. பூர்வபக்ஷம் :—

(1) यस्य वै तत् कर्म (எவனுடையது இந்த செய்கையோ) என்று சுருதி சொல்லுவதினால் பிராணன் தான் கூறப்பட்டிருக்கிறது. சலனஸ்வரூபமான கர்மம் பிராணனை ஆசிரயித்துக் கொண்டிருக்கிறது.

अथास्मिन् प्राण एवैकधा भवति ।

(என்கிற வாக்கியசேஷத்தில் இதரபிராணாதிகள் பிராணனுடன் ஒன்றாய் விடுகின்றன என்று சொல்லியிருக்கிறது. ஆகையால் பிராணசப்தம் முக்கியப் பிராணனைக் கூறுகிறது.

आदित्ये पुरुषः चन्द्रमसि पुरुषः ।

(சூரியனிடத்தில் புருஷன், சந்திரனிடத்தில் புருஷன்) இப்படி எந்த புருஷர்கள் பாலாகியால் முன் சொல்லப்பட்டார்களோ அவர்களுக்கும் பிராணன் கர்த்தா, சூரியன் முதலான தேவதைகள் பிராணனுடைய அம்சங்கள் என்பது.

कतम एको देव इति प्राण इति स ब्रह्म त्यदित्याचक्षते

(ஒரு தேவதை என்கிறது யார், பிராணன். அவனே பிரம்மம். அவனை தத் என்று சொல்லுகிறார்கள்.)

என்பதாய் பிரஹதாரணியகம் III-9-9ல் சொல்லியிருக்கிறது. ஆகையால் இந்த விஷயவாக்கியம் பிராணனை கூறுகிறதாக வைத்துக்கொள்ளலாம். (8)

2. அல்லது இந்த சுருதியில் ஜீவன் அறியத்தக்கதாக உபதேசிக்கப்படுகிறான். ஏனென்னின் यस्य वै तत् कर्म என்பதினால் தர்மாதர்மரூபகர்மம் அவனுக்குயிருக்கிறதென்று சொல்லமுடியும். அவனும் போக்தாவாயிருப்பதால் போகசாதனமான இந்த புருஷர்களுக்கும் கர்த்தாவாகலாம். வாக்கியசேஷத்திலும் ஜீவலிங்கம் காணப்படுகிறது.

எப்படியெனெனின் :—

புருஷர்களின் கர்த்தாவை அறியவேண்டுமென்று சொல்லியிருக்கிறது. அவனை அறியவேண்டுமென்று பாலாகி அஜாதசத்துருவை அடைந்திருக்கிறான். இவனுக்கு போதத்தை உண்டாக்கவேண்டு மென்று இச்சித்த அஜாதசத்துருவானவன் தூங்கிக்கொண்டிருக்கிற சோமராஜனைப்பார்த்து கூப்பிட்டான். அவன் அதை இலக்ஷியம் செய்யவில்லை. இதனால் பிராணாதிகள் அனாத்மாக்கள்; ஆகையால் போக்தாக்களல்லவென்பதை அஜாத்சத்துரு பாலாகிக்கு உபதேசித்து தடிக்கம்பால் அவனை குத்தி எழுப்பி, அப்படி எழுந்திருந்ததினால் பிராணனைவிட வேறானவன் ஜீவன், இவன் போக்தா வென்று போதித்தான்.

அப்படியே பிந்தின வாக்கியத்திலும் ஜீவலிங்கம் தெரியவருகிறது. எப்படி யெனின்

तद्यथा श्रेष्ठी स्वैर्भुङ्क्ते यथा वा स्वाः श्रेष्ठिनं भुञ्जन्त्येवमेवैष प्रज्ञात्मैरात्माभिर्भुङ्क्ते एवमेवैते आत्मान एतमात्मानं भुजन्ति ॥

என்கிற கௌஷீதகீ பிராமணம் IV-20ல்

எப்படி ஒரு பிரதானமான புருஷன் தன்னுடைய சேவர்களுடன் கொண்டுவரப்பட்டதை புஜிக்கிறானோ, சேவகர்கள் எஜமானனை எப்படி அடுத்து ஜீவிக்கிறார்களோ, அப்படி இந்த பிரஞ்ஞாத்மா இந்த ஆத்மாக்களுடன் புஜிக்கிறான். அப்படியே இந்த ஆத்மாக்கள் இந்த ஆத்மாவை அதாவது இவனால் கொடுக்கப்பட்டவைகளை புஜிக்கிறார்கள். (அதாவது இந்திரியங்கள் மூலமாக ஆத்மா ஞானத்தை சம்பாதிக்கிறான். இந்திரியாதிகளின் அபிமானி தேவதைகள். இவன் கொடுக்கிற ஹவிஸை சாப்பிடுகிறதினால் இவனையே புஜிக்கிறதாகசொல்லப்படுகிறார்கள்)

ர (ஆகவே இந்த போக்திருத்வம் ஜீவலிங்கம்.)

ஜீவன் பிராணனை தரிக்கிறதினால் பிராணசப்தத்தால் கூறப்படலாம். ஆகையால் ஜீவன், முக்கிய பிராணன். இவர்களுக்குள் ஒன்றைத்தான் கிரகிக்கவேண்டியது. பரமேசுவரனை கிரகிக்கக்கூடாது. ஏனெனின் அவரைக் கூறும் லிங்கம் காணப்படவில்லை. (9)

VIII. (1) இப்படி பூர்வபக்ஷிசொல்ல வியாசர் சித்தாந்தத்தை

जगद्वाचित्वात् ।

என்கிற சூத்திரத்தில் கூறுகிறார். (10)

2. பதஉரை :—

जगद्वाचित्वात् ஜகத்தைச் சொல்லுவதினால் (11)

3. பொழிப்புரை :—

விஷயவாக்கியத்திலுள்ள கர்மசப்தத்துக்கு காரியரூபமான சமஸ்தஜகத்து என்று அர்த்தமானதால், இது எவனுடையதோ அதாவது இது எதினால செய்யப்படுகிறதோ அது பிரம்மம். இதுவே சகல புருஷர்களின் கர்த்தா. (12)

4. பாஷ்யம் :—

1. பூர்வபக்ஷத்துக்கு உத்தரம் :— உபக்கிரம பலத்தால் இந்த புருஷர்களின் கர்த்தா இந்த பரமேசுவரனே. இவ்விடத்தில் பாலாகியானவன் "நான் உமக்கு பிரம்மத்தைச் சொல்லுகிறேன்" என்பதாய் அஜாதசத்துருவுடன் சம்வாதம் ஆரம்பித்தான். அந்த பாலாகியானவன் சூரியன் முதலானவர்களிடத்திலிருக்கிற புருஷர்களையே பிரம்மம் என்று பிராந்தியால் பாவித்து அவர்களைக் கூறி சும்மா இருந்தான். அஜாதசத்துருவானவன்.

मृषा वै खलु मां संवदिष्ठा ब्रह्म ते ब्रवाणि

அதாவது :—பிரம்மத்தை உனக்குச் சொல்லுகிறேன் என்பதாய் நீ வீண் வார்த்தையைச் சொன்னாய் என்பதாய் அவனை அமுக்கிய பிரம்மத்தைச் சொன்னவனாக திரஸ்காரம் செய்து, இவர்களைச் செய்கிறவனை வேறு ஒருவன் அறியத்தக்கவன் என்று முடித்தான். அறியத்தக்கவன் அமுக்கிய பிரம்மமாக இருந்தானேயானால், உபக்கிரமவாக்கியம் பாதிக்கப்பட்டுப் போகும். ஆகையால் பரமேசுவரனே இந்த கர்த்தாவாக இருக்கவேண்டும். பரமேசுவரனைத் தவிர வேறு ஒருவனும் இந்தப் புருஷர்களுக்கு ஸ்வதந்திரனை கர்த்தாவாக மாட்டான். (13)

2. यस्य वै तत् कर्म என்பதும் சலனரூபகர்மத்தையும், அல்லது தர்மாதர்மரூபகர்மத்தையும் கூறமாட்டாது. இவைகளுக்குள் ஒன்றும் பிரகிருதமுமன்று. முன் சொல்லப்படவுமில்லை. रा [ஒரு பதத்துக்கு இரண்டு அர்த்தமிருந்தால் எந்த அர்த்தத்தில் பிரகரணமும் உபபதங்களும் ஒத்திருக்கின்றனவோ அதை கிரகிப்பது யுக்தம். பிரகிருதத்தில் இவ்விரண்டுமில்லாதபடியால் எதை எடுத்துக்கொள்ளுகிறது என்று சம்சயம்வர, புருஷபதமும் கர்த்தா வென்னும் பதமும் சமீபத்தில் இருப்பதால், क्रियत इति कर्म (அதாவது எது [illegible] என்கிற யோகத்[illegible] யப்படுகிறதோ அது கர்மம்) என்கிற [illegible]தால் ஜகத்தை கிரகிப்பது யுக்தம்]

रा (एतत् कर्म என்பதிலுள்ள ஏதத் சப்தம் கீழ் சொன்னதைத்தான் இழுத்துக்கொள்ளுமாகையால் கர்ம சப்தமும் கீழ் சொன்ன புருஷர்களை கூறட்டுமே யெ[illegible]னின்) एतेषां पुरुषाणां என்கிறதில் அவைகளைச் சொல்லியாய்விட்டபடியால், இது புருஷர்களைக் கூறமாட்டாது. रा (அப்படிக்கூறினால் பௌநருக்திய தோஷம் வரும்) மேலும் पुरुषाणां என்பதை கர்மம் என்கிற ஒன்றன்பால் ஒருமைப்பதத்தால் கூறுவது யுக்தமன்று.

மேலும் இந்த கர்ம பதம் செய்கைக்கு விஷயமான புருஷனையும் கூறமாட்டாது இந்த செய்கையின் பலனையும் (உண்டுபண்ணுதலையும்) கூறமாட்டாது. ஏனெனின், முன் வந்திருக்கும் கர்த்தா வென்னும் பதத்தால் இவ்விரண்டும் சித்தித்து விடுகின்றன (கர்மத்தைச் செய்வதால் தான் கர்த்தாவென்னும் பெயர் சித்திக்கிறது. கர்மம் எப்போதும் பலத்தைக் கொடுத்துத் தீரும். ஆகையால் கர்த்தா வென்பதினாலேயே கர்மம் பலன் இவைகள் சித்தித்துவிடுவதால், இவைகளையே கர்மபதம் கூறுவதாகச் சொல்லுவது பௌநருக்திய தோஷமாகும்.)

இவ்விதமாக கர்மபதத்துக்கு ஒரு அர்த்தமும் பொருந்தாதபடியால், பிரத்தியக்ஷத்துக்கு விஷயமான ஜகத்தையே एतत् சப்தம் கூறுவதாக கிரகிக்கவேண்டியது. அந்த ஜகத்தே क्रियते इति कर्म என்பதாய்சொல்லப்படுகின்றது.

(3) ஜகத்து பிரகிருதமன்று; அதைப்பற்றி சப்தங்களுமில்லையே. அப்படி யிருக்க அதை எப்படி கிரகிக்கலாமெனின்,

சரிதான். ஆயினும் இந்த கர்மசப்தம் ஜகத்தை விசேஷமாய் பிரதிபாதிக்காவிட்டாலும், இது சமீபத்திலிருக்கிற வஸ்துக்களை एतत् சப்தத்தால் கூறக்கூடும். விசேஷமான பதார்த்தம் சமீபத்தில் இராதபடியால் அப்படிப்பட்டதை கூறாமலே பொதுவாய் ஜகத்தைக் கூறும்.

रा (மேலும் ஜகத்து பிரகிருதமல்லவென்றும் சொல்லக்கூடாது.) ஏனெனின் முன் ஜகத்தின் ஏகதேசிகளான புருஷர்களை விசேஷமாய் சொன்னதினால் பின்னால் ஜகத்து பொதுவாய் கூறப்படுகிறது என்று தெரியவருகிறது. (14)

(3) एतेषां पुरुषाणां कर्त्ता என்று முதலில் சொன்னதைக்கொண்டு ஜகத்தின் ஏகதேசிகளான இந்த [illegible] என்று சந்தேகம் [illegible] இந்த சந்தேகத்தை நிவிர்த்திக்கும்பொருட்டு यस्य वै तत् कर्म என்னுக்கு சம[illegible] ஜகத்துக் கர்மமோ என்று சொல்லப்பட்டது

வா சப்தம் ஸ்வல்பத்தைத் தள்ளிவிடுகிறது. வாலாகி என்பவன் சூரியன் முதலானவர்களிடத்திலிருக்கிற புருஷர்களை பிரம்மமென்று சொன்னான். அவர்கள் பிரம்மமல்ல வென்று சொல்லிக் காட்டும்பொருட்டு அவர்களை பிரித்து அதாவது புருஷர்களின் கர்த்தா வென்பதாய் விசேஷமாய் சொல்லப்பட்டது. ஆ பிராமணர்களுக்கு சாப்பாடு செய்துவை; சன்னியாசிகளுக்குச் சாப்பாடுசெய்துவை, என்கிற இடத்தில் எப்படி பிராமண சப்தம் சன்னியாசியைவிட வேருனவனைக் கூறுகிறதோ, பிராமணனும் சன்னியாசியும் சேர்ந்து எல்லா பிராமணர்கள் என்று அர்த்தமாகிறதோ அப்படி புருஷனுடைய கர்த்தா வென்பதினால் ஜகத்தின் விசேஷபாகமும், एतत् कर्म என்பதால் ஜகத்தின் சாமான்னியமான மற்றபாகமும், இரண்டும் சேர்ந்து சமஸ்தஜகத்தும் விளங்குகிறது. அப்படிப் பட்ட சாமான்னியவிசேஷங்களுடன்கூடியஜகத்துக்கு யார் கர்த்தாவோ அவன் அறியத்தக்கவன் என்று சுருதி உபதேசிக்கிறது. சகலஜகத்தின் கர்த்தா பரமேசுவரன் என்று சகலவேதாந்தங்களாலும் உறுதி சொல்லப்படுகிறது. (15)

I-4-17-வது சூத்திரம்.

## जीवमुख्यप्राण लिङ्गान्नेतिचेत्तद्व्याख्यातम् । (16)

2. முந்தின சூத்திரத்துக்கும் இதற்கும் சம்பந்தம்:—பிந்தின வாக்கியத்திலுள்ள ஜீவலிங்கத்தாலும் முக்கியப் பிராணலிங்கத்தாலும் இவைகளுக்குள் ஒன்றை இவ்விடத்தில் கிரகிப்பது நியாயம், பரமேசுவரனை கிரகிப்பது நியாயமல்லவென்று பூர்வபக்ஷி முன் சொன்னதானது இப்போது பரிஹரிக்கத்தக்கது. (17)

3. பதஉரை:—

जीवमुख्यप्राणलिंगात् ஜீவன் முக்கியபிராணன் இவர்களுடைய லிங்கத்தால்

न इति चेत् பரமேசுவரன் கூறப்படவில்லை என்றுசொன்னால்

तत् அது

व्याख्यातम् சொல்லப்பட்டது. (18)

4. பொழிப்புரை:—

ஜீவலிங்கத்தாலும் முக்கிய பிராணலிங்கத்தாலும் கர்த்தா பரமேசுவரனல்லவென்று சொல்லும்பக்ஷத்தில், இது முன்னமேயே வியாக்கியானம் செய்யப்பட்டிருக்கிறது. அதாவது பரிகரிக்கப்பட்டிருக்கிறது(19)

5. பாஷ்யம்:—

नोपासा त्रैविध्यादाश्रितत्वादिह तद्योगात्

என்கிற I-1-31-வது சூத்திரத்தில் இதற்கும் பரிஹாரம் செய்யப்பட்டிருக்கிறது. பூர்வபக்ஷிசொல்லுகிறபடியிருந்தால் இவ்விடத்தில் ஜீவோபாசனம் முக்கியப் பிராணனுடைய உபாசனம் பிரம்மோபாசனம் ஆகிய மூன்று உபாசனங்கள் ஏற்படும். இது யுக்தமன்று. உபக்கிரமவாக்கியத்தாலும் உபசங்காரவாக்கியத்தாலும் இந்த வாக்கியத்துக்கு பிரம்ம விஷயமென்று தெரியவருகிறது. உபக்கிரமவாக்கியத்தில் பிரம்மம் விஷயமென்பது காணபிக்கப்பட்டிருக்கிறது. உபசம்ஹாரத்திலும்

सर्वान् पाप्मनोऽपहत्य सर्वेषां च भूतानां श्रैष्ठ्यं स्वाराज्यमाधिपत्यं पर्येति य एवं वेद ।

அதாவது எவன் இப்படி அறிகிருனே அவன் சகல பாபங்களையும் போக்கடித்து பிராணிகளுக்குள் சிரேஷ்டத்தன்மையையும், பிராணிகளை நியமனஞ் செய்யும் தன்மையையும், தான் ஒருவனாலும் நியமனஞ் செய்யப்படாமையாகிய தன்மையையும் அடைகிருன். VI-20ல் நிரதிசயபலம் என்பதாய் சொல்லியிருப்பதினால் பிரம்மம் விஷயம் என்றுதெரியவருகிறது.()

ஆ (b) முதல் பாதத்தின் பதினோராவது அதிகரணத்தில் உபக்கிரம உபசம்ஹாரம் ஒரேவிதமாக இருப்பதால் வாக்கியம் ஒன்று என்றும் ஜீவபிராணலிங்கங்களை பிரம்மபரமாய் பொருந்திவிடலாம் என்று சொன்னதுபோல் இந்த அதிகரணத்திலும் வாக்கியம் ஒன்று என்று சொன்னால், பிரதர்தன வாக்கியத்தாலேயே இந்த வாக்கியமும் நிச்சயிக்கப்பட்டதாக ஆய்விடும், இதற்கு பிரயோசனமிருக்கமாட்டாது. ஆனால் यस्य वै तत् कर्म என்கிறவாக்கியம் பிரம்மபரமென்று அவ்விடத்தில் நிரூபிக்கப்படவில்லை. ஆகையால் இந்த கர்மபதம் ஜீவனையாவது முக்கியப்பிராணனையாவது கூறமாட்டாதோ என்கிற சந்தேகம் மறுபடியும் ஜனிக்கிறது. ஆகையால் அது இப்போது பரிஹரிக்கப்படுகிறது.

प्राणबन्धनं हि सोम्य मनः ।

அதாவது:— பிரியதர்சனமுள்ளவனே மனதானது பிராணனிடத்தில் கட்டுப்படுகிறது என்று சாந்தோக்கியம் VI-8-2 ல் சொல்லியபடி பிராணசப்தமும் பிரம்மவிஷயமாக காணப்படுகிறது.

உபக்கிரம உபசம்ஹார வாக்கியங்கள் பிரம்ம விஷயமாக இருப்பதாலும் ஜீவனும் பிரம்மமும் அபேதமானதாலும் ஜீவலிங்கத்தையும் பிரம்மத்தில் பொருந்தும்படி இணைத்து அர்த்தம் செய்யவேண்டியது(21

I-4-18வது சூத்திரம்

# अन्यार्थं तु जैमिनिः प्रश्नव्याख्यानाभ्यामपि चैवमेके । (22)

2. முந்தின சூத்திரத்துக்கும் இதற்கும் சம்பந்தம் :—

ஜ பாலாகி அஜாதசத்துரு இவர்களுடைய சம்வாதத்தில் ஜீவலிங்கத்தை சர்வாத்மகமான பிரம்மத்தினிடத்தில் பொருந்தும்படி செய்யலாமென்று முன் சொல்லப்பட்டது. இப்போது இந்த சம்வாதமும் ஜீவனைப் பிரதிபாதிக்கவில்லை, பின்னையோவெனின் சுஷுப்தியில் ஜீவன் எவனுடன் ஒன்ருய்விடுகிருனே அந்த பிரம்மத்தையே பிரதிபாதிக்கிறது என்று நிருபிக்கப்படுகிறது. (23)

3. பதஉரை :—

तु ஆனல்

जैमिनिः ஜைமினியானவர்

प्रश्नव्याख्यानाभ्यां பிரச்ன பிரத்தியுத்தரங்களால்

अन्यार्थं வேறு பிரயோசனத்தின் பொருட்டு

इति मन्यते நினைக்கிருர்

अपि च மேலும்

एवं இப்படி

एके சிலர் (சொல்லுகிருர்) (24)

4. பொழிப்புரை :—

ஜீவனைப்பற்றிச் சொன்னதானது பிரம்மத்தைப் பிரதிபாதிக்கிறதாகிய வேறு பிரயோசனத்தின்பொருட்டு என்று ஜைமினி ஆசாரியார் பிரச்னபிரதிவசனங்களால் அறிகிருர். மேலும் இப்படியே சிலர் சொல்லுகிருர்கள். (25)

5. பாஷ்யம் :—

1. अन्यार्थं तु जैमिनिः இந்த வாக்கியத்தில் ஜீவனைப் பிரஸ்தாபித்ததானது பிரம்மத்தை அறியும்பொருட்டென்று ஜைமினி ஆசாரியர் எண்ணுகிறபடியால், இந்த வாக்கியம் ஜீவபரமா அல்லது பிரம்மபரமாவென்று சந்தேகிக்க வேண்டியதில்லை. ஏனெனின், 26

2. प्रश्नव्याख्यानाभ्यां கேள்வி மறுமொழிகளால் கேள்வியாவது :—

அஜாதசத்துருவானவன் வாலாகிக்கு பிரம்மத்தை உபதேசிக்கும் பொருட்டு தூங்குகிற ஒரு புருஷனிடம் அவனைக் கொண்டுபோய், தூங்குகிறவனைக் கூப்பிட்டான். தூங்குகிறவன் சுவாசத்தைவிட்டுக் கொண்டிருந்தும் எழுந்திருக்கவில்லை. பிறகு கழியால் தட்டி அவனை எழுப்பி பிராணனைவிட வேருனவன் ஜீவன் என்பதாய் உபதேசித்தான். மறுபடி அஜாதசத்துருவானவன் வாலாகியைப் பார்த்து.

क्वैष एतद्बालाके पुरुषोऽशयिष्ट क्व वा एतदभूत् कुत एतदागात् (कौ ब्रा IV-19)

அதாவது :-வாலாகியே, இந்த புருஷன் விசேஷ ஞானமில்லாமலிருக்கும் படியாக எவ்விடத்தில் படுத்துக்கொண்டிருந்தான் தூங்கினவன் எத்துடன் ஒன்ருய்விட்டான்: இந்த ஐக்கியம் கெட்டுப்போகும்படி எந்தவிடத்திலிருந்து இவன் வந்தான் என்பதாய் கேட்டான். இந்த கேள்வியில் ஜீவனைவிட வேருனவன் காணப்படுகிருன்.

அப்படியே பிரதிவசனமும் ஜீவனைவிட வேருன பிரம்மத்தைக் கூறுகிறது. எப்படியெனின்,

यदा सुप्तः स्वप्नं न कञ्चन पश्यत्यथास्मिन् प्राण एवैकधा भवति ।

என்கிற IV-19வது வாக்கியம் எப்போது ஒருவன் தூங்குகிருனே அப்போது அவன் ஒன்றையும் பார்க்கிறதில்லை. அவன் பிராணனுடனே ஒன்ருய்விடுகிருன் என்றும்.

एतस्मादात्मनः सर्वे प्राणा यथायतनं विप्रतिष्ठन्ते प्राणेभ्यो देवा देवेभ्यो लोकाः

என்கிற VI-20வது வாக்கியம் இந்த ஆத்மாவிடமிருந்து சகல பிராணன்களும் உண்டாகி அவாளவாளுடைய இடத்திற்குச் செல்லுகிருர்கள். பிராணன்களிடமிருந்து தேவதைகளுண்டாகிருர்கள். தேவதைகளிடமிருந்து லோகங்கள் உண்டாயின என்றும் சொல்லுகின்றது.

வேதாந்தசித்தாந்தமோ — சுஷுப்திகாலத்தில் ஜீவன் பரப்பிரம்மத்துடன் ஒன்ருய்விடுகிருன், பரம்பிரம்மத்தினின்றும் பிராணன்முதலான ஜகத்தானது உண்டாகிறது என்பதாம். ர (முதல் வாக்கியத்தால் ஜீவனும் பிராணனும் ஒன்று என்பதும், இரண்டாவது

வாக்கியத்தால் பிராணன் ஐகத்காரணமென்றும் தெரியவருவதால் பிராணன் பிரம்மம் என்பது நிச்சயம்) ஆகையால் எவ்விடத்தில் இந்த ஜீவன் விசேஷஞான மன்றியிலும் விக்ஷேபமன்றியிலும் தூங்குகிறானோ, எவ்விடத்தில் உபாதியால் உண்டாகிற விசேஷஞானம் அதாவது பிராந்திஞானமற்ற ஸ்வரூபம் சித்திக்கிறதோ, எதினின்றும் நழுவிவிடுதலாகிய மறுபடியும்வருதல் ஏற்படாதோ, அந்த பரமாத்மா அறியத்தக்கதாக சுருதி கூறுகிறதென்று தெரியவருகிறது. (27)

(3) अपि चैवमेके (ரா கேள்விமறுமொழிகள் பிரம்மத்தையே சொல்லுகின்றன என்கிற விஷயத்தில் சாகாந்தரசம்வாதத்தைக் கூறுகிறார்) மேலும் வாஜஸநேயசாகைக்காரர்கள் இந்த ஷாலாகி அஜாதசத்துரு சம்வாதத்திலேயே

य एष विज्ञानमयः पुरुषः क्व वै तदभूत कुत एतदागात्

(விஞ்ஞானமய புருஷன் எங்கே இருந்தான், எங்கிருந்து அவன் திரும்பிவந்தான்) என்று பிரஹதாரணியக II-1-16வது சுருதியில் கூறிய பிரச்னவாக்கியத்தில், ஸ்பஷ்டமான விஞ்ஞானமய சப்தத்தைக் கொண்டு ஜீவனையும்,

य एषोऽन्तर्हृदय आकाशस्तास्मिन् शेते

(ஹிருதயத்திலிருக்கிற ஆகாசத்தில் இவன் இருக்கிறான்) என்று பிரஹதாரணியகம் II-1-17-வது சுருதியில் கூறிய பிரதிவசனத்தில் ஜீவனைவிட வேறான பரமாத்மாவையும் அறிகிறார்கள். சாந்தோக்கியம் VIII-1-1ல் दहरोऽस्मिन्नन्तराकाशः (ஹிருதயகமலத்திலிருக்கிற அற்ப ஆகாசம்) என்கிற வசனத்தினால் ஆகாச சப்தம் பரமாத்மாவைக் கூறும் என்று தெரிய வருகிறது.

सर्वे एत आत्मानो व्युच्चरन्ति

சகல ஆத்மாக்களும் அந்த ஆத்மாவினின்றும் உண்டாகிறார்கள் என்கிற பிரஹதாரணியக மாத்தியந்தின சாகாவாக்கியமும் உபாதியுள்ள ஆத்மாக்கள் வேறு ஆத்மாவினிடமிருந்து உண்டாவதாக சொல்லுவதால் பரமாத்மாவையே காரணமாகச் சொல்லுகிறது என்று தெரியவருகிறது. (28)

ரா (இவ்விதமாக ஜீவனைத் தள்ளிவிடும்படி சூத்திரத்துக்கு வியாக்கியானம் செய்து, பிராணனைத்தள்ளிவிடும்படிக்கும் வியாக்கியானம் செய்கிறார்.)

தூங்கினவனை எழுப்புவதினால் பிராணனைவிட ஜீவன் வேறு என்று செய்த உபதேசமானது பிராணனை நிராகரிப்பதில் வேறு யுக்தியா யிருக்கிறது (ரா கேள்வி மறுமொழிகளால் வாக்கியம் பிரம்மபரமென்று தெரியவருவதால் இந்த வாக்கியத்தில் பிராணனை உபதேசித்ததும் பிரம்மஞானத்தின் பொருட்டென்று ஜைமினி ஆசாரியர் நினைக்கிறார். மேலும் வாஜஸநேயசாகிகளும் பிராணாதிரிக்தமான ஜீவாத்மாவை ஒப்புக்கொள்ளுகிறார்கள் ஆகையால் இந்தசுருதி பிராணனை கூறவில்லை என்பதாய் சூத்திரகாரர் சொல்லுகிறார்.

ஜ பிராணன் கூறப்படவில்லை என்பதற்கு த்ரைவித்தியாதி சூத்திரத்தில் வாக்கியபேததோஷம் வரும் என்று முதலாவது பாதத்தில் சொன்னதுமன்றியில் கௌஷீதகி உபநிஷத்தில் IV-19ல் வ்ருஹத் முதலிய விசேஷணம் பிராணனுக்குப் பொருந்தாது என்று சொல்லப்பட்டது.

இந்த சூத்திரத்தில் தூங்குகிறவனுடைய திருஷ்டாந்தத்தினால் பிராணனைவிட ஜீவன் வேறு, சிரேஷ்டன் என்று சொன்னதானது பிராணனை நிராகரிப்பதில் அதிக யுக்தியாயிருக்கிறது. ரா ஆகையால் இந்த கௌஷீதகி வாக்கியம் பிரம்மத்தில் தாற்பரியப்படுகிறதென்று சித்தமாகிறது. (29)

XI. பூர்வபக்ஷபலன் :—இந்த வாக்கியம் பிராணாதி உபாசனபரமாயிருப்பதால் பிரம்மத்தினிடத்தில் சமன்வயம் சித்திக்கவில்லை என்பது

சித்தாந்தபலன் :—ஞேயப் பிரம்மத்தில் சமன்வயம் சித்திக்கிறது என்பது. (30)

XII. வியாசாதிகரணமாலைப்படிச் சுருக்கம்.

1. சுலோகங்கள் :—

पुरुषाणां तु कः कर्त्ता प्राणजीवपरमात्मसु ।
कर्मेति चलने प्राणो जीवोऽपूर्वे विवक्षिते ॥
जगद्वाची कर्म शब्दः पुंमात्रविनिवृत्तये ।
तत्कर्त्ता परमात्मैव न मृषा वादिता ततः ॥

2. கௌஷீதகி பிராமணோபநிஷத்தில் பாலாகி என்கிற பிராமணனால் ஆதித்தியாதி 16 புருஷர்கள் பிரம்மமாக சொல்லப்பட்டவளவில் அரசன் அவைகளை நிராகரித்துச் சொன்னதாவது :—

यो वै बालाके एतेषां पुरुषाणां कर्त्ता यस्य वै तत्कर्म स वै वेदितव्यः

என்றபடி (32)

3. சந்தேகம் பூர்வபக்ஷம் :-இவ்விடத்தில் 3 சந்தேகங்கள் ஜனிக்க பிராணன் என்று சித்தமாயிற்று. ஏனெனின், கர்மசப்தம் சலனத்தைக் கூறுகிறது. தேகாதிகள் சலிப்பதற்குப் பிராணசம்பந்தம் வேண்டும்.

அல்லது புருஷர்களின் கர்த்தா ஜீவனாயிருக்கலாம். ஏனெனின், கர்மசப்தம் அபூர்வத்தைச் சொல்லுகிறது. ஜீவன் அபூர்வஸ்வாமி ஒருக்காலும் பரமாத்மா வன்று. (33)

4. சித்தாந்தம் :—இவ்விடத்தில் கர்மசப்தம் சலனத்தையும் கூறவில்லை. அபூர்வத்தையும் கூறவில்லை. பின்னேயோவெனின் क्रियत इति कर्म என்கிற வியுத்பத்திப்படி இது ஜகத்தைக் கூறுகிறது. ஜகத்தைக் கூறினால் இந்த பதம் பிரயோஜனமுள்ளதாக ஆகிறது. ஏனெனின் புருஷர்களுக்குமட்டும் கர்த்தா வென்கிற சந்தேகம் நிவிர்த்தியாகிறது. அப்படியேஇந்த சுருதிக்கு "வாலாகே, உன்னால் சொல்லப்பட்ட 16 புருஷர்களுக்கு எவன் கர்த்தாவோ அவன் அறியத்தக்கவன். அந்த புருஷர்கள் அறியத்தக்கவர்கள் அல்ல. அல்லது 16 புருஷர்களுக்குக் கர்த்தா வென்பதாய்க் குறிக்கிச் சொல்லுவானேன். இந்த சமஸ்தமான ஜகத்தும் எவனுடைய காரியமோ அவனே அறியத்தக்கவன்." சமஸ்த ஜகத்தையும் சிருஷ்டித்தல் பரமாத்வின்காரியமே; ஜீவப்பிராணன்களுடையதல்ல. ஆகையால் அரசன் வீண்வார்த்தையைச் சொல்லவில்லை. ब्रह्म ते ब्रवाणि பிரம்மத்தை உனக்குச் சொல்லுகிறேன் என்று பிரதிஞ்ஞை செய்து 16 புருஷர்களைச் சொல்லும் பாலாகன் मृषा वै किल என்பதினால் வீண்வார்த்தை சொன்னதாகக் காட்டி, அரசன்தானே பிரம்மத்தைச் சொல்ல இச்சித்தவனாய் பிராணஜீவர்களைச் சொன்னால் பாலாகிபோல் அரசனும் வீண்வார்த்தைச் சொன்னவனாக ஆவான். இது அயுக்தம். ஆகையால் வாக்கியத்திற் சொல்லிய ஜகத் கர்த்தா பரமாத்மாவே. (34)

1-4-5-வது அதிகரணம்

முற்றிற்று.

---

## I-4-6-வது அதிகரணம்.

அநுக்கிரமணிகை.

---

## 1-4-6வது அதிகரணம்.

I. இதின் பெயர் :— வாக்கியான்வயாதிகரணமென்பதாம். (1)

II. இதின் விஷயம்:—மைத்ரேய பிராமணம் பரமாத்மாவைக் கூறுகிறதென்பதாம். (2)

III. இதின் விஷயவாக்கியம் :—

न वा अरे पत्युः कामाय என்பதுமுதல்

न वा अरे सर्वस्य कामाय सर्वं प्रियं भवति आत्मनस्तु कामाय सर्वं प्रियं भवति आत्मा वा अरे द्रष्टव्यः श्रोतव्यो मन्तव्यो निदिध्यासितव्यो मैत्रेय्यात्मनो वा अरे दर्शनेन श्रवणेन मत्या विज्ञानेनेदं सर्वं विदितम्

என்கிற பிரஹதாரணியகம் மைத்திராயணி பிராமணத்தின் (IV-5-6வது) சுருதி. இதில் மைத்திரேயி என்னும் பாரியைக்கு யாஞ்ஞவல்கியர் என்னும் பதியானவர் உபதேசிக்கிறதாவது :—

பதியினிடத்திலிருக்கிற பிரியத்தினால் பதி பிரியமுள்ளவனாக ஆகிறதில்லை. சகல பதார்த்தங்களிடத்திலுமிருக்கிற பிரியத்தினால் சகலமும் பிரியமாகிறதில்லை. ஆனால் ஆத்மாவினிடத்திலிருக்கிற பிரியத்தினால் எல்லாம் பிரியமாகிறது. இந்த ஆத்மா பார்க்கத்தக்கவன், கேட்கத்தக்கவன், மனனம் செய்யத்தக்கவன், நிதித்தியாசனம் செய்யத்தக்கவன். ஓ! மைத்திரேயி, ஆத்மாவின் தர்சனத்தினாலும், சிரவணத்தினாலும், மனனத்தினாலும், நிதித்தியாசத்தினாலும், இதெல்லாம் அறியப்பட்டதாக ஆகிறது.

பதிமுதலானவர்கள் ஆத்மாவுக்கு அங்கமாக இருந்து பிரியமானதாயிருக்கிறார்கள். ஆத்மாவே சகலத்தையும் அடக்கிக்கொண்டிருப்பதால் அதியந்தம் பிரியத்துக்கு விஷயம். ஆகையால் எல்லாவற்றையும் விட்டு ஆத்மாவையே பார்க்கவேண்டியது. அதின் பொருட்டு சிரவணாதிகளை அனுஷ்டிக்கவேண்டியதென்பது கருத்து. (3)

VI. சங்கதி :—

(a) முந்தின அதிகரணத்துக்கும் இதற்கும் :—

முந்தின அதிகரணத்தில் உபக்கிரமத்திலும் உபசம்ஹாரத்திலும், மத்தியிலும் பிரம்மத்தைச் சொன்னத்தைக்கொண்டு பாலாகி அஜாதசத்துரு இவர்களின் சம்வாதம் பிரம்மபரம் என்றுநிரூபிக்கப்பட்டது.

இவ்விடத்திலும் உபக்கிரம உபசம்ஹாரங்களில் ஜீவனையே சொல்லியிருப்பதினால் மைத்தரேயீ பிராமணம் ஜீவபரமே என்று பூர்வபக்ஷி சொல்லுகிறபடி திருஷ்டாந்த சங்கதி ஏற்படுகிறது. (4)

(b) பாதசங்கதி :—இந்த பிராமணம் பிரம்மபரமாக ஏற்படுவதினால் சமன்வயபாதத்தில் இது சேர்க்கப்பட்டது.

(c) இதரசங்கதிகளை முன்போலவே அறியவும்

V. சந்தேகம் :—

இந்த விஷயவாக்கியத்தில் பார்க்கத்தக்கவன், கேட்கத்தக்கவன், இவ்விதமாய் உபதேசிக்கப்பட்டவன்.

(a) இந்த விஞ்ஞானாத்மாவா (ஜீவனா) அல்லது.
(b) பரமாத்மாவா.
என்பது சந்தேகம்,

இப்படி சந்தேகம் வருவதற்குக் காரணமென்னவெனின் :—

(1) பதிபாரியைமுதலான பிரியமானவைகளின் பிரஸ்தாபத்தால் ஆத்மா போக்தாவென்று தெரியவருவதால் இவ்விடத்தில் ஜீவாத்மாவை உபதேசித்திருக்கவேண்டு மென்று தோன்றுகிறது.

(2) அப்படியே ஆத்மாவை அறிந்ததினால் சர்வமும் அறியப்பட்டதாக ஆகிறது என்கிற உபதேசத்தில் இந்த சுருதி பரமாத்மாவை உபதேசிக்கிறதாகத் தோன்றுகிறது. (6)

VI. இதிலடங்கிய சூத்திரங்கள் 4 (19-20-21 22.)

இவைகளில்
19-ல் விஷயவாக்கியம் பரமாத்மாவைத்தான் கூறுகிறதென்றும்-

20-ல் ஆரம்பவசனத்தால் ஜீவாத்மாதான் கூறப்பட்டதாகச் சொன்ன ஆக்ஷேபத்திற்குச் சமாதானமும்.

21-ல் ஜீவபிரம்ம அபேதத்தால் பரமாத்மாவையே கிரகிக்கவேண்டு மென்றும்.

22-ல் மற்ற ஆக்ஷேபங்களுக்கு பரிஹாரங்களும் விவரிக்கப்படுகின்றன.

VII. [illegible]

1. இந்த வாக்கியம் விஞ்ஞானாத்மாவை உபதேசிக்கிறது. ஏனெனின்,

(1) உபக்கிரமபலமிருக்கிறது. எப்படியெனின் :- பதி, பாரியை, புத்திரன், தனம், இவைமுதலிய அனுபவிக்கக்கூடிய சமஸ்த ஜகத்தும் தனக்கு வேண்டியதாகையால் பிரியமாயிருக்கிறது. இந்த பிரியத்தினால் ஆத்மா போக்தா என்று தெரியவருகிறது. இப்படிப்பட்ட ஆத்மாவை சுருதியானது முதலில் பிரஸ்தாபித்தபிறகு, பார்க்கத்தக்கவன், கேட்கத்தக்கவன் என்பதாய் எந்த வேறு ஆத்மாவைப்பற்றி சுருதி உபதேசிக்கிறதாயிருக்கும் ?

ஈ இதின் கருத்து :—

ஆத்மபதம் ஜீவனையும் ஈசுவரனையும் கூறினாலும் ந வா அரே முதலிய வாக்கியங்களில் ஜீவனையே கூறுகிறது.

ஏனெனின் :—

(1) பதிமுதலிய பதங்களுடன் சேர்த்துச்சொல்லியிருப்பதால் ஆத்மபதம் ஜீவனைக் கூறுவதே சுவாரசியம்.

(2) வை சப்தம் சுருதியிலிருக்கிறது. இது பிரசித்தமானதைத்தான் கூறும்.

(3) சொன்னது மைத்திரேயி என்கிற ஸ்திரீக்கு ஆகையால் பிரசித்தமான அர்த்தமே சொல்லப்பட்டிருக்கவேண்டும். சகல இஷ்டசித்தியும் ஈசுவரசங்கற்பத்தைப் பொருந்தினது என்று வேதாத்தியயனமற்ற மைத்திரேயியானவள் அறியமாட்டாள்.

(4) எங்கும் பிரசித்தமா யிருப்பதை சொல்லக்கூடியதா யிருக்க, வேதத்தில்மட்டும் பிரசித்தமானதைச் சொல்லுவது யுக்தமன்று. தன்னுடைய இஷ்டத்துக்கு அனுகூலமாயிருப்ப தெல்லாம் தனக்குப் பிரியமாயிருக்கும் என்பது மைத்திரேயிக்குக்கூட நன்றாய் தெரியும்.

ஆகையால் அவளுடைய புத்தியை அனுசரித்தே ந வா அரே பத்யு: முதலிய வசனங்கள் சொல்லப்பட்டன. இவைகளின் கருத்து என்னவெனின், பதிவிரதையான உனக்கு சகல பதார்த்தங்களைவிட நான் ஆகிற பதி பிரியன். நானும் உனக்கு அங்கமாயிருப்பதினால் பிரியன் என்பதாம்.

ஆகையால் உபக்கிரமவாக்கியம் ஜீவபரம் என்று சொல்லுவதே சுவாரசியமாக இருக்கிறது. இதைக் கொண்டு இதுவும் தர்சனாதிகளைக் கூறும் மேல் வாக்கியமும் சேர்ந்து ஒன்றாகமாட்டாதுஎன்று நீ சொல்ல [illegible] சகல பதார்த்தங்களும் ஆத்மாவுக்குவேண்டியதாக இருப்பதால் பிரியமாயிருக்கின்றன. ஆத்மா [illegible]

சுவயம் பிரியமானது. எந்த காலத்திலும் அது பிரியத்துக்கு விஷயமல்லவென்பதாய் ஏற்படமாட்டாது. பதி முதலானவர்கள் இஷ்டத்தை அனுசரிக்கிறவரையில் பிரியமுள்ளவர்களாயிருக்கிறார்கள். ஆகையால் அவர்களுடைய பிரியம் ஒரு காரணத்தைப் பொருந்தியிருக்கிறது, ஆத்மாவில் பிரியமோ சுவதஃ சித்தமாயிருக்கிறது. ஆகையால், ஆத்மாவே கேட்கத்தக்கவன். ஆகையால் ஏகவாக்கியத்தில் யாதொரு அனுபபத்தியுமில்லை. இந்த ஆத்மாவுக்கு நிரதிசயமான சுகம் கிடைக்கும்பொருட்டு பரமான ஆத்மவிஷயமான சிரவண மனன நிதித்தியாசனங்களை அனுஷ்டிக்கவேண்டியது. முதல்வாக்கியத்தி லுள்ள ஆத்மாவை அனுசரித்தே பிந்தின வாக்கியத்திலுள்ள ஆத்மபதத்தையும் அறியவேண்டியது. ஆகையால் ஏகவாக்கியத்திற்கு பாதகம் வரவில்லை.) (8)

(2) மத்தியத்திலும் அதாவது IV-5-13லும்

महद्भूतमनन्तमपारं विज्ञानघन एवैतेभ्यो भूतेभ्यः समुत्थाय तान्येवानुविनश्यति न प्रेयसंज्ञास्ति ॥

அதாவது:—இந்த பிரத்தியக்ரூபம் மஹத் அதாவது அபரிச்சின்னமா யிருக்கிறது, சத்தியமா யிருக்கிறது, நித்தியமா யிருக்கிறது, சர்வகதமா யிருக்கிறது, சித்ரூபமா யிருக்கிறது. காரியகாரணரூபமாய் பரிணமிக்கிற பூதங்களினின்றும் வெளிப்பட்டு அதாவது பூதங்களை உபாதியாயுடைய ஜன்மத்தை அனுபவித்து, அந்த பூதங்கள் நாசமடையும்போது தானும் நாசமடைகிறது, அதாவது உபாதியின் நாசத்திற்குப்பிறகு விசேஷஞான மிருக்கிறதில்லை என்பது கருத்து என்று சொல்லிருக்கிறது. இந்த சுருதியானது பிரகிருத பார்க்கத்தக்கதா யிருக்கிற மஹாபூதத்தை பூதங்களினின்றும் உண்டான விஞ்ஞானத்மாவாக சொல்லுவதினால் விஞ்ஞானத்மாவே பார்க்கத்தக்கவன் என்று காண்பிக்கிறது.

ஆ (பிரம்மம் பார்க்கத்தக்கதா யிருந்தால் அதை ஜீவஸ்வரூபமாக சுருதி சொல்லியிருக்கமாட்டாது. ஆகையால் பார்க்கத்தக்கவன் ஜீவனே.)

ஃ (இந்த வாக்கியமும் ஜன்மமரண லிங்கங்களால் ஜீவபரமாகவே இருக்கிறது.) (9)

(3) அப்படியே கடைசியில் IV-5-15ல்

विज्ञातारमरे केन विजानीयात् ।

(விஞ்ஞாதாவை எப்படி அறிகிறது?) என்று சொல்லியிருக்கிறது. இதிலிருக்கிற விஞ்ஞாதா என்னும் பதம் கர்த்தாவை கூறுகிறதினால் இந்த சுருதி விஞ்ஞானத்மாவை உபதேசிக்கிறதாக தெரியவருகிறது.

ஃ (விஞ்ஞானபதம் அந்தஃகரணபரிணாமமான ஞானவிசேஷத்தையே கூறுமானதால் ஜீவன்தான் இவ்விடத்தில் கூறப்பட்டதாக தெரியவருகிறது.)

உபக்கிரம உபசம்ஹார வாக்கியங்களால் ஜீவாத்மாவே நிச்சயமாவதால் மத்தியிலிக்கிற ஆத்மவிஞ்ஞானத்தால் சர்வ விஞ்ஞானமும் சித்திக்கிறது என்கிற வாக்கியத்தையும், எப்படி அரசனைப் பார்த்தால் எல்லாரையும் பார்த்ததுபோலவே என்று ஔபசாரிகமாக சொல்லிய விடத்தில் பிரதானமான அரசனுடைய ஸ்துதியே ஏற்படுகிறதோ, அப்படி போக்கிய வஸ்துக்களெல்லாம் போக்தாவினுடைய உபயோகத்திற்காக ஏற்பட்டிருப்பதால், ஆத்மா (போக்தா)வின் ஞானத்தால் சர்வத்தின் ஞானமும் சித்திக்கிறதென்பது போக்தாவின் ஸ்துதிரூபமா யிருக்கிறது என்பதாய் அறியவேண்டியது. (10)

VIII. இப்படி பூர்வபக்ஷி சொல்ல வியாசர்

## वाक्यान्वयात् । १९

என்கிற சூத்திரத்தில் சித்தாந்தத்தைக் கூறுகிறார். (11)

2. பதஉரை:—

वाक्यान्वयात् வாக்கியங்கள் அன்வயிப்பதால் (12)

3. பொழிப்புரை:—

பார்க்கத்தக்கதாக சொல்லிய ஆத்மா பரமாத்மாவே. ஏனெனின், வாக்கியங்கள் பரமாத்மாவிலேயே தாற்பரியப்படுகின்றன. (13)

4. பாஷ்யம்:—

இந்த மைத்திரேயிபிராமணவாக்கியம் பரமாத்மாவையே உபதேசிக்கிறது. ஏனெனின்,

वाक्यान्वयात् இந்த வாக்கியத்தின் முன்பின் வசனங்களை பரியாலோசனைசெய்து பார்க்குமளவில் இதிலுள்ள பதங்கள் பரமாத்மாவையே கூறுகிறதாக தெரியவருகிறது. எப்படி யெனின்:—

अमृतत्वतु नाशास्ति वित्तेन என்கிற IV-4-3வது வாக்கியத்தில் தனத்தினால் (தனசாத்தியமான கர்மத்தினால்) மோக்ஷம் கிடைக்கும் என்று நினைக்கக்கூடாது என்று மைத்திரேயியானவர் யாக்கியவல்கியரிடமிருந்து கேட்டபிறகு

येनाहं नामृतास्यां किमहं तेन कुर्यां ।
यदेव भगवान् वेदतदेवमे ब्रूहि ॥

என்கிற IV--4--4வது வாக்கியத்தில் எதிஞல் நான் மோக்ஷமடையமாட்டேனே அதிஞல் நான் என்ன செய்கிறது. எதை நீர் அறிவிரோ அதை எனக்குச் சொல்லும் என்பதாய் கேட்டுக்கொண்டதின்பேரில் யாஞ்ஞவல்கியர் மோக்ஷத்தை இச்சித்த மைத்திரேயிக்கு ஆத்மஞானத்தை பிரகிருத IV-4-6 ஆகிய விஷயவாக்கியத்தில் உபதேசிக்கிருர். பரமாத்மஞானத்தைத்தவிர வேறு ஒன்றிஞலும் மோக்ஷம் கிடைக்கமாட்டாது என்று சுருதிஸ்மிருதிகள் கூறுகின்றன.

அப்படியே ஆத்மவிஞ்ஞானத்தால் சகலமும் அறியப்பட்டதாக ஆகும் என்கிற வசனம், சகலத்துக்கும் காரணபான பரமாத்மாவின் ஞானத்தைத் தவிர மற்ற ஞானத்தால் முக்கியமாய் ஏற்படமாட்டாது. மேலும் இந்த வசனம் ஔபசாரிகம் என்றும் சொல்லமுடியாது.

रा (ஏனெனின், பேதத்தை நிந்தித்து அபேதத்தை சாதிக்கிறதிஞல், ஏகவிஞ்ஞானத்தால் சர்வவிஞ்ஞானம் என்பது சித்திக்கிறது. ஆகையால் அது ஔபசாரிகமன்று.) ஏனெனின், ஆத்மஞானத்தால் சகலமும் அறியப்பட்டதாக ஆகும் என்று பிரதிஞ்ஞை செய்து அடுத்த IV-4-7வது வாக்கியத்தில்

ब्रह्म तं परादाद्योऽन्यत्रात्मनो ब्रह्म वेद ।

(ஆத்மாவைவிட வேருக பிரம்மத்தை எவன் அறிகிருனே அவனை பிரம்மம் தள்ளிவிடுகிறது.) என்பதுமுதல் எவன் பிரம்மக்ஷத்திரமுதலிய ஜகத்தைஆத்மாவுக்குவேருக ஸ்வதந்திரமாக இருக்கிறதாக பார்க்கிருனே அப்படிப்பட்ட பொய்ப்பார்வையுள்ளவனை அப்படி பொய்யாக பார்க்கப்பட்ட பிரம்மக்ஷத்திராதி ஜகத்தை தள்ளிவிடுகிறது என்பதாய் பேததிருஷ்டியை நிராகரித்து इदं सर्वं यदयमात्मा (இதெல்லாம் ஆத்மா) வென்பதாய் சகலவஸ்துக்களும் ஆத்மாவைவிட வேறல்ல வென்று சுருதி கூறுகிறது. துந்துபிமுதலியவைகளின் திருஷ்டாந்தங்களாலும் பிரம்மத்தைவிட வேறு ஒன்றுமில்லை என்பது திடப்படுகிறது. எப்படியெனின், ஏ துந்துபிமுதலிய வாத்தியங்களின் சப்தத்தை சாமான்னியமாய் கேட்பதில் அதின் விசேஷசப்தமும் கேட்டதாக ஆய்விடுவதுபோல், சத்ரூப பிரம்மத்தை கிரகித்தமாத்திரத்தில் ஆகாசம்முதலிய விசேஷங்களும் கிரகிக்கப்பட்டதாக ஆகின்றன. ஆகவே ஏகவிஞ்ஞானத்தால் சர்வவிஞ்ஞானம் முக்கியமாகவே சித்திக்கிறது.

रा (ஏகவிஞ்ஞானத்தால் சர்வவிஞ்ஞானம் ஏற்படுகிறது என்கிற காரணத்தால் பிரம்மந்தான் கூறப்படுகிறது என்று சொல்லப்பட்டது) (14)

இனி சர்வத்தை சிருஷ்டித்தல் என்னும் லிங்கத்தாலும் பிரம்மம் தெரியவருகிற தென்கிருர்).

अस्य महतो भूतस्य निःश्वसितमेतदृग्वेदः ।

(இந்த மஹாபூதத்தினின்றும் ரிக்வேதாதிகள் உண்டாகின்றன) என்கிற IV-4-11வது முதலிய வாக்கியத்திஞல் யாஞ்ஞவல்கியர் பிரகிருத ஆத்மாவே நாமரூபகர்மஸ்வரூப பிரபஞ்சத்துக்குக் காரணமென்று சொல்லுவதிஞல் பரமாத்மாவையே தெரிவிக்கிருர். (15)

रा (இனி சர்வத்துக்கும் லயஸ்தானம் என்கிற லிங்கத்தை நிரூபிக்கிருர்.)

रा (எப்படி சகல ஜலங்களுக்கும் சமுத்திரம் லயஸ்தானமோ அப்படி) ஸ்தானத்தைச்சொல்லிய பிரகரணத்தில் விஷயம், இந்திரியம், மனது இவைகளுடன் கூடின பிரபஞ்சத்துக்கு ஸ்தானம் உள்ளும் வெளியுமற்ற அகண்ட ஞானஸ்வரூபம் என்று சொல்லுகிற யாஞ்ஞவல்கியர் பரமாத்மாவையே தெரிவிக்கிருர்.

ஆகையால் தர்சனதி உபதேசங்கள் பரமாத்மாவைப்பற்றியே என்று தெரியவருகிறது. (16)

## IX. I-4-20-வது சூத்திரம்.

प्रतिज्ञासिद्धेर्लिङ्गमाश्मरथ्यः (17)

2. முந்தின சூத்திரத்துக்கும் இதற்கும் சம்பந்தம் :—

ஆரம்பத்தில் ஆத்மா பிரியமானது என்று சொல்லியிருப்பதிஞல் ஜீவாத்மா விஷயமாகத்தான் தர்சனதிகளை உபதேசித்திருக்கவேண்டியது என்று பூர்வபக்ஷி சொல்லியிருக்கிருன். இதற்கு இந்த சூத்திரத்தில் உத்தரம் சொல்லுகிருர். (18)

3. பதஉரை :—

प्रतिज्ञासिद्धेः பிரதிஞ்ஞை சித்திக்கு

लिङ्गं லிங்கம்

आश्मरथ्यः ஆச்மரத்தியர். (19)

4. பொழிப்புரை:—

ஆத்மா தர்சனத்துக்கு விஷயமாக சொல்லப்பட்டதானது பிரதிஞ்ஞையின் சித்தியை சூசிப்பிக்கிறதென்று ஆஸ்மரத்தியர் நினைக்கிறார். (20)

பாஷ்யம்:—

आत्मनि विज्ञाते सर्वमिदं विज्ञातं भवतीदं सर्वं यदयमात्मा ।

ஆத்மாவை அறிந்தமாத்திரத்தில் இது எல்லாம் அறிந்ததாக ஆய்விடுகிறது இதெல்லாம் ஆத்மா என்பதாய் II-5-6&7ல் பிரதிஞ்ஞை செய்யப்பட்டிருக்கிறது. பிரியரூபமாக சொல்லப்பட்ட ஆத்மாவை பார்க்கவேண்டியது என்பதாய் சொன்னதானது இந்த பிரதிஞ்ஞையின் சித்தியை சூசிப்பிக்கிறது. (ஏ பிரதிஞ்ஞாவாக்கியத்தில் ஜீவப்பிரம்ம ஐக்கியம் தெரியவருகிறது. உபக்கிரமத்தில் போக்தாவான ஜீவன்கூறப்பட்டிருக்கிறான். இரண்டு வசனங்களுக்கும் விரோதம் ஏற்படுகிறதேயெனின், ஜீவனுக்கும் பிரம்மத்துக்கும் ஒருவிதத்தில் பேதமும் ஒருவிதத்தில் அபேதமும் இருப்பதால் அபேதாம்சத்தை எடுத்துக்கொண்டு ஜீவன் முதலில் பிரஸ்தாபிக்கப்பட்டிருக்கிறான். இப்படி அபேதாம்சத்தை எடுத்துக்கொண்டால்தான் பிரதிஞ்ஞாவாக்கியத்துக்கு ஹானி வரமாட்டாது.)

ஜீவன் பரமாத்மாவைவிட வேறாக இருந்தால் பரமாத்மாவின் ஞான மிருந்தாலும் ஜீவன் அறியப்பட்டவனாகமாட்டான். அப்போது ஏகவிஞ்ஞானத்தால்சர்வவிஞ்ஞானம் ஏற்படும் என்னும் பிரதிஞ்ஞை கெட்டுப்போய்விடும். ஆகையால் பிரதிஞ்ஞை சித்திக்கும்பொருட்டு ஜீவாத்மாவுக்கும் பரமாத்மாவுக்கும் இருக்கிற அபேதாம்சத்தைக்கொண்டு உபக்கிரமத்தில் போக்தாவான ஆத்மாவை சொல்லியிருக்கிறதென்று ஆஸ்மரத்தியாசாரியார் நினைக்கிறார். (21)

இந்த சூத்திரத்துக்கு பாமதியில் அடியிற்கண்டபடி வியாக்கியானம் செய்யப்பட்டிருக்கிறது. எப்படி அக்கினியினின்றும் வெளிப்படும் நெருப்புப்பொறிகள் அக்கினிஸ்வரூபமாக இருப்பதினால் அக்கினியைவிட அத்யந்தம் வேறன்றோ (மேலும் அக்கினியினின்றும் சுத்தமாய் வித்தியாசப்படவில்லையே என்பது இல்லை. ஏனெனின், அப்படி வித்தியாசப்படாவிட்டால் அக்கினியைவிட வேறாக அவைகளை அறியமுடியாது. அவைகளிலும் ஒன்றைவிட ஒன்று வேறு என்றும் அறியமுடியாது.) அப்படி பிரம்மவிகாரங்களான ஜீவாத்மாக்களும் பிரம்மத்தைவிட அத்தியந்தம் வேறல்ல. அப்படி யிருந்தால் அவர்கள் சித்ரூபமல்லவென்று ஏற்படும்.

மேலும் பரமாத்மாவைவிட அத்தியந்தம் வித்தியாசப்படுகிறதில்லை என்பதில்லை. அப்படி வித்தியாசம் சுத்தமாயிராதபக்ஷத்தில் ஒருஜீவனை மற்றொரு ஜீவனிடத்தினின்றும் பிரித்து அறியமுடியாது. சுத்தபிரம்மஸ்வரூபமாகவே யிருந்துவிட்டால் சர்வஞ்ஞனாயிருக்கும். அப்போது உபதேசிக்கவேண்டிய பிரசக்தியே யில்லாமற்போகும்.

ஆகையால் ஜீவாத்மாக்கள் எப்படியோ பேதப்படும் பேதப்படாமலு மிருக்கின்றன. ஆகவே ஏகவிஞ்ஞானத்தால் சர்வவிஞ்ஞானமும் சித்திக்கும் என்கிற பிரதிஞ்ஞை சித்திக்கும்பொருட்டு அபேதாபிப்பிராயத்தின்பேரில் உபக்கிரமவாக்கியத்தில் ஜீவனைக் கூறியிருக்கிறதாக தெரியவருகிறது என்று ஆச்மரத்தியர் சொல்லுகிறார்.

இந்தமதத்துக்கு பேதாபேதவாதம். (22)

I-4-21-வது சூத்திரம்

## उत्क्रमिष्यत एवम्भावादित्यौडुलोमिः

2. முந்தின சூத்திரத்துக்கும் இதற்கும் சம்பந்தம்:—ஜீவப்பிரம்ம ஐக்கிய விஷயத்தில் பிரதிஞ்ஞாவாக்கியம் சாதகமாக முன் கூறப்பட்டது. மரணத்துக்குப் பிறகு ஜீவனுடைய ஸ்திதியும் இந்த அபேதத்தைப் பிரதிபாதிக்கிறதென்று இந்த சூத்திரம் சொல்லுகிறது. (24)

3. பதஉரை:—

उत्क्रमिष्यतः சரீரத்தைவிட்டு வெளியே கிளம்புகிறவனுக்கு

एवम्भावात् பரமாத்மாவுடன் ஐக்கியம் ஏற்படுவதால்

औडुलोमिः ஔடுலோமி என்பவர். (25)

4. பொழிப்புரை:—

ஜீவன் சரீரத்தைவிட்ட பிறகு பரமாத்மாவுடன் ஒன்றாய் விடுகிறான். இந்த அபேத அபிப்பிராயத்தை மனதில் வைத்துக்கொண்டு உபக்கிரமவாக்கியம் ஜீவனைக் கூறுகிறது என்று ஔடுலோமி சொல்லுகிறார்.

5. பாஷ்யம்:—

தேகம் இந்திரியம் மனது புத்தி இவைகளின் சேர்க்கையாகிய உபாதி சம்பந்தத்தால் கலக்கமடைந்திருக்கிற ஜீவனானவன், தியானம் முதலிய சாதனங்களை அனுஷ்டிப்பதினால் விசேஷ பிரசன்னதையை அடைந்து, தேகம்முதலிய சேர்க்கையினின்றும்வெளிப்பட்டபின் பரமாத்மாவுடன் ஒன்றாய் விடுகிறான். ஆகையால் இந்த உபக்கிரமவாக்கியம் அபேத அபிப்பிராயத்துடன் ஜீவனைக்கூறுகிறது என்று ஔடுலோமி ஆசாரியார் நினைக்கிறார்.

ர சத்தியமான சம்சாரதசையில் பேதம் இருக்கிறது. முக்தியிலேயே அபேதம் இது ஔடுலோமி மதம். இதற்குப் பிரமாணசுருதி:—

एष संप्रसादोऽस्माच्छरीरात् समुत्थाय परंज्योतिरुपसंपद्य-स्वेन रूपेणाभिनिष्पद्यते ।

ர இந்த ஜீவன் இந்த சரீரத்தினின்றும் வெளிக்கிளம்பி பரமான ஜோதியை அடைந்து தன்னுடைய ரூபத்துடன் விளங்குகிறான் என்கிற சாந்தோக்கியம் VIII-12-3வது வாக்கியம்.

ர (சம்சாரம் ஔபாதிகமானதால் எப்போதும் ஜீவனுக்கும்பிரம்மத்துக்கும் அபேதமிருக்கிறதென்று சொல்லக்கூடாது. ஏனெனின், நாமரூபங்கள் ஜீவனை ஆசிரயித்துக் கொண்டிருக்கின்றன வென்பதைத் நதீ திருஷ்டாந்தத்தால் சுருதி ஞாபகப்படுத்துகிறது.

ர (இந்த திருஷ்டாந்தத்தால் சம்சாரம் சத்தியம் என்று ஏற்படுகிறது.)

यथा नद्यः स्यन्दमानाः समुद्रे-
ऽस्तंगच्छन्ति नामरूपे विहाय
तथा विद्वान्नामरूपाद्विमुक्तः
परात् परं पुरुषमुपैति दिव्यम् ॥

அதாவது:—எப்படி ஓடுகிற நதிகள் நாமரூபங்களைவிட்டு சமுத்திரத்தில் மறைந்துவிடுகின்றனவோ அப்படி நாமரூபத்தினின்றும் விடுபட்ட ஞானி பரத்தைவிட பரமாயிருக்கிற புருஷனை அடைகிறான் என்கிற முண்டகம் III-2-8வது மந்திரத்தில் எப்படி உலகத்தில் நதிகள் தங்களையே ஆசிரயித்திருக்கிற நாமரூபங்களைவிட்டு சமுத்திரத்தை அடைகின்றனவோ அப்படி ஜீவனும் தன்னையே ஆசிரயித்துக் கொண்டிருக்[illegible] நாமரூபத்தைவிட்டு பரமான புருஷனை அ[illegible]

கிறான் என்று சொல்லியிருக்கிறது. திருஷ்டாந்தத்தை அனுசரித்து தார்ஷ்டாந்திகம் இருக்கவேண்டுமாகையால் மந்திரத்துக்கு முன் சொல்லியபடி அர்த்தம் செய்யப்பட்டது. (திருஷ்டாந்தத்தில் சமுத்திரத்தை அடைகிறவரையில் நதிகள் வேறாகவே யிருக்கின்றன. அப்படியே ஜீவனும் பரமாத்மாவை அடைகிறவரையில் வேறாகவே யிருக்கிறான். ஆகையால் சம்சார தசையில் ஜீவபேதம் சத்தியம் என்பது ஔடுலோமி ஆசாரியருடைய மதம். ர இந்த மதப்படி முக்திகாலத்தில் ஜீவனுக்கும் பரமாத்மாவுக்கும் அபேதம் சித்திக்கிறபடியால் முக்திக்குமுன் பரமாத்மாவுக்கு ஜீவஸ்வரூபம் சித்திக்கிறது. ஆகையால் முந்தின ஸ்திதியிலுள்ள போகாதிகளும் பரமாத்மாவினுடையதே என்று பாவிக்கவேண்டும். ஆகையால் உபக்கிரம வாக்கியத்தினால் யாதொரு விரோதமும் விளங்கவில்லை (27)

ர ஔடலோமி மதத்தை அனுசரித்தே பாஞ்சராத்திரிகர்களும்

आमुक्तेर्भेद एव स्याज्जीवस्य च परस्य च ।
मुक्तस्य तु न भेदोस्ति भेदहेतोरभावतः ॥

அதாவது முக்தி சித்திக்கும்வரையில் ஜீவனுக்கும் பரமாத்மாவுக்கும் பேதமே இருக்கிறது, முக்தனுக்கும் பரமாத்மாவுக்கும் பேதமில்லை. ஏனெனின், பேதகாரணமில்லை என்று சொல்லுகிறார்கள். (28)

## XI. I-4-22வது சூத்திரம்.

## अवस्थितेरिति काशकृत्स्नः । (29)

2. முந்தின சூத்திரத்துக்கும் இதற்கும் சம்பந்தம்:—ஆச்மரத்திய ஆசாரியரும் ஔடுலோமி ஆசாரியரும் சம்சாரதசையிலே ஜீவனுக்கும் பிரம்மத்துக்கும் பேதம் இருக்கிறதாக ஒப்புக்கொண்டிருக்கிறார்கள் என்று முன் நிரூபணம் செய்யப்பட்டது. இப்போது அப்படி பேதமிருந்தால் முக்திதசையில்தான் எப்படி ஜீவனுக்கும் பரமாத்மாவுக்கும் அபேதம் சித்திக்கும் என்று ஆக்ஷேபித்து பரமசித்தாந்தத்தைக் கூறுகிறார்.

இந்த சூத்திரத்தின் பிரயோசனம்:—

ர இந்த மைத்திரேயி பிராமணத்தில் காணப்படும் ஜீவலிங்கங்கள் பிரம்மத்தினிடத்தில் பொருந்துகின்றன வென்பதை நிரூபிக்கும்பொருட்டு இந்த அதி[illegible] [illegible]இல்லை, ஏனெனின், முதலாவது [illegible]

த்தின் 11-வது அதிகரணத்தில் இந்த விஷயத்தை பிரஸ்தாபித்தாய்விட்டது.

மூன்றாவது பாதத்தின் பதினான்காவது அதிகரணத்தில் ஜீவனை உத்தேசித்து ஜீவன் பிரம்மம் என்று உபதேசிக்கப்பட்டிருக்கிறது. ஜீவனை உத்தேசித்து என்பதினாலேயே பிரம்மத்தைவிட வேறான ஜீவன் ஒருவனிருக்கிறான் என்று தெரியவருகிறது. ஜீவனை பிரம்மம் என்று உபதேசிப்பதினால் அபேதம் தெரியவருகிறது.

இப்படி மூந்தின அதிகரணங்களால் ஜீவனுக்கும் பிரம்மத்துக்கும் பேதமும் அபேதமும் தெரியவருவதால் மறுபடியும் அவைகளைப்பற்றிச் சொல்லுவது வியர்த்தமே எனின், அந்த பேதாபேதங்களின் விவரம் சொல்லப்படவில்லை. ஆகையால் இந்த அதிகரணம் ஆரம்பிக்கப்பட்டது. இதிலும் ஆச்மரத்தியர் சம்சாரதசையிலேயே ஜீவனுக்கும் பிரம்மத்துக்கும் பேதமும் அபேதமும் இருக்கிறதென்றும் ஔடுலோமியானவர் சம்சாரதசையில் பேதம் தான் இருக்கிறது என்றும் சொல்லுகிறார்கள். இந்த அபிப்பிராயங்களும் சரியல்லவென்பதும் கற்பிதபேதமும் வாஸ்தவ அபேதமும் எப்போதும் இருக்கிறதென்று இந்த அதிகரணத்தில் சித்தாந்தம் செய்யப்படுகிறது()

3. பதஉரை :—

अवस्थितेः அவஸ்தையினால்

इति என்று

काशकृत्स्नः காசகிருத்சனர். (31)

4. பொழிப்புரை :—

பரமாத்மா ஜீவாத்மரூபமாக இருப்பதால் உபக்கிரமவாக்கியத்தில் ஜீவனைக்கூறப்பட்டது என்றுகாசகிருத்சனர் சொல்லுகிறார். (32)

5. பாஷ்யம் :—

பா (கடாகாசம் முதலியவை எப்படி ஆகாசத்திற் கற்பிக்கப்பட்டிருக்கிறதோ, ஆகாசத்தைவிட வேறன்றோ, ஆகாசத்தின் காரியமுமன்றோ, அப்படி ஜீவனும் ஆத்மாவைவிட வேறல்ல, ஆத்மாவின் காரியமுமல்ல. பின்னையோவெனின் அவித்தையாகிற உபாதியிற் கற்பிக்கப்பட்ட ஆத்மாவே. இப்படி ஜீவாத்மாவுக்கும் பரமாத்மாவுக்கும் பேதம் ஏற்படாததினால் ஜீவனை உபக்கிரமவாக்கியத்திற் கூறினதானது பரமாத்மாவை கூறினதுபோலவே. அப்படியானால் பரமாத்மாவை உபக்கிரமவாக்கியத்தில் சொல்லியிருக்கிறதுதானே எனின், ஸ்தூல திருஷ்டியுள்ள புருஷர்களின் மனதில் விஷயம் சுலபமாய் விளங்கும் பொருட்டு உபாதிசகித ஆத்மரூபத்தை உபக்கிரமவாக்கியத்திற் சொன்னார்.) ஆகவே இந்த பரமாத்மாவே இந்த ஜீவாத்மரூபமாயிருப்பதால் இந்த உபக்கிரமவாக்கியம் அபேத அபிப்பிராயத்தினால் பொருந்தும் என்பதாய் காசகிருத்சன ஆசாரியர் நினைக்கிறார்.

அப்படியே

अनेन जीवेनात्मनानुप्रविश्य नामरूपे व्याकरवाणि

அதாவது :—இந்த ஜீவரூபத்தால் உள்ளே பிரவேசித்து நாமரூபங்களைச் செய்கிறேன் என்கிற சாந்தோக்கிய VI-3-2வது சுருதியும் இதைப்போலான சுருதிகளும் பரமாத்மாவே ஜீவரூபமாக இருக்கிறதாக காட்டுகின்றன.

அப்படியே

सर्वाणि रूपाणि विचित्य धीरो नामानि कृत्वाभिवदन् यदास्ते ।

அதாவது :—

ா சர்வரூபங்களையும் செய்து அவைகளுக்கு நாமங்களையும் ஏற்படுத்தி, புத்திமுதலியவைகளில் பிரவேசித்து வசனித்தல் முதலிய காரியங்களைச்செய்து கொண்டிருந்த சர்வஞ்ஞனிருக்கிறானோ அவனை அறிந்தவன் இந்த ஜன்மத்திலேயே மோக்ஷத்தை அடைகிறான். என்று தைத்திரீய ஆரணியக III-12-7வது சுருதியும் இதைப்போலான சுருதிகளும் சொல்லுகின்றன. இவ்விடத்தில் சர்வரூபங்களையும் செய்கிறவன் பரமாத்மாவாகத்தான் இருக்கவேண்டும். வசனாதிகளைச் செய்கிறவன் ஜீவன். சகலரூபங்களைச் செய்தவனே உள்ளே பிரவேசித்து வசனாதிகாரியங்களைச் செய்கிறான் என்று சொல்லியிருப்பதால் ஜீவனும் பரமாத்மாவும் ஒன்று என்பதை இந்த சுருதிகள் காட்டுகின்றன.

பரமாத்மாவைவிட வேறாகவாவது பரமாத்மாவின் காரியமாகவாவது ஜீவனிருக்கும்படியாக தேஜஸ் முதலியவைகளின் சிருஷ்டியில் ஜீவனுடைய சிருஷ்டியையும் தனிமையாக சொல்லவில்லை. (ஆகையால் ஜீவன் பரமாத்மாவைவிட எப்போதும் வேறல்ல.)(33)

விகாரமடையாத பரமேசுவரனே ஜீவன், வேறல்லவென்பது காசகிருத்ஸ்னாசாரியருடையமதம். ஆச்மரத்தியருடைய மதத்திலோ அவர் ஜீவனை பரமாத்மாவை விட வேறல்லவென்று ஒப்புக்கொண்டாலும், ஏகவிஞ்ஞானத்தால் சர்வவிஞ்ஞானம் என்கிற பிரதிஞ்ஞை சித்திக்கும் பொருட்டு அபேதத்தை ஒப்புக்கொள்ளுவதினால் காரியகாரணரூப பேதத்திலும் அபிப்பிராயப்படுகிறார் என்று தெரியவருகிறது. (காரியகாரணரூபபேதத்தை ஒப்புக்கொள்ளாமல் அத்தியந்தம் பேதத்தை ஒப்புக்கொண்டால் பிரதிஞ்ஞைக்கு ஹானி வரும். ஆகையால் இப்படிப்பட்ட பேதத்தைத்தான் ஒப்புக்கொள்ளுகிறார் என்று தெரியவருகிறது.)

ஔடுலோமி பக்ஷத்தில் பந்த அவஸ்தையில் பேதம் சத்தியம். மோக்ஷ அவஸ்தையில் அபேதம் சத்தியம்.

இவைகளுக்குள் காசகிருத்ஸனருடைய மதம் சுருதியை அனுசரித்ததாக தெரியவருகிறது. ஏனெனின்) तत्वमसि (நீ அதாக இருக்கிறாய்) என்கிற வாக்கியத்தில் இந்த தேவதத்தன் அவன் என்று சொல்லுவதுபோல் பர அபரங்களின் அத்தியந்த அபேதம் சொல்லியிருக்கிறது. இந்த அபேதத்தை அனுசரித்தே காசகிருத்ஸனரும் சொல்லுகிறார்.

அத்தியந்தம் அபேதம் இருந்தால் அந்த ஞானத்தால்மோக்ஷ முண்டாகுமென்று சொல்லலாம். ஜீவன் பரமாத்மாவின் விகாரமா யிருந்தால் விகாரத்துக்கு உபாதானகாரணத்துடன் சம்பந்தம் வரும்போது விகாரம் லயமாய்விடும் (நாசமடைந்துவிடும்). அப்போது அபேதஞானத்தால் மோக்ஷம் என்பது சித்திக்காமற் போய்விடும். ஜீவனும் பிரம்மமும் ஒன்றாயிருப்பதினாலேயே நாமரூபங்கள் ஜீவனை ஆசிரயிக்கமாட்டா; உபாதியைத்தான் ஆசிரயிக்கவேண்டும். இந்த உபாதியில் ஆசிரயித்ததானது ஜீவனிடத்தில் ஔபசாரிகமாக சொல்லப்படுகிறது. ஆகையாலேயே சில இடங்களில் அக்கினிபொறி திருஷ்டாந்தத்தால் ஜீவனுடைய உற்பத்தியை சொல்லி யிருப்பதையும் உபாதியை ஆசிரயித்து என்றே அறியவேண்டியது. 34)

रा (இதுவரையில் உபக்கிரமலிங்கத்தை பிரம்மபரமாக மூன்று சூத்திரங்களாலும் நயனம் செய்யப்பட்டது. இனி இரண்டாவதான சமுத்தானலிங்கத்தை அப்படியே நயனம் செய்கிறார்.)

பார்க்கத்தக்க பிரகிருத மஹாபூதமானது பூதங் [illegible] களினின்றும் வெளிக்கிளம்புகிறதினால், [illegible] க்கக்கூடியது ஜீவாத்மாதான் என்பது பிரஹதாரணி யக சுருதியின் கருத்து என்று சொல்லும் பூர்வபக்ஷியின் ஆக்ஷேபத்துக்கு இந்த மூன்று சூத்திரங்களால் உத்தரம் சொல்லத்தக்கது.

(a) प्रतिज्ञासिद्धेर्लिङ्गमाश्मरथ्यः —

आत्मनि वेदिते सर्वमिदं विदितं भवति (IV-5-6)

इदं सर्वं यदयमात्मा (IV-5-7)

அதாவது :—ஆத்மாவை அறிந்தவளவில் இதெல்லாம் அறியப்பட்டதாக ஆகிறது. இதெல்லாம் ஆத்மா. रा என்பதில் ஆத்மஞானத்தால் சர்வஞானமும் பிரதிஞ்ஞை செய்யப்பட்டது. இதற்குக் காரணமாக இதெல்லாம் ஆத்மா வென்னும் அபேதம் சொல்லப்பட்டது. आ (எதினின்றும் ஏது உண்டாகி எதினிடத்திலேயே லயமாகிறதோ அது அதைவிட வேறல்ல வென்கிற நியாயப்படி) நாமம், ரூபம், கர்மம் இந்த ஸ்வரூபமாயிருக்கிற சமஸ்த பிரபஞ்சமும் ஒன்றினிடமிருந்து உண்டாகி ஒன்றிலேயே லயமடைவதாலும், துந்துபிமுதலிய திருஷ்டாந்தங்களால் காரியகாரணங்களின் அபேதமிருப்பதினாலும் இந்த பிரதிஞ்ஞை நிறைவேறுகிறது. சுருதியில் சமுத்தானம் அதாவது வெளியே கிளம்புதல் சொல்லப்பட்டிருக்கிறது. இது விஞ்ஞானாத்மாவுக்கே பொருந்தும். ஆனால் மஹாபூதம் கிளம்புகிறதாகசொல்லியிருக்கிறது. ஆகையால் மஹாபூதமே விஞ்ஞானாத்மஸ்வரூபமாகக் கிளம்புகிறதென்று சொன்னதாக தெரியவருகிறது. அப்போது மஹாபூதத்துக்கும் அதாவது பரமாத்மாவுக்கும் விஞ்ஞானாத்மாவுக்கும் அபேதமிருக்கவேண்டும். இந்த அபேதத்தை மனதிற் வைத்துக்கொண்டு தான் சுருதியில் சமுத்தானம் சொல்லப்பட்டதாக ஆச்மரத்தியர் சொல்லுகிறார். எப்போது அபேதமிருக்கிறதோ. அப்போது ஏகவிஞ்ஞானத்தால் சர்வவிஞ்ஞான பிரதிஞ்ஞையும் சித்திக்கும்.

(b) उत्क्रमिष्यत एवम्भावादित्यौडुलोमिः —

வெளியே கிளம்பின ஜீவன் ஞானம் தியானம் முதலிய சாமர்த்தியத்தினால் தெளிவை அடைந்து பரமாத்மாவுடன் ஐக்கியமடைவதால் இந்த சமுத்தானம் அபேதத்தையே கூறுகிறதென்று ஔடுலோமி ஆசாரியர் நினைக்கிறார்.

(c) अवस्थितेरिति काशकृत्स्नः ।

இந்த பரமாத்மாவே இந்த ஜீவஸ்வரூபமாக இருப்பதால் அபேதத்தைக் கூறினது யுக்தமே என்று [illegible]

ஆக்ஷேபம் :—

एतेभ्यो भूतेभ्यः समुत्थाय तान्येवानुविनश्यति न प्रेत्य संज्ञास्ति

அதாவது இந்த பூதங்களினின்றும் வெளிக்கிளம்பி அவைகளுடன் நாசமடைகிறது, ஞானமிருக்கிறதில்லை என்பதாய் சொல்லியிருக்கிறது. இதில் நாசம் சொல்லியிருப்பதால் இது எப்படி அபேதத்தைக் கூறும்.

சமாதானம்:—இதில் தோஷமில்லை விநாசத்தைச் சொன்னதற்கு விசேஷவிஞ்ஞானநாசம் அபிப்பிராயமேதவிர, ஆத்மாவே நாசமாகிற தென்பது அபிப்பிராயமல்ல. ஏனெனின் இவ்விடத்திலேயே,

मां भगवानमूमुहन्नप्रेत्य संज्ञास्ति

என்கிற IV-5-13-14வது வாக்கியங்களில் இறந்தபிறகு ஞானமில்லை என்பதாய் என்னை ஸ்வாமியே மோகிக்கிறீர் என்கிற ஆக்ஷேபம் வந்தபின், சுருதிதானே

न वा अरेऽहं मोहं ब्रवीम्यविनाशी वा अरेऽयमात्मानुच्छित्ति धर्मा मात्रा संसर्गस्त्वस्य भवति ।

அதாவது :—நான் மோஹம் உண்டாகும்படி ஒன்றும் சொல்லவில்லை. இந்த ஆத்மா நாசமற்றது, சேதமற்றது, மாத்திரை (பூதங்)களின் சம்பந்தமின்மையிருக்கிறது என்று சொல்லியதில் ஆத்மாவுக்கு நாசமில்லை என்பதை தெரிவிக்கிறது. சுருதியின் கருத்து யாதெனின் :—கூடஸ்தநித்தியனை இந்த ஆத்மா ஞானஸ்வரூபர். அவனுக்கு நாசமே உண்டாகமாட்டாது. அவித்தியாகாரியமான பூதங்கள், இந்திரியங்கள், ஆகிய மாத்திரைகளின் சம்பந்தம் வித்தையால் விலகுகிறது. எப்போது சம்பந்தமில்லையோ அப்போது அதினாலுண்டான விசேஷஞானமுமில்லாமற்போகிறது. ஆகையால் மரணத்துக்குப்பிறகு ஞானமில்லை என்று சொல்லப்பட்டது. (35)

विज्ञातारमरे केन विजानीयात् (IV-5-15)

(விஞ்ஞாதாவை எதினால் அறியலாம்) என்கிற உபசம்ஹார வாக்கியத்தில் விஞ்ஞாதா என்கிற கர்த்தாவைக் கூறும் வசனத்தினாலேயே இது ஜீவனைக் கூறுகிறதென்று அறியத்தக்கதென்று பூர்வபக்ஷி சொன்னதானது காசகிருத்சனருடைய அபிப்பிராயத்தினாலேயே பரிஹரிக்கத்தக்கது. ர (ஆச்மரத்தியர், ஔடுலோமி இவர்களுடைய மதத்தில் பேதம் சத்தியமானதால் விஞ்ஞாதாவை எதினால் அறியலாம் என்கிற கேள்விக்கு இடமில்லை. ஏனெனின் எப்போது பேதமிருக்கிறதோ அப்போது அறியும் சாதகங்களுமிருக்கும். அவைகளைக்கொண்டு அறியலாம் என்பது சித்தம்

காசகிருத்சனருடைய மதத்தில் எல்லாம் பிரம்மஸ்வரூபமானதால் அறியும் சாதகமில்லை. ஆகையால் எதினால் அறியலாம் என்கிற ஆக்ஷேபத்துக்கு இடமுண்டாகிறது. எல்லாம் பிரம்மமானால் பரமாத்மபதத்தை உபயோகிக்கவேண்டியதாயிருக்க ஜீவனைக் கூறும் விஞ்ஞாதாவென்னும் பதத்தை எப்படி சுருதி கூறலாமெனின் அந்த பரமாத்மாவே சம்சாரதசையில் ஜீவனாகக் கற்பிக்கப்படுவதால், அந்த விஞ்ஞாதா என்னும் பதம் பிரயோகிக்கப்பட்டது.)

மேலும் (முன்பின் வாக்கியங்களை பரியாலோசனை செய்து பார்க்கிறதினாலும் இந்த வாக்கியம் பிரம்மத்தைத்தான் கூறுகிறதென்று தெரியவருகிறது. எப்படியெனின்)

यत्र हि द्वैतमिव भवति तदितर इतरं पश्यति (IV-5-15)

அதாவது எந்த காலத்தில் துவைதம்போலிருக்கிறதோ அக்காலத்தில் வேறு ஒன்றில் வேறு ஒன்றை பார்க்கிறான் என்று ஆரம்பித்து, அவித்தியாகாலத்தில் அதற்கே தர்சனம் முதலிய விசேஷஞானத்தைக் கூறி

यत्रत्वस्य सर्वमात्मैवाभूत् तत् केन कं पश्येत् ।

அதாவது எக்காலத்தில் எல்லாம் ஆத்மாவாகவே ஆகிறதோ அப்போது எதினால் எதை பார்க்கிறது என்பது முதலியதால் வித்தியாகாலத்தில் அவனுக்கே தர்சனாதியாகிய விசேஷஞானமில்லை என்று சுருதி சொல்லுகிறது. விஷயமில்லாவிட்டாலும் ஆத்மாவை அறியட்டுமே என்று மறுபடியும் சங்கித்து विज्ञातारमरे केन विजानीयात् என்று சுருதி கேட்கிறது. பிறகு இந்த வாக்கியம் விசேஷ விஞ்ஞானமில்லை என்பதைக் கூறுவதினால் கேவல ஞானஸ்வரூபமே இருக்கிறது. அதுவே சம்சாரதசையில் கர்த்தாவாக சொல்லப்பட்டதாக தெரியவருகிறது.

ரிஷிகளுடைய மதங்களுக்குள் காசகிருத்சனருடைய மதம் சுருதியை அனுசரித்தது என்பது முன்னமேயே காட்டப்பட்டிருக்கிறது. இப்படி சுருதியை அனுசரித்திருப்பதினால், விஞ்ஞாத்மாவுக்கும் பரமாத்மாவுக்கும் பேதம் அவித்தையாலுண்டாகும்

நாமரூபங்களால் சித்திக்கும் தேகம் முதலிய உபாதியால் ஏற்படுகிறது, வாஸ்தவமல்ல. இந்த அர்த்தத்தை வேதாந்தத்தைக் கூறும் சகல கிரந்தங்களாலும் அறியத்தக்கது.

சுருதிப்பிரமாணங்கள் :—

(1) सदेव सोम्येदमग्र आसीदेकमेवाद्वितीयं (छा VI-2-1)

(2) आत्मैवेदम् सर्वं (छा-VII-25-2)

(3) ब्रह्मैवेदं सर्वं (मु-II-2-11)

(4) इदं सर्वं यदयमात्मा (बृ-II-4-6)

(5) नान्योतोस्ति द्रष्टा (बृ-III-7-23)

(6) नान्योतोस्ति द्रष्टृ (बृ-III-8-11)

முதலியவை.

ஸ்மிருதிப் பிரமாணங்கள்:—

(1) वासुदेवः सर्वमिति ।

இதெல்லாம் வாசுதேவன் (பகவத்கீதை VII-19)

(2) क्षेत्रज्ञं चापि मां विद्धि सर्वक्षेत्रेषु भारत ।

சகல க்ஷேத்திரங்களிலும் என்னை க்ஷேத்திரஞ்ஞனாக அறி (ப-கீதை XIII-2)

(3) समं सर्वेषु भूतेषु तिष्ठन्तं परमेश्वरं ।

சகல பூதங்களிலும் சமானமாயிருக்கிற பரமேசுவரன் (ப-கீ XIII-27)

முதலியவை

பேததர்சனமும்:—

(1) अन्योसावन्योहमस्मीति न स वेद यथा पशुः

அவன் வேறு நான் வேறு என்று அறிகிறவன் பசுபோல் அறிந்தவனல்ல என்கிற பிரஹதாரணியகம் I-4-10-ம்,

(2) मृत्योः स मृत्युमाप्नोति य इह नानेव पश्यति ।

எவன் அநேகம் இருக்கிறதுபோல் பார்க்கிறானோ அவன் மரணத்துக்குப் பிறகு மரணத்தை அதாவது அடிக்கடி மரணத்தை அடைகிறான் என்கிற பிரஹதாரணியக IV-4-19-வது சுருதியிலும் இதைப் போன்ற சுருதிகளிலும் நிஷேதிக்கப்பட்டிருக்கிறது.

स वा एष महानज आत्माऽजरोऽमरोऽमृतोऽभयो ब्रह्म ।

இந்த மஹத்தான பிறப்பற்ற, ஜரையற்ற, மரணமற்ற, பயமற்ற ஆத்மாவே பிரம்மம் என்கிற பிரஹதாரணியக IV-4-25 வது சுருதியானது ஆத்மாவினிடத்தில் யாதொரு விகாரமுமில்லை என்று நிஷேதிக்கிறது. (பேதாபேதபக்ஷத்தை ஒப்புக்கொள்ளுகிற பக்ஷத்தில் ஜீவனுக்கு ஜன்மாதி விகாரங்கள் சம்பவிக்குமானதால் அவைகளை நிஷேதிக்கமுடியாது. பேதம் சத்தியமானால் "அதை அறிவதினால் நான் பிரம்மம்" என்கிற ஞானம் பாதிக்கப்பட்டுப்போகிறது. அப்போது முமுக்ஷுக்களுக்கு பாதிக்கப்படாத ஞானம் உண்டாகமாட்டாது. (அபேதமும் வாஸ்தவமாயிருந்தால் பேதமும் அபேதமும் ஒன்றுக்கொன்று விரோதப்படுமாகையால்) நிச்சயமான அர்த்தமும் சித்திக்காமற் போய்விடும்.

वेदान्तविज्ञानसुनिश्चितार्थाः ।

வேதாந்தத்தின் விசேஷஞானத்தின் நிச்சயமான பிரயோசனமின்னதென்று அறிந்தவர்கள் என்கிற முண்டகம் III-2-6-வது சுருதியானது ஆத்மாவை விஷயமாக்கும் ஞானமானது பாதிக்கப்படாதது என்றும், சகல ஆசைகளையும் நிறைவேற்றும் என்றும் கூறுகிறது. மேலும்,

तत्र को मोहः कः शोक एकत्वमनुपश्यतः ।

என்கிற ஈசாவாஸியத்தின் 7-வது சுருதியானது ஏகத்வத்தைப் பார்த்தவனுக்கு சோகமேது, மோஹமேது, என்பதாய் ஸ்திரமான பிரஞ்ஞையின் லக்ஷணத்தைக் கூறுகிறது. (நான் பிரம்மம் என்ற பாதிக்கப்படாத நிச்சயஞானமிருக்கிறவனுக்குத்தான் சோகாதிகள் நிவிர்த்தியாகும்.)

க்ஷேத்திரஞ்ஞனும் பரமாத்மாவும் ஒன்று என்று செவ்வையாக அறிவுவுண்டானவளவில் க்ஷேத்திரஞ்ஞனும் பரமாத்மாவும் பெயரில்தான் வித்தியாசப்படுவதால், இந்த க்ஷேத்திரஞ்ஞன் பரமாத்மாவைவிட வேறானவன், இந்த பரமாத்மா க்ஷேத்திரஞ்ஞனைவிட வேறானவன். இப்படிப்பட்ட ஆத்மவிஷயமான பேதஞானம் உபயோகமில்லாமற் போய்விடும். இந்த ஆத்மா ஒருவனே நாமரூபபேதத்தால் அநேகம் எனப்படுகிறான்.

सत्यं ज्ञानमनन्तं ब्रह्म यो वेद निहितं गुहायां ।

(ஹிருதய குஹையிலிருக்கிற சத்தியம் ஞானம் அநந்தம். இப்படி பிரம்மத்தை எவன் அறிகிறானோ) என்கிற தைத்திரீய II-1-வது சுருதியானது ஜீவஸ்தானத்தைவிட வேறான ஒரு குஹை இருக்கிறதாக ஒப்புக்கொண்டு சொன்னதாக தெரியவில்லை. பிரம்மத்தைவிட வேறான ஒருவனும் குஹையிலில்லை. ஏனெனின், तत् सृष्ट्वा तदेवानुप्राविशत् என்கிற தைத்ரீய II-2-வது சுருதியானது சிரஷ்டாவே பிரவேசிக்கிறான் என்று சொல்லுகிறது. (ரா இதனால் பிரம்மம் ஜீவனைவிட வேறல்ல வென்பது தெரியவருகிறது.) (ரா அப்படி வேறாகாதபக்ஷத்தில் ஜீவன் ஸ்பஷ்டமாயிருப்பதால் பிரம்மமும் ஸ்பஷ்டமாயிருக்கவேண்டும். ஆனால் அப்படியில்லையே. ஆகையால் ஒன்று ஸ்பஷ்டமாயும் மற்றொன்று அஸ்பஷ்டமாயு மிருப்பதால் இருவர்களுக்கும் பேதமேயிருக்கிறதெனின்,

ரா கண்ணாடியில் பிரதிபிம்பம் ஸ்பஷ்டமாய்த் தோன்றினாலும் பிம்பம் காணப்படுகிறதில்லை. அப்படி காணப்படாவிட்டாலும் பிரதிபிம்பமும் பிம்பமும் ஒன்று என்று ஒப்புக்கொள்ளுகிறோம். அதுபோல பிரதிபிம்பனாஜீவன் ஸ்பஷ்டமாய்த் தோன்றி பிம்பமான பிரம்மம் ஸ்பஷ்டமாய்த் தோன்றாவிட்டாலும் இருவர்களும்ஒன்று என்றேஒப்புக்கொள்ளவேண்டும். இருவர்களின் பேதம் கல்பிதமானதால் விருத்ததர்மங்களைக் கூறுவதில் தோஷமில்லை.) எவர்கள் ஹடமாய் பேதம் சத்தியம் என்று சொல்லுகிறார்களோ அவர்கள் வேதாந்தத்தின் அர்த்தத்தை பாதிக்கிறார்கள். அதாவது सोऽयं (அவன்தான் இவன்) என்பதுபோல் तत्त्वमसि (நீ அதுவாயிருக்கிறாய்) என்கிற வேதாந்தவாக்கியம் ஜீவப்பிரம்ம ஐக்கியத்தை போதிக்கிறது. இந்த ஞானம் மோக்ஷசாதனம். இது தங்களுக்கு இல்லாமற் செய்துகொள்ளுகிறார்கள். சுருதிக்கு விரோதமாய் நாம் அர்த்தம் செய்வதும் யுக்தமன்று. மேலும் பேதாபேதவாதிகள் மோக்ஷத்தை ஞானகர்மங்களால் உண்டாகக்கூடியதாயும் அநித்தியம் என்றும் சொல்லுகிறார்கள். (ரா இந்த அநித்தியத்வமே தோஷம்) (ரா உண்டானாலுங்கூட நித்தியமென்று அவர்கள் சொன்னால், எது காரியத்தால் சாத்தியமோ அது அநித்தியம் என்கிற நியாயத்துக்கு விரோதம் வரும்.)

(ரா நம்முடைய பக்ஷத்தில் ஞானத்தால் அநர்த்தங்கள் நாசமாய் விடுமோனதாலும், அந்த அநர்த்த நாசமே நித்தியமுக்த ஆத்மஸ்வரூபமானதாலும், அநித்தியத்வதோஷம் ஏற்படவில்லை. ஆகையால் மைத்திரேயீ பிராமணம் பிரம்மத்திலேயே தாற்பரியப்படுகிறது என்று சித்தாமாகிறது,) (36)

XII. பூர்வபக்ஷபலன் :— வாக்கியம் ஜீவோபாஸ்தி பரம்.

சித்தாந்தபலன் :— ஞேய பிரம்மத்தில் சமன்வயம். (37)

XIII. வியாசாதிகரணமாலைப்படிச் சுருக்கம்.

1. சுலோகங்கள் :—

आत्मा द्रष्टव्य इत्युक्तः संसारी वा परेश्वरः ।
संसारी पतिजायादिभोगप्रीत्याऽस्य सूचनात् ॥
अमृतत्वमुपक्रम्य तदन्तेऽप्युपसंहृतम् ।
संसारिणमनूद्यातः परेशत्वं विधीयते ॥ (38)

2. விஷயவாக்கியம் :—

பிரஹதாரணியகம் 6-வது அத்தியாயத்தில் மைத்திரேயியான பாரியைக்கு யாக்கியவல்கியரான பதியானவர்

आत्मा वा अरे द्रष्टव्यः श्रोतव्यः मन्तव्यो निदिध्यासितव्यः ।

என்று உபதேசித்தார். (39)

3. சந்தேகம் — பூர்வபக்ஷம் :— ஆத்மாவுக்கு இரண்டு அர்த்தம் கூடுமானாலும் சம்சாரிஎன்கிற அர்த்தத்தையே எடுத்துக்கொள்ளவேண்டும். ஏனெனின்,

न वा अरे पत्युः कामाय पतिः ।

முதலிய வாக்கியங்களால் போகத்தில் பிரீதியுள்ள ஆத்மா சம்சாரி என்று தெரியவருகிறது. இதின் வாக்கியார்த்தம் :—

பதிக்குப் பிரீதியைக்கொடுக்கும் பாரியை பதியின் சுகத்தின்பொருட்டு பிரீதியைக் கொடுக்கவில்லை. பின்னையோவெனின் தன் சுகத்திற்காகவே, இப்படி பதி, புத்திரன் முதலானவர்கள் தங்கள் தங்களுடைய போகத்தின்பொருட்டே மற்றவர்களிடத்தில் பிரீதியைக் காண்பிவிக்கிறார்கள். போகமோ அசங்கமான ஈசுவரனிடத்தில் கற்பிதமாகாது. ஆகையால் சம்சாரியே. (40)

4. சித்தாந்தம் :—

இப்படி பூர்வபக்ஷிசொல்ல:-இந்த வாக்கியத்தின் உபக்கிரமத்தில் மைத்தரேயி ஆனவள் वित्त साध्येन कमणा किंममामृतत्वं स्यात् என்று கேட்டாள். யாஞ்ஞவல்கியரோ नाशास्ति वित्तेन என்பதாய் மோக்ஷ ஆசைகூட கர்மத்தால் சித்திக்கமாட்டாது என்று உத்தரம் கூறினர்.

முடிவிலும்

एतावदरे खल्वमृतत्वम् என்பதாய் சொல்லியிருக்கிறது. ஆகையால் உபக்கிரம உபசம்ஹாரபலத்தால் மோக்ஷசாதனம் ஆத்மஞானம் என்று தெரியவருகிறது. ஜீவஸ்வரூபஞானம் மோக்ஷசாதனமன்று. ஆகையால் போகப்பிரீதியால் சூசிப்பிக்கப்பட்ட ஜீவனைக்கொண்டு அவன் பிரம்மம் என்று பிரதிபாதிக்கப்படுகிறது. (41)

1-4-6-வது அதிகரணம்

முற்றிற்று.

---

1-4-7-வது அதிகரணத்தின்

அனுக்கிரமணிகை

---

# I-4-7வது அதிகரணம்

I. இதின் பெயர்:—பிரகிருதி அதிகரணமென்பதாம். (1)

II. இதின் விஷயம்:—பிரம்மமே நிமித்தகாரணமும் உபதானகாரணமு மென்பதாம். (2)

III. இதின் விஷயவாக்கியம்:—பிரம்மத்தைக் காரணமாகக் கூறும் சுருதி வாக்கியங்கள்.

IV. சங்கதி.—

(அ) முதல்பாதத்தின் இரண்டாவது அதிகரணத்துக்கும் இதற்கும் சங்கதி:—தர்மமானது விசேஷ சுகப்பிராப்திக்கு ஹேதுவாயிருப்பதால், அது எப்படி அறியத்தக்கதோ, அப்படி பிரம்மமும் மோக்ஷத்துக்கு ஹேதுவா யிருப்பதால் அறியத்தக்கது என்று अथातो ब्रह्मजिज्ञासा என்கிற முதலாவது அதிகரணத்தில் நிரூபிக்கப்பட்டது. இப்படிப்பட்ட பிரம்மத்தின் லக்ஷணம் ஜகத்துக்குக் காரணமா யிருக்குந்தன்மை எல்பதாய் जन्माद्यस्य यतः என்கிற இரண்டாவது அதிகரணத்தில் நிரூபிக்கப்பட்டது. இப்படி காரணமாயிருக்கும் பிரம்மத்தினிடத்தில் தான் சகல வேதாந்தங்களும் தாற்பரியப்படுகின்றன வென்பதாய் பூர்வகிரந்தங்களால் சொல்லி அந்தகாரணம் நிமித்தரூபமா அல்லது உபாதானரூபமா என்பதை நிச்சயிக்கும்பொருட்டு இந்த அதிகரணம் ஆரம்பிக்கப்படுகிறது.

ஜ ஜன்மாதிசூத்திரத்தில் பிரம்மம் காரணமென்று சொல்லியிருப்பதால் அதுவே உபாதானகாரணமென்றும்நிமித்தகாரணமென்றும்அறியமுடியுமே, இவ்விடத்தில் அதைபற்றி மறுபடியும் பிரஸ்தாபிக்க வேண்டியதில்லையே எனின், சில சங்கை சமாதானத்துடன் உபாதானகாரணத்வம் இவ்விடத்தில் நிரூபிக்கப்படுகிறது. ர முன் சாமான்னியமான விசாரம் ஏற்பட்டிருக்க இப்போது விசேஷவிசாரம் ஏற்படுகின்றது.

ஆ முதலாவது அதிகரணத்தில் பிரம்மம் விசாரிக்கத்தக்கது என்று தீர்மானமானதின்பேரில் அதின் ஸ்வரூபம் முக்கியமாய் தெரியவேண்டியதாகையால் அதை இரண்டாவது சூத்திரத்தில் ஜகத்காரணம் என்பதாய் விவரிக்கப்பட்டது.

பிரகிருத அதிகரணம் ஜன்மாதி அதிகரணத்துக்குச் சேஷமா யிருப்பதால் அதற்கு அடுத்ததாய்ப் பிரதிபாதித்திருக்கவேண்டுமே அந்த இடத்தைவிட்டு இந்த அத்தியாயத்தின் கடைசியில் இதைப் படிக்கவே

ண்டிய காரணமென்ன வெனின், शास्त्रयोनित्वात् என்கிற முதலாவது பாதத்தின் மூன்றாவது அதிகரணமுதல் பிரகிருத அதிகரணம் வரையிலும் இந்த பிரம்மலக்ஷணம் பிரம்மத்தினிடத்தில் தான் பொருந்தும் என்பதும், பொருந்தாது என்று செய்யப்படும் ஆக்ஷேபங்களுக்குச் சமாதானமும் சொல்லப்பட்டது. இந்த விஸ்தாரமான விசாரத்தால் பிரம்மத்தின் லக்ஷணம் செவ்வையாக தெரியவரும் என்பது கருத்து. शास्त्रयोनित्वात् முதல் லக்ஷணம் விசாரிக்கப்படுவதால் ஜன்மாதிசூத்திரம் அனுவசிய மெனின், லக்ஷணம் இன்னது என்று அறிவித்துத்தான் அதைவிசாரிக்கவேண்டும் என்கிற விதியிருக்கிறது. அதை அனுசரித்து இரண்டாவது சூத்திரத்தில் லக்ஷணமும் 3வதுமுதல் இந்தலக்ஷணவிஷயமாய் விசாரமும் கூறப்பட்டது.

ஆகவே இந்த பிரகிருத அதிகரணம் வரையில் கிரந்தம் ஜகத்காரணம் என்கிற லக்ஷணத்தை விசாரிக்கிறதிலேயே கருத்து கொண்டிருக்கிறது. அது இன்னவிதம் என்பது இப்போதுதான் நிச்சயிக்கப்படுகிறது. (4)

(b) रा அத்தியாயசங்கதி:-பிரம்மத்தின் லக்ஷணமே சொல்லப்படுவதினால் அத்தியாய சங்கதி ஏற்படுகிறது

(c) முந்தின அதிகரணத்துக்கும் இதற்கும் :—

रा ஆக்ஷேபசங்கதி :—

முந்தின அதிகரணத்தில் ஏகவிஞ்ஞானத்தால் சர்வவிஞ்ஞானம் வரும் என்கிற பிரதிஞ்ஞை முக்கியமானதால் வாக்கியம்பிரம்மபரம், ஜீவபரமல்ல வென்று நிரூபிக்கப்பட்டது.

பிரம்மம் நிமித்தகாரணமாயும் உபதானகாரணம் வேறாயு மிருப்பதால் பிரதிஞ்ஞை முக்கியமல்ல வென்பதாய்ப் பூர்வபக்ஷி ஆக்ஷேபிக்கிறபடியால் ஆக்ஷேப சங்கதி ஏற்பட்டது. (6)

आ உபஜீவகஉபஜீவ்யசங்கதி :-பிரதிஞ்ஞாபலத்தால் மைத்திரேயி பிராமணம் பிரம்மபரமாக அர்த்தம் செய்யப்பட்டது, இந்த அதிகரணத்திலும் அதே பதத்தால் பிரம்ம உபாதானகாரணமாயு மிருக்கிறதென்று நிரூபிக்கிறார். (7)

V. சந்தேகம் :—

கடத்துக்கு மண்போலும், கனககுண்டலாதிகளுக்குச் சுவர்ணம்போலும் இந்த ஜகத்காரணம் உபாதானரூபமாயும், குயவன், தட்டான் இவர்கள்போல் நிமித்தரூபமாயு மிருக்கலாமாகையால், இந்த பிரம்மத்தின் காரணத்தன்மை எப்படிப்பட்டது என்பதாய் சந்தேகம் ஜனிக்கிறது. (8)

VI. இதிலடங்கிய சூத்திரங்கள் 5 (23-24-25-26-27)

இவைகளில்

23-ல் பிரம்மம் உபாதானகாரணமும் நிமித்தகாரணமும் என்பதும்

24-ல் சங்கற்ப சுருதியாலும்,

25-ல் சாக்ஷாத் சுருதிவசனத்தாலும்,

26-ல் தன்னை செய்துகொண்டதாகச் சொல்லியிருப்பதாலும்,

27-ல் யோனி என்று சொன்னதினாலும் பிரம்மம் உபாதான்காரண மென்பது நிரூபிக்கப்படுகிறது.

VII. பூர்வபக்ஷம்:—இந்த பிரம்மம் கேவலம் நிமித்தகாரணமாகத்தான் இருக்கவேண்டு மென்று தோன்றுகிறது. ஏனெனின், சங்கற்பத்தை முன்னிட்டுக் கொண்டு அது சிருஷ்டித்தது என்று சுருதி கூறுகிறது.

(1) स ईक्षाञ्चक्रे அது சங்கற்பத்தைச் செய்தது என்கிற பிரச்னோபநிஷத்தின் VI-3-வது சுருதியாலும்,

(2) स प्राणमसृजत அது பிராணனை சிருஷ்டித்தது என்கிற பிரச்னோபநிஷத்தின் VI-4-வது சுருதியாலும் இதைப்போல சுருதிகளாலும் பிரம்மம் முதலில் சங்கற்பித்து சிருஷ்டி செய்தது என்று தெரியவருகிறது.

சங்கற்பத்தை முன்னிட்டுக்கொண்டு கர்த்தாவாக இருப்பது குயவன்முதலான நிமித்தகாரணத்திற்தான் காணப்படுகிறது. ஒரு கிரியையின் பலம் சித்திப்பதற்கு அநேக சாதகங்கள் இருக்கவேண்டும் என்று லோகத்தில் காணப்படுகிறது. இந்த நியாயத்தையே ஆதிகர்த்தா விஷயத்திலும் ஒப்புக்கொள்ளுவது யுக்தம். மேலும் பிரம்மம் ஈசுவரன் என்பது பிரசித்தம். அரசன், வைவசுவதாதிகள் இவர்கள் ஈசுவரர்கள். இவர்களிடத்தில் நிமித்தகாரண மொன்றே இருக்கிறது என்று தெரியவருகிறது. இதுபோல் பரமேசுவரனும் நிமித்தகாரணம்தான் என்று அறிவது யுக்தம். காரியமான இந்த ஜகத்து அவயவத்துடன் கூடியும் அசேதனமாயும் அசுத்தமாயு மிருக்கிறதாக காணப்படுகிறது. காரணமும் இப்படியே இருக்க வேண்டும். ஏனெனின், காரியமும் காரணமும் ஒரே

ரூபம் என்று தெரியவருகிறது. பிரம்மமோ இப்படிப் பட்டதன்று. ஏனெனின்,

निष्कलं निष्क्रियं शान्तं निरवद्यं निरञ्जनम् ।

ரா அதாவது அவயவமற்றது, சலனமற்றது, பரிணமமடையாதது, சகல தோஷமற்றது, தமஸ்(அஞ்ஞானம)ற்றது என்பதாய் சுவேதாசுவதர VI-19-ல் சொல்லியிருக்கிறது.

ரா அப்படியானால் ஜகத்துக்கு சதிருசயமான உபாதானகாரண மென்னவெனின், அசுத்தம் முதலிய குணங்களுடன்கூடியும், ஸ்மிருதியில் பிரசித்தமாயும், பிரம்மத்துக்கு வேறாயு மிருக்கிற வேறு ஒன்றை உபாதானகாரணமாக அறியவேண்டியது. பிரம்மத்தைக் காரணமாகச் சொல்லும் சுருதிகளுக்குப் பிரம்மம் நிமித்தகாரணம் மட்டும் என்பது அபிப்பிராயம். (10)

VIII. இப்படி பூர்வபக்ஷி சொல்ல

# प्रकृतिश्च प्रतिज्ञादृष्टान्तानुपरोधात् ।

என்கிற சூத்திரத்தில் வியாசர் உத்தரம் கூறுகிறார். (11)

2. பதஉரை:—

प्रकृतिः च உபாதானகாரணமும்

प्रतिज्ञादृष्टान्तानुपरोधात् பிரதிஞ்ஞை திருஷ்டாந்தம் இவைகளுக்குப் பாதகமன்றியி லிருப்பதால் (12)

3. பொழிப்புரை :—

பிரம்மம் உபாதானகாரணமாயு மிருக்கிறது. ஏனெனின், இப்படிக் கூறுவது பிரதிஞ்ஞைக்கும் திருஷ்டாந்தத்திற்கும் பாதகமன்றியி லிருக்கிறது. (13)

4. பாஷ்யம் :—

1. प्रकृतिः च பிரம்மம் உபாதானகாரண மென்றும் நிமித்தகாரண மென்றும் ஒப்புக்கொள்ள வேண்டும். கேவலம் நிமித்தகாரணம் மட்டு மன்று. ஏனெனின், ()

2. प्रतिज्ञादृष्टान्तानुपरोधात् பிரம்மம் இரண்டுவித காரணம் என்று சொல்லுவதில் சுருதியிற் கூறப்பட்ட பிரதிஞ்ஞைக்கும் திருஷ்டாந்தத்துக்கும் பாதகம் வருகிறதில்லை.

பிரதிஞ்ஞையாவது :—

उत तमादेशमप्राक्ष्यो येनाश्रुतं
श्रुतं भवत्यमतं मतमविज्ञातं विज्ञातम् ॥

அதாவது :—எந்த உபதேசத்தால் கேட்கப்படாதது கேட்கப்படுகிறதோ, மனனம் செய்யப்படாதது மனனம் செய்யப்படுகிறதோ, அறியப்படாதது அறியப்படுகிறதோ, அப்படிப்பட்ட உபதேசத்தை கேட்டிருக்கிறாயா? என்கிற சாந்தோக்கிய VI-1-2வது வாக்கியம்.

இவ்விடத்தில், ஒன்றை அறிவதினால், மற்றதெல்லாம் அறியப்படாவிட்டாலும் அறியப்பட்டதாக ஆகிறது என்று தெரியவருகிறது. உபாதானகாரணத்தை அறிந்தவளவில் எல்லாம் அறியப்பட்டதாக ஆகும், காரியம் உபாதானகாரணத்தைவிட வேறன்று; நிமித்தகாரணத்தைவிட வேறு. உலகத்தில் தச்சன் அவன் கட்டின வீட்டுக்கு அன்னியனாகவே இருக்கிறான் என்பதைக் கண்டிருக்கிறோம்.

यथा सोम्यैकेन मृत्पिण्डेन सर्वं मृण्मयं विज्ञातं स्या-
द्वाचारंभणं विकारो नामधेयं मृत्तिकेत्येव सत्यं ।

அதாவது :-பிரியதர்சனமுள்ளவனே, எப்படி ஒரு மிருத்பிண்டம் அறியப்பட்டால் மிருத்தினால் உண்டான சகலமும் அறியப்பட்டதாக ஆகிறதோ, விகாரம் வாக்கிலிருந்து உண்டான பெயர் மட்டுமோ, மிருத்திகையே சத்தியமோ என்கிற சாந்தோக்கிய VI-1 4-ல் கூறிய திருஷ்டாந்தவாக்கியம் உபாதானகாரணத்தையே கூறுகிறது.

एकेन लोहमणिना सर्वं लोहमयं विज्ञातं स्यादेकेन
नखनिकृन्तनेन सर्वं कार्ष्णायसं विज्ञातं स्यात् ।

அதாவது:—ஒரு சுவர்ணபிண்டத்தால் சுவர்ணத்தாற் செய்யப்பட்ட சகலமும் அறியப்பட்டதாக ஆகிறது, ஒரு முள்வாங்கியால் இரும்பால் செய்யப்பட்டதெல்லாம் அறியப்பட்டதாக ஆகிறது என்கிற சாந்தோக்கிய VI-1-5, 6ல் கூறிய திருஷ்டாந்தங்கள் உபாதானகாரணத்தையே கூறுகின்றன.

(2) அப்படியே இன்னும் சில இடங்களிலும் சொல்லியிருக்கிறது. முண்டகத்தில்,

कस्मिन्नु भगवो विज्ञाते सर्वमिदं विज्ञातं भवति ।

அதாவது:—எதை அறிந்தவளவில் சுவாமியே இதெல்லாம் அறியப்பட்டதாக ஆகிறது என்கிற I-1-2 வது சுருதி பிரதிஞ்ஞாவாக்கியம்.

यथा पृथिव्यामोषधयः सम्भवन्ति ।

அதாவது :-எப்படிப் பிருதிவியினின்றும் ஓஷதிகள் உண்டாகின்றனவோ என்கிற I-1-7-வது சுருதி திருஷ்டாந்தவாக்கியம்.

(3) அப்படியே பிரஹதாரணியகத்தில்

**आत्मनि खल्वरे दृष्टे श्रुते मते विज्ञाते इदं सर्वं विदितम्**

அதாவது:-ஆத்மா பார்க்கப்பட்டவளவில் கேட்கப்பட்டவளவில், மனனம் செய்யப்பட்டவளவில், அறியப்பட்டவளவில், இதெல்லாம் அறியப்பட்டதாக ஆகிறது என்கிற IV-5-6-வது சுருதி பிரதிஞ்ஞையை கூறுகிறது.

**स यथा दुन्दुभेर्हन्यमानस्य न बाह्यान् शब्दान् शक्नुयात् ग्रहणाय दुन्दुभेस्तु ग्रहणेन दुन्दुभ्याघातस्य वा शब्दो गृहीतः ।**

रा அதாவது :— துந்துபிவாத்தியத்தை அடிக்கிறதினால் உண்டாகும் சாமான்னிய சப்தத்தில் விசேஷமான மற்றசப்தங்களை கிரகிக்க சுரோதாவால் முடிகிறதில்லை. அப்படியே துந்துபிவாத்யத்தின் சாமான்னிய சப்தத்தில் அதின் விசேஷசப்தங்களும் அடங்கிப்போவதால் அவைகளைத் தனியாய் அறியமுடியவில்லை. சாமான்னியத்தை கிரகித்ததினால் அவாந்தர விசேஷமும் கிரகித்ததுபோலவே ஆகிறது. சாமான்னியத்தில் விசேஷங்கள் கிரகிக்கப்பட்டுப்போவதால் விசேஷங்கள் சாமான்னியத்தில் கற்பிக்கப்படுகின்றன. இதுபோல் ஆத்மஜோதியால் விளங்கும் கடாதிகளும் ஆத்மாவில் கற்பிக்கப்படுகின்றன என்கிற IV-5- வது சுருதி திருஷ்டாந்தரூபமா யிருக்கிறது.

இப்படியே வேதாந்தங்களில் பிரதிஞ்ஞாதிருஷ்டாந்தவசனங்கள் எவ்வளவு கிடைக்கின்றனவோ அவ்வளவைக்கொண்டு பிரம்மம் உபாதானகாரணமென்பதை அறிவதில் அவைகள் சாதகங்கள் என்று அறியவேண்டியது. (15)

(रा பிரதிஞ்ஞாதிருஷ்டாந்தானுபரோதாத் என்கிற லிங்கத்தால் பிரம்மம் உபாதானகாரணம் என்று சொல்லி அதையே பஞ்சமீசுருதியாலும் கூறுகிறார்)

रा जनिकर्तुः प्रकृतिः என்கிற பாணினீ I-4-10வது சூத்திரப்படி எது உண்டாகிறதோ அதற்கு எது ஹேதுவோ அந்த ஹேதுவுக்கு உபாதானம் என்று பெயர். अपादाने पञ्चमी என்கிற பாணினி (II-3-28)வது சூத்திரப்படி அபாதானத்தைக் கூறுமிடத்தில் பஞ்சமி அதாவது ஐந்தாம் வேற்றுமையை உபயோகிக்க வேண்டியது. ஆகவே உற்பத்தியைக் கூறும் வாக்கியத்தில் ஐந்தாம் வேற்றுமையை உபயோகித்திருந்தால் அது அபாதானம் அதாவது உபாதானகாரணத்தைக் கூறும் என்று நிச்சயப்படுகிறது.

பிரகிருதத்தில்

**यतो वा इमानि भूतानि जायन्ते ।**

என்கிற தைத்ரீய (III-1) சுருதியானது यतः அதாவது எதினின்றும் இந்தபூதங்கள் உண்டாகின்றனவோ என்றுசொல்லுகிறது. எதினின்றும் என்பது ஐந்தாம் வேற்றுமை வியாகரணப்படி இது உபாதானகாரணத்தைக் கூறவேண்டியது. ஆகையால் यतः என்கிற சுருதியும் வாக்கியசேஷத்தி லிருக்கிற பிரம்மசப்தத்தைக் கொண்டு பிரம்மம் உபாதானகாரணமென்பதை தெரிவிக்கிறது. (16)

(4) रा (பிரம்மம் உபாதானகாரணம் என்றுசொல் லி நிமித்தகாரணம் என்பதை இனி சொல்லுகிறார்.)

வேறு அதிஷ்டாதா இல்லாததால் பிரம்மம் நிமித்தகாரணமென்றும் அறியவேண்டியது. லோகத்தில் மிருத், சுவர்ணம் முதலிய உபாதானகாரணம் (கடம் குண்டலம் முதலியவைகளை உண்டுபண்ணுவதில்) குயவன், தட்டான் முதலான நிமித்தகாரணத்தை அபேக்ஷிக்கிறது. இப்படி உபாதானகாரணமான பிரம்மம் (ஜகத்தை சிருஷ்டிக்கும் விஷயத்தில்) தனக்கு அன்னியமான நிமித்தகாரணத்தை அபேக்ஷிக்கிறதில்லை. ஏனெனின், உற்பத்திக்குமுன் एकमेवाद्वितीय அதாவது ஒன்றே இரண்டற்றதாய் இருந்தது என்று சுருதி நிச்சயமாய்ச் சொல்லுகிறது. வேறு அதிஷ்டாதா இல்லை என்பதும் பிரதிஞ்ஞை திருஷ்டாந்தம் இவைகளுக்கு விரோதமில்லை என்று சொன்னதினாலேயே தெரியவருகிறது. அதிஷ்டாதாவை உபாதானத்துக்கு வேறாக ஒப்புக்கொள்ளும்பக்ஷத்தில், ஏக விஞ்ஞானத்தால் சர்வவிஞ்ஞானம் சம்பவிக்காமற்போகும். அப்போது பிரதிஞ்ஞை திருஷ்டாந்தம் இவைகள் பொருந்தாமலே போய்விடும்.

ஆகையால் வேறு அதிஷ்டாதா இல்லாதபடியால் ஆத்மாவே கர்த்தா வென்பதும், வேறு உபாதானமிராதபடியால் ஆத்மாவே பிரகிருதி அதாவது உபாதானம் என்பதும் சித்திக்கிறது. (17)

IX. I-4-24-வது சூத்திரம்.

## अभिध्योपदेशाच्च । (18)

2. முந்தின சூத்திரத்துக்கும் இதற்கும் சம்பந்தம் :—ஆத்மா நிமித்தகாரணமாயும் உபாதானகாரணமாயுமிருக்கும் என்பதற்கு வேறு காரணத்தை இதில் கூறுகிறார். (19)

3. பதஉரை:—

अभिध्योपदेशात् च சங்கற்பத்தை கூறியிருப்பதாலும். (20)

4. பொழிப்புரை:—

பிரம்மத்தின் சிருஷ்டிசங்கற்பத்தை சுருதி கூறுவதினாலும் பிரம்மம் நிமித்தஉபாதானகாரணமென்று தெரியவருகிறது. (21)

5. பாஷ்யம் :—

सोऽकामायत बहुस्यां प्रजायेय ।

நான் வெகுவாக ஆகவேண்டும், விருத்தி அடையவேண்டும் என்பதாய் அது இச்சித்தது என்கிற (தை-II-6 ) சுருதியும்

तदैक्षत बहुस्यां प्रजायेय ।

அதாவது :—நான் வெகுவாக ஆகவேண்டும், விருத்தி அடையவேண்டும் என்பதாய் அது சங்கற்பித்தது என்கிற (சா-IV-2-2) சுருதியும் ஆத்மாவின் நிமித்தஉபாதானகாரணத்தன்மையை தெரிவிக்கின்றன. இவ்விடத்தில் தியானம் செய்து ஸ்வதந்திரமாக பிரவிர்த்தித்தது என்று சொன்னதைக்கொண்டு பிரம்மம் கர்த்தா அதாவது நிமித்தகாரணமென்று தெரியவருகிறது.

வெகுவாக ஆகவேண்டும் என்பதினால் வெகுவாகிற தனக்கே தான் உபாதானகாரணமென்பதும் தெரியவருகிறது. (22)

X. I-4-25-வது சூத்திரம்.

## साक्षाच्चोभयाम्नानात् ।

2. முந்தின சூத்திரத்துக்கும் இதற்கும் சம்பந்தம்:- பிரம்மம் உபாதான நிமித்த காரணமென்பதில் உபாதானகாரணத்தை இதில் கூறுகிறார். (24)

3. பதஉரை:—

साक्षात् சாக்ஷாத்தாய்

उभयाम्नानात् இரண்டும் சொல்லியிருப்பதால் (25)

4. பொழிப்புரை:—

ஜகத்தின் உற்பத்திக்கும் லயத்துக்கும் பிரம்மம் உபாதானகாரணமென்று சாக்ஷாத்தாய் சொல்லியிருப்பதால் பிரம்மம உபாதானகாரணம். (26)

5. பாஷ்யம் :—

च உபாதானகாரண மென்பதற்கு வேறு காரணம் கூறப்படுகிறது.

उभयाम्नानात् உபாதானகாரணம் பிரம்மம். எனெனின் பிரம்மத்தைக் காரணமாக வைத்துக்கொண்டு

सर्वाणि ह वा इमानि भूतान्याकाशादेव समुत्पद्यन्ते आकाशं प्रत्यस्तंयन्ति ।

அதாவது :—இந்த பிராணிகளெல்லாம் ஆகாசத்தினின்றுமே உண்டாகிறார்கள், ஆகாசத்திலேயே லயமடைகிறார்கள் என்கிற சாந்தோக்கிய (I-9-1) சுருதியானது உற்பத்திநாசம் இவ்விரண்டையும் சாக்ஷாத்தாய்ச் சொல்லுகிறது. எது எதினின்றும உண்டாகிறதோ, எதில் லயமாகிறதோ, அது அதற்கு உபாதானகாரணமென்பது பிரசித்தம். நெல் யவை முதலிய தானியங்களுக்கு பிருதிவிபோலும்.

साक्षात् ஆகாசத்தினின்றும்தான் என்பதினால் வேறு உபாதான காரணமில்லை என்று தெரியவருகிறது. இதை சூத்திரகாரர் சாக்ஷாது என்கிற பதத்தினால் தெரிவிக்கிறார்.

காரியம் உபாதானத்தைத்தவிர வேறு இடத்தில் லயமாவதாக தெரியவில்லை. (27)

XI I-4-26-வது சூத்திரம்.

## आत्मकृतेः परिणामात् । (28)

2. முந்தின சூத்திரத்துக்கும் இதற்கும் சம்பந்தம் :—பிரம்மம் உபாதானகாரணமென்பதில் இன்னும் ஒரு காரணம் இதில் கூறப்படுகின்றது. (29)

3. பதஉரை :—

आत्मकृतेः தன்னைத்தானே செய்துக்கொள்ளுவதினால்.

परिणामात् பரிணாமத்தினால் (30)

4. பொழிப்புரை :—

பிரம்மம் உபாதானகாரணம் ஏனெனின், ஆத்மாவை (தன்னை) செய்து கொள்ளுகிறதாக சொல்லியிருக்கிறது. இது பரிணாமத்தால் சாத்தியம். (31)

5. பாஷ்யம் :—

அடியிற்கண்ட காரணத்தாலும் உபாதானகாரணம் பிரம்மம். எப்படியெனின், பிரம்மத்தைப்பற்றி பிரதிபாதிக்கிற

तदात्मानं स्वयमकुरुत ।

(அது தன்னை ஆத்மாவாக) தானே செய்தது என்கிற தைத்ரீய(II-7) சுருதியானது ஆத்மா கர்த்தாவென்பதையும் கர்மத்துக்கு விஷயம் என்பதையும் காண்பிக்கிறது. ஆத்மாநம் என்பது கர்மவிஷயத்தையும் ஸ்வயம் அகுருத என்பது கர்த்தாவையும் காட்டுகிறது.

ரா ஒரு செய்கையானது காரணத்தை ஆசிரயித்து இருக்கவேண்டும், அதற்கு விஷயமாக இருக்கவேண்டும். ஆசிரயம் எப்போதும் சித்தம். விஷயம் சாத்தியம். ஆகவே ஒரேபதார்த்தம் ஆசிரயமாயும் விஷயமாயுமிருக்க கூடுமா? முன்னமேயே சித்தமாயிருக்கிற சத்து கர்த்தாவாக இருந்து திரும்பியும் கர்ம விஷயமாகவும் எப்படி யிருக்கமுடியும்.

परिणामात् பரிணாமத்தினால் என்று சொல்லுகிறோம். (ரா எப்படி மிருத்சித்தமாயும் கடரூபமாய்ப் பரிணமிப்பதில் சாத்தியமாயு மிருப்பதில் விரோதமில்லையோ, அப்படி) சத்ரூப ஆத்மாமுன்னமேயே இருந்தாலும், தன்னையே விசேஷ ஆகாரங்களாக செய்து கொள்ளுகிறான். அநேக ஆகாரங்களாக பரிணமித்தலை மிருத்முதலிய உபாதானகாரணத்தில் கண்டிருக்கிறோம்.

ஸ்வயம் என்கிற விசேஷணத்தால் வேறு நிமித்த காரணம் வேண்டியதில்லை என்று தெரியவருகிறது. ரு பரிணாமம் என்கிற சப்தத்திற்கு மாறுதலை அடைதல் என்று அர்த்தம். அதாவது ஒரு ரூபத்தை விட்டு வேறு ரூபத்தை அடைதல் என்று அர்த்தம். பிரம்மம் பரிணமிக்கிறதாகச் சொன்னால் முழுமையும் பரிணமிக்கிறதா? அல்லது ஏகதேசத்தில் பரிணமிக்கிறதா? முழுமையும் பரிணமிக்கிறதா யிருந்தால் முந்தின ரூபத்துக்கு நாசம் வரும். அதினால் பிரம்மம் அநித்தியமாய்விடும். ஏகதேசத்தில் பரிணமிக்கிறதா யிருந்தால் இது அவயவமுள்ளதற்குத்தான் சாத்தியம். பிரம்மமோ நிரவயவம் என்று சுருதி சொல்லுகிறது ஆகையால் பிரம்மம் முழுமையுமாவது ஏகதேசத்திலாவது ரூபம் மாறுதலாகிய பரிணாமத்தை அடைவதாகச் சொல்லக்கூடாது. ஆகையால் இந்த சூத்திரத்திலுள்ள பரிணாமபதத்திற்கு ஒரு ரூபம் வேறு ஒரு ரூபமாகக் காணப்படுவதாகிய விவர்த்தம் என்று அர்த்தம் செய்யவேண்டியது. (பால் தயிராக ஆய்விடுவதே பரிணாமம் எனப்படும். இரச்சு சர்ப்பமாக தோன்றுவதே விவர்த்தம் எனப்படும்). இந்த விவர்த்தவாதம் தான் வேதாந்தத்தின் சித்தாந்தம். (32)

பரிணாமாத் என்பதை வேறு சூத்திரமாகவும் வைத்துக்கொள்ளலாம். அப்போது அதற்கு அர்த்தம் என்னவெனின் :—அடியிற்கண்ட காரணத்தாலும் பிரம்மம் உபாதானம். அக்காரணம் யாதெனின் :—

सच्च त्यच्चाभवन्निरुक्तञ्चानिरुक्तं च ।

அதாவது :—பிருதிவி, அப்பு, தேஜஸாகிய சத்தும், வாயு, ஆகாசமாகிய தெத்தும், சொல்லக்கூடிய கடாதிகளும், இன்னதென்று சொல்லமுடியாததும் எல்லாம் பிரம்மமே என்கிற தைத்திரீய (II-6) சுருதியில் பிரம்மத்துக்கே அநேகரூபமாய் பரிணமித்தல் சாமாந்திகரண்யத்தினால் கூறப்பட்டிருக்கிறது என்பதாம். (33)

I-4-27-வது சூத்திரம்.

## योनिश्च हि गीयते (34)




2. முந்தின சூத்திரத்துக்கும் இதற்கும் சம்பந்தம் :—இந்த சூத்திரத்தில் யோனி சப்தத்தாலும் பிரம்மம் உபாதானம் என்பதைக் காட்டுகிறார். (35)

3. பதஉரை :—

योनिः च हि யோனி என்றும்

गीयते சொல்லப்படுகிறது (36)

4. பொழிப்புரை :—

பிரம்மம் யோனி என்றும் வேதாந்தத்தில் சொல்லியிருப்பதாலும், அதுவே உபாதானகாரணம். (37)

5. பாஷ்யம் :—

அடியிற்கண்ட காரணத்தாலும் பிரம்மம் உபாதானகாரணம். அக்காரணம் யாதெனின் :—

कर्तारमीशं पुरुषं ब्रह्मयोनिं ।

அதாவது :—கிரியாசக்தியுள்ள நியந்தாவான், அந்தரமான, பூரணமான யோனியையென்கிறமுண்டக (III-1-3) சுருதியும்

यद्भूतयोनिं परिपश्यन्ति धीराः ।

அதாவது :— எதை ஞானிகள் பிராணிகளின் யோனி அதாவது உபாதானகாரணமென்று தியானத்தால் பார்க்கிறார்களோ என்கிற முண்டக (I-1-6) சுருதியும் பிரம்மத்தை யோனியாக (அதாவது உபாதான காரணமாக) வேதாந்தங்களில் படித்திருக்கிறதென்று காட்டுகின்றன.

யோனிசப்தம் உபாதானத்தைக் கூறுகிறது என்பது பிரசித்தம். ஓஷதிகளுக்கும் மரங்களுக்கும் பிருதிவி யோனி என்று சொல்லப்படுகிறது.

ஸ்திரீயினுடைய யோனி உபாதானமாகாவிட்டாலும், கர்ப்பத்தை உத்தேசித்து அது அவயவரூபமாக (சோணிதரூபமாக) உபாதானகாரணமா யிருக்கிறது.

योनिष्ट इन्द्र निषदे अकारी ।

அதாவது :—இந்திரனே, நீ உட்காரும்பொருட்டு என்னால் யோனி செய்யப்பட்டது என்கிற ரிக்-சம்-I-104-1யால் சிலஇடங்களில் யோனிசப்தம் ஸ்தானத்தைக் கூறுவதாக தெரியவருகிறது.

ஆனால் यथोर्णनाभिः सृजते गृण्हते च

அதாவது எப்படி சிலந்திப்பூச்சியானது நூல்களை வெளியேவிட்டும், உள்ளே இழுத்துக்கொள்ளுகிறதோ என்கிற முண்டகம் I-1-7 ஆகிற வாக்கியசேஷத்தால் பிரகிருத சுருதியில் உபாதானகாரணம் தான் கிரகிக்கப்படுகின்றது.

இப்படி இருப்பதால் பிரம்மம் உபாதானகாரணம் என்பது சித்தமாகிறது. (38)

சங்கற்பத்தை முன்னிட்டுக்கொண்டு ஒருகாரியத்தைச்செய்தல் குயவன் முதலான நிமித்தகாரணத்தால் தான் உலகத்தில் காணப்படுகிறது. உபாதான காரணத்தில் காணப்படவில்லை என்பதாய் பூர்வபக்ஷி சொன்னவிஷயத்தில், நாம் சொல்லுகிறதாவது :—

உலகத்தில் போல் இவ்விடத்தில் ஆகமாட்டாது. ஏனெனின், ஸ்வ அனுமானத்தால் இதை அறியக்கூடுமானால் உலகதிருஷ்டாந்தம் உபயோகப்படும். ஆனால், அனுமானத்தால் இதை அறியமுடியாது. இந்த விஷயத்தை சுருதியாலேயே அறியவேண்டியதாக இருக்கிறது, ஆகையால் சுருதி சொல்லுகிறபடியே அறிய வேண்டியது. சுருதியும் சங்கற்பிக்கிற ஈசுவரனே உபாதான காரணமென்று சொல்லுவதாய், நாம் சொல்லியிருக்கிறோம். இதெல்லாம் விஸ்தாரமாய் மறுபடியும் (II-1-4வது சூத்திரம் முதல்) விசாரிப்போம்.

रा ஆகையால் பிரம்மம் உபாதானகாரணமாயும் நிமித்தகாரணமாயுமிருக்கிறதென்பது பிரம்மத்தின் லக்ஷணமென்பதாய் சித்திக்கிறது. (39)

XIII. பூர்வபக்ஷபலன் :—துவைத சித்தி. சித்தாந்தபலன் :—அத்வைதசித்தி. (40)

XIV. வியாசாதிகரணமாலைப்படி அத்வைதச்சுருக்கம்.

1. சுலோகங்கள்.

निमित्तमेव ब्रह्म स्यादुपादानं च वीक्षतृणा ।
कुलालवन्निमित्तं तन्नोपादानं मृदादिवत् ॥
बहुस्यामित्युपादानभावोपि श्रुत ईक्षितुः ।
एकबुद्ध्या सर्वधीश्च तस्माद्ब्रह्मो भयात्मकम् ॥

2. விஷயம் :—ஜகத்காரணத்தைப் பிரதிபாதிக்கும் சகல வாக்கியங்களும் விஷயம். (42)

3. சந்தேகம்:—பிரம்மம் நிமித்தகாரணமேயா? அல்லது உபாதானகாரணங்கூடவா? என்பது சந்தேகம். (43)

4. பூர்வபக்ஷம்:-நிமித்தகாரணமே. ஏனெனின், तदैक्षत என்பதாய் சிருஷ்டிக்கவேண்டிய காரிய விஷயத்தைப்பற்றி பரியாலோசனை செய்ததாக சுருதி சொல்லுகிறது. பரியாலோசனையோ நிமித்தகாரணமான குயவன் முதலானவர்களிடத்தில் தான் காணப்படுகின்றது, உபாதானமான மிருத் முதலியவைகளிடத்தில் காணப்படவில்லை. ஆகையால் பிரம்மம் நிமித்தகாரணம் தான். (44)

5. சித்தாந்தம் :—

तदैक्षत बहुस्यां प्रजायेय ।

என்பதால் பரியாலோசனை செய்கிறவரே வெகுவாகிறார் என்று சுருதியால் தெரியவருகிறது. ஆகையால் உபாதானத்தன்மையு மிருக்கிறது. மேலும்

யேனாஶ்ருதம் ஶ்ருதம் பவதி முதலியதால் ஒரு பிரம்மா கேட்கப்பட்டளவில் கேட்கப்படாத ஜகத்து கேட்கப்பட்டதாகவே ஆகிறது என்று சுருதி சொல்லுகிறது. அதை அறிந்ததால் சகலமும் அறியப்பட்டதாக ஆகிறது. பிரம்மம் சகலத்துக்கும் உபாதானமாயிருந்தவளவில் பிரம்மத்தைத்தவிர காரியங்களில்லாமையால் இதையெல்லாம் பொருந்தும்படி செய்யமுடியும். கேவலம் நிமித்தமாயிருந்தாலோ பிரம்மத்தைத்தவிர சகல காரியங்கள் வேறாக இருந்தால் எப்படி ஏகவிஞ்ஞானத்தில் சர்வவிஞ்ஞானம் சித்திக்கும். ஆகையால் இரண்டுவித காரணமும் பிரம்மமே. (45)

## 1-4-7-வது அதிகரணம்

முற்றிற்று.

---

## 1-4-8-வது அதிகரணத்தின்

## அனுக்கிரமணிகை.

I. இதின் பெயர் 1

II. இதின்கருத்து 2

III. இதில்அடக்கிய சூத்திரம் 3

IV. விஷயவாக்கியம் 4

V. சந்தேகம் 5

VI. சங்கதி

1. அதிகரணசங்கதி 6
2. இதரசங்கதிகள் 7

VII. பூர்வபக்ஷம் 8

VIII. சித்தாந்தம்

1. 28வது சூத்திரம் 9
2. பதஉரை 10
3. பொழிப்புரை 11
4. பாஷ்யம் 12

IX. பலன் 13

X. வியாசாதிகரணமாலைப்படிசுருக்கம்

1. சுலோகங்கள் 14
2. விஷயம்—சந்தேகம் 15
3. பூர்வபக்ஷம் 16
4. சித்தாந்தம் 17

---

## I-4-8வது அதிகரணம்

I. இதின் பெயர் :—சாங்கியாக்யாதிகரண மென்பதாம். (1)

II. இதின் கருத்து:-பரமாணு முதலியவைகள் ஜகத்காரணமல்ல வென்பதாம். (2)

III. இதில் அடங்கிய சூத்திரம் :-(28-வது)(3)

IV. இதின் விஷயவாக்கியம் :—வேதாந்தவாக்கியங்கள். (4)

V. சம்சயம் :—பிரம்மம்போல், பரமாணு, சூனியம் முதலியவைகளும் ஜகத்காரணங்களா. அல்லது பிரம்மம் மட்டும் காரணமா என்பது சந்தேகம். (5)

VI. சங்கதி :—

अ त प முந்தின கிரந்தத்துக்கும் இதற்கும் :—

(1) பிரத்தியுதாஹரண சங்கதி :— இவ்விதமாக முன்கூறிய நியாயத்தால் ईक्षतेर्नाशब्दं முதலிய கிரந்தத்தால், பிரதானம் காரணம் என்னும் பக்ஷம் அது அசப்தம் என்னும் காரணத்தால் நிராகரிக்கப்பட்டது. அப்படி அணு, சுவபாவ, அசத் இவைகள் ஜகத்காரணமாயிருக்கலாம் என்னும் பக்ஷம் நிராகரிக்கப்படவில்லை. ஏனெனின், அவைகளை காரணமாகச்சொல்லும் சப்தங்கள் சுருதியில் காணப்படுகின்றன. இப்படி பூர்வபக்ஷி சொல்லுவதினால் பிரத்தியுதாஹரண சங்கதி ஏற்படுகிறது.

(2) க ஆக்ஷேபசங்கதி:-பிரதானம் ஜகத் உபாதான காரணமா யிருக்கவேண்டாம். அதினால் பிரம்மம் உபாதானகாரணம் என்று ஏற்படவில்லை. சுருதிகளில் அசத், அணு, காலம் முதலியவைகள் காரணங்கள் என்று சொல்லியிருக்கிறது. ஆகையால் ஆக்ஷேபசங்கதி ஏற்படுகிறது. (6)

(b) பாதசங்கதி :—இந்த பாதத்தில் பிரம்மத்தை ஒப்புக்கொண்டு இதரகாரணங்கள் நிராகரிக்கப்படுகின்றன. அப்படியே இந்த அதிகரணத்தில் அண்வாதிகள் காரணங்க ளல்லவென்று கூறப்படுவதால் பாதசங்கதி ஏற்படுகிறது.

(c) இதரசங்கதிகளை முன்போலவே அறியவும்()

VII. वि பூர்வபக்ஷம் :—

சாந்தோக்கியத்தில் ஆறுவது அத்தியாயத்தில் சுவேதகேதுவுக்கு உத்தாலகன் உபதேசம் செய்யும் காலத்தில் ஸ்தூலஜகத்தானது சூக்ஷ்மதத்துவத்தில் அடங்கியிருக்கிறதென்று உபதேசிக்கும்பொருட்டு ஒரு பெரிய மரத்தின் விரையை திருஷ்டாந்தமாக எடுத்துக்கொண்டு, அதில் எப்படி விருக்ஷம் ஸூக்ஷ்மமாக அடங்கியிருக்கிறதோ அப்படி ஜகத்து சூக்ஷ்மதத்துவத்தில் அடங்கியிருக்கிறதென்று சொல்லுகிறார். சுருதிகளில் கூறப்பட்ட பரமாணுக்கள் விரைகள் போலிருக்கின்றன.

असद्वा इदमग्र आसीत् என்கிற (தை II) சுருதியால் அசத்து காரணமென்பது சாக்ஷாத்தாய் தெரியவருகிறது.

स्वभावमेके कवयो वदन्ति कालं तथाऽन्ये ।

என்கிற சுவேதாசுவதர வசனத்தால் சுவபாவம், காலம் இவைகள் காரணங்கள் என்று தெரியவருகிறது. ஆகையால் பரமாணு முதலியவைகளும் காரணங்கள் என்பது சுருதிசித்தம். (8)

VIII. (1) இப்படி பூர்வபக்ஷிசொல்ல வியாசர் சித்தாந்தத்தை

## एतेन सर्वे व्याख्याताः । २८

என்கிற இந்த சூத்திரத்தில் கூறுகிறார். (9)

2. பதஉரை :—

एतेन இதனால்

सर्वे எல்லாம்

व्याख्याताः வியாக்கியானம் செய்யப்பட்டன. (10)

3. பொழிப்புரை :—

பிரதானகாரணவாதத்தை நிராகரித்த காரணங்களான, அசப்தத்துவம், அசேதனத்துவம் ஏகவிஞ்ஞானபிரதிஷேதம், இவை முதலியவைகள் அண்வாதிகள் விஷயத்திலும் சமானமாயிருப்பதால், அணுமுதலியவைகள் காரணங்கள் என்னும் பக்ஷங்களெல்லாம் நிராகரிக்கப்பட்டவைகளாக ஆய்விட்டன. (11)

4. பாஷ்யம் :—

ईक्षतेर्नाशब्दं (I-1-5) முதல் பிரதானம் ஜகத்காரணமென்கிற பக்ஷம் அடிக்கடி சங்கிக்கப்பட்டு சூத்திரங்களாலேயே நிராகரிக்கப்பட்டது. அந்தபக்ஷத்துக்குச் சாதகமான சில லிங்கங்கள் வேதாந்தங்களில் இருப்பதாக மந்தமதி யுள்ளவர்களுக்குத் தோன்றுகிறது. இந்தபக்ஷம் காரியகாரண அபேதத்தை ஒப்புக்கொள்ளுவ

தினல் வேதாந்தபக்ஷத்தை சமீபித்திருக்கிறது ; தேவலர் முதலான சில தர்மசாஸ்திர கர்த்தர்களால் அவர்களுடைய கிரந்தங்களில் பிரஸ்தாபிக்கப்பட்டிருக்கிறது. ஆகையால் அந்த பக்ஷத்தை நிராகரிப்பதிலேயே விசேஷப்ரயத்தினம் செய்யப்பட்டது. அணு முதலிய பக்ஷங்களை நிராகரிப்பதில் பிரயத்தினம் செய்யப்படவில்லை. அந்த பக்ஷங்கள் பிரம்மம் காரணமென்கிற பக்ஷத்துக்கு விரோதமாயிருப்பதால் செவ்வையாக நிராகரிக்கத்தக்கவை. அவர்களுக்கும் சாதகமாக வேதத்தில் சில லிங்கங்கள் இருப்பதாக மந்த புத்தியுள்ளவர்களுக்குத் தோன்றும். ஆகையால் பிரதான யுக்தவிரனை ஹதம் செய்வதால் மற்றவர்களும் ஹதமாய்விடுகிறதுபோல் இந்த பிரதான வாதத்தை நிராகரிப்பதில் உபயோகித்திருக்கிற அநேக யுக்திகளாலேயே சகலமான அணுமுதலியவாதங்களும் நிராகரிக்கப்பட்டவைகளாக அறியத்தக்கவை. அவைகளும் பிரதானம்போல் அசப்தங்கள் அதாவது வேதாந்தத்தில் கூறப்படாதவைகள் ; வேதாந்தத்துக்கு விரோதமாயுமிருக்கின்றன.

வியாக்கியானம் செய்யப்பட்டன என்று இரண்டு தடவை சொன்னதானது அத்தியாய முடிவைக் காட்டுகிறது.

ஆகவே பிரம்மமே பரமகாரண மென்று அறியத்தக்கது. பிரம்மத்திலேயே சகல வேதாந்தங்களும் தாற்பரியப்படுகின்றன வென்று சித்திக்கிறது. (12)

XI. ஆ பூர்வபக்ஷ சித்தாந்தபலன்கள் :—முன் போலவே. (13)

X. வியாசாதிகரணமாலைப்படி அத்வைதச் சுருக்கம்.

1. சுலோகங்கள்.

अण्वादेरपि हेतुत्वं श्रुतं ब्रह्मण एव वा ।
वटधान्यादिदृष्टान्तादण्वादेरपि तच्छ्रुतम् ॥
शून्याण्वादिष्वेकबुद्ध्या सर्वबुद्धिर्न युज्यते ।
स्युर्ब्रह्मण्यपि धानाद्यास्ततो ब्रह्मैव कारणम् ॥ 14

2. வேதாந்தங்கள் விஷயங்கள். பிரம்மம் எப்படி காரணமோ அப்படி பரமாணு, சூன்னியம் முதலியவைகளும் காரணங்களா அல்லது பிரம்மமே காரணமா ? என்பது சந்தேகம். (15)

3. பூர்வபக்ஷம் :—அணுமுதலியவைகளும் காரணங்களே. ஏனெனின் வடவிருக்ஷம், தான்னியம் முதலிய திருஷ்டாந்தங்கள் கூறப்பட்டிருக்கின்றன. எப்படியெனின்—(இந்த விவரம் முன் 8-வது பிரிவில் கொடுக்கப்பட்டிருக்கிறது. அவ்விடம் பார்க்க) (16)

4. சித்தாந்தம் :—

ஏகவிஞ்ஞானத்தால் சர்வவிஞ்ஞானம் சூன்னியாதிமதத்தில் சித்திக்கமாட்டாது. சூன்னியாதிகளால் உண்டாகாத பிரம்மம் சூன்னியாதி ஞானத்தால் அறியப்படமாட்டாது. பிரம்மம் அதிசூட்சுமமானதால் திருஷ்டாந்தங்கள் கொடுக்கப்பட்டிருக்கின்றன. அசத் சப்தத்திற்கு நாமரூபமில்லாமை என்கிற அர்த்தம் 4-வது அதிகரணத்தில் வர்ணிக்கப்பட்டிருக்கிறது. ஸ்வபாவம்—காலம்—இவைகள் பூர்வபக்ஷங்களாகவே சுருதி சொல்லுகிறது. ஆகையால் பிரம்மமே சுருதி அபிப்பிராயப்படி ஜகத்காரணம்—பரமாணுமுதலியவைகளன்று என்பது சித்தித்தது. (17)

முதலாவது அத்தியாயம் 4-வது பாதம்.

முற்றிற்று.

---

## I-4-8வது அதிகரணம்.

I. இதின் பெயர் :—சர்வவியாக்கியாதாதிகரண மென்பதாம். (1)

II. இதின் கருத்து:-பரமாணு முதலியவைகள் ஜகத்காரணமல்ல வென்பதாம். (2)

III. இதில் அடங்கிய சூத்திரம் :-(28-வது)(3)

IV. இதின் விஷயவாக்கியம் :—வேதாந்தவாக்கியங்கள். (4)

V. சம்சயம் :—பிரம்மம்போல், பரமாணு, சூனியம் முதலியவைகளும் ஜகத்காரணங்களா அல்லது பிரம்மம் மட்டும் காரணமா என்பது சந்தேகம். (5)

VI. சங்கதி :—

अतः முந்தின கிரந்தத்துக்கும் இதற்கும் :—

(1) பிரத்தியுதாஹரண சங்கதி :— இவ்விதமாக முன்கூறிய நியாயத்தால் ईक्षतेर्नाशब्दं முதலிய கிரந்தத்தால், பிரதானம் காரணம் என்னும் பக்ஷம் அது அசப்தம் என்னும் காரணத்தால் நிராகரிக்கப்பட்டது. அப்படி அணு, சுவபாவ, அசத் இவைகள் ஜகத்காரணமாயிருக்கலாம் என்னும் பக்ஷம் நிராகரிக்கப்படவில்லை. ஏனெனின், அவைகளை காரணமாகச்சொல்லும் சப்தங்கள் சுருதியில் காணப்படுகின்றன. இப்படி பூர்வபக்ஷி சொல்லுவதினால் பிரத்தியுதாஹரண சங்கதி ஏற்படுகிறது.

(2) க ஆக்ஷேபசங்கதி:-பிரதானம் ஜகத் உபாதான காரணமா யிருக்கவேண்டாம். அதினால் பிரம்மம் உபாதானகாரணம் என்று ஏற்படவில்லை. சுருதிகளில் அசத், அணு, காலம் முதலியவைகள் காரணங்கள் என்று சொல்லியிருக்கிறது. ஆகையால் ஆக்ஷேபசங்கதி ஏற்படுகிறது. (6)

(b) பாதசங்கதி :—இந்த பாதத்தில் பிரம்மத்தை ஒப்புக்கொண்டு இதரகாரணங்கள் நிராகரிக்கப்படுகின்றன. அப்படியே இந்த அதிகரணத்தில் அண்வாதிகள் காரணங்களல்லவென்று கூறப்படுவதால் பாதசங்கதி ஏற்படுகிறது.

(c) இதரசங்கதிகளை முன்போலவே அறியவும்()

VII. वि பூர்வபக்ஷம் :—

சாந்தோக்கியத்தில் ஆறுவது அத்தியாயத்தில் சுவேதகேதுவுக்கு உத்தாலகன் உபதேசம் செய்யும் காலத்தில் ஸ்தூலஜகத்தானது சூட்சுமதத்துவத்தில் அடங்கியிருக்கிறதென்று உபதேசிக்கும்பொருட்டு ஒரு பெரியமரத்தின் விரையை திருஷ்டாந்தமாக எடுத்துக்கொண்டு, அதில் எப்படி விருக்ஷம் ஸூக்ஷ்மமாக அடங்கியிருக்கிறதோ அப்படி ஜகத்து சூட்சுமதத்துவத்தில் அடங்கியிருக்கிறதென்று சொல்லுகிறார். சுருதிகளில் கூறப்பட்ட பரமாணுக்கள் விரைகள் போலிருக்கின்றன.

असद्वा इदमग्र आसीत् என்கிற (தை II) சுருதியால் அசத்து காரணமென்பது சாக்ஷாத்தாய் தெரியவருகிறது.

स्वभावमेके कवयो वदन्ति कालं तथाऽन्ये ।

என்கிற சுவேதாசுவதர வசனத்தால் சுவபாவம், காலம் இவைகள் காரணங்கள் என்று தெரியவருகிறது. ஆகையால் பரமாணு முதலியவைகளும் காரணங்கள் என்பது சுருதிசித்தம். (8)

VIII. (1) இப்படி பூர்வபக்ஷிசொல்ல வியாசர் சித்தாந்தத்தை

**एतेन सर्वे व्याख्याताः । २८**

என்கிற இந்த சூத்திரத்தில் கூறுகிறார். (9)

2. பதஉரை :—

एतेन இதனால்

सर्वे எல்லாம்

व्याख्याताः வியாக்கியானம் செய்யப்பட்டன. (10)

3. பொழிப்புரை :—

பிரதானகாரணவாதத்தை நிராகரித்த காரணங்களான, அசப்தத்துவம், அசேதனத்துவம் ஏகவிஞ்ஞானபிரதிஷேதம், இவை முதலியவைகள் அண்வாதிகள் விஷயத்திலும் சமானமாயிருப்பதால், அணுமுதலியவைகள் காரணங்கள் என்னும் பக்ஷங்களெல்லாம் நிராகரிக்கப்பட்டவைகளாக ஆய்விட்டன. (11)

4. பாஷ்யம் :—

ईक्षतेर्नाशब्दं (I-1-5) முதல் பிரதானம் ஜகத்காரணமென்கிற பக்ஷம் அடிக்கடி சங்கிக்கப்பட்டு சூத்திரங்களாலேயே நிராகரிக்கப்பட்டது. அந்தபக்ஷத்துக்குச் சாதகமான சில லிங்கங்கள் வேதாந்தங்களில் இருப்பதாக மந்தமதி யுள்ளவர்களுக்குத் தோன்றுகிறது. இந்தபக்ஷம் காரியகாரணஅபேதத்தை ஒப்புக்கொள்ளுவ

தினல் வேதாந்தபக்ஷத்தை சமீபித்திருக்கிறது ; தேவலர் முதலான சில தர்மசாஸ்திர கர்த்தர்களால் அவர்களுடைய கிரந்தங்களில் பிரஸ்தாபிக்கப்பட்டிருக்கிறது. ஆகையால் அந்த பக்ஷத்தை நிராகரிப்பதிலேயே விசேஷபிரயத்தினம் செய்யப்பட்டது. அணுமுதலிய பக்ஷங்களை நிராகரிப்பதில் பிரயத்தினம் செய்யப்படவில்லை. அந்த பக்ஷங்கள் பிரம்மம் காரணமென்கிற பக்ஷத்துக்கு விரோதமாயிருப்பதால் செவ்வைபாக நிராகரிக்கத்தக்கவை. அவர்களுக்கும் சாதகமாக வேதத்தில் சில லிங்கங்கள் இருப்பதாக மந்தபுத்தியுள்ளவர்களுக்குத் தோன்றும். ஆகையால் பிரதான யுத்தவீரனை ஹதம் செய்வதால் மற்றவர்களும் ஹதமாய்விடுகிறதுபோல் இந்த பிரதான வாதத்தை நிராகரிப்பதில் உபயோகித்திருக்கிற அநேக யுக்திகளாலேயே சகலமான அணுமுதலியவாதங்களும் நிராகரிக்கப்பட்டவைகளாக அறியத்தக்கவை. அவைகளும் பிரதானம்போல் அசப்தங்கள் அதாவது வேதாந்தத்தில் கூறப்படாதவைகள் ; வேதாந்தத்துக்கு விரோதமாயுமிருக்கின்றன.

வியாக்கியானம் செய்யப்பட்டன என்று இரண்டு தடவை சொன்னதானது அத்தியாய முடிவைக் காட்டுகிறது.

ஆகவே பிரம்மமே பரமகாரண மென்று அறியத்தக்கது. பிரம்மத்திலேயே சகல வேதாந்தங்களும் தாற்பரியப்படுகின்றன வென்று சித்திக்கிறது. (12)

XI. ஆ பூர்வபக்ஷ சித்தாந்தபலன்கள் :—முன்போலவே. (13)

X. வியாசாதிகரணமாலைப்படி அத்வைதச் சுருக்கம்.

1. சுலோகங்கள்.

अण्वादेरपि हेतुत्वं श्रुतं ब्रह्मण एव वा ।
वटधान्यादिदृष्टान्तादण्वादेरपि तच्छ्रुतम् ॥
शून्याण्वादिष्वेकबुद्ध्या सर्वबुद्धिर्न युज्यते ।
स्युर्ब्रह्मण्यपि धानाद्यास्ततो ब्रह्मैव कारणम् ॥ 14

2. வேதாந்தங்கள் விஷயங்கள். பிரம்மம் எப்படி காரணமோ அப்படி பரமாணு, சூன்னியம் முதலியவைகளும் காரணங்களா அல்லது எங்கும் பிரம்மமே காரணமா? என்பது சந்தேகம். (15)

3. பூர்வபக்ஷம் :—அணுமுதலியவைகளும் காரணங்களே. ஏனெனின் வடவிருக்ஷம், தான்னியம் முதலிய திருஷ்டாந்தங்கள் கூறப்பட்டிருக்கின்றன. எப்படியெனின்—(இந்த விவரம் முன் 8-வது பிரிவில் கொடுக்கப்பட்டிருக்கிறது. அவ்விடம் பார்க்க) (16)

4. சித்தாந்தம் :—

ஏகவிஞ்ஞானத்தால் சர்வவிஞ்ஞானம் சூன்னியாதிமதத்தில் சித்திக்கமாட்டாது. சூன்னியாதிகளால் உண்டாகாத பிரம்மம் சூன்னியாதி ஞானத்தால் அறியப்படமாட்டாது. பிரம்மம் அதிசூக்ஷமமானதால் திருஷ்டாந்தங்கள் கொடுக்கப்பட்டிருக்கின்றன. அசத் சப்தத்திற்கு நாமரூபமில்லாமை என்கிற அர்த்தம் 4-வது அதிகரணத்தில் வர்ணிக்கப்பட்டிருக்கிறது. ஸ்வபாவம்—காலம்—இவைகள் பூர்வபக்ஷங்களாகவே சுருதி சொல்லுகிறது. ஆகையால் பிரம்மமே சுருதி அபிப்பிராயப்படி ஜகத்காரணம்—பரமாணுமுதலியவைகளின்று என்பது சித்தித்தது. (17)

முதலாவது அத்தியாயம் 4-வது பாதம்.

முற்றிற்று.